# யுத்த காண்டம்

(ஆரும் பாகம்)






அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## யுத்த காண்டம்

(ஆறும்பாகம்)




அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

1970

Rs 15-00

# முகவுரை

''கல்வி சிறந்த தமிழ்நாடு, புகழ்க் கம்பன் பிறந்த தமிழ் நாடு'' என்று கல்வியிற் பெரியவரான கம்பர் பெருமானைப் பாராட்டிப் பாடினுர் நம் தேசியக்கவி சுப்பிரமணிய பாரதியார். கம்பரது பெருங்காப்பியமான இராமாயணம் இலக்கியச்சுவை மிக்கது ஆதலின் கற்ருரிடையும் மக்களிடையும் எளிதாக இனிதாகப் பரவிற்று. பலர் கைப்படவே, செய்யுட்களின் உருவம் சிதைந்தது. அடியும் சீரும் அசையும் எண்ணிறந்த பாட பேதங்களை வழி வழியாகப் பெற்றன. கம்பனுடைய புகழ்வடிவான காப்பியத்துக்கு ஒரு நிலைவடிவு இன்றியமையாதாயிற்று. அந் நிலைவடிவே அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் இராமாயணப் பதிப்புக்களின் பதினுறு தொகுதிகள். இராமாயணத்திற் பயின்ற அறிஞர் குழுவின் கண்காணிப்பில் பாட பேதங்கள் செம்மைப்படுத்தப்பட்டன. மூல ஏடுகளையும் அச்சு நூல்களையும் தேடித் தொகுத்துச் செம்மையெனத் தீர்மானித்த பாடங்கள் இப்பதிப்பில் தழுவப்பட்டுள. திரட்டிய பாடபேதங்கள் அனைத்தும் பல தொகுப்புக்களாக இப்பதிப்பிற் காணலாம். இவை மேலும் ஆராய்வார்க்குத் துணை தருவன. மூலத்தோடு உரையும் இருத்தலின் பொதுமக்கட்கும் மாணவர்கட்கும் இவை நன்கு பயன்படும்.

கம்பரின் ஒரு பெருங்காப்பியம் பதினுறு அரிய பதிப்புக்களாக வெளிவர அறிவுத்துணை செய்த குழுவின் அறிஞர்கட்கும் ஆயிரக் கணக்கான மூலங்களை ஒப்பிட்டும் எழுதியும் உரைவரைந்தும் அச்சுப் பார்த்தும் உழைப்பு நல்கிய தமிழ்த்துறை ஆசிரியர்கட்கும் மூல ஏடுகளும் பிற குறிப்புக்களும் பார்வைக்கு உவந்தளித்த அன்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவிப்பேன்.

நினைத்தற்கு அரிய இப்பதிப்புக்கள் தடையின்றி வெளிவரப் பெரும்பொருளுதவி வழங்கிய பல்கலைக் கழக மானியக் குழுவிற்கும் தமிழக அரசுக்கும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பாக நன்றி கூறுகின்றேன்.

1952இல் தொடங்கிய இப்பெருங்காப்பியப் பதிப்புத் திட்டத்தின் இறுதியான 16-ஆவது தொகுதி இன்று வெளியாகின்றது. இத்தொகுதிகள் பதினெட்டாண்டு முயற்சியின் செல்வங்கள். இத்தமிழ்ச் செல்வங்களைப் பெற்றுத்தரும் அண்ணுமலைப் பல்கலைக்கழகத்துக்குத் தமிழ் மக்கள்வழி வழி நன்றி செலுத்துவார்கள்.

அண்ணுமலைநகர்,
8—1—1971.

வி. டி. டைடஸ்
துணைவேந்தர்
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

# நன்றியுரை

டாக்டர் வ. சுப. மாணிக்கம்
தமிழ்ப்பேராசிரியர், அண்ணுமலைப் பல்கலைக்கழகம்

---

''தமிழின் அருமையினையும் இலக்கியத்தினையும்
பண்பாட்டினையும் உலகுக்கு அளிப்பதே
இப்பல்கலைக் கழகத்தின் நோக்கம் ஆகும்.''

— அண்ணுமலையரசர்

கம்பரின் இராமாயணப் பதிப்பு அண்ணுமலைப் பல்கலைக் கழகம் தமிழன்னைக்கு ஆற்றிய பணிகளுள் தலையானதும் பெரியதும் ஆகும். மூலம் உரை பாடம் என்ற மும்மை சான்ற இப்பதிப்பு பதினுறு தொகுதியது. பதினுருவதும் இறுதியதுமான இத்தொகுதியை வெளியிடும் இந்நாளில் பதிப்பின் முயற்சிகள், சிறப்புக்கள், பயன்கள் இவற்றை எண்ணிப் பார்க்க வேண்டும். பதிப்புக்கு உழைத்த பெரு மக்களை மீண்டும் நினைவு கொள்ள வேண்டும்.

## I. பதிப்பு வரலாறு

இப்பல்கலைக் கழகத்தின் முன்னுள் துணைவேந்தர் டாக்டர் ரா. க. சண்முகஞ் செட்டியார் அவர்கள் காப்பியங் களுட் சிறந்த கம்பரது இராமாயணத்துக்கு மூலபாடம் தெரிந்து தெளிந்த செம்பதிப்பு வேண்டும் எனவும், தமிழ்ப் பல்கலைக் கழகம் எனப் புகழ்பெற்ற இக்கழகமே அதனைச் செய்தற்கு ஏற்ற பெருநிலையம் எனவும் எண்ணினர். சிலப் பதிகாரப் புகார்க் காண்டத்தின் உரையாசிரியரான இப் பெருமகனுர்க்கு இவ்விலக்கிய வேட்கை தோன்றியது இயல்பே. 1952இல் செம்பதிப்புவினை தமிழாராய்ச்சித் துறைப் பொறுப்பில் அரும்பியது. இணைவேந்தர் டாக்டர் அரசர் முத்தையசெட்டியார் அவர்கள் இத்தமிழ்ப்பணிக்கு

ஆக்கமொடு ஊக்கம் அளித்தனர். பின்னர் வந்த துணை வேந்தர்கள் டாக்டர் சர் சி. பி. இராமசாமி அய்யர் அவர்களும் உயர்திரு தி. மூ. நாராயணசாமி பிள்ளை அவர்களும் பதிப்புத் திட்டத்தைத் துணையாளர்களை அமர்த்தி வலுவும் விரைவும் படுத்தினர். இராமாயணப் பாடபேதங்களை ஆய்ந்துவந்த அடையாறு சாமிநாதய்யர் நூல் நிலையத்தின் உறவையும் ஒத்துழைப்பையும், டாக்டர் சர் சி. பி. அவர்களின் விருப்பப்படி, பல்கலைக் கழகம் தழுவிக் கொண்டது. இவ்வுறவினுல் ஓர் ஆராய்ச்சி ஈரிடத்துச் செய்யும் மிகை தவிர்ந்தது.

ஏடுகளும் அச்சுநூல்களும் தேடித்தொகுக்கப்பெற்றன. சென்னை அரசாங்கக் கையெழுத்து நூற்சாலை, தஞ்சை சரசுவதிமால், மதுரைத் தமிழ்ச்சங்கம், அடையாறு சாமிநாதய்யர் நூல்நிலையம், காரைக்குடிக் கம்பன் கழகம் என்பன இத்தொகுப்புக்குத் தம்பால் உள்ள இராமாயணச் சுவடிகளை மனமுவந்து வழங்கின. தனி அன்பர்களிடமும் சிலவகைச் சுவடிகள் கிடைத்தன. பல்கலைக் கழகம் சில சுவடிகளை விலைக்குப்பெற்றது. ஏடுதோறும் சீர் சீராகப் பாடபேதங்களைப் படித்துக் குறிக்க, ஒழுங்குபடுத்த, உரையெழுத, அச்சுப்பார்க்க, ஆய்வாளர்கள் அமர்த்தப்பட்டனர். பாடச்செம்மை கணிக்கவும் உரைப்போக்கை ஒப்பவும் இராமாயணப் பதிப்புக்குழு ஒன்று அமைந்தது. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் சொல்லின் செல்வர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை ஏழாண்டு குழுவின் தலைவராகப் பணியாற்றினர்.

குழுவமைத்து ஆய்வாளர்களை அமர்த்திப் பல பெருந் தொகுதிகள் வெளியிடற்கு வேண்டுவது பெருநிதி. கம்பருக்குச் சடையப்பர்போல், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்துக்கு இந்திய அரசின் பல்கலைக் கழக மானியக்குழு நிதி வழங்கிற்று. திருப்பனந்தாள் காசி மடத்து அறக்கட்டளையும் தமிழக அரசும் நிதியுதவின. இப்பெருங்காப்பியத்துக்குத் தக்காங்கு பெருநிதி இடையருது கிடைத்தமை

யின், இராமாயணச் செம்பதிப்பு ஆற்றெழுக்குப்போல் நடைபெற முடிந்தது. நிதி வழங்கியோர்க்குப் பல்கலைக் கழகத்தின் உளமார்ந்த நன்றி.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் என்னும் தாய் கல்வியிற் பெரிய கம்பரின் இராமாயணத்தை 16 தொகுதிக் குழந்தைகளாக 18 ஆண்டுகளில் வயாவும் வருத்தமும் பாராது தொடர்ந்து ஈன்று உலகிற்கு வழங்கினுள் என்ருல், பல்கலைக் கழகத்தின் தொண்டு எவ்வளவு பெரியது; தமிழ் மக்களின் நன்றியுணர்வும் இப்பல்கலைக் கழத்துக்கு எவ்வளவு பெரிதாக வேண்டும்? பல்லாண்டுகள் சுவையற்ற பாட பேதங்களைத் திரட்டித் தொகுத்தும் செம்மை செய்தும் உரைவரைந்தும் பிறவாறு உழைத்தும் கடமையாற்றிய புலவர்கட்கும் குழுவினர்க்கும் நன்றியம்.

## II. பதிப்பின் சிறப்புக்கள்

1. (அ) ஏட்டிலும் அச்சுநூலிலும் இதுவரை கிடைக்கக்கூடிய பாடங்கள் சீர் சீராகப் படியெடுக்கப்பட்டு, குழுவினர் துணிந்த ஒரு பாடம் மூலத்தில் இடம்பெற்றுள்ளது. ‘‘தக்கஆதாரமின்றி எவ்வகைத்திருத்தமும் மேற்கொள்ளப் படவில்லை’’ என்பர் பதிப்புப் பொறுப்பர் பேராசிரியர் கோ. சுப்பிரமணியபிள்ளை.

(ஆ) மிகைப்பாடல்கள் என்று கொண்ட செய்யுட்கும் பாடபேதங்கள் சேர்க்கப்பட்டுள.

(இ)

| | |
|---|---|
| இராமாயண மூலச் செய்யுட்கள் | 10534 |
| மிகைப்பாடல்கள் | 1309 |
| பாடபேதங்கள் | 318489 |
| பாடபேதமில்லாப்பாடல்கள் | 11 |

இவை இப்பதிப்புக் காட்டும் எண்ணிக்கை. ஒரு காண்டத்தளவுக்கு—அஃதாவது சுந்தர காண்டத்தளவுக்கு - மிகைப்

பாடல்கள் உள. இது 12 விழுக்காடு ஆகும். பாடபேதத்தைக் கணிப்பின் ஒருபாடலுக்கு 27 பேத விழுக்காடு வரும். ஓரடிக்கு 25 வரை பாடங்களும் ஒருசீர்க்கு 10 வரை பாடங்களும் உள.

(ஈ) துணிந்தபாடத்தைப் பாடவரிசையில் முதற்கண் காணலாம். இன்ன பாடல் இன்ன சுவடியில் உண்டு, இல்லை என்ற குறிப்புக்களையும் காணலாம். சுவடிகளுக்கு எண்ணுக்குறியீடு தந்திருத்தலின், இவற்றைக் காண்பது எளிது.

(உ) இப்பதிப்பின் தனிச்சிறப்பு பாடத் தொகுப்பும் தேர்வும் தெளிவும் ஆதலின் இங்கு ஓரடிக்கு உரிய பதிப்பு முறையைத் தருவன். இதனுல் பல்லாண்டு முயற்சியின் அருமையை உய்த்துணரலாம்.

கறங்கு கால்புகா கதிரவ னொளிபுகா மறலி
மறம்பு காதினி வானவர் புகாரென்கை வம்பே
திறம்பு காலத்துள் யாவையும் சிதையினுஞ் சிதையா
அறம்பு காதிந்த வணிமதிட் கிடக்கைநின் றகத்தின்
(சுந்தரகாண்டம்: 118)

இறுதியடிக்குத் தந்துள்ள பாடபேதங்கள் பின்வருமாறு:

அறம்புகாதிந்த; 1, 2, 4-7, 10-17, 19, 21-24, 26, 28, 33, 34, 36-38, 43-52.
அறம்புகாமையால்; 3, 18, 20, 27, 29-32, 39-42, 53, 54.
அறம்புகாதெனில்; 35.
அறம்புகாதிதேல், 9.
அணிமதிள்; 2, 4, 7, 11, 12, 15, 16, 19, 22, 43-52.
அகன்மதிற்; 5, 6, 33.
அகநகர்க்; 9.
அம்மதிற்; 35.
அழியுமிந்; 17, 30, 38, 39, 53.
அழியுமிப்; 1, 3, 10, 13, 18, 20, 21, 23, 24, 26-29, 31, 32, 34, 36, 37, 40-42, 54.
அழிந்தில; 14.
கிடக்கைநின்று; 2, 4, 6, 7, 11, 14, 15, 19, 22, 33, 35; 43-52.
கிடங்கைநின்று; 5, 9.
பதியென; 1, 3, 10, 12, 13, 16, 18, 20, 21, 23, 24, 26-29, 31, 32, 34, 36 37, 40-42, 53, 54.

நகரென; 17, 30, 38, 39, 53.
அகத்தின்; 2, 4, 5, 7, 9, 11, 12, 15, 16, 19, 21–24, 26, 28, 34, 36, 37, 43–52.
அகத்தில்; 35.
அகத்து; 14.
அயிரா; 6.
அயிர்த்தான்; 17, 18, 29-31, 33, 38, 39, 41, 42, 53, 54.
அமைத்தான்; 1, 3.
அமைந்தான்; ı0.
அறைந்தான்; 13, 20, 27, 32, 40, 53.

(ஊ) ஓரெழுத்து வேறுபடினும், பொருட்சிறப்பு இல்லையெனினும் பேதமாகக்கண்டயாதினையும் குறியாதுவிடவில்லை. ஆறு காண்டங்களின் மொத்தப் பதிப்புப் பக்கம் 15827. இவற்றுள் 10289 பக்கம் மூலச்செய்யுளும் உரையும் விளக்கமும் உடையது. 5538 பக்கம் முழுவதும் பாடபேதம் பொதிந்தது எனின், 320000 வேறுபாடுகள் காட்டுவது எனின், இப்பதிப்பு இராமாயணத்துக்குப் பெரியபாடக் களஞ்சியம் என்பது வெளிப்படை.

(எ) படலத்துக்கும் படலபேதங்கள், படலமிகைகள் பிற மாற்றங்கள் இருத்தலின், அவற்றையும் இப்பதிப்பு படல முகப்பில் காட்டிச் செல்கின்றது.

2. (அ) துணிந்த 10534 மூலச் செய்யுட்களும் வரிசையெண்ணுடையன. இன்ன காண்டத்து இன்ன படலத்து இப்பாட்டு என்று இதுவரை எண்காட்டிய தொல்லைக்கு இனி இடனில்லை. வரிசையெண்ணே ஆய்வாளர் குறிப்புக்கு எளிது. படலத்துக்கு உரிய பாடல்வரிசை யெண்ணை உரைமுடிவில் வலப்பக்கத்துக் காணலாம். மிகைப் பாடல் வரிசையெண்ணிற் சேரவில்லை. உரிய மூலச் செய்யுட்கு அடுத்துச் சிற்றெண்கொண்டு நிற்கின்றது. இதற்கு உரையிலது. மிகைப்பாடலுக்கு உரை மேலும் மிகையன்றோ? ஆனால் பாடபேதங்களும் உரிய ஏடுகளும் தரப்பட்டுள. மிகைப்பாடலா என்று ஆராய்தற்கும் பிற தெளிவுக்கும் இத்தரவு பயன்படும்.

(ஆ) 'விருத்தம் எனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்' எனவும், 'தொடை நிரம்பிய தோமறு மாக்கதை' எனவும்

பாராட்டப் பெறுதலின், இராமாயணம் சந்தப்பாக்கள் மிடைந்தது என்பது பெறப்படும். ஒலிக்கும் பொருளுக்கும் ஒற்றுமை காண்பர் இலக்கியத்திறனிகள். ஆதலின் சந்தம் வேறுபடும் இடமெல்லாம் உடுக்குறியிட்டுக் காட்டப்பட்டுள.

(இ) கம்பர் பாடியாங்குக் கவிதைநடையை அறிதற்கு முதற்கண் மூலச் செய்யுள் சந்தி பிரியாது தரப்பட்டுளது. இதனல் யாப்பமைதியும் ஓசையினிமையும் பெறப்படும். யாவரும் படித்தற்கு எளிதாக அடுத்துச் சந்திபிரித்து ஒவ்வொரு பாடலும் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விரு முறையால் செய்யுளைப் பிரித்துணரும் முறையும் புணர்த்துக் காணும் முறையும் பலர்க்குக் கைவரலாம். இங்ஙனம் 10534 புணர் பாடல்களாகவும் 10534 பிரிபாடல்களாகவும் மூலம் இருமடங்கு இப்பதிப்பில் இடம் பெற்றிருப்பதுநினையத் தகும். ஓர் எடுத்துக்காட்டு. சுந்தரகாண்டம் பாடல் 174.

புணர் செய்யுள் :

அஞ்சு வணத்தி னுடை யுடுத்தா ளரவெல்லாம்
அஞ்சு வணத்தின் வேக மிகுத்தா ளருளில்லாள்
அஞ்சு வணத்தி னுத்தரி யத்தா ளலையாரும்
அஞ்சு வணத்தின் முத்தொளி ராரத் தணிகொண்டாள்

பிரி செய்யுள் :

அஞ்சு வணத்தின் ஆடைஉடுத்தாள், அரவுஎல்லாம்
அஞ்சு உவணத்தின் வேகம்மிகுத்தாள், அருள்இல்லாள்,
அம் சுவணத்தின் உத்தரியத்தாள், அலை ஆரும்
அம் சுவள் நத்தின் முத்து ஒளிர் ஆரத்து அணிகொண்டாள்.

## III. பதிப்பின் பயன்கள் :

3. (அ) காண்டந்தோறும் படலந்தோறும் அவற்றின் சிறப்பும் கதைச் சுருக்கமும் உண்டு. வான்மீகத்தோடு வேறுபடும் இடங்களும் சுட்டப்பட்டுள்ளன.

(ஆ) பாடல்தோறும் கருத்துத்தலைப்பும் உளது. உரையும் நயமும் விளக்கமும் பிறநூல் ஒப்புமையும் உள. புதிய பாடங்கள் பல மேற்கொண்டமையின் உரையெழுத வேண்டியதாயிற்று. இவ்வுரைகளையும் பதிப்புக்குழு ஒப்பிற்று.

(இ) இப்பதிப்பு இராமாயண ஆராய்ச்சிக்கு ஒரு கொள்முதல். பாட பேதங்கொண்ட 5500 பக்கங்கள் பல்கிளை ஆராய்ச்சிக்குத் துணைசெய்யும். ''பதிப்பில் வந்துள்ள எல்லாப் பாடல்களும் திருத்தம் பெற்றுவிட்டன வாகச் சொல்லமுடியாது. பலபாடல்கள் இன்னும் மயக்கம் தருவனவாகவே உள்ளன. அவற்றிற்கு உரிய சரியான பாடம் இதுவரை கிடைக்கவில்லை. நாளடைவில் அவை திருத்தம் அடையக்கூடும்'' என்பது பதிப்புக் குழுவின் கருத்தகம் ஆனுலும் இப்பதிப்பு பாடபேதக் கடலைக் குடித்து அடக்கி வைத்திருக்கும் அகத்தியம் ஆதலின், எண்ணிறந்த செய்யுட்கள் நல்லுருவம் பெற்றுள என்பதும், எஞ்சியனவும் நல் வடிவம் பெறும் என்பதும் இலையில் காய்போல் விளங் கும். எதிர்கால ஆய்வாளர் இராமாயணவுலகில் மீண்டும் தொகுத்தும் தேடியும் காலங்கழியாமல் இப்பதிப்பை வேண்டியவா றெல்லாம் பயன்கொள்வர் என்பது என் நம்பிக்கை.

பாடத் தெளிவுகள்

(ஈ) தேர்ந்த பாடங்களின் அருமைபற்றி ஒரு காட்டு:

அவித்து நின்றெவ ஞயினும் ஆகவென் றங்கை
கவித்து நீகிட சிலபகல் என்பது கருதாச்
செவிக்குத் தேனன்ன இராகவன் புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயகன் அனையவன் உறையுளைக் கடந்தான்

— சுந்தர: 227

அநுமன் உறங்கும் கும்பகருணனைப் பார்த்துவிட்டுச் செல்லும் நிலையில் வருவது இச் செய்யுள். கும்பகருணனை இராவணனே என்று மயங்கித் தலைபத்தும் தோளிருபதும் இல்லாமையால் இராவணன் அல்லன் என்று முடிவுகட்டிச் சினந்தணிகின்றுன் அறிவுடை அநுமன். கும்பன் சிலநாள் இப்படியே உறக்கத்தில் கிடக்கட்டுமே என்று எண்ணிய வனய் அவ்விடத்தை விட்டுக் கடக்கின்றுன். ''செவிக்குத் **தேனென** இராகவன் புகழினைத் திருத்தும்'' என்பது இது காறும் பெரும்பாலோர் கொண்டபாடம். இப்பாடம் பல சுவடிகளில் உண்டு. இராகவன் புகழினைச் செவிக்குத்

தேன் என்று சொல்லும்படி அநுமன் திருத்தினன், செம்மை செய்தான் என்றால் காசில் கொற்றத்து இராமனுக்கு ஓர் இழுக்கு. அநுமன் இல்லாவிட்டால் இராமன் புகழ்க்குறை படுவான் என்பது கருத்தாகிவிடும். இராமனைத் தெய்வப் பிறவியாகப் பாடும் கம்பர் ஊனப் புகழாகக் குறிப்பிடார். ஆதலால் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் ஒரே சுவடியில் (எண் 13) ''செவிக்குத் **தேன் அன்ன** இராகவன் புகழினைத் திருத்தும்'' என்று காணப்பட்ட பாடத்தைத் தெளிவான பாடமாக மேற்கொண்டது இப்பதிப்பு. திருத்துதல் - சொல்லுதல். இப்பொருள் உண்டு என்பதற்கு,

திருத்தாய் செம்போத்தே
திருமாமகள் தன்கணவன்
மருத்தார் தொல்புகழ் மாதவனை வரத்
திருத்தாய் செம்போத்தே

என்னும் திருமங்கையாழ்வார் பாடல் சான்று. ஆழ்வார்கள் பாடலில் பயின்ற கம்பரிடத்து இச்சொல்லாட்சி எதிர் பார்க்கத் தக்கதே.

பாடத் தெளிவும் செம்பதிப்புமே பதிப்புக்குழுவின் முதல் நோக்கமாக இருந்தாலும், 'வினையான் வினையாக்கிக் கோடல்' என்றபடி இது மக்கட்பதிப்பாக மலர்ந்தது. சந்தி பிரிப்பு, கதைச்சுருக்கம், உரை, விளக்கம் என்றிவற்றால் அறிஞருலகுக்கேயன்றி எல்லார்க்கும் பயன்படும் பதிப்பாக விளங்குகின்றது.

முன்சொல்லியாங்கு இப் பதினாறு தொகுதிகள் புணர் செய்யுள், பிரிசெய்யுள், கதைச்சுருக்கம், உரை, விளக்கம், பாடபேதம் எல்லாம் நிறைந்தன. 5500 பக்கம் கொண்ட பாடபேதப் பகுதிகள் முற்றும் ஆய்வாளர் தனிப்பார்வைக்கு உரியவை. இத்தொகுதிகளை வேறு சில பதிப்புக்களாக வெளியிடலாம். துணிந்து எடுத்த பாடங்கள் பரவுவதற்கு மூலத்தை மட்டும் இரு தொகுதிக்கையடக்கப்பதிப்பாக்கல் நல்லது. வழக்கம்போல் கதைச்சுருக்கம், மூலம், உரை இவையடங்கிய பகுதியாக ஒவ்வொரு காண்டத்தையும்

வெளியிடலாம். இவ்வெளியீடு பொதுமக்களுக்கும் மாண வர்க்கும் நன்கு பயன்படும்.

இராமாயணச் செம்பதிப்பை உலகிற்கு வழங்கிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கும், இப்பதிப்பைத் தன்னேரில்லாப் பதிப்பாக உருவாக்கிய புலவர்பெருமக் கட்கும் தமிழுலகம் வழிவழி கடப்பாடுடையது.

ஏழாவதாகிய உத்தரகாண்டம் முன்னைக் காண்டங் களுக்கு வேண்டிய கதைபொதி விளக்கம் நிறைந்தது. இதுவரை இக்காண்டத்துக்குத் தக்க பதிப்போ, உரையோ, உரையின்மையால் ஆராய்ச்சியோ தோன்றவில்லை. ஆதலின் உத்தரகாண்டத்துக்கும் ஒரு செம்பதிப்பு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிடும்.

அண்ணாமலைநகர், வ. சுப. மாணிக்கம்
8—1—1971.

## I காண்டங்களின் புள்ளி விளக்கம்

| காண்டம் | | பதிப் பாண்டு | மூலப் பாடல் | மிகைப் பாடல் | மொத்தபாட வேறுபாடு | நூலின் பக்கம் | பாட வேறுபாடு பக்கம் | பார்த்த சுவடி |
|---|---|---|---|---|---|---|---|---|
| பால | 1 | 1957 | 720 | 46 | 19898 | 652 | 306 | 41 |
| | 2 | 1958 | 678 | 9 | 18785 | 588 | 301 | 42 |
| அயோத்தியா | 1 | 1959 | 617 | 27 | 16547 | 631 | 277 | 41 |
| | 2 | 1960 | 589 | 19 | 14212 | 497 | 236 | 41 |
| ஆரணிய | 1 | 1963 | 559 | 32 | 15692 | 550 | 262 | 39 |
| | 2 | 1964 | 646 | 27 | 18883 | 653 | 310 | 39 |
| கிட்கிந்தா | 1 | 1965 | 564 | 25 | 16845 | 651 | 306 | 35 |
| | 2 | 1967 | 473 | 43 | 16283 | 485 | 275 | 37 |
| சுந்தர | 1 | 1955 | 690 | 48 | 19347 | 512 | 434 | 55 |
| | 2 | 1956 | 649 | 71 | 16851 | 460 | 300 | 49 |
| யுத்த | 1 | 1968 | 801 | 140 | 20652 | 819 | 364 | 37 |
| | 2 | 1969 | 775 | 141 | 24905 | 788 | 430 | 36 |
| | 3 | 1970 | 671 | 38 | 22687 | 694 | 378 | 35 |
| | 4 | 1970 | 637 | 33 | 23883 | 668 | 416 | 34 |
| | 5 | 1970 | 714 | 93 | 26598 | 734 | 475 | 34 |
| | 6 | 1970 | 751 | 517 | 26421 | 907 | 468 | 34 |

## II காண்டங்களின் புள்ளி விளக்கம்

| காண்டம் | தொகுதி | மூலம் | மிகைப் பாடல் | பாட வேறுபாடு | நூலின் பக்கம் | பாட வேறுபாடு பக்கம் | மொத்த பக்கம் |
|---|---|---|---|---|---|---|---|
| பால | 2 | 1398 | 55 | 38683 | 1240 | 607 | 1847 |
| அயோத்தியா | 2 | 1206 | 46 | 30759 | 1128 | 513 | 1641 |
| ஆரணிய | 2 | 1205 | 59 | 34575 | 1203 | 572 | 1775 |
| கிட்கிந்தா | 2 | 1037 | 68 | 33128 | 1136 | 581 | 1717 |
| சுந்தர | 2 | 1339 | 119 | 36198 | 972 | 734 | 1706 |
| யுத்த | 6 | 4349 | 962 | 145146 | 4610 | 2531 | 7141 |
| | 16 | 10534 | 1309 | 318489 | 10289 | 5538 | 15827 |

## கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

---

பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, பி.ஏ.,பி.எல்.

திருமதி ருக்குமணிதேவி

இராவ்சாகிபு மு. இராகவையங்கார்

டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், எம்.ஏ.,பிஎச்.டி.

பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, எம்.எ.,பி.எல்.

பேராசிரியர் கோ. சுப்பிரமணியபிள்ளை, எம்.ஏ.,பி.எல்.

பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

பேராசிரியர் ரா. விசுவநாதன்

திரு. பி. ஸ்ரீ. ஆச்சாரியார்

திரு. நீ. கந்தசாமிப்பிள்ளை

திரு. ஏ. சி. பால்நாடார், பி.ஏ.,பி.எல்.

திரு. மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை

திரு. பு. ரா. புருடோத்தம நாயுடு

திரு. தி. கி. இராமாநுசையங்கார்

## பதிப்புப் பணிபுரிந்தோர்

---

பேராசிரியர் வித்துவான் கோ. சுப்பிரமணியபிள்ளை, எம்.ஏ.,பி.எல்

இராவ்சாகிபு மு. இராகவையங்கார்

திரு. நீ. கந்தசாமிப்பிள்ளை

திரு. தி. கி. இராமாநுசையங்கார்

திரு. ஈ. எஸ். வரதராச ஐயர், பி.ஏ.

திரு. நா. கனகராச ஐயர்

வித்துவான் ச. தண்டபாணி தேசிகர்

திரு. சீனிவாச அய்யர்

வித்துவான் செ. வேங்கடராமச்செட்டியார்

வித்துவான் க. வெள்ளைவாரணன்

வித்வான் உ. பழநி, எம்.ஓ.எல்.

சிரோமணி, வித்துவான் பி. எஸ். இராமாநுசாச்சாரியார்

புலவர் கு. திருமேனி, பி.ஓ.எல்.

வித்துவான் வை. சுந்தரேச வாண்டையார்

டாக்டர் மு. கோவிந்தசாமி, எம்.ஏ.,பி.எச்.டி.

திரு. எஸ். திருநாவுக்கரசு, எம்.ஏ.

திரு. சி. வேங்கடேசன், எம்.ஏ.

திரு. ந. வி. செயராமன், எம்.ஏ.எம்,லிட்.

புலவர் சோம. இளவரசு

புலவர் ச. கணபதிராமன், எம்.ஓ.எல்.

புலவர் க. இராமச்சந்திரன்

# கம்பராமாயணம் - யுத்தகாண்டம்

## ஆறும் பகுதி

———

இதன்கண் 34 இராவணன் தேரேறு படலம் முதல் 39 விடை கொடுத்த படலம் ஈருக ஆறு படலங்கள் உள்ளன. இவற்றுள் இராவணன் தேரேறு படலம், இராமன் தேரேறு படலம் என்பவற்றுக்கும் மீட்சிப் படலத்தில் முதல் இருநூறு செய்யுட்களுக்கும் திரு க. வெள்ளைவாரணன் அவர்களும், இராவணன் வதைப்படலம், மீட்சிப்படலத்தின் பிற்பகுதி, திருமுடிசூட்டுபடலம், விடைகொடுத்த படலம் ஆகியவற்றிற்கு வித்துவான் திரு செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களும் உரையெழுதினர்.

சிரோமணி வித்துவான் திரு பி. எஸ். இராமானுசாச்சாரியாரும், புலவர் திரு க. இராமச்சந்திரனும் தமிழாராய்ச்சித்துறையினர் தொகுத்த பாடவேறுபாடுகளை முறைப்படுத்திப் பிற்சேர்க்கையாகத் தந்துள்ளனர்.

# உள்ளுறை

# 34. இராவணன் தேரேறு படலம்

இராவணன் இராமனெடு பொருதற்குத் தன் தேரின் மீது ஏறிய நிகழ்ச்சியும், இராமன் இராவணனைப் பொருதழித்தற்கு இந்திரன் அனுப்பிய தேரின்மீது ஏறிய நிகழ்ச்சியும் தேரேறு படலம் என ஒரே படலமாகப் பழைய சுவடிகள் பலவற்றில் குறிக்கப்பெற்றுள்ளன. 31, 40, 41, 45, 52, 60, 61, 63, 70, 71 என்னும் எண்ணுள்ள சுவடிகளில் இப்படலத்தின்முன் 1 முதல் 35 வரையுள்ள செய்யுட்கள் இராவணன் தேரேறு படலம் என ஒரு படலமாகவும், 36 முதல் 62 வரையுள்ள செய்யுட்கள் இராமன் தேரேறு படலம் என மற்ெருரு படலமாகவும் இரு படலங்களாகப் பகுக்கப்பெற்றுள்ளன. இப் பகுப்புமுறை பொருள் வகைக்குப் பொருத்தமுடையதாகவே அமைந்திருத்தலால் அம் முறைபற்றி இங்கு இரு படலங்களாகக் கொண்டு உரையெழுத லாயிற்று.

இராவணன் இராமபிரானெடு பொருதற்கு முற்பட்டுத் தனது தேரின்மீது ஏறிய செய்தியைக் கூறும் படலமாதலின் இராவணன் தேரேறுபடலம் என்னும் பெயர்த்தாயிற்று.

அரசிருக்கையில் சீற்றத்துடன் வீற்றிருக்கும் இராவணன், மகோதரனை நோக்கி, 'இலங்கையில் இறவாது எஞ்சியுள்ள சேனைகளைப் போருக்குப் புறப்படுமாறு முரசறையச் செய்க' எனப் பணித்தனன். முரசொலிகேட்டுப் பதினன்கு நூறுகோடி அரக்கர்களுடன் தேர், யானை, குதிரை முதலியனவும் ஒருங்கே திரண்டன. இராவணன், தன் வழிபடு தெய்வமாகிய சிவபெருமானை முறைப்படி பூசனைபுரிந்து, வேதங்களிற் கூறிய சிறந்த தானங்களைத் தக்கவர்க்கு அளித்து இரவலர் முதலியோர்க்கு அவரவர் விரும்பியவற்றை ஈந்து, பொருதொழிலின் அடையாளப் பூவாகிய தும்பை மாலையைச்சூடி, அம்பருத்தூணியையும் பூட்டிப் போர்க்கோலம்பூண்டு 'வருக தேர்' எனப் பணித்தான். அந்நிலையில் தெய்வத்தன்மைவாய்ந்த தேர் அவனருகே வந்து

நின்றது. இராவணன் அந்தத்தேரினை முறைப்படி அருச்சித்துப் போற்றி எண்ணில்லாத மறையவர்களுக்குப் பெரும் பொருள் களைத் தானமாக வழங்கி அத்தேரின்மீது ஏறினன்; ‘அழகிய கூந்தலையுடைய சானகி மலர்போலும் தன் வயிற்றை வருத்திக் கலக்கத்தையுடையளாய்த் துயரக் கடலில் மூழ்குதல்; அது நிகழாதாயின் மயன்மகளாகிய வண்டோதரி அத்தொழிலை யடைதல்; இவ்விரண்டில் ஒன்றை இன்றைக்குச் செய்வேன்’ என வஞ்சினங்கூறித் தன் தோள்களைப் புடைத்து ஆரவாரித் துத் தனது வில்லின் நாணைத்தெறித்து ஒலியெழுப்பினன். அவ் வொலிகேட்டு எல்லாவுலகத்தவரும் அஞ்சி நடுங்கினர். அது கண்ட சுக்கிரீவன் முதலிய வானரத்தலைவர்கள் கலக்கமுற்று எழுந்தார்கள். வீடணன் விரைந்து இராமபிரானை அணுகி நின்று, ‘வெற்றி வேந்தே! இராவணன் தன் சேனைகளோடு போருக்குப் புறப்பட்டு வந்துள்ளான். நம்சேனை கலக்கமுற்று வருந்துகிறது. தேவர்களும் சிதறி ஓடிவிட்டார்கள்’ என்று முறையிட்டான் என்பது இப்படலத்தின் பொருட்சுருக்கமாகும்.

இராவணன் போர்க்குப் புறப்படுமுன் சிவபெருமானுக்கு முறைப்படி பூசனைபுரிந்தான் என்பதும், தன்தேரில் ஏறுதற்கு முன் அத்தேரினை அருச்சித்தான் என்பதும் முதல் நூலாகிய வான்மீகத்தில் விரித்துரைக்கப் பெறவில்லை. ‘இராவணன் மேலது நீறு’ எனத் திருநீற்றினையும் ‘பண்டையிராவணன் பாடியுய்ந்தன’ எனத் திருவைந்தெழுத்தையும் திருமுறையாசிரி யர்கள் சிறப்பித்துரைக்குமுகத்தால் இராவணனது சிவ வழி பாட்டினையுளங்கொண்ட கம்பர் அவ்வேந்தன் இராமனொடு போர் குறித்துப் புறப்படுமுன் சிவபூசையினை வரன்முறையே செய் தான் என்ற சிறப்புடைய நிகழ்ச்சியை இப்படலத்திற் குறித் துள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

# 34. இராவணன் தேரேறு படலம்

'எஞ்சியுள்ள சேனையைத் திரண்டு எழுமாறு முரசறையச்
செய்க' என இராவணன் மகோதரனை
நோக்கிக் கூறுதல்

9783. பூதர மனைய மேனிப்
புகைநிறப் புருவச் செங்கண்
மோதர னென்னு நாமத்
தொருவனை முறையி னேக்கி
ஏதுள திறந்தி லாத
திலங்கையு ளிருந்த சேனை
யாதையு மெழுகென் ருனை
மணிமுர செற்று கென்ருன்.

பூதரம் அனைய மேனி,
புகைநிறப் புருவச் செங்கண்
மோதரன் என்னும் நாமத்து
ஒருவனை முறையின் நோக்கி,
"ஏது உளது இறந்திலாதது
இலங்கையுள் இருந்த சேனை
யாதையும் எழுக!' என்று ஆனை
மணிமுரசு எற்றுக!" என்ருன்.

பொ :—மலையினை ஒத்த உடம்பினையும் புகைபோலும் நிறம் வாய்ந்த புருவத்துடன் பொருந்திய (தீப்போலும்) சிவந்த கண்களையும் உடைய மகோதரன் என்னும் பெயருடைய ஒப்பற்ற வீரனை (இராவணன்) முறைமையிற் பார்த்து, 'இறத்தல் இல்லாத சேனையாக இலங்கை நகருள் யாது உள்ளதோ அச்சேனையெல்லாமும் (போருக்கு) எழுக என்று அழகிய முரசினை யானைமேல் (ஏற்றி) அறையுமாறு செய்க' எனப் பணித்தான்.

கு:—பூதரம்—மலை. புகைநிறப் புருவம் எனவே தீ நிறச் செங்கண் என்பதும் புலப்படுத்தியவாறு. மகோதரன் என்னும் வடமொழிப்பெயர், தமிழில் மோதரன் எனத்திரித்து வழங்கப் பெற்றுள்ளமை காண்க. இச்செய்யுளின் நான்காமடியில் 'எழு கென்றுனே' என்பதனை ஐயுருபேற்ற வினையாலணையும் பெய ராகக்கொண்டு, எஞ்சியுள்ள சேனை யாவும் போருக்கு எழுக என்று ஆலோசனை கூறியவனுகிய மகோதரனைநோக்கி 'மணி முரசு எற்றுக' என்று இராவணன் ஏவினுன் எனப் பொரு ளுரைத்தலும் உண்டு. (1)

### போர்முரசுகேட்டு அரக்கர்சேனை திரளுதல்

9784. எற்றிய முரசங் கேளா
வேழிரு நூறு கோடி
கொற்றவா ணிருதர் சேனை
குழீஇயது கொடித்திண் டேரும்
சுற்றுறு துளைக்கைம் மாவுந்
துரகமும் பிறவுந் தொக்க
வற்றிய வேலை யென்ன
விலங்கையூர் வறளிற் ருக.

எற்றிய முரசங் கேளா,
ஏழ்-இரு நூறு கோடி
கொற்ற வாள் நிருதர் சேனை
குழீஇயது; கொடித்திண் தேரும்
சுற்றுறு துளைக் கைம்மாவும்,
துரகமும், பிறவும் தொக்க;
வற்றிய வேலை என்ன
இலங்கை ஊர் வறளிற்று ஆக.

பொ:—அறையப்பட்ட முரசின் ஒலியினைக் கேட்டுப் பதி னுன்கு நூறுகோடி அளவினதாகிய வெற்றிபொருந்திய கொடிய அரக்கரது சேனை ஒருங்கு குழுமியது. கொடிகளையுடைய வலிய தேரும் சுற்றி வளைத்துக் கொள்ளுந்தன்மையினையுடைய துளை பொருந்திய கையினையுடைய யானையும் குதிரையும் மற்றுமுள்ள

காலாட்படையும் இலங்கை நகரம் வற்றியகடல் என்னும்படி வறுமையுடையதாக (ஓரிடத்தே வந்து) குழுமின.

கு :—தேரும் கைம்மாவும் துரகமும், இலங்கையூர் வற்றிய வேலை என்ன வறளிற்று ஆக, தொக்க எனமுடிக்க. வறளிற்று ஆதல் — வற்றுதலையுடையதாதல். தொகுதல் — பலவிடங்களி லிருந்தும் ஓரிடத்தே வந்து கூடுதல். (2)

இதன்பின் 45, 52 என்னும் எண் பெற்ற அச்சுப் புத்தகங்களிற் பின்வருமாறு ஒருமிகைப் பாடல் குறிக்கப்பெற்றுள்ளது:—

9784 (a) ஏழிரு நூறு கோடி
எனும்படைத் தலைவ ரோடும்
ஆழியின் வளைந்த சேனை
யையிரு நூறு வெள்ளம்
ஊழியின் எழுந்த ஓதத்
தொலித்தலும் அரக்கர் வேந்தன்
வாளமர் முடிப்பெ னின்றே
யெனமணித் தவிசு நீத்தான்.

இராவணன் சிவபூசைசெய்து தானம் முதலியன நல்குதல்

9785. ஈசனை யிமையா முக்க
ணொருவனை யிருமைக் கேற்ற
பூசனை முறையிற் செய்து
திருமறை புகன்ற தானம்
வீசின னியற்றி மற்றும்
வேட்டன வேட்டோர்க் கெல்லாம்
ஆசற நல்கி யொல்காப்
போர்த்தொழிற் கமைவ தானன்.

ஈசனை, இமையா முக்கண்
ஒருவனை, இருமைக்கு ஏற்ற
பூசனை முறையின் செய்து,
திருமறை புகன்ற தானம்

வீசினன் இயற்றி, மற்றும்
வேட்டன வேட்டோர்க்கு எல்லாம்
ஆசு அற நல்கி, ஒல்காப்
போர்த்தொழிற்கு அமைவது ஆனான்.

பொ :—எல்லாச் செல்வங்களையும் உடையானும், இமைத்தல் இல்லாத மூன்று கண்களையுடைய தனிமுதல்வனும் ஆகிய சிவபெருமானை இம்மை மறுமை யின்பங்களைப் பெறுதற்கேற்ற வழிபாட்டினை முறைப்படிசெய்து சிறந்த வேதங்கள் கூறிய கொடைத் தொழிலாகிய அறத்தினை (பொருள்களை) வரையாது வழங்கியவனாகிச் செய்து நிறைவேற்றி, விரும்பினவற்றை விரும்பினோர்க்கெல்லாங் கொடுத்துத் தளர்தலில்லாத போர்த் தொழிலைச் செய்தற்குப் பொருந்தியவனானான் (இராவணன்).

கு :—ஈசன்—ஐசுவரியம் உடையான்; என்றது எல்லாவுலகங்களையும் தனக்கு உடைமையாகவுடைய இறைவனை. 'முக்கண் ஒருவனை இருமைக்கேற்ற' என்புழி ஒன்று இரண்டு மூன்று என்னும் எண்கள் பயின்றுள்ளமை காண்க. ஞாயிறு, திங்கள், தீ என்னும் மூன்று சுடர்களும் சிவபெருமானுக்குக் கண்களாதலின் 'இமையா முக்கண் ஒருவன்' என்றார். இருமை என்றது, இம்மை மறுமையின்பங்களை. திரு மறை—அழகிய வேதங்கள். தானம்—கொடையாகிய அறம். ஆசு—குற்றம். வீசுதல்—வரையாது வழங்குதல். (3)

இராவணன் போர்க்கோலம் கொள்ளுதல்

9786. அருவி யஞ்சனக் குன்றிடை
யாயிர மருக்கர்
உருவி னேடும்வந் துதித்தன
ராமென வொளிரக்
கருவி நான்முகன் வேள்வியிற்
படைத்ததுங் கட்டிச்
செருவி லிந்திரன் றந்தபொற்
கவசமுஞ் சேர்த்தான்.

அருவி அஞ்சனக் குன்றிடை
ஆயிரம் அருக்கர்
உருவினேடும் வந்து உதித்தனராம்
என ஒளிர,
கருவி நான்முகன் வேள்வியில்
படைத்ததும், கட்டிச்
செருவில் இந்திரன் தந்த
பொன்கவசமும், சேர்த்தான்.

பொ:—நீரருவிகளையுடைய மைந்நிற மலையிலே ஆயிரஞ் சூரியர்கள் தமக்குரிய வடிவுடன் வந்து தோன்றினரோ என்னும்படி ஒளிவீச (உலகின் நிமித்த) காரணமாகிய பிரமதேவன் வேள்வியிலே உண்டாக்கியதும் போரில் (இந்திரசித்து, தேவேந்திரனைக்) கட்டினமையால் இந்திரன் (தோல்வியுற்றுத்) தந்ததும் ஆகிய பொற்கவசத்தினை (இராவணன் தனது மார்பிற்) பொருந்த அணிந்துகொண்டான்.

கு:—இராவணன் போர்க்கோலங்கொள்ளும் நிலை இதுமுதல் பதினன்கு செய்யுட்களில் விரித்துக் கூறப்படுகிறது. அஞ்சனக் குன்று—மைந்நிறமலை. அஞ்சனம்—மை. அருக்கர்—சூரியர். உருவினேடும் வருதலாவது தத்தமக்குரிய வடிவங்களின் ஒளிக்கற்றை நன்கு புலப்படும்படி தோன்றுதல். கருநிறத்தினனுகிய இராவணனது மாலையணிந்த உடம்புக்கு அருவியினையுடைய அஞ்சனமலையும், அவனுடைய மார்பின்கண்ணே யணியப்பெற்ற பொற்கவசத்தின் ஒளிக்கு அஞ்சனக்குன்றில் ஆயிரம் அருக்கர் ஒருங்கே தோன்றி ஒளிர்தலும் உவமை. கருவி—காரணம்; காரணங்கள் மூன்றனுள் நிமித்தகாரணத்தையுணர்த்தியது. 'கட்டி' என்னும் செய்தென் எச்சம் 'மழை பெய்து குளம் நிறையும்' என்புழிப்போலக் காரணப் பொருளில் வந்தது. சேர்த்தல்—பொருந்த அணிதல். (4)

இச்செய்யுளின்பின் 45, 52-என்னும் குறியீடுள்ள அச்சுப் புத்தகங்களிற் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் காணப்படுகிறது:—

9786 (a) உரைசெயற்கருந் தவத்தினுக் குவந்துமை கேள்வன்
அருள வுற்றதங் கவன்மழுக் குலிசமோ டாழி

முரிய மற்றவை முனைகளை மடித்தொன்றின் முடியா
விரவு வயிரக் கவசத்தை மேற்படப் புனைந்தான்.

9787. வாள்வ லம்பட மந்தரஞ்
சூழ்ந்தமா சுணத்தின்
தாள்வ லந்தொளிர் தமனியக்
கச்சொடுஞ் சார்த்திக்
கோள்வ லந்தன குவிந்தன
வாமெனுங் கொள்கை
மீள்வில் கிம்புரி மணிக்கடி
சூத்திரம் வீக்கி.

வாள் வலம்பட, மந்தரம்
சூழ்ந்த மாசுணத்தின்
தாள் வலந்து ஒளிர் தமனியக்
கச்சொடும் சார்த்தி;
கோள் வலந்தன குவிந்தனவாம்
எனும் கொள்கை
மீள்வு இல் கிம்புரி மணிக்
கடிசூத்திரம் வீக்கி;

பொ:—(பாற்கடலைக்கடையுங்காலத்து) மந்தர மலையைச் சூழ்ந்த (வாசுகி என்னும்) பாம்பினைப்போன்று, கயிற்றுற் பின்னப்பட்டு ஒளிர்கின்ற பொற்கச்சினுடன் உடை வாளினை வலப்புறமாகப் பொருந்தச்சேர்த்தி, சுற்றிவருவனவாகிய கோள்கள் (ஓரிடத்தே வந்து) குழுமினவாகும் என்ற கொள்கை மீளுதல் இல்லாத மகரவாயுடன் கூடிய மணிகள் இழைக்கப்பெற்ற கடிசூத்திரத்தைக் கட்டி.

கு:—இதுமுதல் பதினான்கு செய்யுட்கள் ஒரு தொடராய் அமைந்தன. மந்தரஞ் சூழ்ந்த மாசுணத்தின் தாள் வலந்து ஒளிர் தமனியக் கச்சொடும் வாள் வலம் படச் சார்த்தி எனவும், வலந்தனகோள் குவிந்தனவாம் எனும் கொள்கை எனவும் இயைத்துப் பொருள் கொள்க. மாசுணம்—பெரும்பாம்பு; என்றது வாசுகியை. தாள்—கயிறு. வலத்தல்—பின்னுதல். தமனி

யக்கச்சு—பொற்கச்சு. கோள்—கிரகங்கள். வலத்தல்—சுற்றுதல். கிம்புரி—மகரமீன் வடிவில் அமைந்தது. இச்சொல் இப்பொருளினதாதல் 'கிம்புரிப்பகுவாய் — மகரவாய்' (சிலப்-இந்திர-150) எனவரும் அரும்பதவுரையால் அறியப்படும். இச்செய்யுள்முதலாக 17-ஆம் செய்யுளீருகவுள்ள செய்யுட்களில் சார்த்தி, வீக்கி, பூட்டி என்ருங்குவரும் செய்து என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சங்கள் 18-ஆம் செய்யுளில் 'வருக தேர் என' என்புழி 'என' என்னும் வினைமுதல் வினை கொண்டு முடிந்தன. (5)

9788. மறைவி ரித்தென வாடுறு
மானமாக் கலுழன்
சிறைவி ரித்தெனக் கொய்சக
மருங்குறச் சேர்த்தி
முறைவி ரித்தன்ன முறுக்கிய
கோசிக மருங்கில்
பிறைவி ரித்தன்ன வெள்ளெயிற்
றரவமும் பிணித்து.

மறை விரித்தென, ஆடுறு
மான மாக் கலுழன்
சிறை விரித்தென, கொய்சகம்
மருங்கு உறச்சேர்த்தி;
முறை விரித்தன்ன முறுக்கிய
கோசிக மருங்கில்
பிறை விரித்தன்ன வெள் எயிற்று
அரவமும் பிணித்து;

பொ:—வேதங்களை விரித்தாற்போன்றும், ஆடுதல் பொருந்திய பெருமையையுடைய கருடன் தனது சிறகினை விரித்தாற் போன்றும் பல மடிப்புப்படக் கொய்யப்பட்ட ஆடையினை இடையிலே பொருந்த உடுத்து, நூற்பொருளை விரித்தாலொத்த நூற்கப்பட்ட பட்டாடையின்மேல் பிறையை வெளிப்படுத்தினுற் போலும் வெள்ளிய பற்களையுடைய பாம்பினைக் கச்சையாகக் கட்டி.

கு :—மறைவிரித்தென, சிறைவிரித்தெனக் கொய்சகம் மருங்குறச் சேர்த்தி என இயையும். பல மடிப்புக்களையுடையதாகக் கொய்து உடுக்கப்பட்ட கொய்சகத்திற்குப் பல சாகைகளாக விரித்துரைக்கப்படும் வேதமும் கருடனது விரித்த சிறகும் உவமை. முறைவிரித்தன்ன கோசிகம் எனவும் முறுக்கிய கோசிகம் எனவும் தனித்தனி இயைத்துரைக்க. முறை-நூல். கோசிகம்-பட்டாடை. பிறை விரித்தன்ன வெள்ளெயிற்று அரவம்-(விழுங்கிய) பிறைச்சந்திரனை (மீளவும்) வெளிப்படுத்தினாற் போன்றமைந்த வெள்ளிய பற்களையுடைய பாம்பு. பாம்பின் வளைந்த எயிற்றுக்குப் பிறை உவமை. (6)

9789. மழைக்கு லத்தொடு வானுரு
மேறெலாம் வாரி
இழைத்தெ டுத்தன வனையவா
ளுடைமணி யார்த்து
முழைக்கி டந்தவல் லரியின
முழங்குவ போல்வ
தழைக்கு மின்னொளிப் பொன்மலர்ச்
சதங்கையுஞ் சாத்தி.

மழைக் குலத்தொடு வான் உரும்
ஏறெலாம் வாரி
இழைத்து எடுத்தன அனைய
வாளுடை மணி ஆர்த்து ;
முழைக் கிடந்த வல் அரிஇனம்
முழங்குவ போல்வ
தழைக்கும் மின் ஒளிப் பொன்மலர்ச்
சதங்கையும் சாத்தி ;

பொ :—மேகத் தொகுதியுடன் பொருந்திய வானகத்துப் பேரிடியிற் றோன்றும் மின்னல்களையெல்லாம் வாரியெடுத்து இழைத்து அமைத்தனவற்றையொத்த ஒளியுடைய மணிகளை இடையிற்கட்டி, குகையிடத்தேகிடந்த வலிய சிங்கக்கூட்டங்கள் முழங்குவனவற்றையொத்தவாய்த் தழைக்கின்ற மின்னலின் ஒளியினையுடைய பொன்னால் இயன்ற மலரின் வடி

வுடைய சதங்கையென்னும் அணியையும் (பாதங்களில்) அணிந்து.

கு :—உருமேறு—இடியேறு; ஈண்டு ஆகுபெயராய் இடியிற் றோன்றிய பின்னலையுணர்த்தி நின்றது. இழைத்தல்-அமைத்தல். முழை—குகை. சதங்கையின் உள்ளிடுபரல்களின் ஒலிக்குக் குகையிற் கிடந்த சிங்கங்களின் முழக்கம் உவமை. தழைத்தல்—மிக்குத் தோன்றுதல். (7)

9790. உருமி டித்தபோ தரவுறு
மறுக்கம்வா னுலகின்
இருநி லத்திடை யெவ்வுல
கத்திடை யாரும்
புரித ரப்படும் பொலங்கழ
லிலங்குறப் பூட்டிச்
சரியு டைச்சுடர் சாய்நலஞ்
சாய்வுறச் சாத்தி.

உரும் இடித்தபோது அரவு உறு
மறுக்கம், வான் உலகின்
இரு நிலத்திடை, எவ்
உலகத்திடை, யாரும்
புரிதரப் படும் பொலங்கழல்
இலங்குறப் பூட்டி;
சரியுடைச் சுடர் சாய்நலம்
சாய்வுறச் சாத்தி;

பொ :—இடியிடித்தபோது பாம்பு அடைகின்ற கலக்கத்தை வானுலகத்தும் பெரிய நிலவுலகத்தும் எவ்வுலகத்தும் யாவரும் அடையும்படி ஒலிக்கின்ற பொன்னாலாகிய வீரக்கழல்களை விளக்கமுறப் பூட்டிச் சரிந்த உடையிடத்தே சுடர்சாயும் அழகு பொருந்த (க்கால்களில்) அணிந்து.

கு :—இடியிடித்தபோது பாம்புகள் அடையும் கலக்கத்தைத் தன் கழலொலி கேட்ட அளவில் வானுலகத்தவரும் மண்ணுல

கத்தவரும் மற்றைய உலகத்திலுள்ளாரும் அடையுமாறு இராவணன் தன்கால்களில் வீரக்கழலை அணிந்தனன் என்பதாம். காலில் அணியப் பெற்ற கழல்களின் சுடர், உடுத்த ஆடையின் மேல் வீசுதலால், 'சரியுடைச் சுடர் சாய்நலஞ்சார்வுறச் சாத்தி' என்றார். (8)

9791. நாலஞ் சாகிய கரங்களி
னனந்தலை யனந்தன்
ஆலஞ் சார்மிடற் றருங்கறை
கிடந்தென வலங்கும்
கோலஞ் சார்நெடுங் கோதையும்
புட்டிலுங் கட்டித்
தாலஞ் சார்ந்தமா சுணமெனக்
கங்கணந் தழுவ.

நால் – அஞ்சு ஆகிய கரங்களின்
நனந்தலை அனந்தன்
ஆலம்சார் மிடற்று அருங் கறை
கிடந்தென, அலங்கும்
கோலம் சார் நெடுங் கோதையும்
புட்டிலும் கட்டி ;
தாலம் சார்ந்த மாசுணம் எனக்
கங்கணம் தழுவ ;

பொ :—இருபதாகிய கைகளினிடத்தே பணையிணைச்சார்ந்த பாம்புபோலக் கங்கணம் பொருந்தித் தோன்ற, அனந்தனது நஞ்சு பொருந்திய மிடற்றின்கண்ணே (போக்குதற்கு) அரிய நஞ்சக்கறை கிடந்தாற்போல விளங்குகின்ற வடிவமைந்த நீண்ட முன்கைத்தோற்கட்டும் விரற்புட்டிலும் ஆகியவற்றைக் கட்டி ;

கு :—நனந்தலை — நடுவிடம். அனந்தன் — எட்டுப் பெரும் பாம்புகளில் ஒன்று ; ஆதிசேடன் எனினும் அமையும். தாலம்— பணை. மாசுணம்—பாம்பு. இராவணன் கைகளிலுள்ள கங்கணத்திற்குப் பணையிணைச் சுற்றிய பாம்பு உவமை. நாலஞ்சாகிய கரங்

களின் நனந்தலை தாலம்சார்ந்த மாசுணம் எனக் கங்கணம் தழுவ நெடுங்கோதையும் புட்டிலும் கட்டி என இயைத்துரைக்க. கோதை — வில்வீரர் முன்கையிற்பூணும் தோலுறை. புட்டில் — விரலுறை. இராவணன் கையிற்கட்டிய தோலுறையும் விரலுறையும் அனந்தன் என்னும் பாம்பின் மிடற்றிற்கிடந்த நஞ்சக் கறையினை ஒத்துத் தோன்றின என்பதாம். அலங்குதல் — விளங்குதல். (9)

9792. கடல்க டைந்தமால் வரையினைச்
சுற்றிய கயிற்றின்
அடல்க டந்ததோ ளலங்குபோர்
வலயங்க ளிலங்க
உடல்க டைந்தநா ளொளியவ
னுதிர்த்தபொற் கதிரின்
சுடர்த யங்குறக் குண்டலஞ்
செவியிடைத் தூக்கி.

கடல் கடைந்த மால் வரையினைச்
சுற்றிய கயிற்றின்
அடல் கடந்ததோள் அலங்கு போர்
வலயங்கள் இலங்க,
உடல் கடைந்தநாள் ஒளியவன்
உதிர்த்த பொன் கதிரின்
சுடர் தயங்குற, குண்டலம்
செவியிடைத் தூக்கி;

பொ:—கடலைக் கடைந்த பெரிய (மந்தர) மலையினைச் சுற்றிய (வாசுகியென்னும்) கடைகயிற்றினைப்போன்று வலிமையின் மேம்பட்ட தோள்களில் அசைகின்ற போர் வலயங்கள் விளங்க, உடலை (த் துவட்டா என்பவன் சாணையிலிட்டு)க் கடைந்த காலத்தில் கதிரவன் உதிர்த்த பொன் கதிர்களின் ஒளி விளங்குமாறு குண்டலங்களைச் செவிகளில் தொங்கும்படி அணிந்து.

கு:—தோளுக்கு மந்தரமலையும் தோள் வலயத்துக்கு மந்தர மலையைச் சுற்றிய வாசுகியாகிய கயிறும் உவமை. கடத்தல் —

மேம்பட்டு விளங்குதல். துவட்டா என்பவனுடைய மகளாகிய சஞ்சை என்பாள் சூரியனை மணந்தவள். அவனது வெம்மை ஒளியைத் தாங்கமாட்டாதநிலையில் தனது உடல்நிழலைத் தேவியாக அமைத்துத் தன் தந்தை வீட்டையடைய, அவள் தந்தையாகிய துவட்டாவின் விருப்பத்திற்கிணங்கிக் கதிரவன் சாணையிலிட்டுத் தேய்க்கப்பட்டு ஒளி குறைக்கப்பட்டனன் என்பது ஓர் புராண கதை. ஒளியவன் — கதிரவன். தூக்குதல் — தொங்கவிடுதல். (10)

9793. உதயக் குன்றத்தோ டத்தத்தி
னுலாவுறு கதிரின்
துதையுங் குங்குமத் தோளொடு
தோளிடைத் தொடரப்
புதையி ருட்பகைக் குண்டல
மணையவை பொலியச்
சிதைவி றிங்களு மீனும்போன்
முத்தினந் திகழ.

உதயக் குன்றத்தோடு அத்தத்தின்
உலாவுறு கதிரின்
துதையும் குங்குமத் தோளொடு
தோளிடைத் தொடர,
புதை இருள்பகைக் குண்டலம்
அணையவை பொலிய;
சிதைவுஇல் திங்களும் மீனும்போல்,
முத்துஇனம் திகழ;

பொ:—உதயமலையோடு அத்தமன மலையிலே உலாவுதலைப் பொருந்திய கதிரவனைப்போன்று நெருங்கிய குங்குமக்குழம்பினை அணிந்த தோளொடு தோள்களிடையே தொடர்ந்தசைய (பொருள்களை) மறைக்குமியல்புடைய இருளுக்குப் பகையாகிய ஒளியினையுடைய குண்டலங்களாகிய அவை பொலிந்து விளங்கவும், குறைந்து தேய்தலில்லாத சந்திரனும் விண்மீன்களும் போன்று முத்துக்களின் கூட்டம் திகழவும்;

கு :—இராவணனுடைய செவிகளில் அணியப்பட்டு ஒரு தோளிலிருந்து மற்ெருரு தோளினிடையே அசையும் குண்டலங்கள் உதயமலேயுடன் அத்தமனமலேயினிடையே உலவும் கதிரவனே ஒத்து விளங்கின எனவும், அவன் அணிந்த முத்தினங்கள் முழுமதியையும் அதனேச் சூழ்ந்துள்ள விண்மீன்களேயும் ஒத்துத் தோன்றின எனவும் கூறியவாறு. பொருள்களே மறைத்தல் இருளின் இயல்பென்பது விளங்கப் 'புதையிருள்' என அடைகொடுத்தோதினுர். இருட்பகை என்றது ஒளியினே. சிதைவு இல் திங்கள் என்றது தேய்ந்து சிதைதல் இல்லாத முழுமதியினே. (11)

9794. வேலே வாய்வந்து வெய்யவ
ரனேவரும் விடியுங்
காலே யுற்றுள ராமெனக்
கதிர்க்குலங் காலும்
மாலே பத்தின்மேன் மதியமுன்
ஞளிடைப் பலவாய்
ஏல முற்றிய வனேயமுத்
தக்குடை யிமைப்ப.

வேலேவாய் வந்து வெய்யவர்
அனேவரும் விடியும்
காலே உற்றுளர் ஆம் எனக்
கதிர்க்குலம் காலும்
மாலே பத்தின்மேல், மதியம்
முன்நாளிடைப் பலவாய்
ஏல முற்றிய அனேய
முத்தக்குடை இமைப்ப;

பொ :—வெம்மை வாய்ந்த கதிர்களேயுடையராகிய அருக்கர் அனேவரும் கடலிடத்தே வந்து விடியற்காலத்தே தோன்றியுள்ளார்கள் என்னும்படி ஒளிக்கற்றையினே உமிழும் (முடி) வரிசை பத்தின்மேல் மதியானது முற்காலத்திற்பலவாய்த் தோன்றிய வடிவங்கள் அனேத்தும் (ஓருருவாய்ப்) பொருந்த நிரம்பியதனே ஒத்த முத்துக்குடை ஒளிவிட்டு விளங்க ;

கு :—பன்னிருவர் எனச் சொல்லப்படும் சூரியர் அனைவரும் ஒருசேரக் கரிய கடலிடத்தே விடியற்காலத்தில் தோன்றி விளங்கினாற்போன்று கரிய மேனியனாகிய இராவணன் அணிந்த மணி முடிகள் பத்தும் ஒருங்கே ஒளிவிட்டு விளங்கின என்பார், 'வெய்யவர் அனைவரும் வேலைவாய்வந்து விடியுங்காலை உற்றுளராம் எனக் கதிர்க்குலம் காலும் மாலைபத்து' என்றார். வேலை—கடல். வெய்யவர்—சூரியர். காலுதல்—உமிழ்தல்; வெளிப்படுத்துதல். மாலை—வரிசை; என்றது, முடியின் நிரலை. வெண்மதியானது முற்காலத்திற் பலவாய்த் தோன்றிய தன் வடிவுகளனைத்தும் திரண்டு ஓருருவாய்ப் பொருந்த நிரம்பியது என்னும்படி இராவணனுடைய முடிகள் பத்தின்மேலும் முத்தக்குடை விளங்கியது என்பார், 'மாலை பத்தின்மேல் மதியம் முன்னுளிடைப் பலவாய் ஏலமுற்றிய அனைய முத்தக்குடை இமைப்ப' என்றார். ஏல — பொருந்த. முற்றுதல் — நிரம்புதல். (12)

9795. பகுத்த பல்வளக் குன்றினின்
முழையன்ன பகுவாய்
வகுத்த வான்கடை கடைதொறும்
வளையெயிற் றீட்டம்
மிகுத்த நீலவான் மேகஞ்சூழ்
விசும்பிடைத் தசும்பூ
டுகுத்த செக்கரிற் பிறைக்குல
முளைத்தன வொக்க.

பகுத்த பல்வளக் குன்றினில்
முழை அன்ன பகுவாய்
வகுத்த வான்கடை கடைதொறும்
வளை எயிற்று ஈட்டம்,
மிகுத்த நீலவான் மேகம்சூழ்
விசும்பிடை, தசும்பூடு
உகுத்த செக்கரின் பிறைக்குலம்
முளைத்தன ஒக்க.

பொ :—(பலவாகப்) பகுத்துரைக்கப்படும் பல வளங்களை யுடைய மலையிடத்தே குகையினை ஒத்து அமைந்த பிளவுபட்ட

வாயின்கண்ணே (இருகூருக) வகுக்கப்பட்ட பெரிய கடைவாய் தோறும் வளைந்த கோரப்பற்களின் கூட்டம், மிக்குத் தோன்றிய நீலநிறம் வாய்ந்த பெரிய மேகஞ்சூழ்ந்த வானத்தின்கண்ணே (பாலிகைக்) கும்பத்தினை இடையிடையே சொரிந்துவைத்தாற் போன்ற செவ்வானத்திலே பிறைத்தொகுதிகள் (ஆகிய தானிய முளைகள்) முளைத்தவற்றை ஒத்துத் தோன்ற;

கு:—கருநிறமேனியனுகிய இராவணனுடைய பத்துத் தலைகளுக்கும் பலபடப்பகுத்த குன்றுகளும், அத்தலைகளிலே அமைந்த வாய்களுக்கு மலையிடத்தே அமைந்த குகைகளும், செந்நிறம் பொருந்திய வாயின் இருகடைகளிலும் வெளிப்பட்டுத் தோன்றும் கோரப்பற்ருெகுதிக்கு வானத்திலே உடுத்த செக்கராகிய கும்பத்திலே முளைத்த பிறையாகிய முளைத்தொகுதியும் உவமை. இச்செய்யுள் உருவகந்தழுவிய தன்மைத் தற்குறிப் பேற்ற உவமையாகும். (13)

9796. ஒத்த தன்மையி னெளிர்வன
தரளத்தி னோதம்
தத்து கின்றன வீரபட்
டத்தொகை தயங்க
முத்த வோடைய முரட்டிசை
மும்மத யானை
பத்து நெற்றியுஞ் சுற்றிய
பேரெழில் படைக்க.

ஒத்த தன்மையின் ஒளிர்வன,
தரளத்தின் ஓதம்
தத்துகின்றன, வீரபட்டத்
தொகை தயங்க;
முத்த ஓடைய முரண்திசை
மும்மத யானை
பத்து நெற்றியும் சுற்றிய
பேர் எழில் படைக்க;

பொ:—ஒத்த தன்மையால் ஒளிவிட்டு விளங்குவனவும், முத்துக்களின் ஒளியலைகள் தவழப்பெற்றனவும் ஆகிய வீரபட்டத்

தின் தொகுதிகள் (நெற்றியில்) விளங்குதலால், முத்திஞலியன்ற முகபடாத்தையுடைய மாறுபடுந்தன்மை வாய்ந்த மும்மதங்களே யுடைய திசை யாணேகள் (தம்மைச்சூழ்ந்துள்ள பகையிஜன எதிர்த்தற்பொருட்டு ஒரே கூட்டமாகச்) சூழ்ந்துகொண்டு நின்ருற்போலும் பேரழகிஜன (இராவணனுடைய) பத்து நெற்றி களும் (ஒருசேரப்) பெற்று விளங்க;

கு:—ஒளிர்வன, தத்துகின்றன, வீரபட்டம் என இயைக்க. வீரபட்டம் என்பது வீரர்கள் தமது வீரத்தன்மை பொலிய நெற்றி யில் அணிந்துகொள்ளுதற்குரிய நெற்றிப்பட்டம். தரளத்தின் ஓதம் என்றது, முத்துக்களிலிருந்து வெளிப்பட்டு விளங்கும் ஒளி யலேயிஜன. தத்துதல் — தவழ்தல். தயங்க — விளங்குதலால்; செயவெனச்சம் காரணப்பொருளில் வந்தது. முத்த ஓடைய முரண் மும்மத திசையாஜன சுற்றிய பேரெழில் பத்து நெற்றியும் படைக்க என இயைத்துரைக்க. இராவணனுடைய பத்து நெற்றி களும் முத்திஞலியன்ற வீரபட்டங்கள் ஒளிவீசுதலால் முத்திஞல் இயன்ற முகபடாம் அணிந்த திசையாணேகள் எட்டும் தம் பகை யிஜன எதிர்க்க ஒன்றுகூடித் தம் முகங்களால் புறத்தேநோக்கி நின்ருற்போலும் பேரழகிஜனப் பெற்று விளங்கின என்றவாறு. ஓடை — முகபடாம். (14)

9797. புலவி மங்கையர் பூஞ்சிலம்
பரற்றடி போக்கித்
தலைமை கண்ணினர்த் தாழ்கிலா
மணிமுடித் தலங்கள்
உலக மொன்றிஜன விளக்குறு
கதிரிஜன யோட்டி
அலகி லெவ்வுல கத்தினும்
வயங்கிரு ளகற்ற.

புலவி மங்கையர் பூஞ்சிலம்பு
அரற்று அடி போக்கி,
தலைமை கண்ணினர்த் தாழ்கிலா
மணிமுடித் தலங்கள்,
உலகம் ஒன்றிஜன விளக்குறு
கதிரிஜன ஓட்டி

அலகு இல் எவ்வுலகத்தினும்
வயங்கு இருள் அகற்ற ;

பொ :—(தன்னொடு) புலத்தலைக்கொண்ட (அன்புடைய) மகளிரது அழகிய சிலம்புகள் ஒலிக்கின்ற பாதங்களைத் தவிர்த்துத் தலைமையைக் கருதுகின்றார் யாரையும் (தன்னின் மிக்கார் எனத்) தாழ்ந்து வணங்காத மணிகள் இழைக்கப்பெற்ற முடிகளுக்கு இடமாகிய (இராவணனுடைய) தலைகள், உலகம் ஒன்றை (மட்டும் ஒளியினால்) விளங்கச்செய்யும் கதிரவனை(ப்புறங்கொடுத்து) ஓடச் செய்து அளவு இல்லாத எல்லா உலகங்களிலும் செறிந்து விளங்கும் இருளை அகற்றிப் போக்க ;

கு :—இராவணனுடைய தலைகள், அவனை அன்பினாற்கூடிப் பிணங்கிய மகளிரது ஊடலைத் தணித்தற்குத் தாழ்வனவேயன்றி, 'யாம் தலைமையுடையோம்' என்ற கருத்துடைய பகைவர் யார்க்குந் தாழாத தலைமை வாய்ந்தன என்பார், 'புலவிமங்கையர் பூஞ்சிலம்பரற்றடி போக்கித் தலைமை கண்ணினர்த் தாழ்கிலா மணிமுடித்தலங்கள்' எனச் சிறப்பித்தார். போக்கி — தவிர்த்து. தலைமை கண்ணினரைத் தாழ்கிலா என விரிந்துவருதற்குரிய இரண்டாமுருபு உயர்திணையிடத்து மறைந்து வந்தது. இராவணன் அணிந்த மணிமுடிகள் இவ்வுலகத்து இருளைமட்டும் ஓட்டி ஒளிவழங்கும் ஞாயிற்றினும்மேலாக எவ்வுலகத்து இருளையும் ஓட்டும் ஒளிபடைத்தனவாய் மேம்பட்டு விளங்கின என்பார், 'உலகம் ஒன்றினை விளக்குறு கதிரினை ஓட்டி அலகுஇல் எவ்வுலகத்தினும் வயங்குஇருள் அகற்ற' என்றார். (15)

9798. நாக நானில நான்முக
னாடென நயந்த
பாக மூன்றையும் வென்றுகொண்
டமரர்முன் பணிந்த
வாகை மாலையின் மருங்குற
வரிவண்டொ டளவித்
தோகை யன்னவர் விழிதொடர்
தும்பையுஞ் சூடி.

நாகம், நானிலம், நான்முகன்
நாடு என நயந்த

பாகம் மூன்றையும் வென்று கொண்டு,
அமரர் முன்பு அணிந்த
வாகை மாலையின் மருங்கு உற
வரி வண்டொடு அளவித்
தோகை அன்னவர் விழி தொடர்
தும்பையும் சூடி ;

பொ :—நாகருலகமும் நிலவுலகமும் நான்முகன் (வீற்றிருக்கும்) நாடாகிய பிரம உலகமும் என விரும்பிக் கூறப்படும் உலகப் பகுதிகள் மூன்றினையும் வென்று கைக்கொண்டு (அவ்வெற்றித் திறங்கண்டு) தேவர்கள் முற்காலத்தில் அணிவித்த வெற்றிமாலையினையும் அதன் அருகே வண்டுகளோடு பொருந்தி மயிலையொத்த சாயலையுடையராய மகளிருடைய கண்கள் தொடரப்பெற்ற தும்பைமாலையினையும் அணிந்து ;

கு :—நாகம் என்றது நாகருலமாகிய பாதாளத்தை. கீழுலகமாகிய நாகருலகத்தையும் நடுவணதாகிய நிலவுலகினையும் மேலதாகிய பிரம உலகத்தையும் இராவணன் வென்றுகொண்ட வெற்றித்திறத்தைக்கண்ட தேவர்கள் தமது அச்சத்தால்அவனது வெற்றியினைத் தாமே உடன்பட்டு அவனுக்கு வெற்றிமாலை அணிந்து பாராட்டினர் என்பார், 'நாகம் நானிலம் நான்முகன் நாடு என நயந்த பாகம் மூன்றையும் வென்றுகொண்டு அமரர் முன்பு அணிந்த வாகைமாலை' என்றார். அணிந்த என்பது செய்வதன் தொழிற்கும் செய்விப்பதன் தொழிற்கும் பொதுவாகிய வினைச்சொல் ; அஃது ஈண்டு அணிவித்த என்னும் பொருளில் ஆளப்பெற்றது. இராவணன் தான் மூன்றுலகங்களையும் வென்ற காலத்துத் தேவர்கள் தனக்கு அணிவித்த வெற்றிமாலையுடன் இப்பொழுது இராம இலக்குவரொடு எதிர்நின்று பொரும்போருக்கு அடையாளமாகிய தும்பைமாலையையும் சூடிக்கொண்டான் என்றவாறு. (16)

9799. அகழும் வேலையைக் காலத்தை
யளக்கர்நுண் மணலை
நிகழு மீன்களை விஞ்சையை
நினைப்பதெ னின்ற

இகழ்வில் பூதங்க ளிறப்பினு
மிறுதிசெல் லாத
புகழெ னச்சரம் தொலேவிலாத்
தூணிபின் பூட்டி.

அகழும் வேலையை, காலத்தை,
அளக்கர் நுண் மணலே,
நிகழும் மீன்களே, விஞ்சையை
நினேப்பது என்? நின்ற
இகழ்வு இல் பூதங்கள் இறப்பினும்
இறுதி செல்லாத
புகழ் எனச் சரம் தொலேவு இலாத்
தூணி பின் பூட்டி;

பொ:—(சகரர்களால்) தோண்டப்பட்ட கடலேயும் (எல்லாச் செயல்களுக்கும் காரணமாகிய) காலத்தையும் கடலிடத்தேயுள்ள நுண்ணிய மணலேயும் (கடலிலும் வானத்திலும்) நிலேபெற்று விளங்கும் மீன்களேயும் கல்வியையும் (அளவிடப்படாமைபற்றி உவமை கூற) நினேப்பது எதற்காக? நிலேயாகவுள்ள இகழ்தல் இல்லாத ஐம்பெரும் பூதங்கள் ஒழிந்தாலும் ஒழிதல் இல்லாத புகழைப்போன்று அம்புகள் தொலேதல் இல்லாத அம்பருத்தூணியையும் (தன்மேற்) கட்டி;

கு:—இராவணனது அம்புப்புட்டில், ஐம்பெரும்பூதங்கள் அழிந்தாலும் அழிதல் இல்லாத புகழைப்போன்று அம்புகள் தொலேயாத்தன்மையது என அதனேச் சிறப்பித்தவாறு. கடலில் உலவும் மீன்களும் வானத்தில் திகழும் விண்மீன்களும் அடங்க 'நிகழும் மீன்' எனக் குறித்தார். செருவில் இந்திரன் தந்த பொற்கவசமும் சேர்த்தான் ஆகிய இராவணன், வாள் கச்சொடும் சார்த்தி, கடிசூத்திரம் வீக்கி, கொய்சகம் மருங்குறச் சேர்த்தி, கோசிகமருங்கில் அரவமும் பிணித்து, சதங்கையும் சார்த்தி, பொலங்கழல் இலங்குறப் பூட்டி, கரங்களில் கங்கணம் தழுவக் கோதையும் புட்டிலும் கட்டி, செவியிடைக் குண்டலம் தூக்கி, குண்டலம் கதிரின் பொலிய, முத்தினம் திங்களும் மீனும்போல் திகழ, முத்தக்குடை இமைப்ப, பகுவாய்க்கடைதொறும் வளே யெயிற்று ஈட்டம் செக்கரில் பிறைக்குலம் முளேத்தன ஒக்க,

பத்துநெற்றியும் வீரபட்டத்தொகை தயங்கப்பேரெழில் படைக்க, மணிமுடித்தலங்கள் எவ்வுலகத்தினும் வயங்குஇருள் அகற்ற, வாகைமாலையின் மருங்குறத் தும்பையும்சூடி, தூணிபின் பூட்டி, 'வருகதேர்' என, (வென்றியின் உறையுளாகிய தேர்) வந்தது என அடுத்த செய்யுளில்வரும் வினையினைக்கூட்டி முடிக்க. (17)

'வருக தேர்' என இராணவன் கூறத் தேர் வருதல்

9800. வருக தேரென வந்தது
வையமும் வானும்
உரக தேயமு மொருங்குட
னிவரினு முச்சிச்
சொருகு பூவன்ன சுமையது
துரகமின் றெனினும்
நிருதர் கோமக னினைந்துழிச்
செல்வதோ ரிமைப்பில்.

'வருக, தேர்!' என வந்தது—
வையமும் வானும்
உரக தேயமும் ஒருங்கு உடன்
இவரினும், உச்சிச்
சொருகு பூ அன்ன சுமையது;
துரகம் இன்று எனினும்,
நிருதர் கோமகன் நினைந்துழிச்
செல்வது, ஓர் இமைப்பில்.

பொ:—'வருக தேர், என்று (இராவணன்) சொல்ல, நிலவுலகத்தாரும் வானுலகத்தாரும் நாகருலகத்தாரும் ஒருகாலத்து ஒருசேர ஏறி அமர்ந்தாலும் (அப்பெருஞ்சுமையினைத்) தலையுச்சியிற் சொருகப்பெறும் உச்சிப்பூ என்னும் அணியைப்போன்ற (எளிய) சுமையாக உடையதும், (இழுத்துச் செல்லுதற்குரிய) குதிரை இல்லை என்றாலும் அரக்கர்கோமானாகிய இராவணன் நினைந்த இடத்திற்கு இமைப்பொழுதிற் செல்ல வல்லதும் ஆகிய தேரானது (இராவணனுக்குமுன்னே) வந்தது.

கு :—இதுமுதல் ஆறு செய்யுட்கள் ஒரு தொடராய் இராவணனது தேரின் இயல்பினைப் புனைந்துரைப்பன. 'வருக தேர்' என, சுமையது, நினைந்துழிச்செல்வது, பூண்டது, செல்வது, தொகையது, குயிற்றியது, சுமந்தது, திண்மைசான்றது, வென்றியின் உறையுள் வந்தது என இயைத்துரைக்க. செல்வது, பூண்டது முதலியன வினையாலணையும்பெயராய்த் தேரைக் குறித்தன. வையம், வான், உரகதேயம் என்பன ஆண்டுவாழ்வாரைக் குறித்தமையின் ஆகுபெயர். உரகதேயம்—நாகருலகம். மூவுலகத்து வாழ்வாரும் ஒருகாலத்து ஒருசேரத் தன்மீது ஏறி அமர்ந்தாலும் அப் பெருஞ்சுமையினையும் உச்சிப்பூ என்னும் அணியை யொப்ப எளிமையாகக் கொண்டு தாங்கவல்ல திண்மையும் இழுத்தற்குரிய குதிரை பூட்டப்படாத நிலையிலும் இராவணன் நினைந்தவிடத்தே விரைந்துசெல்லும் ஒட்பமும் உடையது இராவணன்தேர் என அதன் இயல்பினைப் புலப்படுத்தியவாறு. (18)

இச்செய்யுளின்பின் 45, 52-என்னும் குறியீடுள்ள அச்சுப் புத்தகங்களிற் பின்வருமாறு ஒரு மிகைப்பாடல் காணப்படுகின்றது :—

9800 (a) அண்ட கோடிக ளெவற்றினுந் தன்னர சுரிமை
கண்டு போய்வரும் காட்சியின் கண்ணுதற் பரமன்
பண்ட வன்செய்யுந் தவத்தினின் பரிந்தினி தளிக்கக்
கொண்ட வானகத் தேரது குதிரையைக் குறிக்கின்.

தேரின் சிறப்பியல்புகள்

9801. ஆயி ரம்பரி யமுதொடு
வந்தவு மருக்கன்
பாய்வ யப்பசுங் குதிரையின்
வழியவும் படர்நீர்
வாய்ம டுக்குமா வடவையின்
வயிற்றின்வன் காற்றின்
நாய கற்குவந் துதித்தவும்
பூண்டது நலத்தால்.

ஆயிரம் பரி அமுதொடு
வந்தவும், அருக்கன்
பாய் வயப் பசுங் குதிரையின்
வழியவும், படர்நீர்
வாய் மடுக்கும் மா வடவையின்
வயிற்றின், வன்காற்றின்
நாயகற்கு வந்து உதித்தவும்,
பூண்டது நலத்தால்.

பொ :—(பாற்கடலில்) அமிழ்துடன் ஒருங்கு தோன்றினவும், சூரியனுடைய பாயுந்தன்மையினதாகிய வலிய பச்சைக் குதிரையின் மரபில் தோன்றினவும், பரந்த கடல் நீரை வாய் மடுத்து உட்கொள்ளும் குதிரையாகிய வடவைத்தீயின் வயிற்றிலே வலிய காற்ருகிய தலைவனுக்கு (மகவாக) ப்பிறந்தனவும் ஆகிய ஆயிரங்குதிரைகளை அழகுறப்பூண்டது (இராவணனுக்குரிய அந்தத் தேர்);

கு :—இச் செய்யுள் இராவணனது தேரிற் பூட்டப் பெற்றுள்ள ஆயிரங்குதிரைகளின் ஆற்றல்வன்மையினைப் புலப்படுத்தும்நிலையில் அவற்றின் வகையினை விரித்துரைப்பதாகும். அமுதொடு வந்த என்றது, பாற்கடலில் அமுதம் தோன்றிய காலத்து உடன்தோன்றிய குதிரைகளை. மா-குதிரை. வடவை யென்பது, கடல்நீரானது மேன்மேல் ஊற்றெடுத்துப் பெருகாதவாறு அதன் நீரையுட்கொள்ளும் நிலையில் கடலினுள்ளே குதிரை முகத்துடன் உள்ள தீ என்னும் புராணவழக்கினை அடியொற்றிக் குதிரைமுகமுடைய அத் தீயின் வயிற்றில் வாயு தேவனாகிய நாயகனுக்கு மகவாகப்பிறந்த குதிரைகள் எனப் புனைந்துரைத்தார். தீயின் வெம்மையும் காற்றின் விரைவும் ஒருங்குடைய குதிரைகள் என்றவாறு. காற்றின் நாயகன்—வாயுதேவன். வந்த, வழிய, உதித்த என்பன அகரவீற்று அஃறிணைப் பன்மைப் பெயர். நலத்தால் பூண்டது என இயையும். (19)

9802. பாரிற் செல்வது விசும்பிடைப்
படர்வது பரந்த
நீரிற் செல்வது நெருப்பினுஞ்
செல்வது நிமிர்ந்த

போரிற் செல்வது பொன்னெடு
முகட்டிடை விரிஞ்சன்
ஊரிற் செல்வதெவ் வுலகத்துஞ்
செல்வதோ ரிமைப்பின்.

பாரில் செல்வது, விசும்பிடைப்
படர்வது, பரந்த
நீரில் செல்வது, நெருப்பினும்
செல்வது, நிமிர்ந்த
போரில் செல்வது, பொன் நெடு
முகட்டிடை விரிஞ்சன்
ஊரில் செல்வது, எவ் உலகத்தும்
செல்வது, ஓர் இமைப்பின்.

பொ :—(அந்தத் தேர்) நிலத்திற்செல்வதுபோன்றே வானத்திலும் செல்வது ; பரந்த நீரிற்செல்வதுபோன்றே நெருப்பிலும் செல்வது ; மிக்கெழுந்த போர்முகத்தே செல்வது ; நெடிய அண்டமுகட்டிலே பொன்மயமான நான்முகனது ஊரிலும் செல்வது ; ஓர் இமைப் பொழுதிற்குள் எவ்வுலகத்திலும் செல்ல வல்லது.

கு :—இச் செய்யுள் இராவணனது தேரின் தடையற்ற வேகத்தைச் சிறப்பித்துரைக்கின்றது. ஐம்பெரும் பூதங்களில் பார், விசும்பு, நீர், நெருப்பு என்னும் வேற்றுமையின்றி எங்கும் எவ் வுலகத்தும் தடையின்றி விரைந்துசெல்லுந் தன்மையது இராவணனது தேர் என்றவாறு. (20)

9803. எண்டி சைப்பெருங் களிற்றிடை
மணியென விசைக்குங்
கண்டை யாயிர கோடியின்
றெகையது கதிரோன்
மண்டி லங்களை மேருவிற்
குவித்தென வயங்கும்
அண்டம் விற்குநன் காசினங்
குயிற்றிய தடங்க.

எண்திசைப் பெருங் களிற்றிடை
மணிஎன இசைக்கும்
கண்டை ஆயிர கோடியின்
தொகையது; கதிரோன்
மண்டிலங்களை மேருவில்
குவித்தென வயங்கும்
அண்டம் விற்கும் நன் காசுஇனம்
குயிற்றியது, அடங்க.

பொ:—(மேலும் அந்தத் தேர்) எட்டுத்திசைகளிலும் உள்ள பெரிய (திசை) யானைகளின் மணிபோன்று ஆரவாரிக்கும் ஆயிர கோடியென்னும் தொகையினவாகிய மணிகளையுடையது; சூரிய மண்டலங்கள் பலவற்றை மேருமலையில் (ஒருங்கே) குவித்தாற் போன்று ஒளிவிட்டு விளங்குகின்ற அண்டத்தையே விலையாகக் கொள்ளத்தக்க நல்ல மணித் தொகுதிகள் முழுவதும் (பதித்து) இழைக்கப்பெற்றது.

கு:—திசையானைகளின்மேல் இடத்தக்க பெரிய மணிகளைப் போன்று ஒலிக்கும் ஆயிரகோடியென்னும் பெருந் தொகையின வாகிய பெருமணிகள் கட்டப்பெற்றும், பொன்மலையிலே சூரிய மண்டலங்கள் பல ஒருங்கு கூடினாற்போன்று பொன்னிடத்தே நன்மணிகள் முழுதும் பதிக்கப்பெற்றும் எழிலுடன் திகழ்வது இராவணன் தேர் என்பதாம். கண்டை — (ஒலிக்கும்) மணி. காசு — (ஒளிரும்) மணி. குயிற்றுதல் — பதித்து இழைத்தல். அடங்கக் குயிற்றியது என்க. அடங்க—முழுதும். (21)

9804. முனைவர் வானவர் முதலின
ரண்டத்து முதல்வர்
எனைவ ரன்னவ ரீந்தவு
மிகலிலிட் டனவும்
வினையின் வெய்யன படைக்கலம்
வேலையென் றிசைக்கும்
சுனையி னுண்மணற் றொகையன
சுமந்தது தொக்க.

முனைவர் வானவர் முதலினர்,
அண்டத்து முதல்வர்
எனைவர் அன்னவர் ஈந்தவும்,
இகலில் இட்டனவும்,
வினையின் வெய்யன படைக்கலம்,
வேலை என்று இசைக்கும்
சுனையின் நுண்மணல் தொகையன
சுமந்தது, தொக்க.

பொ:—(அத் தேர்) முனிவரும் தேவரும் அண்டத்தின் தலைவரும் முதலாகவுள்ளார் எத்தனைபேரோ அத்தனைபேரும் (தாமே முன்வந்து) தந்தனவும், போரில் (தோல்வியுற்று அஞ்சித் திறையாக) இட்டனவும், (பகைவரை வருத்துந் தொழிலில்) ஊழ்வினையைவிடக் கடுமைவாய்ந்தனவும் ஆகிய ஆயுதங்கள் கடலென்று கூறப்படும் நீர்நிலையிலுள்ள நுண்ணிய மணலின் தொகையினவாகி (மிக்கு) த்திரண்டனவற்றை (த்தன் கண்) சுமந்துள்ளதாகும்.

கு:—முனைவர்—முனிவர். ஈந்தன—தாமே முன்வந்து தந்தன. இகலில் இட்டன — போரில் எதிர்த்துநிற்கலாற்றாது பணிந்து திறையாக இட்டன. ஈந்தவும் இகலில் இட்டனவும் (ஆகிய) படைக்கலம் எனவும், வினையின் வெய்யன படைக்கலம் எனவும் தனித்தனி இயையும். வினை என்றது, வினை செய்த உயிர்களைத் தொடர்ந்துசென்று அவ்வினைப் பயன்களை நுகர்விப்பதில் தவறாத பெருவலிபடைத்த ஊழ்வினையை. படைக்கலம் நுண்மணற் றொகையன தொக்க சுமந்தது (அத் தேர்) என இயைத்துரைக்க. தொக்க—தொக்கன. தொகுதல்—பலவும் ஒருங்கே திரளுதல். பகைவரையழித்தலில் வல்ல எண்ணில்லாத படைக்கலங்களைத் தன்கண் கொண்டு விளங்குவது இராவணனது தேர் என்பதாம். (22)

9805. கண்ண னேமியுங் கண்ணுதல்
கணிச்சியுங் கமலத்
தண்ணல் குண்டிகைக் கலசமு
மழியினு மழியாத்

திண்மை சான்றது தேவரு
முணர்வருஞ் செய்கை
உண்மை யாமெனப் பெரியது
வென்றியி னுறையுள்.

கண்ணன் நேமியும், கண்ணுதல்
கணிச்சியும், கமலத்து
அண்ணல் குண்டிகைக் கலசமும்,
அழியினும், அழியாத்
திண்மை சான்றது; தேவரும்
உணர்வு அரும் செய்கை
உண்மை ஆம் எனப் பெரியது;
வென்றியின் உறையுள்.

பொ:—(மேலும் அந்தத்தேர்) திருமாலின் சக்கரப்படையும் நெற்றியிற் கண்ணுடைய இறைவனது மழுப்படையும் தாமரை மலரில் வீற்றிருக்கும் பெரியோனுகிய பிரமனது குண்டிகை யாகிய கலசமும் அழிந்தாலும் அழியாத திண்மை வாய்ந்தது; தேவர்களும் உணர்தற்கரிய தொழில்நுட்பத்துடன் நிலைத்த மெய்ம்மையினைப் போற் பெரியது; வெற்றிக்கு உறைவிடமாவது.

கு:—கண்ணன் என்றது திருமாலை. நேமி—சக்கரப்படை. கணிச்சி—மழுப்படை. அழியினும் என்புழி உம்மை எதிர்மறை. செய்கை—தொழில் நுட்பம். (23)

இராவணன் தன் தேரை முறைப்படி அருச்சித்துப் போர்ச் செலவுகுறித்து மறையவர்களுக்குப் பெரும்பொருளைத் தானமாக வழங்குதல்

9806. அனைய தேரினை யருச்சனை
வரன்முறை யாற்றி
எனைய ரென்பதோர் கணக்கிலா
மறையவ ரெவர்க்கும்
வினையி னன்னிதி முதலிய
வளப்பரும் வெறுக்கை

நினையி னீண்டதோர் பெருங்கொடை
யருங்கட னேர்ந்தான்.

அனைய தேரினை அருச்சனை
வரன்முறை ஆற்றி,
எனையர் என்பது ஓர் கணக்கு இலா
மறையவர் எவர்க்கும்
வினையின் நல்நிதி முதலிய
அளப்ப அரும் வெறுக்கை
நினையின் நீண்டது ஓர் பெருங்கொடை
அருங் கடன் நேர்ந்தான்.

பொ :—(மேற்குறித்த) அத்தன்மையவாய சிறப்பமைந்த தேரினை நூன்முறையாகிய விதிப்படி அருச்சித்து வழிபட்டு இத்துணையர் என (அளவிட்டு)ச் சொல்லவொண்ணாத எண்ணில்லாத வேதியர் எவர்க்கும் செய்தற்குரிய சடங்கின்படி நல்ல நிதி முதலிய அளத்தற்கரிய பெரும்பொருளை நினைத்தற்கு எட்டாத நிலையில் மிக்கதொரு பெரிய தானமாக (ப் பிறரால் செய்தற்கு) அரிய கடமையை உளமுவந்து செய்தான் (இராவணன்).

கு :—இராவணன் தனது தேர்மேல் ஏறுதற்குமுன் அத் தேருக்கு முறைப்படி பூசனைசெய்து அளவற்ற வேதியர்களுக்குப் பெரும்பொருளைத் தானமாக வழங்கினான் என்றவாறு. வரன்முறை அருச்சனை ஆற்றி என மாற்றுக. ஈண்டு வினை என்றது நூன்முறைப்படி செய்தற்குரிய சடங்கினை. ஆற்றுதல்—செய்தல். நேர்தல்—உள்ளம் பொருந்தச்செய்தல். (24)

இராவணன் தேரில் ஏறுதல்

9807. ஏறி னான்றெழு திந்திரன்
முதலிய விமையோர்
தேறி னார்களுந் தியங்கினர்
மயங்கினர் திகைத்தார்
வேறு நாஞ்சொலும் வினையிலை
மெய்யினும் புலனும்

ஆறி ஞர்களு மஞ்சினர்
உலகெலா மனுங்க.

ஏறினன் தொழுது; இந்திரன்
முதலிய இமையோர்
தேறினர்களும் தியங்கினர்,
மயங்கினர், திகைத்தார்;
வேறு நாம் சொலும் வினை இலை,
மெய்யின் ஐம்புலனும்
ஆறினர்களும் அஞ்சினர்,
உலகு எலாம் அனுங்க.

பொ:—(தேரினை) வணங்கி (அதன்மீது) ஏறினன் (இராவணன்); மனந்தெளிவுற்றவராகிய இந்திரன் முதலிய தேவர்களும் அறிவுசோர்ந்து உணர்விழந்தவராகி மனந்திகைப்புற்றனர்; (அத்திகைப்பின்) வேருக (அத்தேவர்கள்பால் நிகழ்ந்ததாக) நாம் எடுத்துரைத்தற்குரிய செயல் (எதுவும்) இல்லை. உடம்பின் கண்ணே ஐம்புலன்களும் அடங்கிய நிலையினராகிய முனிவர்களும் உலகெலாம் வருந்த (இனி என்ன துன்பம் விளையுமோ? என) அஞ்சினர்கள்.

கு:—தொழுது ஏறினன் என மாற்றுக. தேறினர்கள்—அரக்கர் குலத்தை வேரறுத்தற்பொருட்டுத் திருமாலே இராமனாக அவதரித்துள்ளான் என்று முன்பு தெளியவுணர்ந்தவர்கள். தியங்குதல்—சோர்தல். மயங்குதல்—உணர்விழத்தல். ஈண்டு வினை என்றது உயிரோடுகூடிய உடம்பின்கண் நிகழும் இயக்கத்தினை. ஐம்புலன்களும் ஆறினர்களும் உலகெலாம் அனுங்க அஞ்சினர் என இயையும். ஆறுதல்—புறத்தே செல்லாது அடங்குதல். 'ஆறினர்களும் அஞ்சினர்' என வரும் இத்தொடரில், ஆறு அஞ்சு என்னும் எண்ணணியும் முரணணியும் பொருந்த அமைந்திருத்தல் அறியத்தகுவதாகும். (25)

### இராவணன் கூறிய வஞ்சினம்

9808. மன்ற லங்குழற் சனகிதன்
மலர்க்கையால் வயிறு

கொன்ற லந்தலேக் கொடுநெடுந்
துயரிடைக் குளித்தல்
அன்றி தென்றிடின் மயன்மக
ளத்தொழி லுறுதல்
இன்றி ரண்டினென் ருக்குவென்
றலேப்படி னென்ருன்.

'மன்றல் அம்குழல் சனகி தன்
மலர்க்கையால் வயிறு
கொன்று, அலந்தலேக் கொடு நெடுந்
துயரிடைக் குளித்தல்;
அன்று இது என்றிடின், மயன்மகள்
அத்தொழில் உறுதல்;
இன்று, இரண்டின் ஒன்று ஆக்குவென்,
தலேப்படின்' என்ருன்.

பொ :— ('யான் பகைவரைப் போரில்) எதிர்ப்படின், நறுமணம் பொருந்திய அழகிய கூந்தலேயுடைய சானகி தன் மலர் போலும் கையினுல் வயிற்றைமோதி வருத்திக் கலக்கத்தை மேற்கொண்டு நெடிய துயரக்கடலிலே மூழ்குதல், அது நிகழாதாயின் மயன் மகளாகிய வண்டோதரி அத்தொழிலேயடைதல் ஆகிய இவ்விரண்டில் ஒன்றை இன்று செய்வேன்' என்று கூறிஞன் (இராவணன்).

கு :— சனகி—சனகன் மகள்; சீதை. கொல்லுதல் என்றது மோதி வருத்துதலே. அலந்தலே—கலக்கம். மயன்மகள்—வண்டோதரி. அத்தொழில் என்றது, தன் கணவன் இறந்துபடத் தன் வயிற்றைக் கையினுல் மோதி வருத்திக் கலக்கத்துடன் நெடுந்துயரத்தில் அழுந்துதலே. 'என் பகைவஞகிய இராமனேக் கொன்ருெழிப்பேன் அல்லது அவனுல் யான் கொல்லப்பட்டு இறப்பேன். இவ்விரண்டில் ஒன்று இன்று நிகழ்தல் உறுதி' என இராவணன் வஞ்சினம் கூறிஞன் என்றவாறு. (26)

போருக்கு எழுந்த இராவணனது தோற்றப் பொலிவு

9809. பலக ளந்தலை மௌலியோ
டிலங்கலிற் பஃறோள்
அலக ளந்தறி யாநெடும்
படைகளோ டலங்க
விலக ளந்தரு கடற்றிரை
விசும்பொடு ம்விம்ம
உலக ளந்தவன் வளர்ந்தன
னாமென வுயர்ந்தான்.

பல களம் தலை மௌலியோடு
இலங்கலின் பல் தோள்
அலகு அளந்து அறியா நெடும்
படைகளோடு அலங்க,
விலகு அளம் தரு கடல் திரை
விசும்பொடும் விம்ம,
உலகு அளந்தவன் வளர்ந்தனன்
ஆம் என உயர்ந்தான்.

பொ :— பலவாகிய கழுத்துக்களின்மேல் பல தலைகள் முடியொடு விளங்குதலால், பல கைகள் அளவிட்டு அளந்தறியவொண்ணாத நீண்ட படைக்கலங்களோடு ஒளி செய்ய, வேறுபட்டு விளங்கும் உப்பளத்தைத்தருகின்ற கடலின் அலைகள் விண்ணளவும் பொங்கி மேற்பட உலகினையளந்தவனாகிய திருமால் நெடியோனாக வளர்ந்து நின்றான் என்னும்படி (இராவணன்) உயர்ந்து நின்றான்.

கு :— இராவணனுடைய தலைகள் பத்தாதற்கேற்ப அவற்றைத் தாங்கிய கழுத்துக்களும் பத்தாதலின் 'பலகளம்' என்றார். களம்—கழுத்து. இலங்கலின் அலங்க என இயையும். இலங்குதல் — விளங்குதல். அலங்குதல் — ஒளிசெய்தல். பல்தோள் என்றது இருபது கைகளை. அலகு—அளவு. விலகுதல்—வேறுபட்டுத்தோன்றல். அளம்—உப்பளம். நீலமாமணி நிறத்தரக்கனாகிய இராவணனது நெடிய தோற்றம் உலகளந்தவனாகிய திருமாலின் தோற்றத்தை ஒத்துத்தோன்றியது என்பதாம். (27)

இதன்பின் 52-என்னும் குறியீடுள்ள அச்சுப்பிரதியில் பின்வருமாறு ஒருமிகைப்பாடல் உள்ளது :—

9809 (a) ஐம்முகம் பயின்று இரட்டி,
அங்கு அடல்புயன் நால்—ஐந்தும்,
ஐந்நான்கு எனும் கரத்தொடும்,
உமையவள் ஒழிய
இம்மை இவ்வுரு இயைந்து,
எழில் கயிலையோடு ஈசன்
வெம்மை ஆடு அமர்க்கு எழுந்தென,
தேர்மிசை விரைந்தான்.

இராவணன் தன் தோள்களைத்தட்டி ஆரவாரித்தல்

9810. விசும்பு விண்டிரு கூறுறக்
குலவரை வெடிப்பப்
பசும்புண் விண்டெனப் புவிபடப்
பகலவன் பசும்பொற்
றசும்பு நின்றிடைந் திரிந்திட
மதிதகை யமிழ்தின்
அசும்பு சிந்திநொந் துலைவுறத்
தோள்புடைத் தார்த்தான்.

விசும்பு விண்டு இரு கூறுற,
குலவரை வெடிப்ப,
பசும் புண் விண்டெனப் புவிபட,
பகலவன் பசும் பொன்
தசும்பு நின்று இடைந்து இரிந்திட,
மதிதகை அமிழ்தின்
அசும்பு சிந்தி நொந்து உலைவுற,
தோள் புடைத்து ஆர்த்தான்.

பொ :— வானம் பிளந்து இருகூறுபடவும், குலமலை வெடிப்புற்றுப் பிளவுபடவும், பசிய புண்ணினால் (உடல்) விண்டது போன்று பூமிவிண்டு பிளப்புறவும், பகல் செய்வானாகிய சூரியன்

பரிய பொற்குடத்தைப்போன்று நின்று (தன்கதி தவறி) நடுவே திரியவும், சந்திரன் அழகிய அமுதமாகிய திவலையைச் சிந்தி நொந்து வருந்தவும் தோள்களைப் புடைத்துக்கொண்டு ஆரவாரித்தான் (இராவணன்).

கு :— தசும்பு — குடம். அசும்பு — நீர்த்திவலை. தோள் புடைத்தல்—போர்கருதித் தோள்களைத் தட்டிக்கொண்டு எழுதல். இராவணன் தோள் புடைத்தமையால் ஏற்பட்ட அதிர்ச்சியால் வானம் இருகூறுதல், மலை பிளத்தல், நிலம் பிளவுபடல், ஞாயிறு கதிதவறித் திரிதல், மதி நொந்துலைதல் முதலியன நிகழ்ந்தன என்றவாறு. (28)

### இராவணன் தன் வில் நாணைத்தெறித்தல்

9811. நணித்து வெஞ்சம மென்பதோ
ருவகையி னலத்தால்
திணித்த டங்கிரி வெடித்துகச்
சிலையைநாண் டெறித்தான்
மணிக்கொ டுங்குழை வானவர்
தானவர் மகளிர்
துனுக்க மெய்தினர் மங்கல
நாண்களைத் தொட்டார்.

'நணித்து வெஞ் சமம்' என்பது ஓர்
உவகையின் நலத்தால்
திணித் தடங்கிரி வெடித்து உக,
சிலையை நாண் தெறித்தான்;
மணிக் கொடுங்குழை வானவர்
தானவர் மகளிர்,
துனுக்கம் எய்தினர், மங்கல
நாண்களைத் தொட்டார்.

பொ :— கொடியபோர் அண்மையில் வந்துவிட்டது என்பதனால் உண்டாகிய ஒப்பற்ற உவகையின் மிகுதியினால், திணிந்த பெரிய மலையும் வெடித்து (ப் பொடியாய்) உதிர (இராவணன் தனது) வில்லின் நாணைத் தெறித்து ஒலியெழுப்பினன். (அவ்

வொலிகேட்டு) மணிகள் பதிக்கப்பெற்ற வளைந்த குண்டலங்களை யணிந்த தேவமகளிரும் அசுரமகளிரும் (மனத்தில்) அச்சங் கொண்டவர்களாய் (த் தமது) மங்கல நாண்களைத் தொட்டுப் பார்த்தனர்.

கு :—வெஞ்சமம் – கொடும்போர். நணித்து - அண்மையில் உளது ; சமீபித்து விட்டது. நலம் என்றது ஈண்டு மிகுதி என்னும் பொருளில் ஆளப்பெற்றது. சிலையை என்புழி உள்ள ஐயுருபினை நாண் என்பதனோடு கூட்டிச் சிலைநாணைத் தெறித்தான் என இயைத்துரைக்க. இராவணனது வில் நாணின் ஒலியைக் கேட்ட தேவமாதரும் அசுரமாதரும் தம் கணவர்க்கு என்ன நேர்ந்ததோ என்ற அச்சத்தால் மனந்துணுக்குற்றுத் தம்மங்கல நாண்களைத்தொட்டுப் பார்த்தனர் என்பதாம். கணவனை யிழந்த மகளிர் மங்கல நாணை இழப்பர் என்னும் தமிழ்மரபினைக் கம்பர் இப்பாடலில் தெளிவாகக் குறித்துள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும். (29)

உயிர்கள் யாவும் நடுங்க இராவணன்
போர்க்களத்திலே தோன்றுதல்

9812. சுரிக்கு மண்டலந் தூங்குநீர்ச்
சுரிப்புற வீங்க
விரைக்கும் பல்லுயிர் யாவையு
நடுக்கமுற் றிரியப்
பரித்தி லன்புவி படர்சுடர்
மணித்தலை பலவும்
விரித்தெ ழுந்தன னனந்தன்மீ
தெனப்பொலி மெய்யான்.

சுரிக்கும் மண்டலம் தூங்கு நீர்ச்
சுரிப்பு உற வீங்க,
இரைக்கும் பல் உயிர் யாவையும்
நடுக்கம் உற்று இரிய,
'பரித்திலன் புவி, படர் சுடர்
மணித்தலை பலவும்
விரித்து எழுந்தனன், அனந்தன் மீது'
எனப் பொலி மெய்யான்.

பொ :—வளைவாய்(ச் சுற்றிக்)கிடக்கும் (சூரிய சந்திர) மண்டலங்கள் மிக்க நீரையுடைய கடலிடத்தே சுழலுமாறு (கடலின் நீர்) பொங்கி மீதெழவும், உயிர்ப்புடையனவாய் இயங்கும் பல திறப்பட்ட உயிர்கள்யாவும் (உள்ளம்) நடுக்கமடைந்து நிலை குலைந்து ஓடவும், ஆதிசேடன் (தான்தாங்குகின்ற) பூமியைத் தாங்குதலை மேற்கொள்ளாதவனாய், ஒளிவீசும் மணிகளைக் கொண்ட (தன்) பலதலைகளையும் மேலே விரித்து எழுந்தானோ? என்னும்படி தோன்றும் ஒப்பற்ற தோற்றத்தையுடையனாயினான் (இராவணன்).

கு :—சுரித்தல்—வளைந்துகிடத்தல்; சுழலுதல். தூங்குநீர்—மிக்கநீர்; என்றது கடல்நீரை. வீங்குதல்—பொங்குதல். இரைத்தல்-உயிர்த்தல். அனந்தன்—ஆதிசேடன். அனந்தன், தூங்கு நீர்ச் சுரிப்புறவீங்க, உயிர் யாவையும் நடுக்கம்உற்று இரியப், புவிபரித்திலன், பல்தலைவிரித்து எழுந்தனன் என்பது ஓர் மெய் யான் ஆயினன் (இராவணன்) என ஆக்கச்சொல் வருவித்துரைக்க. மெய் என்றது, ஈண்டுத்தோற்றப்பொலிவினை. சுரிப்புறவீங்க, இரிய எனவரும் செயவென் எச்சங்கள் காரியப்பொருளவாய் நின்று புவிபரித்திலன் எழுந்தனன் என்னும் காரண வினை கொண்டுமுடிந்தன. பலதலைகளையுடையனான இராவணனது உயர்ந்த தோற்றத்திற்குப் பலதலைகளைவிரித்து மீதெழுந்த ஆதிசேடனது தோற்றம் உவமையாயிற்று. (30)

9813. தோன்றி னன்வந்து சுரர்களோ
டசுரரே தொடங்கி
மூன்று நாட்டினு முள்ளவர்
யாவரு முடிய
ஊன்றி னன்செரு வென்றுயி
ருமிழ்தர வுதிரம்
கான்று நாட்டங்கள் வடவனற்
கிருமடி கனல.

தோன்றினன் வந்து— சுரர்களோடு
அசுரரே தொடங்கி
மூன்று நாட்டினும் உள்ளவர்
யாவரும் முடிய,

'ஊன்றினன் செரு' என்று உயிர்
உமிழ்தர, உதிரம்
கான்று, நாட்டங்கள் வட அனற்கு
இருமடி கனல.

பொ :—தேவர்களுடனே அசுரர்கள் முதற்கொண்டு மூன்றுல கங்களில் உள்ளார்யாவரும் இறந்துபட (இராவணன்) போரில் நிலைத்து ஊன்றினன் என்று குருதியினைக் கக்கி உயிர் சிந்த (த் தன்) கண்கள் வடவைத்தீயினும் இருமடங்கு கனன்று அழல்வீச வந்துதோன்றினன் (இராவணன்).

கு :—'சுரர்களோடு அசுரரே தொடங்கி.........யாவரும் முடிய, செருஊன்றினன்' என்று உதிரம் கான்று உயிர் உமிழ் தர, நாட்டங்கள் வட அனற்கு இருமடிகனல, வந்து தோன்றி னன் எனமுடிக்க. செரு ஊன்றுதல்—தன்மேல் வந்தபகை யினைத் தடுத்துப் பொருதல்; 'எதிரூன்றல் காஞ்சி' என்னும் புறத்திணையிலக்கணம் இங்கு நினைத்தற்குரியதாகும். கான்று—கக்கி. நாட்டம்—கண். இருமடி—இரண்டு மடங்கு. (31)

*அப்பொழுது உலகில் தோன்றிய கலக்கத்தைக்கண்டு சுக்கிரீவன் முதலியோர் துணுக்குற்றெழுதல்*

9814. உலகிற் றோன்றிய மறுக்கமு
மிமைப்பில ருலைவும்
மலையும் வானமும் வையமு
மறுகுறு மறுக்கும்
அலைகொள் வேலைக ளஞ்சின
சலிக்கின்ற வயர்வும்
தலைவ னேமுதற் றண்டலி
லோரெலாங் கண்டார்.

உலகில் தோன்றிய மறுக்கமும்,
இமைப்பிலர் உலைவும்,
மலையும் வானமும் வையமும்
மறுகுறும் மறுக்கும்,

அலைகொள் வேலைகள் அஞ்சின
சலிக்கின்ற அயர்வும்,
தலைவனே முதல் தண்டல்
இலோரெலாம் கண்டார்.

பொ :—உலகின்கண்ணே யுண்டாகிய கலக்கநிலையும், கண் இமைத்தல் இல்லாதவராகிய அமரர்கள் நடுக்கமும், மலையும், வானமும் நிலமும் ஆகிய இவை சுழல்கின்ற சுழற்சியும், அலைகளைத் தன்னிடத்தே கொண்ட கடல்கள் அஞ்சினவாகிச் சலிப்புறுகின்ற தளர்ச்சியும் ஆகியவற்றை (க் குரக்கின)த் தலைவனாகிய சுக்கிரீவன் முதலிய தடுத்தற்கரிய வன்மை வாய்ந்த வீரர்யாவரும் கண்டார்கள்.

கு :—மறுக்கம்—கலக்கம். இமைப்பிலர்—கண் இமைத்தல் இல்லாதார்; என்றது இமையாக்கண்ணினராகிய தேவர்களை. உலைவு—நடுக்கம். தலைவன் என்றது, குரங்கினத்தலைவனாகிய சுக்கிரீவனை. தண்டல்இலோர்—தடுத்தற்கரிய வலிபடைத்த வீரர்கள். (32)

9815. பீறிற் றுமண்ட மென்பதோ
ராகுலம் பிறக்க
வேறிட் டோர்பெருங் கம்பலை
பம்பிமேல் வீங்க
மாறிப் பல்பொருள் வகுக்குறுங்
காலத்து மறுக்கம்
ஏறிற் றுற்றுள தென்னைகொ
லோவென வெழுந்தார்.

'பீறிற்றும் அண்டம்' என்பது ஓர்
ஆகுலம் பிறக்க,
வேறிட்ட ஓர் பெருங் கம்பலை
பம்பி மேல் வீங்க,
'மாறிப் பல் பொருள் வகுக்குறும்
காலத்து மறுக்கம்
ஏறிற்று; உற்றுளது என்னை கொலோ?'
என எழுந்தார்.

பொ :—அண்டம் பீறியதோ? என்று எண்ணி வாட்டமுறுவதோர் மனக்கலக்கம் தோன்றவும், வேறுபட்டதொரு பேரொலி செறிந்து மேலோங்கவும், (உலகத்துப்) பல பொருள்களும் நிலை மாறி (மீளவும் பண்டுபோல்) வகுத்தற்குரிய (ஊழிக்) காலத்திலே யுண்டாகும் கலக்கம் (இப்போது) உண்டாயிற்று. (இதற்குக் காரணமாக) நிகழ்ந்துள்ளது யாதோ? என்று (சுக்கிரீவன் முதலியோர் மனந்துணுக்குற்று) எழுந்தார்கள்.

கு :—பீறுதல்—கிழிதல், பிளத்தல். ஆகுலம்—மனத்துயர். வேறிட்ட ஓர் பெருங்கம்பலை என்புழி இட்ட என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கது. கம்பலை—ஒலி. பல்பொருள் மாறி வகுக்குறும் காலம் என்றது ஊழிமுடிவினை. ஏறுதல்—உண்டாதல். (33)

*இராவணன் தேர்மீதேறிச் சேனையொடு வருகின்றான் என்பதைச் சுக்கிரீவன் முதலியோர் அறிதல்*

9816. கடல்கள் யாவையுங் கனமலைக்
குலங்களுங் காரும்
திடல்கொள் மேருவும் விசும்பிடைச்
செல்வன சிவண
அடல்கொள் சேனையு மரக்கனுந்
தேரும்வந் தார்க்கும்
கடல்கொள் பேரொலிக் கம்பலை
யென்பதுங் கண்டார்.

கடல்கள் யாவையும், கன மலைக்
குலங்களும், காரும்,
திடல்கொள் மேருவும், விசும்பிடைச்
செல்வன சிவண,
அடல்கொள் சேனையும், அரக்கனும்,
தேரும், வந்து ஆர்க்கும்
கடல் கொள் பேர் ஒலிக் கம்பலை
என்பதுங் கண்டார்.

பொ:—(அங்ஙனம் துணுக்குற்று எழுந்தவர்கள்) கடல்கள் எல்லாமும் திண்மை வாய்ந்த மலைக் கூட்டங்களும் (அவற்றினும் மேலாக) மேடாந்தன்மையைக்கொண்டமேருமலையும் (ஒருங்கு கூடி) வான்வழியாகச் செல்வனவற்றை ஒப்ப, கொல்லும் வன்மையைக்கொண்ட (அரக்கர்) சேனையும் (இராவணனாகிய) அரக்கனும் (அவனது) தேரும் வந்து ஆரவாரிக்கும் கடலிடத்தே பொருந்திய பேரொலியை யொத்த பெரிய ஆரவாரமே (இதற்குக்) காரணம் என்பதனையும் கண்டறிந்தார்கள்.

கு:—கடல்கள், மலைக்குலங்கள் என்பவை அரக்கருடைய சேனைகட்கும், கார் இராவணனுக்கும், மேருமலை அவன் ஏறி வரும் தேர்க்கும் உவமை. (34)

*இராவணன் வருகையை வீடணன் இராமனுக்குக் கூறுதல்*

9817. எழுந்து வந்தன னிராவண
னிராக்கதத் தானைக்
கொழுந்து முந்தவந் துற்றது
கொற்றவ குலுங்குற்
றழுந்து கின்றது நம்பல
மமரரு மஞ்சி
விழுந்து சிந்தின ரென்றனன்
வீடணன் விரைவான்.

'எழுந்து வந்தனன் இராவணன்;
இராக்கதத் தானைக்
கொழுந்து முந்த வந்து உற்றது;
கொற்றவ! குலுங்குற்று
அழுந்துகின்றது, நம் பலம்!
அமரரும் அஞ்சி,
விழுந்து சிந்தினர்' என்றனன்,
வீடணன், விரைவான்.

பொ:—(அதுகண்ட) வீடணன் விரைவுடையவனாய் (இராமனை அணுகி) 'வெற்றி வேந்தே! இராவணன் (தன் சேனைகளோடு போருக்குப்) புறப்பட்டு வந்துள்ளான்; அரக்கர் சேனை

யின் முன்னணி முற்பட்டு இங்குவந்து பொருந்தியது; (அது கண்டு) நம்முடைய சேனை நடுக்கமுற்று (த் துன்பத்துள்) அழுந்துகின்றது; தேவர்களும் அஞ்சித் தளர்ந்து விழுந்து சிதறியோடி விட்டார்கள்' என்று முறையிட்டான்.

கு:—வீடணன் விரைவான், 'கொற்றவ! இராவணன் எழுந்து வந்தனன்; இராக்கதத் தானைக் கொழுந்து முந்தியது உற்றது; நம் பலம் குலுங்குற்று அழுந்துகின்றது; அமரரும் அஞ்சி விழுந்து சிந்தினர்' என்றனன் என இயையும். தானைக் கொழுந்து—சேனையின் முன்னணி. குலுங்குதல்—நடுங்குதல். நம் பலம்—நமது சேனை. சிந்தினர்—சிதறி ஓடினர். (35)

இதன்பின் 23, 45 என்னும் எண்ணுள்ள பிரதிகளில் பின்வருமாறு ஒரு மிகைப் பாடல் குறிக்கப் பெற்றுளது:—

9817 (a) சென்றி ராமனைத் திருவடி
வணங்கியெஞ் செல்வ
இன்றி ராவணன் சேனையோ
டியாவருஞ் சூழ
வென்றி யாந்தடந் தேர்மிசை
மேவினன் களத்தில்
என்று கூறலு மினிதுகேட்
டெழுந்தன னிப்பால்.

இராவணன் தேரேறு படலம் முற்றிற்று.

# 35. இராமன் தேரேறு படலம்

இராமபிரான் இராவணனைப் பொருதழித்தற் பொருட்டு இந்திரன் அனுப்பிய தேரின்மீது ஏறிய நிகழ்ச்சியைக் கூறும் படலமாதலின் இஃது இராமன் தேரேறு படலம் என்னும் பெயர்த்தாயிற்று. இது 26, 54, 66 என்னும் எண்பெற்ற சுவடிகளில் இராகவன் தேரேற்றுப் படலம் எனவும், 23, 41, 43, 48, 74 என்னும் எண் பெற்ற சுவடிகளில் இராகவன் தேரேறு படலம் எனவும், 9, 18, 19, 21, 71 ஆகிய சுவடிகளில் இராமன் திருத்தேரேறு படலம் எனவும் குறிப்பிடப்பெற்றுளது.

இராவணன் தேரேறிப் போருக்கு வந்தமையால் வானர சேனை கலக்கமுற்ற செய்தியை வீடணன் தெரிவிக்கவும், வானர சேனை வாய்குழறி மெய்ந்நடுங்கித்தொழுது வீழ்ந்து அரற்றிய ஆரவாரம் மிக்கொலிக்கவும் கண்ட இராமபிரான் விரைந்து போர்க்கோலம் கொண்டெழுந்தனன். சிவபெருமான் தேவர்களை நோக்கி, 'இப்பொழுது மூண்டுள்ள போர் இன்றோடு முடிவடையும். ஆகவே நீவிர் அஞ்சாதீர்கள். வெற்றிபொருந்திய குதிரை பூட்டிய மணித்தேரினை இராமன்பால் விரைந்து அனுப்புவீராக' எனப்பணித்தருளினன். அதனைக்கேட்ட தேவர்கள் 'இஃது உடனே செய்தற்குரியது' என்றனர். இந்திரனும் அதற்கு இசைந்து 'தேரை விரைந்து கொணர்க' எனக் கட்டளையிட்டான். இந்திரனுடைய தேர்ப்பாகனாகிய மாதலி தெய்வத்தன்மை வாய்ந்த தேரினை விரைந்து கொணர்ந்தான். தேவர்கள் அத்தேரினை வணங்கி 'எங்களுக்கு வெற்றியைத்தந்தருள்வாயாக' என மலர்தூவிப் போற்றினார்கள். மாதலியாற் செலுத்தப்பெற்ற அத்தேரானது அனைத்துலகமும் தொழ இராமன்பால் வந்தடைந்தது. அதனைக் கண்ணுற்று வியந்த இராமபிரான் மாதலியை நோக்கி, 'யார் சொல்ல நீ இத்தேரினைக் கொண்டுவந்தாய்' என வினவினன். அது கேட்ட மாதலி, தான் கொணர்ந்த தேரின் இயல்பினையும் சிறப்பினையும் எடுத்துக்கூறி, 'முதல்வனே! தேவர்களும் சிவபெருமானும் பிரமதேவனும் முன்னின்று ஏவ இந்திரனால் அனுப்பப்பெற்றது இந்தத்தேர்' என மறுமொழி பகர்ந்தான். அம்மொழியினைச் செவி

மடுத்த இராமபிரான் 'இந்தத் தேர் அரக்கரது மாயையால் வந்ததோ?' எனத் தன் சிந்தையில் ஐயுற்ருன். அப்பொழுது அத்தேரிற் பூட்டப்பெற்றிருந்த குதிரைகள், 'மாதலி கூறிய சொற்கள் மெய்ம்மை மொழிகளே' என வேத மொழிகளால் உறுதி கூறின. சிந்தையில் தெளிவுற்ற இராமபிரான் நல்லவனுகிய தேர்ப்பாகனை நோக்கி 'உனது பெயரைக் கூறுக' என்ருன். ''வலிய இத்தேரினைச் செலுத்தும் மாதலி' என்று என் பெயரைச் சொல்வார்கள்'' என்ருன் மாதலி. அந்நிலையில் இராமபிரான் அனுமனையும் இலக்குவனையும் நோக்கி 'நீவிர் கருதுவதனைச் சொல்லுங்கள்' என்றனன். அவர்கள், இராமபிரானை இறைஞ்சி, 'ஐயனே! இதிற் சந்தேகமில்லை. இந்தத் தேர் இந்திரனுடையதே' எனத் தெளிவாக எடுத்துரைத்தார்கள். உலகில் தீவினைகள் மண்ணோடுமண்ணாய்ச் சிதைந்தழியவும், நல்வினைகள் களிப்புற்று ஓங்கவும், துன்பத்துள் ஆழ்ந்துள்ள தேவர் முனிவர்களின் கைகள் முற்பட்டெழுந்து தலைமீதேறவும் இராமபிரான் அத்தேரின்மீது இனிதாக ஏறினுன் என்பது இப் படலத்தின் பொருட்சுருக்கமாகும்.

இந்நிகழ்ச்சி முதல் நூலாகிய வான்மீகத்தில் யுத்தகாண்டம் 103-வது சர்க்கத்தில் விரித்துரைக்கப்பெற்றது. இலக்குவனுல் தூண்டப்பெற்று இராவணனை வதைப்பதில் ஊக்கங் கொண்ட இராமபிரான், இராவணனுடன் பொருதற்கு முற்பட்டான். அதற்குள் இராவணன் தன் தேர்மேல் ஏறி இராமனை எதிர்த்துவந்து அம்பு மழையைச் சொரிந்தனன். இராமபிரானும் அவ்வாறே இராவணன்மீது அளவில்லாத அம்புகளைச் சொரிந்தார். இவ்விருவரது போர்த் தொழிலைக் கண்ணுற்ற தேவர்கள், கந்தர்வர்கள் அசுரர்கள், 'பூமியில் நின்றுகொண்டிருக்கும் இராமபிரானுக்கும் தேரின்மீது வீற்றிருக்கும் இராவணனுகிய அரக்கனுக்கும் இடையே நிகழும் இப் போர்த்தொழில் பொருத்தமுடையதன்று' என்ருர்கள். அந்நிலையில் தேவேந்திரன் மாதலியை அழைத்துத் தனது தேரினை இராமனிடம் கொண்டுசெல்லும்படி பணித்தான். மாதலி இந்திரனது தேரைச் செலுத்திக்கொண்டு விண்ணிலிருந்து இறங்கி இராமபிரானை அணுகி வணங்கி, 'பகைவரையடக்கும் ஆற்றல்மிக்க இராமபிரானே! தேவரீரது வெற்றிக்காக இந்தத் தேரானது இந்திரனுல் தேவரீருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இந்திரனுடைய பெருமைவாய்ந்த இந்த வில்லும் அக்கினியை நிகர்த்த கவச

மும் சூரியனை நிகர்த்த வெவ்விய பாணங்களும் கூர்மைவாய்ந்த வேலும் நுமக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. தேவரீர் இத் தேரில் ஏறி இராவணனை வெற்றிகொள்வீராக '' என வேண்டி ஞன். அதுகேட்ட இராமபிரான் அத்தேரை வலம் வந்து வணங்கி அத்தேரில் ஏறிஞன் என இந்நிகழ்ச்சி வான்மீகத் தில் விரித்துரைக்கப்பட்டது.

மாதலி கொணர்ந்த தேரினைக்கண்டு 'இஃது அரக்கர் மாயமோ?' என இராமன் ஐயுற்றதாகவும் தேர்க்குதிரைகளின் வேதமொழிகளாகிய உறுதி மொழிகளாலும் இலக்குவனும் அனு மனும் கூறிய உறுதியுரையாலும் இராமன் ஐயந் தெளிந்து தேர் மீது ஏறியதாகவும் கூறும் கம்பர், இராமபிரான் தேரில் ஏறும் போது அதனை வலம் வந்து வணங்கி ஏறிஞன் என முதனூல் கூறியதனைத்தாம் காப்பியத்திற் கூருது ஒதுக்கினமை இங்குக் கூர்ந்துணர்தற்குரியதாகும்.

# 35. இராமன் தேரேறு படலம்

## இராமன் போருக்கு எழுதல்

9818. தொழுங்கையொடு வாய்குழறி
மெய்ம்முறை துளங்கி
விழுந்துகவி சேனையிடு
பூசன்மிக விண்ணோர்
அழுந்துபடு பாலமளி
யஞ்சலென வந்நாள்
எழுந்தபடி யேகடி
தெழுந்தன னிராமன்.

தொழும் கையொடு, வாய் குழறி,
மெய்ம் முறை துளங்கி,
விழுந்து கவி சேனை இடு
பூசல் மிக, விண்ணோர்
அழுந்து படு பால் அமளி
'அஞ்சல்' என அந்நாள்,
எழுந்தபடியே கடிது
எழுந்தனன், இராமன்.

பொ:—(கூப்பித்) தொழும் கையுடனே வாய் உரைதடுமாறி உடம்பு செயன்முறை தளர்ந்து கீழேவிழுந்து வானர சேனைகள் இடுகின்ற கூக்குரலோசை மிக்குத் தோன்றுதலால், இராமன், தேவர்கள் துன்பத்தில் அழுந்திவருந்திய அந்நாளில் 'அஞ்சாதீர்கள்' என்றுசொல்லி அபயமளித்துப் பாற்கடலில் (ஆதிசேடனாகிய) படுக்கையினின்றும் (திருமாலாகிய தான் அறிதுயில் நீத்து) எழுந்ததுபோலவே விரைந்து எழுந்தான்.

கு:—கவிசேனை இடு பூசல் மிக, இராமன், விண்ணோர் அழுந்து படு அந்நாள், 'அஞ்சல்' எனப் பால் அமளி எழுந்தபடியே கடிது எழுந்தனன் என்க. கவிசேனை—வானரசேனை.

வாய் குழறுதல்—உரை தடுமாறுதல். துளங்குதல்—தளர்தல். தேவர்களின் குறையினைச் செவிமடுத்து 'அஞ்சாதீர்கள்' என்று முன்பு பாற்கடலில் பள்ளியைவிட்டு எழுந்ததுபோலவே இப் பொழுது வானரரது கூக்குரலைக்கேட்டு அவர்களுக்கு அபயம் அளிக்கும் நிலையில் திருமாலின் அம்சமாகிய இராமன் விரைந்து எழுந்தான் என்பதாம். (1)

## இராமன் போர்க்கோலங் கொள்ளுதல்

9819. கடக்களி றெனத்தகைய
கண்ணனொரு காலன்
விடக்கயி றெனப்பிறழும்
வாள்வலன் விசித்தான்
மடக்கொடி துயர்க்குநெடு
வானினுறை வோர்தம்
இடர்க்கடலி னுக்குமுடி
வின்றென விசைத்தான்.

கடக் களிறு எனத்தகைய
கண்ணன், ஒரு காலன்
விடக் கயிறு எனப் பிறழும்
வாள் வலன் விசித்தான்,
'மடக்கொடி துயர்க்கும், நெடு
வானின் உறைவோர் தம்
இடர்க் கடலினுக்கும் முடிவு,
இன்று' என இசைத்தான்.

பொ:—மதத்தினையுடைய ஆண் யானையென்று சொல்லத் தக்க தன்மையினையுடைய இராமன், ஒப்பற்ற இயமனுடைய நஞ்சின் தன்மைவாய்ந்த பாசப்படையினை ஒத்துவிளங்குகின்ற வாட்படையினை வலப்பக்கத்தே கட்டியவனாகி, 'இளமைத் தன்மைபொருந்திய கொடிபோல்வாளாகிய சீதையின் துயரத் திற்கும் நீண்ட வானுலகத்தில் வாழ்வோராகிய தேவர்களின் துயரக்கடலுக்கும் இறுதிக் காலம் இன்றைய நாளே' என்று கூறினன்.

கு :—காண்பார் கண்ணுக்கினிய பேரழகும் பேராண்மையும் தன்னினத்தைப் பகைநீக்கிப் பேணும் பண்புடைமையும் பற்றி இராமனைக் களிற்றொடு உவமித்தார். 'இருகைவேழத் திராகவன்' என்பதும் இங்கு நினைத்தற்குரியதாகும். கண்ணன் என்பது இராமன் என்னும் பொருளில் ஆளப்பெற்றது. 'கருணையங் கோயிலுள் இருந்த கண்ணனை' (வீடணன் அடைக்கலப்—48) என முன்னரும் இப்பொருளில்ஆளப்பெற்றமை காண்க. உயிர்களை விடாதுபற்றிக் கவருந்திறத்தில் தப்பாதவாறுபோலப் பகைவர் உயிரைப் பருகுந்திறத்தில் சிறிதும் தப்பாத வன்மைவாய்ந்தது இராமனது வாட்படை என்பார், 'ஒரு காலன் விடக்கயிறெனப் பிறழும் வாள்' என்றார். இராமாவதாரத்தின் முதன்மையான நோக்கமாவது, தக்கோர் இடர் துடைத்தலே யாதலின் அதனைக் கடைபோக நிறைவேற்றும் கருத்தினனாகிய இராமன், 'மடக்கொடி துயர்க்கும் நெடுவானினுறைவோர்தம் இடர்க் கடலினுக்கும் முடிவு இன்று' என இசைத்தான் என்க. முடிவு—இறுதிக்காலம். இன்று இன்றைய நாள். (2)

9820. தன்னகவ சத்துலகு
 தங்கவொரு தன்னிற்
பின்னகவ சத்தபொரு
 ளில்லைபெரி யோனை
மன்னகவ சத்துற
 வரிந்ததெனின் மாதோ
இன்னகவ சத்தையுமொ
 ரீசனென லாமால்.

தன் அக வசத்து உலகு
 தங்க, ஒரு தன்னின்
பின்ன கவசத்த பொருள்
 இல்லை; பெரியோனை
மன் அகவசத்து உற
 வரிந்தது எனின், மாதோ!
இன்ன கவசத்தையும் ஓர்
 ஈசன் எனலாமால்.

பொ :—(இறைவனுகிய) தனது (விரிந்த பரந்த தன்மை யாகிய) உட்பரப்பினுள்ளே உலகம் முழுவதும் தங்கியிருக்க, தன்னின் வேருக(த்தன்னை உட்படுத்தி அடக்கிக் கொள்ளுதற் குரிய) கவசமாந் தன்மையினையுடைய பொருள் இல்லை ; (அங் ஙனமாகவும்) பெரியோனுகிய இராமனை நிலைத்த தனது உள் ளிடத்திற் பொருந்தி அடங்க இறுகப் பிணித்ததென்ருல் இத் தன்மையதாகிய கவசத்தையும் ஒப்பற்ற இறைவன் எனவே கூறுதல் ஏற்புடையதாகும்.

கு :—போர்க்கோலம் கொள்ளும் இராமன், தனது மெய்யிற் கவசமணிந்த திறத்தைப் புனைந்துரைக்கும்முறையில் அமைந் தது இச்செய்யுள்: தன் அக வசத்து—தனது வியாபகமாகிய உட்பரப்பிலே. ஒரு தன்னிற் பின்ன — ஒப்பற்ற தன்னின் வேருக. பின்னம்—வேறுபட்டது. கவசத்த பொருள்—கவச மாம் தன்மையினையுடைய பொருள். பெரியோன் என்றது இறைவனுகிய இராமனை. மன் அக வசத்து உற—நிலைத்த உள்ளிடத்திற் பொருந்தி அடங்க. வரிந்தது—இறுகப்பிணித் தது. மாது ஓ ஆல் என்பன அசை. இராமனே எல்லாம் வல்ல இறைவன். இறைவனுகிய தனது விரிந்து பரவிய தன்மை யாகிய அருளின் எல்லையுள்ளே உலகமுழுதும் அடங்கித்தங்கி யுள்ளது என்ருல், அவ்விறைவனுக்கு வேருக அவனை அகத்து ளடக்கி மறைத்தற்குரிய பொருள் இருத்தற்கில்லை. அவ்வாருக வும் பெரியோனுகிய இராமனை நிலைத்த தனது உள்ளிடத்திற் பொருந்தியடங்க இக்கவசம் இறுகப் பிணித்துள்ளது என்ருல் இத்தகைய கவசத்தையும் ஒப்பற்ற அவ்விறைவனேயெனப் போற்றுதல் ஏற்புடையதாம் என ஆசிரியர் கவசத்தின் பெருமையினை வியந்துரைத்தவாறு. (3)

9821. புட்டிலொடு கோதைகள்
புழுங்கியெரி கூற்றின்
அட்டிலென லாயமல
ரங்கையி னிலங்கக்
கட்டியுல கிற்பொரு
ளெனக்கரையில் வாளி
வட்டில்புறம் வைத்தயல்
வயங்குற வரிந்தான்

புட்டிலொடு கோதைகள்,
புழுங்கி எரி கூற்றின்
அட்டில் எனல் ஆய மலர்
அங்கையின் இலங்கக்
கட்டி, உலகின் பொருள்
எனக் கரை இல் வாளி
வட்டில் புறம் வைத்து அயல்
வயங்குற வரிந்தான்.

பொ :—(உயிரெனும் இரைபெருது) மனம் வெதும்பிக் கொதிக்கின்ற கூற்றுவனது மடைப்பள்ளி என்று சொல்லத்தக்க மலர் போலும் அழகிய கையின் கண்ணே விரலுறையுடன் முன்கைத் தோலுறையும் விளங்கக்கட்டி, உலகிலுள்ள பல்வகைப் பொருள்களைப்போன்று அளவில்லாதனவாகிய அம்புகளைக் கொண்டுள்ள அம்பருத்தூணியிணைப் பக்கத்தே விளங்கும்படி முதுகில்வைத்துக் கட்டிஞன் (இராமன்).

கு :—புழுங்கி எரிகூற்றின் அட்டில் எனல்ஆய மலர் அங்கையின் புட்டிலொடு கோதைகள் இலங்கக் கட்டி, உலகின் பொருள்கள் எனக் கரை இல் வாளி வட்டில் அயல் வயங்குறப் புறம்வைத்து வரிந்தான் என இயைத்துரைக்க. புட்டில்—விரலுறை. கோதை—முன்கையில் அணிதற்குரிய தோலுறை. அட்டில்— உணவு அமைக்கும் இல்லம்; மடைப்பள்ளி. கரை—வரம்பு; அளவு. வட்டில்—அம்பருத்தூணி. புறம்—முதுகு. (4

சிவபெருமான் தேவர்களைநோக்கி இராமனுக்குத்
தேரனுப்புமாறு பணித்தல்

9822. மூண்டசெரு வின்றளவின்
முற்றுமினி வெற்றி
ஆண்டகைய துண்மையினி
யச்சமகல் வுற்றீர்
பூண்டமணி யாழிவய
மாநிமிர் பொலந்தேர்
ஈண்டவிடு வீரமர
ரென்றர னிசைத்தான்.

'மூண்டசெரு இன்று அளவில்
முற்றும்; இனி, வெற்றி
ஆண்தகையது; உண்மை; இனி
அச்சம் அகல்வுற்றீர்,
பூண்ட மணி ஆழி வய
மா நிமிர் பொலந்தேர்
ஈண்ட விடுவீர்- அமரர்!'
என்று அரன் இசைத்தான்.

பொ:— 'அமரர்களே! முற்றியுள்ள போர் இன்றோடு முடிவு பெறும். இனி, வெற்றியானது ஆண்மையிற் சிறந்தோனாகிய இராமனுடையதேயாகும்; (இது) சத்தியம்; இனி அச்சம் ஒழிந்தீராய், சக்கரங்களையுடையதும் வலிய குதிரை பூட்டப்பெற்று நிமிர்ந்து செல்வதும் ஆகிய மணிகள் பூண்ட பொன்மயமான தேரினை (இராமனுக்குரிய வகையில் இங்கு) வந்து பொருந்தச் செலுத்துவீராக' என்று உருத்திரன் (தேவர்களை நோக்கிக்) கூறினான்.

கு:— போர் காணவந்து நின்ற தேவர்களை நோக்கி இராமனுக்குத் தேர் அனுப்புமாறு அரன் பணித்தருளினான் என்க. ஆழி வயமா நிமிர் பொலந்தேர், மணிபூண்ட பொலந்தேர் எனத் தனித்தனி இயையும். ஈண்டுதல் - வந்து பொருந்துதல். அமரர் - தேவர்களே!; அண்மை விளி. (5)

இப்பாடலின் பின், 18, 23, 26, 40, 41, 43-45, 52, 61, 66, 71, 74 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது:—

'இத்தகைய னாகியிகல் செய்தவனை யின்னே
கொத்துமுடி கொய்வனென நின்றெதிர் குறிப்பத்
தத்துமுறு வற்செய றவிர்ந்ததென வானிற்
இத்தர்கள் முனித்தலைவர் சிந்தைமகிழ் வுற்றார்.'

இந்திரன், இராமனுக்கு உதவக்கருதித் தேரைக்
கொணருமாறு மாதலிக்குக் கட்டளையிடுதல்

9823. தேவரது கேட்டிது
செயற்குரிய தென்றார்

ஏவல்புரி யிந்திரனு
மத்தொழி லிசைந்தான்
மூவுலகு மின்றொரு
கணத்தின்முறை முற்றிக்
காவல்புரி தன்பொருவி
றேர்கொணர்தி யென்றான்.

தேவர் அதுகேட்டு, 'இது
செயற்கு உரியது' என்றார்;
ஏவல் புரி இந்திரனும்
அத்தொழில் இசைந்தான்,
'மூவுலகும் இன்று ஒரு
கணத்தின் முறை முற்றிக்
காவல்புரி தன் பொரு
தேர் கொணர்தி' என்றான்.

பொ :— தேவர்கள் (அரன் கூறிய) அம்மொழியினைக் கேட்டு 'இது செய்தற்குரியது' என (இந்திரனுக்கு)க் கூறினர். (மூவரது) ஏவற்பணியைச் செய்தற்குரிய இந்திரனும் அச்செய்கைக்கு உடன்பட்டவனாகி, 'மூவுலகினையும் இன்று ஓரேகணத்தில் முறையாகச் சூழ்ந்து காத்தற்றொழிலைச் செய்யும் தனது ஒப்பற்ற தேரினைக் கொணர்வாயாக' என (மாதலியை நோக்கி) கூறினான்.

கு :— அத்தொழில் - தேரை இராமன்முன் கொணர்ந்து நிறுத்தலாகிய அச்செய்கைக்கு. இசைதல் - உடன்படுதல். முற்றுதல் - சூழ்தல். (6)

மாதலி தேர் கொணர்தல்

9824. மாதலி கொணர்ந்தனன் மகோததி வளாவும்
பூதல மெழுந்துபடர் தன்மைய பொலந்தேர்
சீதமதி மண்டலமு மேனையுள வுந்திண்
பாதமென நின்றது பரந்தது விசும்பின்.

மாதலி கொணர்ந்தனன், மகோததி வளாவும்
பூதலம் எழுந்துபடர் தன்மைய பொலந்தேர்;

சீத மதிமண்டலமும் ஏனை உளவும்திண்
பாதம் எனநின்றது, பரந்தது விசும்பின்.

பொ :— பெரிய கடலாற் சூழப்பட்ட நிலவுலகமே படர்ந்து வருவதுபோலும் தன்மையினையுடைய பொன்மயமான தேரினை மாதலி என்னும் தேர்ப்பாகன் (இராமன்முன்) கொண்டுவந்தான். குளிர்ந்த சந்திர மண்டலமும் மற்றும் உள்ளனவும் (தனது) திண்ணிய அடிப்பரப்பு என்று சொல்லும்படி நின்றதாகிய அத்தேர் வானளவும்படிந்து உயர்ந்தது.

கு :— மகோததி - பெருங்கடல். வளாவுதல் - சூழ்தல். பூதலம் எழுந்து படர்தன்மைய பொலந்தேர் எனவே அத்தேரினது அகலமும், சந்திரமண்டலம் முதலாயின தன் அடிப்பரப்பென நின்றது. எனவே அதன் அடிப்பரப்பின் உயர்ச்சியும், விசும்பிற் படிந்தது எனவே அதன் முகட்டின் உயர்ச்சியும் புலப்படுத்தப் பெற்றமை அறியத் தகுவதாகும். (7)

வந்த தேரின் சிறப்பியல்புகள்

9325. குலக்கிரிகளேழின்வலி கொண்டுயர் கொடிஞ்சும்
அலக்குமுயர் பாரும்வலி யாழியுந லச்சும்
கலக்கற வகுத்தது கதத்தரவ மெட்டின்
வலக்கயிறு கட்டியது முட்டியது வானை.

குலக்கிரிகள் ஏழின் வலிகொண்டு உயர்கொடிஞ்சும்,
அலக்கும், உயர்பாரும், வலி ஆழியும், நல் அச்சும்
கலக்கு அறவகுத்தது; கதத்து அரவம் எட்டின்
வலக்கயிறு கட்டியது; முட்டியது வானை.

பொ :— (அத்தேரானது) குலமலைகள் ஏழின் வன்மையைக் கொண்டு உயர்ந்த கொடிஞ்சும், அலக்கும், உயர்ந்த பாரும், வன்மை வாய்ந்த சகடையும், நல்ல அச்சும் கட்டுக்குலையாத வாறு (உறுதியாக) அமைக்கப்பெற்றது; சீற்றமிக்க எண்பெரும் பாம்புகளையும் வலிமையுள்ள கயிறுகளாகக் கொண்டு கட்டப் பெற்றது; (தனது உயர்ச்சியால்) வானத்தின் முகட்டை முட்டியது.

கு :— இதுமுதல் ஏழுசெய்யுட்கள் அத்தேரின் அமைப்பினைப் புனைந்துரைக்கும்முறையில் அமைந்தன. கொடிஞ்சு-கொடிஞ்சி. கொடிஞ்சி என்பது தேர்மேற் செல்வாரது கைக்கு உதவியாகத் தேர்த்தட்டின் முன்னே நடப்பட்டுத் தாமரைப்பூ வடிவுள்ள அலங்காரவுறுப்பு. ''மணித்தேர்க்கொடிஞ்சி கையாற்பற்றி'' (மணிமேகலை 4.48) என வருதல் காண்க. அலக்கு என்பது, தேரின் முகட்டில் வரிந்து கட்டப்பட்டுள்ள வரிச்சுக்கழி. பார் மன்பது, தேரின் அடிப்பரப்பு. ஆழி - சக்கரம். அச்சு - தேரின் அடியில் உள்ள உருள் கோத்தமரம். கதம் - சீற்றம். அரவம் எட்டு - அஷ்டமாநாகங்கள். (8)

9826. ஆண்டினெடு நாளிருது திங்களிவை யென்ன
மீண்டனவு மேலனவு மீட்டிவிரி தட்டிற்
பூண்டுளது தாரகை மணிப்பொருவில் கோவை
நீண்டபுனை தாரினது நின்றுளது குன்றின்.

ஆண்டின் நெடு நாள், இருது, திங்கள் இவை என்ன,
மீண்டனவும் மேலனவும் ஈட்டி விரிதட்டில்
பூண்டுளது ; தாரகை மணிப்பொருஇல் கோவை
நீண்ட புனைதாரினது ; நின்றுளது குன்றின்.

பொ :— (மேலும் அத்தேரானது) வருடத்துடனே இருது, மாதம், நாள் இவையென்று இதுவரை சென்றனவும் இனிமேல் செல்ல இருப்பனவும் ஆகிய காலக்குறிப்புக்கள் தொகுக்கப்பட்டு, மேல்விரிந்த தட்டின்கண்ணே அணிபெற அமைக்கப்பெற்றது; விண்மீன்களை யொத்தொளிரும் மணிகளால் இழைக்கப்பெற்ற கோவையாகிய நீண்ட அலங்கரிக்கப்பெற்ற மாலையையுடையது; மலைபோன்று அசைவின்றி நிலைபெற்றுள்ளது ;

கு :— மாதலி கொணர்ந்து நிறுத்திய தேரின் கண்ணே அமர்ந்து போர் செய்வார்க்குப் பயன்படும் முறையில் ஆண்டு, இருது, மாதம், நாள் ஆகிய காலக்கூறுகளில் இதுவரை சென்றனவும், இனிமேற் செல்ல இருப்பனவும் ஆகிய காலக்குறிப்புக்கள் தேரின் மேற்றட்டின் உட்பரப்பிலே தொகுத்து அமைக்கப் பட்டிருந்தன என்பார், 'ஆண்டினெடு நாள் இருது திங்கள் இவை என்ன, மீண்டனவும் மேலனவும் ஈட்டி விரிதட்டிற் பூண்டுளது' என்றார். என்ன என்னும் வினையெச்சம் ஈட்டி என்னும்

வினை கொண்டது. ஆண்டு - வருடம், நாள் - தினம், இருது - இரண்டு மாதமாகிய பெரும்பொழுது, திங்கள் - மாதம். மீண்டன - இதுவரை கழிந்தன, மேலன - இனி வரஇருப்பன. ஈட்டுதல் - தொகுத்தல். குன்றின் நின்றுளது என இயையும். (9)

9827. மாதிர மனைத்தையு மணிச்சுவர்க ளாகக்
கோதற வகுத்தது மழைக்குழுவை யெல்லாம்
மீதுறு பதாகையென வீசியது மெய்ம்மைப்
பூதமவை யைந்தின்வலி யிற்பொலிவ தம்மா.

மாதிரம் அனைத்தையும் மணிச்சுவர்கள் ஆகக்
கோது அற வகுத்தது ; மழைக்குழுவை எல்லாம்
மீது உறு பதாகைஎன வீசியது ; மெய்ம்மைப்
பூதம் அவை ஐந்தின்வலியின் பொலிவது அம்மா!

பொ :— (மற்றும், அத்தேர்) திசைகள் எல்லாவற்றையும் அழகிய சுவர்களாகக் குற்றமற வகுத்தமைத்தது; மேகக் கூட்டத்தையெல்லாம் மேலே பொருந்திய கொடிகளாக வீசுமாறு அமைக்கப்பெற்றது; மெய்ம்மைத்தன்மையுடைய ஐம்பூதங்களின் வன்மையினையும் ஒருங்கேபெற்று விளங்குவது;

கு :—மாதிரம் - திசை. கோது - குற்றம். மழைக்குழு - மேகக் கூட்டம். பதாகை - கொடி. ஐம்பெரும்பூதங்களும் அழியாத வன்மையுடைய உள்பொருள்கள் என்பது தோன்ற, 'மெய்ம்மைப்பூதம் அவை ஐந்தின் வலி' என்றார். அம்மா, வியப்பிடைச் சொல். (10)

9828. மரத்தொடு மருந்துலகில் யாவுமுள வாரித்
தரத்தொடு தொடுத்தகொடி தங்கியது சங்கக்
கரத்தொடு தொடுத்தகடன் மீதுநிமிர் காலத்
துரத்தொடு தொடுத்தகத ழோதையத னோதை.

மரத்தொடு மருந்து உலகில்யாவும் உளவாரித்
தரத்தொடு தொடுத்த கொடிதங்கியது ; சங்கக்
கரத்தொடு தொடுத்த கடல்மீது நிமிர்காலத்து
உரத்தொடு தொகுத்த கதழ்ஓதை அதன்ஓதை.

பொ :—(அந்தத் தேர்) மரத்துடனே (ஏனைய) மருந்துவகைகளாக உலகத்திலுள்ள எல்லாவற்றையும் ஒருசேரத் தொகுத்து எடுத்து (அவற்றைத்) தகுதிபெறத் தொடர்பாகவைத்த வரிசை தங்கப்பெற்றது. சங்குகளையுடைய அலைகளோடு பொருந்திய கடல் பொங்கி மேலெழும் (ஊழிக்)காலத்து வன்மையுடன் மிக்குத் தோன்றிய கடிய ஓசை அத்தேரின் ஓசையாகும்.

கு :—அத்தேரிலே புண்பட்டார்க்குப் பயன்படும் மரத்தொடு பொருந்திய மருந்துகளாகிய தாவரங்கள் வகைப்படுத்து வரிசையாக வைக்கப்பெற்றுள்ள எனவும், ஊழிக்காலத்திற்பொங்கி மீதெழும் கடலோசையினை ஒத்தது அத்தேரின் ஓசை எனவும் கூறியவாறு. கொடி — வரிசை· சங்கக் கரம் — சங்குகளையுடைய அலை ; தொகுதியாகிய அலை எனினும் பொருந்தும். உரம் — வன்மை. கதழ் — கடுமை ; உக்கிரம். (11)

9829. பண்டரித னுந்தியயன்
வந்தபழ முந்தைப்
புண்டரிக மொட்டனைய
மொட்டினது பூதம்
உண்டவை வயிற்றிடை
யொடுக்கியுமிழ் கிற்போன்
அண்டச மணிச்சயன
மொப்பதக லத்தின்.

பண்டு அரிதன் உந்தி
அயன்வந்த பழ முந்தைப்
புண்டரிக மொட்டு அனைய
மொட்டினது ; பூதம்
உண்டவை வயிற்றிடை
ஒடுக்கி உமிழ்கிற்போன்
அண்டச மணிச்சயனம்
ஒப்பது அகலத்தின்.

பொ :—(அத்தேர்) பண்டைநாளில் திருமாலினுடைய கொப்பூழில், பிரமன் தோன்றுதற்கு நிலைக்களமான தொன்மை வாய்ந்த முந்தைய தாமரைமொட்டினை ஒத்த மொட்டென்னும்

உறுப்பிணையுடையது ; (ஐம்பெரும்) பூதங்களின் திரட்சியாகிய உலகம் முழுவதையும் உண்டு (வயிற்றில் அடக்கி) அவற்றை (மீளவும்) உமிழ்ந்து வெளிப்படுத்த வல்லவனாகிய திருமாலின் மணிகளையுடைய (ஆதிசேடனாகிய) பாம்புப் படுக்கையினை அகலத்தால் ஒத்திருப்பது ;

கு :— பழமுந்தைப் புண்டரிக மொட்டு — மிகவும் பழமை வாய்ந்த தாமரையரும்பு. தேரின் உறுப்பாகிய மொட்டு என்பது தேரின் உச்சியாகிய முகடாகும். அண்டசம் — முட்டையில் தோன்றியது; என்றது, ஈண்டுப்பாம்பினை. சயனம் — படுக்கை. அண்டசமணிச் சயனத்தை அகலத்தின் ஒப்பது என்க. (12)

9830. வேதமொரு நாலுநிறை
வேள்விகளும் வெவ்வே
றோதமவை யேழுமலை
யேழுமுல கேழும்
பூதமவை யைந்துமெரி
மூன்றுநனி பொய்தீர்
மாதவமு மாவுதியு
மைம்புலனு மற்றும்.

வேதம் ஒருநாலும், நிறைவேள்விகளும், வெவ்வேறு
ஓதம் அவை ஏழும், மலைஏழும், உலகு ஏழும்,
பூதம் அவைஐந்தும், எரிமூன்றும், நனிபொய்தீர்
மாதவமும், ஆவுதியும், ஐம்புலனும், மற்றும் ;

பொ :—ஒப்பற்ற வேதங்கள் நான்கும், (வேதமுறைப்படி அமைந்த) வேள்விகளும், வெவ்வேறாகிய கடல்கள் ஏழும், மலைகள் ஏழும், உலகங்கள் ஏழும், பூதங்கள் ஐந்தும், தீ மூன்றும், மிக்கபொய்மை தீர்ந்த பெருந்தவமும், (வேள்வியில் தரப்படும்), ஆவுதியும், ஐம்புலனும், மற்றும் ;

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என வேதங்கள் நான்கு. ஓதமவை, பூதமவை என்புழி அவை பகுதிப்பொருள்விகுதி. ஓதம் — கடல். உப்புநீர், கருப்பஞ்சாறு, கள், பால், தயிர், நெய்,

நன்னீர் எனக் கடல்கள் ஏழு. மகேந்திரம், கந்தமாதனம், மலயம்; சக்யம், சக்திமந்தம், விந்தியம், பாரியாத்திரம் என மலைகள் ஏழு. பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம், மகாலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் இவை மேலுள்ள ஏழுலகங்கள். (அதல, விதல, சுதல, தராதல, மகாதல, பாதளம் என்பவை கீழுள்ள ஏழுலகங்கள்). நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் எனப் பூதங்கள் ஐந்து. ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி எனத் தீ மூன்றும். ஆவுதி என்பது வேள்வித்தீயிற் கொடுக்கப்படும் அவிப்பொருளே. (13)

9831. அருங்கரண மைந்துசுட
ரைந்துதிசை நாலும்
ஒருங்குகுண மூன்றுமுழல்
வாயுவொரு பத்தும்
பெரும்பகலு நீளிரவு
மென்றிவை பிணிக்கும்
பொரும்பரிக ளாகிநனி
பூண்டது பொலந்தேர்.

அருங் கரணம் ஐந்து, சுடர்
ஐந்து, திசை நாலும்,
ஒருங்கு குணம் மூன்றும், உழல்
வாயு ஒரு பத்தும்,
பெரும் பகலும், நீள் இரவும்,
என்று இவை, பிணிக்கும்
பொரும் பரிகள் ஆகி நனி
பூண்டது, பொலந்தேர்.

பொ :—அருமையுடைய (புறக்) கருவிகள் ஐந்தும், சுடர்கள் ஐந்தும், திசைகள் நான்கும், ஒருங்கே பொருந்தியுள்ள (சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும்) குணங்கள் மூன்றும் திரியுமியல்புடைய வாயுக்கள் பத்தும், பெரிய பகற்பொழுதும் நீண்ட இரவுப்பொழுதும், என்று கூறப்படும் இவை யாவும் பிணித்துச் செலுத்துதற்குரிய பொருந்தொழில் வாய்ந்த குதிரைகளாக உருக்கொண்டு மிகவும் பூண்டுள்ளது அப்பொன்மயமான தேராகும்.

கு :— கரணம் — கருவி; மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் புறக்கருவிகளை. சுடர் ஐந்தாவன, நாற்றிசையில் நான்கு தீயும் மேலே சூரியனும் ஆகிய பஞ்சாக்கினிகள். வாயுக்கள் பத்தாவன: பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன. முன் செய்யுளிற் கூறப்பட்ட வேதம் முதலாக இங்குக் கூறிய இரவுப்பொழுது ஈருகவுள்ளவற்றுக்குரிய அதி தெய்வங்கள் குதிரைகளின் வடிவுகொண்டு பூணப் பெற்றுள்ள தெய்வத் தன்மை வாய்ந்தது இப் பொன்மயமான தேர் என்றவாறு. (14)

தங்களுக்குப் போரில் வெற்றி தேடித்தரும்படித் தேவர்கள் அத்தேரை வேண்டுதல்

9832. வந்ததனை வானவர்
வணங்கிவலி யோய்நீ
எந்தைதர வந்தனை
யெமக்குதவு கிற்பாய்
தந்தருள்வை வென்றியென
நின்றுதகை மென்பூச்
சிந்தினர்கள் மாதலிக
டாவிநனி சென்ருன்.

வந்ததனை வானவர்
வணங்கி, ‘வலியோய்! நீ
எந்தைதர வந்தனை;
எமக்கு உதவுகிற்பாய்;
தந்தருள்வை வென்றி’ என
நின்று, தகை மென்பூச்
சிந்தினர்கள்; மாதலி
கடாவி நனி சென்ருன்.

பொ :— (மேற்கூறிய இயல்பினதாகி) வந்ததாகிய அத் தேரினைத் தேவர்கள் வணங்கி, ‘வலிமையுடைய தெய்வமே! நீ எம்முடைய தலைவனுகிய இந்திரன் பணிக்க இங்கு வந்துள்ளாய்.

எமக்கு உதவி புரிய வல்லாயாகி (இப்போரில்) வெற்றியைத் தந்தருள்வாயாக' என்று சொல்லி எதிர்நின்று, அழகிய மெல்லிய மலர்களைத்தூவி அருச்சித்தார்கள். (தேர்ப்பாகனுகிய) மாதலி (அதனை) விரைந்து செலுத்திச் சென்ருன்.

கு :— 'வந்தது' என்னும் வினையாலணையும் பெயர் ஐயுரு பேற்று வந்ததனை என்ருயிற்று. வந்ததனை — வந்ததாகிய தேரினை. 'வலியோய்! நீ எந்தை தர வந்தனை; எமக்கு உதவுகிற்பாய்; வெற்றிதந்தருள்வை' என்றது, தெய்வத்தன்மை வாய்ந்த அத்தேரினை நோக்கித் தேவர்கள் வேண்டிய வேண்டுகோளாகும். (15)

தேர் இராமனருகே விரைந்து வருதல்

9833. வினைப்பகை விசைக்கொடு
விசும்புருவி மான
மனத்தின்விசை பெற்றுளது
வந்ததென வானோ
டனைத்துலக முந்தொழ
வடைந்ததம லன்பால்
நினைப்புமிடை பிற்பட
நிமிர்ந்துயர் நெடுந்தேர்.

'வினைப்பகை விசைக்கொடு
விசும்பு உருவி, மான
மனத்தின் விசைபெற்றுளது
வந்தது' எனவானோடு
அனைத்து உலகமும் தொழ,
அடைந்தது, அமலன்பால்;
நினைப்பும் இடை பிற்பட
நிமிர்ந்து உயர் நெடுந்தேர்.

பொ :— நினைப்பினது வேகமும் நெடுந்தூரம் பின்னடையுமாறு நீண்டுயர்ந்த நெடிய தேரானது, (பாசப்பிணிப்பென்னும்) வினைக்குப் பகையாகிய மெய்ஞ்ஞானமானது, விரைவுடன் விசும்பினை ஊடுருவிக்கொண்டு பெருமைவாய்ந்த மனத்தின்

வேகத்தைப் பெற்றுடையதாய் வந்துள்ளது என்று வானுலகத் தோருடன் அனைத்துலகங்களிலுள்ளாரும் வணங்கிப் போற்றத் தூயோனாகிய இராமனிடம் வந்தடைந்தது.

கு:—நினைப்பும் இடைபிற்பட நிமிர்ந்து உயர் நெடுந்தேர், வானோடு அனைத்து உலகமும் தொழ, அமலன்பால் அடைந்தது என முடிக்க. வினைப்பகை என்றது, பாசமாம் வினைக்குப் பகையாய் அவ்வினையை முற்றக் கெடுக்கவல்ல மெய்ஞ்ஞானத் தினை. வினைப்பகையாகிய மெய்ஞ்ஞானமே விரைந்து விசும் பினை ஊடுருவிக்கொண்டு பெருமைவாய்ந்த மனத்தின் வேகத்தையுடையதாய் இத்தேராக உருக்கொண்டு வந்துள்ளது என்று வானோரும் பிறரும் வியந்துபோற்ற, நெடிய தேர் இராமனை அடைந்தது என்பதாம். (16)

### தேரினைக் கண்டு இராமன் வியத்தல்

9834. அலரிதனி யாழிபுனை
தேரிதெனி னன்றால்
உலகின்முடி விற்பெரிய
வூழொளியி தன்றால்
நிலைகொணெடு மேருகிரி
யன்றுநெடி தம்மா
தலைவரொரு மூவர்தனி
மானமிது தானோ.

'அலரி தனி ஆழி புனை
தேர் இது எனின், அன்றால்;
உலகின் முடிவில் பெரிய
ஊழ் ஒளி இது அன்றால்;
நிலைகொள் நெடு மேரு கிரி
அன்று; நெடிது அம்மா!
தலைவர் ஒரு மூவர் தனி
மானம் இது தானோ?

பொ:—(என்முன் வந்து நிற்கும்) இந்தத் தேர், சூரிய னுடைய ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரோ என்றால் அது

வன்று; உலகத்தின் இறுதியிற் ருேன்றும் பெரிய ஊழித்தீயின் ஒளியோ என்ருல் அதுவும் அன்று; (அசைவின்றி) நிலேத்தலே யுடைய நீண்ட மேருமலேயோ என்ருல் அதுவும் அன்று; அதனினும் நெடியதாகவுள்ளது. (உலகினே இயக்கும்) ஒப்பற்ற கடவுளர்களாகிய மூவர்க்கும் உரிய நிகரற்ற விமானம் இதுவோ?

கு:—எதிர்பாராத நிலேயில் தன்முன் வந்து நின்ற நெடிய தேரைக் கண்ணுற்ற இராமன், அதனே யாதோ என ஐயுற்றுத் தனக்குள் வியந்து பாராட்டுவதாக அமைந்தது இச் செய்யுள். அலரி—சூரியன். தனியாழி—ஒற்றைச்சக்கரம். ‘இது, ஒற் றைச்சக்கரத்தது அன்ருதலின் சூரியனுடை தேரன்று; தண் ஒளிபரப்புதலால் ஊழித்தீயும் அன்று; யாண்டும் இயங்குதலால் மேருமலேயும் அன்று; உலகத்தினே நடத்தும் கடவுளர் மூவர்க்கும் உரிய ஒப்பற்ற விமானம் இதுதானே?’ என இராமன் தனக்கு முன்னே வந்துநின்ற தேரினே நோக்கி வியந்து சிந்தித்தான் என்பதாம். தலேவர் ஒரு மூவர் என்றது, உலகினேப் படைத் தளித்தழிக்கும் அயன் அரி அரன் என்னும் மூவரை. மானம்—விமானம். இச் செய்யுளில் ஐயவிலக்கு என்னும் அணி அமைந் துள்ளமை அறியத்தகுவதாகும். (17)

### இராமன், தேர்ப்பாகனுகிய மாதலியை நோக்கி வினவுதல்

9835. என்னேயிது நம்மையிடை
யெய்தலென வெண்ணு
மன்னவர்த மன்னன்மகன்
மாதலியை வந்தாய்
பொன்னிஞெளிர் தேரிதுகொ
டார்புகல வென்ருன்
அன்னவனு மன்னதனே
யாகவுரை செய்தான்.

‘என்னே இது நம்மை இடை
எய்தல்?’ என எண்ணு,
மன்னவர்தம் மன்னன்மகன்,
மாதலியை, ‘வந்தாய்,

பொன்னின் ஒளிர்தேர் இதுகொடு,
ஆர்புகல?' என்ருன்;
அன்னவனும் அன்னதனை
ஆக உரை செய்தான்.

பொ :— மன்னர் மன்னனுகிய தசரதனுடைய மைந்தனுகிய இராமன், 'இத்தேர் நம்மை இவ்விடத்தில் அடைவது என்' என்று (தன் உள்ளத்திற்) சிந்தித்து (த் தேர்ப்பாகனுகிய) மாதலியை (நோக்கி) 'நீ, யார் பணிக்கப் பொன்னிஞல் இயன்ற தேரை (இங்கு)க் கொண்டு வந்தாய்?' என்று வினவினுன். அந்த மாதலியும் (தான் வந்த) அச்செய்தியைப் பொருந்துமாறு கூறினுன்.

கு :— மன்னவர்தம் மன்னன் — சக்கரவர்த்தி; என்றது தசரதனை. அவன் மகன், இராமன். மன்னவர்தம் மன்னன்மகன், மாதலியை (நோக்கி) 'ஆர் புகல, பொன்னின் ஒளிர்தேர் இது கொடு வந்தாய்' என்ருன். அன்னவன் – அந்த மாதலி. ஆக – பொருந்துமாறு. கூறுதல் என்னும் பொருளுடைய புகலுதல் என்ற சொல் பணித்தல், ஏவுதல் என்னும் பொருளில் இங்கு ஆளப்பெற்றது. (18)

மாதலியின் மறுமொழி

9836. முப்புரமெ ரித்தவனு
நான்முகனு முன்ஞள்
அப்பகலி யற்றியுள
தாயிர மருக்கர்க்
கொப்புடைய தூழிதிரி
காலுமுலை வில்லா
இப்பொருவி றேர்வருவ
திந்திரன தெந்தாய்.

'முப்புரம் எரித்தவனும்,
நான்முகனும், முன்நாள்
அப்பகல் இயற்றி உளது;
ஆயிரம் அருக்கர்க்கு

ஒப்பு உடையது; ஊழி திரி
காலும் உலைவு இல்லா
இப்பொரு இல்தேர் வருவது
இந்திரனது — எந்தாய்!

பொ :— 'எந்தையே! ஊழி பெயர்கின்ற காலத்தும் அழிவில்லாத தேராக வருவதாகிற இது, முப்புரங்களை யெரித்த சிவபிரானும் நான்கு முகங்களையுடைய பிரமனும் மிகப் பழங்காலமாகிய அந்த நாளில் இயற்றியது; இந்திரனுக்கு உரிமையுடையது.

கு .— வருவது, என்னும் வினையாலணையும் பெயர், இந்திரனது என்னும் வினைக்குறிப்பினைப் பயனிலையாகக் கொண்டது. (19)

9837. அண்டமிது போல்வன
வளப்பில வடுக்கிக்
கொண்டுபெய ருங்குறுகு
நீளுமவை கோளுற்
றுண்டவன் வயிற்றினையு
மொக்குமுவ மிக்கிற்
புண்டரிக நின்சர
மெனக்கடிது போமால்.

'அண்டம் இது போல்வன
அளப்பு இல அடுக்கிக்
கொண்டுபெயரும்; குறுகும்;
நீளும்; அவைகோளுற்று
உண்டவன் வயிற்றினையும்
ஒக்கும், உவமிக்கின்;
புண்டரிக! நின்சரம்
எனக்கடிது போமால்.

பொ :— (மேலும் இத்தேரானது) இந்த அண்டத்தையொத்தனவாகிய அளவற்ற அண்டங்களை(த் தன்மீது) அடுக்கிக் கொண்டு இயங்கவல்லது; தன் வடிவிற் குறுகவும் நீளவும் வல்லது; அவ்வண்டங்களை உண்டு தன்னுட் கொண்டவனாகிய திரு

மாலின் வயிற்றிணையும் ஒக்கும்; உவமை கூறுங்கால், தாமரை மலர்போலும் உறுப்புக்களையுடைய பெருமானே! நினது அம்பினை யொப்ப விரைந்து செல்லுமியல்பினதாகும்.

கு :— புண்டரிகம் — தாமரை. திருமாலின் அமிசமாகிய இராமனுடைய முகம், கண், கை, கால் ஆகிய அவயவங்கள் செந்தாமரை மலர் போன்று திகழும் செவ்வி நோக்கி இராமனை புண்டரிக! (தாமரை மலர்போல்வானே) என அழைத்தான் மாதலி. (20)

9838. கண்ணுமன முங்கடிய
காலுமிவை கண்டால்
உண்ணும்விசை யாலுணர்வு
பிற்படர வோடும்
விண்ணுநில னும்மெனவி
சேடமில தஃதே
எண்ணுநெடு நீரினு
நெருப்பிடையு மெந்தாய்.

'கண்ணும் மனமும் கடிய
காலும் இவை கண்டால்,
உண்ணும் விசையால் உணர்வு
பின்படர ஓடும்;
விண்ணும் நிலனும் என
விசேடம் இலது; அஃதே
எண்ணும் நெடுநீரினும்,
நெருப்பிடையும்-எந்தாய்!

பொ :— 'எந்தையே! கண், மனம், கடியகாற்று என்னும் இவற்றின் வேகத்தினை ஒப்புக்காணுங்கால் (இத்தேர், தனது) வேகத்தால் (அவற்றையெல்லாம்) உண்டுவிடும்; உயிரினது உணர்வும் பின்னிடும்படி (முந்துற்று) ஓடும். (ஓடுந்திறத்தில்) விண்ணிடமென்றும் மண்ணிடமென்றும் (இதற்கு) வேறு பாடில்லை; அவ்வாறே எண்ணி இறங்குதற்குரிய நெடிய நீராகிய கடலிடத்தும் நெருப்பிடத்தும் (இதன் இயக்கத்திற்குச் சிறிதும் தடையில்லை).

கு :— கண் என்றது, பொருள்களைச் சென்று பற்றுவதாகிய கண்ணின் பார்வையினை. மனம் என்றது மனத்தின் வேகத்தினை. காற்று என்றது காற்றின் வேகத்தை. காணுதல் — இத்தேரின் ஓட்டத்துடன் கண்முதலியவற்றின் வேகத்தை ஒப்பு நோக்கிக் காணுதல். உண்ணுதல் என்றது, அவற்றின் வேகத்தையெல்லாம் தன் வேகத்துள் அடக்கி அவற்றினும் தான் விஞ்சுதலை. உணர்வு—உயிரின் அறிவு. விசேடம்—வேறுபாடு. (21)

9839. நீருமுள வேயவையொ
ரேழுநிமிர் கிற்கும்
பாருமுள வேயதினி
ரட்டியவை பண்பிற்
பேருமொரு காலையொரு
காலுமிடை பேராத்
தேருமுள தேயிதுவ
லாலுலகு செய்தோய்.

'நீரும் உளவே, அவை ஓர்
ஏழு ; நிமிர்கிற்கும்
பாரும் உளவே, அதின்
இரட்டி ; அவை பண்பின்
பேரும் ஒருகாலை,
ஒருகாலும் இடைபேராத்
தேரும் உளதே, இது
அலால்? - உலகு செய்தோய்!

பொ :— உலகியற்றியவனாகிய இறைவனே! நெடுநீராகிய கடல்களும் உள்ளன; அவை ஓர் ஏழாகும். (அவ்வெழுகடல்களினும்) நிமிர்ந்து தோன்றும் உலகங்களும் உள்ளன; அவை அவ் ஏழின் இரட்டி ஆகிய பதினான்காம். (மேற்குறித்த கடல்களும் உலகங்களுமாகிய) அவை யாவும் (ஊழி முடிவாகிய) ஒரு காலத்தில் தம் தன்மையினின்றும் மாறுபட்டு அழிவன. (அவ்வாறாகவும்) ஒரு காலத்தும் தன் நிலையினின்றும் மாறுபடாதுள்ள தேர் இதுவன்றி வேறுளதோ?

கு :— நீருமுளவே, பாருமுளவே என்புழி ஏகாரம் அசை. அதின் இரட்டி — அவ் ஏழின் இரட்டியாகிய பதினான்கு; மேலே ழுலகமும் கீழேழுலகமும் என உலகங்கள் பதினான்காம். கடல் களும் உலகங்களும் தம் தன்மைகெட்டு அழியும் ஊழிக்காலத்தும் அழியாத்தன்மை வாய்ந்தது இத்தேர் ஒன்றே என்பதாம். 'உலகு செய்தோய்' என்னும் தொடர் 'உலகியற்றியான்' என்னுந் தெய் வப் புலவர் வாய்மொழியை நினைவுபடுத்தும் முறையில் அமைந் துள்ளமை உணரத் தகுவதாகும். இடைபேர்தல் — தன்னிலை யில் மாறுபடுதல். (22)

9840. தேவரு முனித்தலைவ
ருஞ்சிவனு மேனாள்
மூவுல களித்தவவ
னும்முதல்வ முன்னின்
றேவினர் சுரர்க்கிறைவ
னீந்துளதி தென்னா
மாவின்மன மொப்பவுணர்
மாதலி வலித்தான்.

'தேவரும், முனித்தலைவரும்,
சிவனும், மேல்நாள்,
மூவுலகு அளித்த அவனும்,
முதல்வ! முன் நின்று!
ஏவினர்; சுரர்க்கு இறைவன்
ஈந்துளது இது' என்னா,
மாவின் மனம் ஒப்ப உணர்
மாதலி, வலித்தான்.

பொ :— 'உலக முதல்வனே! தேவர்களும் முனிவர்களிற் சிறந்த பெருமக்களும் சிவபெருமானும் முற்காலத்தில் மூவுலகங் களையும் படைத்தளித்த அப்பிரமனும் முன்னின்று ஏவினார்கள்; (அவர்கள் ஏவிய வண்ணம்) தேவர்க்குத்தலைவனாகிய இந்திரன் அனுப்பித் தந்தது இந்தத் தேர்' என்று குதிரைகளின் மனக் கருத்தினை ஒருங்கே கூர்ந்துணரவல்ல மாதலி என்பான் திட்ப முறக் கூறினான்.

கு :— தேரிற் பூட்டிய குதிரைகளின் மனவியல்புணர்ந்து புல மறிந்து தேரைச் செலுத்தவல்ல நுண்ணுணர்வுடைய தேர்ப் பாகன் மாதலி என்பதை அறிவுறுத்துவார், 'மாவின் மனம் ஒப்ப வுணர் மாதலி' எனச் சிறப்பித்தார். மா - குதிரை. வலித்தல் - திட்பமுறக் கூறுதல். (23)

*'இத்தேர் அரக்கர் மாயையால் தோன்றியதோ' என இராமன் ஐயுற, தேர்க்குதிரைகள் அந்த ஐயத்தைப்போக்குதல்*

9841. ஐயனிது கேட்டிகல
ரக்கரகன் மாயச்
செய்கைகொ லெனச்சிறிது
சிந்தையினி னைந்தான்
மெய்யவ னுரைத்ததென
வேண்டியிடை பூண்ட
மொய்யுளை வயப்பரி
மொழிந்தமுது வேதம்.

ஐயன் இதுகேட்டு, 'இகல்
அரக்கர் அகல் மாயச்
செய்கை கொல்?' எனச் சிறிது
சிந்தையில் நினைந்தான்;
'மெய் அவன் உரைத்தது' என
வேண்டி, இடை பூண்ட
மொய் உளை வயப்பரி
மொழிந்த, முது வேதம்.

பொ :—தலைவனாகிய இராமன் (மாதலி கூறிய) இதனைக் கேட்டு, (இது) 'பகைமை கொண்ட அரக்கரது விரிந்த மாயச் செய்கைதானோ?' என்று சிறிது (தன்) மனத்தில் (ஐயுற்று ச்) சிந்தித்தான். அந்தத் தேரினிடத்துப் பூண்ட செறிந்த பிடரிமயிரினையுடைய வன்மைமிக்க குதிரைகள், ('மாதலி யாகிய) அவன் கூறிய மொழி மெய்ம்மையுடையதே' என்று, (இராமனை) வேண்டி முதுமறை பயின்ற மொழிகளால் எடுத்து உரைத்தன.

கு:—இடை பூண்ட மொய்யுளை வயப்பரி, வேண்டி 'அவன் உரைத்தது மெய்' என முதுவேதம் மொழிந்த என முடிக்க. அவன் என்றது மாதலியை. மொய்உளை—செறிந்த பிடரிமயிர். (24)

**தெளிவுபெற்ற இராமன் மாதலியை நோக்கி 'உனது பெயரைக் கூறுக' என அவன் தன் பெயரைக் கூறுதல்**

9842. இல்லையினி யையமென
வெண்ணிய விராமன்
நல்லவனை நீயுனது
நாமநவில் கென்ன
வல்லிதனை யூர்வதொரு
மாதலி யெனப்பேர்
சொல்லுவ ரெனத்தொழுது
நெஞ்சினொடு சொன்னான்.

'இல்லை இனி ஐயம்'என
எண்ணிய இராமன்,
நல்லவனை, 'நீ உனது
நாமம் நவில்க!' என்ன,
'வல்இதனை ஊர்வது ஒரு
மாதலி எனப்பேர்
சொல்லுவர்' எனத் தொழுது,
நெஞ்சினொடு சொன்னான்.

பொ:—இனி ஐயுறுதற்குரியது எதுவும் இல்லையென்று கருதிய இராமன், நற்குணமுடையவனாகிய அத்தேர்ப்பாகனை (நோக்கி), 'நீ நின்பெயரைச் சொல்லுக' என்றுகூற, (அவன்) 'வன்மையுடைய இத்தேரினை ஊர்தலையுடைய மாதலி என்று (என்) பெயரைச் சொல்லுவார்கள்' என நெஞ்சார (இராமனைத்) தொழுது சொன்னான்.

கு:—இனி ஐயம் இல்லை எனவும், நெஞ்சினொடு தொழுது சொன்னான் எனவும் இயையும். நல்லவன் என்றது மாதலியை. 'நின் நாமம் நவில்க' என்பது இராமன் கூற்று. நாமம்—

பெயர். 'வல் இதனை ஊர்வதொரு மாதலி எனப் பேர் சொல்லுவர்' என்றது மாதலி தன்னைக் குறித்துக் கூறிய மறுமொழி. (25)

*இராமன் அனுமனையும் இலக்குவனையும் நோக்கி, 'இதுபற்றி நும் கருத்து யாது' என வினவ, அவர்கள் 'இந்தத் தேர் இந்திரனுடையதே' எனத் தெளியக் கூறுதல்*

9843. மாருதியை நோக்கியிள
வாளரியை நோக்கி
நீர்கருது கின்றதை
நிகழ்த்துமென நின்ருன்
ஆரியன் வணங்கியவ
ரையமிலை யையா
தேரிது புரந்தரன
தென்றனர் தெளிந்தார்.

மாருதியை நோக்கி, இள
வாள் அரியை நோக்கி,
'நீர் கருதுகின்றதை
நிகழ்த்தும்' என, நின்ருன்
ஆரியன்; வணங்கி அவர்,
'ஐயம் இலை, ஐயா!
தேர் இது புரந்தரனது'
என்றனர், தெளிந்தார்.

பொ:—மேலோனுகிய இராமன், வாயுவின் மைந்தனுகிய அனுமனை நோக்கியும், வலிய இளஞ்சிங்கம்போல்வானுகிய இலக்குவனை நோக்கியும், 'நீங்கள் எண்ணுகின்றதை எனக்குச் சொல்லுங்கள்' என (அவர்கள் கருத்தினை எதிர்பார்த்து) நின்ருன். (அந்நிலையில்) அவ்விருவரும் மனந்தெளிந்தாராய் (இராமனை) வணங்கி, 'ஐயனே! (இதுகுறித்து) ஐயப்படுவதற்கு எதுவும் இல்லை. தேராகிய இது இந்திரனுடையதே' என்று கூறினர்.

கு:—ஆரியன் என்றது மேலோனுகிய இராமனை. நிகழ்த்துதல் — சொல்லுதல். அவர் என்றது, அனுமன் இலக்குவன்

ஆகிய அவ்விருவரையும். அவர், தெளிந்தார், வணங்கி, ‘ஐயா! தேர் இது புரந்தரனது’ என்றனர் எனமுடிக்க. இகல் அரக்கர் அகல் மாயம் இது அன்று; இது உண்மையான தேர் தான் என்பது புலப்படத் ‘தேர் இது’ என்றனர். புரந்தரனது— இந்திரனுடையது; வினைக்குறிப்பு முற்று. (26)

### இராமன் தேரில் ஏறுதல்

9844. விழுந்துபுர டீவினை
குலத்தொடும் வெதும்பத்
தொழுந்தகைய நல்வினை
களிப்பினொடு துள்ள
அழுந்துதுய ரத்தமர
ரந்தணர்கை முந்துற்
றெழுந்துதலை யேறவினி
தேறின னிராமன்.

விழுந்து புரள் தீவினை
குலத்தொடும் வெதும்ப,
தொழும் தகைய நல்வினை
களிப்பினொடு துள்ள,
அழுந்து துயரத்து அமரர்
அந்தணர் கைமுந்துற்று
எழுந்து தலை ஏற, இனிது
ஏறினன் இராமன்.

பொ :—(இராமாவதாரத்தால் தன் ஆற்றல்குன்றி) விழுந்து புரள்கின்ற தீவினையானது தன் இனத்தொடும் வெதும்பி வருந்தவும், (அறத்தின் மூர்த்தியைத்) தொழுதற்குரிய தகுதியினையுடைய நல்வினை மகிழ்ந்து துள்ளிக் குதிக்கவும், துயரத்தில் ஆழ்ந்துள்ள தேவர்கள் முனிவர்கள் ஆகியவர்கள் கைகள் முற்பட்டு எழுந்து தலைமீது ஏறவும், இராமன் (அத்தேரின்மீது) இனிதாக ஏறினன்.

கு :—‘அமரர் அந்தணர் கைமுந்துற்று எழுந்து தலை ஏற’ என்பதற்குத் தேவர் முனிவர்களது பக்கம் வெற்றித்திறத்தில்

முற்பட்டுச் சென்று முதன்மையுற எனவும், அவர்களது ஒழுகலாருகிய வாழ்வு மேன்மையுற்று விளங்க எனவும் பொருளுரைத்தலும் பொருந்தும். 'கை' என்னும் சொல், பக்கம், ஒழுக்கம் என்ற பொருளையும் தரும் பல பொருளொரு சொல்லாகும். (27)

இராமன் தேரேறு படலம்

முற்றிற்று.

# 36. இராவணன் வதைப்படலம்

## முன்னுரை

இராமன் இராவணனை வதைத்ததைக் கூறும் பகுதியாகலின் இது இராவணன் வதைப்படலம் எனப் பெயர் பெறுகின்றது. எல்லா ஏடுகளிலும் இப்படலப்பெயர் ஒன்றாகவேயுள்ளது. ஆயின் இப்படலத்தின் இறுதிப்பகுதி மண்டோதரி சோகப்படலம் எனச் சில சுவடிகளிலும் மண்டோதரி புலம்புறுபடலம் எனச் சில சுவடி களிலும் பெயர்பெற்றுப் பிரிவுற்றுள்ளது.

இராமன் தேவர்கள் வாழ்த்தத் தேரேறிச் செல்கின்றான். இராவணனும் தேரேறி இராமனை நோக்கி வருகின்றான். வருகின் றவன் இராமன் ஏறிய தேரைப் பார்த்து இத்தேரைத் தேவர்கள் தந்திருக்கின்றார்கள் என்று அறிந்து சினமிக்கு வாய்மடித்துப் பற்களைக் கடிக்கின்றான். பின்பு அது கிடக்கட்டும் என்று விடுத் துத் தேரை இராமன்மேல் விடுக என்று தேர்ப்பாகனுக்குக் கூறு கின்றான். இருவர் தேரும் எதிர் எதிரே நெருங்கும் நிலையில் மகோதரன் இராவணனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு இலக் குவனோடு போர் செய்யச் செல்கின்றான். நடுவே இராமன் தேரைக்கண்டு பொருது இராமனோடு போர்செய்து மடிகின்றான். பின்பு இராமனை எதிர்க்கப் புறப்பட்ட இராவணன் பல தீய நிமித் தங்கள் கண்டும் உள்ளத்தின் உறுதிகுலையாது இராமனை நெருங்கு கின்றான். இருவரும் பெரும்போர் செய்கின்றனர். தரைமேல் நின்று பொருத இராவணன் தேர் விண்ணில் செல்வது கண்டு இராமன் தேரும் பின் தொடர்ந்து விண்ணில் செல்கின்றது. இரா மனும் இராவணனும் விண்ணில் நின்று போர் செய்கின்றார்கள். விண்ணிலும் மண்ணிலும் பலசாரிகள் திரிந்து இருவரும் பலப்பல தெய்வப் படைகளைக் கொண்டு ஒருவர்மேல் ஒருவர் வீசுகின் றார்கள்.

அந்தக் கடும்போரில் இராவணன் சிறப்புமிக்க பெரிய சூலப் படையை விடுகின்றான். விண்ணவர் நடுங்க, மண்ணவர் மாழ்க அந்தச் சூலப்படை இராமன் மேல் வருகின்றது. அதை இராமன் தன் படைக்கலங்களால் பொடியாக்காமல் தன் ஊங்காரத்தி னாலேயே பொடியாக்கிவிடுகின்றான். அதைக்கண்ட இராவணன்

'இவன் மனிதன் அல்லன்; எல்லோர்க்கும் மேலவனுகிய பரம் பொருளே' என்பதை யுணர்கிருன். உணர்ந்தும் 'இவன் யாரா யினும் ஆகுக. இவனேடு போர் செய்வேன்' என்று துணிந்து பொருகின்ருன். அவ்வாறு பொரும்போது இராமன் இராவண னுடைய தலையை அறுக்கின்ருன். அறுத்ததலை மீண்டும் முளைக் கின்றது. அறுக்க அறுக்க முளைத்துக்கொண்டே யிருக்கின்றது. அந்த நிலையைக்கண்ட இராமன் இராவணனது உடம்பு முழுமை யையும் தன் அம்புகளால் துளைக்கின்ருன். இராவணன் சோர்ந்து மூர்ச்சித்துச் சாய்கின்ருன். அதுகண்ட இராவணன் சாரதி தேரை விலகிச் செலுத்துகின்ருன். மூர்ச்சையுற்ற இராவணன் மேல் படைவிடுதல் கூடாது என்று இராமன் வாளா இருக்கின் ருன். மாதலி இராமனை நோக்கி இராவணன் சோர்ந்துள்ள இப் போதே அவனைக் கொல்க எனத் தூண்டுகின்ருன். மாதலியின் சொல்லை இராமன் ஏற்றுக் கொள்ளவில்லை. படை துறந்து மயங் கிய நிலையில் பகைவனைக் கொல்லுதல் போரறம் அன்று என மறுத்துரைக்கின்ருன். பின்பு இராவணன் சோர்வு நீங்கிப் பார்க் கின்ருன். தன்னெதிரே இராமன் இல்லாமையால் சுற்றும் முற் றும் பார்த்துத் தன் பின்பக்கத்தில் இராமனைக் கண்டு, தேர்ப் பாகன் தன் தேரைப் பிறக்கிடச் செய்திருப்பதை உணர்கின் ருன். பாகன் மேல் வெகுண்டு அவனைக்கொல்ல விரைகின்ருன். பாகன் நிகழ்ந்ததைக் கூறித் தன் செயல் பாகர் மரபுக்கு ஏற்ற தாதலை விளக்கிப் பொறுக்குமாறு வேண்டுகின்ருன். அவ்வாறே பொறுத்துக்கொண்ட இராவணன் தன்தேரை இராமனை நோக்கி விடச் சொல்கின்ருன். தேர் இராமன் எதிர் நிற்கின்றது. இரா வணன் முன்னையிலும் கடுமையாக இராமனேடு போர் செய்கின் ருன். அவன் விடுக்கும் தெய்வப்படைகளை யெல்லாம் இராமன் தன் அம்புகளால் சிதைத்து வீழ்த்துகின்ருன். பின்பு பிரமாத் திரம் தொடுத்து இராவணனது மார்பில் விடுக்கின்ருன். பிரமாத் திரம் சென்று இராவணன் உடம்பில் நுழைந்து உலாவி அவனு யிரை மாய்த்துப் புறம் போந்து பாற்கடலில் மூழ்கி வந்து இராம னது அம்பருத்தூணியில் நுழைந்து தங்குகின்றது.

இராவணன் இறந்து தரையில்வீழ்ந்தபின் இராமன் நெருங்கி அவனுடம்பினை உற்றுப் பார்க்கின்ருன். அவன் முதுகில் தழும்பு இருத்தல் கண்டு இவன் போரில் முதுகு காட்டியிருக்கவேண்டும் என முடிவுசெய்துகொண்டு, 'இவ்வாறு பின்னிட்டவனை வென்ற

என் வெற்றி பழிக்கத் தக்கதாகும்' என்று மிக வருந்துகின்ருன். அப்போது வீடணன் தழும்பின்வரலாற்றை விளம்பி ஐயம்அகற்று கின்ருன். பின்பு இராமன் வீடணனை நோக்கி, 'நின் மனத்தில் உள்ள வயிரத்தை விடுத்து இராவணனுக்கு ஈமக்கடன் செய்க' எனக் கட்டளையிடுகின்ருன். வீடணன் தன் மனத்து அடங்கி யிருந்த துன்பம் வெளிப்பட இராவணன்மேல் வீழ்ந்து வாயாரப் புலம்புகின்ருன். சாம்பவான் வந்து தேற்றத் தேறி எழுகின்ருன். பின்பு இராவணன் மனைவிமார் வந்து அவனுடம்பைத் தழுவிப் புலம்பும்போது பட்டத்தரசியாகிய மண்டோதரி வந்து அவ னுடம்பைத் தழுவிப் புலம்பித் துயரத்தால் உயிர் நீங்குகின்ருள். அவள் கற்பினைக் கண்டு யாவரும் கொண்டாடுகின்றனர். பின்பு வீடணன் இராவணனுக்கும் மண்டோதரிக்கும் ஈமக்கடனைச் செய்து முடித்துப் போரில் மாண்ட அரக்கர்க்கெல்லாம் முறைப் படி ஈமக்கடன் செய்து முடித்து இராமனை அடைந்து துன்பம் தோன்ற நிற்க இராமன் அவனைத் தேற்றுகின்ருன்; என்பது இப் படலத்துக் கூறப்படுன்றது.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்: இராவணன் இராமனைக் கொல்லுமாறு விடுத்த ஆற்றல் மிக்க சூலத்தை இராமன் தன் அம்புகளைக் கொண்டு தாக்கவும், அவ்வம்புகள் அச்சூலத்தில் பட்டவுடன் விளக்கில் வீழ்ந்து வீயும் விட்டில்களைப் போல மாய்ந்து விடுகின் றன. அதுகண்ட இராமன் பெருங்கோபங் கொண்டு, இந்திரன் தேரோடு மாதலிபால் கொடுத்தனுப்பிய வலிய வேலினுல் அச் சூலத்தைப் பிளந்து வீழ்த்தியதாக உள்ளது.

கம்பர் அவ்வாறு கூருமல் அதைச் சிறிது மாற்றியமைத்துள் ளார். இராவணன் தன்மேல் எறிந்த கொடிய சூலத்தை இரா மன் தன் கணைகளைக் கொண்டு தகர்க்க முயல்கின்ருன். அந்தக் கணைகள் அச்சூலத்தில்பட்டுச் சிந்திவிடுகின்றன. பின்பு செய்வ தறியாது திகைத்து நிற்பவன்போல இராமன் வாளாநிற்க, அந் தச்சூலம் கண்டாமணிகள் ஒலிக்க நெருங்குகின்றது. அப்போது மிகச் சினந்து இராமன் எழுப்பிய உங்கார ஒலியினுலேயே பல நூறு கூறுபட்டு அந்தச் சூலம் உதிர்ந்தது என்று கூறியுள்ளார்.

இராமன் உதவியால் இராவணனை அழிக்க எண்ணி எதிர் பார்த்துள்ளவன் இந்திரன். அந்த இந்திரன் அனுப்பிய வேலினால் இராமன், இராவணன் எறிந்த சூலத்தைத் தகர்த்தான் என்பது அவன் தெய்வ ஆற்றலுக்கும் பெருமைக்கும் சிறுமை தருவதாகும் என்று கருதிக் கம்பர் அதை இவ்வாறு மாற்றிக் கூறினர் போலும்.

மேலும், இராமனது உங்காரத்தால் தன் கடுமையான ஆற்றலையுடைய சூலப்படை அழிந்தது கண்ட இராவணன், வீடணன் முன்பு தனக்குக்கூறிய சொல்லை நினைவுற்றான் என்றும், இவ்விராமன், சிவனோ, நான்முகனோ, திருமாலோ அல்லன்; அவ்வேத முதற்காரணன்தான் இந்த இராமனோ? என்று எண்ணினான் என்றும் கம்பர் கூறியுள்ளார். வான்மீகி இதைக் கூறவில்லை. இராமன் பெருமையைப் புலப்படுத்த வேண்டிக் கம்பர் இங்ஙனம் படைத்துக் கூறினர்போலும்.

2. வான்மீகத்தில் : இராமனும் இராவணனும் போர்செய்வதை விண்ணிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த அகத்திய முனிவர், இராமன்விட்ட அம்புகளால் இராவணன் சோர்ந்திருப்பதையும் இராமன் போர் செய்ய ஆயத்தமாக இருப்பதையும்நோக்கி இராமனை அணுகி, நீ இவனை வெற்றிபெற யான்கூறும் மந்திரத்தைச் செபிப்பாயாக என 'ஆதித்திய இருதயம்' என்னும் சூரியனுக்குரிய மந்திரத்தை உபதேசித்ததாகவும் அவர் கட்டளைப்படியே இராமன் ஐம்பொறிகளையும் அடக்கிக்கொண்டு சூரியனை நோக்கியிருந்து ஆதித்திய இருதயத்தைச் செபித்து ஆற்றல் பெற்று மகிழ்ந்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

கம்பர் இதைப்பற்றி ஒன்றும் கூறவில்லை. ஞாயிறு திங்கள் ஐம்பெரும்பூதங்கள் என்ற எல்லாவற்றிற்கும் ஆற்றல் அளிக்கும் பரம்பொருளின் அமிசமாகப் பிறந்துள்ள இராமன், சூரியனை நோக்கி அவன் மந்திரத்தைச் சொல்லி ஆற்றல்பெற்று இராவணனை வென்றான் என்று கூறுவது சிறப்புடையதன்று என விடுத்தார் போலும்.

3. வான்மீகத்தில்: இராமன் இராவணனது தலையை அறுக்க அறுக்க மீண்டும் மீண்டும் நூறுமுறை முளைத்துக்கொண்டே இருந்ததாகக் கூறப்பட்டுளது. இராவணனது கையை அறுத்த

தாகவோ அது மீண்டும் முளைத்ததாகவோ அங்குக் கூறப்பட வில்லை.

கம்பர், இராமன் தன் அம்புகளால் இராவணனது கையை அறுத்ததாகவும் அற்ற இடத்தில் மீண்டும் புதியகைகள் முளைத்த தாகவும், இராவணன் தன் அறுபட்ட கையைப் புதிதின் முளைத்த கையினால் பற்றியெடுத்து மாதலியின்மேல் வீசியதாக வும் அதனால் அம்மாதலி வாய்வழி இரத்தம் கக்கினதாகவும் கூறி யுள்ளார். இந்நிகழ்ச்சி இங்கு கம்பரின் புதிய படைப்பேயாகும். எனினும் வான்மீகி வேறோரிடத்தில் கூறியதைக் கம்பர் இங்குப் பெய்து கூறினாரேயன்றித் தாமே புதிதாகப் படைத்துக்கொள்ள வில்லை என்பது உண்மையாகும்.

சீதையைக்கவர்ந்த இராவணனோடு போர் செய்ய வந்த சடாயு, அவன் இடப்பக்கம் உள்ள கைகள் பத்தாலும், சீதையை இறுகப் பிடித்துக்கொண்டு வலப்பக்கமுள்ள கைகளால் தன்னைத் தாக்கும்போது மனம்பொறுதவனாய்த் தன் மூக்கினால் அவ்விராவணன் இடப்பக்கத்துக் கைகள் பத்தையும் கொத்தி அறுத்தான் எனவும், அறுபட்ட இடத்தில் இருந்து புதியகைகள் புற்றிலிருந்து புறப்படும் நாகங்கள் போலத்தோன் றின எனவும், வான்மீகத்தில் கூறப்பட்டுளது. கம்பர் அதனை, ஆரணிய காண்டத்தில் கூறாதுவிடுத்து இங்கு அந்நிகழ்ச்சியை யும் சேர்த்துக் கூறியுள்ளார் என்க.

4. வான்மீகத்தில்: மண்டோதரியின் புலம்பல் மிகச்சிறப் பாக அமைந்துள்ளது. இராவணனது வீரப் பெருமைகளும், பின் பிறன்மனை நயந்த பேதைமையால் வந்த சிறுமைகளும் அவள் புலம்பலில் இடம் பெற்றுள்ளன. மண்டோதரி குலத்தாலும் அழகுருவத்தாலும் நல்ல குணத்தாலும் சீதையினும் சிறந்தவள் என்பதை இங்கு விளக்குகின்றாள். தன்னினும் தாழ்ந்த நிலையி லுள்ள சீதையைக் காம மயக்கத்தால் இராவணன் காதலித்த தாகக் கூறிப் புலம்புகின்றாள்.

இப்படிப் புலம்பிய மண்டோதரி இறுதியில் இராவணனை நோக்கித் 'தேவரீர் மரணமுற்றதையறிந்தும் பிரிவாற்றாமை யால் தவிக்கும் என் இதயம் பிளக்கவில்லையே! இதனால் இது சீரழிந்த பிறப்பாயிற்று' என்று உருகிய மனத்தினளாய்

இராவணனது மார்பில் மூர்ச்சித்து விழுந்து விட்டாள். அப்போது அவள்தன் சகக்கிழத்தியர் பலர் வந்து அவளை எடுத்து ஆறுதல் கூறித் தேற்றுகின்றார்கள். பின்பு இராமன் கட்டளைப் படி வீடணன் தன் அண்ணனுக்கு இறுதிக்கடன் முடிக்க வேண்டி மண்டோதரி உள்ளிட்ட இராவணன் மனைவியர் அனைவரும் அங்கிருந்து அகற்றப்பட்டு இலங்கை நகரில் புகுகின்றனர் என்று கூறப்பட்டுள்ளது. மண்டோதரி இராவணனோடு உயிர் விட்டதாகக் கூறவில்லை.

கம்பர், இவ்விடத்தில் சிறந்த மாறுதல் செய்துள்ளார். மண்டோதரி பேரழகும் பெருங்கற்பும் உடையவள். இவள் கணவனுக்குப்பின் கைம்மை நோன்பு நோற்று வாழ்ந்தாள் என்று கூறக் கம்பர் விரும்பவில்லை. தமிழ் நாட்டில் சிலப்பதிகாரத்தில் கூறப்படுகின்ற கோப்பெருந்தேவி போன்ற கற்புடைப் பெண்டிர் கணவனோடு உயிர் நீத்திருக்கும் வரலாறுகளை அறிந்த கம்பருக்கு, மூவுலகையும் முறையினாண்ட பெருவீரனாகிய இராவணன் மனைவியையும் தமிழ்நாட்டுக் கற்புடைமகளிரைப்போலவே கணவனோடு உடன் உயிர் துறந்த பெருங்கற்பினள் ஆக்கவே விருப்பம் மிக்கது. அங்ஙனமே கூறியுள்ளார்.

என்ற ழைத்தன ளேங்கி யெழுந்தவன்
பொன்ற ழைத்த பொருவரு மார்பினைத்
தன்ற ழைக்கைக ளாற்றழு வித்தனி
நின்ற ழைத்துயிர்த் தாளுயிர் நீங்கினாள்

என்றது காண்க.

இராமாயணம் கருத்துவகையால் தமிழ் இக்கியமரபையே தழுவியுள்ளது என்று எவரும் புகழுமாறு இக்கருத்தைச் சேர்த்துள்ளார் கம்பர். கம்பரின் புலமை மாண்பும் உலகியலறிந்த நாகரிகப்பண்பும் இக்கருத்தால் மிகமிக உயர்ந்து காட்டுதல் காணலாம். தீயர் என்று எவரும் எள்ளும் அரக்கர் மகளிரையும் கற்புநெறிநின்று கணவனோடு உயிர் துறந்த கற்புடைய காரிகையராகக் காட்டிய கம்பரின் பெருந்தன்மைதான் என்னே!

5. வான்மீகத்தில்: இராவணனுக்கு இறுதிச்சடங்கினைச் செய்க என இராமன் வீடணனைநோக்கிக் கூறியபோது வீடணன் பின்வருமாறு மறுத்துரைக்கின்றான். ''அறநெறியை விட்டுக்

கொடிய கொலைஞனாய்ப் பொய்யனாய்ப் பிறர் மனைவியைக் கற்பழித்த காமுகனாய் வாழ்ந்த இராவணனுக்கு யான் இறுதிக் கடன்செய்வது விரும்பத்தக்கது அல்ல; அண்ணன் என்ற முறையால் பூசிக்கத்தக்கவனாயினும் நல்லோர் யாவர்க்கும் தீங்கு இழைப்பதையே தன் சிறந்த தொழிலாகக்கொண்ட இழிவுடைமையால் எனக்குப் பகைவனாகவே கருதப்படத்தக்க இவன் என் பூசைக்கு உரியவன் அல்லன். இவனுக்கு இறுதிப் பூசையை யான் செய்யின் உலகிலுள்ள மானிடர்கள் என்னைக் கொடியவன் என்று ஏசுவார்கள்'' என்பது வீடணனுடைய மறுமொழி.

வீடணன் சொல்லைக் கேட்ட இராமன், அவனுடைய அறச் சிந்தனையை நினைந்து வியந்து பாராட்டி, உனது இத்தகைய வலிமையால்தான் எனக்கு வெற்றியுண்டாயது என்று புகழ்ந்து கூறி, 'இராவணன் நெறி தவறியவன் என்பது உண்மையேயாயினும், அவன் ஆண்மை மிக்கவன்; போரில் புறங்கொடா வீரன்; இந்திரன் முதலிய தேவர்களையும் வென்று அவர்களை அடிமை கொண்டவன்; பகைமை எல்லாம் இறக்கும்வரையில்தான்; நாம் மேற்கொண்ட கருமம் முற்றுப்பெற்றது. இனி, இவனுக்கு இறுதிச்சடங்கை நீ செய்வதுதான் முறைமை; இதனால் நீ புகழ் பெற்றவனாவாய்' என்று கூறுகின்றான். இராமன் கட்டளையை ஏற்றுக்கொண்டு வீடணன், பின்பு இராவணனுக்கு இறுதிக்கடன் செய்கின்றான் என்று வான்மீகி முனிவர் கூறியுள்ளார்.

கம்பர், வீடணன் இராவணனைப்பற்றிக் கூறிய இழிசொற்களை எல்லாம் இங்கு விரித்துக் கூறவில்லை; எனினும், வீடணன் பகைமை உள்ளத்தால் ஏதோ கூறியிருக்கவேண்டும் எனப் படிப்பவர் உய்த்துணரும் வண்ணம் செய்துள்ள நுட்பம் பாராட்டுதற்கு உரியதாகும்.

"வீடண தக்கதன்றால், என்னதோ இறந்துளான்மேல் வயிர்த்தல் நீ இவனுக்கு ஈண்டச் சொன்னதோர் விதியினாலே கடன் செயத்துணிதி'' என இராமன் கூறுவதாக அமைத்துள்ளார். வான்மீகி விரித்துக் கூறிய கருத்துகளைக் கம்பர் இங்கு உய்த்துணர்ச்சியால் அறியும் அளவிற்குச் சுருக்கி இராவணனைப் பற்றிய வீடணன் பழிமொழிகளை மறைத்துள்ளார். அற்ற மறைத்தல் பெருமைக்குரிய செயல்தானே!

இங்ஙனம் உரிய இடங்களில் எல்லாம் கம்பர் தம் கருத்தைக் கூறுவதில் உறுதியுடையராகவே விளங்குகின்றார்; வான்மீகியின் சொல்லை அப்படியே பின்பற்றிச் செல்லவில்லை; என்பது அவர் தனித்தன்மையைப் புலப்படுத்துவதாகும்.

## படலப் பொருட் சிறப்பு

### இராவணன்

இராவணன் வதைப்படலம் கம்ப ராமாயணத்தில் சிறப்பு மிக்க பகுதியாகும். இப்படலத்தில் அறம் வெல்லும்; பாவம் தோற்கும்; என்ற இரு பேருண்மைகள் இராமன் சார்பாலும் இராவணன் சார்பாலும் உறுதி பெறுகின்றன. இத்திறத்தால் இப்படலம், உலக மக்களை அறநெறியில் பற்றுக்கொள்ளவும் பாவ நெறியில் வெறுப்புக்கொள்ளவும் செய்து உய்விக்கின்றது என்னலாம்.

"எனைத்துணைய ராயினு மென்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்" (திருக்குறள் 144)

என்று தெய்வப்புலவர் திருவள்ளுவனார் வினவிப் புலப்படுத்திய கருத்தை இப்படலம் நன்கு விளக்குகின்றது. 'எத்துணைப் பெருமையுடையராயினும் காம மயக்கத்தால் தம் பிழையைத் தினையளவும் ஓராது பிறனுடைய இல்லில் புகுதல் ஒருவர்க்கு யாதாய் முடியும்' என்பது இக்குறளின் பொருளாகும். இதன் விளக்கத்தில் பரிமேலழகர், இந்திரன்போல எல்லாப் பெருமையும் இழந்து சிறுமையெய்தல் நோக்கி 'என்னாம்' என்றார்' எனக் குறித்துள்ளார். இக்குறிப்பு இக்குறட்கு உயிர் போன்றது. இங்கு இந்திரனுக்குப் பதிலாக அவ்விந்திரனையும்வென்று பணிகொண்ட இராவணனைச் சேர்த்துவிட்டால் சாலப்பொருத்தமாக இருக்கும்.

இராவணன் எத்துணைப் பெருமையுடையவன்? இந்திரன் முதலிய தேவரையெல்லாம் வென்று விண்ணும் மண்ணும் பாதலமும் ஆகிய மூவுலகங்களையும் தன்னடிப்படுத்தி ஆண்டு, பேராற்றல்படைத்த ஆயிரவெள்ளம் அரக்கர்சேனையை யுடையவனாய்த் தவத்தால் பெற்ற தெய்வப்படைக்கலங்களை உடையவனாய்த் தனக்கு நிகரின்றி வாழ்ந்தவன்; இத்தகு பெரியானாகிய இராவணன் தோற்று மடிந்ததும், தம்பியையன்றித் துணையில்லாத

இராமன், —பூவுந்தளிரும் தின்னும் குரங்குகளைப் படையாகக் கூட்டிவந்த இராமன் வெற்றிபெற்றதும் எப்படி நிகழ்ந்தன? என்று எண்ணுங்கால் பெருவலி படைத்த இராவணன் தினைத் துணையும் தேராது பிறன் மனையாளாகிய சீதையை விரும்பிய பேதைமையே அவன் தோல்விக்குக் காரணமாயிற்று என்பதும், இராமனது பிறர்மனை நோக்காத பேராண்மையே அவன் வெற்றிக்குக் காரணமாயிற்று என்பதும் புலனாகும்.

இராவணனது முன்னைய பெருமையையும், பிறர் மனையை நயந்தபின் எய்திய சிறுமையையும் கதைப்போக்கில் புலப்படுத்தியதோடு போர்க்கள நிகழ்ச்சியைக்கொண்டும் கம்பர் நமக்குக் காட்டுகின்றார். இராமன் அம்பினால் இராவணன் தலைகள் அறுபடுகின்றன. அற்ற இடத்தில் மீண்டும் தலைகள் முளைக்கின்றன. அற்று நீங்கிய தலைகள் மலையிலும் அலைகடலிலும் வானிலும் கானிலுமாக வீழ்கின்றன. பின் முளைத்த புதுத் தலைகளையுடைய இராவணன் காணுமாறு அவன் அற்ற தலைகளிலுள்ள கண்களைப் பேய்கள் உண்பதற்குத் தோண்டுகின்றனவாம். இப்பேய்கள் முன்பெல்லாம் இராவணனைக் கண்டால் அஞ்சி அவனைத் தொழுது வலம்வரும் தன்மையனவாயிருந்தவைதாம். முன்பு அஞ்சித் தொழுது வலம்வரும் பேய்கட்கு இந்தத் துணிவு எப்படி வந்தது?

பொழுது நீட்டிய புண்ணியம் போனபின்
பழுது செல்லுமன் றேமற்றப் பண்பெலாம்
தொழுது சூழ்வன முன்இன்று தோன்றவே
கழுது சூன்ற இராவணன் கண்ணெலாம்.

என்று கம்பர் காரணம் கூறுகின்றார். முன்பு இராவணனைத் தொழுது சூழ்வனவாகிய கழுதுகள் இன்று அவன் கண்கட்குத் தோன்றுமாறு நின்று அவன் கண்களை எல்லாம் உண்ணுதற்குத் தோண்டின; இராவணனுக்குக் காலம் நீட்டித்துப் பயன்தந்து கொண்டிருந்த புண்ணியம் போனபின்பு, அப்புண்ணியத்தால் தோன்றியிருந்த மற்றைப் பண்புகள் எல்லாம் பழுதுபடுதல் இயல்பன்றோ? என்று வேற்றுப் பொருள்வைப்பாக ஒப்பற்ற நீதியை அமைத்துக் காரணத்தைப் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

இராவணன் செய்த பெருந்தவப்பயன் யாவும் கற்பினுக்கு அணியான சீதையைக் கவர்ந்தவுடன் முடிந்துவிட்டன.

அப் புண்ணியம் இருக்கும்போது அவனைக் கண்டவுடன் அஞ்சி வணங்கிய பேய்கள், அப் புண்ணியம் நீங்கிவிட்ட இப்போது அஞ்சாமல் அவன் கண்முன் நின்றே அவனது அற்ற தலைகளில் உள்ள கண்களைத் தோண்டுகின்றன; எனப் புண்ணியத்தின் உண்மை இன்மைகளால் உளவாகும் வேறுபாடுகளைப் போர்க்களக் காட்சியைக்கொண்டே கம்பர் காட்டியுள்ள திறனைக் காண்மின்!

### வீடணன்

இராவணன் இறந்து வீழ்ந்தபின் அவனுடைய உடம்பை உற்றுநோக்கிய இராமன், அவன் முதுகில் தழும்பு இருத்தல் கண்டு வருந்திப் 'போரில் புறங்கொடுத்த இவனை வென்ற வெற்றி பழியையே யுண்டாக்கும்' என்று கூறியபோது வீடணன் கூறும் மறுமொழி அவன் உடன்பிறப்பின்மேல் வைத்த பாச உணர்ச்சியை நன்கு புலப்படுத்துவதாக உள்ளது. இராவணன் இறந்ததும் தன் பெருமைமிக்க அண்ணன் இறந்து விட்டான் என்ற அன்புணர்ச்சியே வீடணனுக்கு மேற்பட்டுத் தோன்றுகின்றது. இராமன் இராவணனைப்பற்றிக் கூறிய இழி சொல்லைக் கேட்டவுடன் வீடணன் அடைந்த துன்பநிலையைக் கம்பர் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

அவ்வுரை யுரைப்பக் கேட்ட வீடணன் அருவிக்கண்ணன்
வெவ்வுயிர்ப் போடுநீண்ட விம்மலன் வெதும்பு நெஞ்சன்
''செவ்வியிற் றொடர்ந்த வல்ல செப்பலை! செல்வ''.

என்று வீடணன் கூறுகின்றான். இதில் வீடணன் உடம்பில் தோன்றிய மெய்ப்பாடுகளை எல்லாம் எவ்வளவு தெளிவாக முறையாக விளக்கியிருக்கின்றார் காண்மின்! யார்க்கும் புறங்கொடாது சென்ற போர்தோறும் வென்றியே புனையும் தன் அண்ணனைப் பற்றி உண்மைக்கு மாறான செய்தியைக் கூறினவன் தன்னால் வணங்கப்படும் பரம்பொருளாகிய இராமன் என்பதை நினைந்து சினம் தணிந்து பணிவும் அடக்கமும் உடையவனாய்க் கண்ணீர் வாரப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு விம்மி அழுதுகொண்டு நெஞ்சம் வெதும்பி ''செல்வ, செவ்வியில் தொடர்ந்த அல்ல செப்பலை!'' என்று வீடணன் கூறும் நிலை எத்தகைய கன்னெஞ்சையும் கனிவிக்கும் தன்மையதாக அமைந்துள்ளது.

வீடணன் இராவணனேடு மனம் வேறுபட்டு வந்தவன். இராவணனைக் கொல்லவேண்டும் என்பதில் இராமனுக்கும் வீடணனுக்கும் கருத்து வேறுபாடு இல்லை. இராவணனையும் அவன் சுற்றத்தாரையும் கொல்வதற்கு உபாயம் சொன்னவன் தான். ஆனல், இராவணன் வீழ்ந்தபின்பு அவன்பால் கொண்ட பகைமை எல்லாம் பறந்தோடிவிட்டன. உடன்பிறந்தான் என்ற பாச உணர்ச்சியே மேற்படுகின்றது. இராவணன் வீரச்சிறப்பை எல்லாம் அவனுக்குப் பகைவனுய் வேறுபட்டு வந்த வீடணன் வாயால் புகழவைக்கிருர் கம்பர். இராவணன் தவருன காதல் நோயால் வருந்தவில்லை என்ருல் அவனை வெல்ல யாராலும் இயலாது. அவன் காதல்நோயே அவனை முன் கொன்றது. பின்பு, இராமன் சினம் கொன்றது. வேறு யாரும் அவனைக் கொல்ல வல்லர் அல்லர் என்ற கருத்தை,

''தாயினுந் தொழத்தக் காள்மேல் தங்கிய காதற்றன்மை
நோயும்நின் முனிவு மல்லால் வெல்வரோ நுவலற் பாலார்''

என்ற அடிகளால் வீடணன் விளக்குகின்ருன். இராவணனது வீரப்பெருமையை இதனினும் சிறப்பாக விளக்க இயலாமை தெளிவு. அதனேடு இராமன் வீரத்தையும் உடன் விளக்கியுள்ள திறம் வீடணனது அறிவு நுட்பத்தை எடுத்துக் காட்டுவதாக உள்ளது.

இறந்து வீழ்ந்து கிடக்கும் இராவணனை வீடணன் நோக்கி அழும்பொழுது,

"அன்றுதா னுணர்ந்திலையே யானுலும்
வானுட்டை யணுகா நின்ற
இன்றுதா னுணர்ந்தனையே யிராமனு
ரியாவருக்கும் இறைவ ராதல்''

என்று கூறி அழுகின்ருன். தான் உணர்த்திய உண்மையைத் தன் அண்ணன் இறக்கும்போது உணர்ந்திருக்கவேண்டும் என்ற நம்பிக்கையினல் இங்ஙனம் கூறி அழுகின்ருன். இவன் கூறியதற்கேற்பவே இராவணன், முன்னம் இராமன்மேல் ஏவிய சூலத்தை உங்காரத்தால் உதிரச் செய்ததை நோக்கியபோது, 'அந்நாள் வீடணனர் சொல் நினைவுற்ருன்' எனக் குறிப்பிட்டு விடணன், முன்பு (மந்திரப் படலத்தில்) தனக்குக் கூறிய அறி

வுரையை நினைவுற்றதாகக் கம்பர் குறிப்பிட்டிருத்தல் காணலாம். இதனால் கம்பர்பெருமானின் நினைவாற்றல் எத்தகையது என்பதை யுணரலாம்.

வீடணன் புலம்பும்போது இன்னுமொரு சிறந்த கருத்தை வெளியிடுகின்றான். சூர்ப்பணகையின் சூழ்ச்சியால்தான் இராவணன் சீதையின்மேல் பெருங்காதல் கொண்டு இராமன் அம்பினால் இறக்க நேர்ந்தது என்பது வீடணன் கருத்தாகும். உடன் பிறந்த தங்கை இவ்வாறு செய்வாளோ? என்று யாரும் ஐயுறாத வாறு காரணத்தோடு வீடணன் கூறுகின்றான்.

"கொல்லாத மைத்துனனைக் கொன்றாயென்
றதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே யிதழதுக்கும் கொடும்பாவி
நெடும்பாரப் பகைதீர்ந் தாளோ?"

என்பது அவன் கூறும் மந்தணம். இராவணன், நிவாத கவச காலகேயரோடு போர் செய்தபோது அவர்களுள் ஒருவனாக இருந்த சூர்ப்பணகையின் கணவனை அறியாது கொன்றுவிட்டான். அதனை அறிந்த சூர்ப்பணகை அண்ணன் செய்த அடாத செயலை மனத்திற்கொண்டு பல்லினால் உதட்டைக் கடித்துப் பழி தீர்க்கும் குறிப்பைச் செய்தாள் என்பதும், அதனை வீடணன் எப்படியோ பார்த்துவிட்டான் என்பதும், அவ்வாறு பழிதீர்க்கும் எண்ணத்தினாலேயே தண்டகவனத்தில் இருந்த சீதையை இராவணனுக்காக எடுக்கச்சென்று மூக்கறுபட்டதாகப் புனைந்துகூறி அவள் அழகை வியந்து அவன் காதல் கொண்டு அவளைக் கவருமாறு செய்தாள் என்பதும் தங்கையின் சொற்படி இராவணன் கற்பினுக்கணியாய சீதையைக் கவர்ந்தமையால் இன்று இராமன் கணையால் அவன் இறக்க நேர்ந்தது என்பதும் இவ்வடிகளால் புலனாகின்றன. தான் கணவனையிழந்து துன்புற்று வாழும் போது தன் கணவனைக் கொன்றவன் மனைவியோடு மகிழ்ந்து வாழவிடலாகாது என்ற கொடுமதியினால் சூர்ப்பணகை இவ்வாறு செய்து பழிதீர்த்துக் கொண்டாள் என்ற உண்மையை வீடணன் இங்கு வெளிப்படுத்திவிட்டான்.

வீடணன் இங்குப் புலப்படுத்தியதற்கேற்பவே கம்பர், ஆரணிய காண்டத்தில் சூர்ப்பணகையை அறிமுகம் செய்யும்போது,

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கும் மொய்ம்பினள்
மேலைநா ளுயிரொடும் பிறந்து தான்வினை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனாள்.
(சூர்ப்பணகைப் - 8)

என்று கூறியுள்ளார். இராவணனை அடியோடு அழிக்கும் ஆற்றல் உடையவள் சூர்ப்பணகை என்பதும், உடன்பிறந்த நோய் காலம் பார்த்திருந்து உரிய காலம் வந்தவுடன் வெளிப்பட்டுக் கொல்லுதல்போல் இராவணனுடன் பிறந்த இவள் அவனைக் கொல்லுதற்கேற்ற காலம் பார்த்திருந்தாள் என்பதும் இப்பாடலால் புலனாகின்றன. எனவே, இராவணன் இறப்பிற்குக் காரணம் சூர்ப்பணகையே என்ற வீடணன் கருத்து உறுதியாகின்றமை காணலாம்.

## மண்டோதரி

இப்படலத்தில் மண்டோதரி புலம்புவது மிகச்சிறப்பாக அமைந்துள்ளது. நான்கு காய்ச்சீரும் இரண்டு மாச்சீருமாய் அமைந்த கழிநெடிலாசிரிய விருத்தம் மண்டோதரியின் புலம்பலைப் புலப்படுத்துவதற்கு ஏற்ற அமைப்புடையதாய் எழிலும் ஏற்றமும் பெற்று விளங்குகின்றது. ஒருமுறை படித்தோரைப் பன்முறை படிக்கச் செய்யும் பான்மையதாக ஒவ்வோர் செய்யுளும் அச் செய்யுளுள் அமைந்து பழுத்த சுவையுடைய முழுத் தமிழ்ச் சொற்களும் அமைந்துள்ளன.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலுங்கீழும்
எள்ளிருக்கும் இடமின்றி யுயிரிருக்கும்
இடம்நாடி இழைத்த வாறோ?
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையிற் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ? ஒருவன் வாளி.

என்ற செய்யுள் இராவணனுடம்பு இராமன் கணையால் எள்ளிருக்கும் இடமும் இல்லாமல் துளைபட்டிருக்கும் துன்பக் காட்சியைக்

கண்ட மண்டோதரி ஐயவினு வாய்பாட்டால் வினவுவதாக அமைந்துள்ளது. இராவணன் உயிர் அவன் உடம்பில் எங்கு ஒளித்துக்கொண்டுள்ளது என்று அது இருக்கும் இடத்தைத்தேடி இராமன் கணை இப்படித் துளை செய்ததோ? அல்லது, சீதையை இதயமாஞ் சிறையில் மறைத்து வைத்திருந்த காதல் இவ்வுடம்பினுள்தான் ஒளித்துக் கொண்டிருக்கும் என்று புகுந்து இவ்வுடம்பு முழுதும் துளைகள் உண்டாகும்வண்ணம் தேடியதோ? என்பது மண்டோதரி துன்பவுணர்வினுல் வினவும் வினுவாகும். இவ்வினுக்கள் இரண்டும் எத்துணையோ கருத்துக்களைத் தம்முள் செறித்து வைத்திருக்கின்றன. இரண்டாவதாக அமைந்த வினு மிகச்சிறப்புடைய கருத்தைக் கொண்டுள்ளது. இராவணனது உயிரை மட்டும் போக்கினுல் போதாது; அவ்வுயிரினும் நுட்பமாகிய காதலை—சீதையை அடையவேண்டும் என்ற காதலைப்—போக்குவதே சிறந்த வெற்றியாகும். இராவணன் உள்ளத்திருந்த சீதையின் காதலைப் போக்கினுலன்றித் சீதையின் கற்பு மாசற்றதாக விளங்க இயலாது. ''கற்புடைப் பெண்டிர் பிறர் நெஞ்சு புகார்'' என்பது தமிழ்நாட்டுப் பழமொழி. இம்மரபிற்கு மாருகச் சீதை இராவணனுல் விரும்பப்பெற்றுள். சூர்ப்பணகை சீதையின் பேரழகைப் புகழ்ந்து சொல்லும்போதே இராவணன் செய்த தீவினையால் அவளை அவன் நெஞ்சக்கிழியில் எழுதிக் கொண்டான்—இதயமாஞ்சிறையில் வைத்தான்—என்பதை:

''மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்னம் நீண்ட
எயிலுடை இலங்கைநாதன் இதயமாஞ் சிறையில் வைத்தான்''

என்ற அடிகளால் முன்னமே கம்பர் குறித்துள்ளார். புறத்தே அசோகவனத்துள் சீதையைச் சிறைவைப்பதற்கு முன்னமே இராவணன் தன் இதயமாஞ் சிறைபில் வைத்துவிட்டதாகக் கம்பர் திறம்படக் கூறியுள்ளார். இராவணனது உயிரைப் போக்கி அசோகவனத்தில் சிறையில் இருக்கும் சீதையை விடுவிக்க வேண்டியவன் இராமன். புறத்தேயுள்ள சிறையிலிருந்து விடுவிக்கும் முன், இராவணனது அகத்தே இதயமாஞ்சிறையிலிருந்து விடுவித்தே ஆகவேண்டும். அவன் இதயத்திலிருந்து விடுதலை செய்யவில்லையாயின், புறத்தே இருக்கும் சிறையிலிருந்து விடுவித்தும் பயனில்லை.

எனவே, இராமன்கணை இராவணனது உயிரைத் தேடிப் போக்கியதோடு அவன் உள்ளத்திருந்த சீதைமேல் வைத்த

காதலையும் போக்கியது. இராவணன் உயிரைவிடுமுன் சீதைமேல் கொண்ட காதலை விடுத்தான் என்ற இச்செய்தியைக் கற்பிற் சிறந்த மண்டோதரியின் வாக்காக அமைத்துக் காட்டிய கம்பர் திறம் உள்ளுந்தோறும் உவகையூட்டுவதாகும். சானகியை மனச் சிறையில் கரந்த காதல் உள்ளிருக்கும் எனக் கருதி உடல் புகுந்து தடவிய ஒருவன் வாளி, இராவணன் உயிரைப் போக்கியது போலவே அவன் காதலையும் போக்கியே இருக்கும் என்பது தெளிவாகும். இங்ஙனம் போக்கியதனால் இராவணனும் உயிர் நீங்கும் நிலையில் தூயன் ஆகின்றான். சீதையை நினைத்தமையினால் வந்த தீயவினைகளை எல்லாம் உணர்ந்த இராவணன், அந் நினைவை உயிர்போகும்போது விடுதல் இயலுவதேயாகும். சீதையும் பிறர் நெஞ்சு புகுந்த குற்றம் நீங்கித் தூயவளாகின்றாள். இந்த நிலையை இராமன் அம்பு உண்டாக்கியிருக்குமெனக் கற்பிற் சிறந்த மண்டோதரி கருதியது உண்மையாகும்.

இங்குக் கம்பரின் புலமைநலத்தை வியவாமல் இருக்க இயலாது. ஆரணிய காண்டத்தில் சொல்லிய கருத்தை நினைவிற் கொண்டு யுத்த காண்டத்தில் அதற்குக் கழுவாயும் அமைத்து, அதை இராவணனுடைய கற்புடை மனைவியே கூறிப் புலப்படுத்து மாறும் செய்த நுட்பம் நினைந்து நினைந்து சுவைத்தற்குரியதாகும்.

# 36. இராவணன் வதைப்படலம்

9845. ஆழியந் தடந்தேர் வீர
னேறலு மமலச் சில்லி
பூழியிற் சுரித்த தன்மை
நோக்கிய புலவர் போத
ஊழிவெங் காற்றின் வெய்ய
கலுழனை யொன்றுஞ் சொல்லார்
வாழிய வனுமன் றோளென்
றேத்தினர் மலர்க டூவி.

ஆழி அம் தடந்தேர், வீரன்
ஏறலும், அமலச் சில்லி
பூழியிற் சுரித்த தன்மை
நோக்கிய புலவர் போத,
ஊழி வெங் காற்றின் வெய்ய
கலுழனை ஒன்றும் சொல்லார்,
வாழிய அனுமன் தோளென்று
ஏத்தினர் மலர்கள் தூவி.

பொ :—வீரனாகிய இராமன் சக்கரங்களையுடைய அழகிய பெரிய தேரில் ஏறின அளவில், தூய்மையான சக்கரம் தரைப் புழுதியில் சுழன்றதன்மையைக் கண்ட தேவர்கள், ஊழிக்கடையில் வீசும் கொடிய காற்றினும் மிகக் கொடிய வேகத்தையுடைய கருடனைப்பற்றி ஒன்றும் பேசாதவராய், என்றும் வாழ்தற்குரியவனான அனுமனுடைய தோள்போன்றது என்று அத்தேரின்மேல் மலர்களைத் தூவி வாழ்த்தினார்கள்.

கு :—சில்லி — தேர்ச்சக்கரம். அமலனாகிய இராமன் ஏறிய அளவில் அத்தேரின் சக்கரம் தூய்மைபெற்றது ஆதலின் 'அதனை அமலச்சில்லி' என்றார். கனம் மிக்க இராமன் தன்மேல் ஏறியதற்கு அத்தெய்வத்தேர் சக்கரங்களின் சுழற்சியினால் தன் கிழ்ச்சியைத் தெரிவித்தது எனவும், அதை நோக்கிய தேவர்கள்

இதுகாறும் இராமனுக்கு ஊர்தியாய்த் தாங்கிய அனுமன் தோளைப் போன்று இராமனுக்குத் தக்க ஊர்தியாயது என்ற கருத்தால் 'அனுமன் தோளே இத்தேர்' என்று, மலர்களைத் தூவி வாழ்த்தி ஞர்கள் என்றவாறு. திருமாலின் ஊர்தியாகிய கலுழனைப்பற்றி இப்போது ஒன்றும் கூருததற்குக் காரணம், இராமனாகிய நிலையில் அக்கலுழன் ஊர்தியாய் நின்று தாங்கும் பேறு இல்லாதவன் என் பதேயாகும். இந்திரன் அனுப்பிய தேர் மிகப் பெரியதாக-ஆற்றல் மிக்கதாக-இருப்பினும் அனுமன் தோளைவிஞ்சிய சிறப்பினதாகாது என்ற கருத்தால் 'அனுமன் தோள்' என்று தேரினை ஏத்தலாயின ரென்க. (1)

### தேவர்கள் வாழ்த்த இராமன் தேர் செல்வது

9846. எழுகதேர் சுமக்க வெல்லோம்
வலியும்புக் கின்றே பொன்றி
விழுகபோ ரரக்கன் வெல்க
வேந்தர்க்கு வேந்தன் விம்மி
அழுகபே ரரக்கி மாரென்
ருர்த்தன ரமர ராழி
முழுகிமீ தெழுந்த தென்னச்
சென்றது மூரித் திண்டேர்.

'எழுக தேர்; சுமக்க எல்லோம்
வலியும்; புக்கு இன்றே பொன்றி
விழுக, போர் அரக்கன்; வெல்க,
வேந்தர்க்கு வேந்தன்; விம்மி
அழுக, பேர் அரக்கிமார்' என்று
ஆர்த்தனர், அமரர்; ஆழி
முழுகி மீது எழுந்தது என்னச்
சென்றது, மூரித் திண் தேர்.

பொ :— ('இராமன் ஏறிய இத்) தேர் புறப்படுவதாக! எல்லோருடைய வலிமையையும் பெறுவதாக! போரில் வலியனாகிய இராவணன் போர்க்களம் புகுந்து இன்றைக்கே இறந்து விடுவானாக! வேந்தர்க்கு வேந்தனாகிய இராமன் வெல்க! உருவத்தால் பெரிய அரக்கிமார் தேம்பி அழுவார்களாக!'

என்று தேவர்கள் கூறி ஆரவாரித்தனர்; பெரிய வலிய தேர், சக்கரம் தரையில் மூழ்கி மேலெழுந்தது என்று சொல்லுமாறு (அழுந்திய நிலையிலிருந்து கிளம்பிச்) சென்றது.

கு:—அமரர்கள் வாழ்த்தி ஆரவாரிக்க இராமன் ஏறிய தேர் புறப்பட்டது என்றவாறு. 'தேர் எழுக' என்று வாழ்த்தினவர்கள், அத்தேர்க்கு இயல்பாக அமைந்த வலிமையோடு பாவனையால் தங்கள் வலிமையையும் கொடுத்தார்கள் என்பார், 'சுமக்க எல்லோம் வலியும்' என்றார். ''மைந்த நீ கோடி யெங்கள் வாழ்க்கைநாள் யாவும் என்பார், ஐந்தவித் தரிதிற்செய்த தவமுனக்காக என்பார்; பைந்துழாய்த் தெரியலாய்க்கே நல்வினை பயக்க என்பார்,'' (அயோத்தி - கைகேயி சூழ்வினைப்- 92) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். தேர் இராமன் ஏறியபோது தரையில் அழுந்தியிருந்தநிலை மாறிப் புறப்பட்டுச் செல்லும்போது கனம் மிகுதியால் அழுந்தாமல் சென்ற நிலையைப் புலப்படுத்த 'ஆழி முழுகி மீதெழுந்ததென்னச் சென்றது' என்றார். இதனால் இராமனது மெய்வலிமையும் புலப்படுத்தியவாறு. (2)

இராவணன், தன்தேரை இராமனுக்கு எதிரே
செலுத்துமாறு பாகனுக்குக் கூறுதல்

9847. அன்னது கண்ணிற் கண்ட
வரக்கனு மமர ரீந்தார்
மன்னெடுந் தேரென் றுன்னி
வாய்மடித் தெயிறு தின்றான்
பின்னது கிடக்க வென்னாத்
தன்னுடைப் பெருந்திண் டேரை
மின்னகு வரிவிற் செங்கை
யிராமன்மேல் விடுதி யென்றான்.

அன்னது கண்ணில் கண்ட
அரக்கனும், 'அமரர் ஈந்தார்
மன் நெடுந் தேர்' என்று உன்னி,
வாய் மடித்து எயிறு தின்றான்;
பின், 'அதுகிடக்க' என்னா,
தன்னுடைப் பெருந்திண் தேரை

'மின் நகு வரிவில் செங்கை
இராமன் மேல் விடுதி' என்ருன்.

பொ :— அந்தத்தேரைக் கண்ணில் கண்ட இராவணனும், நிலைபெற்ற இந்த நெடிய தேரைத் தேவர்கள் கொடுத்தார்கள் என்று நினைந்து, (அவர்கள்மேல் பொங்கிய சினத்தால்) வாயை மடித்துப் பற்களைக் கடித்தான்; பின்பு, 'அது கிடக்கட்டும்' என்று விடுத்துத் தன்னுடைய பெரிய வலிய தேரை, 'மின்னலைப்போல ஒளி வீசுகின்ற கட்டமைந்த வில்லையேந்திய சிவந்த கையிணையுடைய இராமன் மேல் விடுக' என்று பாகனுக்குக் கூறினுன்.

கு :— தன்னேவல் கேட்டு நடந்த தேவர்கள் இப்போது நம் பகைவனுக்கு வெளிப்படையாக உதவ முன்வந்துவிட்டார்களே என்ற எண்ணத்தால், இராவணன் வாய்மடித்து எயிறு தின்னலானுன் என்க. ''தின்றிடுதல் செய்கிலமெனிற் செறுநரோடும் ஒன்றிடுவர் தேவர்'' (இராவணன் மந்திரப் — 55) என்ற கும்பகருணன் கூற்று இங்கு மெய்ம்மையாயது என்க. 'இந்திரன் இந்தத்தேரில் நின்று போர் செய்தபோது அவனை வென்ற யான் இந்தத் தேரைக் கண்டு அஞ்சுவேனோ' என்ற கருத்தால் 'அது கிடக்க' எனப் பொருட் படுத்தாமல் விடுத்தான். இராமன்மேல் என்றது, இராமன் எதிரில் என்னும் பொருளது. (3)

அஞ்சிய வானரரும் அஞ்சாது ஆரவாரித்துப் பொருதல்

9848. இரிந்தவா னரங்க ளெல்லா
மிமையவ ரிரத மீந்தார்
அரிந்தமன் வெல்லு மென்றற்
கையுற வில்லென் றஞ்சார்
திரிந்தனர் மரமுங் கல்லுஞ்
சிந்தினர் திசையோ டண்டம்
பிரிந்தன கொல்லென் றெண்ணப்
பிறந்தது முழக்கின் பெற்றி.

இரிந்த வானரங்கள் எல்லாம்,
'இமையவர் இரதம் ஈந்தார்;

அரிந்தமன் வெல்லும் என்றற்கு
ஐயுறவு இல்' என்று, அஞ்சார்,
திரிந்தனர்; மரமும் கல்லும்
சிந்தினர்; 'திசையோடு அண்டம்
பிரிந்தன கொல்!' என்று எண்ணப்
பிறந்தது, முழக்கின் பெற்றி.

பொ :—(இராவணன் தேரேறி வந்தது கண்டு) இரிந்தோடிய வானரங்கள் எல்லாம், 'தேவர்கள் தேரைக் கொடுத்திருக்கின்றார்கள்; இராமன் வெல்லுவான் என்பதற்கு ஐயுறவு இல்லை' என்று துணிந்து, அஞ்சாதவராய்த் திரிந்தனர்; அவ்விராவணன்மேல் மரங்களையும் கற்களையும் வாரிச்சிந்தினார்கள்; அவ் வானரர்களின் ஆரவாரம், 'திசையோடு அண்ட கோளம் பிளந்தன போலும்' என்று எண்ணுமாறு தோன்றினது.

கு :— அரிந்தமன்—பகைவரை வெல்ல வல்லவன்; இராமன். வானரங்கள் எல்லாம் அஞ்சாராய்த் திரிந்தனர்; மரமும் கல்லும் சிந்தினர்; முழக்கின் பெற்றி பிறந்தது என்க. அண்டம் பிரிதலாவது பிளத்தல். பெற்றி—தன்மை. அண்டகோளம் திசையோடு பிளந்தாற்போன்ற பேராரவாரம் உண்டானது என்றவாறு. (4)

### பலவகை ஆரவாரங்கள்

9849. வார்ப்பொலி முரசி னோதை
வயவர்வாய் புடைப்பி னோதை
போர்த்தொழிற் களத்து மற்றும்
முற்றிய பொம்ம லோதை
ஆர்த்தலின் யாரும் பார்வீழ்ந்
தடங்கின ரிருவ ராடற்
றேர்க்குர லோதை பொங்கச்
செவிமுற்றுஞ் செவிடு செய்ய.

வார்ப் பொலி முரசின் ஓதை,
வயவர் வாய் புடைப்பின் ஓதை,
போர்த் தொழில் களத்து மற்றும்
முற்றிய பொம்மல் ஓதை,

ஆர்த்தலின், யாரும் பார்வீழ்ந்து
அடங்கினர், இருவர் ஆடல்
தேர்க்குரல் ஓதை பொங்க,
செவிமுற்றும் செவிடு செய்ய.

பொ :— வாரினுல் பொலிவுபெற்ற முரசங்களின் ஓசையும், வீரர்களின் வாயால் உண்டாக்கும் கொக்கரிப்பு ஓசையும், போர்த்தொழில் நிகழும் களத்தில் மற்றும் நிரம்பியுள்ள மிக்க ஓசையும், இராம இராவணர் இருவரின் இயக்கமுடைய தேர்க் குரலின் ஓசையும் மிகுதியாக ஆரவாரித்தலால், யாவரும் தம் செவி முற்றும் செவிடுபடத் தரையில் வீழ்ந்து உயிர்ப்பு அடங்கி ஞர்கள்.

கு :—வாய் இதழ்களின் மோதுகையால் உண்டாக்கும் கொக் கரிப்பு ஒலியையே 'வாய் புடைப்பின் ஓசை' என்ருர். பொம்மல்- மிகுதி. ஓதை பொங்க ஆர்த்தலின் யாரும் செவி முற்றும் செவிடு செய்யப் பார்வீழ்ந்து அடங்கினர் என இயையும். அடங்குதல் என்றது, உயிர்ப்பு அடங்குதலே. (5)

இப்பாடலின் பின், 52-ஆம் பிரதியில் கீழ்வரும் மிகைப்பாடல் உள்ளது :—

9849 (a) புரந்தரன் பகைவ னுவி போக்கிய புனிதன் வென்றி
சுரந்தருள் அனுமன் நீலன் அங்கதன் சுக்கி ரீவன்
உரந்தரு வீர ராதிக் கவிப்படைத் தலைவ ருள்ளார்
பரந்திடு மரக்கன் சேனை படுத்தனர் திரிய லுற்ருர்.

இராமன் மாதலிக்குச் சில அறிவுரை பகர்தல்

9850. மாதலி வதன நோக்கி
மன்னர்த மன்னன் மைந்தன்
காதலாற் கரும மொன்று
கேட்டியாற் களித்த சிந்தை
ஏதிலன் மிகுதி யெல்லா
மியற்றிய பின்றை யென்றன்
சோதனை நோக்கிச் செய்தி
துடிக்கலை யென்னச் சொன்னுன்.

மாதலி வதனம் நோக்கி,
மன்னர்தம் மன்னன் மைந்தன்,
"காதலால் கருமம் ஒன்று
கேட்டியால்; களித்த சிந்தை
ஏதிலன் மிகுதி எல்லாம்
இயற்றிய பின்றை, என்தன்
சோதனை நோக்கிச் செய்தி;
துடிக்கலை" என்னச் சொன்னான்.

பொ :— சக்கரவர்த்தித்திருமகனாகிய இராமன், தேர்ப்பாகனாகிய மாதலியின் முகத்தைப் பார்த்து 'செய்யவேண்டிய கருமம் ஒன்றினை அன்புடன் கேட்பாயாக! களிப்பு மிக்க சிந்தையுடைய பகைவனாகிய இராவணன் தன் வீரச்செருக்கால் செய்யும் செயல் எல்லாம் செய்தபின்பு, என் தூண்டுதலை நோக்கி (தேரோட்டுத் தொழிலை)ச் செய்க! இப்பொழுது விரையாதே' என்று சொன்னான்.

கு :— இராவணனது போராரவாரத்தைக் கண்டவுடன் மாதலி உணர்ச்சிமிக்கு விரைந்து தேரோட்டும் கருத்தினனாதலை அவன் முகக்குறிப்பால் உணர்ந்த இராமன் 'துடிக்காதே! என் சோதனை நோக்கித் தேரை ஓட்டுவாயாக' என்று அறிவுரை கூறியவாறு. முன்னம் ஆரவாரம் செய்கின்ற இராவணன் பின்பு தோற்கத்தக்கவனாவான் ஆதலின், அவன்போல நாமும் ஆரவாரம் செய்து விரையலாகாது என்பதும், இராவணன் வீரச்செருக்கு எல்லாம் காட்டி அடங்கியபின் நம் வலிமையைக் காட்டுவோம் என்பதும், இராமன் கருத்தாகும். பத்துத் திசையிலும் தேரைச் செலுத்திப் பகைவரை வென்ற தயரதன் மைந்தன் இராமன் என்பதை நினைப்பித்து, அத்தயரதனைப்போலவே தேரில் நின்று போர்செய்யும் நுட்பங்களை அறிந்தவன் இராமன் என்பதைப் புலப்படுத்த, 'மன்னர்தம் மன்னன் மைந்தன்' என்றார். (6)

மாதலி அவ்வாறு செய்வேன் எனல்

9851. வள்ளனின் கருத்து மாவின்
சிந்தையு மாற்ற லார்தம்
உள்ளமு மிகையு முற்ற
குற்றமு முறுதி தானும்

கள்ளமில் காலப் பாடுங்
கருமமுங் கருதே னாகில்
தெள்ளிதென் விஞ்சை யென்றா
னமலனுஞ் செவ்வி தென்றான்.

'வள்ளல்! நின் கருத்தும், மாவின்
சிந்தையும், மாற்றலார் தம்
உள்ளமும், மிகையும், உற்ற
குற்றமும், உறுதி தானும்,
கள்ளம் இல் காலப் பாடும்,
கருமமும், கருதேன் ஆகில்,
தெள்ளிது என் விஞ்சை!' என்றான்;
அமலனும் 'செவ்விது!' என்றான்.

பொ :—(மாதலி இராமனை நோக்கி) 'வள்ளலே! நினது கருத்தையும் குதிரைகளின் உள்ளத்தையும் பகைவர் தம் மனத்தையும், நேர்ந்த மிகுதியையும், குறையையும், உறுதியையும் வஞ்சனை இல்லாது பயன் விளைக்கின்ற காலத்தின் தன்மையையும், அக்காலங்கருதிச் செய்யவேண்டிய கருமத்தையும் ஆராய்ந்து யான் என் தொழிலைச் செய்யாவிட்டால், என் தேரோட்டும் கலை மிகத் தெளிவானது' என்று மறுமொழி கூறினான்; குற்றமற்றவனான இராமனும் (அவன் கருத்தை யறிந்து) 'நல்லது' என்று கூறினான்.

கு :—உற்ற மிகையும், உற்ற குற்றமும் என உற்ற என்பதை முன்னும் இயைத்து இடைநிலை விளக்கு ஆக்குக. 'தெள்ளிதென் விஞ்சை' என்றது குறிப்புப் பொருளது; தெள்ளிதன்று என்றவாறு. விஞ்சை என்றது, தேரோட்டுங்கலையை. மாதலியின் சொல்லால் அவன் திறமையைத் தெளிந்து 'செவ்விது' என மகிழ்ந்து கூறியவாறு. மாதலியின் மறுமொழியால் தேர்ப்பாகனுக்குத் தெரியவேண்டியவை இவை என்பதை யறியலாம். தன் தலைவன் உள்ளமும் குதிரைகளின் உள்ளமும் பகைவர் உள்ளமும் விரைந்தறியும் நுண்ணறிவுடையவனாய், இருதிறத்தும் நேர்கின்ற மிகையும், குறையும், இவை இரண்டும் இல்லாத உறுதிப்பாடும் அறிந்தவனாய், தமக்கு ஆம் காலமும், பகைவர்க்கு ஆகாத காலமும் அறிந்து, காலம் வாய்த்தபோது

தப்பாது செய்யும் கருமமும் தெரிந்துசெய்ய வல்லவனே தேர்ப் பாகன் ஆதற்குரியவன் என்பது புலப்படுத்தியவாறு. (7)

இராம இராவணர்க்குப் போர்மூள
மகோதரன் விடைபெறுதல்

9852. தோன்றின னிராம னெந்தாய்
புரந்தரன் றுரகத் தேர்மேல்
ஏன்றிரு வோர்க்கும் வெம்போ
ரெய்திய திடையே யானோர்
சான்றென நிற்றல் குற்றம்
தருதியால் விடையீண் டென்ருன்
வான்ருெடர் குன்ற மன்ன
மகோதர னிலங்கை மன்னை.

'தோன்றினன் இராமன், எந்தாய்!
புரந்தரன் துரகத் தேர்மேல்;
ஏன்று இருவோர்க்கும் வெம்போர்
எய்தியது; இடையே யான்ஓர்
சான்று என நிற்றல் குற்றம்;
தருதியால் விடை ஈண்டு' என்ருன்;
வான் தொடர் குன்றம் அன்ன
மகோதரன் இலங்கை மன்னை.

பொ:—வானளாவிய குன்றத்தைப் போன்ற தோற்ற முடைய மகோதரன், இலங்கை மன்னனுகிய இராவணனை (நோக்கி,) 'எந்தையே! இராமன் இந்திரனுடைய குதிரைகள் பூட்டிய தேர்மேல் ஏறித் தோன்றியுள்ளான்; எதிர்த்துள்ள நும் இருவர்க்கும் கொடிய போர் நேர்ந்துள்ளது; (நும் மிருவர்க் கும்) நடுவே யான் ஒரு சான்று என்னுமாறு வாளா நிற்றல் குற்றமாகும்; (யான் தனியே சென்று போர்செய்ய) இங்கு விடை தருக' என்று வேண்டினன்.

கு:—மகோதரனுடைய உடற்பருமையை உணர்த்த 'வான் ருெடர் குன்ற மன்ன மகோதரன்' என்ருர். நிற்றல் குற்றம் என்னவே தனியே போர்செய்ய விடை தருதி என்பதே கருத்தா தல் புலப்படும். (8)

### இலக்குவனோடு பொருமாறு மகோதரனை ஏவுதல்

9853. அம்புய மனைய கண்ணன்
றன்னையா னரியி னேறு
தும்பியைத் தொலைத்த தென்னத்
தொலைக்குவென் றொடர்ந்து நின்ற
தம்பியைத் தடுத்தி யாயிற்
றந்தனை கொற்ற மென்றான்
வெம்பிக லரக்க னஃதே
செய்வெனென் றவனின் மீண்டான்.

'அம்புயம் அனைய கண்ணன்
தன்னை யான் அரியின் ஏறு
தும்பியைத் தொலைத்தது என்னத்
தொலைக்குவென்; தொடர்ந்து நின்ற
தம்பியைத் தடுத்தியாயின்,
தந்தனை கொற்றம்' என்றான்;
வெம்பு இகல் அரக்கன், 'அஃதே
செய்வென்' என்று, அவனின் மீண்டான்.

பொ :— செந்தாமரைமலர் போன்ற கண்ணையுடைய இராமனை, யான், ஆண் சிங்கம் யானையைத் தொலைத்தது என்னும்படி, தொலைப்பேன் ; அவனைத் தொடர்ந்து நின்ற தம்பியாகிய இலக்குவனைத் தடுத்துப் போர்செய்துகொண்டிருந்தாயாயின், எனக்கு வெற்றியைத் தந்தனை ஆவாய் என்றான், இராவணன். வெம்புகின்ற மாறுபாட்டையுடைய மகோதரனாகிய அரக்கனும், 'அதனையே செய்வேன்' என்று சொல்லிவிட்டு அவ்விராவணனிடத்திருந்து மீண்டான்.

கு :—சிங்கம் யானையை எளிதின் தொலைப்பதுபோல இராமனை யான் தொலைப்பேன் ; இலக்குவனை மட்டும் இராமனைத் தொடராமல் தடுத்துநிறுத்தினால் எனக்கு வெற்றியைத் தந்தவனாவாய் என மகோதரனை இராவணன் இலக்குவன்மேல் ஏவியவாறு. இதனால் இலக்குவன் இராமனோடு சேர்ந்துகொண்டால் வெல்வது அரிது என இராவணன் எண்ணினமை புலப்படும். பகையுள்ளத்திற்கும் இராமனுடைய பேரழகுள்ள கண்கள் இன்பத்தை ஊட்டு

கின்றது ஆதலின், இராமனை இராவணன் 'அம்புயம் அனைய கண்ணன்' எனப் புகழ்ந்து கூறுவானானான். தும்பி — யானை. என்றான் வெம்பிகலரக்கன் என இயைத்து, அரக்கன் என்றது இராவணனை என உரைப்பினும் ஆம். (9)

9854. மீண்டவ னிளவ னின்ற
பாணியின் விலங்கா முன்னம்
ஆண்டகை தெய்வத் திண்டே
ரணுகிய தணுகுங் காலை
மூண்டெழு வெகுளி யோடு
மகோதரன் முனிந்து முட்டத்
தூண்டுதி தேரை யென்றான்
சாரதி தொழுது சொல்வான்.

மீண்டவன் இளவல் நின்ற
பாணியின் விலங்கா முன்னம்,
ஆண்தகை தெய்வத் திண்தேர்
அணுகியது; அணுகுங் காலை,
மூண்டு எழு வெகுளியோடும்,
மகோதரன் முனிந்து, 'முட்டத்
தூண்டுதி தேரை' என்றான்;
சாரதி தொழுது சொல்வான்.

பொ :—அவ்வாறு மீண்டவனாகிய மகோதரன், இலக்குவன் நின்ற இடத்தைச் சேர்வதற்குமுன்னமே ஆண்தன்மைமிக்க இராமன் ஏறிய தெய்வத்தன்மைவாய்ந்த திண்ணிய தேர் நெருங்கியது; நெருங்கும்போது, மூண்டு எழுகின்ற கோபத்தோடும் மகோதரன் வெறுத்து, 'அந்தத் தேரை முட்டுமாறு நம் தேரைத் தூண்டுவாயாக' என்று சாரதியை நோக்கிச் சொன்னான்; அது கேட்ட சாரதி அவனைத் தொழுது சொல்வானானான்.

கு:—ஆண்டகை என்றது, இராமனை. இராவணனை நோக்கிச் செல்லும் இராமன் தேரை இடையிற்கண்ட மகோதரன், உள்ளத்தில் எழுந்த வெகுளியால் வெறுப்புக்கொண்டு, தன் பாகனை நோக்கி அந்தத் தேரை முட்டுமாறு தன் தேரைத் தூண்டச்

சொன்னான்; அவன் சொல்லைக் கேட்ட சாரதி பின்வருமாறு சொல்வானானான் என்க. முனிந்து — வெறுத்து. (10)

சாரதி, அப்பாற்சேறலே கருமம் எனல்

9855. எண்ணருங் கோடி வெங்க
ணிராவண ரேயு மின்று
நண்ணிய பொழுது மீண்டு
நடப்பரோ கிடப்ப தல்லால்
அண்ணறன் ரேற்றங் கண்டா
லையநீ கமல மன்ன
கண்ணனை யொழிய வப்பாற்
போதலே கரும மென்றான்.

'எண் அருங்கோடி வெங்கண்
இராவணரேயும், இன்று
நண்ணிய பொழுது மீண்டு
நடப்பரோ, கிடப்பது அல்லால்?
அண்ணல்தன் தோற்றம் கண்டால்,
ஐய! நீ கமலம் அன்ன
கண்ணனை ஒழிய, அப்பால்
போதலே கருமம்' என்றான்.

பொ :— பெருமைமிக்க இராமனது தோற்றத்தைக் கண்டால், (இவ்விராவணனே அன்றி) எண்ணுதற்கு அரிய கோடிக்கணக்கான கொடுங்கண்களையுடைய இராவணர்கள் வந்தார் ஆயினும் இன்று, அவன்முன் கிட்டிய பொழுது, இறந்து கிடப்பாரே அல்லால் வென்று மீண்டு செல்ல வல்லரோ? 'ஐய! நீ, கமலமலர் போன்ற கண்களையுடையவனான இராமனை விட்டு அப்பாற்போதலே செய்யத்தக்கசெயல்' என்று சாரதி கூறினான்.

கு :— இராமன் அம்பு எய்ய வேண்டுமென்பதில்லை. அவன் தோற்றத்தைக் கண்டாலே எண்ணருங்கோடி இராவணர்கள் வந்தாலும் அச்சத்தால் உயிரிழந்து வீழ்வர் என்பதும், அவ்

விராமனை விடுத்து அப்பாற்போதலே நல்லது என்பதும் சாரதியின் அறிவுரை. (11)

*மகோதரன் இராமனொடு பொருதல் 9856 - 9858*

9856. என்றலு மெயிற்றுப் பேழ்வாய்
மடித்தடா வெடுத்து நின்னைத்
தின்றனெ னெனினு முண்டாம்
பழியெனச் சீற்றம் சிந்தும்
குன்றன தோற்றத் தான்றன்
கொடிநெடுந் தேரி னேரே
சென்றதவ் விராமன் றிண்டேர்
விளைந்தது திமிலத் திண்போர்.

என்றலும், எயிற்றுப் பேழ்வாய்
மடித்து, 'அடா! எடுத்து நின்னைத்
தின்றனென் எனினும் உண்டாம்
பழி' என, சீற்றம் சிந்தும்
குன்று அன தோற்றத்தான்தன்
கொடி நெடுந் தேரின் நேரே
சென்றது, அவ் இராமன் திண் தேர்;
விளைந்தது திமிலத் திண்போர்.

பொ :— என்று பாகன் கூறியவுடன், (மகோதரன் சினக் குறிப்பால்) வளைந்த பல் தோன்றுகின்ற பிளந்த வாயை மடித்து 'அடா! (இவ்வாறு கூறிய) உன்னை எடுத்துத் தின்றேன் என்றாலும் பழியுண்டாகும்' எனச் சொல்லிச் சீற்றத்தைச் சிந்துகின்ற குன்றுபோன்ற தோற்றமுடைய அம் மகோதரனது கொடிகள் கட்டியுள்ள நெடிய தேரின் எதிரே, அந்த இராமனது திண்ணியதேர் சென்றது; (உடனே அவ் விருவர்க்கும்) பேரொலியோடுங்கூடிய வலிய போர் விளைந்தது.

கு :— பேழ் வாய் - பிளந்தாற்போன்ற வாய். அரக்கனாகலின் வாயின் இருபுறத்தும் வளைந்த பற்கள் வெளியில் தோன்றின என்பார், 'எயிற்றுப் பேழ்வாய்' என்றார். பாகனைத் தின்றான்

என்று உலகம் பழிகூறும் என்பான், 'உண்டாம் பழி' என்று கூறினான். மகோதரன் தேர்ப்பாகனோடு வெகுண்டு பேசிக் கொண்டிருக்கும் நிலையில் இராமனது தேர் எதிரில் வர இருவர்க்கும் பெரும்போர் நிகழ்ந்தது என்க. (12)

9857. பொற்றடந் தேரு மாவும்
பூட்கையும் புலவு வாட்கைக்
கற்றடந் திண்டோ ளாளு
நெருங்கிய கடல்க ளெல்லாம்
வற்றின விராமன் வாளி
வடவனல் பருக வன்றாள்
ஒற்றை வன்றடந்தே ரோடு
மகோதர னொருவன் சென்றான்.

பொன் தடந் தேரும், மாவும்,
பூட்கையும், புலவு வாள் கைக்
கல் தடந் திண்தோள் ஆளும்,
நெருங்கிய கடல்கள் எல்லாம்
வற்றின, இராமன் வாளி
வட அனல் பருக; வன் தாள்
ஒற்றை வன் தடந் தேரோடும்
மகோதரன் ஒருவன் சென்றான்.

பொ:— பொன்னாலியன்ற பெரிய தேர்களும், குதிரை களும், யானைகளும், புலால் வீசுகின்ற வாளையேந்திய கையினையும் மலைபோன்ற திண்ணிய தோளினையும் உடைய காலாட்களும், ஆக நெருங்கிய சேனைக்கடல்கள் எல்லாம், இராமனது அம்பாகிய வடவைக்கனல் பருகியதால் வற்றின; மகோதரன் ஒருவன்மட்டும் வலிய சக்கரத்தையுடைய வன்மை மிக்க பெரிய ஒற்றைத்தேரோடு சென்றான்.

கு:— பூட்கை - யானை; புழையோடு கூடிய துதிக்கை யுடைமையால் யானை பூட்கை எனப்பட்டது. புலவுநாறும்வாள் என்றது, பகைவரைக் கொன்று பழகிய வாள் என்னும் கருத்தினது. நால்வகைப் படைகளையும் கடல்களாக உருவகஞ்

செய்ததற்கேற்ப இராமனது அம்பினை வடவைக் கனலாக உருவகம் செய்தவாறு. ஊழிக்கடையில் வடவைக்கனலால் கடல்நீர் வற்றுவதுண்டு. தன்னோடுவந்த நால்வகைப் படையும் அழியவே மகோதரன் ஒருவனே செல்ல நேர்ந்தது. (13)

9858. அசனியே றிருந்த கொற்றக்
கொடியின்மே லரவத் தேர்மேல்
குசையுறு பாகன் றன்மேற்
கொற்றவன் குவவுத் தோண்மேல்
விசையுறு பகழி மாரி
வித்தினன் விண்ணி னோடும்
திசைகளுங் கிழிய வார்த்தான்
றீர்த்தனு முறுவல் செய்தான்.

அசனி ஏறு இருந்த கொற்றக்
கொடியின்மேல், அரவத் தேர்மேல்,
குசை உறு பாகன் தன்மேல்,
கொற்றவன் குவவுத் தோள்மேல்,
விசை உறு பகழி மாரி
வித்தினன்; விண்ணினோடும்
திசைகளும் கிழிய ஆர்த்தான்;
தீர்த்தனும், முறுவல் செய்தான்.

பொ :— (இந்திரனது கொடியான) இடியேறு இருந்த வெற்றிக்கொடியின்மேலும், ஒலியையுடைய இராமன் ஏறியிருந்த தேரின்மேலும், கடிவாளம் தாங்கிய பாகனாகிய மாதலியின் மேலும், வெற்றிவீரனாகிய இராமனது திரண்ட தோளின் மேலும் விரைந்து செல்கின்ற அம்புமழையை ஏவினவனாய் விண்ணினோடு திசைகளும் கிழியுமாறு (மகோதரன்) ஆரவாரித்தான்; தூயவனாகிய இராமனும் அதுகண்டு புன்முறுவல் செய்தான்.

கு :-இராமன் ஏறியிருந்த தேர், இந்திரனுக்கு உரியதாகலின், அவன் கொடியாகிய இடிக்கொடி கட்டப்பட்டிருந்தது. அரவம்— ஒலி. குசை — கடிவாளம். குவவு — திரட்சி. அம்புகளை விடுத்து அழிவேதும் விளைக்காமல் இருக்கவும் மகோதரன் ஆரவாரம்

பெரிதாக இருத்தல் கண்டு இராமனுக்கு இகழ்ச்சிக்குறிப்பால் முறுவல் தோன்றிற்று என்க. 'தீர்த்தனும் முறுவல் செய்தான்' என்றமையால், மகோதரன் பெய்த பகழிமாரி பயன் விளைவிக்க வில்லை என்பது புலனாகும். (14)

### இராமன் மகோதரனைச் சிதைத்தது

9859. வில்லொன்றாற் கவச மொன்றால்
விறலுடைக் கரமோ ரொன்றால்
கல்லொன்று தோளுந் தாளு
மொன்றொன்றால் கழுத்து மொன்றால்
செல்லொன்று கணைக ளையன்
சிந்தினன் செப்பி வந்த
சொல்லொன்றாய்ச் செய்கை யொன்றாய்த்
துணிந்தன னரக்கன் றுஞ்சி.

வில் ஒன்றால், கவசம் ஒன்றால்,
விறலுடைக் கரம் ஓர் ஒன்றால்,
கல் ஒன்று தோளும் தாளும்
ஒன்றொன்றால், கழுத்தும் ஒன்றால்,
செல் ஒன்று கணைகள் ஐயன்
சிந்தினன்; செப்பி வந்த
சொல் ஒன்றாய்ச் செய்கை ஒன்றாய்த்
துணிந்தனன், அரக்கன் துஞ்சி.

பொ :—ஐயனாகிய இராமன் தன் இடியை ஒத்த கணைகளை வில்லினின்று சிந்தினான்; (சிந்தின அளவில்) அரக்கனாகிய மகோதரன், தன் வில், ஒரு கணையாலும், கவசம், ஒரு கணை யாலும், வெற்றியுடைய கைகள், ஒவ்வோர் கணையாலும், மலை போன்ற தோளும், காலும் ஒவ்வொரு கணையாலும், கழுத்தும் ஒரு கணையாலும் துணிப்புண்டவனாய்த் தான் சொல்லிவந்த சொல் ஒருவகையாகவும் செய்கை வேறொருவகையாகவும் முடிய இறந்துபட்டான்.

கு :—துணிந்தனன் அரக்கன் துஞ்சி என்றாராயினும் அரக்கன் துணிந்து துஞ்சினன் என்பது கருத்தாகக் கொள்க. ஐயன்

செல்லொன்று கணைகள் சிந்தினன்; அரக்கன் வில்லொன்ருல், கவசம் ஒன்ருல்......கழுத்தும் ஒன்ருல் துணிந்து, சொல்லொன்ருய்ச் செய்கை ஒன்ருய்த் துஞ்சினன் என இயையும். மகோதரனை ஒரு பொருளாக மதியாமல் இராமன் தன் கணைகள் சிலவற்றைச் சிந்தினுஞக, மகோதரன் தன் வில் முதலியன ஒவ்வொரு கணையால் துணிப்புண்டு துஞ்சினன் என்க. (15)

*மகோதரன் மாண்டதை அறிந்து இராவணன் இராமனேடு போர்செய்ய விரைதல்*

9860. மோதரன் முடிந்த வண்ண
மூவகை யுலகு முற்றும்
மாதிரத் தோடும் வென்ற
வன்ருெழி லரக்கன் கண்டான்
சேதனை யுண்ணக் கண்டான்
செலவிடு செலவி டென்ருன்
சூதனு முடுகித் தூண்டச்
சென்றது துரகத் திண்டேர்.

மோதரன் முடிந்த வண்ணம்,
மூவகை உலகு முற்றும்
மாதிரத்தோடும் வென்ற
வன்தொழில் அரக்கன் கண்டான்,
சேதனை உண்ணக் கண்டான்;
'செலவிடு, செலவிடு!' என்ருன்;
சூதனும் முடுகித் தூண்ட,
சென்றது, துரகத் திண்தேர்.

பொ:— மகோதரன் வாழ்வு முடிந்த தன்மையை, திசைகளோடு மூவுலகங்களையும் வென்ற வலிய செயலையுடைய இராவணன் கண்டான்; (அம் மகோதரன் உடம்பு பல) துண்டங்களானதையும் கண்டான்; (இராமனிடம்) செல்லவிடு! செல்லவிடு! என்று விரைவுபடுத்தினுஞக, பாகனும் விரைந்து குதிரைகளைத் தூண்ட, குதிரைகள் பூட்டிய அத்தேர், இராமன் எதிர்சென்றது.

கு :—மகோதரன் என்ற பெயர் மோதரன் என மருவியது. சேதனை— பிளவு. சேதனையுண்ணுதல்—பிளவுபடுதல். மகோதரன் கை வேறு கால் வேறு தலை வேருகப் பிளவுற்ருன் என்பதைக் கண்டான் என்க. செல்லவிடு என்பது விரைவுபற்றி இருமுறை அடுக்கி வந்தது. சூதன் — தேர்ப்பாகன். (16)

இராவணனது சேனையை இராமன் அழித்தல்

9861. பனிப்படா நின்ற தென்னப்
பரக்கின்ற சேனை பாறித்
தனிப்படா னுகி லுள்ளந்
தாழ்கில னென்னுந் தன்மை
நுனிப்படா நின்ற வீர
னவனென்று நோக்கா வண்ணம்
குனிப்படா நின்ற வில்லா
லொல்லையி னூறிக் கொன்ருன்.

பனிப்படா நின்றது என்னப்
பரக்கின்ற சேனை பாறித்
தனிப்படான் ஆகில் உள்ளம்
தாழ்கிலன் என்னும் தன்மை
நுனிப்படா நின்ற வீரன்,
அவன் ஒன்றும் நோக்கா வண்ணம்
குனிப்படா நின்ற வில்லால்,
ஒல்லையின் நூறிக் கொன்ருன்.

பொ :—பனி மூடி நின்றது என்னுமாறு பரவியுள்ள தன் சேனை முழுமையும் சிதறுண்டு தான் தனிமைப்படான் ஆயின் (இராவணன்) ஊக்கம் குறையமாட்டான் என்னும் கொள்கையால், தலையாக நின்ற வீரனுகிய இராமன், அவ்விராவணன் சிறிதும் காண முடியாதபடி வளைந்து நின்ற வில்லால் விரைவாக அச்சேனை முழுமையையும் பொடியாக்கிக் கொன்ருன்.

கு :—அரக்கர் சேனை பரவியுள்ள தன்மைக்கு மூடுபனியை உவமை கூறியவாறு. படுதல் — தோன்றுதல். இனி, படுதல், அழிதல் எனக் கொண்டு, சேனைபாறுதற்கு உவமையாக்குவாரு

முளர். உள்ளம் — ஊக்கம். இராவணன் ஊக்கத்தைக் குறைத்தால் பின்பு கொல்லுதல் எளிதாகும் ஆதலின், அவன் ஊக்கங் குறையுமாறு அவன் சேனையைப் பொடியாக்கினுன் என்க. நுனிப்படுதல் என்பது வீரர்களுள் நுனியாக — தலைமையாக நிற்றல். குனிப்படுதல் — வளைதல். விற்போரின் விரைவு புலப்பட 'அவனென்றும் நோக்காவண்ணம் ஒல்லையின் நூறிக்கொன்ருன்' என்ருர். நூறுதல் — பொடியாக்குதல். (17)

இப்பாடலின் பின், 52ஆம் பிரதியில் கீழ்வரும்
மிகைப்பாடல்கள் உள்ளன:—

9861(a) வரம்படைத் துயர்ந்தவன்போர் வயப்படைத் தலைவரோடு
நிரம்பிய வெள்ளச்சேனை நிருதரும் களிறும் தேரும்
மரம்படர் கானில் தீப்போல் வள்ளல்தன் பகழி மாரி
பொரும்படி உடல்கள் சிந்திப் பொன்றின ரெவரு மம்மா.

9861 (b) பொங்கிய குருதிவெள்ளம் பொலிந்தெழு கடலில் போகத்
தங்கிய பிணத்தின் குப்பை தடுத்தது சமரபூமி
எங்கணும் கவந்த மாட வெய்தியங் கரக்கிமார்கள்
தங்கள்தங் கணவர்ப் பற்றித் தம்முடல் தாங்கள் நீத்தார்.

9861 (c) எழுப்படை வெள்ள மெல்லாம்
இரண்டொரு கடிகை தன்னில்
களம்படக் கமலக் கண்ணன்
கடுங்கனல் பகழி மாரி
வளம்படச் சிலையில் கோலிப்
பொழிந்தவை மடித்தான் கண்டாங்
குளங்கனல் கொளுந்த தேரி
னுருத்தெதிர் அரக்கன் வந்தான்.

## இராவணனுக்கு இடத்தோள்கள் துடித்தல்

9862. அடல்வலி யரக்கற் கப்போ
தண்டங்க ளழுந்த மண்டும்
கடல்களும் வற்ற வெற்றிக்
கால்கிளர்ந் துடற்றுங் காலை

வடவரை முதல வான
மலைக்குலஞ் சலிப்ப மானச்
சுடர்மணி வலயஞ் சிந்தத்
துடித்தன விடத்த பொற்றோள்.

அடல்வலி அரக்கற்கு அப்போது,
அண்டங்கள் அழுந்த, மண்டும்
கடல்களும் வற்ற, எற்றிக்
கால் கிளர்ந்து உடற்றுங் காலை,
வடவரை முதல ஆன
மலைக்குலம் சலிப்ப மான,
சுடர் மணி வலயம் சிந்தத்
துடித்தன, இடத்த பொன் தோள்.

பொ :— அப்போது, மிக்கவலிமையுடைய இராவணனுக்கு, அண்டங்கள் முழுகி அழுந்துமாறு அவற்றினுள்ளே பொங்கி யெழுகின்ற கடல்களும் வற்றுமாறு மோதி ஊழிக் காற்றுக் கிளர்ந்து எழுந்து வீசும்போது மேருமலை முதலிய மலைக்கூட்டம் அசைவன போல, இடப்பக்கம் உள்ள அழகிய பத்துத் தோள் களும், ஒளிவாய்ந்த மணிகள் பதித்த வாகுவலயங்களும் சிந்து மாறு துடித்தன.

கு :— இராவணனுடைய இடத்தோள்கள் பத்தும் தீய நிமித்தமாகத் துடித்தன என்றவாறு. தோள்களின் பருமையும் துடிப்பின் கடுமையும் புலப்படுத்த, மேருமலை முதலான மலை கள் ஊழிக்காற்றால் நடுங்குவன போலத் துடித்தன என்றார். எற்றுதல் - மோதுதல். காற்றின் கடுமையால் கடல்களும் வற்றின என்றவாறு. தோள்களின் துடிப்பு மிகுதியால் அத்தோள்களில் அணிந்த வாகுவலயங்களும் அற்றுச் சிதறின என்க. (18)

*தீ நிமித்தங்கள் 9863—9865*

9863. உதிர மாரி சொரிந்த துலகெலாம்
அதிர வான மிடித்த தருவரை

பிதிர வீழ்ந்த தசனி யொளிபெருக்
கதிர வன்றனை யூருங் கலந்ததால்.

உதிர மாரி சொரிந்தது உலகு எலாம்;
அதிர வானம் இடித்தது; அருவரை
பிதிர வீழ்ந்தது, அசனி; ஒளிபெருக்
கதிரவன் தனை ஊரும் கலந்ததால்.

பெ:— இரத்த மழை உலகமுழுவதும் பெய்தது; மேகம் இன்றி வானம் அதிர்ச்சியுண்டாக இடித்தது; பெரிய மலைகள் பொடிப்பொடியாய் உதிருமாறு இடி வீழ்ந்தது; ஒளி மழுங்கி யுள்ள சூரியனைப் பரிவேடமும் சுற்றியது.

கு:— முன்னைச் செய்யுளில் இடத்தோள்கள் துடித்தமை கூறி, இச்செய்யுளில் பிற தீய நிமித்தங்களைக் கூறுகின்றார். மேகம் இல்லாமல் வெறும் வானம் இடிப்பது தீய நிமித்த மாகும். ''தடியுடைய முகிற்குல மின்றித் தாவில் வான் வெடி பட வதிருமால்'' (சுந்தர - காட்சிப் - 43) என, முன்பு சீதைக்குத் திரிசடை கூறியுள்ளதும் நினைக. சூரியன் ஒளி மழுங்கிக் காணப்பட்டான் என்பார் 'ஒளிபெருக்கதிரவன்' என்றார். ஊர் என்றது ஊர்கோளை. (19)

9864. வாவும் வாசிக டூங்கின வாங்கலில்
ஏவும் வெஞ்சிலை நாணிடை யிற்றன
நாவும் வாயு முலர்ந்தன நாண்மலர்ப்
பூவின் மாலை புலால்வெறி பூத்ததால்.

வாவும் வாசிகள் தூங்கின; வாங்கல் இல்
ஏவும் வெஞ்சிலை நாண் இடை இற்றன;
நாவும் வாயும் உலர்ந்தன; நாள் மலர்ப்
பூவின் மாலை புலால் வெறி பூத்ததால்.

பொ:— தாவிச் செல்லும் குதிரைகள் செயலிழந்து தூங்கின; அம்பு ஏவுதற்குரிய, வளைக்காத, கொடிய வில்லின் நாண்கள் நடுவே இற்றுப்போயின; (அரக்கர்களின்) நாவும் வாயும் நீர்ப்பசையின்றி உலர்ந்தன; அன்று அலர்ந்த மலர் களால் தொடுக்கப்பெற்ற பூமாலை புலால் நாற்றம் வீசியது.

கு :— குதிரைகள் ஊக்கங் குன்றித் தூங்குதல் துன்னிமித்தமாகும். வாங்குதல் - வளைத்தல். வில், வளைக்கப்படாத நிலையிலே நாண் அறுப்புண்டதும், காரணமின்றி நாவும் வாயும் உலர்ந்ததும், நறுமணம் வீசுதற்குரிய பூமாலை புலால் கமழ்ந்ததும், பின்வரும் பெருந்துன்பத்தை முன்னறிவித்தன வாயின. வெறி - மணம். பூத்தல் இங்கு வீசுவதை யுணர்த்தியது. (20)

9865. எழுது வீணைகொ டேந்துப தாகைமேல்
கழுகுங் காகமு மொய்த்தன கண்கணீர்
ஒழுகு கின்றன வோடிக லாடன்மாத்
தொழுவி னின்றன போன்றன சூழிமா.

எழுது வீணை கொடு ஏந்து பதாகைமேல்
கழுகும் காகமும் மொய்த்தன; கண்கள் நீர்
ஒழுகுகின்றன, ஓடு இகல் ஆடல் மா;
தொழுவில் நின்றன போன்றன, சூழிமா.

பொ :— எழுதப்பெற்ற வீணையைக் கொண்டு உயர்ந்து பறக்கும் கொடியின்மேல் கழுகும் காகமும் மொய்த்துக் கொண்டுள்ளன; ஓடும் இயல்பினவான மிக்க வலிமையுடைய குதிரைகளின் கண்களில் நீர் ஒழுகுகின்றன; முகப்பட்டத்தை யுடைய யானைகள் தொழுவில் அடைக்கப்பட்டனபோல் ஊக்கங்குன்றி நின்றன.

கு :— பதாகை - கொடி. வீணைக்கொடி இராவணனுக்கு உரியது; அக்கொடியின்மேல் கழுகும் காகமும் மொய்ப்பது இராவணனின் அழிவைக் காட்டுவதாகும். ஆடல், அடல் என்பதன் நீட்டல் விகாரம். இகல், அடல் என்பன, மீமிசைச் சொல்லாய் வலிமை மிகுதியை யுணர்த்தி நின்றன. அடல்மாவின் கண்கள் நீர்சொரிவது அழுகையின் குறியாய்த் தீ நிமித்தம் ஆயது. தொழு - காட்டு விலங்குகளை அடைத்து வைக்கும் கொட்டில். போர் விருப்பம் இன்றி யானைகள் துன்புற்றிருப்பது, தொழுவில் அகப்பட்ட யானை போன்றிருந்தது என்றவாறு. சூழி - முகப்பட்டம். (21)

## இராவணன் இத் துன்னிமித்தங்களை மதியாமை

9866. இன்ன வாகி
யிமையவர்க் கின்பஞ்செய்
துன்னி மித்தங்க
டோன்றின தோன்றவும்
அன்ன தொன்று
மறிந்தில ஞற்றுமோ
என்னை வெல்ல
மனித்தனென் றெண்ணுவான்.

இன்ன ஆகி
இமையவர்க்கு இன்பம் செய்
துன் நிமித்தங்கள்
தோன்றின ; தோன்றவும்
அன்னது ஒன்றும்
அறிந்திலன், 'ஆற்றுமோ,
என்னை வெல்ல
மனித்தன்?' என்று எண்ணுவான்.

பொ :— இத்தன்மையினவாகித் தேவர்கட்கு இன்பஞ் செய்கின்ற துன்னிமித்தங்கள் (இராவணனுக்குத்) தோன்றின; அவ்வாறு தோன்றவும், 'என்னை மனிதனாகிய இராமன் வெல்ல மாட்டுவனோ?' என்று எண்ணுகின்றவனாகிய இராவணன், அந்தத் தீ நிமித்தம் ஒன்றையும் பொருட்படுத்தாதவன் ஆனான்.

கு :— தனக்குத் துன்பம் விளைப்பனவான துன் னிமித்தங்களே தன்பகைவராகிய இமையவர்க்கு இன்பம் விளைப் பன ஆதல்தோன்ற, 'இமையவர்க்கு இன்பஞ்செய் துன் னிமித்தங்கள்' எனச் சிறப்பித்தார். மனிதன் தன்னை வெல்ல இயலாது என்று எண்ணி இறுமாப்பவன் இராவணன் ஆதலின், தன்முன் நிகழ்கின்ற இத்தீய சகுனங்களைப் பொருட்படுத்தாத வனானான் என்றவாறு. அறிந்திலன் என்றது, மதித்திலன் என்னும் பொருளது, ''பெறுமவற்றுள் யாமறிவதில்லை''

(குறள்-61) என்புழிப்போல. தமக்கு மாருகத் தோன்றும் நிமித்தங்களை மதியாமல் போர்க்குச் சென்று வெற்றி பெறுவது வீரர்க்கு இயல்பு. இந்தத் துணிவான செயலுக்குப் 'பிள்ளைப் பெயர்ச்சி' என்று பெயர் கொடுப்பர். ''போர்தாங்கிப்புள் விலங்கியோனைத் தார் வேந்தன் தலையளித்தன்று'' (புறப் பொருள் வெண்பாமாலை. கரந்தைப் - 33) என்றது காண்க. எண்ணுவான், அன்ன தொன்றும் அறிந்திலன் என இயையும். எண்ணுவான், வினைப் பெயர். (22)

இராவணன் தேர்வர வானரர் இருபாலும் ஒதுங்கி ஓடுதல்

9867. வீங்கு தேர்செலும் வேகத்து வேலைநீர்
ஓங்கு நாளி னொதுங்கு முலகுபோல்
தாங்க லாற்ற கிலார்தடு மாறித்தாம்
நீங்கி னாரிரு பாலு நெருங்கினர்.

வீங்கு தேர் செலும் வேகத்து, வேலை நீர்
ஓங்கு நாளின் ஒதுங்கும் உலகுபோல்,
தாங்கல் ஆற்றகிலார், தடுமாறித் தாம்
நீங்கினர், இருபாலும் நெருங்கினர்.

பொ :—கடல்நீர் பொங்கிவரும் நாளில் அந்நீர்ப் பெருக்கிற்கு அஞ்சி ஒதுங்கி வேறிடத்திற்கு ஓடும் உலகத்தவர்போல, இராவணனது பெரிய தேர் செல்லும் வேகத்தினல், அங்கு நெருங்கியிருந்த வானரவீரர்கள், தாங்க முடியாதவர்களாய்த் தடுமாற்றங் கொண்டு இரு பக்கங்களிலும் விலகி ஓடினர்கள்.

கு :—வீங்கு தேர் —பருத்துள்ள தேர். இனி, வீங்கு வேகம் என இயைத்து, மிக்க வேகத்தால் எனப் பொருள் கூறலும் ஆம். கடல் பொங்கி ஊரில் நுழையும் நாளில், ஊரவர் அக்கடல்நீரின் வேகத்திற்கு ஆற்ருதவராய் ஒதுங்கி ஓடுதல்போல, இராவணனது தேரின் வேகத்திற்கு ஆற்ருத வானரவீரர் இருபுறத்தும் ஒதுங்கி ஓடினர் என்க. நெருங்கினர்தாம் தாங்கலாற்றகிலராய்த் தடு மாறி இருபாலும் நீங்கினர் என இயையும். தேரின் இருபுறத்து நீங்கினர் என்க. (23)

## இராமனும் இராவணனும் எதிர்க்கும் தோற்றம் 9868–9871

9868. கரும முங்கடைக் கண்ணுறு ஞானமும்
அருமை சேரு மறிவு மவிச்சையும்
பெருமை சால்கொடும் பாவமும் பேர்கலாத்
தரும மும்மெனச் சென்றெதிர் தாக்கினர்.

கருமமும் கடைக்கண் உறும் ஞானமும்
அருமை சேரும் அறிவும் அவிச்சையும்,
பெருமைசால் கொடும் பாவமும் பேர்கலாத்
தருமமும், எனச் சென்று எதிர் தாக்கினர்.

பொ :—வினையும் நானெறியில் கடைசியில் உள்ள ஞானமும், அருமை பொருந்திய அறிவும் அறியாமையும், கொடிய பாவமும், பெருமைமிக்கதாய் நிலை திரியாத தருமமும்போல இராமனும் இராவணனும் எதிர்நின்று போர் செய்தனர்.

கு :—கருமமும், அவிச்சையும், கொடும் பாவமும் இராவணனுக்கும், ஞானமும், அறிவும், தருமமும் இராமனுக்கும் உவமைகளாயின. ஞானம் என்றது மெய்யுணர்தலாகிய தத்துவ ஞானத்தை. தத்துவஞானத்தின்முன் வினையும் அறிவிற்குமுன் அறியாமையும் தருமத்திற்குமுன் பாவமும் அழிதல்போல இராமனுக்கு முன் இராவணன் அழிதல் திண்ணம் என்பதை உவமையினால் விளக்கியவாறு. இவ்வுவமையால் இராவணன் வினையையே பெரிதென மதிக்கின்றவன், அறிவிலி, கொடும்பாவி என்பதும், இராமன், தத்துவஞானி, அறிவன், அறவோன் என்பதும் புலப்படுத்தியவாறு. நால்வகை நெறியாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றுள் ஞானம் படிமுறையாக இறுதியில் பெறுதற்குரியதாகலின் 'கடைக்கண் உறுஞானமும்' என்று சிறப்பித்தார். அவிச்சை — அஞ்ஞானம்; அறியாமை. பெருமைசால் தருமம், பேர்கலாத் தருமம் எனத் தனித்தனி இயையும். கொடும்பாவத்திற்குப் பெருமைசால் என்ற அடை ஏலாமையின் தருமத்தோடு சேர்க்கவேண்டியதாயிற்று. (24)

9869. சிரமொ ராயிரந் தாங்கிய சேடனும்
உரவு கொற்றத் துவணத் தரசனும்

பொரவெ திர்ந்தனர் போலப் பொலிந்தனர்
இரவு நண்பக லென்னவு மாயினர்.

சிரம் ஓர் ஆயிரம் தாங்கிய சேடனும்,
உரவு கொற்றத்து உவணத்து அரசனும்,
பொர எதிர்ந்தனர் போலப் பொலிந்தனர்;
இரவும் நண்பகல் என்னவும் ஆயினர்.

பொ :—ஓராயிரம் தலைகளையுடைய ஆதிசேடனும், வலிமை யோடுகூடிய வெற்றியையுடைய கருடதேவனும் போர்செய்ய எதிர்ந்தாற்போல விளங்கினர் ; இரவும் நல்ல பகலும் போலவும் மாறுபட்டுத் தோன்றலாயினர்.

கு :— ஆதிசேடனைப்போன்றவன் இராவணன் ; கருடதேவனைப் போன்றவன் இராமன் ; இரவுபோன்றவன் இராவணன், பகல்போன்றவன் இராமன் எனக் கொள்க. இவ்வுவமைகளாலும் இராமன் வெல்வான் என்பது புலப்படுத்தியவாறு. கடருனை ஆதிசேடன் வெல்ல முடியாமையும் பகலை இரவு வெல்ல இயலாமையும் தெளிவு. (25)

9870. வென்றி யந்திசை யானை வெகுண்டன
ஒன்றை யொன்று முனிந்தவு மொத்தனர்
அன்றி யுந்நர சிங்கமு மாடகக்
குன்ற மன்னவ னும்பொருங் கொள்கையார்.

வென்றி அம்திசை யானை வெகுண்டன
ஒன்றை ஒன்று முனிந்தவும் ஒத்தனர்
அன்றியும் நரசிங்கமும் ஆடகக்
குன்றம் அன்னவனும் பொரும் கொள்கையார்.

பொ :— இயல்பாகவே வெகுண்டுள்ள வெற்றிமிக்க அழகிய திசையானைகள் (இரண்டு) ஒன்றை ஒன்று கோபித்த தன்மையையும் ஒத்தனர்; அன்றியும், நரசிங்கமும் பொற்குன்றம் போன்ற இரணியனும் போர் செய்யும் தன்மையையும் உடையவராயினர்.

கு :— இராம இராவணர் ஒருவரை ஒருவர் வெகுண்டு நிற்கும் தோற்றம், திசையானைகள் இரண்டு வெகுண்டு நிற்பது

போலத் தோன்றிற்று; அதுவன்றியும், இரணியனும் நரசிங்கமும் பொர நிற்பது போலவும் தோன்றிற்று என்றவாறு. இராவணன் இரணியனையும் இராமன் நரசிங்கத்தினையும் ஒத்தனர் என்றவாறு. (26)

9871. துவன வில்லின்
பொருட்டொரு தொல்லைநாள்
எவன வில்வலி
யென்றிமை யோர்தொழப்
புவன மூன்றும்
பொலங்கழ லாற்ருெடும்
அவனு மச்சிவ
னும்மென லாயினுர்.

துவன வில்லின் பொருட்டு ஒரு தொல்லைநாள்
எவன வில் வலி? என்று இமையோர் தொழ,
புவன மூன்றும் பொலங்கழலால் தொடும்
அவனும் அச்சிவனும் எனல் ஆயினுர்.

பொ :— பழங்காலத்தில் ஒருநாள்தேவர்கள், 'யாருடைய வில் மிக்கவலிமையுடையது ?' என்று தொழுது வினவ, ஒலியுடைய வில்லின் வலிமை காட்டும் பொருட்டு (ப்போர் செய்த), உலகம் மூன்றினையும் தன் அழகிய திருவடியால் தொட்டு அளந்த திருமாலும் அந்தச் சிவனும் என்று சொல்லலாம் தன்மையர் ஆயினர்.

கு :— திருமாலும் சிவனும் வைத்திருந்த வில் இரண்டில் யாருடைய வில் மிக்கவலிமையானது ? என்று ஐயுற்றுத் தேவர்கள் பிரமனை வினவ, அப் பிரமன் தூண்டுதலால் அரியும் அரனும் பொருத வரலாறு பாலகாண்டத்துப் பரசுராமப் படலத்தில் கூறப்பட்டது. "ஒன்றினை யுமையாள் கேள்வன் உவந்தனன் மற்றை யொன்றை, நின்றுல களந்த நேமி நெடியவனங்கை கொண்டான், என்றிது வுணர்ந்த விண்ணேர் இரண்டினும் வன்மை யெய்தும், வென்றியது யாவதென்று விரிஞ்சனை வினவ அந்நாள்" (பரசுராமப் - 27) "சீரிது தேவர் தங்கள் சிந்தனை யென்ப துன்னி, வேரியங் கமலத்

தோனும் விளைவதோர் வினையம் தன்னால், யாரினும் உயர்ந்த மூலத்து ஒருவராம் இருவர் தம்மை, மூரி வெஞ்சிலை மேலிட்டு மொய்யமர் மூட்டிவிட்டான்'' (28) என்று கூறியுள்ளது காண்க. துவனம் - ஒலி. நாணொலி வில்லுக்கு இருத்தலின் 'துவனவில்' என்றார். எவன என்புழி அகரம் ஆறுவதுருபு; அரி அரன் என்ற இருவரில் எவனுடைய வில் வலிமையது? என்பது அறியத்தேவர் விழைந்து பிரமனோடு வந்து அரியரரைத் தொழுது வினவினர் என்க. மூவுலகம் ஈரடியால் முறை நிரம்பாவகை முடியத்தாவிய செயலை நினைப்பித்துத் திருமாலின் பெருமை புலப்படுத்த, 'புவனமூன்றும் பொலங்கழலாற்றெடும் அவன்' என்றார். உலகறிசுட்டாக அச்சிவனும் என்று சுட்டினார். வில்லின் வலியது காட்டப் பொருத திருமாலும் சிவனும் போல இராமனும் இராவணனும் பொர நின்றனர் என்றவாறு. திருநீறணிந்து சிவனடி பரவும் இராவணனுக்கு இங்குச் சிவன் உவமையானான். இதுகாறும், இராம இராவணன் பொரநின்ற தன்மைக்குப் பல்பொருளுவமையாகப் பல கூறியுள்ளார். (27)

### இராவணன் சங்கினை ஊதுதல்

9872. கண்ட சங்கர னான்முகன் கைத்தலம்
விண்ட சங்கத் தொல்லண்டம் வெடிபட
அண்ட சங்கத் தமரர்த மார்ப்பெலாம்
உண்ட சங்க மிராவண னூதினான்.

கண்ட சங்கரன் நான்முகன் கைத்தலம்
விண்டு அசங்க, தொல் அண்டம் வெடிபட,
அண்ட சங்கத்து அமரர்தம் ஆர்ப்பு எலாம்
உண்ட சங்கம் இராவணன் ஊதினான்.

பொ :—(போரைக்) கண்டுகொண்டிருந்த சங்கரன் பிரமன் இவர்கள் கைகள் (முன்னைய அமைதி) நீங்கி அசங்கவும், பழமையான அண்டமுகடு வெடிக்கவும், மேல் அண்டத்தில் உள்ள கூட்டமான தேவர்களின் ஆரவாரம் முழுவதையும் முன்பு ஒழித்த சங்கினை இராவணன் ஊதினான்.

கு :—போரில் ஊக்கந்தோன்றச் சங்கினை ஊதுதல் வீரர்மரபு. இராவணன் ஊதிய சங்கு முன்பு தேவர்களின் ஆரவாரத்தை

அடக்கிய பெருமையுடையது என்பார், 'அமரர்தம் ஆர்ப்பு எல்லாம் உண்ட சங்கு' எனச் சிறப்பித்தார். இராவணன் போரைக் கண்டுகொண்டிருந்த பெருந்தேவர்கள் ஆகிய சங்கரன் பிரமன் என்ற இருவர் கைகளும் நடுக்கம்கொள்ளச் செய்ததோடு அண்டகோளத்தையும் வெடிக்கச்செய்தது இராவணன் ஊதிய சங்கின் ஒலி என்க. அசங்குதல் — நடுங்குதல். அண்டம் — மேலண்டம். சங்கத்து அமரர் — கூட்டமான தேவர்கள். (28)

### இராமனது சங்கு தானே முழங்குதல்

9873. சொன்ன சங்கின தோசை துளங்குற
என்ன சங்கென் றிமையவ ரேங்குற
அன்ன சங்கைப் பொருமையி ளுரியன்
தன்ன வெண்சங்கு தானு முழங்கிற்ருல்.

சொன்ன சங்கினது ஓசை துளங்குற,
'என்ன சங்கு?' என்று இமையவர் ஏங்குற,
அன்ன சங்கைப் பொருமையின் ஆரியன்
தன்னவெண் சங்கு தானும் முழங்கிற்ருல்.

பொ :— அந்தச் சங்கின் ஓசையைக் கேட்டுப் பொறுக்க முடியாமையால், இராமன் தன் தெய்வநிலையில் உரியதாயிருந்த வெள்ளிய பாஞ்சசன்னியம் என்னும் சங்கு, முன்சொல்லப்பெற்ற சங்கினது ஓசை துளங்கும்படியும், 'என்ன சங்கு' என்று தேவர்கள் ஏங்கும்படியும், தானும் முழங்கியது.

கு :—ஆரியன் என்றது, சிறந்தோனுகிய இராமனை. ஆரியன் தன்ன சங்கு என்றது அவனது தெய்வநிலையை நினைந்து பாஞ்ச சன்னியத்தையுடையவனுகக் கூறியவாறு. இராவணனது சங்கின் ஓசையைப் பொருது பாஞ்சசன்னியம் தானே முழங்கியது; அம்முழக்கத்தால் இராவணன் ஊதிய சங்கின் ஓசை துளங்கியது; தேவர்களும், 'இது என்ன சங்கு' என்று ஐயுற்று ஏங்கினுர்கள் என்க. இராமனது முன்னைய தெய்வநிலையில் உரியவாயிருந்த சங்கும் சக்கரமும் அவனறியாதபடி அருவாய் அவனருகில் நின்றிருந்தன என்பதைப் பின்வரும் செய்யுளால் அறியலாம். உருவத்தைக் காட்டாமல் ஓசையைமட்டும் காட்டினமையால் இமையவர் 'என்ன சங்கு' என்று ஏங்க நேர்ந்தது. (29)

இராமன் அறியாதபடி ஐம்படையும் அருகில் நின்றமை

9874. அய்ய னைம்படை தாமு மடித்தொழில்
செய்ய வந்தயல் நின்றன தேவரின்
மெய்ய னன்னவை கண்டிலன் வேதங்கள்
பொய்யி றன்னைப் புலன்றெரி யாமைபோல்.

அய்யன் ஐம்படைதாமும் அடித் தொழில்
செய்ய வந்து அயல் நின்றன; தேவரில்
மெய்யன் அன்னவை கண்டிலன், வேதங்கள்
பொய்யில் தன்னைப் புலன் தெரியாமைபோல்.

பொ:—ஐயனுக்குரியவான ஐம்படைகளும் அவனுக்கு அடித் தொண்டு செய்தற்காக வந்து அவன் அருகில் நின்றன; தேவர் களின் உண்மைக்கடவுளாகிய இராமன், பொய்யில்லாத தன்னை வேதங்கள் தம்மறிவுகொண்டு அறியாதிருத்தல் போல அவ் ஐம்படைகளையும் கண்டிலன் ஆனான்.

கு:— மேற்கூறிய சங்கு எது? என்ற ஐயத்தை விளக்க, இங்கு ஐம்படைகளும்வந்து அருகில் நின்றமை கூறினார். பாஞ்ச சன்னியம் ஐம்படைகளுள் ஒன்று ஆதலின், அது இராவணன் சங்கு ஊதியதைப் பொருது மேல் முழங்கியது என்று விளக்கிய வாறு. இராமனது முன்னைய தெய்வநிலையில் உரியனவாக இருந்தவற்றை 'அய்யன் ஐம்படை' எனப் பழமை நினைந்து கூறியவாறு. அய்யன் என்றது இராமனை. கடவுள் மெய்யனாக இருந்தும் வேதங்கள் அவனை அறியாதிருத்தல் போல, ஐம்படைகள் அருகில் வந்திருந்தும் இராமன் அவற்றை அறியாதவனாக இருந்தான் என்க. முன்பு இந்திரன் தேர் வந்ததே யன்றி ஐம்படை தாமும் வந்து நின்றன என்பார், ஐம்படைதாமும் என இறந்தது தழுவிய எச்ச உம்மைகொடுத்துக் கூறினார். இராமனை, 'தேவரின் மெய்யன்' எனவும், 'பொய்யில் தன்னை' எனவும் கூறியது அவனே பரம்பொருள் என்ற கருத்தால் என்க. ஐம்படைகள் பழைய தொடர்பு நினைந்து வந்து நின்றனவாயினும், இராமன் மனித நிலைக்கேற்ப அவற்றைக் காணாதவனாகவே இருந்தான் என்க. (30)

## மாதலியின் சங்கமுழக்கம்

9875. ஆசை யும்விசும் பும்மலை யாழியும்
தேச மும்மலை யுந்நெடுந் தேவரும்
கூச வண்டங் குலுங்கக் குலங்கொடார்
வாச வன்சங்கை மாதலி வாய்வைத்தான்.

ஆசையும் விசும்பும் அலை ஆழியும்
தேசமும் மலையும் நெடுந் தேவரும்
கூச, அண்டம் குலுங்க, குலம் கொள்தார்
வாசவன் சங்கை மாதலி வாய்வைத்தான்.

பொ:— எட்டுத்திசைகளும் விண்ணும் அலைகளையுடைய கடலும் நிலமும் மலைகளும் நெடிய தேவர்களும் நடுக்கம் கொள்ளவும், அண்டம் அசையவும், சிறப்பினைக்கொண்ட கற்பகமலர்மாலை யணிந்த இந்திரனுக்குரிய சங்கினை மாதலி தன் வாயில் வைத்து ஊதினன்.

கு:— ஆசை - திசை. ஆழி - கடல். தேசம் என்றது மண்ணுலகத்தை. கூசுதல் - நடுங்குதல். குலம் - சிறப்பு. கற்பகமலர் மாலை எல்லா மாலைகளிலும் சிறப்பு மிக்கது ஆகலின், அதனைக் 'குலங் கொள் தார்' என்றார். வாய்வைத்தான் என்றது, ஊதினன் என்னும் கருத்தினது. இராமனுக்குரிய சங்கு தானே முழங்கியபின் மாதலியும் சங்கையூதினன் என்க. (31)

## தேவமாதர் இராமனைக் காணுதல்

9876. துமில வாளி யரக்கன் றுரப்பன
விமலன் மேனியின் வீழ்வதன் முன்னமே
கமல வானக நாடியர் கட்கணை
அமலன் மேனியிற் றைத்த வனந்தமால்.

துமில வாளி அரக்கன் துரப்பன
விமலன் மேனியின் வீழ்வதன் முன்னமே,
கமல வானக நாடியர் கண்கணை
அமலன் மேனியில் தைத்த அனந்தமால்.

பொ — இராவணன் எய்யும்ஆரவாரத்தையுடைய அம்புகள் தூயவனாகிய இராமனது மேனியில் வீழ்வதற்கு முன்னமே அவன் மேனியில் தைத்தனவாகிய — தாமரைமலர் போன்ற அமைப்பினையுடைய வானநாட்டில் உள்ள தேவ மாதரின் கண்களாகிய - கணைகள் அளவிறந்தனவாகும்.

கு :— இராவணன் அம்புகள் தைப்பதற்கு முன்னே தேவ மாதரின் கண்களாகிய கணைகள் அளவிறந்தனவாய் இராமன் மேனியில் தைத்தன என்றது, தேவமாதர்கள் இராமனை விழிகளால் விழைந்து பார்த்தனர் என்னும் பொருளது. இராவணனைக் கொன்று தம் துயரைத் துடைக்க நிற்கின்ற இராமனது உருவைத் தேவமாதர் விரும்பிப்பார்ப்பது இயல்பு தானே! தேவமாதர் விரும்பிப் பார்ப்பதால் இராமனுடைய தூய ஒழுக்கத்திற்கு யாதும் இழுக்கு நேராது என்பதைப் புலப்படுத்தவே 'விமலன்' 'அமலன்' என்ற பெயர்களால் இராமனை இங்குச் சுட்டியுள்ள நயம் நோக்கத்தக்கது. ''தூய தவங்கடொடங்கிய தொல்லோன், ஏயவன் வல்வி லிறுப்பதன் முன்னம், சேயிழை மங்கையர் சிந்தைதொறெய்யா, ஆயிரம் வில்லை அனங்கள் இறுத்தான்'' (பால - கார்முகப் - 27) எனவும், ''துண்ணெனுஞ் சொல்லாள் சொல்லச் சுடர்முடி துறந்து தூய, மண்ணெனுந் திருவை நீங்கி வழிக்கொளா முன்னம் வள்ளல், பண்ணெனுஞ் சொல்லினார்தம் தோளெனும் பணைத்த வேயும், கண்ணெனுங் கால வேலும் மிடை நெடுங் கானம்புக்கான்'' (அயோத்தி - கைகேசி சூழ்வினைப் - 88) எனவும் முன்னம் கூறப்பட்டவை இங்கு நினைத்தற்குரியன. அமலன் மேனி என்றது, சுட்டின் பொருளதாய் நின்றது; கூறியதுகூறல் அன்று. கமலக்கட்கணை என இயைத்துத் தாமரை மலர் போன்ற கண்ணாகிய கணை எனப்பொருள் கூறலும் ஆம். வீழ்வதன் முன்னமே தைத்த கட்கணை அனந்த மால் என இயையும். (32)

***இரு தேர்களிலும் பூட்டிய குதிரைகள் சினந்து நோக்குதல்***

9877. சென்ற தேரோ ரிரண்டினுஞ் சேர்த்திய
குன்றி வெங்கட் குதிரை குதிப்பன
ஒன்றை யொன்றுற் றெரியுக நோக்கின
தின்று தீர்வன போலுஞ் சினத்தன.

சென்ற தேர்ஓர் இரண்டினும் சேர்த்திய
குன்றி வெங்கண் குதிரை குதிப்பன,
ஒன்றை ஒன்று உற்று, எரிஉக நோக்கின;
தின்று தீர்வன போலும் சினத்தன.

பொ — (ஒன்றை ஒன்று எதிர்த்துச்) சென்ற ஒப்பற்றதேர் இரண்டிலும் பூட்டியுள்ள, குன்றிமணிபோன்று சிவந்த, வெவ்விய, கண்ணையுடைய குதிரைகள் குதிப்பனவாய், (ஒன்றை ஒன்று) தின்றுவிடுவன போன்ற சினத்தையுடையனவாய் ஒன்றை ஒன்று நெருப்புப்பொறி சிந்த உற்று நோக்கின.

கு :— தேரில் உள்ள தலைவர்கட்குள்ள மாறுபாடு அத்தேரில் பூட்டிய குதிரைகட்கும் இருத்தலைப் புலப்படுத்தியவாறு. குன்றிபோன்ற சிவந்தகண், வெப்பமிக்க கண், என்க. குன்றி, ஆகுபெயராய் குன்றிமணியை யுணர்த்தியது. குன்றிமணி போன்று சிவந்தகண் என்றது பண்புபற்றிய உவமை. கண் சிவத்தலும் குதித்தலும் குதிரைகட்குச் சினமிகுதியால் வந்தன. சினத்தின் முதிர்ச்சியைப் புலப்படுத்த ‘தின்றுதீர்வன போலுஞ் சினத்தன’ என்றார். தற்குறிப்பேற்றம். குதிரை குதிப்பனவாய், சினத்தனவாய் ஒன்றை ஒன்று எரியுக உற்று நோக்கின என இயையும். ஒன்றையொன்று தின்று தீர்வன எனப் பின்னும் இயைக்க. (33)

இரு தேர்க்கொடிகளிலுள்ள இடியும் வீணையும் முழங்குதல்

9878. கொடியின் மேலுறை வீணையுங் கொற்றமா
இடியி னேறு முறையி னிடித்தன
படியும் விண்ணும் பரவையும் பண்பற
முடியு மென்பதோர் மூரி முழக்கின.

கொடியின்மேல் உறை வீணையும், கொற்ற மா
இடியின் ஏறும், முறையின் இடித்தன —
படியும் விண்ணும் பரவையும் பண்பு அற
முடியும் என்பது ஓர் மூரி முழக்கின.

பொ :— (இராவணன் தேர்க்) கொடியில் பொருந்திய வீணையும், (இராமன் ஏறியுள்ள தேர்க்) கொடியில் பொருந்திய

வெற்றி பொருந்திய பெரிய இடியேறும், மண்ணுலகும் விண்ணுலகும் கடலும் தம் பண்பு அழிந்து முடிந்துவிடும், என்று எண்ணுதற்குரிய பெரிய முழக்கத்தையுடையனவாய் முறைமுறையே முழங்கின.

கு :— கொடியின் மேலுறை இடி எனப்பின்னும் இயையும். கயிலைமலை யெடுத்தஞான்று ஈசன் கால்விரலால் ஊன்ற அம்மலையடியில் அழுந்திவருந்தியபோது இராவணன் தன் தலை ஒன்றையும் கைந்நரம்பையும் கொண்டு வீணையாக்கிச் சிவனைப்பாடி உய்ந்து நாளும் வாளும் பெற்றான் ஆதலின், அவ்வீணையின் உதவியை நினைந்து தன் தேர்க்கொடியில் அதனை அமைத்துக் கொண்டான் என்க. இந்திரனது தேரா தலின் அவனுக்குரிய இடிக்கொடி அதில் இருந்தது. வீணையும் இடியும் முழங்கிய முழக்கத்தால் மண்ணும் விண்ணும் அழிந்து விடும் என்று எண்ண நேரும் என்பார், 'படியும் விண்ணும் பரவையும் பண்பற முடியும் என்பதோர் மூரிமுழக்கின' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். வீணையும் இடியேறும் மூரி முழக்கினவாய் முறையின் இடித்தன என இயையும். படி-மண் ணுலகம். மூரி – பெருமை. முழக்கின, முற்றெச்சம். (34)

இருவருடைய வில் ஒலி

9879. ஏழு வேலையு மார்ப்பெடுத் தென்னலாம்
வீழி வெங்க ணிராவணன் வில்லொலி
ஆழி நாதன் சிலையொலி யண்டம்விண்
டூழி பேர்வுழி மாமழை யொத்ததால்.

ஏழு வேலையும் ஆர்ப்பு எடுத்தென்னலாம்,
வீழி வெங்கண் இராவணன் வில் ஒலி;
ஆழி நாதன் சிலை ஒலி, அண்டம் விண்டு
ஊழி பேர்வுழி, மாமழை ஒத்ததால்.

பெ.— வீழியின் கனிபோன்று சிவந்த வெவ்விய கண்ணை யுடைய இராவணனது வில்நாணின் ஒலி, ஏழு கடல்களும் ஆரவாரித்தன என்னலாம்படி இருந்தது; சக்கரப்படையை யுடைய திருமாலின் அமிசமான இராமனது வில்நாணொலி, அண்டகோளம் பிளந்து, ஊழிமுடியும் காலத்துப் பெரிய மேகங்களின் இடி ஒலியை ஒத்தது.

கு :— வீழி - விழுதி; ஒருவகைச் செடி. இங்கு ஆகு பெயராய் வீழியின் கனியை யுணர்த்தியது. வீழிக்கனி சிவந் திருக்கும். சினத்தால் சிவந்துள்ள இராவணன் கண்களுக்கு வீழிக்கனி நிறத்தால் உவமையாயது. இராவணன் வில் ஒலி ஏழு வேலையும் ஆர்ப்பு எடுத்த என்னலாம் என்க. எடுத்த என்புழி அகரம் தொகுத்தல் விகாரம். எழுகடலின் ஒலி போன்றது இராவணனது வில்லொலி என்றவாறு. ஆழி-சக்கரம். ஆழிநாதன் என்றது இங்கு இராமனை. திருமாலின் அமிசமாத லின் அப்பெயராற் கூறினர். ஊழி பெயரும் காலம் என்றது கடை ஊழியை. அக்காலத்து உலகமெல்லாவற்றையும் மூழ் கடிக்கும் பெருமழை பெய்தற்குரிய பெரிய மேகங்களின் முழக் கம்போல இராமனுடைய வில்லொலி இருந்தது என்க. சிலை ஒலி ஊழிபேர்வுழி மாமழை ஒத்தது என்க. இருவர் வில்லொலி கட்குக் காட்டிய உவமைகளாலேயே, சிறுமை பெருமைகள் புலப்படுத்தியுள்ளமை நோக்குக. (35)

வானர வீரர்களின் திகைப்பு

9880. ஆங்கு நின்ற
வனுமனை யாதியாம்
வீங்கு வெஞ்சின
வீரர் விழித்தனர்
ஏங்கு கின்றதல்
லாலொன் றிழைத்திலர்
வாங்கு சிந்தையர்
செய்கை மறந்துளார்.

ஆங்கு நின்ற அனுமனை ஆதியாம்
வீங்கு வெஞ்சின வீரர் விழித்தனர்—
ஏங்குகின்றது அல்லால், ஒன்று இழைத்திலர்,
வாங்கு சிந்தையர், செய்கை மறந்துளார்.

பொ :— அங்கு நின்ற அனுமன் முதலாக உள்ள, மிக்க கொடிய கோபத்தையுடைய வானரவீரர்கள் எல்லாம், பறி கொடுத்த சிந்தையராய்ச் செய்கை மறந்தவராய் ஏங்குகின்

றது அல்லது வேறு ஒன்றும் செய்யமாட்டாதவராய் விழித்தனர்.

கு :— வீரர், வாங்குசிந்தையராய் மறந்துளாராய் இழைத்திலராய் விழித்தனர் என முற்றெச்சங்களாக்கி முடிக்க. விழித்தல் - தடுமாறுதல். ஏங்குதல் - வருந்துதல். இருவர் வில்லொலிகளையும் கேட்டமையால் இத்தகைய தடுமாற்றம் அனுமனைப் போன்ற வானவீரர்க்கும் ஏற்பட்டது என்று அவ் வில்லொலியை வியந்தவாறு. வாங்கு சிந்தையர் என்றது, "அருங்கேடன்" (குறள் - 21) என்புழிப்போல வந்தது. சிந்தை அழியப் பெற்றவராய் என்றவாறு. (36)

தேவர்களின் திகைப்பு

9881. ஆவ தென்னைகொ
லாமென் றறிகிலர்
ஏவர் வெல்வரென்
றெண்ணல ரேங்குவார்
போவர் மீள்வர்
பதைப்பர் பொருமலால்
தேவ ருந்தங்கள்
செய்கை மறந்தனர்.

'ஆவது என்னை கொலாம்?'
என்று அறிகிலர்,
'ஏவர் வெல்வர்?' என்று
எண்ணலர் ஏங்குவார்,
போவர், மீள்வர்,
பதைப்பர், பொருமலால்,
தேவரும் தங்கள்
செய்கை மறந்தனர்.

பொ — (அவ்வில்லொலி கேட்ட) பொருமலால், தேவரும் எவர் வெல்வர் என்று எண்ணமாட்டாது ஏங்குவராய், இனி நிகழப் போவது என்னைகொலாம் என்று அறியமாட்டாதவராய், போவதும் மீள்வதும் பதைப்பதும் செய்பவராகித் தங்கள் செய்கையை மறந்தனர்.

கு :— வானர வீரரே யன்றித் தேவரும் செய்கை மறந்தனர் என்க. இறந்தது தழுவிய எச்ச உம்மை. இராமனே வெல்வான்; இனி ஆவது, இராவணன் வதைதான்; என்று நன்கறிந்த தேவர்களும் வில்லொலி கேட்ட அச்சத்தால் தம் முடிவையும் மறந்து திகைத்தமை புலப்படுத்தியவாறு. தேவரும், பொருமலால், எண்ணலர் ஏங்குவராய், அறிகிலராய்ப் போவர் மீள்வர் பதைப்பராய்த் தங்கள் செய்கை மறந்தனர் என இயையும். (37)

இராமனது தோளின் பூரிப்பைக்கண்டு
அமரர் மலர்மழை சொரிதல்

9882. சேண வந்தமர் நோக்குஞ் செழும்புயம்
பூண ழுந்தின சிந்தின பூமழை
காண வந்த கடவுளர் கையெலாம்
ஆண வன்துணை யாருள ராகுவார்.

சேண வந்து அமர் நோக்கும் செழும்புயம்
பூண் அழுந்தின; சிந்தின பூமழை,
காண வந்த கடவுளர் கை எலாம் —
ஆண் அவன் துணை ஆர்உளர் ஆகுவார்.

பொ :— (இராவணனோடு செய்யும்) போரை எதிர்நோக்கிக் கொண்டிருக்கும் (இராமனுடைய) செழுமையான புயங்கள் உயர வளர்ந்தமையால், (முன்பு தளர்ச்சியாக அணியப்பெற்ற) தோள்வளைகளாகிய அணிகள் அத்தோள்களில் இறுக்கமாக அழுந்தின; (அதுகண்டு) போரைக் காணவந்திருந்த தேவர்களின் கைகள் எல்லாம் மலர்மழையைச் சிந்தின; அவ்விராமனுக்கு நிகரான ஆண்மையுடையவர் யார்? (எவரும் இலர்.)

கு :— முன்பு தளர்ச்சியாக அணியப்பட்ட தோள்வளைகள், இப்போது போரை நோக்கித் தோள் பூரித்த நிலையில் அத் தோளில் இறுக்கமாக அழுந்தின; என்று கூறி இராமனுடைய போர் வேட்கையைப் புலப்படுத்தியவாறு. ''போர் என்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள் திண்டோள் மாரன் அனையான்'' (பால - பூக்கொய் - 18) என முன் கூறியுள்ளது

இங்கு நினையத்தகும். போரை நோக்கித் தோள் பூரித்தல் ஆண்மை மிக்கவர்க்கன்றி ஆகாது ஆதலின், அமரை நோக்கித் தோள் பூரிக்கப்பெற்ற இராமனைப் போல ஆண்மையுடையவர் ஆர்? என வினவி எவரும் இலர் என்பதைப் புலப்படுத்தியவாறு. ஆண் என்றது, ஆண்மையை. சேண-உயர. ''சேண வெரிநிற் சிறந்தாளோ டேறினர்'' (பரிபாடல்-12; 48) என்புழியும் இச்சொல் இப்பொருளில் பயின்றமை காணலாம். சேணவந்து, என்புழி வருதல் வளர்ச்சியை உணர்த்தியது; காரணப்பொருளில் வந்த வினையெச்சம். இராமன் தோள் பூரித்தது தேவர்தம் பகைவனை அழிக்கவே ஆதலின் அப் பூரிப்பைக் கண்டு அவர்கள் மலர்மாரி சொரிந்தனர் என்க. அவன் துணை ஆண் உளராகுவார் ஆர்? என இயையும். (38)

கவிக்கூற்று : இருவர்தம் வில்லின் தோற்றம்

9883. நீண்ட மின்னொடு வானிடு நீலவில்
பூண்டி ரண்டெதிர் நின்றன போன்றன
ஆண்ட வில்லிதன் வில்லு மரக்கன்றன்
தீண்ட வல்லவ ரில்லாச் சிலையுமே.

நீண்ட மின்னொடு வான் இடு நீலவில்
பூண்டு இரண்டு எதிர் நின்றன போன்றன—
ஆண்ட வில்லிதன் வில்லும், அரக்கன் தன்
தீண்ட வல்லவர் இல்லாச் சிலையுமே.

பொ :— மேகம் இயல்பாக இடுகின்ற நீலநிறமுடைய வில், நீண்ட மின்னலோடு பூண்டு இரண்டாய் எதிர் எதிரே நின்றனவற்றைப் போன்றன; என்னை ஆண்ட இராமனது வில்லும் இராவணன்தன் தீண்டவல்லவர் இல்லாத வில்லும் எதிர் எதிரே நின்றமை.

கு :— வான வில்லுக்கு நாண் இல்லாமையால் நீண்ட மின்னாகிய நாணிணைப் பூண்டு என்ற கருத்தினராய் 'நீலவில் நீண்ட மின்னோடு பூண்டு' என்றார். பூண்டு என்ற வினையால் 'மின்' நாணாக உருவகம் செய்யப் பெற்றமை புலனாம். எழு நிறமுடையது வானவில் ஆயினும், நீல நிறமே மேற்பட்டுத்

தோன்றும் இயல்பு நினைந்து 'நீலவில்' என்றார். வான் என்றது மேகத்தை. 'வானிடு வில்லின் வரவறியா வாய்மை யான்' என்ற நாலடியார் கடவுள் வாழ்த்துத் தொடரை நினைப்பதாக 'வானிடு நீலவில்' என்ற தொடர் அமைந் திருத்தல் காணலாம். வானவில் ஒன்றே ஆதலின், 'இரண் டாய் எதிர் நின்றன போன்றன' என்பது இல்பொருள் உவமை. உருவிலாளனொருபெருங் கருப்புவில் இருகரும்புருவ மாக ஈக்க'' (சிலப் — மனையறம்படுத்த - 44) என்பதும், ''அஞ்சுடர் நெடுவேல் ஒன்று நின்முகத்துச் செங்கடை மழைக்கண் இரண்டாவீத்தது'' (சிலப்—மனையறம்படுத்த -51, 52) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். வில்லி என்றது இராமனுக்குப் பெயர்; வில்லிதன் வில்லும் அரக்கன்தன் வில் லும் எதிர் நின்றமை, வானிடு நீலவில் இரண்டு எதிர் நின்றன போன்றன என வருவித்து மாறிமுடிக்க. ஆண்ட வில்லி என்றது கவி, தன் உரிமையைப் புலப்படுத்தியவாறு. இராவணனது வில்லின் பெருமை புலப்பட வேண்டித் 'தீண்ட வல்லவர் இல்லாச் சிலை' என்று சிறப்பித்தனர். (39)

### இராவணனது படைக்கலங்களின் ஒளி

9884. இக்க ணத்து மெறிப்ப தடித்தென
நெக்க மேகத் துதிக்கு நெருப்பன
பக்கம் வீசு படைச்சுடர் பஃறிசைப்
புக்குப் போகப் பொடிப்பன போக்கில.

இக்கணத்தும் எறிப்ப, தடித்து என;
நெக்க மேகத்து உதிக்கும் நெருப்பு அன
பக்கம் வீசு படைச்சுடர், பல்திசைப்
புக்குப் போக, பொடிப்பன போக்கு இல.

பொ:— இராவணன் தன் இருபக்கங்களிலும் சுழற்றி வீசிய வாள் முதலிய படைகளின் சுடர், பலதிசைகளிலும் புகுந்து செல்லா நிற்க, அப்போது சிதறினவாகிய சுடரின் பிசிர்களே அழிவு இல்லாதனவாய், நெகிழ்ச்சியுள்ள மேகத்தில் உதிக்கும் நெருப்புப் போன்ற மின் எனப் பெயர்பெற்று இந்தக் கணத்திலும் வீசுகின்றன.

கு :— இப்போதும் மேகத்தில் தோன்றும் மின்கள், இராவணன் அப்போது சுழற்றிய வாள் முதலிய படைகளில் தோன்றிய சுடரின் பிசிர்களே; எனத் தற்குறிப்பேற்ற அணிபற்றிக் கூறிய வாறு. தடித்து—மின். மேகத்து உதிக்கும் நெருப்பு அன்ன தடித்து என்க. பொடித்தல்—சிதறுதல். பொடிப்பன, வினைப் பெயர். பொடிப்பனவாகிய பிசிர்கள் போக்கிலவாய்த் தடித்து என இக் கணத்தும் எறிப்ப என இயையும். இச் செய்யுள் சில சுவடிகளில் 43 ஆம் செய்யுளாக உள்ளது. சிறந்த சுவடியில் நாற்பதாவது செய்யுளாகவே உள்ளது. வில்லின் சிறப்புக் கூறிய பின் ஏனைப் படைக்கலங்களின் சிறப்புக் கூறுதலே பொருத்த மாதல் காணலாம். (40)

இராவணன் ஆர்ப்பும் வில்லின் முழக்கும்

9885. அரக்க னன்றெடுத்
தார்த்தன வார்ப்பும்பேர்
சிரிப்பும் வில்லின்
றெழிப்புமுண் டேகொலாம்
குரைக்கும் வேலையு
மேகக் குழாங்களும்
இரைத்தி டிக்கின்ற
தின்றுமோ ரீறில.

அரக்கன் அன்று எடுத்து
ஆர்த்தன ஆர்ப்பும், பேர்
சிரிப்பும், வில்லின்
தெழிப்பும் உண்டே கொலாம்—
குரைக்கும் வேலையும்,
மேகக் குழாங்களும்,
இரைத்து இடிக்கின்றது,
இன்றும் ஓர் ஈறு இல!

பொ :— ஒலிக்கின்ற கடலும், மேகக்கூட்டங்களும், இன்றைக்கும் ஒரு முடிவே இல்லாதனவாய் இரைத்து இடிக்கின்றது, அரக்கன் அன்று எடுத்து ஆர்த்த ஆரவாரத்தையும் பெரிய சிரிப்

பையும் அவன் வில்லின் முழக்கத்தையும் (தம்மிடம் பதிய) உட்கொண்டுதான் போலும்!

கு :— இராவணனது போர் ஆரவாரமும் அவன் வில்லின் ஆரவாரமும் கடல் ஒலியினும் மேகத்து இடியினும் மிக்கனவாக இருந்தன என்றவாறு. இராவணன் அன்று ஆர்த்த ஆரவாரத்தையும் அவன் வில்லின் ஆர்ப்பையும் கடலும் மேகமும் கேட்டுத் தம்மிடம் பதிவு செய்து கொண்டு அவ்வொலியையே இன்றுகாறும் எதிரொலியாக இரைக்கின்றன; இடிக்கின்றன எனத் தற்குறிப்பேற்ற அணிபற்றிப் புனைந்துரைத்தவாறு. இக்காலத்து ஒலிப்பதிவு செய்யும் டேப் ரிகார்டு, முன் பதிவு செய்துகொண்ட ஒலியைப் பின் எக்காலத்தும் வெளியிடுதல்போலக் கடலும் மேகமும் இராவணன் ஆர்ப்பொலியையும் அவன் வில்லின் ஒலியையும் உட்கொண்டு, இன்றுகாறும் முடிவின்றி இரைத்தும் இடித்தும் வெளிப்படுத்தி வருகின்றன என்க. கடல் இன்றும் இரைப்பது அரக்கன் ஆர்ப்பினை உட்கொண்டுதான் எனவும், மேகம் இன்றும் இடிக்கின்றது அவன் வில்லின் தெழிப்பினை உட்கொண்டுதான் எனவும், நிரனிறையாகக் கொள்க. குரை — ஒலி. இரைத்தல்—ஒலித்தல். தெழித்தல்—முழங்குதல். கேட்டுப் பதிவுசெய்துகொண்ட கடலொலியும் மேகத்தின் இடியொலியுமே இத்தகையவாயின், இவற்றிற்குக் காரணமாயிருந்த இராவணனது ஆர்ப்பொலியும் வில்லொலியும் எத்தகையனவாதல் வேண்டும்? என உய்த்துணர வைத்தவாறு. வேலையும் மேகக் குழாங்களும் இன்றும் ஓரீறு இலவாய் இரைத்து இடிக்கின்றது, அரக்கன் ஆர்ப்பும் வில்லின் தெழிப்பும் உண்டே கொலாம்! என இயையும். கொல், ஐயம்; அசை நிலை எனலும் ஆம். சிரிப்பும் ஆர்ப்பில் அடங்குமேனும் சிறப்புப்பற்றி வேறு கூறினர். (41)

இராவணனது கண்ணில் சிந்தின சினத் தீ

9886. மண்ணிற் செல்வன செல்லினு மாசற
எண்ணிற் சூன்மழை யல்ல விராவணன்
கண்ணிற் சிந்தின தீக்கடு வேகத்த
விண்ணிற் செல்வன மீண்டின்று வீழ்வன.

மண்ணில் செல்வன செல், இனும் மாசு அற
எண்ணில் சூல் மழை அல்ல; இராவணன்

கண்ணில் சிந்தின தீ, கடு வேகத்த
விண்ணிற் செல்வன, மீண்டு இன்று வீழ்வன.

பொ:— இன்னும் குற்றம் அற எண்ணிப்பார்த்தால், (விண்ணிலிருந்து) மண்ணில் வீழ்வனவாகிய இடி, கருக் கொண்ட மேகத்திலிருந்து வீழ்வன அல்ல; இராவணன் கண்ணில் அன்று சிந்தின தீ, கடிய வேகத்தையுடையனவாய் விண்ணில் சென்றவை, மீண்டு இன்று வீழ்கின்றனவே ஆம்.

கு:— மேகத்தின் இடி ஒலி என்பது மேகத்திற்குரிய ஒலி அன்று; இராவணனது வில்லின் ஒலியை அன்று உண்டமேகம் அதனை வெளிப்படுத்தும் ஒலியே என்பதை மேல் புலப்படுத்திய கவி, இடி மேகத்திலிருந்து நெருப்புவடிவாக மண்ணில் வீழ்வதைக் காண்போர், மேகத்தில் இடி என்று ஒன்று உண்டு; அதற்கு ஒலியும் உண்டு எனக்கொண்டு ஐயுறுவரன்றே, அங்ஙனம் ஐயுறுதபடி இங்கு, இன்னும் குற்றமற எண்ணிப் பார்த்தால் மண்ணில் வீழ்கின்ற இடியும், அன்று இராவணன் கண்ணில் சிந்தின நெருப்பு வேகமாக விண்ணிற் சென்றவை மீண்டு இன்று வீழ்வனவே; மேகத்திலிருந்து வீழ்வன அல்ல; என்று உண்மையை மறுத்து, அவநுதி அணி அமைய நிறுவியவாறு. செல்—இடி. மண்ணில் ஆழ்ந்து செல்லும் இயல்புடைமையால் 'செல்' எனப் பெயர்பெற்றது இடி; என்று காரணம் புலப்படுத்துவார் போல் 'மண்ணிற் செல்வன செல்' என்று கூறினர். 'விண்ணிற் செல்வன' காலவழுவமைதி, 'விண்ணிற் சென்றன' எனப்பாடமிருப்பின் சிறக்கும். (42)

இராமன் சிரிப்பு

9887. மால்க லங்கலில் சிந்தையன் மாதிரம்
நால்க லங்க நகுந்தொறு நாவொடு
கால்க லங்குவர் தேவர் கணமழை
சூல்க லங்கும் இலங்கை துளங்குமால்.

மால், கலங்கல் இல் சிந்தையன், மாதிரம்
நால் கலங்க நகும்தொறும், நாவொடு
கால் கலங்குவர், தேவர்; கணமழை
சூல் கலங்கும்; இலங்கை துளங்குமால்.

பொ :— (இராவணனது ஆர்ப்பும் சிரிப்பும் நிகழ்ந்த பின்) திருமாலின் அமிசமாக வந்த இராமன் கலங்காத சிந்தையுடைய ஞய் நான்கு பெருந்திசைகளும் கலங்குமாறு சிரிக்குந்தோறும், தேவர்கள் நாவோடு கால்கள் நடுங்கப்பெற்றனர்; கூட்டமான மேகங்கள் கருப்பம் கலங்குவன ஆயின; இலங்கை நடுங்கியது.

கு :— இராவணனது சிரிப்பையும் ஆர்ப்பையும் கண்ட இராமன், இராவணனை இகழ்ந்து சிரித்த வீரச் சிரிப்பொலி கேட்டு நாற்றிசைகளும் நடுங்கின; தேவர்கள் நாவும் கால்களும் நடுங்கினர். இராமன் தங்கள் தலைவனே ஆயினும் அவன் சிரிப்பொலியின் கடுமையால் தேவர்களும் நடுங்கலாயினர் என்க. தேவர்கள் பேசவும் இயங்கவும் இயலாதவராய் நடுங்கினர் என்பார், 'நாவொடு கால் கலங்குவர் தேவர்' என்றார். கலங்கும் துளங்கும் என்ற செய்யும் என் முற்றுக்கள் இங்கு இறந்த காலப் பொருளில் வந்தன; கால வழுவமைதி. கலங்குவர் என்பதும் அவ்வாறே இறந்தகாலப் பொருளில் வந்தது. (43)

### இராவணன் வீரப் பேச்சு — 9888, 9889
### வில்லின் பெருமை

9888. குற்றம் விற்கொடு கொல்லுதல் கோளிலாச்
சிற்றை யாளனைத் தேவர்தந் தேரொடும்
பற்றி வானிற் சுழற்றிப் படியின்மேல்
எற்று வேனென் றுரைக்கு மிரைக்குமால்.

'குற்றம், வில்கொடு கொல்லுதல்; கோள் இலாச்
சிற்றையாளனைத் தேவர்தம் தேரொடும்
பற்றி, வானில் சுழற்றி, படியின்மேல்
எற்றுவேன்' என்று உரைக்கும்; இரைக்குமால்.

பொ :— 'வலிமையில்லாத இச்சிறிய மனிதனை (என் பெருமைமிக்க) வில்லைக்கொண்டு கொல்லுதல் குற்றமாகும்; இச்சிறியோனைத் தேவர்தம் தேரோடும் பற்றி விண்ணில் சுழற்றிப் பூமியின்மேல் மோதுவேன்' என்று சொல்லுவான்; பின் ஆரவாரிப்பான்.

கு :— பெருமைமிக்க வில்லைக்கொண்டு சிறிய மனிதனைக் கொல்லுதல் அவ்வில்லிற்கு இழுக்காகும் எனப்பகையை எள்ளிக்

கூறியவாறு. கோள்—வலிமை. சிற்றையாளனை என்பது இடை நிலை விளக்காய்ப் பின்னும் இயையும். சிறு ஆளன் என்பது முதனிலை இரட்டித்து ஐகாரத்தை ஏற்றுச் சிற்றையாளன் என ஆயிற்று. படி — பூமி. இரைத்தல் — ஆரவாரித்தல். எற்றுதல்—மோதுதல். (44)

கணையின் பெருமை

9889. தடித்து வைத்தன்ன வெங்கணை தாவற
வடித்து வைத்தது மானுடற் கேவலி
ஒடித்துத் தேரை யுதிர்த்தொரு வில்லொடும்
பிடித்துக் கொள்வென் சிறையெனப் பேசுமால்.

'தடித்து வைத்தன்ன வெங்கணை தாவு அற,
வடித்து வைத்தது மானுடற்கே? வலி
ஒடித்து, தேரை உதிர்த்து, ஒரு வில்லொடும்
பிடித்துக் கொள்வென், சிறை' எனப் பேசுமால்.

பொ :— 'மின்னல்களை அடுக்கிவைத்தாற்போன்று கொடிய கணைகளைக் குற்றமற வடித்து வைத்தது, இம்மானிடன்மேல் ஏவுதற்காகவா ? (அன்று; இவனைக் கொல்ல அந்த அம்புகளா வேண்டும்?) இவன் வலிமையை என் கைகளால் ஒடித்து இவன் தேரைப்பொடியாக்கி உதிர்த்துவிட்டு, (இவனை) ஒருவில்லோடும் சிறைபிடித்துக் கொள்வேன்' எனப் பேசுவான்.

கு :— மேல், தன் வில்லைக்கொண்டு இராமனைக் கொல்லுதல் அவ்வில்லுக்கு இழுக்காகும் என்று கூறியவன், இங்குத் தன் அம்புகள் மானிடன்மேல் ஏவுதற்குரிய சிறுமையன அல்ல என்பதைப் புலப்படுத்தித் தன் கைகளாலேயே அம்மனிதனைச் சிறை பிடிப்பதாகக் கூறியவாறு. தடித்து—மின்னல். ஒளியாலும் நீட்சியாலும் தாக்குதலாலும் அம்புக்கு மின் உவமையாயது. மூவர் மேலும் தேவர்மேலுமே ஏவுதற்குரியன அன்றி, மானிடன்மேல் ஏவுதற்குரிய சிறுமையது அன்று என்பான் 'வெங்கணை வடித்து வைத்தது மானிடற்கே?' என வினவுவானாயினன். ''உலகைச்சேடன்றனுச்சி நின்றெடுக்க வன்றேரேழ், மலையை வேரொடும்வாங்க வன்றங் கையால் வாரி, அலைகொள் வேலையைக் குடிக்கவன்று அழைத்தது மலரோடு, இலைகள் கோது

மக் குரங்கின்மேல் ஏவக்கொல் எம்மை'' (படைக்காட்சி-37) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். இராமனுக்கு இருப்பது ஒரே வில் என்னும் இகழ்ச்சிக் குறிப்பும் புலப்பட 'ஒரு வில்லொடும் பிடித்துக் கொள்வென் சிறை' எனப் பல்லாயிரம் விற்களையுடைய இராவணன் கூறினான். இராமனைக் கொல்ல நினையாது வில் லொடும் சிறை பிடிக்கஎண்ணியது, முன்பு சூர்ப்பணகை 'யான் கொண்டோடும் வண்ணம் இராமனைத் தருதியென்பால்' (மாரீசன் வதைப்-79) என்று வேண்டியதை நினைந்தேபோலும். (45)

இராவணன் அம்பு எய்தல்

9890. பதைக்கின்றதொர் மனமும்மிடை
★ படர்கின்றதொர் சினமும்
விதைக்கின்றன பொறிபொங்கின
விழியும்முடை வெய்யோன்
குதைக்குன்றென நிமிர்வெஞ்சிலை
குழையக்கொடுங் கடுங்கால்
உதைக்கின்றன சுடர்வெங்கணை
யுருமேறென வெய்தான்.

பதைக்கின்றது ஓர்மனமும், இடை
படர்கின்றது ஓர் சினமும்,
விதைக்கின்றன பொறிபொங்கின
விழியும், உடைவெய்யோன்,
குதைக்குன்றுஎன நிமிர்வெஞ்சிலை
குழைய, கொடுங் கடுங்கால்
உதைக்கின்றன சுடர்வெங்கணை,
உரும் ஏறு என எய்தான்.

பொ :— பதைபதைக்கின்ற மனமும், அம்மனத்திடையே பரவுகின்ற சினமும், (பலவிடங்களில்) விதைக்கின்றாற்போன்று நெருப்புப்பொறி பரக்கின்ற கண்களும் உடைய கொடியவனாகிய இராவணன், குதைகளையுடைய மலை போல நிமிர்ந்துள்ள கொடிய தன் வில்வளைய (வளைந்து) கொடுமையான கடுங் காற்றால் தள்ளப்படுகின்ற பேரிடிகள் என்னுமாறு, ஒளிவாய்ந்த கொடிய அம்புகளை எய்தான்.

கு:— போர்செய்ய வேண்டும் என்ற விரைவுக்குறிப்பால் இராவணன் மனம் பதை பதைத்தது என்க. விழியில் நின்று புறப்படும் பொறிகள் பலவிடங்களில் பரவுகின்ற நிலையைப் பார்க்கும்போது வயலில் விதைகளைத் தூவுவதுபோலக் காணப் பட்டது என்பார், 'விதைக்கின்றன பொறி' என்றார். தற்குறிப்பேற்றம். விதைக்கின்ற அன என்புழி அகரம் தொகுத் தல். 'குதைக்குன்று என' என்பது இல்பொருள் உவமை. குதை என்பது, வில்லின் இருமுனைகளிலும் நாண்முடிவ தற்குரிய வரைக்குப்பெயர். குழைய வளைத்து, எனச்சொல்லெச் சமாக ஒரு சொல் வருவிக்கப்பட்டது. உதைத்தல் — உந்தித் தள்ளுதல். உதைக்கின்றன உருமேறெனச் சுடர்வெங்கணை எய்தான் என இயையும். கொடுங்கடுங்கால் போன்றவன் இராவணன் எனவும் உருமேறுபோன்றது கணை எனவும் கொள்க. இனி, கொடுங்கடுங்கால் போன்றது வில் எனினும் அமையும். (46)

அம்பின் தன்மைகள்

9891. உருமொத்தன வனலொத்தன
ஊற்றந்தரு கூற்றின்
மருமத்தினு நுழைகிற்பன
மழையொத்தன வானோர்
நிருமித்தன படைபற்றற
நிமிர்வுற்றன வமிழ்தப்
பெருமத்தினை முறைசுற்றிய
பெரும்பாம்பினும் பெரிய.

உரும் ஒத்தன, அனல் ஒத்தன,
ஊற்றம்தரு கூற்றின்
மருமத்தினும் நுழைகிற்பன,
மழை ஒத்தன, வானோர்
நிருமித்தன, படைபற்று அற
நிமிர்வுற்றன, அமிழ்தப்
பெருமத்தினை முறைசுற்றிய
பெரும்பாம்பினும் பெரிய.

பொ :— (இராவணன் எய்த அம்புகள்) இடியை ஒத்தனவும், நெருப்பை ஒத்தனவும், வலிமைமிக்க கூற்றுவனின் மார்பிலும் நுழையத் தக்கனவும், மழையை ஒத்தனவும், தேவர்கள் உண்டாக்கிய படைக்கலன்களையெல்லாம் பற்றுதல் வேண்டாதபடி அவற்றினும் உயர்வுடையனவும், அமிழ்தம் கடைந்த மந்தரமலையாகிய பெரிய மத்தினை முறையாகச் சுற்றியிருந்த பெரிய வாசுகி என்னும் பாம்பினும் பெரியனவும் ஆகி இருந்தன.

கு :— ஊற்றம்—வலிமை. கூற்றின் மருமத்தினும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. அழித்தலால் இடியையும், ஒளியால் வெம்மையால் அனலையும், பன்மையால் மழையையும் ஒத்தனவாக இராவணன் அம்புகள் இருந்தன என்றவாறு. பருமையிலும் நீட்சியிலும் வாசுகியினும் பெரியன என்க. அமிழ்தங் கடைதற்கு மத்தாக உதவிய மந்தரமலையையே 'அமிழ்தப் பெருமத்து' என்றார். தேவர்கள் படைத்துத்தந்த படைக்கலன்களினும் மிக்க ஆற்றல் படைத்தன இவ்வம்புகள் என்பார், 'வானோர் நிருமித்தன படைபற்றற நிமிர்வுற்றன' என்றார். ஆற்றல் குறைந்த தெய்வப் படைக்கலங்களைப் பற்றுதலை விடுக்குமாறு செய்யும் அம்புகள் என்றவாறு. இனி, பற்றறுதல்—அடியோடு அழிதல் எனக்கொண்டு தேவர்களின் படைக்கலங்கள் அடியோடு அழியுமாறு செய்யும் ஆற்றலால் உயர்ந்தன எனப் பொருள் கூறலும் ஆம். (47)

இராவணன் எய்த அம்புகளை இராமன் அழித்தல்

9892. துண்டப்பட நெடுமேருவைத்
துளைத்துள்ளிறை தொங்கா
தண்டத்தையும் பொதுத்தேகுமென்
றிமையோர்களு மயிர்த்தார்
கண்டத்தெறு கணைக்காற்றினைக்
கருணைக்கடல் கனகச்
சண்டச்சர மழைகொண்டவை
யிடையேயறத் தடுத்தான்.

'துண்டப்பட நெடு மேருவைத்
துளைத்து, உள் இறை தொங்காது

அண்டத்தையும் பொதுத்து ஏகும்' என்று
இமையோர்களும் அயிர்த்தார்;
கண்டத் தெறு கணைக் காற்றினை,
கருணைக்கடல், கனகச்
சண்டச் சர மழை கொண்டு, அவை
இடையே அறத் தடுத்தான்.

பொ:—நெடிய மேருமலையைத் துண்டுபடுமாறு துளைத்துச் சென்று அதனுள் சிறிதுபோழ்தும் தங்காது புறப்பட்டுச் சென்று அண்ட முகட்டையும் துளைத்துச் செல்லும் (இவ் வம்புகள்) என்று தேவர்களும் ஐயங்கொண்டார்கள்; கண்ட துண்டமாகுமாறு அழிக்கவல்ல அவ்வம்புகளாகிய காற்றினை, அருட்கடல் போன்றவனாகிய இராமன், பொன்மயமானதும் கொடியதுமான தன் அம்புமாரியைக்கொண்டு இடையே அற்றுப்போகுமாறு தடுத்தான்.

கு:— தொங்குதல் இங்குத் தங்குதல் என்னும் பொருளது. பொதுத்தல்—துளைத்தல். இராவணன் விட்ட அம்புகளின் ஆற்றலையும் விரைவையும் கண்ட அமரர்கள் இவ்வாறு ஐயமுற்றார் என்க. கண்டமாகத் தெறு என்பது கண்டத்தெறு எனத் தொகுத்தவாறு. கணைக்காற்று, சரமழை என்பன உருவகம். கருணை நிறைந்த கடல்போன்ற இராமனை ஆகுபெயரால் கருணைக் கடல் என்றார். சண்டச்சரம் கனகச் சரம் எனத் தனித்தனி இயை யும். காற்றினை மழைகொண்டு தடுத்தான் என்ற திறம் நினைத்தற் குரியது. சரமழை அவைகொண்டு என முன் இயைத்துக் கொள்க. (48)

இராவணன் மீண்டும் அம்பு சொரிதல்

9893. உடையான்முயன் றொருகாரிய
முறுதீவினை யுடற்ற
இடையூறுறச் சிதைந்தாங்கெனச்
சரஞ்சிந்தின விறலும்
தொடையூறின கணைமாரிக
டொகைதீர்ந்தன துரந்தான்
கடையூறுறு கணமாமழை
கால்வீழ்த்தெனக் கடியான்.

உடையான் முயன்ற ஒருகாரியம்
உறுதீவினை உடற்ற,
இடையூறு உறச் சிதைந்தாங்கெனச்
சரம் சிந்தின, விறலும் ;
தொடையூறின கணைமாரிகள்
தொகை தீர்ந்தன துரந்தான் —
கடைஊறு உறு கணமாமழை
கால்வீழ்த்தெனக் கடியான்.

பொ :— உடையவன் முயன்ற ஒரு காரியம், அவன் முன் செய்த பெரிய தீவினை கெடுத்தமையால் அவனுக்கு இடையூறு உண்டாகுமாறு சிதைந்தாற்போல, இராவணன் அம்புகள் வலிமை சிதைந்தனவாயின ; கொடியவனாகிய இராவணன் (மீண்டும்) கடையூழியில் உலகிற்கு இடையூறாகப் பொருந்துகின்ற பெரிய மழை கால்வீழ்த்துப் பெய்வது போலத் தொடுத்தல் பொருந்திய அம்புமழைகளைக் கணக்கில்லாதனவாகச் செலுத்தினான்.

கு :— 'முயன்ற' என்பதில் அகரம் தொக்கது. முன் செய்த தீவினையுடையான் முயலும்செயல் அவன் தீவினையால் இடையில் சிதைதல் ஒருதலையாகலின் அதனை, முன்செய்த தீவினையுடைய இராவணன் விட்டஅம்புகள் சிதைந்தமைக்கு உவமையாக்கினார். உறு, மிகுதியுணர்த்தும் உரிச்சொல். உடற்றுதல்—கெடுத்தல். உடற்றுதலால் சிதைந்தாங்கு எனக் காரணப் பொருளதாக்குக. 'என' என்பது உவமை உருபாகப் பின் வருதலின் முன்வந்த 'ஆங்கு' என்பதை அசைநிலையாக்குக. சரம் விறலும் சிந்தின என மாறுக. விறல்—வலிமை. கடியான் என்றது இராவணனை. கடை என்றது ஊழிக்கடையை. கணமா மழை என்றது மிகப் பெரிய மழையை. தொகை தீர்ந்தன என்றது கணக்கிறந்தன என்றவாறு. கடியான், கணமாமழை கால்வீழ்த்தெனக் கணை மாரிகள் துரந்தான் என இயையும். (49)

இராவணன் விட்ட அம்புகளின் நிலை

9894. விண்போர்த்தன திசைபோர்த்தன
மலைபோர்த்தன விமையோர்

கண்போர்த்தன கடல்போர்த்தன
படிபோர்த்தன கலையோர்
எண்போர்த்தன வெரிபோர்த்தன
விருள்போர்த்தன வென்னே
திண்போர்த்தொழி லென்றானையி
னுரிபோர்த்தவன் றிகைத்தான்.

விண்போர்த்தன; திசை போர்த்தன;
மலைபோர்த்தன; இமையோர்
கண்போர்த்தன; கடல்போர்த்தன;
படிபோர்த்தன; கலையோர்
எண்போர்த்தன; எரிபோர்த்தன;
இருள்போர்த்தன; 'என்னே
திண்போர்த்தொழில்?' என்று ஆனையின்
உரி போர்த்தவன் திகைத்தான்.

பொ:— (இராவணன் எய்த அம்புகள்) விண்ணைய் போர்த்தன; திசைகளைப் போர்த்தன; மலைகளைப் போர்த்தன; தேவர்களின் கண்களைப் போர்த்தன; கடலைப் போர்த்தன; பூமியைப் போர்த்தன; கலைவல்ல புலவரின் எண்ணத்தைப் போர்த்தன; நெருப்பைப் போர்த்தன; இருளைப்போர்த்தன; 'இவ்விராவணனது திண்ணிய போர்த்தொழில் என்னே?' என்று ஆனையின் தோலைப் போர்த்தவனாகிய உருத்திரன் திகைத்தான்.

கு:— போர்த்தல்—மறைத்தல். கலைஞரின் கற்பனையையும் மறைத்தன என்பார், கலையோர் எண்போர்த்தன என்றார். கலைஞரின் கற்பனையையும் கடந்தன என்றவாறு. எரி என்றது இங்கு நெருப்பு மண்டலமாகிய சூரியனை. சூரியனையும் மறைத்தன என்றவாறு. சூரியன் கதிர்கள் நுழைய இயலாது இருள் சூழ்ந்த இடங்களையும் மறைத்தன என்க. இராவணனுக்கு வரம்கொடுத்த உருத்திரனே அவ்விராவணனின் அம்புகளைக் கண்டு திகைத்தான் என்றது, ஏனையோர் திகைப்பினைக் கூறுது புலப்படுத்தற்காகும். (50)

இராவணன் அம்பினுல் வானரசேனை அழிவதுகண்டு இராமன் அவ்வம்புகளை விலக்குதல்

9895. அல்லா நெடும் பெருந்தேவரு
மறைவாணரு மஞ்சி
எல்லாருந்தங் கரங்கொண்டிரு
விழிபொத்தின ரிரிந்தார்
செல்லாயிரம் விழுங்காலுகு
விலங்கொத்தது சேனை
வில்லாளனு மதுகண்டவை
விலக்குந்தொழில் வேட்டான்.

அல்லா நெடும் பெருந்தேவரும்
மறைவாணரும் அஞ்சி,
எல்லாரும் தம்கரங்கொண்டு இரு
விழிபொத்தினர், இரிந்தார்;
செல் ஆயிரம் விழுங்கால் உகும்
விலங்கு ஒத்தது சேனை;
வில்லாளனும் அதுகண்டு, அவை
விலக்கும் தொழில் வேட்டான்.

பொ :— அவ் உருத்திரன் அல்லாத நெடிய பெருந்தேவர்களும் வேதம்வல்ல அந்தணரும் ஆகிய எல்லாரும் அஞ்சித் தம் கைகளைக்கொண்டு இரு கண்களையும் மூடிக்கொண்டு ஓடினுர்கள்; இடி ஆயிரக்கணக்காக விழும்பொழுது உயிர் சிந்தி அழிகின்ற விலங்கினங்களை ஒத்துச் சேனை அழிந்தது; வில்லாளனுகிய இராமனும் அதைக்கண்டு அவ்வம்புகளை விலக்கும் தொழிலை விரும்பினுன்.

கு :— எல்லாரும் அஞ்சி எனப்பின் இயையும். செல்—இடி. கூட்டமாக மேய்கின்ற விலங்குகள் இடி விழுங்கால் அப்படியே அழிதல்போல, இராவணன் அம்புகளால் வானரங்கள் எல்லாம் கூட்டம் கூட்டமாக அழிந்தன என்றவாறு. (51)

இராமன் எய்த அம்பினுல் இராவணன் அம்புகள் அழிதல்

9896. செந்தீவினை மறைவாணனுக்
கொருவன்சிறு விலைநாள்

முந்தீந்ததொ ருணவின்பய
னெனலாயின முதல்வன்
வந்தீந்தன வடிவெங்கணை
யணையான்வகுத் தமைத்த
வெந்தீவினைப் பயனொத்தன
வரக்கன்சொரி விசிகம்.

செந்தீவினை மறைவாணனுக்கு
ஒருவன் சிறுவிலை நாள்
முந்து ஈந்தது ஓர் உணவின் பயன்
எனல் ஆயின, முதல்வன்
வந்து ஈந்தன வடிவெங்கணை;
அணையான் வகுத்து அமைத்த
வெந்தீவினைப் பயன் ஒத்தன,
அரக்கன் சொரி விசிகம்.

பொ.—முதற்கடவுளின் அம்சமாகிய இராமன் வந்து எய்த கூரிய கொடிய அம்புகள், செந்நிறமுடைய தீயில் ஓமம் செய்யும் வினையை மேற்கொண்டுள்ள, வேதம் வல்ல, அந்தணனுக்கு ஒருவன், முன்னே பஞ்ச காலத்தில் கொடுத்த உணவினால் விளையும் புண்ணியப் பயன் போன்று வெற்றி கொள்ளலாயின; இராவணன் சொரிந்த அம்புகள், அவ்வொருவன் முன்னே செய்திருந்த கொடிய தீவினைப் பயன் போன்றனவாய் அழிவெய்தின.

கு:—ஒருவன், அந்தணனுக்குப் பஞ்ச காலத்தில் அன்ன தானம் செய்த புண்ணியம், அவனுடைய முன்னைத் தீவினைகளையெல்லாம் அழித்து மேலோங்கும் என்ற அறநூல் முடிவை உவமையாக்கி இராவணன் அம்புகள், இராமன் அம்புகளால் அழிவெய்தியதை விளக்கியவாறு. வேள்வி செய்யும் மறையோன் என்பார், செந்தீவினை மறைவாணன் என்றார். சிறுவிலை நாள் என்றது பெருவிலை கொடுத்துச் சிறு பொருளை வாங்கும் பஞ்ச காலத்தை. அன்னதானத்தின் பயன் பெரியதேயாயினும் அதை யேற்போரின் தகுதி மிகுதியாலும் காலத்தின் அருமையாலும் மேலும் பெரியதாய் வளர்ந்து பயன் தருதல் நோக்கிச் 'செந்தீவினை மறைவாணனுக்கு' எனவும், 'சிறுவிலைநாள்' எனவும்

ஏற்போன் தகுதியையும் காலத்தின் அருமையையும் விளக்கிய வாறு. ''அறப்பயனும்-தான் சிறிதாயினும் தக்கார் கைப்பட்டக் கால் வான்சிறிதாப் போர்த்துவிடும்'' (நாலடி–38) என ஏற்போன் தகுதியால் சிறிய புண்ணியமும் பெரிதாய்வளர்தலையும், ''காலத் தினாற் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப்பெரிது'' (குறள்–102) எனக் காலத்தின் அருமையால் சிறிய புண்ணியம் பெரிதாய் வளர்தலையும் அற நூலாசிரியர்கள் கூறியிருத்தலை நோக்குக. ஒருவன் செய்த நல்வினையும் தீவினையும் பயன் கொடுக்க முந்தும்போது அவன் தக்கவர்க்கீந்த அன்னதானப் பயன் பெரிதாய் வளர்ந்து, அவன் முன் செய்த தீவினை ஊழாய் வந்து உறுகண் செய்யா வண்ணம் அதனை அழித்துவிடும்; என்ற அறநூல் முடிபை உவமை முகத்தால் உலகர்க் குணர்த்தியவாறு. (52)

*இராமனும் இராவணனும் ஒத்துப் பொருதல்—9897 – 9901*

9897. நூறுயிரம் வடிவெங்கணை
நொடியொன்றினில் விடுவான்
ஆருவிறன் மறவோனவை
தனிநாயக னறுப்பான்
கூறுயின கனல்சிந்தின
குடிக்கப்புனல் குறுகிச்
சேறுயின பொடியாயின
திடராயின கடலும்.

நூறுஆயிரம் வடிவெங்கணை
நொடி ஒன்றினில் விடுவான்,
ஆரு விறல் மறவோன், அவை
தனி நாயகன் அறுப்பான்;
கூறு ஆயின, கனல் சிந்தின,
குடிக்கப் புனல் குறுகி,
சேறு ஆயின, பொடி ஆயின,
திடர் ஆயின, கடலும்.

பொ :— தணியாத வலிமையையுடைய வீரனாகிய இராவணன், ஒரு நொடிப் பொழுதில் நூறு ஆயிரம் கூரிய கொடிய

அம்புகளை விடுவான்; ஒப்பற்ற நாயகனாகிய இராமன் அவ் வம்புகள் அனைத்தையும் அறுத்து வீழ்த்துவான் ; அவ்வாறு இராமன் அம்புகளால் துண்டிக்கப்பெற்ற இராவணனது அம்புகள், நெருப்புப்பொறிகளைச் சிந்தின வாய் (க் கடலை அணுகி நீரைக்)குடிக்க அக்கடலும் முன்பு சேருகிப் பின் துகளாகிப் பின் வெறுந் திட்டுகளாக மாறின.

கு:— ஆருமை—தணியாமை. கூருயின என்பது வினையாலணையும் பெயராய்த் துண்டிக்கப் பெற்ற அம்புகளை உணர்த்தின. கூறு ஆயினவை கனலைச் சிந்தனவாய்க் குறுகிப் புனல் குடிக்கக் கடலும் சேருயின, பொடி ஆயின, திடர் ஆயின என இயையும். துண்டிக்கப் பெற்ற அம்புகள் கனலைச் சிந்திக் கொண்டு சென்று கடல் நீரைக் குடித்துவிட்டமையால் அக் கடல்நீர் வற்றிச் சேருயின என்க. சேற்றில் இருந்த நீரும் வறண்டமையால் அக்கடலிடம் பொடியாய்த் திடராய்க் காட்சியளித்தன என்க. (53)

9898. வில்லாற்சரந் துரக்கின்றவற்
குடனேமிடல் வெம்போர்
வல்லான்மழு வெழுத்தோமர
மணித்தண்டிருப் புலக்கை
தொல்லாரயில் வாள்சக்கரஞ்
சூலமிவை தொடக்கத்
தெல்லாநெடுங் கரத்தாலெடுத்
தெறிந்தான்செரு வறிந்தான்.

வில்லால் சரம் துரக்கின்றவற்கு,
உடனே, மிடல் வெம்போர்
வல்லான், மழு, எழு, தோமரம்,
மணித்தண்டு, இருப்பு உலக்கை
தொல்ஆர் அயில், வாள், சக்கரம்
சூலம், இவை தொடக்கத்த
எல்லா நெடுங்கரத்தால் எடுத்து
எறிந்தான், செருஅறிந்தான்.

பொ :— வில்லினால் அம்புகளைச் செலுத்துகின்ற இராமனுக்கு (எதிராக) உடனே வலிய கொடிய போரில் வல்லவனும் போர்முறை அறிந்தவனுமாகிய இராவணன், மழு, எழு, தோமரம், அழகியதண்டு, இருப்பு உலக்கை, பழமையான அரியவேல், வாள், சக்கரம், சூலம் இவை முதலான ஆயுதங் களைத் தன் இருபது நெடிய கைகளாலும் எடுத்து இராமன் மேல் எறிவான் ஆனான்.

கு :— ஒருகையில் ஏந்திய வில்லின் வழியாக ஒருகையால் அம்புகளை எய்யும் இராமனுக்கு எதிராக இராவணன், அம்பு களை எய்யாமல், தன் இருபதுகைகளாலும் மழு முதலிய படைக்கலங்களை ஒருசேர எறிந்து இராமனை வெல்ல நினைத் தான் என்க. இவ்வாறு செய்தது இராவணனுடைய போர் செய்யும் திறனைப் புலப்படுத்தலின் ‘செருவறிந்தான்’ என அவன் இங்குக் குறிக்கப் பெற்றான். இருபது கைகளாலும் இருபது வகையான ஆயுதங்களை எறிந்தான் என்பார், ஒன்பது வகையான படைக்கலங்களை கூறி ‘இவை தொடக் கத்த எல்லா நெடுங்கரத்தால் எடுத்து எறிந்தான்’ என்றார். தொடக்கத்த என்பது பலவின் பெயர்; அகரம் தொகுத்தல். எல்லா நெடுங்கரத்தால் என்றது இராவணனுடைய இருபது கைகளாலும் என்றவாறு. மிடல் வெம்போர் வல்லான்—செரு வறிந்தான், எடுத்து எறிந்தான் என மாறிக் கூட்டுக. படைக் கலங்களில் மிகப்பழமையானது வேல் ஆதலின் அதனைத் ‘தொல் ஆர் அயில்’ எனச் சிறப்பித்தார். (54)

9899. வேலாயிர மழுவாயிர
மெழுவாயிரம் விசிகக்
கோலாயிரம் பிறவாயிர
மொருகோல்படக் குறைவ
காலாயின கனலாயின
வுருமாயின கதிய
சூலாயின மழையன்னவன்
றொடைபல்வகை தொடுக்க.

வேல்ஆயிரம், மழுஆயிரம்,
எழுஆயிரம், விசிகக்

கோல் ஆயிரம், பிறஆயிரம்,
ஒருகோல்படக் குறைவ —
கால் ஆயின, கனல் ஆயின,
உரும் ஆயின, கதிய
சூல்ஆயின் மழை அன்னவன்,
தொடை பல்வகை தொடுக்க.

பொ :— கருக்கொண்ட மேகம் போன்றவனுகிய இராமன், காற்றுப் போன்றனவும், நெருப்புப் போன்றனவும் இடியைப் போன்றனவுமான பலவகைப் போக்குகளையுடைய அம்புகளைத் தொடுக்கவே, (அவற்றுள்) ஓரம்பு பட்ட மாத்திரத்தே (இராவணன் விடுத்த) வேல் ஆயிரமும், மழு ஆயிரமும், எழு ஆயிரமும், அம்பு ஆயிரமும் பிற படைக்கலங்கள் ஆயிரக்கணக்கானவும் துளிக்கப் பெற்றனவாயின.

கு :— சூலாயின மழை என்றது, கருக்கொண்ட மேகத்தை. இவ்வுவமை, இராமனது நிறத்தை மட்டுமே அன்றி, அவன் விடும் அம்பு மாரியை உணர்த்தற்கும் ஏதுவாய் நின்றமை உய்த்துணரலாம். காலும், கனலும், உருமும் அம்புகளின் வேறுபட்ட செலவுகளுக்கும் செயற்கடுமைக்கும் உவமையாயின. பல்வகைக் கதியதொடை தொடுக்க என மாறிக்கூட்டுக. தொடை- அம்பு; தொடுக்கப்படுவது என்னும் காரணம் பற்றிய பெயர். கதி - செலவு. 'குறைவன ஆயின' என ஆக்கச் சொல் வருவிக்க. இராவணனது ஆயிரம் படைகளை இராமனது ஒவ் ஓரம்பே அழிக்கத் தக்கனவாயின என அவனது வலிமை புலப்படுத்தியவாறு. (55)

9900. ஒத்துச்செரு விளைக்கின்றதொ
ரளவின்றலை யுடனே
பத்துச்சிலை யெடுத்தான்கணை
தொடுத்தான்பல முகிலாத்
தொத்துப்பட நெடுந்தாரைகள்
சொரிந்தாலெனத் துரந்தான்
குத்துக்கொடு நெடுங்கோல்படு
களிறுமெனக் கொதித்தான்.

ஒத்துச் செரு விளைக்கின்றது ஓர்
அளவின் தலை — உடனே
பத்துச் சிலை எடுத்தான், கணை
தொடுத்தான், பலமுகிலாத்
தொத்துப்பட நெடுந்தாரைகள்
சொரிந்தாலெனத் துரந்தான்—
குத்துக்கொடு நெடுங்கோல் படு
களிறு ஆம் எனக் கொதித்தான்.

பொ :— (இங்ஙனம் இருவரும்) ஒத்துப் போர்புரிகின்ற அமையத்தில், (இராமன் எய்த அம்புகள் தன்படைக்கலங்களை அழித்த தோடமையாமல் தன்மேலும் காற்றுய்க் கனலாய் இடியாய்ப்பட்டு வருத்தினமையால்) கொடிய நீண்ட குத்துக்கோல் பட்ட யானை போலத் துடித்து மனம் கொதித்தவனுன இராவணன் உடனே பத்து விற்களைப் பத்துக் கைகளில் எடுத்து அவற்றில் கணைகளைத் தொடுத்து, (தானே) முகிலாக நின்று நெடிய நீர்த் தாரைகளைக் கொத்துப்படச் சொரிந்தாற் போல எய்தான்.

கு :— மதங்கொண்ட யானையைக் குத்துக் கோலால் குத்தி வழிப்படுத்தல் உண்டு; அவ்வாறு குத்தும்போது அந்த யானை மேலும் சினங்கொண்டு கொதித்துப் பின்பு அடங்குதல் இயல்பு. இராவணன் குத்துக்கோல்பட்ட களிறுபோலக் கொதித்தான் என்றமையால், இராமன் அம்புகள் அவ்விராவணன் படைகளை விலக்கி முறித்ததோடு நில்லாமல், அவன் உடம்பிலும் தைத்து வருத்தினமை புலப்படும். 'இராவணன் சொரிந்த அம்புமாரி மேகம் சொரியும் அம்புமாரி போன்றது என்பார்' தற்குறிப்பேற்ற உவமையாக, அவ்விராவணனே பல முகிலாத் தொத்துப்பட நெடுந்தாரைகள் சொரிந்தாலெனத் துரந்தான், என்ருர். துரத்தல்-செலுத்துதல். தொத்து-கொத்து. எடுத்தான், தொடுத்தான் என்பன முற்றெச்சங்கள். (56)

9901. ஈசன்விடு சரமாரியு மெரிசிந்துறு தறுகண்
நீசன்விடு சரமாரியு மிடையெங்கணு நெருங்கத்
தேசம்முத லெம்பூதமுஞ் செறிவுற்றன செருவில்
கூசிம்மயிர் பொடிப்புற்றன வெனலாயின குலைய.

ஈசன்விடு சரமாரியும், எரிசிந்துறு தறுகண்
நீசன்விடு சர மாரியும் இடை எங்கணும் நெருங்க,
தேசம் முதல் ஐம்பூதமும் செறிவுற்றன செருவில்
கூசிம்மயிர் பொடிப்புற்றன எனலாயின குலேய.

பொ :— இராமன் விடுகின்ற அம்பு மழையும், நெருப்புப் பொறி சிந்துகின்ற (கண்களைக்கொண்ட) அஞ்சாமையுடைய இழிந்தவனுகிய இராவணன் விடுகின்ற அம்பு மழையும் இடையே எல்லாவிடங்களிலும் நெருங்குதலால், (அவ்வம்புகள் தம்மேல்) செறிவாகச் செருகப் பெற்றனவான நிலம் முதலிய ஐம்பூதங்களும், போரில் அச்சங்கொண்டு மயிர்கூச்செறியப் பெற்றன ' என்று சொல்லுவதற்குறியனவாய், நடுங்கா நிற்க.

கு :— இராமனும் இராவணனும் விட்ட அம்புகள், நிலம் முதலிய ஐம்பூதங்களிலும் செறிவாகச்செருகப் பெற்ற தோற்றம், போரில் அச்சங்கொண்டு ஐம்பூதங்களும் மயிர்ச்கூச்செறிந்தன என்று சொல்லுமாறு இருந்தது எனத் தற்குறிப்பேற்ற அணிபெறக் கூறியவாறு. குலேதல்—நடுங்குதல். சரமாரி எங்கணும் நெருங்குதலால், செறிவுற்றனவாய் ஐம்பூதமும் குலேய என இயையும்; செருவில் கூசிம் மயிர் பொடிப்புற்றன எனலாயின என்பது இடைப்பிறவரல். நில முதலிய பூதங்களில் செருகிநின்ற அம்புகள், அச்சத்தால் உடம்பில் நிமிர்ந்து நிற்கும் மயிர்க் கூச்சுப் போன்றன என்க. பொடித்தல்—தோன்றுதல். கூசுதல்—அஞ்சுதல். (57)

இராவணனது தேர் விண்ணில் எழுதல்

9902. மந்தரக் கிரியென மருந்து மாருதி
★ தந்தவப் பொருப்பெனப் புரங்க டாமெனக்
கந்தருப் பந்நகர் விசும்பிற் கண்டென
அந்தரத் தெழுந்ததவ் வரக்கன் றேரரோ.

மந்தரக் கிரி என, மருந்து மாருதி
தந்த அப் பொருப்புஎன, புரங்கள்தாம் என,
கந்தருப்பந் நகர் விசும்பில் கண்டென
அத்தரத்து எழுந்ததுஅவ் அரக்கன் தேர் அரோ.

பொ :— (அப்பொழுது) அந்த இராவணனது தேர், மந்தர மலை போலவும், அனுமன் மருந்து தந்த அம் மருத்துமலை போலவும் (விண்ணில் திரியும்) திரிபுரங்கள் போலவும், விண்ணில் காணப்பட்ட கந்தருவ நகர் போலவும் விண்ணில் எழுந்தது.

கு :— பாற்கடல் கடைய கலுழனால் கொண்டு வரப் பெற்ற மந்தரமலையை மீட்டும் கொடுபோங்கால் அது விண்ணில் எழுவதுபோல இராவணன் தேர் விண்ணில் எழுந்தது என்க. மாருதி கொணர்ந்த மருத்துமலை தரையில்இறங்காமல் விண்ணிலே நின்றமையால் விண்ணில்எழுந்த இராவணன் தேர்க்குஉவமையாயது. புரங்கள் விண்ணில் திரியும் இயல்பின வாதலின் அரக்கன் தேர் விண்ணில் எழுவதற்கு உவமையாயின. கந்தருப்ப நகரம் உற்பாதமாக விண்ணில் தோன்றி மறையும் இயல்பினது ஆதலை, 'கந்தர்ப்ப நகரம் எங்கணும் தெரியுமால்' (சுந்தர-காட்சிப்-45) என்பதால் அறியலாம். கந்தருப்பந் நகர் என்றது விரித்தல் விகாரம். இறுதியில் கூறிய இவ்வுவமையால் இராவணனது அழிவைக் குறிக்கும் உற்பாதமாகவே அவன் தேர் விண்ணில் எழுந்தது என்ற குறிப்புத் தோன்றுதல் காணலாம். மந்தர மலையும் மருத்துமலையும் இராவணனது தேரின் பெருந் தோற்றத்திற்கும், திரிபுரம் அவன்தேர் விண்ணில் திரிதற்கும் பிறகு அழிய இருப்பதற்கும், கந்தருப்ப நகரம் அவன் தேர் விண்ணில் தோன்றி உடனே அழியப்போகின்றதைக் காட்டுதற்கும் உவமையாக்கப் பட்டன எனலாம். இது,பல்பொருள் உவமையணி. (58)

இராமன் காண வானரசேனை அழிதல்

9903. எழுந்துயர் தேர்மிசை யிலங்கை காவலன்
பொழிந்தன சரமழை யுருவிப் போதலால்
ஒழிந்தது மொழிகில தென்ன வொல்லெனக்
கழிந்தது கவிக்குல மிராமன் காணவே.

எழுந்து உயர் தேர்மிசை இலங்கை காவலன்
பொழிந்தன சரமழை உருவிப் போதலால்,
ஒழிந்ததும் ஒழிகிலது என்ன, ஒல்லெனக்
கழிந்தது, கவிக்குலம், இராமன் காணவே.

பொ :— விண்ணில் எழுந்து உயர்ந்த தேரின் மேலிருந்த இலங்கை அரசனாகிய இராவணன் பொழிந்த அம்புமழை வானர சேனைமேல் பட்டு உருவிச் செல்வதால் இதற்குமுன் அழியாது எஞ்சியிருந்த வானரசேனையும் இனி எஞ்சி நில்லாது அழியும் என்ன இராமன் எண்ணிக் கண்டு கொண்டிருக்கவே, வானரக்கூட்டம் விரைந்து இறந்தொழிந்தது.

கு :— ஒழிந்தது என்றது, இதுவரைப்போரில் இறந்தது போக எஞ்சியிருந்த வானரப்படையை. ஒழிதல்—எஞ்சியிருத்தல். ஒழிகிலது என்றது, இனி எஞ்சி நில்லாது; அழியும் என்றவாறு. என்ன இராமன் காணவே கவிக்குலம் கழிந்தது என இயையும். பாடிகாவல் போல இலங்கைகாவலன் இயல்பாயது. (59)

இராமன் தேரை விண்மிசைவிடுமாறு
மாதலிக்குச் சொல்லுதல்

9904. முழவிடு தோளொடு முடிகொள் பஃறலை
விழவிடு வேனினி விசும்பு சேமமோ
மழவிடை யனையநம் படைஞர் மாண்டனர்
எழவிடு தேரையென் றிராமன் கூறினான்.

'முழவு இடு தோளொடு முடிகொள் பல்தலை
விழவிடுவேன் இனி; விசும்பு சேமமோ?
மழவிடை யனைய நம் படைஞர் மாண்டனர்
எழவிடு, தேரை' என்று இராமன் கூறினான்.

பொ :— 'முழவை ஒப்பிடுதற்குரிய தோளோடு, முடிகளை அணிந்து கொண்டுள்ள பல தலைகளும் விழ அம்புவிடப் போகின்றேன்; இனி, அவ்விராவணனுக்கு ஆகாயம்பாதுகாப்பாக அமையுமோ? இளைய எருதுபோன்ற போர்த்திறமிக்க நமது படை வீரர்கள் மாண்டு விட்டனர்; (இனிக் காலம் தாழ்த்தலாகாது;) விண்ணில் எழுமாறு தேரைச் செலுத்து' என்று இராமன் மாதலியை நோக்கிக் கூறினான்.

கு :— தோளோடு பல்தலை விழ அம்புவிடுவேன் எனச் செயப்படுபொருள் வருவிக்க. சேமம்—பாதுகாப்பு. தரையில் நின்று போர்செய்து கொண்டிருந்த இராவணன், விண்ணில் தேரோடு எழுந்தது, தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் நோக்கத்தால்தான்

என்பதறிந்த இராமன், 'இனி விசும்பு சேமமோ?' என வினவிப் பரிகசித்தவாறு. தேரை விண்ணில் எழவிடு என்க. இடு, உவம உருபு; சிந்தாமணி 2423 ஆம் செய்யுளைக் காண்க. (60)

### மாதலி தேரை விண்ணில் செலுத்துவது

9905. அந்துசெய் குவெனென வறிந்த மாதலி
உந்தினன் றேரெனு மூழிக் காற்றினை
இந்துமண் டலத்தின்மே லிரவி மண்டலம்
வந்தென வந்ததம் மானத் தேரரோ.

'அந்து செய்குவென்' என அறிந்த மாதலி
உந்தினன், தேர்எனும் ஊழிக்காற்றினை;
இந்து மண்டலத்தின்மேல் இரவி மண்டலம்
வந்தென, வந்தது, அம் மானத்தேர் அரோ.

பொ :— (இராமன் கூறியதை) அறிந்து கொண்ட மாதலி 'அவ்வாறு செய்குவேன்' எனக்கூறிக் கொண்டு தேர் என்கின்ற ஊழிக்கடைக் காற்றினை விண்ணில் செலுத்தினன்; அந்தப்பெருமை பொருந்திய தேர், சந்திர மண்டலத்தின்மேல் இரவிமண்டலம் வந்தாற்போல விண்ணில் சந்திரமண்டலத்தைக் கடந்து சென்றது.

கு :— அந்து—அவ்வாறே; திசைச்சொல்; கன்னடத்தில் உள்ளதாகக் கூறுவர். பேர்தான் தேர் என்றிருக்கின்றது; தன்மையால் ஊழிக்காற்றே என்பார், தேரெனும் ஊழிக்காற்றினை என்றார். ஊழியிறுதியில் உலகை அழிக்க வீசும் காற்றுப்போல விரைந்து சென்று அழிவைச் செய்யவல்ல தேர் என்றவாறு. இந்து — சந்திரன். ஒளியால் சூரியனை ஒத்துள்ள தேர் சந்திரமண்டலத்திற்கு மேல் சென்றதற்கு 'இந்துமண்டலத்தின்மேல் இரவி மண்டலம் வந்தென' என இல்பொருளுவமை கூறினார். உந்துதல்—செலுத்துதல். வந்தது, இடவழுவமைதி. இனி, இராவணன் தேரை அணுகி வந்தது என்பது கருத்தாகலின் இலக்கண முடையதே எனலும் ஆம். (61)

9906. இரிந்தன மழைக்குல மிழுகித் திக்கெலாம்
உரிந்தன வுடுக்குல முதிர்ந்து சிந்தின

நெரிந்தன நெடுவரைக் குடுமி நேர்முறை
திரிந்தன சாரிகை தேருந் தேருமே.

இரிந்தன மழைக்குலம், இழுகித் திக்கெலாம்;
உரிந்தன உடுக்குலம், உதிர்ந்து சிந்தின;
நெரிந்தன நெடுவரைக் குடுமி; நேர்முறை
திரிந்தன சாரிகை, தேரும் தேருமே.

பொ :— (இராமன்) தேரும் (இராவணன்) தேரும் (வஞ்சனையின்றி) நேர் முறையில் சாரிகை திரிந்தன; அவை திரியும் வேகத்தால் மேகக் கூட்டங்கள் திசையெலாம் பரவி இரிந்தோடின; நட்சத்திரக் கூட்டங்கள் (அத்தேர்கள் உராய்தலால் தோல்) உரிந்தனவாய்ப் பின் உதிர்ந்து சிந்தின; நீண்ட மலைச் சிகரங்கள் நெரிவுற்றன.

கு :— இழுகுதல்—பரவுதல். உடு—விண்மீன்கள். இரண்டு தேரும் மாறி மாறிச் சுற்றி வருதலையே சாரிகை திரிதல் என்பர். (62)

சாரிகையின் விளைவு

9907. வலம்வரு மிடம்வரு மறுகி வானொடு
நிலம்வரு மிடம்வல நிமிரும் வேலையும்
அலம்வருங் குலவரை யனைத்து மண்டமும்
சலம்வருங் குலால்மகன் திகிரித் தன்மைபோல்.

வலம் வரும்; இடம் வரும்; மறுகி வானொடு
நிலம் வரும்; இடம் வலம் நிமிரும் வேலையும்
அலம்வரும் குலவரை அனைத்தும், அண்டமும்,
சலம்வரும், குலால்மகன் திகிரித் தன்மைபோல்.

பொ :— (அவ் இருதேரும்) வலமாகவரும் சிறிது போழ்து; பின் இடமாக வரும். இவ்வாறு சுழன்று, (பின்) வானத்திலிருந்து நிலத்திற்குவரும்; பின் இடமும் வலமுமாக விண்ணில் நிமிர்ந்து செல்லும்; (இவ்வாறு திரியும் வேகத்தால்) கடலும், அமைதியாகப் பொருந்தியுள்ள குலமலைகள் அனைத்தும், அண்டமும், குயவனது சக்கரத்தின் தன்மைபோலச் சுழலும்.

கு :— விண்ணில் வலமும் இடமுமாக மாறித்திரிவதேயன்றி, மண்மிசையும் வரும், பின் விண்மிசை உயர்ந்தும் செல்லும் அவ்விருதேர்களும் என்றவாறு. இத்தேர்கள் இவ்வாறு சாரிகை திரியும் வேகத்தால் கடலும் மலையும் அண்டமும் குயவன் சக்கரம் போலச் சுழலுவன ஆயின என்க. அலம்—அமைதி. அமைதியாகப் பொருந்தியுள்ள குலமலைகள் என்க. சலம் வருதல்—சுழலுதல். சுழற்சிக்குக் குலால் மகன் திகிரித் தன்மை உவமை. ''குலால் மகன் முடுக்கிவிட்ட மட்கலத் திகிரிபோல'' (மிதிலைக்—13) என முன்னும் இவ்வுவமை வந்துள்ளமை காணலாம். இனி, சலம் வரும் குலால் மகன் என இயைத்துக் கோபம் வரப்பெற்ற குயவன் முடுக்கிவிடும் சக்கரம் போல வேலையும் குலவரை அனைத்தும் அண்டமும் அலம் வரும் என முடிப்பினும் ஆம். இப்பொருட்கு அலம் வரல், சுழலுதல் எனக்கொள்க. (63)

### சாரிகையின் விரைவு — 9908 - 9913

9908. எழும்புக ழிராமன்றே ரரக்கன் றேரிதென்
றுழுந்துருள் பொழுதினெவ் வுலகுஞ் சேர்வன
தழும்பிய தேவருந் தெரிவு தந்திலர்
பிழம்பின திரிவன வென்னும் பெற்றியார்.

'எழும்புகழ் இராமன் தேர்;
அரக்கன்தேர் இது' என்று
உழுந்து உருள் பொழுதின்
எவ் உலகும் சேர்வன,
தழும்பிய தேவரும்
தெரிவு தந்திலர்,
பிழம்பின திரிவன
என்னும் பெற்றியார்.

பொ :— உழுந்து உருளுகின்ற சிறுநேரத்திற்குள் எவ்வுலகமும் சுற்றித் திரிந்தனவாகிய அத்தேர்களை, வளரும் புகழையுடைய இராமனது தேர் இது; அரக்கன் தேர் இது; என்று, பன்முறை பார்த்துப் பழகிய தேவரும் தெளியாதவராய் 'வடிவமுடையன திரிகின்றன' என்று மட்டுமே உணர்கின்ற தன்மையராயினர்.

கு :— சேர்வன வினைப்பெயர்; சேர்வனவான தேர்களை என்க. காலச் சிறுமைக்கு உழுந்துருள் பொழுதைக் காட்டுவது மரபு. எழும்புகழ் என்றது வளர்ந்துகொண்டேயிருக்கும் புகழை. தழும்புதல் என்றது, பழகுதலை யுணர்த்தியது. (சிலம்பு 16-152 உரை காண்க.) தேவரும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. பழகிய தேவர்களே தெளியாதபோது பழகாத பிறர் தெளியாமை வியப்பன்று என்றவாறு. பிழம்பு—வடிவம். வடிவுடையன, திரிகின்றன என்ற அளவே தேவர்கள் தெளியலாயினர்; இது இராமனது தேர்; இது இராவணனதுதேர் என்று பகுத்துணர இயலாதவராயினர் என்றவாறு. இதனால், இமையா நாட்டமுடைய தேவர்களும் தெரியமுடியாத வேகத்தில் இருவர் தேரும் சாரிகை திரிந்தன என்பது புலப்படுத்தியவாறு. எவ்வுலகுஞ் சேர்வனவாகிய தேர்களைத் தேவரும் இது இது என்று தெளிவு தந்திலராய்ப் பிழம்பின திரிவன என்னும் பெற்றியராயினர் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. (64)

9909. உக்கிலா வுடுக்களு முருள்க டாக்கலின்
நெக்கிலா மலைகளு நெருப்புச் சிந்தலின்
வக்கிலாத் திசைகளு முதிரம் வாய்வழிக்
கக்கிலா வுயிர்களு மில்லைக் காண்பன.

உக்கிலா உடுக்களும், உருள்கள் தாக்கலின்,
நெக்கிலா மலைகளும், நெருப்புச் சிந்தலின்,
வக்கிலாத் திசைகளும், உதிரம் வாய்வழிக்
கக்கிலா உயிர்களும், இல்லை, காண்பன.

பொ :—(அத் தேர்களின்) சக்கரங்கள் தாக்குதலால் சிந்தி விழாத நட்சத்திரங்களும், நெகிழ்ந்து பிளவாத மலைகளும், (ஒன்றோடு ஒன்று தாக்குங்கால்) அத்தேர்கள் சிந்தும் நெருப்பினால், வேகாத திசைகளும், வாய்வழியே இரத்தம் கக்காத உயிர்களும் காணப்படுவனவாக இல்லை.

கு :— அந்தத் தேர்களின் சக்கரங்கள் தாக்குதலால் நட்சத்திரங்கள் எல்லாம் உக்கன; மலைகள் எல்லாம் நெக்கன; அத்தேர்கள் தாக்கிச் சிந்திய நெருப்பால் திசைகள் எல்லாம் வெந்தன; உயிர்கள் எல்லாம் வாய்வழி உதிரம் கக்கின என்றவாறு. கக்கிலா உயிர்களும் காண்பன இல்லை என்ற இரு எதிர்மறைகள்

கக்கும் உயிர்களே உள்ளன என்ற ஓர் உடன்பாட்டு வினையை உணர்த்தின. ''கழலுலாங் காலும் கால வேலுலாங் கையுங் காந்தும் அழலுலாங் கண்ணு'ரில்லா ஆடவர் இல்லை'' (சுந்தர-ஊர்தேடு-36) என்பது இங்கு நினைக்கத்தகும். உருள்கள் தாக்குதலால் இரு நிகழ்ச்சிகளும், நெருப்புச் சிந்துதலால் இரு நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தமை விளக்கியவாறு. நெருப்புச்சிந்தலின் என்றுராயினும் சிந்தியநெருப்பின் என்பதே கருத்தாகக்கொள்க. தேர்கள் சிந்திய நெருப்பால் திசைகள் வதங்கின; உயிர்கள் உதிரம் கக்கின என்க. வக்குதல் — வதக்குதல் ; வாட்டுதல். 'கொழுப்பரிந்துவந்தன கொண்டு எழுந்தழலில் வக்குவன வக்கு வித்து' (பெரிய புரா-145) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். (65)

9910. இந்திர னுலகத்தா ரென்ப ரென்றவர்
சந்திர னுலகத்தார் என்பர் தாமரை
அந்தண னுலகத்தா ரென்ப ரல்லரால்
மந்தர மலையினு ரென்பர் வானவர்.

'இந்திரன் உலகத்தார்' என்பர் ; என்றவர்,
'சந்திரன் உலகத்தார்' என்பர் ; 'தாமரை
அந்தணன் உலகத்தார்' என்பர் ; 'அல்லரால்,
மந்தர மலையினர்' என்பர் — வானவர்.

பொ :— (போரைக் காண வந்த) தேவர்கள், இராம இராவணர் இந்திரன் உலகத்தில் உள்ளார் என்று சொல்லு வார்கள் ; அவ்வாறு சொன்னவர்களே மீண்டும் 'சந்திரனது உலகத்தார்' என்பார்கள்; (பின்பு) 'தாமரைமலரில் தங்கி யுள்ள பிரமன் உலகத்தில் உள்ளார்' என்பார்கள். (பின்) 'அல்லர்; மந்தரமலையில்தான் உளர்' என்பார்.

கு :— இமையாநாட்டமுடைய தேவர்களே இங்குள்ள என வரையறை செய்து கூற முடியாத வண்ணம், மிகத் தொலை விலுள்ள வெவ்வேறிடங்களுக்கு இராம இராவணர்களின் தேர் விரைந்து செல்கின்றன என்றவாறு. (66)

9911. பாற்கட னடுவஞு ரென்பர் பல்வகை
மாற்கட லினுக்குமவ் வரம்பினு ரென்பர்

மேற்கட லாரென்பர் கிழக்குளா ரென்பர்
ஆர்ப்பிடை யதுவென்ப ரறியும் வானவர்.

'பாற்கடல் நடுவணர்' என்பர்; 'பல்வகை
மால்கடலினுக்கும்அவ் வரம்பினர்' என்பர்;
'மேல்கடலார்' என்பர்; 'கிழக்கு உளார்' என்பர்;
'ஆர்ப்பு இடை அது' என்பர்–அறியும் வானவர்.

பொ :— எல்லாவற்றையும் அறியும் இயல்புடைய தேவர்கள் 'இராம இராவணர் பாற்கடலின் நடுவில் இருக்கின்றனர்கள்' என்பர்; பின், 'பலவகையான பெரிய கடல்களுக்கும் அப்பாலுள்ள அந்த வரம்பில் உள்ளார்' என்பர்; பின், 'மேற்குக்கடலில் இருக்கின்றனர்' என்பர்; பின், 'கிழக்குக்கடலில் இருக்கின்றனர்' என்பர்; பின் ஆரவாரத்திற்கிடையே 'அது' என்று (ஒன்றைச் சுட்டிக்காட்டுவர்.)

கு :— கடற் பரப்பின்மேல் பறந்துதிரிகின்ற அவர் தேர்களைக் கண்டு விரைவாக அவை இடம் மாறுவதை யறிந்து இவ்வாறு மாற்றி உரைத்த தேவர்கள் தம் கண் முன் அத்தேர் வருதலைக் கண்டு ஆரவாரம் செய்துகொண்டு 'அது' எனச் சுட்டிக் காட்டினர் என்றவாறு. கிழக்கு என்றது கீழ்கடலை. அறியும் வானவர்க்கும் அறியவொண்ணாதவண்ணம் விரைந்து திரிந்தனர் என்றவாறு. (67)

9912. மீண்டன வோவென்பர் விசும்பு விண்டுகக்
கீண்டன வோவென்பர் கீழ வோவென்பர்
பூண்டன புரவியோ புதிய காற்றென்பர்
மாண்டன வுலகமென் றுரைக்கும் வாயினர்.

'மீண்டனவோ?' என்பர்; 'விசும்பு விண்டு உகக்
கீண்டனவோ?' என்பர்; 'கீழவோ?' என்பர்;
'பூண்டன புரவியோ? புதிய காற்று!' என்பர்—
'மாண்டன உலகம்' என்று, உரைக்கும் வாயினர்.

பொ :— 'உலகங்கள் இத்தேர்களின் சாரிகையால் மாண்டன' என்று வருந்தியுரைக்கும் வாயினையுடைய தேவர்கள், 'தேர்கள் மீண்டனவோ' என்று கூறுவர். 'விண் முகடு

பிளந்து சிந்துமாறு கிழிந்தனவோ?' என்று கூறுவார்கள்; 'கீழுள்ள தரையிடத்தனவாயினவோ?' என்பர்; இத்தேர்களின் நுகம் பூண்டுள்ளவை, குதிரைகளோ? (அல்ல) புதிய காற்றுத்தான்!' என்று சொல்வார்கள்.

கு:— முன்னைச் செய்யுளில் அது எனச்சுட்டிக்காட்டியவர், 'மீண்டனவோ?' எனக் கூறலாயினர். விசும்பு என்றது, விண் முகட்டினை. விசும்பில் திரிந்தவர் விரைவில் தரையிடத்தவராகக் கண்டவர், விசும்பு விண்டுகக் கீண்டவோ? எனவும் கீழவோ? எனவும் ஐய வாய்பாட்டால் வியந்து கூறியவாறு. தேர்பூண்டவை புரவிகளாயிருப்பின் இவ்வளவு விரைவாகச் சாரிவரல் இயலாது என்ற கருத்தினராதலின் 'புதிய காற்று' என அவநுதி அணிபெறக் கூறியவாறு. "வான் வழங்கியற்கை வளிபூட்டினையோ? மானுருவாக நின் மனம் பூட்டினையோ?" (அகநா—384) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (68)

9913. ஏழுடைக் கடலினுந் தீவொ ரேழினும்
ஏழுடை மலையினு முலகொ ரேழினும்
சூழுடை யண்டத்தின் சுவர்க ளெல்லையா
ஊழியிற் காற்றெனத் திரிந்த வோவில.

ஏழுடைக் கடலினும், தீவு ஓர் ஏழினும்,
ஏழுடை மலையினும், உலகு ஓர் ஏழினும்,
சூழுடை அண்டத்தின் சுவர்கள் எல்லையா,
ஊழியில் காற்று எனத் திரிந்த, ஓவில.

பொ:— ஏழுகடலினும் ஏழு தீவினும், ஏழுமலையினும், ஏழ்உலகினும், சுற்றியுள்ள அண்டத்தின் சுவர்கள் எல்லையாக உள்ள இடங்களில் எல்லாம் ஊழியிறுதியில் வீசும் காற்றுப் போல நீக்கமின்றித் திரிந்தன.

கு:— ஏழ்கடலாவன:— உவர்நீர்க்கடல், நன்னீர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், என்பன. ஏழுதீவுகள்—சம்புத்தீவு, பிலவுத்தீவு, குசத்தீவு, கிரௌஞ்சத்தீவு, சாகத்தீவு, சான்மலத்தீவு, புட்கரத்தீவு. ஏழுமலை:— மகேந்திரம், மலயம், சையம், சுக்திமந்தம், இருக்ஷபர்வதம், விந்தியம், பாரியாத்திரம். ஏழு

லகம் :— பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் மகாலோகம், தபோலோகம், ஜனலோகம், சத்தியலோகம் என்பன. (69)

### இராவணன் வீசிய அம்புகள் கடல் முதலிய இடங்களில் எல்லாம் மழைத்துளிகளைப்போல வீழ்தல்

9914. உடைக்கட லேழினு முலக மேழினும்
இடைப்படுந் தீவினு மலையொ ரேழினும்
அடைக்கலப் பொருளென வரக்கன் வீசிய
படைக்கல மழைபடு துளியின் பான்மைய.

உடைக்கடல் ஏழினும் உலகம் ஏழினும்
இடைப்படும் தீவினும் மலை ஓர் ஏழினும்
அடைக்கலப்பொருள் என அரக்கன் வீசிய
படைக்கலம், மழைபடு துளியின் பான்மைய.

பொ :— அடைக்கலப் பொருள் என (த் தேவர்களால் அளிக்கப்பட்டு) இராவணனால் வீசப்பட்ட படைக்கலங்கள், உலகில் உள்ள எழு கடலின்கண்ணும் ஏழு உலகங்களிலும் அவ்வுலகங்கட்கு நடுவேயுள்ள எழு தீவுகளிலும் ஏழு மலைகளிலும் மேகத்திலிருந்து வீழ்கின்ற மழைத் துளிகளின் தன்மையவாக வீழ்ந்தன.

கு :— ''தன்பால் அடைக்கலம் என்ன வீசன் அளித்தன தேர்மேல் ஆக்கி'' (இந்திரசித்து வதைப்-14) என்று முன்னம் வந்துள்ளமையால் இராவணனுக்கும் தேவர்கள் தம்படைக்கலங்களை அடைக்கலமாகக் கொடுத்திருந்தார்கள் என்பது கொள்ளலாம். அடைக்கலப்பொருள் எனத் தேவர்களால் அளிக்கப்பட்டு என வேண்டும் சொற்களை இசையெச்சமாக வருவிக்க. அரக்கனால் வீசப்பட்ட என மூன்றனுருபும் படுசொல்லும் விரித்துரைக்க. சாரிகை திரிந்துகொண்டே இராவணன் வீசிய படைக்கலங்கள், சாரிகை திரியும் வேகத்தில் இராமன்மேல்படாமல் எழுகடல் முதலிய இடங்களில் மழைத்துளிகளைப்போல மிகுதியாக வீழ்ந்தன என்க. பான்மைய வாயின என ஆக்கச் சொல் வருவிக்க. துளியின் பான்மையவாதல் என்றது, பலவாக வீழ்தலை. (70)

இராவண.ன் விடுத்த படைக்கலங்களை அறுத்தலும் தடுத்தலும் அன்றி, வெகுண்டு இராமன் போர் செய்யாமை

9915. ஒறுத்துல கனைத்தையு முரற்று மோட்டின
இறுத்தில விராவண னெறிந்த வெய்தன
அறுத்ததுந் தடுத்தது மன்றி யாரியன்
செறுத்தொரு தொழிலிடை செய்த தில்லையால்.

ஒறுத்து உலகு அனைத்தையும்
உரற்றும் ஓட்டின ;
இறுத்தில ; இராவணன்
எறிந்த எய்தன
அறுத்ததும் தடுத்ததும்
அன்றி, ஆரியன்
செறுத்து ஒரு தொழில் இடை
செய்தது இல்லையால்.

பொ :— உலகமுழுவதையும் அழித்து ஆரவாரித்துக் கொண்டு திரிகின்ற ஓட்டத்தையுடையனவும் முனையொடியா தனவுமாய், இராவணனுல் எறியப்பட்ட வேல் முதலிய வற்றையும் எய்யப்பட்ட அம்பு முதலியனவற்றையும் இராமன், அறுத்தொழித்ததும் தடுத்தொழித்ததுமே அன்றி, (அவ் இராவணனைச்) சினந்து ஒரு தொழிலும் செய்தது இல்லை.

கு :— இராவணனுடைய படைக்கலங்களின் பெருமையைப் புலப்படுத்துவராய், உலகனைத்தையும் ஒறுத்து உழலும் ஓட்டின எனவும், 'இறுத்தில' எனவும் கூறினுர். ஒறுத்தல்-அழித்தல். உழலுதல்-திரிதல். ஓட்டின-ஓட்டத்தையுடையன. பிறர்மேல் விடாத புதுமையான படைகள் என்பார், 'இறுத்தில' என்ருர். இறுத்தல் முனை முதலிய முறிதல். போர்செய்து பழகிய படைகளாயின் ''பகைவர்க்குத்திக் கோடு நனிசிதைந்'' திருத்தல் (புறநா—95) இயல்பு ஆதல் நினைவு கூர்க. அறுத்தல்-இருகூருகச் செய்தல். தடுத்தலாவது, அறுக்காமல் வலிவிழந்து வீழச்செய்தல். இராமனுடைய வீரப்பெருமையும் உள்ளத்துரமும் தோன்ற 'செறுத்தொரு தொழிலிடை செய்ததில்லையால்' என்ருர். இதனுல் இராவணன் செறுத்துப் பல படைக்கலங்

களை வீசிக்கொண்டேயிருந்து தன் ஆற்றல் குறையப்பெற்ருன் என்பதும் புலப்படுத்தியதாயிற்று. (71)

இப்பாடலின்பின் 45, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

9915 (a) மூவுலகடங்கலு மூடுமண்டமேல்,
தாவினன் தேரொடு மரக்கன் தாவியே,
கூவினன் அங்கு அறைகூவக் கொண்டலும்,
மேவினன் அரக்கனை விடாது பற்றியே.

(b) அண்டமோ ராயிர கோடி எங்கணும்,
மண்டினர் செருத்தொழில் மலைதல் விட்டிலர்;
அண்டர்கள் கலங்கினர் அரக்கரா யுள்ளோர்,
உண்டினிக் கருவென வோதற் கில்லையால்.

இரு தேரும் இலங்கையை எய்துதல்

9916. விலங்கலும் வேலையு மேலுங் கீழரும்
அலங்கொளி திரிதரு முலக னைத்தையும்
கலங்குறத் திரிந்ததோ ரூழிக் காலக்காற்
றிலங்கையை யெய்தின விமைப்பின் வந்தரோ.

விலங்கலும் வேலையும், மேலுங் கீழரும்,
அலங்கு ஒளி திரிதரும் உலகு அனைத்தையும்,
கலங்குறத் திரிந்தது ஓர் ஊழிக்காலக் காற்று
இலங்கையை எய்தின இமைப்பின் வந்து அரோ.

பொ.— மலைகலையும், கடல்களையும், மேலுலகத்தையும் கீழுலகத்தையும், அசைகின்ற சூரிய சந்திரர் ஆகிய ஒளிகள் திரிகின்ற உலகம் எல்லாவற்றையும் கலங்குறச் செய்து திரிந்ததாகிய ஒப்பற்ற ஊழிக்காலத்துக் காற்றுப் போன்றனவாகிய அத் தேர்கள், இமைப் பொழுதில் இலங்கையை வந்து அடைந்தன.

கு :— கலங்குறச்செய்து திரிந்ததோர் ஊழிக்காற்று என ஒரு சொல் வருவித்தல் வேண்டும். ஊழிக்காலக்காற்று என்பது உவமை ஆகுபெயராய் அவர்தம் தேர்களை யுணர்த்தின ஆகலின் அவ்வெழுவாய்க்கேற்ப, எய்தின என்ற பலவின்பால்வினை கொடுக்கப்பெற்றது. மேல் 'ஊழியில் காற்றெனத் திரிந்த

ஓவில' (69) என உவமித்துக் கூறியதை இங்கு உவமையாகு பெயராய்க் கூறியவாறு. கீழரும் என்புழி அர் பகுதிப் பொருள் விகுதி. முன்னர், பின்னர் என்றாற்போல; (குறள்-435) காண்க. (72)

### தேர்பூண்ட புரவிகளின் பெருமை

9917. உய்த்துல கனைத்தினு முழன்ற சாரிகை
மொய்த்தது கடலிடை மணலின் மும்மையால்
வித்தகர் கடவிய விசயத் தேர்ப்பரி
எய்த்தில வுயிர்த்தில விரண்டு பாலவும்.

உய்த்து உலகு அனைத்தினும் உழன்ற சாரிகை
மொய்த்தது, கடலிடை மணலின் மும்மையால்;
வித்தகர் கடவிய விசயத் தேர்ப்பரி,
எய்த்தில உயிர்த்தில, இரண்டு பாலவும்.

பொ :— இரு தேர்களும் உலகம் எல்லாவற்றினும் செலுத்தப் பட்டுத் திரிந்த சாரிகைகள் கடலிடை நெருங்கியுள்ள மணலினும் மும்மடங்கு ஆகும்; (அத்துணைச் சாரிகைள் திரிந்தும்) திறமை மிக்க தேர்ப்பாகர் செலுத்திய வெற்றி பொருந்திய தேர்க்குதிரை கள் இருபக்கத்தனவும் இளைக்கவும் இல்லை, பெருமூச்சுவிடவும் இல்லை.

கு:—உய்த்து உழன்றசாரிகை கடலிடை மொய்த்தது ஆகிய மணலின் மும்மையால் என இயையும். வித்தகர் என்றது, திறமைமிக்க தேர்ப்பாகரை. தேர்ப்பரி இரண்டு பாலவும் எய்த் தில; உயிர்த்தில என்க. எண்ணமுடியாத பேரளவிற்குக் கடல் மணலை ஒப்பிடுதல் மரபு. (73)

### இராமன் ஏறிய தேரின் கொடியை இராவணன் அறுத்தல்

9918. இந்திரன் றேரின்மே லுயர்ந்த வேந்தெழில்
உந்தரும் பெருவலி யுருமி னேற்றினைச்
சந்திர னனையதோர் சரத்தி னுற்றரைச்
சிந்தின னிராவண னெரியுஞ் சிந்தையான்.

இந்திரன் தேரின்மேல் உயர்ந்த ஏந்து எழில்
உந்தரும் பெருவலி உருமின் ஏற்றினை,
சந்திரன் அனையது ஓர் சரத்தினால், தரைச்
சிந்தினன், இராவணன், எரியும் சிந்தையான்.

பொ :— இராமன் ஏறியுள்ள இந்திரனுக்குரிய தேரின்மேல் உயர்ந்து தோன்றுகின்ற மிக்க அழகையுடையதும் தள்ளற்கு அரிய பெருவலியுடையதும் ஆகிய இடிக்கொடியை, எரிகின்ற சிந்தையுடையவனாகிய இராவணன், சந்திரனைப் போன்ற ஓர் அம்பினால் தரையில் தள்ளினான்.

கு :— உருமின் ஏற்றினை என்றது, தானியாகு பெயரால் இடி எழுதிய கொடியை உணர்த்தியது. உயர்ந்த உருமு, ஏந்தெழில் உருமு, உந்தரும் பெருவலி உருமு எனத்தனித்தனி இயையும். சந்திரன் என்றது இங்குப் பிறைச்சந்திரனை; பிறைமுகக் கணையையே சந்திரனனையதோர் சரம் என்றார். (74)

இடிக்கொடி பாய்ந்த கடலின்நீர் சுருங்குதல்

9919. சாய்ந்தவல் லுருமுபோ யரவத் தாழ்கடல்
பாய்ந்தவெங் கனலென முழங்கிப் பாய்தலும்
காய்ந்தபே ரிரும்பின்வன் கட்டி காலுறத்
தோய்ந்தநீ ராமெனச் சுருங்கிற் றாழியே.

சாய்ந்த வல் உருமுபோய் அரவத் தாழ்கடல்
பாய்ந்த வெங்கனல் என முழங்கிப் பாய்தலும்,
காய்ந்த பேர் இரும்பின் வன்கட்டி காலுறத்
தோய்ந்த நீர்ஆம் எனச் சுருங்கிற்று, ஆழியே.

பொ :— தரையில் சாய்ந்த வலிய இடி சென்று ஒலியையுடைய ஆழ்ந்த கடலில், பாய்ந்த வெப்பமிக்க வடவைக் கனல் போல முழங்கிக்கொண்டு பாய்ந்த அளவில், நெருப்பில் காய்ந்த பெரிய இரும்பின் வன்மையான கட்டி முழுவதும் பொருந்தத் தோயப்பெற்ற நீரைப்போலக் கடல்நீர் சுருங்கிற்று.

கு :— அரவம்—ஒலி. தாழ்தல் இங்கு ஆழ்தலையுணர்த்தியது. ஆழ்கடல் எனப் பிரிக்கின் மோனை இலதாகும். காலுறத் தோய்தலாவது முழுவதும் தோய்தல். காய்ந்த இரும்பு, நீரை உண்டு

விடுதலின் தோய்ந்த நீர் சுருங்குதல் இயல்பாகும். ''கருங்கைக் கொல்லன் செந்தீமாட்டிய, இரும்புண்நீரினும் மீட்டற்கரிது என'' (புறநா-21) என்பதும், ''இரும்புண்ட நீர் மீள்கினும் என்னுழை யில், கரும்புண்ட சொல் மீள்கிலள் காணுதியால்'' (சடாயு வதைப்-102) என்பதும் இங்கு ஒப்புநோக்குதற்குரியன. சுருங் குதலாவது நீர் குறைதல். (75)

*மாதலிமார்பில் இராவணன் அம்புகளை அழுத்தல்*

9920. எழுத்தெனச் சிதைவிலா விராமன் றேர்ப்பரிக்
குழுக்களைக் கூர்ங்கணைக் குப்பை யாக்கிநேர்
வழுத்தரு மாதலி வயிர மார்பிடை
அழுத்தினன் கொடுஞ்சர மாறெ டாறரோ.

எழுத்து எனச் சிதைவு இலா
இராமன் தேர்ப்பரிக்
குழுக்களைக் கூர்ங்கணைக்
குப்பை ஆக்கி, நேர்
வழுத்தரும் மாதலி
வயிர மார்பிடை
அழுத்தினன் கொடுஞ் சரம்,
ஆறெடு ஆறுஅரோ.

பொ:— இராமன் ஏறிய தேரில் பூட்டியுள்ள, வேதம் போல, எப்படையினும் சிதைக்க முடியாத குதிரைகளின் கூட்டத்தைக் (அழிக்கமுடியாமையால்) கூரிய அம்புகளின் குவியலாக ஆக்கி, உவமை சொல்லுதற்கு அரிய மாதலியின் வயிரம்போன்ற வலிய மார்பில் பன்னிரண்டு கொடிய அம்பு களை அழுத்தினன்.

கு:— எழுத்து என்றது வேதத்தை; வேதம் படைக்கலங் களால் சிதையாதது போல இந்திரன் தேர்க்குதிரைகளும் எப்படையாலும் அழிவெய்தாதன ஆதலின் அவற்றின்மேல் அம்பு களைப்பெய்து குவித்தானே அன்றி அவ்வம்புகளால் அக் குதிரைகளுக்கு யாதும் தீங்கு நிகழவில்லை என்பது புலப் படுத்த, ''எழுத்தெனச் சிதைவிலாப் பரிக் குழுக்களைக் கூர்ங்கணைக் குப்பையாக்கி'' என்றார். இந்திரன் தேரில்

பூட்டிய குதிரைகள் வேதங்களின் தொடர்புடையன என்பதை, ''பூண்ட மொய்யுளை வயப்பரி மொழிந்த முது வேதம்'' (இராமன் தேரேறுபடலம் - 24) என்றதால் அறியலாம். குப்பை — குவியல். நேர் வழுத்தலாவது, உவமை சொல்லுதல். (76)

இராவணன் அம்புகளால் இராமனை மறைத்தல்

9921. மண்டல வரிசிலை வான வில்லொடும்
துண்டவெண் பிறையெனத் தோன்றத் தூவிய
உண்டைவெங் கடுங்கணை யொருங்கு மூடலால்
கண்டில ரிராமனை யிமைப்பில் கண்ணினர்.

மண்டல வரிசிலை, வான வில்லொடும்
துண்ட வெண்பிறை எனத் தோன்றத் தூவிய
உண்டை வெங்கடுங்கணை ஒருங்கு மூடலால்,
கண்டிலர் இராமனை, இமைப்பு இல் கண்ணினர்.

பொ :— (இராவணன்) மண்டலமாக வளைத்த கட்டமைந்த வில், வானவில்லொடு அமைந்த துண்டமான வெண்பிறை போலத் தோன்றுமாறு தொடுத்து எய்த கூட்டமான, வெம்மையும் கடுமையுமுடைய பிறைமுகக் கணைகள் எல்லாம் ஒருங்கே சென்று மூடிக்கொண்டமையால் இமைத்தல் இல்லாத கண்ணை யுடைய தேவர்களும் இராமனைக் காண இயலாதவராயினர்.

கு :— இராவணனது வில்லும் அதில் தொடுத்த பிறை முகக் கணையும் ஒருங்கு தோன்றும் காட்சி, வான வில்லொடும் வெண் பிறை சேர்ந்திருப்பது போல இருந்தது என்க. இது இல்பொருளுவமை. மண்டலமாக வளைத்த வரிசிலை வானவில்லைப் போன்றது; அவ்வில்லில் தொடுத்த பிறைமுகக்கணை வெண்பிறை போன்றது என்றவாறு. தோன்றத் தொடுத்துத் தூவிய எனச் சொல்லெச்சமாக ஒரு சொல் வருவிக்க. உண்டை—கூட்டம். பிறைமுகக் கணைகளை மிகுதியாக எய்து இராமனை மறைத்தான் என்பதே கருத்து. இமைப்பில் கண்ணினரும் என உயர்வு சிறப்பும்மை விரிக்க. இமைக்கும் கண்ணினர் காணாமை சொல்ல வேண்டுமோ? என்றவாறு. வானவில்லையும் பிறையையும் வில்லிற்கே உவமையாக்குவாருமுண்டு. பெருமை சிறுமைகளானன்றி

வளைவினால் வானவில்லும் பிறையும் வேறுபடாதன ஆதலின் அங்ஙனம் கூறுதல் பொருந்தாமை யுணரலாம். பிறைமுகக்கணை களை எய்தான் என்பது எற்றுற் பெறுதும் எனின், 'உவமப் பொரு ளினுற்ற துணருந் தெளிமருங் குளவே திறத்தியலான' (தொல்- உவம: 20) என்ற விதியால் 'பிறை எனத் தோன்ற' என்ற உவமையால் கடுங்கணை என்ற உவமேயப் பொருள் பிறை முகத்தது என்பது பெற்றும் என்க. (77)

இராமன்மேல் பட்ட அம்புகளைக் கண்டு அமரர் அஞ்சுதலும் அரக்கர் ஆர்த்தலும்

9922. தோற்றன னேயினி யென்னுந் தோற்றத்தால்
ஆற்றல ரமரரு மச்ச மெய்தினர்
வேற்றவ ரார்த்தனர் மேலுங் கீழரும்
காற்றியக் கற்றது கலங்கிற் றண்டமே.

'தோற்றனனே இனி' என்னும் தோற்றத்தால்
ஆற்றலர் அமரரும் அச்சம் எய்தினர்
வேற்றவர் ஆர்த்தனர்; மேலும் கீழரும்
காற்று இயக்கு அற்றது கலங்கிற்று அண்டமே.

பொ :— இராமன் இனி, (இராவணனுக்குத்) தோற்றன னே என்னும் எண்ணத்தால் தேவர்களும் ஆற்றுதவராய் அச் சம் அடைந்தார்கள்; வேற்றவராகிய அரக்கர்கள் அந்நிலை கண்டு ஆரவாரித்தனர்; மேலும் கீழும் காற்றின் இயக்கம் நின்று விட்டது; அண்டமே கலங்கியது.

கு :— தோற்றம் என்றது, அமரர்தம் நெஞ்சில் தோன் றிய எண்ணத்தை. ஆற்றலர் என்பதற்கு ஆற்றலை யுடையவர் எனப் பொருள் கூறலும் ஆம். வேற்றவர் என்றது அமரர்க்கு வேறுபட்டவராகிய அரக்கரை. காற்றும் தேவனாதலின் அச் சத்தால் இயக்கம் இன்றியிருந்தான் என்றவாறு. இராமனுக்கு நேர்ந்த துன்பம் கண்டு அண்டமே கலங்கியது. இடவாகு பெயரால் அண்டம் என்பது, அண்டத்துள்ள உயிர்களை யுணர்த்தியது. (78)

இராமன்மேல் அம்பு பட்டதன் விளைவுகள்

9923. அங்கியுந் தன்னொளி யடங்கிற் றார்கலி
பொங்கல திமிர்த்தன விசும்பிற் போக்கில
வெங்கதிர் தண்கதிர் விலங்கி மீண்டன
மங்குலு நெடுமழை வறந்து சாய்ந்ததால்.

அங்கியும் தன் ஒளி அடங்கிற்று; ஆர்கலி
பொங்கில திமிர்த்தன; விசும்பில் போக்கு இல,
வெங்கதிர் தண்கதிர், விலங்கி மீண்டன;
மங்குலும் நெடுமழை வறந்து சாய்ந்ததால்.

பொ:— அக்கினியும் தன் ஒளி அடங்கி நின்றது; கடல்கள் அலைகள் கிளரப் பொங்காமல் அசைவற்றிருந்தன; சூரியமண்டலமும் சந்திரமண்டலமும் விண்ணில் போகாமல் விலகித் திரும்பின; மேகங்களும் தம்பாலுள்ள நெடிய மழைநீர் வறளப் பெற்றுச் சாய்ந்தன.

கு:— மேல், வாயுவும் மண்ணண்டமும் அடங்கியதைக் கூறி, இங்கு மற்றைய தேயுவும் அப்பும் ஆகாயமும் அடங்கிய நிலையை உணர்த்துகின்றார். பெரும் பூதங்கள் ஐந்தும் துன்பத்தால் அடங்கின என்றவாறு. ஆர்க்கின்ற ஒலியையுடைமையால் கடல் ஆர்கலி எனப் பெயர்பெற்றது; வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. திமிர்த்தல்-அசையாமை. மங்குல்-மேகம். மேகம் வறந்து சாய்ந்தமை கூறவே அதற்கிடமாகிய ஆகாயத்தின் செயல் கூறியதாயிற்று. வெங்கதிர்—வெப்பமான கதிர்களையுடைய சூரியன். தண்கதிர்—குளிர்ந்த கதிர்களையுடைய சந்திரன். இறைவன் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், ஞாயிறு, திங்கள், ஆன்மா என்ற எண்வகை வடிவினன் என்பர். இறைவனாகிய இராமன் இராவணனது அம்பினால் அசைவற்றமையால், அவன்வடிவமாக அமைந்த நில முதலிய எட்டும் அசைவற்றன என்பது கருத்து. மேலைச் செய்யுளில் கலங்கிற்று அண்டம் என்றமையால் மண் அண்டத்தின் செயலும், இடவாகு பெயராய் அவ்வண்டத்தில் உள்ள உயிர்களின் செயலும் காற்றின் செயலும் கூறி, இச் செய்யுளில், அங்கி, அப்பு, ஆகாயம், சூரி

யன், சந்திரன் என்ற ஐந்தின் செயலும் கூறியுள்ளமை நோக்கி யுணரலாம். (79)

9924. திசைநிலைக் கடகரி செருக்குச் சிந்தின
அசைவில வேலைக ளார்க்க வஞ்சின
விசைகொடு விசாகத்தை நெருக்கி யேறினன்
குசனெடு மேருவுங் குலுக்க முற்றதே.

திசைநிலைக் கடகரி செருக்குச் சிந்தின ;
அசைவுஇல வேலைகள் ஆர்க்க அஞ்சின ;
விசைகொடு விசாகத்தை நெருக்கி ஏறினன்
குசன் ; நெடுமேருவும் குலுக்கம் உற்றதே.

பொ :— எட்டுத் திசைகளிலும் நிலைத்துள்ள மத யானைகள் எட்டும் தம் மதச்செருக்கொழிந்து நின்றன; முன் கூறியாங்கு அசையாது நின்ற கடல்கள் ஆரவாரித்தற்கு அஞ்சினவாய் அமைதியாக இருந்தன; (அரசர்களுக்குவரும் தீங்கினையுணர்த்த வேண்டி) அங்காரகன் வேகங்கொண்டு விசாக நட்சத்திரத்தை நெருக்கி ஏறினான்; நெடிய மேருமலையும் குலுங்கியது.

கு :— துன்ப மிகுதியால் திசை யானைகள் மதச்செருக்கு நீங்கப் பெற்றன என்க. அலைகள் பொங்கி அசையாமல் கடல்கள் இருந்தமை மேற்கூறியுள்ளதை அனுவதித்து இங்கு 'அசைவில வேலைகள்' என்றார். அங்காரகன் விசாகத்தில் நுழைந்தால் அரசர்க்குத் தீங்கு உண்டாகும் என்பது சோதிட நூற்கொள்கை. 'இராமனுக்கு இராவணன் அம்பினால் இப்போது தீங்கு நேர்ந்திருப்பதை நாம் உணர்த்தத் தவறிவிட்டோமே' என்ற எண்ணத்தால் அங்காரகன் விசைகொடு விசாகத்தை நெருக்கி ஏறினன் என்க. இராமனுக்கு இச்சிறு துன்பம் வருதலையும் காட்டாமல் இருத்தலாகாது என்ற எண்ணத்தால், இராவணன் அம்புகள் இராமனை வருத்துகின்ற நிலையில், குசன் தன் முன்னறிவிப்புச் செயலை விரைந்து செய்யத் தொடங்கினான் என நகைச்சுவை தோன்றக் கூறியவாறு. இது, காரண முந்துறுங் காரியநிலை. மலைகளுள் பெரியதாய மேருமலையும் அச்சத்தால் குலுங்கிற்று என்க. மேருவும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு; இறந்தது தழுவிய எச்சவும்மையாகக் கொள்ளலும் ஆம். (80)

9925. வானரத் தலைவனு மிளைய மைந்தனும்
ஏனைய தலைவனுங் காண்கி லேமெனக்
கானகக் கரியெனக் கலங்கி னர்கடல்
மீனெனக் கலங்கினர் வீரர் வேறுளார்.

வானரத் தலைவனும், இளைய மைந்தனும்,
ஏனைய தலைவனும் 'காண்கிலேம்' எனக்
கானகக் கரி எனக் கலங்கினர்; கடல்
மீன் எனக் கலங்கினர், வீரர் வேறு உளார்.

பொ:— வானரப் படைக்குத் தலைவனாகிய சுக்கிரீவனும், அவன் தன் இளமையுடைய மைந்தனாகிய அங்கதனும், மற்றைய கரடிப்படைக்குத் தலைவனாகிய சாம்பவனும் 'இராமனைக் காண்கிலோமே' என்று கூறிக்கொண்டு, காட்டில் (அரச யானையைக் காணப்பெறாத) யானைகளைப்போலக் கலங்கினார்கள்; மற்றுமுள்ள வீரர்கள் எல்லாம், (அணை கட்டியபோது) கடல் மீன்கள் கலங்கியதுபோலக் கலங்கினார்கள்.

கு:— இளைய மைந்தன் என்றது, சுக்கிரீவன்தன் இளமையுடைய மைந்தனாகிய அங்கதனை. இலக்குவனைக் குறிப்பதாகவும் கூறுவர். இராமனுடைய ஆற்றலை முழுதும் உணர்ந்தவன் இலக்குவன் ஆதலின், இராமனுக்குத் தீங்கு நிகழும் என்று கலங்குதல் அவனுக்கு ஏற்புடையதன்று. மானாக வந்து வீழ்ந்த மாரீசன், இராமன் குரலால் இலக்குவனையும் சீதையையும் விளித்தபோது சீதை கலங்கியழுது வெகுளவும் இலக்குவன், இராமனது ஆற்றலில் ஐயங்கொள்ளாது, ''எண்மையா ருலகினில் இராமற் கேற்றமோர் திண்மையா ருளரெனச் செப்பற்பாலிரோ'' (சடாயு வுயிர்நீத்த-5) எனவும், 'காரெனக் கரியவக் கமலக் கண்ணனை, யாரெனக் கருதியிவ் விடரி னாழ்கின்றீர்'' (7) எனவும் கூறித் தெளிவித்துள்ளமை நினையின் இராவணனது அம்புகளால் மறைந்துள்ள இராமனைக் காணாது கானகக் கரியெனக் கலங்குதல் அவ்விலக்குவனுக்கு ஏற்புடைத்தன்று என்பது புலனாம். கரடிப்படை வானரப் படையின் வேறுபட்டதாகலின் அக் கரடிப்படையின் தலைவனை 'ஏனைய தலைவனும்' என்று குறிப்பிட்டார். 'இராமனைக் காண்கிலேம்' என்று கூறுதற்கும் கூசினவராய்ப் பெயர் கூறாது 'காண்கிலேம்' என்று மட்டும் கூறினர். தலைவனைக் காணாது வருந்துபவர்க்கு உவமையாகக் கூறப்பட்டமையால் கானகக் கரி

என்றது, தம்மரச யானையைக் காணாது வருந்தும் யானைகளையே என்பது உய்த்துணரலாம். கடலில் மீன் கலங்குதல் கூறியமை யால் அணை கட்டியபோது கடலில் மலைகளின் வீழ்ச்சியால் மீன்கள் கலங்கியதையே இங்கு நினைந்து கூறியதாகக் கொள்க. தமக்கு வாழ்விடமாகிய கடலில் மீன்கள் கலங்க வேறு காரணம் இன்மையும் நினையலாம். (81)

*இராவணன் எய்த அம்புகள் இராமனுக்கும் துயர் விளைத்தன*

9926. நீனிற நிருதர்கோ னெய்த நீதியிற்
சால்புடை மாதலி மார்பிற் றைத்தவெங்
கோலினு மிலக்குவன் கோல மார்பின்வீழ்
வேலினும் வெம்மையே விளைத்த வீரற்கும்.

நீல்நிற நிருதர்கோன் எய்த, நீதியின்
சால்புடை மாதலி மார்பில் தைத்தவெங்
கோலினும், இலக்குவன் கோல மார்பின் வீழ்
வேலினும், வெம்மையே விளைத்த, வீரற்கும்.

பொ :—நீல நிறமுடைய அரக்க மன்னனாகிய இராவணன் எய்த அம்புகள், மேன்மைக் குணமுடைய மாதலியின் மார்பில் தைத்த கொடிய அம்பைக்காட்டிலும் இலக்குவனது அழகிய மார்பில் வீழ்ந்த வேலைக்காட்டிலும், பெரிய துன்பத்தையே இராமனுக்கும் முறைப்படி விளைத்தன.

கு :—எய்த என்பது, அன்பெறாத பலவின் வினைப்பெயர்; எய்தனவாகிய அம்புகள், வீரற்கும் நீதியின் வெம்மையே விளைத்த என இயையும். விளைத்த என்பது அன்பெறாத அகர வீற்றுப் பலவின்பால் வினைமுற்று. வெம்மை விளைத்தலில் வேறு பாடு காட்டாது மாதலி, இலக்குவன், இராமன் என்ற மூவர் மாட்டும் ஒக்கத்துயர் விளைத்தமை புலப்பட ''நீதியின் வெம்மையே விளைத்த'' என்றார். இராமன் திருமாலின் அம்ச மானவன் என்பதற்காக வெம்மை விளைக்காமல் விடவில்லை என்பார், 'வீரற்கும் வெம்மையே விளைத்த' என உயர்வு சிறப்பும்மை கொடுத்துக் கூறினார். வெம்மை—துன்பம். கோலி னும் வேலினும் என்புழி இன் உறழ்ச்சிப் பொருளன. மாதலி மார்பில் தைத்த வெங்கோல் விளைத்த வெம்மையினும், இலக்கு

வன் கோல மார்பின் வீழ் வேல் விளைத்த வெம்மையினும், மிக்க வெம்மையை இராவணன் எய்த அம்புகள் இராமனுக்கும் விளைத்தன என்றவாறு. மாதலியின் மார்பில் இராவணன் பன்னிரண்டு கொடிய அம்புகளை அழுத்தினமை 76-ஆம் செய்யுளில் கூறப்பட்டது. இலக்குவன் கோல மார்பில் வேல் தைத்ததை வேலேற்ற படலத்தில் கூறியுள்ளார். 'கோலினும் வேலினும் வெம்மையே விளைத்த' என்ற அமைப்பு, ''திருமாவளவன் தெவ்வர்க் கோக்கிய, வேலினும் வெய்ய கானமவன் கோலினும் தண்ணிய தடமென்றோளே'' (299-301) என்ற பட்டினப்பாலை அடிகளை நினைப்பிக்கின்றமை காணலாம். (82)

இராமன் இராவணனை எய்து வருத்துதல்

9927. எய்தன சரமெலா
மிமைப்பின் முந்துறக்
கொய்தன னகற்றிவெங்
கோலின் கோவையால்
நொய்தென வரக்கனை
நெருங்க நொந்தன
செய்தன னிராகவ
னமரர் தேறினர்.

எய்தன சரம் எலாம்
இமைப்பின் முந்துறக்
கொய்தனன் அகற்றி,
வெங்கோலின் கோவையால்
நொய்து என அரக்கனை
நெருங்க நொந்தன
செய்தனன், இராகவன்;
அமரர் தேறினர்.

பொ :— இராவணன் விட்ட அம்புகளை எல்லாம் இமைப் பொழுதிற்கு முன்னதாகவே அறுத்து அகற்றிவிட்டுத் தன் கொடியஅம்புகளின் வரிசையால் எளிதாக இராவணனை நெருங்குமாறு (விடுத்து) அவன் நோவனசெய்தான் இராமன்; அதுகண்டு தேவர்கள் தெளிவடைந்தார்கள்.

கு:— இராவணன் விட்ட அம்புகள் தன்மேனியில் பட்ட இமைப்பொழுதிற்குள் இராமன் அவ்வம்புகளை அறுத்து எறிந்து விட்டு, அவ்விராவணன் வருந்த அம்புகளை வரிசை வரிசையாக அவன்மேல் விடுத்தான் என்றவாறு. கோவை — வரிசை. நொய்து—எளிது. நெருங்க விடுத்து நொந்தன செய்தனன் என ஒரு சொல் வருவிக்க. நொந்தன என்பது காலவழுவமைதி; நோவன செய்தனன் என்பதே கருத்து. முன்பு இராமன் தோற்றனன் எனக் கலங்கியவர்களாதலின் 'அமரர் தேறினர்' என இங்குக் கூறினர். (83)

இராவணனுடைய வில் ஒடியுமாறு இராமன் அம்பு எய்தல்

9928. தூணுடை நிரைபுரை கரமவை தொறுமக்
கோணுடை மலைநிகர் சிலையிடை குறையச்
சேணுடை நிகர்கணை சிதறின னுணர்வோ
டூணுடை யுயிர்தொறு முறையுறு மொருவன்.

தூணுடை நிரை புரை
கரம் அவை தொறும் அக்
கோணுடை மலை நிகர்
சிலை இடை குறைய,
சேணுடை நிகர் கணை
சிதறினன் — உணர்வோடு
ஊணுடை உயிர் தொறும்
உறை உறும் ஒருவன்.

பொ:— தூண்களின் வரிசையை நிகர்த்த பருத்த கைகள் தோறும் (இராவணன் பிடித்துள்ள) அந்த வில்லாக வளையும் தன்மையுடைய மேருமலையை நிகர்த்த விற்கள் இடையிலே ஒடியுமாறு சேய்மையிற் செல்லும் தன்மையுடைய—தம்மைத் தாமே ஒத்த அம்புகளை, — உணர்ச்சியும் நுகர்ச்சியுமுடைய உயிர்கள்தோறும் தங்கியுள்ள இறைவனாகிய இராமன் சிந்தினான்.

கு:— இராவணன் தன் பருத்த பத்துக் கைகளிலும் பிடித்திருக்கும் மேருமலை போன்ற பத்துவிற்களும் ஒடியுமாறு இராமன் அம்புகளையெய்தான் என்றவாறு. அக்கோணுடை மலை என்றது, மேருமலையை; உலகறிசுட்டு. சிவபிரான் மேருமலையை வில்லாக

வளைத்தமை எல்லாராலும் அறியப் பட்டமை நினைந்து இங்ஙனம் சுட்டிக் கூறினர். கோணுடை மலை—வளைதலையுடைய மலை. இராவணன் கைகளுக்குத் தூண்களின் வரிசையும் அவன் வில்லுக்கு மேருமலையும் உவமை. உயிரின் இலக்கணம் புலப்பட 'உணர்வோடு ஊனுடை உயிர்' என்றார். உடம்போடுகூடிய எல்லா உயிர்களும் உணரும் தன்மையும் நுகருந் தன்மையும் உடையனவே ஆதல் புலப்படுத்தியவாறு. ஊண் என்றது, நுகர்ச்சியை. உயிர் தொறும் உறையுறும் ஒருவன் என்றது, திருமாலின் அந்தர்யாமித்தன்மை புலப்படுத்தியவாறு. உயிர் தொறும் உறையும் இராமன் இராவணனது உயிரிலும் இருப்பவனே ஆயினும், அவ்வுயிரின் வினைக்கேற்ற தண்டனை கொடுக்கவே இங்ஙனம் செய்கின்றான் என்பது புலப்படுத்தியவாறு. (84)

இச் செய்யுளுக்குப்பின் 'படையுக விமையவர்' என்ற செய்யுள் சில சுவடிகளில் காணப்படுகின்றது. இங்கு அச் செய்யுட்கு இயைபின்மையானும், அது 87-ஆம் செய்யுளாக இருத்தல் 88-ஆம் செய்யுளோடு தொடர்புடையதாக அமையும் ஆதலானும், பல சுவடிகளில் அவ்வாறே இருத்தலானும் இச் செய்யுட்குப்பின் அது இடம் பெறவில்லை.

### இராமன் இராவணனது கவசத்தைப் பிளந்து அவன் குருதியைப் பருகுமாறு கணைகளை விடுதல்

9929. கயில்விரி வுறவரு கவசமு முருவிப்
பயில்விரி குருதிகள் பருகிட வெயிலோ
டயில்விரி சுடுகணை கடவின னறிவின்
துயில்புரி வுழிவுணர் சுடரொளி யொருவன்.

கயில் விரிவுற வரு கவசமும் உருவிப்
பயில் விரி குருதிகள் பருகிட வெயிலோடு
அயில் விரி சுடுகணை கடவினன் — அறிவின்
துயில் புரிவுழி உணர் சுடர் ஒளி ஒருவன்.

பொ :—அறிதுயில் செய்யும்போதே எல்லாவற்றையும் உணர்கின்ற பேரொளிப் பிழம்பாக உள்ள ஒப்பற்ற திருமாலின் அமிசமான இராமன், (இராவணன் மார்பில்) பொருந்திய கவசமும்

மூட்டுவாய் விரியும்படி ஊடுருவிச் சென்று, அவன் மார்பில் பொருந்தியுள்ள விரிவான இரத்தத்தைப் பருகுமாறு ஒளியோடு கூர்மையுமுடைய மிகுதியான சுடும் இயல்புள்ள அம்புகளைச் செலுத்தினான்.

கு :— அறிவின் துயில் புரிவுழி உணர்தலாவது, யோக நித்திரை செய்துகொண்டே எல்லாவற்றையும் அறிதல். இவ்வியல்பு பாம்பணையில் பள்ளிகொண்ட நிலையில் திருமாலுக்கு உரியதாகும். 'சுடர் ஒளி' என்பது ஒருபொருட் பன்மொழி. பேரொளி வடிவினன் ஆகிய திருமாலின் அம்சமான இராமனை அப்பெயரால் கூறியவாறு. முன்பு இராவணன் எய்த அம்புகளால் மறைப்புண்டிருந்த இராமன், தன்னியல்பு குன்றாமல் எல்லாவற்றையும் அறிந்துகொண்டே அமைதியாக இருந்து, இப்போது தன் வீரப் பெருமையை யுணர்த்துகின்ற நல்லியல்பு, அவனுக்கு முன்னைத் தெய்வ நிலையிலேயே வாய்த்திருந்த அரும்பண்பாகும் என்பதை உணர்த்தவேண்டி இங்கு அத்தெய்வ நிலையை நினைப்பித்தவாறு. கயில் — மூட்டுவாய். கவசம் துளைக்கப்படும்போது அதன் மூட்டுவாய் முன்பு விரிந்து அறுதல் இயல்பு. ஒருவன் உருவிப் பருகிட கணை கடவினன் என இயையும். வெயிலும் அயிலும் உடையவாய் விரிவாகஉள்ள சுடுகின்ற கணை என்க. கணையின் பன்மை தோன்ற 'விரிகணை' எனவும், அதன் வெம்மை தோன்ற 'சுடுகணை' எனவும் சிறப்பித்தார். விரிதல் இங்குப் பலவாக விரிந்துள்ளமையை உணர்த்தியது. வெயில்—ஒளி. அயில் — கூர்மை. (85)

### இராவணனது வீணைக் கொடியை வீழ்த்துதல்

9930. திசையுறு துகிலது செறிமழை சிதறும்
விசையுறு முகிழது விரிதரு சிரனோ
டிசையுறு கருவியி னிலகுறு கொடியைத்
தசையுறு கணைகொடு தரையுற விடலும்.

திசை உறு துகிலது, செறி மழை சிதறும்
விசை உறு முகிழது, விரிதரு சிரனோடு
இசை உறு கருவியின் இலகுறு கொடியைத்
தசை உறு கணை கொடு தரை உற இடலும்.

பொ :— திசையின் இறுதிவரையில் சென்று பொருந்தும் கொடிச்சீலையை யுடையதும், நெருங்கிய மேகங்களைச் சிதறச் செய்கின்ற வேகத்தையுடைய அரும்புபோன்ற உறுப்பினையுடையதும், விரிவான தலையொடு இசை பொருந்திய வீணையென்னும் இசைக்கருவியினால் விளக்கம் பெறும் இராவணனது கொடியை (இராமன்) பகைவரின் தசையொட்டிக்கொண்டுள்ள அம்பினைக் கொண்டு தரையிலே வீழுமாறு தள்ளுதலும்.

கு :— இராவணனது கொடியில் அமைந்த சீலை, குமிழ் என்ற உறுப்புகளையும், அக்கொடிச் சீலையில் எழுதியுள்ள தலை, வீணை என்ற உருவங்களையும் விவரித்தவாறு. இராவணன் கொடியில் மனிதத்தலை மட்டும் எழுதியிருந்ததாக வான்மீகம் கூறும். கம்பர் அத்தலையொடு இசைக் கருவியாகிய வீணையும் கூறியுள்ளார். இசையுறு கருவி என்றது வீணையையே என்பதை: ''பாக வீணையின் கொடியொன்று கிடந்தது பார்மேல்'' (சடாயுவுயிர்நீத்த-167) என இராவணன் கொடியாக வீணைக்கொடி கூறப்பட்டுள்ளதால் உணரலாம். இனி, 'சிரனோடு இசையுறு கருவி' என்பதற்கு வேறு பொருளும் கொள்ள இடமுண்டு: இராவணன் கயிலைமலையை எடுக்க முயன்ற ஞான்று சிவன் கால்விரலால் ஊன்றியவுடன் அம்மலையின் கீழ் அகப்பட்டு அழும்போது, அங்கு வந்த முனிவர் சொற்படி இராவணன் தன் தலைகளில் ஒன்றைக்கிள்ளித் தன் கைந் நரம்புகளையும் அத் தலையையுமே கொண்டு வீணையாக்கி இசையால் இறைவனைத் துதிக்க, இறைவன் அவன் பாடற்கு இரங்கி அவனுக்கு வாளும் நாளும் கொடுத்தான் என்பது தேவார ஆசிரியர்கள் கூறும் வரலாருகும். தனக்கு வாளும் நாளும் சிவபிரான் கொடுத்தற்குக் காரணமாக இருந்தது தன் தலையையும் கைந்நரம்பையும் கொண்டு செய்த வீணையே யாகலின் அதன் பெருமை நினைந்து அவ்வீணையையே தன் கொடியில் எழுதிவைத்திருந்தான் இராவணன்; அதுவே 'சிரனோடிசையுறு கருவி' எனப்பட்டது எனலாம். (86)

9931. படையுக விமையவர் பருவரல் கெடவந்
திடையுறு திசைதிசை யிடுகுற விறைவன்
அடையுறு கொடிமிசை யணுகின னளவில்
கடையுக முடிவெழு கடல்புரை கலுழன்.

படை உக, இமையவர் பருவரல் கெட, வந்து
இடை உறு திசை திசை இடுகுற, இறைவன்
அடையுறு கொடி மிசை அணுகினன்–அளவு இல்
கடை உக முடிவு எழு கடல் புரை கலுழன்.

பொ :— கடையூழியில் எழுந்து பொங்குகின்ற அளவில்லாத கடலைப்போன்ற பெருந்தோற்றமுடைய கருடன், அரக்கர் சேனை நிலைகெடவும், தேவர்களின் துன்பம் நீங்கவும், இடம் பொருந்திய திசைகள் சுருங்கிக் காணப்படவும், வந்து, இராமனுடைய தேரில் பொருந்தியுள்ள கொடிமேல், அணுகிச் சேர்ந்தான்.

கு :—கலுழன், உக, கெட, இடுகுற, வந்து இறைவன் கொடி மிசை அணுகினன் என இயையும். இராமன் ஏறியிருந்த தேர் மேல் இருந்த இடிக் கொடி இராவணனால் அறுக்கப் பட்டமை 74-ஆம் செய்யுளில் கூறப்பட்டது. தன் தேரில் இருந்த இடிக் கொடியை இராவணன் அறுத்ததற்கு ஈடாக இராமன் இராவணனுடைய வீணைக் கொடியை அறுத்தவுடன், இராமனது தெய்வ நிலையில் அவன் கொடியிலிருக்கின்ற கருடன், விரைந்து வந்து, இராமன் ஏறியுள்ள இந்திரன் தேர் மேல் கொடியில் அமர்ந்தான் என்க. கலுழன் தன் சிறகுகளைப் பரப்பிக்கொண்டு விண்டுவினுலகிலிருந்து வரும்போது அரக்கர் சேனை கண்டு நிலைகெட்டு ஓடின; தேவர்கள் துன்பம் நீங்கியது; எனமகிழ்ந்தார்கள். விரிந்ததிசைகள் அக்கலுழனுடையதோற்றப் பெருமையால் சுருங்கிக் காணப்பட்டன என்றவாறு. இடுகுதல்— சுருங்குதல். ‘படை பெருத்தலின் பார்சிறுத்ததோ?’(கலிங்கத் துப்-348) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். படை என்றது அரக்கர் சேனையை. உகுதல் - நிலை கெடுதல். பருவரல் — துன்பம். இடை—இடம். திசை திசை என்ற அடுக்கு, பன்மை உணர்த்தியது ; எல்லாத் திசைகளும் என்றவாறு. (87)

### இராமனது கொடியில் கலுழன் அமர்ந்தது கண்டு தேவர் மகிழ்தல்

9932. பண்ணவ னுயர்கொடி யெனவொரு பரவைக்
கண்ணக னுலகினை வலம்வரு கலுழன்
நண்ணலு மிமையவர் நமதுறு கருமம்
எண்ணலன் முனிவினி னிவறின னெனவே.

பண்ணவன் உயர் கொடி என ஒரு பரவைக்
கண் அகன் உலகினை வலம்வரு கலுழன்
நண்ணலும், இமையவர், 'நமது உறு கருமம்
எண்ணலன், முனிவினின் இவறினன்' எனவே.

பொ:— ஒப்பற்ற கடலால் சூழப்பெற்ற இடம் அகன்ற உலகத்தை வலம் வருதற்குரிய கருடன், இராமனுடைய உயர்ந்த கொடியாகச் சேர்தலும், தேவர்கள், 'நமது பெரிய காரியத்தை இராமன் இனி எண்ணமாட்டான்; (கலுழனது வரவு கண்ட மகிழ்ச்சியால்) கோபத்தினின்றும் குறைந்து விட்டான்' எனக் கருதா நிற்க.

கு:— கலுழன் பண்ணவன் உயர்கொடி என நண்ணலும் இமையவர் முனிவினின் இவறினன் என என்றியையும். இச் செய்யுளில் உள்ள 'என' என்னும் எச்சம் வருஞ்செய்யுளில் 'ஏயினன்' என்ற சொல்லோடு முடியும். பண்ணவன் - தேவன்; இங்கு இராமனை உணர்த்தியது. கலுழன் வந்த மகிழ்ச்சியால் இராமனது முன்னைய சினம் குறையும்; குறையவே, நமதுறு கருமத்தை எண்ணாது மறப்பான், எனத் தேவர்கள் ஐயுறலாயினர் என்க. கருமம் என்றது, இராவணன் வதையை. இராவணனுடைய கவசத்தைப் பிளந்து கொடியை யறுத்து வீழ்த்திய இராமன் சினக் குறிப்பு, கலுழன் வரவால் குறைவுபடும்; அதனால், இராவணன் வதை காலம் தாழ்க்கும் எனத் தேவர்கள் எண்ணுதல் இயல்புதானே! இவறுதல்-குறைதல். (88)

### இராமன்மேல் தாமதக் கணையை இராவணன் எய்தல்

9933. ஆயதொ ரமைதியி னறிவினு ளறிவன்
நாயக னொருவனை நலிகில துணரான்
ஏயின னிருளுறு தாமத மெனுமத்
தீவினை தருபடை தெறுதொழின் மறவோன்.

ஆயது ஓர் அமைதியின் அறிவினுள் அறிவன்
நாயகன் ஒருவனை நலிகிலது உணரான்,
ஏயினன், இருள் உறு தாமதம் எனும் அத்
தீவினை தருபடை - தெறு தொழில் மறவோன்.

பொ :— அத்தகையதொரு அமையத்தில் அழிக்கும் தொழிலேயே பழகிய மறக்குணமுடைய இராவணன், உயிர்களின் அறிவில் அறிவாய் அமைந்திருப்பவனுகிய தலைமைத் தன்மை உடைய ஒப்பற்ற இராமனை நலிகிலது என்பதை உணராதவனுய், இருள்மயமான தாமதம் எனும் பெயருடைய அந்தத் தீவினையைத் தரும் கணையை ஏவினுன்.

கு :— அறிவு மயங்கச் செய்யும் தாமதக்கணை, அறிவினுள் அறிவனுக விளங்கும் கடவுளின் அமிசமான இராமனை நலியும் வலிமையற்றது என்பதைத் தாமத குணத்தனுகிய இராவணன் அறியும் இயல்பினன் அல்லனுகலின் அதனை விடுத்தான் என்றவாறு. கடவுள் உயிர்களின் அறிவிற்கெல்லாம் அறிவாக விளங்குபவன் ஆதலின், 'அறிவினுள் அறிவன்' என அவனைக் குறிப்பிட்டார். ''விரிஞ்சன் முதலோர் தெரிகிலா ஆதிநாத ரவரெம் அறிவினுக் கறிவரோ'' ஆரணிய - கடவுள் வாழ்த்து) என்பது இங்கு நினைத்தற்குரியது. அறிவு, ஒளிப்பொருள்; தாமதக் கணை இருளை விளைப்பது. ஒளியை இருள் மறைக்க முடியாதவாறுபோல அறிவினுள் அறிவனைத் தாமதக்கணை நலியாது என்ற உண்மையை இராவணன் உணரான் என்றது, அவனும் தாமத குணத்தன் ஆதல் நினைந்து என்க. உணரான் ஏயினன் என்றது முற்றெச்சப் பொருளது. இராவணன் இயல்பையும் குறிப்பாய் உணர்த்துதல் காணலாம். தெறுதல் — அழித்தல். (89)

இப்பாடலின் பின் 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

9933 (a) உமையவ ளொருபுடை யுடையவ னுதவிய
தமைவுறும் மயல்வினை யளவில புரிவது
சுமைபெறு முலகொரு நொடிவரை தொடருவ
திமையவ ரடல்வலி பருகிய தெளிமையின்.

*தாமதக்கணையின் தன்மை 9934 — 9936*

9934. தீமுக முடையன சிலமுக முதிரம்
தோய்முக முடையன சுரர்முக முடைய
பேய்முக முடையன பிலமுக நுழையும்
வாய்முக வரியர வனையன வருமால்.

தீ முகம் உடையன சில முகம்; உதிரம்
தோய் முகம் உடையன; சுரர்முகம் உடைய;
பேய் முகம் உடையன; பிலமுகம் நுழையும்
வாய் முக வரி அரவு அனையன, வருமால்.

பொ :— (அந்தத் தாமதக் கணைகள்) சில முகங்கள் நெருப்பைக் கக்கும் தன்மையனவாகவும், (சில) இரத்தம் தோய்ந்த முகமுடையனவாகவும், (சில) தேவர்களின் முகமுடையனவாகவும், (சில) பேயின் முகமுடையனவாகவும்,(சில)பிலத்தில் நுழைகின்ற வாயிடத்தைக் கொண்ட வரிகளையுடைய பாம்பை யொத்தனவாகவும் (இராமனை நோக்கி) வருவனவாயின.

கு :— சில என்பது முதனிலை விளக்காய்ப் பின் எல்லாவற்றோடும் இயைந்தது. சில பாம்பின் முகமுடையன என்பார் 'பில முக நுழையும் வாய்முக வரி அரவு அனையன' என்றார். வரும் என்ற பயனிலைக்கு ஏற்பத் தாம்தக்கணைகள் என்ற எழுவாய் தோன்றா எழுவாயாக நின்றதெனக் கொள்க. (90)

9935. ஒருதிசை முதல்கடை யொருதிசை யளவும்
இருதிசை யெயிறுற வருவன பெரிய
கருதிய கருதிய புரிவன கனலும்
பருதியை மதியொடு பருகுவ பகழி.

ஒரு திசை முதல் கடை ஒரு திசை அளவும்
இரு திசை எயிறு உற வருவன; பெரிய;
கருதிய கருதிய புரிவன; கனலும்
பருதியை மதியொடு பருகுவ - பகழி.

பொ :— (தாமதக்கணைகள் தம்மை விடுத்தவன்) நினைத்தனவற்றை நினைத்தவாறே செய்வனவாகவும், கனன்று எரியும் இயல்புள்ள சூரியனைச் சந்திரனோடு பருகும்தன்மையனவாகவும், ஒரு திசை முதலாகத் தொடங்கிக் கடைசியிலுள்ள ஒருதிசை அளவு வரையில் (விரிந்த வாயின்) இரு பக்கமும் உள்ள கோரப் பற்கள் பொருந்துமாறு பெரியவாகவும் வருவனவாயின.

கு :— பகழி, புரிவன பருகுவ இருதிசை எயிறுற பெரிய வருவன என இயையும். ஒரு திசை முதலாக அத்திசையின் எதிர்

திசை அளவும் விரிந்த வாயை உடைய என்பார் 'இருதிசை எயிறு உற வருவன' என்ருர். வாயின் இருபுறத்துக் கடைவாயிலும் உள்ள கோரப்பற்களைக் கூறவே வாயின் அளவும் புலப்படுத்தியவாருயிற்று. இருதிசை என்புழித் திசை பக்கத்தை உணர்த்தியது. கருதியவற்றைக் கருதியவாறே தப்பாமல் புரியும் இயல்புடையன என்க. இனி, அடுக்குப் பன்மை குறித்ததாகக் கொண்டு நினைத்த நினைத்த செயல்களையெல்லாம் புரிவன எனக் கூறலும் ஆம். (91)

9936. இருளொரு திசையொரு திசைவெயில் விரியும்
சுருளொரு திசையொரு திசைமழை தொடரும்
உருளொரு திசையொரு திசையுரு முரலும்
மருளொரு திசையொரு திசைசிலை வருடம்.

இருள் ஒரு திசை, ஒரு திசை வெயில் விரியும்;
சுருள் ஒரு திசை, ஒரு திசை மழை தொடரும்;
உருள் ஒரு திசை ஒரு திசை உரும் முரலும்;
மருள் ஒரு திசை, ஒரு திசை சிலை வருடம்.

பொ :— (அந்தத் தாமதக் கணைகளால்) ஒரு திசையில் இருளும் மற்ருெரு திசையில் வெயிலும் விரியும்; ஒரு திசையில் சுருண்டடிக்கின்ற சுழல் காற்றும் மற்ருெரு திசையில் மழையும் தொடரும்; ஒருதிசையில் சக்கரமும் மற்ருெரு திசையில் இடியும் ஒலித்துக்கொண்டு வரும்; ஒரு திசையில் மருட்சி மிக, மற்ருெரு திசையில் கல் மழையும் பொழியும்.

கு :— மருள்—மயங்குதற்குரிய தோற்றம். சிலை வருடம் என்றது கல் மழையை. சிலை—கல். வருடம்—மழை. பொழியும் என்ற பயனிலை வருவிக்க. (92)

இத்தகைய தாமதக்கணைக்கும் இராமன் நினைவு மயங்காமை

9937. இனையன நிகழ்வுற வெழுவகை யுலகும்
கனையிருள் கதுவிட வுயிரிடை கதற
வினையறு தொழிலிடை விரவலும் விமலன்
நினைவுறு தகையின னெறியுறு முறையின்.

இனையன நிகழ்வுற, எழுவகை உலகும்
கனை இருள் கதுவிட, உயிர் இடை கதற
வினை அறு தொழிலிடை விரவலும், விமலன்
நினைவுறு தகையினன் நெறியுறு முறையின்.

பொ:—இத்தன்மையான நிகழ்ச்சிகள் நிகழா நிற்க, நெருங்கிய இருள் எழுவகையான உலகமுழுவதையும் கவிந்துகொள்ள, அவ்வுலகத்துள்ள உயிர்கள் எல்லாம் கதற, செயலற்ற தன்மை நடுவே தோன்றுதலும், இராமன் (இவற்றால் மயங்காமல்) நினைவு பொருந்திய தன்மையனாய், நேர்மைபொருந்திய முறைப்படி.

கு:—குளகம்; வரும் செய்யுளில் முடியும். உலகத்து உயிர்கள் யாவும் செயலற்று நிற்கும் நிலை நடுவே தோன்றிற்று என்பார் 'வினை அறு தொழிலிடை விரவலும்' என்றார். தொழில் இங்குத் தன்மையை உணர்த்தியது. தாமதக் கணையால் தாக்கப்படாதவன் என்ற கருத்துப் புலப்பட இராமனை 'விமலன்' என்ற பெயரால் குறிப்பிட்டவாறு. நினைவு மயங்கற்கேற்ற நிகழ்ச்சிகள் நேர்ந்துழியும் நினைவுமறவாதவனாக இராமன் இருந்தான் என்பார் 'நினைவுறு தகையினன்' என்றார். (93)

இராமன் விட்ட சிவன் கணையால் தாமதக்கணை அழிதல்

9938. கண்ணுத லொருவன தடுபடை கருதிப்
பண்ணவன் விடுதலு மதுநனி பருக
எண்ணுறு கனவினொ டுணர்வென விமையில்
துண்ணெனு நிலையினி னெறிபடை தொலைய.

கண்ணுதல் ஒருவனது அடுபடை கருதிப்
பண்ணவன் விடுதலும், அது நனி பருக;
எண்ணுறு கனவினொடு உணர்வு என, இமையில்
துண்ணெனும் நிலையினின் எறிபடை தொலைய.

பொ:— கண் பொருந்திய நெற்றியையுடைய சிவபிரானது கொல்லுதற்குரிய படையைத் தியானித்து இராமன் விட்ட அளவில், அச்சிவன்படை பருகுதலால் எண்ணத்தில் பதிந்துவரும் கனவினொடு உணர்வும் தோன்றியது போலத் துண்ணென நடுங்குதற்குரிய நிலையினையுடைய இராவணன் வீசிய தாமதக் கணை இமைப்பொழுதில் அழிய.

கு :— சிவன் ஞானவடிவினன் ஆதலின் அவன் கணை தாமதக் கணையைத் தொலைத்தது என்றவாறு. அது நனி பருகுதலால் எறிபடை தொலைய என்க. தாமதக்கணை கனவு போன்றது; சிவன்கணை நனவுணர்வு போன்றது. கனவில் தோன்றிய விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் யாவும் நனவுணர்வு தோன்றியவுடன் அழிந்துவிடுதல் போலச் சிவன்கணை தொடுத்தவுடன் தாமதக்கணையும் அக்கணையால் தோன்றிய விளைவுகளும் அழிந்தன என்க. தொலைய என்ற எச்சம் வருஞ் செய்யுளில் முடியும்.

(94)

*அது கண்டு பொருத இராவணன் இராமனது மேனியில் அம்புகளை அழுத்தல்*

9939. விரிந்த தன்படை மெய்கண்ட
☆ பொய்யென வீய
எரிந்த கண்ணின னெயிற்றிடை
மடித்தவா யினனன்றன்
தெரிந்த வெங்கணை கங்கவெஞ்
சிறையன திறத்த
அரிந்த மன்றிரு மேனிமே
லழுத்திநின் றார்த்தான்.

விரிந்த தன்படை மெய்கண்ட
பொய்என வீய,
எரிந்த கண்ணினன், எயிற்றிடை
மடித்த வாயினன், தன்
தெரிந்த வெங்கணை, கங்க வெம்
சிறையன திறத்த
அரிந்தமன் திரு மேனிமேல்
அழுத்தி, நின்று ஆர்த்தான்.

பொ :— பலவாக விரிந்த தனது தாமதக்கணை, மெய்யைக் கண்ட பொய்யைப் போல அவ்வாறு அழியவே, சினத்தீ எரிகின்ற கண்ணையுடையவனாய், பற்களிடையே மடித்த வாயையுடையவனாய், பருந்தின் சிறகுகளையுடையனவும் திறமிக்கன

வும் ஆராய்ந்து எடுத்தனவும் ஆய தன் கொடிய அம்புகளை இராமன்தன் திருமேனிமேல் அழுத்தி நின்று ஆரவாரித்தான். (இராவணன்)

கு :— முன் செய்யுளில் கூறியதையே முதலடியில் அனுவதித்துக் கூறியவாறு. தன் படை அழிந்தமையால் உண்டான இராவணனது சினக்குறிப்பை இரண்டாம் அடியில் விளக்கினர். கங்கம்—பருந்து. பருந்தின் சிறகுகளை அம்புக்குச் சிறகுகளாகக் கட்டுதல் உண்டு; விரைந்து செல்லுதற்கு இச்சிறகுகள் உதவும். சிறையன, திறத்த, தெரிந்த தன் வெங்கணை என மாறுக. அரிந்தமன்—பகைவரை வெல்லுவோன்; வெற்றிவீரன். இராவணன் தான் அழுத்திய அம்புகளால் வெற்றி கொள்ளற்கேலாத வலிமையுடையவன் இராமன் என்பது புலப்பட அப்பெயரால் கூறினர். தான் விட்ட அம்புகளின் விளைவு இன்னதென அறிதற்கு முன்னமே இராவணன் ஆரவாரித்தான் என்பதால் அவன் மனநிலையின் இழிவைப் புலப்படுத்தியவாறு. எரிந்த என்பது காலவழுவமைதி. (95)

### இராவணன் ஆசுரப்படை விடுதல்

9940. ஆர்த்து வெஞ்சினத் தாசுரப்
படைக்கல மமரர்
வார்த்தை யுண்டதின் னுயிர்களான்
மறலிதன் வயிற்றைத்
தூர்த்த திந்திரன் றுணுக்குறு
தொழிலது தொடுத்துத்
தீர்த்தன் மேற்செலத் துரந்தன
னுலகங்கள் திரிய.

ஆர்த்து, வெஞ்சினத்து ஆசுரப்
படைக்கலம், அமரர்
வார்த்தை உண்டது, இன் உயிர்களால்
மறலிதன் வயிற்றைத்
தூர்த்தது, இந்திரன் துணுக்குறு
தொழிலது, தொடுத்து,
தீர்த்தன் மேல் செலத் துரந்தனன்,
உலகங்கள் திரிய.

பொ :— இராவணன் அவ்வாறு ஆரவாரித்துக் கொடிய கோபத்தையுடையதும் தேவர்களின் புகழை உண்டதும் இனிய உயிர்களால் எமனுடைய வயிற்றை நிரப்பியதும் இந்திரன் நடுங்குதற்குக் காரணமான செயலையுடையதும் ஆகிய ஆசுரப் படையை, உலகங்கள் நிலைகெட்டுத்திரியுமாறு தொடுத்துத் தூயவனாகிய இராமன்மேல் செல்லுமாறு விடுத்தான்.

கு :— வார்த்தை என்றது புகழ்ச் சொல்லை. பல உயிர்களைக் கொன்றது என்பார், 'இன்னுயிர்களால் மறலிதன் வயிற்றைத் தூர்த்தது' என்றார். எமனும் உயிர்களைக்கவர இயலாது வெறுப்புக் கொள்ளும் அளவிற்குக் கொன்றது என்பது கருத்து. தீர்த்தன்-தூயவன்; இராமன். தொழிலது, ஆசுரப்படைக்கலம் தொடுத்து எனப் பின் கூட்டுக. துரத்தல்—விடுதல். (96)

இச் செய்யுளின் பின், ஒரு பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

9940 (a) ஆசுரப் பெரும் படைக்கலம் அமரரை அமரின்
ஏசுவிப்பது எவ்வுலகமும் எவரையும் வென்று
வீசுவெற்பிறத் துரந்த வெங்கணையது விசையின்
பூசுரர்க்கொரு கடவுள்மேல் சென்றது போலாம்.

சிறந்த ஏடுகளில் இச்செய்யுள் இல்லாமையானும் மேற்செய்யுளின் கருத்தையே கூறுவதாலும் மிகைப் பாடலாகக் கருதப் படுகின்றது.

## இராமன் அங்கியின்கணை விடுத்து ஆசுரக்கணையை அழித்தல்

9941. நுங்கு கின்றதிவ் வுலகையோர்
நொடிவரை யென்ன
எங்கு மெங்குநின் றலமரு
மமரர்கண் டிரைப்ப
மங்குல் வல்லுரு மேற்றின்மே
லெரிமடுத் தென்ன
அங்கி தன்னெடும் படைதொடுத்
திராகவ னறுத்தான்.

‘நுங்குகின்றது, இவ் உலகை ஓர்
நொடிவரை’ என்ன,
எங்கும் எங்கும் நின்று அலமரும்
அமரர்கண்டு இரைப்ப,
மங்குல் வல் உருமேற்றின்மேல்
எரிமடுத்து என்ன
அங்கி தன் நெடும்படை தொடுத்து,
இராகவன் அறுத்தான்.

பொ :—‘ஒரு நொடிப்பொழுதில் இந்த உலகை விழுங்கப் போகின்றது’ எனப் பல விடங்களிலும் நின்று மனஞ்சுழலுகின்ற தேவர்கள் கண்டு ஆரவாரிக்க இராமன், மேகத்தில் உள்ள வலிய பெரிய இடியின்மேல் எரியை யிட்டாற்போல, அங்கியின் கணை யைத் தொடுத்து விடுத்து (அந்த ஆசுரப்படையை) அறுத்தான்.

கு :—நுங்குதல் — விழுங்குதல். இவ்வுலகை ஒரு நொடிப் பொழுதில் ஆசுரப்படை விழுங்கப்போகின்றது என நினைந்து அலமரும் அமரர்கள் இராகவன் அங்கியின் கணை விடுத்து அவ்வா சுரப் படையை அறுக்கும்போது மகிழ்ச்சி ஆரவாரம் செய்யலாயி னர் என்க. அடுக்குப்பன்மை குறித்தது. மங்குல் — மேகம். உருமு போன்றது ஆசுரப்படை; உருமையும் வெதுப்பும் நெருப்புப் போன்றது அங்கியின் கணை. இரகுவின் வழியில் தோன்றியவன் என்ற காரணம் பற்றி இராமன் இராகவன் எனப் பட்டான். (97)

இராவணன் கோடிக்கணக்கான கொடிய அம்புகளை எய்தல்

9942. கூற்றுக் கோடினுங் கோடல
கடலெலாங் குடிப்ப
நீற்றுக் குப்பையின் மேருவை
நூறுவ நெடிய
காற்றுப் பின்செலச் செல்வன
வுலகெலாங் கடப்ப
நூற்றுக் கோடியம் பெய்தன
னிராவண னெடியில்.

கூற்றுக் கோடினும் கோடல,
கடல் எலாம் குடிப்ப,
நீற்றுக் குப்பையின் மேருவை
நூறுவ, நெடிய
காற்றுப் பின் செலச் செல்வன,
உலகு எலாம் கடப்ப,
நூற்றுக் கோடி அம்பு எய்தனன்,
இராவணன், நொடியில்.

பொ :—கூற்றுவன் தன் கொல்லுதல் தொழிலில் நின்று மாறுபட்டாலும் தாம் கொலைத்தொழிலில் மாறுபடாதனவும், கடல்நீர் முழுவதையும் குடிக்கவல்லனவும், மேருமலையைப் புழுதிக்குவியலைப் போலப் பொடியாக்கவல்லனவும், நீண்ட காற்றும் தம்பின் செல்லுமாறு விரைந்து செல்வனவும், உலகம் எல்லாவற்றையும் வெல்லவல்லனவுமான நூறுகோடி அம்புகளை இராவணன் நொடிப்பொழுதில் எய்தான்.

கு :—கோடினும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. கூற்றுவன் உயிர்களைக் கொல்லுவதில் எப்போதும் தவருதவன் ஆதலின், அவன் கோடினும் கோடாத அம்புகள் என அவ்வம்புகளின் சிறப்பினைப் புலப்படுத்தியவாறு. நீறு—புழுதி. நூறுதல்—பொடியாக்குதல். காற்றினும் விரைந்து செல்லும் அம்பு என்பார், ‘நெடிய காற்றுப் பின்செலச் செல்வன’ என்ருர். கடத்தல் — வெல்லுதல். நொடி என்றது நொடிப்பொழுதினை. ஆகுபெயர். (98)

இராவணனது விற்போரைப் பலரும் பாராட்டுதல்

9943. என்ன கைக்கடுப் போவென்பர்
சிலர்சில ரிவையும்
அன்ன மாயமே யம்பல
வென்பரவ் வம்புக்
கின்ன முண்டுகொ லிடமென்பர்
சிலர்சில ரிகற்போர்
முன்ன மித்தனை முயன்றில
ஞமென மொழிவர்.

'என்ன கைக்கடுப்போ!' என்பர்
சிலர் ; சிலர், 'இவையும்
அன்ன மாயமே; அம்பு அல'
என்பர் ; 'அவ் அம்புக்கு
இன்னம் உண்டுகொல் இடம்' என்பர்
சிலர் ; சிலர் 'இகல்போர்
முன்னம் இத்தனை முயன்றிலனும்'
என மொழிவர்.

பொ :—(அவன் விற்போரைக் கண்ட) சிலர், என்ன கை விசையோ! என்று சொல்லுவார்கள் ; சிலர், 'இவையும் முன் செய்தாற்போன்ற மாயச்செயலே; அம்பு அல்ல' என்பர்; சிலர், 'அந்த அம்புகள் இயங்குதற்கு இன்னமும் இடம் உண்டோ' என்று சொல்லுவார்கள்; சிலர், 'மாறுபாடுடைய போரில் இதற்கு முன் இராவணன் இவ்வளவு முயன்று செய்திருக்கமாட்டான்' என்று சொல்லுவார்கள்.

கு.—கடுப்பு — வேகம்; விரைவு. முன்னம் அவன் செய்த மாயப்போரை நினைந்து 'அன்ன மாயமே' என்று நெஞ்சறி சுட்டாகக் கூறினர். வற்புறுத்தற்பொருட்டு உடன்பாட்டால் 'அன்ன மாயமே' எனவும் எதிர்மறையால் 'அம்பு அல' எனவும் கூறினர். இராவணன் இதுகாறும் முயன்று செய்யாத அளவு இப்போது இராமனுக்கு எதிராகப் போர்செய்கின்ருன் என்பார், இகற்போர் முன்னம் இத்தனை முயன்றிலனும் என மொழிவாராயினர். (99)

9944. மறைமு தற்றனி நாயகன்
வானினை மறைத்த
சிறையு டைக்கொடுஞ் சரமெலா
மிமைப் பொன்றிற் சிந்தப்
பொறைசி கைப்பெருந் தலைநின்றும்
புங்கத்தி னளவும்
பிறைமு கக்கொடுங் கடுஞ்சர
மவைகொண்டு பிளந்தான்.

மறை முதல் தனி நாயகன்,
வானினை மறைத்த
சிறையுடைக் கொடுஞ் சரம் எலாம்
இமைப்பு ஒன்றில் சிந்தப்
பொறை சிகைப் பெருந் தலை நின்றும்
புங்கத்தின் அளவும்
பிறைமுகக் கொடுங் கடுஞ்சரம்
அவை கொண்டு பிளந்தான்.

பொ:— வேதங்களில் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற ஒப்பற்ற தலைவனாகிய இராமன், விண்ணை மறைத்துக்கொண்டுள்ள சிறகுகளையுடைய கொடிய அம்புகள் எல்லாம் ஓரிமைப்பொழுதில் சிதறிக் கெடுமாறு, பிறைமுகமுடைய கொடிய அம்புகளால், பாரமான உச்சியைக்கொண்ட பெரிய தலையிலிருந்து கூரிய நுனியின் அளவுவரையில் பிளந்தான்.

கு:— இராமனை, முன்னைய தெய்வநிலை நினைந்து 'மறை முதற்றனி நாயகன்' என்றார். இராமன் தன் பிறைமுகக் கணைகளால் இராவணன் விடுத்த கொடிய அம்புகளைப் பிளந்து அழித்தான் என்றவாறு. அம்புகளின் தலைப்பாகத்திலிருந்து நுனிவரையில் சரியாகப் பிளக்குமாறு செய்தான் என அவன் பிளத்தலின் செயலை விவரித்தவாறு. தலை என்றது அம்பின் அடிப்பாகத்தை. (100)

இராவணன் மயன்கணை தொடுத்தல்

9945. அயன்ப டைத்தபே ரண்டத்தி
னருந்தவ மாற்றிப்
பயன்ப டைத்தவர் யாரினும்
படைத்தவன் பல்போர்
வியன்ப டைக்கலந் தொடுப்பெனு
னினியென விரைந்தான்
மயன்ப டைக்கலந் துரந்தனன்
றயரதன் மகன்மேல்.

அயன் படைத்த பேர் அண்டத்தின்
அருந்தவம் ஆற்றி,
பயன் படைத்தவர் யாரினும்
படைத்தவன், 'பல் போர்
வியன் படைக்கலம் தொடுப்பென் நான்,
இனி' என விரைந்தான்;
மயன் படைக்கலம் துரந்தனன்,
தயரதன் மகன்மேல்.

பொ :—பிரமன் படைத்த பெரிய அண்டத்தினுள் செய்தற்கு அரிய தவத்தைச்செய்து பயன் படைத்தவர் யாவரினும் (பெரும்) பயன் பெற்றவனுகிய இராவணன் 'யான் இப்போது பல போரினைச் செய்த பெருமையுடைய படைக்கலத்தைத் தொடுப்பேன்' என்று விரைந்தவனுய் மயனது கணையைத் தொடுத்து இராமன் மேல் விடுத்தான்.

கு :—இவ்வுலகில் தவம் செய்து பயன்பெற்றவர்களில் இராவணனே உயர்ந்தவன் என்பார், 'பயன் படைத்தவர் யாரினும் படைத்தவன்' என்ருர். வியன் — பெருமை. தயரதன் மகன் என்றது இராமனை. விரைந்தான் முற்றெச்சம். மயன், மண்டோதரியின் தந்தை. (101)

மயன்கணை கண்டு வானவரும் வானரரும் அஞ்சுதல்

9946. விட்ட னன்விடு படைக்கலம்
வேரொடு முலகைச்
சுட்ட னன்னெனத் துணுக்கமுற்
றமரருஞ் சுருண்டார்
கெட்ட னம்மென வானரத்
தலைவருங் கிழிந்தார்
சிட்டர் தந்தனித் தேவனு
மதனிலை தெரிந்தான்.

'விட்டனன் விடு படைக்கலம்
வேரொடும் உலகைச்
சுட்டனன்' எனத் துணுக்கம் உற்று,
அமரரும் சுருண்டார்;

'கெட்டனம்' என வானரத்
தலைவரும் கிழிந்தார்;
சிட்டர் தம் தனித்தேவனும்
அதன் நிலை தெரிந்தான்.

பொ:—மேற்கூறியவாறு விட்டவனாகிய இராவணன் தான் விட்ட படைக்கலத்தால் உலகத்தை அடியோடு சுட்டுத் தீர்த்து விட்டான் எனத் தேவரும் நடுக்கமுற்றுச் சுருண்டார்கள்; வானரத் தலைவர்களும் 'இனி நாம் கெட்டொழிந்தோம்' எனக் கருதி மனமுடைந்தார்கள்; சிறந்தவர்கள் வணங்கும் ஒப்பற்ற கடவுளின் அமிசமான இராமனும் அக்கணையின் தன்மையை அறிந்தான்.

கு:—விட்டனன் என்பது அனுவாதமாகக் கூறியது; வினைப் பெயர். உலக முழுவதையும் அழிக்கும் ஆற்றலுடையது அயன் படைக்கலம் என்பதை அமரர் அறிந்து மனம் மாழ்கினர் என்க. சுருளுதல் என்றது மனமலர்ச்சியின்றித் துன்பத்தால் மடிதலைக் குறித்து நின்றது. கிழிந்தார் என்பது நெஞ்சு பிளந்தாற்போன்ற துன்பத்தை யடைந்தனர் என்னும் கருத்தினது. சிட்டர் — உயர்ந்தோர். (102)

*இராமன் காந்தருவம் என்னும் கணையால் மயன்கணையை மாய்த்தல்*

9947. பாந்தட் பஃறலைப் பரந்தகன்
புவியிடைப் பயிலும்
மாந்தர்க் கில்லையால் வாழ்வென
வருகின்ற வதனைக்
காந்தர்ப் பம்மெனுங் கடுங்கொடும்
கணையினாற் கடந்தான்
ஏந்தற் பன்மணி யெறுழ்வலித்
திரள்புயத் திராமன்.

'பாந்தள் பல்தலைப் பரந்து அகன்
புவியிடைப் பயிலும்
மாந்தர்க்கு இல்லையால் வாழ்வு' என
வருகின்ற அதனைக்

காந்தர்ப்பம் எனும் கடுங் கொடுங்
கணையினுல் கடந்தான் —
ஏந்தல் பன்மணி எறுழ்வலித்
திரள்புயத்து இராமன்.

பொ :—'ஆதிசேடன் என்னும் பாம்பின் பல தலைகளின்மேல் பரவி அகன்று கிடக்கின்ற பூமியில் பொருந்தியுள்ள மக்களுக்கு இனி வாழ்வு இல்லை' என்று கருதுமாறு வருகின்ற அக்கணையை, உயர்ந்த பல மணிகள் பதித்த அணிகலன்களை யணிந்த, மிக வலிய திரண்ட புயத்தையுடைய, இராமன் காந்தருவம் என்னும் கடுமையான கொடிய கணையினுல் அழித்தான்.

கு :—பூமியை ஆதிசேடன் ஆயிரந் தலைகளால் தாங்குவதாகக் கூறுவது புராணமரபு. ஏந்தல், மலை எனலும் ஆம். எறுழ் வலி என்பது ஒருபொருட் பன்மொழி. காந்தர்ப்பம்—காந்தருவக் கணை. (103)

இச்செய்யுளின் பின் 45, 52 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

9947 (a) மயன் படைக்கல மழிந்தது
கண்டிகல் மறவோன்
சயம் படைத்தது நன்றிவன்
செருக்கினைத் தடுக்கப்
பயன் படைத்துள தண்டமாப்
படைகளுண் டதனுல்
நயம் படைப்பெனென் றெருகதை
நாதன்மே லெறிந்தான்.

இராவணன் தண்டு கொண்டு வீசுதல்

9948. பண்டு நான்முகன் படைத்தது
கனகனிப் பாரைத்
தொண்டு கொண்டது மதுவெனு
மவுணன்முன் தொட்ட

துண்டிங் கென்வயி னதுதுரந்
துயிருண்பெ னென்னுத்
தண்டு கொண்டெறிந் தானைந்தொ
டைந்துடைத் தலையான்.

'பண்டு நான்முகன் படைத்தது,
கனகன் இப் பாரைத்
தொண்டு கொண்டது, மது எனும்
அவுணன் முன் தொட்டது,
உண்டு இங்கு என்வயின் அது துரந்து
உயிர் உண்பென்' என்னு,
தண்டு கொண்டு எறிந்தான், ஐந்தொடு
ஐந்துடைத் தலையான்.

பொ:—'முன்பு பிரமனுல் படைக்கப்பட்டதும், இரணியன் இந்தப் பூமியைத் தன்னடிப்படுத்துதற்குக் கருவியாயிருந்ததும், மது என்னும் பெயருடைய அவுணன் முன் கொண்டிருந்தது மாகிய தண்டு இங்கு என்னிடத்து உளது; அதை எறிந்து பகைவனுடைய உயிரை உண்பேன்' என்று பத்துத் தலைகளையுடைய இராவணன் அத்தண்டினைக் கையில் கொண்டு இராமன்மேல் வீசினுன்.

கு:—கனகன் — இரணியன். கதையின் வரலாற்றை முன் இரண்டடியில் கூறியவாறு. பிரமன் படைத்தது; இரணியனும் மதுவும் கையாண்டது; இப்போது இராவணன் கையது என்றவாறு. (104)

*இராவணனது கதையின் பெருமை 9949, 9950*

9949. தாரு கன்பண்டு தேவரைத்
தகர்த்தது தனிமா
மேரு மந்தரம் புரைவது
வெயிலன்ன வொளிய
தோரு கந்தனி னுலகநின்
றுருட்டினு முருளாச்
சீரு கந்தது நெரித்தது
தானவர் சிரங்கள்.

தாருகன் பண்டு தேவரைத்
தகர்த்தது, தனி மா
மேரு மந்தரம் புரைவது,
வெயில் அன்ன ஒளியது,
ஓர் உகம்தனின் உலகம் நின்று
உருட்டினும் உருளாச்
சீர் உகந்தது, நெரித்தது,
தானவர் சிரங்கள்.

பொ :—தாருகன் முன்பு தேவர்களை முறியடித்தற்குக் கருவியாயிருந்ததும், ஒப்பற்ற மேருமலையையும் மந்தரமலையையும் வடிவால் ஒத்ததும், சூரியனைப் போன்ற ஒளியுடையதும், ஓர் யுகம் வரையில் உலகத்தார் அனைவரும் நின்று உருட்டினாலும் உருளாத சிறப்பினைப் பெற்றதும், தானவர் தலைகளை நெரித்ததும்.

கு :—'வந்தது மந்தரம் வெருவ' என வருஞ்செய்யுளில் முடியும். காலத்தின் நெடுமை புலப்பட 'ஒருகந்தனில்' என்றும் உருட்டுவோரின் பன்மை புலப்பட 'உலகம்' என்றும் கூறினர். உலகம் இடவாகுபெயராய் அதில் வாழும் மக்களை உணர்த்தியது.
(105)

9950. பசும்பு னற்பெரும் பரவைபண்
டுண்டது பனிப்புற்று
அசும்பு பாய்கின்ற தருக்கனி
னொளிர்கின்ற தண்டம்
தசும்பு போலுடைந் தொழியுமென்
றனைவருந் தளர
விசும்பு பாழ்பட வந்தது
மந்தரம் வெருவ.

பசும் புனல் பெரும்பரவை பண்டு
உண்டது, பனிப்புற்று
அசும்பு பாய்கின்றது, அருக்கனின்
ஒளிர்கின்றது, அண்டம்

தசும்புபோல் உடைந்து ஒழியும் என்று
அனைவரும் தளர,
விசும்பு பாழ்பட வந்தது
மந்தரம் வெருவ.

பொ :—பசுமையான நிறத்தையுடைய நீர் நிறைந்த பெரிய கடலை முன்பு உண்டதும், குளிர்ச்சிமிக்கு நீர் கசிகின்றதும், சூரியனைப்போல ஒளி வீசுகின்றதும் ஆகிய அத்தண்டு, இந்த மண் அண்டம் குடம்போல உடைந்து ஒழிந்துபோகும் என்று கண்டோர் எல்லாம் கவலையுற்றுத் தளரவும், (விண்ணில் உள்ளன வற்றை யெல்லாம் அழித்துவருவதால்) விண் பாழ்படவும், மந்தரமலையும் அஞ்சவும் (இராமனை நோக்கி) வந்தது.

கு :—கடல்நீரை உண்டமையால் தண்டு பனிப்புற்று அசும்பு பாய்வதாயிற்றுப்போலும். அசும்பு — நீர்க்கசிவு. தசும்பு — குடம். அண்டம் குடம் போன்ற வடிவினதாகலின் தண்டினால் அவ்வண்டம் உடையுங்கால் எளிதின் குடம் உடைவதுபோலத் தோன்றும் என்பார், ‘தசும்பு போலுடைந் தொழியும்’ என்றார்.
(106)

இச்செய்யுட்குப்பின் 52ஆம் பிரதியில் பின்வரும் மிகைச் செய்யுள் காணப்படுகிறது :—

9950 (a) அன்ன மாக்கதை விசையொடு
வருதலும், அமலன்
பொன்னி னுக்கிய சிலையிடை
ஒருகணை பொறுத்தான்;
முன்ன தாக்கிய கரங்களும்
முதிர்பொதிர் எறிய,
சின்னமாக்கினன் ; அதுகண்டு, அங்கு
அரக்கனும் சினந்தான்.

*இராமன் தன் அம்பினால் அந்தக் கதையை நீறு ஆக்கியது*

9951. கண்டு தாமரைக் கண்ணனக்
கடவுண்மாக் கதையை
அண்டர் நாயக னுயிரங்
கண்ணினு மடங்காப்

புண்ட ரீகத்தின் முகையன்ன
புகர்முகம் விட்டான்
உண்டை நூறுட னீறுபட்
டுளதென வுதிர்த்தான்.

கண்டு, தாமரைக் கண்ணன், அக்
கடவுள் மாக்கதையை,
அண்டர் நாயகன் ஆயிரங்
கண்ணினும் அடங்காப்
புண்டரீகத்தின் முகை அன்ன
புகர்முகம் விட்டான்
உண்டை நூறுடன் நீறுபட்டுளது
என உதிர்த்தான்.

பொ :— தாமரை மலர்போன்ற கண்ணையுடைய இராமன் அந்தத் தெய்வத்தன்மையுடைய பெரிய கதையைக் கண்டு, இந்திரனுடைய ஆயிரங் கண்களினும் அடங்காத அழகினையுடைய தாமரை அரும்புபோன்ற அம்பினைவிட்டு, (அந்தக் கதை) சுக்குநூருய்ப் பொடியாயது என்னுமாறு உதிரச் செய்தான்.

கு :— தாமரைக்கண்ணன், கடவுண்மாக்கதையைப் புகர்முகம்விட்டு உதிர்த்தான் என இயையும். விட்டான் முற்றெச்சம். அண்டர் நாயகன் என்றது இந்திரனை. அவன் ஆயிரங் கண்ணன் ஆதலின் அவன் ஆயிரங் கண்கட்கும் அடங்காத அழகினையுடைய அம்பு என்று புகழ்ந்தவாறு. உண்டை நூறுடன் என்றது, அந்தக் கதை நூறு துண்டுகளானதோடு என்றவாறு. நீறு — பொடி; துகள். (107)

மாயையின்கணை விட இராவணன் எண்ணுதல்

9952. தேய நின்றவன் சிலைவலங்
காட்டினுன் றீராப்
பேயை யென்பல துரப்பதிங்
கிவன்பிழை யாமல்

ஆய தன்பெரும் படையொடு
மடுகளத் தவிய
மாயை யின்படை தொடுப்பனென்
றிராவணன் மதித்தான்.

'தேய நின்றவன், சிலைவலம்
காட்டினுன் ; தீராப்
பேயை என்பல துரப்பது? இங்கு
இவன் பிழையாமல்
ஆய தன்பெரும் படையொடும்
அடுகளத்து அவிய
மாயையின் படை தொடுப்பன்' என்று,
இராவணன் மதித்தான்.

பொ :— (நம்மால்) அழியுமாறு நின்ற பகைவன் தன் வலிமையைக் காட்டினுன் ; இவனை அடியோடு தீர்க்கமாட்டாத பேய்போன்ற பயனற்ற படைகளை (இவன்மீது) விடுவதில் என்ன பயன்? இப்போது இவன் தப்பாமல் தனக்குரியதாய பெரிய சேனையோடும் போர்க்களத்தில் அழியுமாறு பெரிய மாயையின் கணையைத் தொடுப்பேன் என்று இராவணன் எண்ணலானுன்.

கு :— அவியும் விளக்குச் சுடர்விட்டு எரிதல்போல நம்மால் அழியப் போகின்ற இராமன் தன் வில் வலிமையைக் காட்டினுன் ; இதில் வியப்பில்லை என்றவாறு. தீராப் பேயை என்றது, இராமனைத் தீர்க்க வியலாத பேய் போன்ற எளிய படைகளை. மாயையின் படை பகைவனை அழிப்பதில் வல்லது ஆகலின் அதனைத் தொடுக்க எண்ணினுன் இராவணன். (108)

இச்செய்யுளின் பின் 52 ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன :—

9952 (a) அன்ன மாக்கதை விசையொடு வருதலு மமலன்
பொன்னி னுக்கிய சிலையிடை ஒருகணை பொறுத்தான்
முன்னதாக்கிய கரங்களும் முதிர்பொதிர் எறிய
சின்ன மாக்கின னதுகண்டங் கரக்கனும் சினந்தான்.

9952 (b) இரவி தன்படை யேவின
னரக்கன்மற் றமலன்
கருதி யன்னதிண் படைகொடு
காத்தனன் மதியின்
விரவு வெம்படை வெய்யவன்
விடுத்தலும் வீரன்
உரவு திங்களின் படைகொண்டங்
கதனையு மொறுத்தான்.

9952 (c) வாருதிக்கிறை படைகொண்டங் கரக்கனு மறைத்தான்
நேருதிக்கவப் படைகொண்டு நிமலனு நீக்க
தாருதித்திரு தடம்புயத் தரக்கனுந் தருக்கி
பேருவிப் பென்மற் றிவனுயி ரெனுமுளம் பிடித்தான்.

9952 (d) முக்க ணன்படை முதலிய தேவர்தம் படைகள்
ஒக்க வாரியங் கரக்கனு மூழ்முறை துரப்பப்
புக்கிவ் வண்ணலே வலங்கொண்டு போனதும் பொடிபட்
டுக்கி யோடின தும்மன்றி யொன்று செய்துளதோ?

இராவணன் மாயையின் கணையை விடுதல்

9953. பூச னைத்தொழில் புரிந்துதான்
முறைமையிற் போற்றும்
ஈச னைத்தொழு திருடியுஞ்
சந்தமு மெண்ணி
ஆசை பத்தினு மந்தரப்
பரப்பினு மடங்கா
வீசி னன்செல வில்லிடைத்
தொடைகொடு விட்டான்.

பூசனைத் தொழில் புரிந்து, தான்
முறைமையின் போற்றும்
ஈசனைத் தொழுது, இருடியும்
சந்தமும் எண்ணி,

ஆசை பத்தினும் அந்தரப்
பரப்பினும் அடங்கா
வீசினன் செல, வில்லிடைத்
தொடைகொடு விட்டான்.

பொ :— அந்தக் கணையைப் பூசித்துப்பின்பு தான் முறைமை யாகப் போற்றுகின்ற சிவபிரானைத் தொழுது, அந்தக் கணையின் மந்திரத்திற்குரிய முனிவனையும் மந்திரத்தையும் எண்ணி உச்சரித்து, பத்துத் திசைகளிலும் வானப் பரப்பிலும் அடங்காமல் எங்கும் செல்லுமாறு வில்லில் தொடுத்து விடுத்தானாய் வீசினான்.

கு :— உயர்ந்த தெய்வக் கணைகளைப் பூசித்து, அக்கணைக் குரிய முனிவனை நினைந்து, அவன் கூறிய மந்திரத்தைச் சந்தம் பிறழாமல் உச்சரித்து, விடுதல் மரபு என்பது இதனால் அறியலாம். கணைக்குச் சிறப்புப் பூசனை செய்யும்போதும் நாள்தொறும் போற்றும் சிவனைப் போற்றினாலன்றிப் பயன்விளையாது ஆதலின், 'தான் முறைமையிற் போற்றும் ஈசனைத் தொழுது' என்றார். திசைக்குள் அடங்காது எங்கும்செல்லுமாறு மாயையின் கணையை எய்தான் இராவணன் என்க. ஆசை—திசை. திசைபத்தில் அந்தரமும் அடங்குமேனும் ஏனைப்பூதங்களையும் தன்னுள்ளடக்கி நிற்கும் பெருமையுடைமை பற்றிச் சிறப்பு வகையானும் கூறியவாறு. சந்தம்—மந்திரம். அடங்கா என்றது ஈறுகெட்ட எதிர் மறை வினையெச்சம். விட்டானாய் வீசினன் என முற்றெச்சமாக்குக. (109)

மாயையின் கணையால் இறந்த அரக்கர் எழுந்து ஆர்த்தல்

9954. மாயம் பொத்திய வயப்படை
விடுதலும் வரம்பில்
காய மத்தனை யுந்நெடுங்
காயங்கள் கதுவ
ஆயு வுற்றெழுந் தாரென
வார்த்தன ரமரில்
தூய கொற்றவர் சுடுசரத்
தான்முன்பு துணிந்தார்.

மாயம் பொத்திய வயப்படை
விடுதலும், வரம்பு இல்
காயம் அத்தனையும், நெடுங்
காயங்கள் கதுவ,
ஆயு உற்று எழுந்தார் என
ஆர்த்தனர் — அமரில்
தூய கொற்றவர் சுடுசரத்தால்
முன்பு துணிந்தார்.

பொ :— மாயம் நிறைந்த வெற்றிமிக்க படையை (இராவணன்) விட்ட அளவில், போரில் தூய்மையுள்ள இராம இலக்குவரின் சுடுகின்ற கணைகளால் முன்பு துணிக்கப்பட்டு இறந்த அரக்கர்கள் எல்லாம், அளவு இல்லாத தம் உடம்புகள் அத்துணையும் (முன்பு பட்டிருந்த) நெடிய காயங்கள்எல்லாம் ஒட்டிக்கொண்டு முன்னை நிலையினதாக, ஆயுளைப்பெற்று எழுந்தார்கள் என்னுமாறு எழுந்து ஆரவாரித்தனர்.

கு :— பொத்துதல்—நிறைதல். வயப்படை என்றது மாயையின் கணையை. காயம் முன்னது உடம்பு; பின்னது புண். நெடுங்காயங்கள் கதுவுதலாவது, பிளவுபட்ட புண்கள் எல்லாம் ஒட்டிக்கொண்டு முன்போலப் புண்ணில்லாமல் ஆதல். ஆயு—ஆயுள். ஆயுள் முடிந்தவர்கள் மீண்டும் ஆயுளைப் பெற்றவர்போல மாயத்தால் உந்தப்பட்டு எழுந்து ஆரவாரித்தனர் என்க. தூய கொற்றவர் என்றது, அறப்போர் செய்து வெற்றிபெறும் இயல்பினரான இராம இலக்குவரை. முன்பு துணிந்தார் ஆர்த்தனர் என இயையும். (110)

9955. இந்தி ரற்கொரு பகைஞனு
மவற்கிளை யோரும்
தந்தி ரப்பெருந் தலைவருந்
தலைத்தலை யோரும்
மந்தி ரச்சுற்றத் தவர்களும்
வரம்பிலர் பிறரும்
அந்த ரத்தினை மறைத்தனர்
மழையுக வார்ப்பார்.

இந்திரற்கு ஒரு பகைஞனும்,
அவற்கு இளையோரும்,
தந்திரப் பெருந் தலைவரும்,
தலைத் தலையோரும்,
மந்திரச் சுற்றத்தவர்களும்
வரம்பு இலர் பிறரும்,
அந்தரத்தினை மறைத்தனர்,
மழை உக ஆர்ப்பார்.

பொ :— இந்திரனுக்கு ஒரு பகைவனாகிய இந்திரசித்தும் அவனுக்குத் தம்பியரான அதிகாயன் நிகும்பன் என்பவர்களும், சேனையின் பெருந்தலைவர்களும் மற்றைத் தலைமையாக அமைந்தோரும், (மகோதரன் முதலிய) மந்திரச் சுற்றத்தவர்களும், அளவில்லாத மற்றை அரக்கர்களும், மழையும் சிதறும்படி ஆரவாரிப்பவராய் வானத்தையும் மறைத்துக் கொண்டு நிரம்பி நின்றனர்.

கு :— தந்திரம் — சேனை. மந்திரச் சுற்றத்தவர் என்றது மந்திரிமார்களை. ஆர்ப்பாராராய் அந்தரத்தினை மறைத்தனர் என இயையும். அந்தரத்தினை மறைத்தலாவது விண்ணெலாம் நிரம்பி நிற்றல். இவர்கள் ஆரவாரம் கேட்டு மேகமும் சிதறின என்க. இனி, மழை என்பது ஆகுபெயராய் இடியை யுணர்த்தியதாகக் கொண்டு இடியும் கீழ்ப்படுமாறு ஆர்த்தனர் எனலும் ஆம். (111)

9956. குடப்பெ ருஞ்செவிக் குன்றமு
மற்றுள குழுவும்
படைத்த மூலமாத் தானையு
முதலிய பட்ட
விடைத் தெழுந்தன யானைதேர்
பரிமுதல் வெவ்வே
றடைத்த வூர்திக ளனைத்தும்வந்
தவ்வழி யடைந்த.

குடப் பெருஞ் செவிக்குன்றமும்,
மற்றுள குழுவும்,
படைத்த மூல மாத் தானையும்,
முதலிய பட்ட,
விடைத்து எழுந்தன ; யானை, தேர்,
பரி முதல் வெவ்வேறு
அடைத்த ஊர்திகள் அனைத்தும் வந்து,
அவ்வழி அடைந்த.

பொ :— முன்பு இறந்துபட்டனவாகிய குடம்போன்ற பெரிய செவியிணையுடைய கும்பகருணனாகிய மலையும், அவனைச் சார்ந்துள்ள மற்ற அரக்கர் கூட்டமும், இராவணன் பெற்றிருந்த மூல பலப்படையும் முதலியன செருக்குற்று எழுந்தன; யானையும் தேரும், குதிரையும் முதலாக வெவ்வேறாக நெருங்கியிருந்த ஊர்திகள் அனைத்தும் அவ்விடத்தில் வந்து அடைந்தன.

கு :— கும்ப கருணன் என்ற பெயரை 'குடப்பெருஞ் செவிக் குன்றம்' எனத் தமிழ்ப்படுத்தியவாறு. குன்றம் போன்ற பெருந் தோற்றமுடைமை பற்றிக் குன்றம் என்றார். பட்ட குன்றமும் குழுவும் தானையு முதலிய விடைத்து எழுந்தன என இயையும். விடைத்தல்—செருக்குதல். ஊர்திகள் அனைத்தும் அவ்வழிவந்து அடைந்த என்று இயையும். (112)

9957. ஆயி ரப்பெரு வெள்ளமென்
றறிஞரே யறைந்த
காய்சி னப்பெருங் கடற்படை
களப்பட்ட வெல்லாம்
ஈச னிற்பெற்ற வரத்தினு
லெய்திய வென்னத்
தேச முற்றவுஞ் செறிந்தன
திசைகளுந் திகைப்ப.

ஆயிரம் பெருவெள்ளம் என்று
அறிஞரே அறைந்த
காய்சினப் பெருங் கடற்படை
களப்பட்ட எல்லாம்,

ஈசனின் பெற்ற வரத்தினுல்
எய்திய என்ன,
தேசம் முற்றவும் செறிந்தன,
திசைகளும் திகைப்ப.

பொ :— போர்க்களத்தில் (முன்பு) இறந்து பட்டனவாகிய ஆயிரம் வெள்ளம் என்று அறிஞர்களே அளவிட்டுக் கூறிய, கொல்லும் சினத்தையுடைய பெரிய கடல் போன்ற, சேனை எல்லாம், (இராவணன் ) சிவபிரானிடத்துப் பெற்ற வரத்தினுல் மீளவந்தன என்று கருதுமாறு, திசைகளும் திகைக்கும்படி, உலக முழுவதும் நெருங்கி நின்றன.

கு :— இராவணனுடையதாய் இராம இலக்குவரால் இறந்து பட்ட ஆயிரவெள்ளம் அரக்கர் சேனையும் எழுந்து உலக மெல்லாம் நெருங்கி நின்றது என்க. காய்சினம் — கொல்லும் கோபம். ''ஆயிரம் வெள்ளமான அரக்கர் தந்தானையைய'' (இலங்கைகாண்—4) ''ஆயிரம் பெருவெள்ள முண்டிலங்கை யினளவில் தீயின் வெய்யபோர் அரக்கர் தஞ்சேனை'' (படைக் காட்சிப் - 43) என முன் கூறியுள்ளமை நினைக. தேசம்-உலகம்.
(113)

9958. சென்ற வெங்கணுந் தேவரு
முனிவருஞ் சிந்த
வென்ற தெங்களைப் போலும்யாம்
விளிவது முளதே
இன்று காட்டுது மெய்துமி
னெய்துமி னென்னுக்
கொன்ற கொற்றவர் தம்பெயர்
குறித்தறை கூவி.

சென்ற எங்கணும், தேவரும்
முனிவரும் சிந்த —
'வென்றது எங்களைப்' போலும் ; யாம்
விளிவதும் உளதே?

இன்று காட்டுதும்; எய்துமின்,
எய்துமின்' என்னு,
கொன்ற கொற்றவர் தம்பெயர்
குறித்து அறை கூவி.

பொ :— (உயிர்பெற்றெழுந்தாற்போன்ற சேனைகள்) 'நீங்கள் வென்றது எங்களையோ? யாங்கள் இறப்பதும் உண்டோ? எம் வலிமையை இன்று காட்டுவோம், வாருங்கள், வாருங்கள்!' என்று தம்மைக் கொன்ற வெற்றிவீரர்தம் பெயரைச் சொல்லி அறைகூவிக் கொண்டு, தேவரும் முனிவரும் சிதறி ஓடுமாறு எல்லாவிடங்களிலும் சென்றன.

கு :— அறைகூவி எங்கனும் சென்ற என இயையும். 'எங்களை நீங்கள் வென்றதும் யாங்கள் இறந்ததும் பொய்' என்ற கருத்தால் 'வென்ற தெங்களைப் போலும்' எனவும், 'யாம் விளிவது முளதே' எனவும் கூறின. தம்மைக் கொன்ற வீரரின் பெயரைச் சொல்லி மீட்டும் தம்மோடு போர் செய்ய அறைகூவி அழைத்துக் கொண்டு திரிந்தன அச்சேனைகள் என்க. (114)

மாயப் படையால் பூதங்களும் பேய்களும் தோன்றுதல்

9959. பாரி டந்துகொண் டெழுந்தன
பாம்பெனும் படிய
பாரி டந்துனைந் தெழுந்தன
மலையன்ன படிய
பேரி டங்கது வரிதினி
விசும்பெனப் பிறந்த
பேரி டங்கரிற் கொடுங்குழை
யணிந்தன பேய்கள்.

பார் இடந்துகொண்டு எழுந்தன
பாம்பு எனும் படிய,
பாரிடம் துனைந்து எழுந்தன
மலை அன்ன படிய,

'பேர் இடம் கதுவரிது, இனி
விசும்பு' என, பிறந்த,
பேர் இடங்கரின் கொடுங்குழை
அணிந்தன பேய்கள்.

பொ :—(மாயையின் கணையினால்) பாதலத்திருந்த பாம்புகள் பூமியைப் பிளந்து கொண்டு எழுந்தன என்னும் தன்மையனவும், இந்தப் பெரிய இடம் இவை தங்குதற்குப் போதாது; இனி, விசும்பே (தங்குதற்குரியது) என்று தோன்ற, மலை போன்ற பெருவடிவு படைத்தனவும் ஆன பூதங்கள் விரைந்து மேலே எழுந்தன; பெரிய முதலைகளாகிய வளைந்த குழைகளை யணிந்தனவாகிய பேய்கள் தோன்றின.

கு :— பூதங்களும் பேய்களும் மாயத்தால் தோன்றினமை கூறியவாறு. பாரிடம்—பூதம். பூதங்களின் அமைப்பு பெரிய பாம்புகளைப் போன்றிருந்தன; மலைபோன்ற பெருந்தோற்றம் உடையனவாக இருந்தன. துனைதல் — விரைதல். பேய்கள் பிறந்த என்க. பேய்களின் பெருந்தோற்றம் உய்த்துணருமாறு அவற்றின் குழைகளை யெடுத்துக் கூறி விளக்கியுள்ளார். பெரிய முதலைகளையே காதின் அணியாக அணிந்துகொண்டிருந்தனவாம் அப்பேய்கள். 'கோம்பி பாம்பிடைக் கோத்தணி தாவிய' (கலிங்கத் - 141) எனப் பேயின் அணிகலன் கூறியிருப்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். இடங்கர்—முதலை. இன் தவிர் வழிச் சாரியை. இடங்கராகிய கொடுங்குழை என்க.
(115)

9960. தாம சத்தினிற் பிறந்தவ
ரறந்தெறுந் தகையர்
தாம சத்தினிற் செல்கிலாச்
சதுமுகத் தவற்குந்
தாம சத்தினைச் செய்பவ
ரடைந்தனர் தளராத்
தாம சத்திரஞ் சித்திரம்
பொருந்தினர் தயங்க.

தாமசத்தினிற் பிறந்தவர்,
அறம் தெறும் தகையர்,
தாமசத்தினில் செல்கிலாச்
சது முகத்தவற்கும்
தாமசத்தினைச் செய்பவர்
அடைந்தனர் — தளராத்
தாம சத்திரம் சித்திரம்
பொருந்தினர் தயங்க.

பொ :— இருள்மயமான மாயக்கணையில் தோன்றிய அரக்கர், அறத்தை அழிக்கும் தன்மையர்; தாமத குணத்தில் செல்லாத பிரமனுக்கும் தாமத குணத்தை உண்டாக்குவர்; (அத்தகையோர்) தளர்ச்சியுறாத ஒளிவாய்ந்த படைக்கலங்கள் விசித்திரம் விளங்கப் பொருந்தப் பெற்றவராய் அங்கு வந்து அடைந்தனர்.

கு :— தாமசம்—இருள்; இங்கு இருள்மயமான மாயக்கணையைக் குறித்தது. இரண்டாம் அடியிலும் மூன்றும் அடியிலும் உள்ள தாமசம் என்பது முக்குணத்துள் ஒன்றாகிய தாமதகுணத்தை உணர்த்தியது. இக்குணத்தின் இயல்பு காமம், கொலை, கோபம், நெடுந்துயில், மறதி முதலியன விளைத்தல். தாமத குணவிருத்தியில்லாத பிரமதேவனுக்கும் தாமத குணத்தை உண்டாக்கும் அளவுக்கு அழுத்தமான தாமதகுணத்தையுடையவர் என அவர் இழிவு புலப்படுத்தியவாறு. சத்திரம்—படைக்கலம். சித்திரம்—விசித்திரம்; முதற்குறை. தாமம்—ஒளி. தளராத் தாமசத்திரம் சித்திரம் தயங்கப் பொருந்தினராய் அடைந்தனர் என இயையும். (116)

9961. தாம விந்துமீ தெழுந்தவர்க்
கிரட்டியின் றகையர்
தாம விந்துவின் பிளவெனத்
தயங்கும்வா ளெயிற்றர்
தாம விஞ்சையர் கடற்பெருந்
தகையினர் தரளத்
தாம விஞ்சையர் துவன்றினர்
திசைதொறுந் தருக்கி.

தாம் அவிந்து மீது எழுந்தவர்க்கு
இரட்டியின் தகையர்,
தாம இந்துவின் பிளவு எனத்
தயங்கும் வாள் எயிற்றர்,
தாம் அவிஞ்சையர், கடல்பெருந்
தகையினர், தரளத்
தாம விஞ்சையர் துவன்றினர்
திசைதொறும் தருக்கி.

பொ :— போரில் இறந்து இப்போது உயிர்பெற்று மேல் எழுந்த அரக்கர்தமக்கு இரட்டியான தொகையினரும், ஒளி வாய்ந்த சந்திரனின் பிளவு போன்று விளங்கும் ஒளிவாய்ந்த கோரைப் பற்களையுடையவரும் தாவிச்செல்லும் மாயவித்தை வல்லவரும் ஆகிய அசுரரும், கடல் போன்ற பெரிய அளவினரும், முத்துமாலை அணிந்தவரும் ஆகிய வித்தியாதரரும் திசைகள் தோறும் செருக்கி நெருங்கினர்.

கு :— இராவணற்கு ஆட்பட்ட அசுரரும் விஞ்சையரும் வந்து நெருங்கினமை கூறியவாறு. முதலடியில் தாம், அசை நிலை. அவிதல் — இறத்தல். அங்கு வந்துள்ள அசுரரின் தொகை, இறந்துபட்டு எழுந்த அரக்கர் தொகையின் இரட்டிப்பு என்றவாறு. இந்து - சந்திரன். கடைவாயில் உள்ள கோரைப் பல் வளைந்து வெண்மையாக இருத்தல் பற்றி 'இந்துவின் பிளவு எனத் தயங்கும் வாள் எயிற்றர்' என்றார். அவிஞ்சையர் என்றது, மாயவித்தை வல்ல அசுரரை. தருக்கித் துவன்றினர் என இயையும். (117)

9962. தாம டங்கலு முடங்குளை
யாளியுந் தகுவார்
தாம டங்கலு நெடுந்திசை
யுலகொடு தகைவார்
தாம டங்கலுங் கடலுமொத்
தார்தரும் பகையார்
தாம டங்கலுங் கொடுஞ்சுடர்ப்
படைகளுந் தரித்தார்.

தாம் மடங்கலும் முடங்கு உளை
யாளியும் தகுவார்,
தாம் அடங்கலும் நெடுந்திசை
உலகொடு தகைவார்,
தாம் மடங்கலும் கடலும் ஒத்து
ஆர்தரும் பகையார்,
தா மடங்கலும் கொடுஞ்சுடர்ப்
படைகளும் தரித்தார்.

பொ :— வீரத்தில் தாவும் இயல்புள்ள சிங்கமும் வளைந்த பிடரியையுடைய யாளியும் போல்வாரும், தாம் அனைவரும் வடிவத்தால் நெடிய திசைகளை உலகத்தோடு அடைத்துக் கொள்ளத் தக்கவரும், ஒளியுள்ள நெருப்பும் கடலும் போன்று நிறைந்த பகைமை யுணர்ச்சியுள்ளவரும், இடியையும் கொடுமையான சுடர்மிக்க படைகளையும் தாங்கியிருந்தார்.

கு :— இச் செய்யுள் யமகம். மாயக்கணையில் தோன்றியவரின் வீரமும் உடற்பருமையும், பகைமையும் கூறி, அவர்கள் இடியும் படைகளும் தாங்கியிருந்தமை புலப்படுத்தியவாறு. தாம்-தாவும். தகைதலாவது, இடமுழுவதும் தமக்கேயென அடைத்துக் கொள்ளுதல். மடங்கல்—சிங்கம். நெருப்பு, இடி. தம் வன்மையால் இடியையும் ஏந்தினர் என்க. (118)

இச்செய்யுளின் பின் 52 ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

9962 (a) இத்திறம்பட மாயையின் படைவகுத் தெழுந்தங்கு
எத்திறங்களு மிடிஉரு மெறிந்திட வெருவி,
சித்திரம்பெற அடங்கிய கவிப்பெருஞ் சேனை
மொய்த்து மூடியது, அண்டங்கள் முழுவதும் மாய.

9962 (b) அண்ட கோடிகள் முழுவது மடுக்கழிந் துலையக்
கொண்ட காலமிதோ வெனக் குலைகுலைந் தமரர்
துண்ட வான்பிறை சூடியைத் தொழ வவன்துயரம்
கண்டி ராகவன் கடிந்திடும் கலங்கலீ ரென்ருன்.

மாயப்படையின் விளைவு கண்டு இராமன் மாதலியை வினவுதல்

9963. இனைய தன்மையை நோக்கிய
விந்திரை கொழுநன்
வினைய மற்றிது மாயமோ
விதியது விளைவோ
வனையும் வன்கழ லரக்கர்தம்
வரத்தினே மற்றோ
நினைதி யாமெனிற் பகரென
மாதலி நிகழ்த்தும்.

இனைய தன்மையை நோக்கிய
இந்திரை கொழுநன்,
'வினையம் மற்று இது மாயமோ?
விதியது விளைவோ?
வனையும் வன்கழல் அரக்கர்தம்
வரத்தினோ? மற்றோ?
நினைதியாம் எனின், பகர்' என,
மாதலி நிகழ்த்தும்.

பொ:— இவ்வாறு நிகழ்ந்த தன்மையை நோக்கிய திருமகள் கொழுநனாகிய இராமன் (மாதலியை நோக்கி) 'இச் செயல் மாயத்தால் நிகழ்ந்ததோ? அல்லது, விதியின் விளைவு தானோ? அல்லது, வலிய கழலையணிந்த அரக்கர்தம் வரத்தினால் நிகழ்ந்ததோ? வேறுகாரணத்தால் நிகழ்ந்ததோ? நீ அறிந்திருப்பாயானால் சொல்' என வினவ, மாதலி சொல்வானானான்.

கு:— மாதலி கூறியது அடுத்த செய்யுளில் காணலாம். இராமனது தெய்வநிலை நினைந்து 'இந்திரை கொழுநன்' என்றார். இந்திரை — திருமகள். இது மாயத்தால் நிகழ்ந்தது என்பதை அறிந்தவனாகிய இராமன் அறியாதவன் போல மாதலியை வினவுகின்றான் என்ற குறிப்பு இப்பெயரால் புலப் படச் செய்தவாறு. நினைதல் இங்கு அறிதலை உணர்த்தியது. மற்றோ? என்றது, அவர்தம் உரத்தினோ? என்றவாறு; இது பின் 122 ஆம் செய்யுளால் விளங்கும். (119)

மாதலியின் மறு மொழி 9964, 9965

9964. இருப்புக் கம்மியற் கிழைநுழை
ஷூசியொன் றியற்றி
விருப்பிற் கோடியால் விலைக்கெனும்
பதடியின் விட்டான்
கருப்புக் கார்மழை வண்ணவக்
கடுந்திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய தோளவன்
மீளரு மாயம்.

இருப்புக் கம்மியற்கு இழைநுழை
ஊசி ஒன்று இயற்றி,
விருப்பின் 'கோடியால் விலைக்கு' எனும்
பதடியின், விட்டான் —
கருப்புக் கார்மழை வண்ண! அக்
கடுந்திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய தோளவன்
மீளரு மாயம்.

பொ :— கார்காலத்துத் தோன்றும் கரிய மேகம்போன்ற நிறத்தை யுடையவனே! அந்தக் கடுமையான திசையானைகளின் மருப்பினால் தோண்டப்பட்ட தோளையுடைய இராவணன், நூல் நுழைதற்குரிய காதினையுடைய ஊசி ஒன்றைச் செய்துகொண்டு, இரும்புத் தொழில் செய்யும் கொல்லனிடத்தில் விருப்பத்தோடு சென்று 'விலைக்கு வாங்கிக் கொள்க' என்று விற்கும் அறிவிலிபோல, (மாயவனாகிய நின்மேல்) மீளுதற்கு அரிய மாயக் கணையை விட்டான்.

கு :— கார் என்றது, இருமடி ஆகுபெயராய்க் கார்காலத்தை உணர்த்தியது; கருப்பு மழை என இயையும். மழை—மேகம். இராமனது வண்ணமே அவன் திருமாலின் அமிசமானவன் என்பதை யுணர்த்துதலின் அந்நிறப் பெயரால் விளித்தான். ஊசி செய்வதையே தொழிலாகக் கொண்டுள்ள கொல்லனிடத்தில் சென்று ஊசி விற்றால் அது விலை போகாதவாறு போல, மாயம் வல்லவனாகிய நின்மேல் இராவணன் வீசிய மாயக் கணை பயன்

தராது அழியும் என்பதை மாதலி உவமையால் புலப்படுத்தினன் என்க. ''வைகொண்ட ஊசி கொற் சேரியின் விற்றெம்மில் வண்ண வண்ணப் பொய்கொண்டு நிற்கலுற்றோ புலையாத் தின்னி போந்ததுவே'' (திருக்கோவையார் - 386) என்பதும் ''கொற்சேரித் துன்னூசி விற்பவரில்'' (பழமொழி - 73) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். திசையானைகளின் கொம்புகளால் கல்லப்பட்ட தோளையுடைய இராவணன் என்றது, அவனுடைய வலிமைக் குறைவைப் புலப்படுத்தியவாறு. (120)

9965. வீய்க்கும் வாயயில் வெள்ளெயிற்
றரவின்வெவ் விடத்தை
மாய்க்கு மாநெடு மந்திரந்
தந்ததோர் வலியின்
நோய்க்கு நோய்தரு வினைக்குநின்
பெரும்பெயர் நொடியின்
நீக்கு வாய்நினை நினைப்பவர்
பிறப்பென நீங்கும்.

வீய்க்கும் வாய் அயில் வெள் எயிற்று
அரவின் வெவ்விடத்தை
மாய்க்குமா நெடுமந்திரம்
தந்தது ஓர் வலியின்,
நோய்க்கும் நோய்தரு வினைக்கும் நின்
பெரும்பெயர் நொடியின்,
நீக்குவாய்! நினை நினைப்பவர்
பிறப்பு என நீங்கும்.

பொ:— உயிரை அழிக்கும் இயல்பினதாகிய, கூரிய முனையொடுங்கூடிய வெள்ளிய பற்களையுடைய பாம்பின் கொடிய விடத்தை மாய்க்குமாறு ஓதும் நெடியதொரு மந்திரவலியைப் போலவும், நோயை நீக்குதற்கும் அந்நோயைத் தருகின்ற பழவினையை நீக்குதற்கும் (உச்சரிக்கும்) நின்பெருமையுடைய பெயரின் உச்சரிப்புப் போலவும் (விளங்கும் தக்கதொரு கணையால்) நீக்குவாயாக! (அவ்வாறு நீ நீக்கின் இம்மாய விளைவுகள் எல்லாம்) நின்னை நினைப்பவர்தம் பிறவி நீங்குவது போல நீங்கி ஒழியும்.

கு :— வீய்க்கும் என்பது வெவ்விடத்திற்கு அடை. அயில் வாய் எனவும், தந்ததோர் நெடு மந்திர வலியின் எனவும் இயையும். தருதல், இங்கு ஓதுதலை உணர்த்தியது. அரவின் விடத்தை மாய்க்கும் மந்திரம் போலவும், வினையை நீக்கும் பெரும்பெயர் நொடி போலவும், தக்கதொரு கணையினால் நீ நீக்குவாயாக என மாதலி வேண்டிக் கொண்டவாறு. வலியின், நொடியின் என்புழி 'இன்' ஒப்புப் பொருளது. நோய்க்கும் வினைக்கும் என்புழிக் குவ்வுருபு பகைப்பொருளில் வந்தது. நோயை நீக்குதற்கும் வினையை நீக்குதற்கும் உச்சரிக்கும் நின் பெரும்பெயர் உச்சரிப்புப்போல என்றவாறு. நின் பெரும் பெயர் என்றது இராம நாமத்தையே. இப்பெரும் பெயரின் சிறப்பை, ''மும்மை சாலுலகுக்கெல்லா மூல மந்திரத்தை முற்றும் தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத் தானே, இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை 'இராமன்' என்னும் செம்மைசேர் நாமந்தன்னைக் கண்களில் தெரியக் கண்டான்'' (வாலிவதைப் — 80) என்று முன் கூறியுள்ளதால் அறியலாம். நொடி—சொல்; இங்கு உச்சரிப்பினை உணர்த்தியது. இதனால் 'ராம' என்ற பெயரே மகாவாக்கியமாய்ப் பயன் தருதலையும், 'நினை நினைப்பவர் பிறப்பென நீங்கும்' என்றதால் இராமனே முதற்கடவுள் ஆதலையும் புலப்படுத்தியவாறு. (121)

*மாதலி வேண்ட இராமன் ஞானமாக்கணையை விடுதல்*

9966. வரத்தி னாயினு மாயையி
னாயினும் வலியோர்
உரத்தி னாயினு முண்மையி
னாயினு மோடத்
துரத்தி யாலென ஞானமாக்
கடுங்கணை துரந்தான்
சிரத்தி னான்மறை யிறைஞ்சவுந்
தொடரவுஞ் சேயோன்.

'வரத்தின் ஆயினும், மாயையின்
ஆயினும், வலியோர்
உரத்தின் ஆயினும், உண்மையின்
ஆயினும் ஓடத்

துரத்தியால்' என, ஞானமாக்
கடுங்கணை துரந்தான்—
சிரத்தின் நான்மறை இறைஞ்சவும்
தொடரவும் சேயோன்.

பொ :— '(இவ்விளைவுகள்) வலியோராகிய அரக்கர்தம் வரத்தினால் ஆகியிருப்பினும், அன்றி, அவர்தம் மாயையினால் ஆகியிருப்பினும், அல்லது, அவர்தம் வலிமையினால் ஆகியிருப்பினும், அல்லது, உண்மையான விதியினால் ஆகியிருப்பினும் இவை ஓடுமாறு (தக்க கணையை) விடுவாயாக!' என மாதலி வேண்டிக்கொள்ள, நான்கு வேதங்களும் தம் (உபநிடதங்களாகிய) சிரங்களால் வணங்கவும், பின் தொடரவும், அவற்றிற்கு அப்பாற்பட்டு நிற்பவனாகிய இராமன், பெரிய ஞானக் கடுங் கணையை விடுத்தான்.

கு :— மேல் இராமன் ''வினையமற்றிது மாயமோ விதியது விளைவோ, வனையும் வன்கழலரக்கர்தம் வரத்திததினோ மற்றோ?'' என வினவியவற்றிற்கு மாதலி உறுதியான விடைகூறஇயலாமையால், அவ்வினாக்களையே அனுவதித்து, அவற்றுள் எதனால் ஆகியிருப்பினும் இவ்விளைவுகள் ஓடுமாறு தக்ககணையைத் தொடுத்து விடுப்பாயாக என வேண்டிக் கொள்வானானான். அங்கு (119) 'மற்றோ' என்றது ஈதென விளங்க, இங்கு 'வலியோர் உரத்தினாயினும்' எனக் கூறியவாறும், அங்கு 'விதியது விளைவோ' என்றதனையே இங்கு உண்மையினாயினும் எனக் கூறியவாறும் நினைக. விதியை, 'உண்மை' என்ற சொல்லால் குறித்தலுண்டு என்பதை ''நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந் தன் உண்மையறிவே மிகும்'' (குறள்-373) என்ற குறளில் பரிமேலழகர் 'தன் உண்மையறிவே' என்பதற்குத் 'தன்னூழானாகிய பேதைமையுணர்வே' எனப் பொருள்கூறியிருத்தலால் அறியலாம். வேதங்களால் வணங்கவும் தொடரவும் இயலாதவாறு அப்பாற்பட்டு நிற்கின்ற பரஞான வடிவினன் இராமன் ஆதலின், ஞானமாக்கணையைத் தொடுத்தற்கேற்றவனானான் என்றகுறிப்புப் புலப்பட அப்பெயராற் கூறினர். (122)

ஞானக்கணையால் மாயையின் விளைவு மாய்தல்

9967. துறத்த லாற்றுறு ஞானமாக்
கடுங்கணை தொடர
அறத்த லாதுசெல் லாதநல்
லறிவுவந் தணுகப்
பிறத்த லாற்றும் பேதைமை
பிணிப்புறத் தம்மை
மறத்த லாற்றந்த மாயையின்
மாய்ந்ததம் மாயம்.

துறத்தல் ஆற்றுறு ஞானமாக்
கடுங்கணை தொடர,
அறத்து அலாது செல்லாத நல்
அறிவு வந்து அணுக,
பிறத்தல் ஆற்றும் பேதைமை
பிணிப்புறத் தம்மை
மறத்தலால் தந்த மாயையின்
மாய்ந்தது அம்மாயம்.

பொ :— (இராமனால்) விடப்பட்ட ஞானமாக் கடுங்கணை தொடர்ந்துவரவே, துறவறநெறியில் அல்லது செல்லவொட்டாத நல்ல மெய்யறிவு வந்து அணுகியதால், (இதற்குமுன்) பிறத்தலைச் செய்கின்ற பேதைமை பந்திக்கத் தம்மை மறந்திருந்தமையால், தோன்றிய பொய்யான பற்றுகள் அழிவதுபோல, அந்த மாயக் கணையாலாய மாயத்தோற்றம் அழிந்தது.

கு :— துரத்தல் எதுகை நோக்கித் துறத்தல் ஆயிற்று; இராமன் விடுத்த ஞானக்கணையால் இராவணனது மாயைக் கணையாலாய மாயத்தோற்றங்கள் மாய்ந்தன என்க. ஆன்மா பேதைமையால் பிணிப்புண்டு தன்னை மறந்திருக்கும் நிலையில் தோன்றிய பொய்யான பற்றுகள் எல்லாம் நல்லறிவு தலைப்பட்டவுடன் மாய்தல்போல, இராமனது ஞானக்கணைதொடர்தலால் முன் தோற்றமளித்த மாயக்காட்சிகள் யாவும் அழிவுற்றன என உவமித்தவாறு. ஞானக்கணை தொடர அம்மாயம் மாய்ந்தது என்க. நல்லறிவு என்றது மெய்யுணர்வினை. அதன் இயல்பு புலப்பட

'அறத்தலாது செல்லாத நல்லறிவு' என்றார். இங்கு அறம் என்றது, துறவறத்தை. பிறத்த லாற்றும் பேதைமை என்றது, பிறப்பினை உண்டாக்குகின்ற — பிறப்பிற்குக் காரணமான அவிச்சையை. ''பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ் செம் பொருள் காண்பதறிவு'' (குறள் — 358) என்பது இங்கு நினைக்கத்தகும். அவிச்சையால் மறைப்புண்ட உயிர், தாயொடு தந்தை மக்கள், தாரம் என்றிவர்பால் வைத்த நேயத்தில் அழுந்திக்கிடக்கும் என்பதும், அவிச்சை நீங்கியவுடன் அதனாலாய பற்றுணர்ச்சிகள் அழிந்துவிடும் என்பதும் புலப்படுத்தியவாறு. தம்மை மறத்தலாவது உயிர், சித்தாகிய தன்னையுணராது பந்தத்தில் அழுந்தியிருத்தல். (123)

இச்செய்யுளின்பின் 45, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது:—

9967 (a) மாயையின் படை தொலைந்திட வகுப்பொடு மெழுந்த
தீயவெவ்வினைச் செய்கைகள் யாவையும் சிதைத்தே
போயதெங்கணு மிருளற வொளித்ததப் பொழுதில்
காயும் வெஞ்சினத் தரக்கனும் கண்டுளம் கறுத்தான்.

### இராவணன் சூலப்படை விடுதல்

9968. நீலங் கொண்டார் கண்டனு
☆ நேமிப் படையோனும்
மூலங் கொண்டார் கண்டக
ராவி முடிவிப்பான்
காலங் கொண்டார் கண்டன
முன்னே கழிவிப்பான்
சூலங் கொண்டா னண்டரை
யெல்லாந் தொழில்கொண்டான்.

நீலம் கொண்டு ஆர்கண்டனும்,
நேமிப் படையோனும்,
மூலம் கொண்டுஆர் கண்டகர்
ஆவி முடிவிப்பான்,

காலம் கொண்டார்; கண்டன
முன்னே கழிவிப்பான்,
சூலம் கொண்டான், அண்டரை
எல்லாம் தொழில் கொண்டான்.

பொ :— நீல நிறம் கொண்டு அமைந்த கண்டத்தையுடைய சிவனும், சக்கரப்படையையுடைய திருமாலும், உலகத்தில் வேர் ஊன்றிக் கொண்டு நிறைந்திருக்கின்ற கொடிய அரக்கரின் ஆவியை முடிவிப்பதற்கு உரிய காலம் இது என்று எண்ணிக் கொண்டிருந்தாராக, தேவர்களையெல்லாம் பணியாளராகக் கொண்ட இராவணன் தன் கண்முன் கண்டனவற்றையெல்லாம் மாய்ப்பதற்காகச் சூலத்தைக் கைக்கொண்டான்.

கு :— முத்தேவரில் இருவரைக் கூறவே இனம் பற்றிப் பிரமனும் கொள்ளப்படுவான். மூலம்—வேர். மூலம் கொண்டு ஆர் கண்டகர் என்றது, கோடிக் கணக்கான ஆண்டுகளாக உலகத்தில் வேரூன்றிக் கொண்டிருக்கின்ற கொடியஅரக்கரை. தொழில் கொள்ளுதலாவது ஏவலாளராகக் கொள்வது. (124)

இராவணன் விட்ட சூலத்தை இராமன் காணுதல்

9969. கண்டா குலமுற் றுயிர
மார்க்கின் றதுகண்ணிற்
கண்டா குலமுற் றும்ப
ரயிர்க்கின் றதுவீரர்
கண்டா குலமுற் றுஞ்சுடு
மென்றக் கழல்வெய்யோன்
கண்டா குதன்முன் செல்ல
விசைத்துள் ளதுகண்டான்.

கண்டா குலம் உற்று ஆயிரம்
ஆர்க்கின்றது, கண்ணில்
கண்டு ஆகுலம் உற்று உம்பர்
அயிர்க்கின்றது, ‘வீரர்

கண், தா, குலம் முற்றும் சுடும்'
　　என்று அக்கழல் வெய்யோன்,
கண் தாகுதல் முன், செல்ல
　　விசைத்துள்ளது கண்டான்.

பொ :— ஆயிரம் கண்டாமணியின் கூட்டம் பொருந்தி ஆரவாரிக்கப் பெற்றதும், தேவர்கள் கண்டு துன்பமுற்று ('இது யாது செய்யுமோ?' என்று) ஐயுறுதற்குரியதும், 'பகைவீரர்தம் கண்களும் வலிமையும் சிறப்பும் முழுவதையும் சுடும்' என்று அந்த வீரக்கழலிணையுடைய கொடிய இராவணன் கண்ணிமைப் பதற்குமுன் செல்ல வீசியுள்ளதும் ஆகிய சூலத்தை இராமன் கண்டான்.

கு :— சூலத்தின் அடியில் ஆயிரம் கண்டாமணிகள் கட்டப் பெற்று ஒலிக்கின்றன; அந்த மணியொலியோடு விடுகின்ற சூலத்தைக் கண்டு தேவர்கள் அஞ்சி இது என்ன செய்யுமோ என ஐயுறுகின்றனர்; பகைவீரரின் கண்ணும் வலியும் சிறப்பும் முழுவதையும் சுட்டு அழிக்கும் என்ற எண்ணத்தோடு எறிகின்றான் இராவணன்; அச்சூலத்தை இராமன் காண்கின்றான் என்றவாறு. கண்டா என்றது கண்டாமணியை. ஆர்க்கின்றது, உம்பர் அயிர்க்கின்றது, விசைத்துள்ளது கண்டான் என இயையும். தா—வலிமை. குலம்—கூட்டம்; சிறப்பு. தாக்குதல் என்பது தொகுத்தல் விகாரம் பெற்றுக் கண்தாகுதல் எனவாயிற்று; கண் தாக்குதலாவது, கண்ணிமைத்தல். விசைத்தல்—வீசுதல். இச் செய்யுள் சில சுவடிகளில் இல்லை. (125)

வருகின்ற சூலத்தின் இயல்பு

9970. எரியா நிற்கு மெஃகிலை
　　மூன்றும் மெரியஞ்சத்
திரியா நிற்குந் தேவர்க
　　ளோடத் திரளோட
இரியா நிற்கும் மெவ்வுல
　　குந்தன் னொளியேயாய்
விரியா நிற்குந் நிற்கில
　　தார்க்கும் விழிசெல்லா.

எரியா நிற்கும் எஃகு இலை
மூன்றும் எரி அஞ்ச,
திரியா நிற்கும் தேவர்கள்
ஓட, திரள் ஓட,
இரியா நிற்கும் எவ் உலகும்
தன் ஒளியே ஆய்,
விரியா நிற்கும்; நிற்கிலது,
ஆர்க்கும் விழி செல்லா.

பொ :— சூலம் தன் இலைகள் மூன்றும் நெருப்பும் அஞ்சுமாறு எரியா நிற்கும்; விண்ணில் திரிகின்ற தேவர்கள் ஓடவும் மற்றை வானரர்கூட்டம் ஓடவும் ஓடிவரும்; எவ்வுலகத்தும் தன்னொளியே யாய்ப் பரவுமாறு ஒளி விரியாநிற்கும்; யார்க்கும் (அதைப் பார்க்கின்) கண் செல்லாது நிற்காது.

கு :— எஃகு—சூலம். இலை மூன்றும் என்றது, மூன்றுகப் பிரிந்த முனைகளை. எரியஞ்ச எரியா நிற்கும் என்க. இரிதல்—ஓடுதல். இச் செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காணலாம். நிற்கும் நிற்கிலது என்பது முரண்தொடை. அச் சூலத்தைக் காண யார்க்கும் விழி செல்லாது நிற்கிலது எனவே, காணும் கண்கள் ஒளிமங்கிக் கெடுமாறு அச்சூலம் ஒளி மிக்கதாக இருந்தது என்பது புலனும். செல்லாது என்பது ஈறு கெட்டுச் செல்லா என நின்றது. செல்லாது நிற்கிலது என்க. (126)

சூலத்தை அழிக்குமாறு தேவர்கள் இராமனை வேண்டுதல்

9971. செல்வா யென்னச் செல்ல
விடுத்தா னிதுதீர்த்தற்
கொல்வாய் நீயே வேறொரு
வர்க்கும் முடையாதால்
வல்வாய் வெங்கட் சூல
மெனுங்கா லனைவள்ளால்
வெல்வாய் வெல்வா யென்றனர்
வானோர் மெலிகின்றார்.

‘செல்வாய்’ என்னச் செல்ல
விடுத்தான்; ‘இது தீர்த்தற்கு
ஒல்வாய் நீயே; வேறு
ஒருவர்க்கும் உடையாதால்;
வல்வாய் வெங்கண் சூலம்
எனும் காலனை, வள்ளால்!
வெல்வாய், வெல்வாய்!’ என்றனர்,
வானோர், மெலிகின்றார்.

பொ :— (சூலத்தை நோக்கி) மெலிகின்ற தேவர்கள் (இராமனை நோக்கி) வள்ளலே! (இராவணன்) வலிய வாயையுடைய கொடிய சூலம் என்னும் எமனைச் ‘செல்வாய்’ எனச் சொல்லி நின்மேல் செல்ல விடுத்திருக்கின்றான்; இச்சூலத்தை அழித்தற்கு ஏற்றவன் நீயே; வேறு யார்க்கும் இது தொலையாது; (இதனை) வெல்வாயாக, வெல்வாயாக’ என்று வேண்டினர்.

கு :— சூலத்தின் கொலைத்தொழிற் சிறப்புத் தோன்றச் ‘சூலமெனுங்காலனை’ என்றார்; உருவகம். அடுக்கு விரைவுணர்த்தியது. உடைதல்—தொலைதல். (127)

இராமன் எய்த கணைகள் பயனின்றிப் போதல்

9972. துனையும் வேகத் தாலுரு
மேறுந் துண்ணென்ன
வனையுங் காலிற் செல்வன
தன்னை மறவாதே
நினையுஞ் ஞானக் கண்ணுடை
யார்மே னினையாதார்
வினையம் போலச் சிந்தின
வீரன் சரம்வெய்ய.

துனையும் வேகத்தால் உரும்
ஏறும் துண்ணென்ன
வனையும் காலின் செல்வன —
தன்னை மறவாதே

நினையும் ஞானக்கண்
உடையார்மேல் நினையாதார்
வினையம் போலச் சிந்தின —
வீரன்சரம் வெய்ய.

பொ :— விரைந்து செல்லும் வேகத்தால் பேரிடியும் திடுக்கிட்டு நடுங்குமாறு இயங்கும் காற்றுப் போலச் செல்வனவாகிய இராமனுடைய கொடிய அம்புகள், இறைவனை மறவாமல் நினையும் ஞானக்கண்ணையுடைய அடியார்மேல் இறைவனை நினையாத கீழ் மக்கள் செய்யும் தீங்குகள் பயனளிக்காது போதல் போல (ச் சூலத்தை யாதும் செய்ய இயலாது ) சிதறின.

கு :— இராமன் எய்த வெய்ய சரங்கள் இராவணன் விட்ட சூலத்தை ஒன்றும் செய்ய இயலாது சிதைந்தன என்றவாறு. துனை—விரைவு. வனைதல் இங்கு இயங்குதலை உணர்த்தியது. இறைவனை மறவாத மனமுடையார்மேல் இறைவனை எண்ணாத கீழ்மக்கள் செய்யும் தீமைகள் அவ்வடியாரைத் துன்புறுத்தாதவாறுபோல, இராமன் அம்புகள் இராவணனது சூலத்தைச் சிதைக்க இயலாது தாம் சிதைந்தன என உவமை முகத்தால் விளக்கியவாறு. இறைவன் தன்னை மறவாத பிரகலாதனை இரணியன் செய்த கொடுமைகள் அப்பிரகலாதனுக்கு ஒரு தீங்கும் செய்யவியலாது கழிந்தமை இங்கு நினைக்கலாம். வினையம் என்றது, தீமையான செயல்களை. சூலத்தை இராமன் அம்பு அழிக்க முடியாமல் சிந்தினமைக்குக் கூறிய உவமை ஒருபுடை யொப்புமையுடையது. முற்றுவமையன்று. ஞானக் கண்ணுடையவனாக இராவணனை எண்ணிவிடலாகாது. (128)

இராமன் செய்வதறியாது நிற்றல் 9973, 9974

9973. எய்யு மெய்யுந் தேவரு
டைத்திண் படையெல்லாம்
பொய்யுந் துய்யும் மொத்தவை
சிந்தும் புவிதந்தான்
வய்யுஞ் சாப மொப்பன
வொப்பி லதுகண்டான்
அய்ய னின்றுன் செய்வதை
யொன்று மறிகில்லான்.

எய்யும், எய்யும் தேவருடைத்
திண்படை எல்லாம் ;
பொய்யும் துய்யும் ஒத்து, அவை
சிந்தும் ; புவிதந்தான்
வய்யும் சாபம் ஒப்பன,
ஒப்பு இல் அது கண்டான்,
அய்யன் நின்றான், செய்வதை
ஒன்றும் அறிகில்லான்.

பொ :— இவ்வுலகத்தை உண்டாக்கினவனாகிய இராமன், தேவர்களுடைய திண்ணிய படைகளை எல்லாம் மேலும் மேலும் விடாது எய்வான்; அப்படைகள் சூலத்தை ஒன்றும் செய்ய வியலாது மெய்யைக்கண்ட பொய்யைப் போலவும் தீயின் முன் பஞ்சின் துய்யைப்போலவும் சிதறிவிடும்; இராமன், முனிவர்கள் கொடுக்கும் சாபத்தை ஒப்பதும் வேறு ஒப்பு இல்லாததுமான அச்சூலத்தைக் கண்டு செய்வதொன்றும் அறியாமல் நின்றான்.

கு :—இராமன்விடும் தெய்வப்படைகள் யாவும் இராவணனது சூலத்தின் முன், மெய்யின் முன் பொய் போலவும், தீயின்முன் துய்போலவும், அழிதலால், இராமன் அச்சூலத்தைக் கண்டு செய்வதொன்றும் அறியாது நிற்பானானான் என்றவாறு. பொய் சிந்தும் எனவே மெய் முன் என்பதும், துய் சிந்தும் எனவே தீயின் முன் என்பதும் வருவிக்கப்பட்டன. சூலத்திற்கு ஒப்புக் கூறவேண்டுமாயின் சாபம் ஒன்றே ஒப்பாகும்; பிறிதேதும் ஒப்பாகாது என்றவாறு. முனிவர் சாபத்தை வேறு ஒன்றும் சிதைக்க வியலாதவாறு போல, இராவணன் விட்ட சூலத்தை வேறு எப்படையும் சிதைக்க இயலாதன ஆயின என்க. அறிகில்லானாய் நின்றான் என முற்றெச்சமாக்கி முடிக்க (129)

9974. மறந்தான் செய்கை மாறெதிர்
செய்யும் வகையெல்லாம்
துறந்தா னென்னு வும்பர்
துணுக்கந் தொடர்வுற்றார்

அறந்தா னஞ்சிக் கால்குலே
யத்தா னறியாதே
பிறந்தா னின்றான் வந்தது
சூலம் பிறரஞ்ச.

'மறந்தான் செய்கை; மாறுஎதிர்
செய்யும்வகை எல்லாம்
துறந்தான்' என்னு, உம்பர்
துணுக்கம் தொடர்வுற்றார்;
அறம்தான் அஞ்சிக் கால் குலேய,
தான் அறியாதே
பிறந்தான், நின்றான்; வந்தது
சூலம், பிறர் அஞ்ச.

பொ :— 'இராமன், தான் செய்யவேண்டிய செயலே மறந்தான்; இச்சூலத்திற்கு மாறாய் எதிரே செய்வதற்குரிய வகைகள் எல்லாவற்றையும் செய்யாமல் துறந்தான்' என்று தேவர்கள் நடுங்கினர்; அறத்தெய்வம் அரக்கர்க்கு அஞ்சிக் கால் நடுங்கியது கண்டு அந்நிலேயை மாற்ற வேண்டிப் பிறர்தன்னே அறிந்து கொள்ள இயலாமல் மனிதனைகப் பிறந்தவனைகிய இராமன் (சிறிதும் அஞ்சாது) நின்றான்; சூலம், பிறர் எல்லாம் (இராமனே என்ன செய்யுமோ என) அஞ்சா நிற்க நெருங்கி வந்தது.

கு :— துணுக்கம்—நடுக்கம். அறம் கால் குலேயப் பிறந்தான், அறியாதே பிறந்தான் எனத்தனித்தனி இயையும். நிலேகுலேந்த அறத்தை நிலேபெறுத்த மனிதனைகப் பிறந்தவன் இராமன் என்றவாறு. பிறரஞ்சச் சூலம் வந்தது என்றமையால் அஞ்சாது இராமன் நின்றான் என்பது பெறப்படும். (130)

இச்செய்யுளின் பின் 41, 52-ஆம் பிரதிகளில் கீழ்வரும் மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன :—

9974 (a) நெற்றி விழி யானய னிறைந்த மறையாள
மற்றையம ரர்புவியில் வானவர்க ளீரைந்து
உற்றதலே தானவன் விடுங்கொடிய சூலம்
இற்றெழிய ஆன்று அழியுமோ வென இசைத்தான்.

9974 (b) வேதமொரு நாலுமுள வேள்விகளும் வெவ்வேறு
ஓதமுத லாயுதவு பூதமவை யைந்தும்
நீதியொடு கால்குலைய நீசன்விடு சூலம்
ஈதழியும் என்றிதய மெண்ணின னிராமன்.

இராமனது உங்காரத்தால் சூலம் சிதைதல்

9975. சங்கா ரத்தாற் கண்டை
யொலிப்பத் தழல்சிந்தப்
பொங்கா ரத்தான் மார்பெதி
ரோடிப் புகலோடும்
வெங்கா ரத்தான் முற்று
முனிந்தான் வெகுளிப்பே
ருங்கா ரத்தா லுக்கது
பன்னூ றுதிராகி.

சங்காரத்தான் கண்டை
ஒலிப்ப, தழல் சிந்த,
பொங்கு ஆரத்தான் மார்பு எதிர்
ஓடிப் புகலோடும்,
வெங்காரத்தான் முற்றும்
முனிந்தான்; வெகுளிப் பேர்
உங்காரத்தால் உக்கது,
பல்நூறு உதிராகி.

பொ :— சங்காரம் செய்யும் எண்ணத்தோடு கண்டைகள் ஒலிக்கவும், நெருப்புப்பொறி சிந்தவும் சிறந்த ஆரம் அணிதற் குரியவனுன இராமனது மார்புக்கு எதிரே ஓடிப் புகுதலோடும், இராமன் கொடிய வெறுப்புணர்ச்சியோடு மிகவும் வெகுண்டான்; (அவனுடைய) வெகுளியாலாய பெரிய உங்காரத்தினுல் (அந்தச் சூலம்) பலநூறு துகளாகிச் சிந்தியது.

கு :— இராமனது தெய்வப் படைக்கலங்களுக்கெல்லாம் சிதையாத சூலம் அவன் கோபத்தால் எழுப்பிய உங்கார ஒலியால் பல நூறு பொடியாகச் சிதைந்து உதிர்ந்தது என்க. சங்காரம்—கொலை. கண்டை என்றது சூலத்தில் கட்டியுள்ள

கண்டாமணியை. வெங்காரம் என்றது, கொடிய வெறுப்புணர்ச்சியை. உம் என அழுத்திச்சொல்லும் ஒலிக்குறிப்பையே 'உங்காரம்' என்ருர். காரம் சாரியை. (131)

அமரரின் அகமகிழ்ச்சி

9976. ஆர்ப்பா ராஞு ரச்சமு
மற்ரு ரலர்மாரி
தூர்ப்பா ராஞர் துள்ளல்
புரிந்தார் தொழுகின்ருர்
தீர்ப்பாய் நீயே தீயென
வேருய் வருதீமை
பேர்ப்பாய் போலா மென்றனர்
வாஞே ருயிர்பெற்ருர்.

ஆர்ப்பார் ஆஞர் ; அச்சமும்
அற்ருர் ; அலர்மாரி
தூர்ப்பார் ஆஞர் ; துள்ளல்
புரிந்தார் ; தொழுகின்ருர்,
'தீர்ப்பாய் நீயே தீஎன
வேருய் வருதீமை
பேர்ப்பாய் போலாம்!' என்றனர்-
வாஞேர், உயிர்பெற்ருர்.

பொ:— (சூலம் அழிந்தது கண்டு) தேவர்கள் உயிர் வரப் பெற்றவர் போன்றவர்களாய், அச்சமும் அற்று ஆரவாரித்தார்கள்; மலர்மழை சொரிந்து உலகத்தை நிறைத்தார்கள்; துள்ளிஞர்க்ள்; (பின்பு) தொழுதுகொண்டு 'இச்சூலத்தைஅழித்த நீயே, இதற்கு வேருகத் தீப்போல இனி வருகின்ற தீமைகளேயும் போக்குவாய்' என்றனர்.

கு.— வாஞேர் முன்பு உயிர்சோர்ந்து வருந்தினவராதலின், இப்போது உயிர் பெற்ருர் போல உணர்ச்சிமிக்கவராயினர் என்பார் 'உயிர்பெற்ருர்' என்ருர். வாஞேர் உயிர்பெற்ருராய் அச்சமும் அற்று ஆர்ப்பாராஞர், தூர்ப்பாராஞர் புரிந்தாராய்த் தொழுது தீர்ப்பாய் நீயே வருதீமை பேர்ப்பாய் என இயையும்.

போல், ஆம் அசைநிலை. பேர்த்தல்—நீக்குதல். தொழுகின்றார் முற்றெச்சம். (132)

இராவணன் தன் சூலம் சிதைந்தது கண்டு வீடணன் சொல்லியதை நினைதல்

9977. வென்ரு னென்றே யுள்ளம்
வியந்தான் விடுசூலம்
பொன்ரு னென்னிற் போகல
தென்னும் பொருள்கொண்டான்
ஒன்ரு முங்கா ரத்திடை
யுக்கோ டுதல்காணு
நின்ரு னந்நாள் வீடண
ஞர்சொன் னினைவுற்ருன்.

'வென்ருன்' என்றே உள்ளம்
வியந்தான் விடுசூலம்
'பொன்ருன் என்னின் போகலது'
என்னும் பொருள் கொண்டான்,
ஒன்றுஆம் உங்காரத்திடை
உக்கு, ஓடுதல் காணு
நின்ருன், அந்நாள் வீடணஞர்
சொல் நினைவுற்ருன்.

பொ :— தான் விட்ட சூலம், 'இராமன் இறவான் என்னின் அவனைவிட்டுப் போகாது; (அவனைக்கொன்றே தீரும்) என்ற கருத்தைக் கொண்டிருந்த இராவணன், இராமனது ஒரு உங்கார ஒலியால் சிதைந்து அழிந்ததைக் கண்டு, 'இராமன் வென்று விட்டான்' என்றே மனத்தால் வியந்து, நின்று, அந்நாளில் வீடணன் சொல்லிய சொல்லை நினைத்தான்.

கு :— இராமனைக் கொன்றன்றிப் போகாது என்ற கருத்தால் 'பொன்ருனென்னிற் போகலது' என்று இராவணன் எண்ணினான் என்க. இராமனைக்கொன்றே தீரும் என்று நம்பியிருந்த இராவணன் தன் சூலம் உங்காரத்தால் உக்கது கண்டு, இராமன் வென்று விட்டதாகவே எண்ணி வியந்தான் என்க. பகைவனது

வீரத்தைப் பாராட்டுதல் பெருவீரர்க்கு இயல்பு ஆகும். வியந்தானாய் நின்று நினைவுற்றான் என முற்றெச்சமாக்கி முடிக்க. கொண்டான் என்னும் வினைப்பெயர் எழுவாய். கொண்டான் கண்டு வியந்து நின்று நினைவுற்றான் என்க. அந்நாள் என்றது இராவணன் மந்திரிகளோடு ஆலோசனை நடத்திய நாளினை. ''வீடணன் மெய்யிற் சொன்ன, யானென தெண்ணல் தீர்ந்தார் எண்ணுறும் ஒருவனென்றே... சேகறத் தெரிந்ததன்றே'' (மாயா சீதைப் — 18) என இந்திரசித்தும் கூறியிருத்தல் காணலாம். (133)

இராமனை 'வேத முதற்காரணனோ?' என இராவணன் எண்ணுதல்

9978. சிவனோ வல்ல னான்முக
னல்லன் றிருமாலாம்
அவனோ வல்லன் மெய்வர
மெல்லா மடுகின்றான்
தவனோ வென்னிற் செய்து
முடிக்குந் தரனல்லன்
இவனோ தானவ் வேதமுதற்
காரண னென்றான்.

'சிவனோ? அல்லன்; நான்முகன்
அல்லன்; திருமாலாம்
அவனோ? அல்லன்; மெய்வரம்
எல்லாம் அடுகின்றான்;
தவனோ என்னின், செய்து
முடிக்கும் தரன் அல்லன்;
இவனோதான் அவ் வேதமுதல்
காரணன்?' என்றான்.

பொ:—'நம் உண்மையான வரத்தைஎல்லாம் பயன்படாமல் செய்கின்ற இவன், சிவனோ? எனின், அல்லன்; பிரமனோ? எனின், அல்லன்; திருமாலோ? எனின், அல்லன்; பெருந்தவனோ? எனின், தவன் இத்தகைய அருஞ்செயலைச் செய்து முடிக்கும் தரமுடையவனல்லன்; (எனவே,) அந்த

வேதங்கள் கூறும் உலக முதற்காரணனுகிய பரம்பொருள் இவன் தானே?' என்று இராவணன் நினைந்தான்.

கு :— வீடணன் சொல்லை நினைவுற்று இராவணன் இவ்வாறு எண்ணலானுன். முத்தொழிலைச் செய்யும் மும்மூர்த்திகளுக்கும் மேலாகப் பரமபதத்தில் உள்ள பரம்பொருள் இந்த இராமனே போலும் என அவன் ஆற்றலைக்கண்டு நினைந்தவாறு. மும்மூர்த்திகளும் தன் முன் வலியொடுங்கிக் கிடந்தவர்களாதலின் அவருள் ஒருவனுக இராமன் இருக்க இயலாது என முடிவுசெய்தான் இராவணன். தவத்தினர் தம் ஞானத்தினுல் பரம்பொருளைக் காணும் ஆற்றலும், பிறர்க்குக் காட்டும் ஆற்றலும் உடையவர் ஆதலின் மும்மூர்த்திகட்கும் பின்னர் வைத்துக் கூறினுன். ''கரிய மாலினுங் கண்ணுத லானினும், உரிய தாமரை மேலுறை வானினும்... பெரியர் அந்தணர்'' (அயோத்தி-மந்தரை சூழ்ச்சிப்-7) என்று முற்கூறியுள்ளதும் நினைக. இறைவன் உலகிற்கு முதற் காரணன் என்பது விசிட்டாத்துவிதக் கொள்கை ஆதலின், அக் கொள்கைபற்றி இங்கு 'வேத முதற்காரணன் இவனேதான்' என எண்ணலானுன். வேதங்களால் கூறப்படும் உலக முதற் காரணன் என்க. வீடணன், இராம இலக்குவரைப் பற்றிக் கூறுங்கால் ''இருவரு மொருவரும் எதிரிலாதார், முனைவரும் அமரரும் முழுதுணர்ந்தவர்களும் முற்றும் மற்றும் நினைவருந்தகையர் நம் வினையினுல் மனிதராய் எளிது நின்ருர்'' (இராவணன் மந்திரப்-85) எனத் தெளிவாக்கியிருத்தல் காண்க. (134)

யாவரே ஆயினும் பொருவேன் எனல்

9979. யாரே னுந்தா னுகுக
யானென் றனியாண்மை
பேரே னின்றே வென்றி
முடிப்பென் புகழ்பெற்றேன்
நேரே செல்வென் கொல்லு
மெனிற்ரு னிமிர்வென்றி
வேரே நிற்கும் மீள்கில
தென்னு மிடலுற்ருன்.

'யாரேனும் தான் ஆகுக!
யான் என் தனி ஆண்மை
பேரேன்; இன்றே வென்றி
முடிப்பென்; புகழ்பெற்றேன்
நேரே செல்வென், கொல்லும்
எனின்தான் நிமிர்வென்றி
வேரே நிற்கும்; மீள்கிலது'
என்னு, மிடல், உற்ருன்.

பொ:—''(எதிர்ப்பவன்) யார் ஆயினும் ஆகட்டும்; யான் என் ஒப்பற்ற ஆண்மைத் தன்மையிலிருந்து பெயரமாட்டேன்; இன்றைக்கே வெற்றியை முடிப்பேன்; வீரச் செல்வனுகிய இராமன் என் கண்ணுக்கு நேரே நின்று கொல்வானுயின், யான் புகழ் பெற்றவனுவேன்; மேலும் உயர்ந்த வெற்றியின் அடிப்படை என்பால் நிலைத்து நிற்கும்; மீளாது,'' என்று சிந்தித்து மனவலியை வருவித்துக் கொண்டான்.

கு:—இராமனது ஆற்றலைக்கண்டு கிளர்ந்த சத்துவ குணத்தால் மேலைச் செய்யுளில் வியந்து புகழ்ந்த இராவணன், மீண்டும் கிளர்ந்த இராசத குணத்தால் தனது வீரப்பெருமையை வியந்து கூறி, ஒருகால் இராமன் தன்னைக் கொல்வானுயினும் புகழுக்கும் வீரத்திற்கும் இழுக்கில்லை என்பது நினைந்து மனவலியை வருவித்துக் கொண்டான் என்றவாறு. உங்காரத்தால் தன் சூலப்படை சிதைந்தமை கண்டு இராமனை வியந்து அச்சம் கொண்ட நிலையை மாற்றி மீண்டும் போர்செய்யும் மனவலியை வருவித்துக் கொண்ட நிலையையே 'மிடலுற்ருன்' என்ற சொல்லால் உணர்த்தினர். செல்வன் என்றது வீரச் செல்வனுகிய இராமனை. நேரே கொல்லுமெனில் புகழ்பெற்றேன் என இயையும். ''வாசவன் மாயன் மற்றை மலருளோன் மழு வாளங்கை, ஈசனென்றினைய தன்மை யிளிவரு மிவரா லன்றி, நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்'' (கும்பகருணன் வதைப்-31) என முன் இராவணன் கூறியுள்ளதும் இக் கருத்தினதேயாதல் நினைக. உயர்ந்த வீரன் மறைந்து நின்று கொல்லாது நேரே நின்று கொல்வானுயின் அவனுல் கொல்லப்படுதலும் புகழ்ச்சிக்குரியதே என்றவாறு. வீரனுல் கொல்லப்படுதலும் வெற்றியின் பயனுகச் சான்ருேரால்

மதிக்கப்படுதலின் 'நிமிர்வென்றி வேரே நிற்கும்; மீள்கிலது' என்று எண்ணுவானானான். வேர் என்றது வெற்றியின் மூலத்தை; ஆவது, வேதமுள்ளளவும் வென்றவன் பெயர் உள்ள அளவும் தோற்ற, தன் பெயரும் நிற்றல். ''வென்றில னென்றபோதும் வேதமுள்ளளவும் யானும், நின்றுளனன்றே மற்றவ் விராமன் பேர் நிற்குமாயின்...... புகழுக்கும் இறுதியுண்டோ'' (இந்திரசித்து வதைப்-10) என முன்கூறியதும் இக்கருத்தினதே யாதல் காண்க. (135)

### நிருதியின் படையை இராவணன் ஏவுதல்

9980. நிருதித் திக்கின் னின்றவன்
வென்றிப் படைநெஞ்சில்
கருதத் தன்பால் வந்ததை
வன்கைக் கொடுகாலன்
விருதைச் சிந்தும் வில்லின்
வலித்துச் செலவிட்டான்
குருதிச் செங்கண் டீயுக
ஞாலங் குலைவெய்த.

நிருதித் திக்கில் நின்றவன்
வென்றிப்படை நெஞ்சில்
கருத, தன்பால் வந்ததை
வன்கைக்கொடு, காலன்
விருதைச் சிந்தும் வில்லின்
வலித்துச் செலவிட்டான்—
குருதிச் செங்கண் தீஉக,
ஞாலம் குலைவு எய்த.

பொ :— நிருதித் திசையில் (தென்மேற்கில்) நின்ற திசைக் காவலனது வென்றிமிக்க ஆயுதத்தை (இராவணன் தன்) நெஞ்சில் நினைக்க, வந்த அதனைத் தன் வலிய கையில் கொண்டு, எமனது வெற்றியையும் சிதைக்கின்ற தன் வில்லில் பூட்டி (த்தன்னுடைய) இரத்தம்போற் சிவந்த கண்களில் நின்று தீப்பொறி பறக்கவும் உலகம் நடுங்கவும் (பகைவன் மேற்) செல்லுமாறு விடுத்தான்.

பொ :— நிருதித்திக்கில் நின்றவன் என்றது, நிருதி என்பவனையே யாம். நிருதி தனக்குக் கொடுத்த ஆயுதத்தை இராவணன் இராமன்மேல்விடுத்தான் என்றவாறு. இராவணன் நினைத்தவுடன் நிருதி கொடுத்த படைக்கலம் அவன் முன்வர அப்படைக் கலத்தைத் தன் வில்லில் பூட்டி இராமன்மேல் விடுத்தான் என்க. வில்லின் பெருமை தோன்றவேண்டிக் 'காலன் விருதைச்சிந்தும் வில்' என்று சிறப்பித்தார். விருது—வெற்றி. (136)

நிருதிப் படை வருதல்—9981 - 9983

9981. வய்யந் துஞ்சும் வன்பிடர்
நாக மனமஞ்சப்
பய்யுங் கோடிப் பஃறலை
யோடு மளவில்லா
மெய்யும் வாயும் பெற்றன
மேருக் கிரிசால
நொய்தென் றோதுந் தன்மைய
வாக நுழைகின்ற.

வய்யந் துஞ்சும் வன்பிடர்
நாகம் மனம் அஞ்ச,
பய்யும் கோடிப் பல்தலையோடும்
அளவு இல்லா
மெய்யும் வாயும் பெற்றன,
மேருக்கிரி சால
நொய்து என்று ஓதும் தன்மைய
ஆக நுழைகின்ற.

பொ :— இவ்வுலகம் தங்கும் வலிய பிடரினையுடைய ஆதிசேடன் என்னும் நாகமும் மனம் அஞ்சும்படி வரிசையான பல தலைகளோடு படப்பைகளையும் அளவு இல்லாத உடம்பும் வாயும் பெற்றனவாய் மேருமலை மிகவும் இலேசானது என்று சொல்லும் படியாக நுழைகின்றனவும்.

கு :—ஆதிசேடன் தன்ஆயிரம் தலைகளால் பூமியைத் தாங்குகின்றான் என்பது புராண மரபு. இந்த நிருதிக்கணை பாம்பின்

வடிவுடையதாய்ப் பல்லாயிரக்கணக்கான தலைகளைப் பெற்றிருத்தலின் ஆதிசேடனும் அஞ்சவேண்டியவனானான். நொய்து என்றது, கனமில்லாதது; இலேசானது என்றவாறு. வடிவாலும் கனத்தாலும் நிருதிக்கணை மேருமலையினும் பெரியது என்றவாறு. நுழைகின்ற, பிறழ்கின்ற, புகைகின்ற, ஆயின என மேல் மூன்றுவது செய்யுளில் முடியும். (137)

9982. வாய்வாய் தோறு மாகடல்
போலும் விடவாரி
போய்வார் கின்ற பொங்கனல்
கண் ணிற் பொழிகின்ற
மீவா னெங்கும் வெள்ளிடை
யின்றி மிடைகின்ற
பேய்வா யென்ன வெள்ளெயி
றெங்கும் பிறழ்கின்ற.

வாய்வாய் தோறும் மாகடல்
போலும் விட வாரி
போய்வார்கின்ற, பொங்கு அனல்
கண் ணின் பொழிகின்ற,
மீவான் எங்கும் வெள்ளிடை
இன்றி மிடைகின்ற,
பேய்வாய் என்ன வெள் எயிறு
எங்கும் பிறழ்கின்ற.

பொ :— ஒவ்வொரு வாயிலும் பெரிய கடல் போன்ற நஞ்சு வெள்ளம் மிகுதியாகப் பெருகப் பெற்றனவும், மிக்க நெருப்பைக் கண்வழியாகக் கக்குகின்றனவும், மேலுள்ள விண்ணிடம் எங்கும் வெளியிடம் இல்லாதபடி நெருங்குகின்றனவும், பேயின் வாய்போல வெள்ளிய கோரப் பற்கள் எப்புறத்தும் விளங்கப் பெற்றனவும்.

கு :—வாய்தோறும் வாய்தோறும் என்க. ஒருவாயில் பெருகும் நஞ்சு மாகடல் போன்றது என்றவாறு. வார்தல் - ஒழுகுதல். வார்கின்றனவும் பொழிகின்றனவும் மிடைகின்றனவும் பிறழ்

கின்றனவும் ஆகிய ஆடரவம் என மேல் இயையும். வானகம் முழுவதும் நிருதிக்கணையாக நிறைந்திருந்தது என்பார் 'மீவான் எங்கும் வெள்ளிடையின்றி மிடைகின்ற' என்றார். வெள்ளிடை — வெற்றிடம். மிடைதல் — நெருங்குதல். பேய்க்குப் பிறழ் பற்கள் உள்ளமை, ''கொட்டு மேழியுங் கோத்தன பல்லின'' (கலிங்கத்துப் பரணி: பேய்களைப் பாடியது - 8) என்பதால் அறியலாம். (138)

9983. கடித்தே தீருங் கண்ணகன்
ஞாலங் கடலோடுங்
குடித்தே தீரும் மென்றுயி
ரெல்லாங் குலைகின்ற
முடித்தா னன்றோ வெங்க
ணரக்கன் முழுமுற்றும்
பொடித்தா னாகும் மிப்பொழு
தென்னப் புகைகின்ற.

'கடித்தே தீரும்; கண்ணகன்
ஞாலம் கடலோடும்
குடித்தே தீரும்' என்று உயிர்
எல்லாம் குலைகின்ற,
'முடித்தான் அன்றோ, வெங்கண்
அரக்கன்? முழுமுற்றும்
பொடித்தான் ஆகும், இப்பொழுது'
என்னப் புகைகின்ற.

பொ:— '(இராமனை இந்த நிருதிக்கணையாகிய பாம்புகள்) கடித்தே தீரும்; இடம் அகன்ற இவ்வுலகத்தைக் கடலோடும் குடித்தே தீரும்' என்று உயிர்கள் எல்லாம் நடுங்குகின்றனவாய், 'கொடிய கண்ணையுடைய இராவணன் இப்போது உலகம் முழுவதையும் சிறிதும் ஒழியாது முடித்தவனும் பொடியாக்கினவனும் ஆவான் அன்றோ?' என்று எண்ணிக் கலங்குமாறு அப்பாம்புகள் கோபத்தால் புகைகின்றனவாயின.

கு:— நிருதிக் கணையினின்றுதோன்றிய பாம்புகளின் தோற்றத்தையும் சீற்றத்தையும் பார்த்த உயிர்கள் 'இவை, இராமனைக்

கடித்தலும் உலகத்தைக் கடலோடும் குடித்தலும் தப்பாது ’ என எண்ணி நடுங்கினவாய், இராவணன், உலக முழுவதையும் முடித்துப் பொடிசெய்துவிடுவான் என எண்ணிக் கலங்குமாறு அப்பாம்புகள் கோபத்தால் புகைகின்றனவாயின என் ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. குலைதலும் எண்ணுதலும் உயிர்களின் செயல்; புகைதல் பாம்புகளின் செயல். முடித்தானுய்ப் பொடித் தானுகுமன்றே? என முற்றெச்சமாக்கி மாற்றி வினை முடிவு செய்க. பொடித்தல்—பொடியாக்குதல்; சாம்பலாக்குதல். (139)

இராமன் காருடக் கணையை விடுதல்

9984. அவ்வா றுற்ற வாடர
வந்த னகல்வாயால்
கவ்வா நின்ற மால்வரை
முற்றும் வகைகண்டான்
எவ்வாய் தோறும் மெய்தின
வென்ணு வெதிரெய்தான்
தவ்வா மெய்ம்மைக் காருட
மென்னும் படைதன்னை.

அவ்வாறு உற்ற ஆடு அரவம்
தன் அகல் வாயால்
கவ்வா நின்ற; மால்வரை
முற்றும் வகை கண்டான்;
‘எவ்வாய் தோறும் எய்தின’
என்னு, எதிர் எய்தான்,
தவ்வா மெய்ம்மைக் காருடம்
என்னும் படைதன்னை.

பொ :— அவ்வாறு வந்த ஆடும் இயல்பினையுடைய நாகம் தன் அகலமான வாயினுல் கவ்வப்பெற்ற (அவ்விலங்கைக்கு இட மான) அம்மலை முழுவதுமே மறையும்வகையைக் கண்டவனுகிய இராமன், எல்லாவிடங்களிலும் வந்து அடைந்தன என்று நோக்கி, அந் நாகத்திற்கு எதிராகத் தவருத, உண்மையான காருடம் என்கின்ற கணையை எய்தான்.

கு:— ஆடு அரவம் என்றது அரவத்தின் இயல்பு புலப்படுத்தியவாறு. அந்நாகத்தால் அவ்விலங்கைக்கு இடமாகிய மலை முழுவதுமே மறைவதைக் கண்டான் என்றவாறு. வாய்—இடம். என்று நோக்கி என ஒரு சொல் வருவிக்க. கருடக்கணை பகையைத் தவருமல் அழிக்கவல்ல உறுதியுடையது என்பார், 'தவ்வா' எனவும் 'மெய்ம்மைக் காருடம்' எனவும் எதிர்மறையானும் உடன்பாட்டானும் அடைகொடுத்துப் புலப்படுத்தினர். தவ்வுதல்—தவறுதல். காருடம் என்பது தத்திதாந்தப் பெயர் என்பர். கருடனது வடிவுடைய கணை என்க. கண்டவனுகிய இராமன் என்று நோக்கி, எதிர்:காருடம் என்னும் படைதன்னை எய்தான் என இயையும். முற்றுதல்—முழுதும் மறைதல். (140)

*காருடக் கணையின் இயல்பு 9985 — 9987*

9985. எவணைத் தன்மைத் தேகின
நாகத் தினமென்னப்
பவணத் தன்ன வெஞ்சிறை
வேகத்தொழில் பம்பச்
சுவணக் கோலத் துண்ட
நகந்தொல் சிறைவெம்போர்
உவணப் புள்ளே யாயின
வானே ருலகெல்லாம்.

எவண் எத்தன்மைத்து ஏகின
நாகத்து இனம் என்ன,
பவணத்து அன்ன வெஞ்சிறை
வேகத்தொழில் பம்ப,
சுவணக் கோலத் துண்டம்
நகம் தொல் சிறை வெம் போர்
உவணப் புள்ளே ஆயின,
வானேர் உலகு எல்லாம்.

பொ:— (இராவணன் விட்ட) நாகத்தின் கூட்டம் எங்கு எவ்வாறு பரவிச் சென்றனவோ அத்தன்மை போலவே, காற்றைப் போன்ற வெவ்விய சிறகின் வேகத் தொழில் நிரம்பப்

பொன்னின் அழகையுடைய மூக்கும் நகமும் பழமையான சிறகும் கொண்டு செய்யும் கொடிய போரினையுடைய கருடப் பறவைகளும் சென்றமையால் அவற்றின் மயமாகவே வானவர் உலகம் எல்லாம் ஆயின.

கு :— நாகத்து இனம் உள்ள இடத்தில் எல்லாம் கருடப் புட்கள் விரைந்து பறந்து நிறைந்தன என்றவாறு. எவண் எத்தன்மைத்தாக நாகங்கள்ஏகினவோ, அவண் அத்தன்மைத்தாகக் கருடப்புட்கள் சென்று நிறைந்தன என்க. பவனம்—காற்று; எதுகை நோக்கிப் பவணம் என ஆயிற்று. பம்புதல்—நிறைதல். சுவணம்—பொன். துண்டம்—மூக்கு. (141)

9986. அளக்கரும் புள்ளின மடைய வாரழல்
★ துளக்கரும் வாய்தொறு மெரியத் தொட்டன
இளக்கரு மிலங்கைதீ யிடுது மீண்டென
விளக்கின மெடுத்தன போன்ற விண்ணெலாம்.

அளக்கரும் புள் இனம்
அடைய ஆர் அழல்
துளக்கரும் வாய்தொறும்
எரியத் தொட்டன,
'இளக்கரும் இலங்கை தீ
இடுதும் ஈண்டு' என
விளக்கு இனம் எடுத்தன
போன்ற விண் எலாம்.

பொ :— அளவிடுதற்கியலாத கருடப் பறவைகள் முழுமையும், அசைக்க வியலாத வலிய தம் வாய்கள் தோறும் அரிய சின நெருப்பு எரியப் பாம்புகளைத் தொட்ட தோற்றம், 'இளக்க இயலாத இலங்கை நகர்க்குத் தீயிடுவோம், இப்போது' என்று விண்ணவர் எல்லாம் விளக்கு இனங்களை எடுத்தாற் போன்று தோன்றின.

கு :— கருடப் புள்ளின் மிகுதி புலப்பட 'அளக்கரும் புள்ளினம்' என்வும், வாயின் வன்மை புலப்பட 'துளக்கரும் வாய்' எனவும் கூறினர். ஒவ்வொரு பாம்பினுக்கும் ஒவ்வொரு கருடனுக வாயில் நெருப்புக்கால அவற்றைப் பற்றிய தோற்றம் விண்

ணக முழுமையும் விளக்குகளை ஏற்றினாற்போலத் தோன்றியது என்றவாறு. இது தற்குறிப்பேற்றம். விண் என்றது இடவாகு பெயராய் விண்ணவரை உணர்த்தியது. இளக்குதலாவது வன்மை கெடச் செய்தல். (142)

9987. குயின்றன சுடர்மணிக்
கனலின் குப்பையின்
பயின்றன சுடர்தரப்
பதும நாளங்கள்
வயின்றொறுங் கவர்ந்தெனப்
பணியை வாய்களால்
அயின்றன புள்ளின
முகிரி னள்ளின.

குயின்றன சுடர்மணி,
கனலின் குப்பையின்
பயின்றன, சுடர்தரப்
பதும நாளங்கள்
வயின்தொறும் கவர்ந்தென,
பணியை வாய்களால்
அயின்றன, புள் இனம்
உகிரின் அள்ளின.

பொ :— பாம்புகளின் தலையில் பதிந்திருந்த ஒளிமிக்க மணிகள் நெருப்பின் குவியலைப் போலப் பொருந்தி ஒளி வீசா நிற்க, கருடப் பறவைகள், தாமரைமலர்களை அவற்றின் நாளங்களோடு இடங்கள் தொறும் கவர்ந்தாற்போலப் பாம்புகளை நகங்களால் பற்றி அள்ளி வாய்களால் அருந்தின.

கு :— கருடப்பறவைகள் பாம்புகளைக் கவர்ந்த தோற்றம், தாமரை மலர்களை நாளங்களோடு கவர்ந்தாற்போன்றது என்றவாறு. பாம்புகள் நாளங்களைப் போன்றன; அவற்றின் தலைகளில் அமைந்த மணிகள் தாமரைமலரைப் போன்று இருந்தன என்க. பணி—பாம்பு. உகிர்—கால் நகம். புள்ளினம் பணியை உகிரின் அள்ளி வாய்களால் அயின்றன என இயையும். அள்ளின, முற்றெச்சம். (143)

பின்வரும் பாடல் பல ஏடுகளில் இல்லாமையாலும் பொருள் தொடர்பு இல்லாமையாலும் மிகைப்பாடலாகக் கருதப்படுகின்றது :—

9987 (a) எவ்வகை யுரகமு மிரியல் போயின
நொவ்விய லுற்றென நொடிப்ப தென்னினி
அவ்வயி ரரனணி அடல ராவுமே
கவ்வையி னுழந்தன சிறையின் காற்றினே.

இராவணன் அது கண்டு சினந்து சரங்களைத் தூவுதல்

9988. ஆயிடை யரக்கனு
மழன்ற நெஞ்சினன்
தீயிடைப் பொடித்தெழு
முயிர்ப்பன் சீற்றத்தன்
மாயிரு ஞாலமும்
விசும்பும் வைப்பறத்
தூயினன் சுடுசர
முருமின் ரேூற்றத்த.

ஆயிடை அரக்கனும்,
அழன்ற நெஞ்சினன்,
தீயிடைப் பொடித்து எழும்
உயிர்ப்பன், சீற்றத்தன்,
மா இரு ஞாலமும்
விசும்பும் வைப்பு அறத்
தூயினன், சுடுசரம்
உருமின் தோற்றத்த.

பொ :— அப்போது, இராவணனும் கொதித்த மனத்தினனாய்த் தீப்பொறிகள்நடுவே தோன்றி எழும் பெருமூச்சையுடையவனும் சீற்றமுடையவனுமாகி, மிகப்பெரிய மண்ணுலகமும் விண்ணுலகமும் வெற்றிடம் இல்லையாம்படி, இடிபோன்ற தோற்றத்தினையுடையனவாய்ச் சுடுகின்ற அம்புகளைத் தூவினான்.

கு :— பொடித்தல் — தோன்றுதல். பெருமூச்சுக்கிடையே தீப்பொறிகள் தோன்றின என்க. வைப்பு—இடம்; வெற்றிடம்.

உருமின் தோற்றத்த சுடுசரம் தூயினன் என இயையும். தான் விடுத்த நிருதிக் கணையினின்று தோன்றிய பாம்புகளை யெல்லாம் இராமன் விடுத்த காருடக் கணையினின்று தோன்றிய கருடப் புட்கள் அயின்றமை கண்டமையால் இராவணன் அழன்ற நெஞ்சினன் ஆனான் என்க. (144)

இராமன் கணையால் தள்ளப்பட்ட இராவணன் கணைகளே அவன் மார்பில் நுழைதல்

9989. அங்கவெங் கடுங்கணை
யயிலின் வாய்தொறும்
வெங்கணை படப்பட
விசையின் வீழ்ந்தன
புங்கமே தலையெனப்
புக்க போலுமால்
துங்கவா ளரக்கன
துரத்திற் றோன்றல.

அங்கு அ(வ்) வெங்கடுங்கணை
அயிலின் வாய்தொறும்,
வெங்கணை படப்பட,
விசையின் வீழ்ந்தன;
புங்கமே தலையெனப்
புக்க போலுமால்;
துங்கவாள் அரக்கனது
உரத்தில் தோன்றல.

பொ:— அவ்விடத்து அந்த இராவணன் விடுத்த மிகக் கொடிய அம்பின் கூர்மையான வாய்தோறும் (இராமனது) கொடுங்கணைகள் படப்பட, வந்தவழியே விரைந்து சென்று வலிய வாளையுடைய இராவணனது மார்பில் வீழ்ந்த அவ்வம்புகள் அம்மார்பில் தோன்றுமையால் தம் குதைப் பகுதிகளே தலைப்பகுதிகளாகக்கொண்டு அவன் மார்பில் புகுந்தனபோலும்.

கு:— இராவணனால் விடுக்கப்பட்டு இராமனை நோக்கி வந்த அம்புகள் யாவும், இராமன் கணை படப்பட அவற்றால்

தள்ளப்பட்டு, வந்த வழியே சென்று, தம்மை எய்த இராவணன் மார்பில் புகுந்து மறைந்தன என்றவாறு. இராமனை நோக்கி வந்த அம்பின் முனையில் இராமன் எய்த அம்பின் முனை தாக்கித் தள்ளத்தள்ளப் பின்னால் செல்லும் அம்பு இராவணன் பக்கம் குதையுடையதாகவே இருத்தல் இயல் பாதலின், அது இராவணன் மார்பில் தைக்க வியலாதே என்ற ஐயத்தைப் போக்க ''புங்கமே தலையெனப் புக்க போலுமால்'' என்றார். புங்கம், அம்பின் அடிப்பகுதியாகிய குதை. அம்பின் அடியே முனையாக மாறி இராவணன் மார்பில் புகுந்தன போலும் என்று வியப்புத் தோன்ற விளம்பியவாறு. ஓரம்பு தானும் இராவணன் மார்பின்மேல் தோன்றாமையால் அவை மார்பினுள் நுழைந்தமை உண்மை எனக் கொள்ளல் வேண்டும்; அங்ஙனம் கொள்ளுங்கால் இராவணன் பக்கம் குதைகளைத் திருப்பிக்கொண்டிருந்த அம்புகள் இராமனது பேராற்றலால் தம் குதைகளையே முனைகளாகக் கொண்டு அவன் மார்பில் புகுந்திருத்தல் வேண்டும் என அருத்தாபத்தி அளவையால் நிறுவிய வாறு. இராவணன் எய்த அம்பு இராவணனையே துளைத்தது என்றவாறு. (145)

இராவணன் நிலைதளர இராமன் வலி மிகுதல்

9990. ஒக்கநின் றெதிரம ருடற்றுங் காலையில்
முக்கணன் றடவரை யெடுத்த மொய்ம்பற்கு
நெக்கன விஞ்சைக ணிலையிற் றீர்ந்தன
மிக்கன விராமற்கு வலியும் வீரமும்.

ஒக்கநின்று எதிர் அமர் உடற்றும் காலையில்,
முக்கணன் தடவரை எடுத்த மொய்ம்பற்கு
நெக்கன, விஞ்சைகள், நிலையில் தீர்ந்தன;
மிக்கன, இராமற்கு வலியும் வீரமும்.

பொ :— ஒத்த நிலையில் நின்று (இராமனும் இராவணனும்) எதிர்த்துப் போர்செய்யும் காலத்தில், முக்கண்ணனாகிய சிவனது பெரிய கயிலை மலையை எடுத்த தோள்களையுடைய இராவணனுக்கு (த் தான் கற்றிருந்த) வித்தைகள் நெஞ்சில் நின்ற நிலை மாறி நெகிழ்ந்து மறந்தன; இராமனுக்கு வலியும் வீரமும் (முன்னையினும்) மிக்கன.

கு :— உயர்வு தாழ்வுஇன்றி இராமனும் இராவணனும் எதிர்த்துப் போர் செய்து கொண்டிருக்கும்போதே இராவணன் உள்ளத்தில் மந்திரங்களின் நினைவு உறுதிகெட்டு மறந்தனவாதற்கும், இராமனது வலியும் வீரமும் மிக்குத் தோன்றுதற்கும் காரணம் இராவணன் மேற்கொண்ட பாவநெறியும் இராமன்மேற்கொண்ட அற நெறியுமே ஆம் என்பதை உய்த்துணர வைத்தவாறு. இராவணனது முன்னைய வலிமை தோன்ற 'முக்கணான் தடவரையெடுத்த மொய்ம்பற்கு' எனச் சிறப்பித்தார். அறத்தின் முன் எத்தகைய பெருவலியும் குன்றியழியும் என்பது புலப்படுத்தியவாறு. (146)

இராமன் இராவணன் தலையை அறுத்தல்

9991. வேதியர் வேதத்து மெய்யன் வெய்யவர்க்
காதிய னணுகிய வற்ற நோக்கினன்
சாதியி னிமிர்ந்ததோர் தலையைத் தள்ளினன்
பாதியின் மதிமுகப் பகழி யொன்றினால்.

வேதியர் வேதத்து மெய்யன், வெய்யவர்க்கு
ஆதியன் அணுகிய அற்றம் நோக்கினன்,
சாதியின் நிமிர்ந்தது ஓர் தலையைத் தள்ளினன்,
பாதியின் மதிமுகப் பகழி ஒன்றினால்.

பொ :— அந்தணர் ஓதும் வேதத்தில் சொல்லப்படுகின்ற மெய்ப்பொருளின் அமிசமாகவுள்ள இராமன், கொடிய அரக்கர்க்குத் தலைவனாகிய இராவணன் நெருங்கிய சமயம் பார்த்து, அவன்தலைகளின் தொகுதியில் உயர்ந்துள்ளதாகிய ஒரு தலையை அர்த்தசந்திரன் வடிவமுடைய ஓரம்பினால் கொய்து தரையில் தள்ளினன்.

கு: — அற்றம் — சமயம். நோக்கினன், முற்றெச்சம். சாதி என்றது இங்குத் தொகுதி என்னும் பொருளில் வந்தது. இராவணனுக்குத் தலைகள் பத்து ஆகலின், அந்தப் பத்துத் தலைகளில் உயர்ந்த சிறந்த தலையை ''சாதியின் நிமிர்ந்ததோர் தலை'' எனச் சிறப்பித்தார். பாதிமதி போன்ற முகப்பினையுடைய அம்பு என்பார், 'பாதியின் மதிமுகப்பகழி' என்றார். ஒன்றினால் தள்ளினன் என இயையும். (147)

அற்ற தலை கடலிடை வீழ்தல்

9992. மேருவின் கொடுமுடி வீசு காலெறி
போரிடை யொடிந்துபோய்ப் புணரி புக்கென
ஆரியன் சரம்பட வரக்கன் வன்றலை
நீரிடை விழுந்தது நேர்கொண் டொன்றுபோய்.

மேருவின் கொடுமுடி, வீசு கால் எறி
போரிடை, ஒடிந்துபோய், புணரி புக்கென
ஆரியன் சரம்பட அரக்கன் வன்தலை
நீரிடை விழுந்தது, நேர்கொண்டு ஒன்றுபோய்.

பொ:— (ஆதிசேடனோடு செய்த) போரில் வீசும் தன்மை யுள்ள காற்றுக் கடவுள் எரிதலால் மேருவின் சிகரம் ஒடிந்து போய்க் கடலில் புகுந்தாற்போல, இராமன் அம்பு பட்ட அளவில் இராவணனது வலிய தலை ஒன்று (அற்று) நேர்வழிக் கொண்டு சென்று கடல்நீரில் வீழ்ந்தது.

கு:— வீசும் காற்றுப் போன்றது இராமனது அம்பு; மேருவின் சிகரம் போன்றது இராவணனது தலை; மேருவின் சிகரம் கடலில் வீழ்ந்ததுபோல இராவணனது தலையும் கடலில்வீழ்ந்தது என உவமையை விரித்துக் கொள்க. வன்றலை ஒன்று நேர் கொண்டு போய் நீரிடை விழுந்தது என்று இயையும். ஆரியன் என்றது இராமனை. (148)

தேவர்களின் மகிழ்ச்சி ஆரவாரம்

9993. குதித்தனர் பாரிடைக் குன்று கூறுற
மிதித்தனர் வடகமுந் தூசும் வீசினர்
துதித்தனர் பாடின ராடித் துள்ளினர்
மதித்தன ரிராமனை வானு ளோரெலாம்.

குதித்தனர் பாரிடை, குன்று கூறு உற
மிதித்தனர்; வடகமும் தூசும் வீசினர்;
துதித்தனர்; பாடினர்; ஆடித் துள்ளினர்;
மதித்தனர் இராமனை— வானுளோர் எலாம்.

பொ :— (இராவணனது தலையை அறுத்தது கண்டு) வானுலகத்துள்ள தேவர்கள் எல்லாம் இராமனைப் பெரிதும் மதித்தனராய்ப் பூமியில் குதித்தனர்; பூமியில் உள்ள திரிகூடமலை பிளக்குமாறு கால்களால் மிதித்தனர்; மேலாடையும் உடையும் வீசினார்கள்; இராமனைத் துதித்தார்கள்; பாடினார்கள்; (மகிழ்ச்சியால்) ஆடித் துள்ளினார்கள்.

கு:—தேவர்களின் பாதங்கள் மண்மிசை மிதியாதனவாயினும் இராவணனது தலையறுதல் கண்ட மகிழ்ச்சியினால் தம்மைமறந்து மலையும் பிளவுபடக் கால்களால் மிதித்தார்கள் என்க. மகிழ்ச்சி ஆரவாரத்தில் உடுத்திருந்த ஆடைகளை அவிழ்த்து வீசுதல் உண்டு. ''விண்ணவர், ஊசல் நீங்கினர் உத்தரிகத்தொடு தூசு வீசினர்'' (நாகபாசப் - 130) எனவும், ''களித்த தேவர், எல்லாருந் தூசு நீக்கி யேறிட வார்த்தபோது, கொல்லாத விரதத்தார் தம் கடவுளர் கூட்ட மொத்தார்.'' (இந்திரசித்து வதைப்-56) எனவும் முன் கூறப்பட்டமை நினையலாம். இராவணனை வென்ற இராமனது வீரத்தை மதித்தனர் என்பார் இராமனை மதித்தனர் என்றார். வடகம்—மேலாடை; சிந்தாமணி-462 உரை காண்க. (149)

இராவணன் தலை மீண்டும் முளைத்தல்

9994. இறந்ததோ ருயிருடன் றருமத் தீட்டினால்
பிறந்துள தாமெனப் பெயர்த்து மோர்தலை
மறந்தில தெழுந்தது மடித்த வாயது
சிறந்தது தவமலாற் செயலுண் டாகுமோ.

இறந்ததோர் உயிர் உடன் தருமத்து ஈட்டினால்
பிறந்துள தாம் எனப் பெயர்த்தும், ஓர்தலை
மறந்திலது எழுந்தது, மடித்த வாயது;
சிறந்தது தவம் அலால் செயல் உண்டாகுமோ?

பொ :— மாண்டுவிட்டதோர் உயிர், தான் செய்த தருமத்தின் பெருமையால் உடனே மீண்டு எழுந்தது போல, மீண்டும் ஒருதலை சினத்தால் மடித்த வாயினை யுடையதாய் (முன்னைய நிலையை) மறந்திலதாய் எழுந்தது; (இதை நோக்கின்) தவமல்லது சிறந்ததாகிய செயல் உளதாமோ? (உளதாகாது.)

கு:— உடலை விட்டுப் பிரிந்த உயிர் உடனே மீண்டும் அவ்வுடலில் புகுந்து தோன்றியது போல, இராவணனது தலை யற்ற இடத்திலிருந்து மீண்டும் ஓர் தலை எழுந்தது என்றவாறு. இறந்த உயிர் உடனே அவ்வுடம்பில் தோன்றுதற்கு அவ்வுயிர் செய்த தருமம் காரணம் ஆனாற்போல, இராவணனது அற்றதலை மீண்டும் முளைத்ததற்கு இராவணன் செய்த தவமே காரணம் ஆதலின், அத்தகைய தவத்தினும் சிறந்த செயல் உண்டோ? என, வேற்றுப் பொருள் வைப்பணியால் வியந்து கூறியவாறு. ''ஈட்டுவார் தவமலான் மற் றீட்டினுல் இயை வதின்மை, காட்டினுர் விதி யாரஃது காண்கிற்பார் காண் மினம்மா'' (சுந்தர — ஊர்தேடு — 104) என்பது இங்கு நினையத் தகும். உடம்பை விட்டுப் பிரிந்து சென்ற உயிர் தான் செய்த தருமத்தின் பெருமையால் உடனே அவ்வுடம்பில் வந்து தோன்றியெழுதல் இவ்வுலகத்து அரிதின் நிகழ்தல் உண்டு. பிறத்தல் என்றது அவ்வுடம்பில் மீண்டும் புகுந்து எழுதலை யுணர்த்தியது. ஈடு — பெருமை. (150)

இச்செய்யுளின் பின் 52-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன:—

994 (a) பிறைத்தலைப் பகழியால் பின்னு மோர்தலை
அறுத்தனன் முளைத்ததங் கதுவு மார்த்துடன்
மறுத்திரு தலைதனை மாற்ற வள்ளலும்
குறைத்திலன் எனும்படி முளைத்த குன்றுபோல்.

9994 (b) ஆயிரப் பதின்மடங் கரக்கன் மாத்தலை
தீமுகப் பகழியால் சினந்தி ராகவன்
ஒய்வரத் துணிக்கவும் உடன் முளைத்ததால்
தீயவன் தவப்பெருஞ் செயலின் வன்மையால்.

எழுந்த தலை இராமனை இகழ்ந்து அதட்டுதல்

9995. கொய்தது கொய்தில
தென்னுங் கொள்கையின்
எய்தவந் தக்கணத்
தெழுந்த தோர்சிரம்

செய்தவெஞ் சினத்துடன்
சிறக்குஞ் செல்வனை
வய்தது தெழித்தது
மழையி னார்ப்பது.

கொய்தது கொய்திலது என்னும் கொள்கையின்
எய்த வந்து, அக்கணத்து எழுந்ததோர் சிரம்,
செய்த வெஞ்சினத்துடன் சிறக்கும் செல்வனை
வய்தது, தெழித்தது, மழையின் ஆர்ப்பது.

பொ:— இராமனால் கொய்யப்பட்டதாய் 'கொய்யப்படவே யில்லை' என்று பிறர் கருதுதற்கேற்ற தன்மையினால், அந்தக் கணத்தில் பொருத்தமாக வந்து எழுந்ததாகிய அந்த ஒரு தலை, கொண்ட கொடுங் கோபத்துடன் சிறப்புமிக்க செல்வனாகிய இராமனைத் திட்டியது; மேகத்தின் ஆரவாரமுடையதாய் அவனை அதட்டியது.

கு:— கொய்த உடனே தோன்றின விரைவு புலப்படுத்த 'கொய்திலது என்னுங் கொள்கையின் அக்கணத்தெழுந்ததோர் சிரம்' என்றார். பழைய தலை அப்படியே இருப்பதாகப் பிறர் கருதுமாறு புதிய தலை விரைந்து எழுந்தது என்றவாறு. 'அத்தலை மறந்திலது எழுந்தது' என, மேற்கூறிவிட்டமையால், இங்கு 'அக்கணத்து எழுந்ததோர் சிரம்' என்றது, அனுவாத மாத்திரையாய்ச் சுட்டின் பொருள்பட நின்றது. வைதல் — ஏசுதல். தெழித்தல் — அதட்டுதல். கொய்ததாய் அக்கணத் தெழுந்த தோர் சிரம் என முற்றெச்சமாக்கி முடிக்க. (151)

இச்செய்யுட்குப்பின் 52ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது:—

9995 (a) அண்ணலு மிடைவிடா தறுத்து வீழ்த்தலால்
மண்ணொடு வானகம் மருவு மெண்டிசை
எண்ணுறு மிடமெலாம் இராவணன் தலை
நண்ணிய தமரரும் நடுக்க மெய்தினர்.

அற்றுக் கடலில் விழுந்த தலையின் செயல்

9996. இடந்தது கிரிக்குவ டென்ன வெங்கணும்
படர்ந்தது குரைகடல் பருகும் பண்பது
விடந்தரு விழியது முழுகி வேலையில்
கிடந்தது மார்த்தது மழையின் கேழது.

இடந்தது கிரிக்குவடு என்ன எங்கணும்
படர்ந்தது, குரைகடல் பருகும் பண்பது,
விடம்தரு விழியது முழுகி வேலையில்
கிடந்ததும், ஆர்த்தது, மழையின் கேழது.

பொ:— (இராமனால் கொய்து) தள்ளப்பட்டதாய் மலைச் சிகரம் போல எவ்விடத்தும் சென்று, ஒலிக்கின்ற கடல் நீரைப் பருகும் தன்மையதாய், விடம் கக்கும் விழியினதாய்க் கடலில் மூழ்கிக் கிடந்த தலையும் மேகத்தின் நிறத்தினதாய் ஆரவாரித்தது.

கு:— புதுவதாய்த் தோன்றிய தலையே யன்றி வேலையில் கிடந்ததும் ஆர்த்தது என்று பொருள்படுவதால் 'கிடந்ததும்' என்ற உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மையாம். இடத்தல் — தள்ளுதல். படர்தல் — செல்லுதல். வேலையில் முழுகிக் கிடந்தது என்க. கேழ் — நிறம்; தன்மை எனக் கொண்டு மழையின் தன்மையதாய் ஆரவாரித்தது எனலும் ஆம். (152)

இச்செய்யுளின்பின் 52-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகிறது :—

9996 (a) இத்திறத் திராமனங் கேவும் வாளியின்
தத்துறுந் தலைமுளைத் தெய்துந் தன்மையால்
அத்திறத் தரக்கனு மமரொழிந்திலன்
முத்திறத் துலகமு முருக்கும் வெம்மையான்.

## இராமன் தோள்களில் பதினுன்கு அம்புகளை அழுத்தி இராவணன் ஆரவாரித்தல்

9997. விழுத்தினன் சிரமெனும் வெகுளி மீக்கொள
வழுத்தின வுயிர்களின் முதலின் வைத்ததோ
ரெழுத்தினன் ரேள்களி னேழொ டேழுகோல்
அழுத்தின னசனியே றயிர்க்கு மார்ப்பினுன்.

'விழுத்தினன் சிரம்' எனும்
வெகுளி மீக்கொள,
வழுத்தின, உயிர்களின்
முதலின் வைத்ததோர்
எழுத்தினன் தோள்களின்
ஏழொடு ஏழுகோல்
அழுத்தினன்— அசனி ஏறு
அயிர்க்கும் ஆர்ப்பினுன்.

பொ :— தன் தலையை விழுத்தினனே என்னும் சினம் மேற்பட்டதால் (இராவணன், மெய்யெழுத்தினும் சிறப்புடையவையெனப்) பாராட்டப்பெற்ற உயிர் எழுத்துக்களின் முதலில் வைக்கப்பட்டதாகிய அகரம் என்னும் ஓர் எழுத்தாக இருப்பவனுகிய இராமனது தோள்களில் பதினுன்கு அம்புகளை அழுத்தினுய்ப் பேரிடியும் ஐயுறத்தக்க ஆரவாரத்தை யுடையவனுனன்.

கு :— உயிர் எழுத்து மெய்யெழுத்து என்ற இருவகை எழுத்துக்களில் தாமே இயங்கும் பெருமையுடையவை உயிர் எழுத்துக்களே ஆதலின், அவை வழுத்தின உயிர்கள் எனச் சிறப்பிக்கப்பெற்றன. 'எழுத்துக்களில் யான் அகர மாகின்றேன்' எனக் கீதையில் கண்ணன் கூறியதை நினைத்து, 'உயிர்களின் முதலின் வைத்ததோர் எழுத்தினன்' என இராமனை இங்குக் குறிப்பிட்டவாறு. அசனியேறு—பேரிடி. ஆர்ப்பினுன் ஆயினன் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. இனி, வெகுளி மீக்கொள ஆர்ப்பினுய்க் கோல் அழுத்தினன் என மாற்றி முடித்தலும் ஆம். (153)

இராமன், இராவணனது விற்பிடித்த கையை அறுத்தல்

9998. தலையறிற் றருவதோர் தவமு முண்டென
நிலையுறு நேமியா னறிந்து நீசனைக்
கலையுறு திங்களின் வடிவு காட்டிய
சிலையுறு கையையுந் தலத்திற் சேர்த்தினான்.

'தலை அறின், தருவதுஓர் தவமும் உண்டு' என,
நிலைஉறு நேமியான் அறிந்து, நீசனைக்
கலைஉறு திங்களின் வடிவு காட்டிய
சிலைஉறு கையையும் தலத்தில் சேர்த்தினான்.

பொ:— (கொய்த தலை மீண்டும் இராவணனுக்கு முளைத்தது கண்டு) 'தலை அற்றால் மீண்டும் தரத்தக்கதொரு தவமும் இவனுக்கு உண்டு' என்று நிலையாகப் பொருந்திய சக்கரப்படையுடைய இராமன் அறிந்து, நீசனான இராவணனை ஒரு கலை பொருந்திய பிறை மதியின் வடிவத்தைக் காட்டிக்கொண்டு வளைந்துள்ள வில் பொருந்திய கையையும் அறுத்துத் தரையில் வீழ்த்தினான்.

கு:— இராமனை நேமியான் என்றது, பழைய தெய்வ நிலையை நினைந்து கூறியது. இராவணனைப் போன்று நிலையாமையுடையவன் அல்லன் என்பார் 'நிலையுறு நேமியான்' என இராமனைக் கூறினார். கலையுறு திங்கள் என்றது மூன்றாம் நாளில் தோன்றும் பிறைமதியை. வில்லின் வடிவு பிறைவடிவு போன்றிருத்தல் கொண்டு 'கலையுறு திங்களின் வடிவு காட்டிய சிலை' என்றார். பிறைபோல் வளைந்துள்ள வில் என்பதே பொருள். தலையை அறுத்தால் அது மீண்டும் முளைக்கும் தவமுடையனாதல் கண்டு அதனை விடுத்துக் கையை யறுத்தான் என்றவாறு. நீசனைக் கையையும் தரையில் சேர்த்தினான் என்பது, 'பசுவைப் பாலைக் கறந்தான்' என்பது போல இரண்டாம் வேற்றுமையுருபு இரு முறை வந்த தொடர். இனி, நீசனை என்பதை நீசனது என உருபுமயக்கமாக்கி நீசனது கையையும் தலத்தில் சேர்த்தினான் என்றலும் ஆம். கையையும் என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை. (154)

9999. கொற்றவன் சரம்படக் குறைந்து போனகை
பற்றியே கிடந்தது சிலையைப் பாங்குற
மற்றொர்கைப் பிடித்தது போல வவ்விய
தற்றகைப் பிறந்தகை யார தோர்குவார்.

கொற்றவன் சரம்படக், குறைந்துபோன கை
பற்றியே கிடந்தது சிலையைப் பாங்குற
மற்று ஓர் கைப் பிடித்தது போல வவ்வியது
அற்றகைப் பிறந்தகை யார் அது ஓர்குவார்.

பொ:— இராமனது அம்பு பட்டமையால் குறைந்துபோன கை, வில்லை நன்கு பற்றிக்கொண்டே கிடந்தது; இராவணனது மற்றொரு கை வந்து பிடித்துக்கொண்டதுபோல, கையறுபட்ட இடத்தில் முளைத்த கை அவ்வில்லைப் பற்றிக்கொண்டது; (இந் நிகழ்ச்சி கணப்பொழுதில் நடந்தமையால்) அதனை அறிபவர் யார்? ஒருவரும் இலர்.

கு:— முன்னைய கையே வில்லைப் பற்றிக்கொண்டுள்ளது என்றே யாவரும் எண்ணியிருந்தனர் என்றவாறு. கை அற்று வீழ்ந்தும் வில்லை விடாது பற்றியிருந்தது; அற்ற விடத்தில் முளைத்த கையும் அவ்வில்லைப்பற்றிக்கொண்டது என்க. மற்றோர் கைப்பிடித்ததுபோலப் பிறந்த கை வவ்வியது என்பது தற்குறிப்பேற்றவணி. அற்ற கைப் பிறந்த கை என்றது கை அற்ற இடத்தில் பிறந்த கை என்றவாறு. வில்லை விடாது பற்றி யிருந்த அற்றகையை இராவணன் தன்வலிமையினல் நெகிழ்ந்து வாங்கியதை அடுத்த செய்யுளில் கூறியுள்ளமை காணலாம். (155)

மாதலிமேல் எறிதற்காக அற்ற கையை இராவணன் எடுத்தல்

10000. பொன்கையிற் றூர்தியான்
வலியைப் போக்குவான்
முன்கையிற் றுறுமயிர்
முள்ளிற் றுள்ளுற

மின்கையிற் கொண்டென
வில்லை விட்டிலா
வன்கையைத் தன்கையின்
வலியின் வாங்கினன்.

பொன்கையிற்று ஊர்தியான்
வலியைப் போக்குவான்
முன் கையில் துறுமயிர்
முள்ளின் துள்ளுற,
மின் கையில் கொண்டென
வில்லை விட்டிலா
வன் கையைத் தன்கையின்
வலியின் வாங்கினன்.

பொ :— (இராவணன்) பொன்னாலியன்ற கயிற்றைக் கொண்டு தேரைச் செலுத்துபவனை மாதலியின் வலியைப் போக்குதற்காக,— முன்கையில் நெருங்கியுள்ள மயிர் முள்ளைப் போலத்துள்ளி நிமிர, மின்னலைக்கையில் பற்றிக் கொண்டாற் போல வில்லை விடாது பற்றிக் கொண்டிருக்கின்ற தன் அற்ற கையை, அருத தன் கையின் வலிமையினால் நெகிழச்செய்து வாங்கிக்கொண்டான்.

கு .— பொன்னுலகத்து இந்திரன் தேர் ஆதலின், அவன் குதிரைகட்டிய கயிறும் பொன் கயிருயிற்று. பொன் கயிறு என்ற குறிப்பே ஊர்தியான் என்ற பொதுவான பெயரை மாதலிக் குரித்தாக்கியது. அற்றகை, வில்லைப்பற்றி விடாத நிலையில், முன்கையில் உள்ள உரோமங்கள் முள்ளைப்போல நிமிர்ந்து நின்று துள்ளின என்றது பிடிப்பின் உறுதியையும் முனைப்பையும் உணர்த்தியவாறு. அற்றகை வில்லைப்பற்றியுள்ள தோற்றம் மின்னலைக் கையில் பற்றியுள்ளதுபோலத் தோன்றிற்று என்றவாறு. இதனால் வில்லின் ஒளியைப் புலப்படுத்தியவாறு. மாதலியின் வலியைப் போக்குதற்காக வில்லைப் பற்றியிருந்த அற்றகையை நெகிழச்செய்து எடுத்துக் கொண்டான் என்க. கயிற்று என்பது ‘கையிற்று’ என்று எதுகை நோக்கிய போலியாயது.
(156)

அற்றகையால் தாக்குண்ட மாதலி இரத்தம் கக்குதல்

10001. விளங்கொளி வயிரவா ளரக்கன் வீசிய
தளங்கிளர் தடக்கைதன் மார்பிற் ருக்கலும்
உளங்கிளர் பெருவலி யுலேவின் மாதலி
துளங்கினன் வாய்வழி யுதிரந் தூவுவான்.

விளங்கு ஒளி வயிரவாள்
அரக்கன் வீசிய
தளம் கிளர் தடக்கைதன்
மார்பில் தாக்கலும்,
உளம்கிளர் பெருவலி
உலேவுஇல் மாதலி
துளங்கினன், வாய்வழி
உதிரம் தூவுவான்.

பொ :— ஒளி விளங்குகின்ற வயிரவாளே ஏந்தியுள்ள இராவணன் வீசிய கனம் பொருந்திய பெரிய கை தன்மார்பில் தாக்கின அளவில், உள்ளத்தில் கிளர்ந்தெழுகின்ற பெரியவலிமை கெடாத மாதலி, வாயின் வழியாக இரத்தம் கக்கிக்கொண்டு நிலே கலங்கினுன்.

கு :— ஒளி விளங்கு என மாறுக. தளம்—கனம். பெருவலி கெடாத மாதலியும் உதிரம் கக்கிக்கொண்டு நிலே கலங்கினுன் என்றதால் இராவணன் வீசிய கையின் கடுமை புலப்படுத்திய வாறு. (157)

மாதலிமேல் இராவணன் தோமரம் எறிதல்

10002. மாமரத் தார்கையால்
வருந்து வானேயோர்
தோமரத் தாலுயிர்
தொலேப்பத் தூண்டினுன்
தாமரத் தாற்பொராத்
தகைகொள் வாட்படை
காமரத் தாற்சிவன்
கரத்து வாங்கினுன்.

மாமரத்து ஆர்கையால் வருந்துவானை ஓர்
தோமரத்தால் உயிர் தொலைப்பத் தூண்டினான் —
தாம் அரத்தால்பொராத் தகைகொள் வாட்படை,
காமரத்தால் சிவன் கரத்து வாங்கினான்.

பொ :— அரத்தால் அராவப்படாத (இயல்பாகவே கூர்மை யாகவுள்ள) பெருமைகொண்ட வாட்படையைக் காமரம் என்னும் பண்ணைப் பாடியதால் சிவன் கையினின்றும் வாங்கினவனாகிய இராவணன், (தான்வீசிய) பெரியமரம்போன்று அமைந்த கையினால் வருந்துகின்ற மாதலியை இருப்புலக்கையால் உயிரை நீக்க அதை வீசினான்.

கு :— தாம் அரத்தால் என்புழித் 'தாம்' அசை. அற்ற கையின் பெருமை புலப்பட 'மாமரத்து ஆர் கை' என்றார். தோமரம்—இருப்புலக்கை. காமரம் ஒருவகைப்பண்; இங்கு இசை என்ற பொதுப்பொருளில் வந்தது. ''தென்கையான் தேர்கடாவிச் சென்றெடுத்தான் மலையை, முன்கைமா நரம்புவெட்டி முன்னிருக் கிசைகள்பாட, அங்கைவா ளருளினானூர் அணிமறைக் காடு தானே'' (தேவாரம்-4-34-10) எனத் திருநாவுக்கரசு நாயனார் கூறியது இங்கு நினையலாம். (158)

இராமன்கணையால் தோமரம் துகளாதல்

10003. மாண்ட தின்றொடு மாதலி வாழ்வென
மூண்ட வெந்தழல் சிந்தி முடுகலும்
ஆண்ட வில்லியோ ரைம்முக வெங்கணை
தூண்டி னான்றுக ளானது தோமரம்.

'மாண்டது இன்றொடு மாதலி வாழ்வு'என,
மூண்ட வெந்தழல் சிந்தி முடுகலும்,
ஆண்ட வில்லி ஓர்ஐம்முக வெங்கணை
தூண்டினான்; துகளானது தோமரம்.

பொ :— (அந்தத் தோமரம்) 'மாதலியின் வாழ்க்கை இன்றோடு தொலைந்தது' என்று யாவரும் எண்ணுமாறு பெருகிய வெம்மையான நெருப்பைச் சிந்திக்கொண்டு விரைந்து வருதலும், (அதுகண்ட) யாவரையும் அடிமை கொண்ட

வில்லாளனாகிய இராமன், ஐந்து முகங்களையுடைய ஒரு கொடிய அம்பினை எய்தானாக, அந்தத் தோமரம் துகளாயது.

கு :— முடுகல் — விரைதல். இராமன் யாவர்க்கும் இறைவனாகலின் 'ஆண்ட வில்லி' எனப்பட்டான். இனி, வில்லாற்றலால் யாவரையும் அடிமைப்படுத்தி உயர்ந்தவன் எனப்பொருள் கூறலும் ஆம். (159)

இச்செய்யுளின் பின் 52-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது :—

10003 (a) தொடுத்த வாழியின் தோமரம் தூள்பட
விடுத்த வீரனவ் வெய்யவன் மாத்தலை
அடுத்து மீளவு நின்றறுத் தானுயிர்
முடித்தி லன்விளை யாடலை முன்னியே.

### இராமன் இராவணன் தலைகளை அறுத்தல்

10004. ஓய்வ கன்ற தொருதலை நூறுறப்
போய கன்று புரளப் பொருகணை
ஆயி ரந்தொடுத் தானறி வின்றனி
நாய கன்கைக் கடுமை நடத்துவான்.

ஓய்வு அகன்றது, ஒருதலை நூறுஉற,
போய் அகன்று புரள, பொருகணை
ஆயிரம் தொடுத்தான்— அறிவின் தனி
நாயகன் கைக்கடுமை நடத்துவான்.

பொ :— அறிவிற்கெல்லாம் ஒப்பற்ற தலைவனாக உள்ள இராமன், தன் கையின் கடுமையை நடத்திக் காட்டுவானாய், ஓய்வு இல்லாததாகி ஒருதலை நூறுமுறை முளைக்கவும், (அவையாவும்) தொலைவிற் சென்று விழுந்து புரளும்படி போர்செய்ய வல்ல அம்புகள் ஆயிரம் தொடுத்தான்.

கு :—ஓய்வு அகன்றதாய் உற என முற்றெச்சமாக்கிமுடிக்க. இராவணன் அறிவினால் செய்யும் சூழ்ச்சிகளையெல்லாம் வெல்ல வல்ல தன்மையன் இராமன் என்பது புலப்பட இங்கு 'அறிவின் தனி நாயகன்' எனச் சிறப்பிக்கப்பட்டான். ''வேதம் வேதியர்

விரிஞ்சன் முதலோர் தெரிகிலா, ஆதிநாதரவர் எம்மறிவினுக் கறிவரோ'' (ஆரணிய-1) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். இராவணனது தவத்தின் பெருமையில் அற்றதலை நூறு முறை முளைத்தாலும் அவையெல்லாவற்றையும் தன் அம்புகளால் அறுத் தெறிந்தான் இராமன் என்றவாறு. (160(

### தலைகள் பலவிடங்களிலும் வீழ்தல்

10005. நீர்த்த ரங்கங்க டோறு நிலந்தொறும்
சீர்த்த மால்வரை தோறுந் திசைதொறும்
பார்த்த பார்த்த விடந்தொறும் பஃறலை
ஆர்த்து வீழ்ந்த வசனிகள் வீழ்ந்தென.

நீர்த் தரங்கங்கள் தோறும் நிலம்தொறும்,
சீர்த்த மால்வரை தோறும், திசைதொறும்
பார்த்த பார்த்த இடந்தொறும், பல்தலை
ஆர்த்து வீழ்ந்த— அசனிகள் வீழ்ந்தென.

பொ :— இராமன் அம்புகளால் அற்ற இராவணனுடைய பல தலைகளும், கடலின் அலைகள்தோறும், நால்வகை நிலங்கள் தோறும், சிறப்புள்ள பெரிய மலைகள் தோறும், திசைகள் தோறும், பார்த்த பார்த்த இடங்களில் எல்லாம் இடிகள் வீழ்ந் தாற்போல ஆரவாரித்துக் கொண்டு வீழ்ந்தன.

கு :— ஒரு தலையே நூற்றுக்கணக்கான முறை முளைத்தெழுவ தால் இவ்வாறு பலவிடங்களும் சென்றுவீழ, இராமன் தன் அம்பு களால் அறுத்துத்தள்ளினன் என்றவாறு. நீர்என்றது கடல்நீரை. தரங்கம்— அலை. எங்கு நோக்கினும் இராவணன் தலைகளாகவே காட்சியளித்தன என்றவாறு. (161)

### வீழ்ந்த தலைகளின் விளைவு

10006. தகர்ந்து மால்வரை சாய்வுறத் தாக்கின
மிகுந்த வான்மிசை மீன மலைந்தன
புகுந்த மாமக ரக்குலம் போக்கற
முகந்த வாயிற் புணரியை முற்றுற.

தகர்ந்து மால்வரை சாய்வுறத் தாக்கின;
மிகுந்த வான்மிசை மீனம் மலைந்தன;
புகுந்த மா மகரக்குலம் போக்கு அற
முகந்த வாயின், புணரியை முற்றுற.

பொ:— அறுபட்டு வீழ்ந்த இராவணன் தலைகள், பெரிய மலைகளை எல்லாம் பிளவுண்டு சாயும்படி தாக்கின; (விண்ணில் சென்ற தலைகள்), விண்ணில் மிகுந்துள்ள நட்சத்திரங்களைத் தாக்கின, கடலில் புகுந்த தலைகள், பெரிய மகரமீன்களின் கூட்டத்திற்குப் போக்கிடம் இல்லையாம்படி கடலை முழுவதும் வாயினால் முகந்தன.

கு:— மலையினும் வானினும் கடலினும் சென்று வீழ்ந்த இராவணனது தலைகளின் செயலை வகைப்படுத்திக் கூறியவாறு. கடல் நீரைப் பருகிவிட்டதால் பெரிய மகர மீன்களின் இயக்கம் தடைப்பட்டது என்பார், 'மாமகரக்குலம் போக்கற முகந்த, வாயின்' என்றார். புணரி என்றது இங்குக் கடல் நீரை. ஒன்றன்பின் ஒன்றாகப் புணர்ந்து வரும் அலைகளைக் குறிக்கும் புணரி என்ற சொல் தானிஆகுபெயராய்க் கடலுக்குப் பெயராகிப் பின் இடவாகு பெயராய் நீரைக் குறித்தது. புகுந்த என்பது வினைப்பெயராய்க் கடலில் புகுந்தனவாகிய தலைகளையுணர்த்தின. முற்றுற வாயின் முகந்த என இயையும். (162)

### அற்றுவீழ்ந்த இராவணனது தலைகளின் கண்களைப் பேய்கள் தோண்டுதல்

10007. பொழுது நீடித்த புண்ணியம் போனபின்
பழுது செல்லுமன் றேமற்றைப் பண்பெலாம்
தொழுது சூழ்வன முன்னின்று தோன்றிடக்
கழுது சூன்ற இராவணன் கண்ணெலாம்.

பொழுது நீடித்த புண்ணியம் போனபின்,
பழுது செல்லும் அன்றே, மற்றைப் பண்பு எலாம்?
தொழுது சூழ்வன முன் இன்று தோன்றிட
கழுது சூன்ற இராவணன் கண் எலாம்.

பொ:— நெடிது காலம் நீட்டித்திருந்த புண்ணியம், தன் பயனையளித்துவிட்டுப் போனபின்பு (ஒருவனுக்கு) மற்றையபுகழ்,

ஒளி முதலிய பண்புகள் எல்லாம் பழுதுபட்டுப்போம் என்பது உண்மையன்றோ? முன் இராவணனை வணங்கி வலம்வரும் தன்மையுள்ள பேய்கள், இன்று அவன் கண்ணுக்குத் தோன்றுமாறு அவனது அறுபட்ட தலையின் கண்களையெல்லாம் தோண்டியுண்ணுவன ஆயின.

கு :— புண்ணியம் தன் பயனைக் கொடுக்குங்கால் இருந்த மதிப்பு அப்புண்ணியம் முடிந்தபின் இல்லையாதல் இயல்பு என்பதைப் பேய்களின் செயல் கொண்டு நிறுவியவாறு. இது வேற்றுப் பொருள்வைப்பணி. முன் தொழுது சூழ்வனவான கழுதுகள், இன்று, அவனுக்குத் தோன்றுமாறு அவன் கண்களைத் தோண்டியுண்ணுவன ஆயின. இராவணன் செய்த புண்ணியம் இருந்தவரையில் பேய்கள் அவனை மதித்துத் தொழுது சூழ்ந்தன; அப்புண்ணியம் இப்போது நீங்கிவிட்டமையால் அப்பேய்கள் அஞ்சாமல் அவன் கண்களைத் தோண்டி யுண்பன ஆயின; பேய்களின் முன்னைய வணக்கத்திற்கும் இன்றைய இகழ்விற்கும் இராவணனது நல்வினையுண்மையும் இன்மையும் காரணமாவதன்றிப் பேய்களின் அறிவு அறியாமைகள் காரணமாகா என்பதை விளக்கியவாறு. வெட்டுண்ட தலைகளின் கண்களைப் பேய் தோண்டியுண்ணும் இயல்பினது என்பதை: 'குருதியாடிய கூருகிர்க் கொடுவிரற், கண்டொட்டுண்ட கழிமுடைக் கருந்தலை, யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர,'' (திருமுருகாற்-53) என்றதால் அறியலாம். (163)

இச்செய்யுளின் பின், 52ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகிறது :—

10007(a) ஆன போதங் கரக்கனத் தேரொடும்
வான மீதெழ மாதலி தூண்டிட
ஞான நாயகன் றேரு மெழுந்துறப்
போன தண்டப் புறத்தமர் கோலினர்.

இராவணன் வாள் முதலிய படைகளை இராமன்மேல் வீசுதல்

10008. வாளும் வேலு முலக்கையும் வச்சிரக்
கோளுந் தண்டு மழுவெனுங் கூற்றமும்
தோளின் பத்திக டோறுஞ் சுமந்தன
மீளி மொய்ம்ப னுருமென வீசினன்.

வாளும், வேலும், உலக்கையும் வச்சிரக்
கோளும், தண்டும் மழு எனும் கூற்றமும்
தோளின் பத்திகள் தோறும் சுமந்தன,
மீளி மொய்ம்பன் உரும் என வீசினன்.

பொ :— பெருவலி படைத்த இராவணன், தன் தோளின் வரிசைகள் தோறும் சுமந்திருந்தனவாகிய வாளும், வேலும், உலக்கையும், வலிமைமிக்க வச்சிரப்படையும், தண்டும், மழு என்கிற எமனும் ஆகிய படைகளை இராமன்மேல் இடிபோல் படுமாறு வீசினன்.

கு :— வச்சிரக்கோள் என்பதைக் கோளுடைய வச்சிரத்தை என மாற்றிக்கொள்க. கோள் — வலிமை. மழுவாயுதம் கூற்றுவன் போலக் கொலைமிகச் செய்யும் இயல்பு புலப்படுத்த 'மழுவெனுங் கூற்றமும்' என்று சிறப்பித்தார். பத்திகள் — வரிசைகள். பக்கத்திற்குப் பத்துத் தோள்கள் உள்ளமையால் 'தோளின் பத்திகள்' எனக் குறிப்பிட்டார். இருபது கைகளிலும் படைக்கலங்களைக் கொண்டிருந்தானாயினும் இதுகாறும் அவை பயன் படுத்தப்படாமையால் வெறுஞ்சுமையாகவே இருந்தன என்ற குறிப்புப் புலப்படச் 'சுமந்தன' என்றார். மீளி மொய்ம்பன் என்பது மீமிசைச் சொல். (164)

### இராமனும் இராவணன் உடம்பினை அம்பினால் புனைவேன் எனச் சினத்தல்

10009. அனைய சிந்திட வாண்டகை வீரனும்
வினைய மென்னினி யாதுகொல் வெல்லுமா
நினைவெ னென்ன நிசாசரன் மேனியைப்
புனைவென் வாளியி னாலெனப் பொங்கினான்.

அனைய சிந்திட, ஆண்தகை வீரனும்
'வினையம் என் இனி? யாதுகொல் வெல்லுமா?
நினைவென்' என்ன, 'நிசாசரன் மேனியைப்
புனைவென், வாளியினால்' எனப் பொங்கினான்.

பொ :—இராவணன் அப்படிப்பட்ட ஆயுதங்களை வீச, ஆண்தன்மை அமைந்த வீரனாகிய இராமனும் 'இவனை வெல்லும் வழி

யாது? இனிச் செய்யும் சூழ்ச்சி என்ன? சிந்திப்பேன்' என்று சிந்தித்துப்பின் 'இரவில் திரிபவனுகிய இவ்வரக்கன் மேனியை அம்பினுல் நிரப்புவேன்' என்று சினம் பொங்கினுன்.

கு :— வினையம்—சூழ்ச்சி. என்ன சிந்தித்து என ஒரு சொல் சொல்லெச்சமாக வருவிக்க. நிசாசரன்—இரவில் திரிவோன்; அரக்கன். புனைதல் இங்கு நிரப்புதலை உணர்த்தியது. பொங்குதல்—சினமிகுதல். (165)

*இராவணன் மேனியை அம்பினுல் மூடுதல் — 10010, 10011*

10010. மஞ்ச ரங்கிய மார்பினுந் தோளினும்
நஞ்ச ரங்கிய கண்ணினு நாவினும்
வஞ்சன் மேனியை வார்கணை யட்டிய
பஞ்ச ரம்மென லாம்வகை பண்ணினுன்.

மஞ்சு அரங்கிய மார்பினும் தோளினும்
நஞ்சு அரங்கிய கண்ணினும், நாவினும்,
வஞ்சன் மேனியை, வார்கணை அட்டிய
பஞ்சரம் எனலாம் வகை பண்ணினுன்.

பொ :—வஞ்சகனுகிய இராவணனது மேனியை, மேகத்தைத் தோற்கடித்த மார்பின்கண்ணும், தோளின்கண்ணும், நஞ்சினைத் தோற்கடிக்கும் கண்ணினிடத்தும் நாவினிடத்தும்(எய்து) நீண்ட அம்புகளைச் சேர்த்துவைக்கும் அம்பருத்தூணி என்று சொல்லும் படி செய்தான் இராமன்.

கு :— மஞ்சு — மேகம். அரங்குதல் — வருத்துதல்; வருத்துதலாவது மேகத்தினும் மிகக் கரியநிறம் பெற்றிருத்தல். 'நஞ்சரங்கிய' என்பதற்கும் அங்ஙனமே கொள்க. பஞ்சரம்—கூடு. கணை அட்டிய கூடு என்றது அம்பருத்தூணியை. ''பொய்யாத தவ முனிபின் போயருளித் தாடகைதன், மெய்யாவ நிகரென்ன வெஞ்சரத்தா லழுத்திய பின்'' (வில்லிபாரதம் பன்னிரண்டாம் போர்ச்-1) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (166)

10011. வாய்நி றைந்தன கண்கண் மறைந்தன
மீநி றங்களி னெங்கு மிடைந்தன
தோய்வு றுங்கணை செம்புன ேரய்ந்தில
போய்நி றைந்தன வண்டப் புறமெலாம்.

வாய் நிறைந்தன, கண்கள் மறைந்தன,
மீ நிறங்களின் எங்கும் மிடைந்தன,
தோய்வுறும் கணை, செம்புனல் தோய்ந்தில,
போய்நிறைந்தன, அண்டப் புறம்எலாம்.

பொ :— (இராமன் வீசிய அ்புகள் இராவணனது) வாய்களில் நிறைந்தனவும் கண்களில் மறைந்தனவும் மேலிடத்தும் மார்பிலும் எவ்விடத்தும் நெருங்கினவுமாய் பதிந்த அம்புகள், அவன் இரத்தத்தில் தோயாமல் அவனுடம்பை மட்டும் துளைத்துவிட்டு அண்டத்தின் அப்புறத்தில் போய் நிறைந்தன.

கு :— மீ என்றது தலை முதலிய இடங்களை. நிறம்—மார்பு. அரக்கன் இரத்தத்தில் தோய்தல் குற்றம் என்று எண்ணித் துளைத்துவிட்டு விரைந்து அண்டத்தின் அப்புறம் சென்றன என்றவாறு. செம்புனல் தோய்கிலாமை அம்பின் விரைவைப் புலப்படுத்தியது. (167)

அம்புகள் துளைத்தமையால் இராவணன் சோர்தல்

10012. மயிரின் காறொறும் வார்கணை மாரிபுக்
குயிருந் தீர வுருவின வோடலும்
செயிருஞ் சீற்றமு நிற்கத் திறறிரிந்
தயர்வு தோன்றத் துளங்கி யழுங்கினுன்.

மயிரின் கால்தொறும் வார்கணை மாரி புக்கு,
உயிரும் தீர உருவின ஓடலும்,
செயிரும் சீற்றமும் நிற்க, திறல் திரிந்து,
அயர்வு தோன்ற, துளங்கி அழுங்கினுன்.

பொ :— இராவணன், தன் மயிர்க்கால்கள் தோறும் இராமன் எய்த நீண்ட அம்புமழை புகுந்து உயிரும் நீங்கும்படி ஊடுருவி ஓடுதலும், — முன்னைப் பகைமையும் கோபமும் நிற்க, வலிமை திரிந்து தளர்வு தோன்ற நிலை கலங்கி வருந்தினுன்.

கு :— செயிர் — பகைமை. திறல் — வலிமை. அயர்வு— தளர்வு. துளங்குதல்—நிலை கலங்குதல். அழுங்குதல்—வருந்து தல். இதனால் இராவணனது சோர்வு புலப்படுத்தியவாறு. (168)

இராவணன் செயலற்று இருத்தல்

10013. வாரி நீர்நின் றெதிர்மக ரம்படச்
சோரி சோர வுணர்வு துளங்கினன்
தேரின் மேலிருந் தான்பண்டு தேவர்தம்
ஊரின் மேலும் பவனி யுலாவுவான்.

வாரி நீர்நின்று எதிர்மகரம் படச்
சோரி சோர, உணர்வு துளங்கினன்;
தேரின்மேல் இருந்தான் — பண்டு தேவர்தம்
ஊரின் மேலும் பவனி உலாவுவான்.

பொ :— முன்பெல்லாம் தேவர்களின் ஊரின் மேலும் உலா வருபவனாகிய இராவணன், (இப்போது) கடல் நீரிலிருந்து எதிர்த்து வருகின்ற மகர மீன்கள் இறந்துபடுமாறு (தன்னுடம் பிலிருந்து வேகமாக) இரத்தம் பீறிட்டு ஒழுகுதலால் உணர்வு கலங்கப் பெற்றவனாய்த் தேரின்மேல் செயலற்றுக் கிடந்தான்.

கு :— தனக்குப் பகைவராகிய தேவர்களின் ஊரிலும் பவனி வரும் துணிவுடைய இராவணன் இப்போது தன்னூரிலும் பவனி வர இயலாதவனாய்த் தேரில் சோர்ந்து கிடந்தான் என்றவாறு. கடலில் இரத்த வெள்ளம் கலக்கும்போது அவ் வெள்ளத்தில் எதிர்த்து நீந்திவந்த மகரமீன்கள், இராவணனுடம்பில் அம்புகள் பட்டமையால் அப் புண்களிலிருந்து பீறிட்டுவரும் இரத்தத்தின் வேகத்தையும் வெப்பத்தையும் தாங்கமுடியாமல் இறந்துபட்டன என்க. பெரிய மகர மீன்களும் இறந்துபடுமாறு இராவணனுடம் பிலிருந்து இரத்தம் வேகமாகப்பெருகியது என அதன்வேகத்தை யுணர்த்தியவாறு. (169)

இராவணனது பாகன் தேரைப் பின்னுல் விலக்குதல்

10014. ஆர்த்துக் கொண்டெழுந்
தும்பர்க ளாடினுர்
வேர்த்துத் தீவினை
வெம்பி விழுந்தது
போர்த்துப் போய்ந்தன
னென்று பொலன்கொடேர்
பேர்த்துச் சாரதி
போயினன் பின்றுவான்.

ஆர்த்துக் கொண்டு எழுந்து
உம்பர்கள் ஆடினுர்;
வேர்த்துத் தீவினை
வெம்பி விழுந்தது;
'போர்த்துப்பு ஓய்ந்தனன்'
என்று, பொலன் கொள்தேர்
பேர்த்துச் சாரதி
போயினன், பின்றுவான்.

பொ :— (அதைக் கண்டு) தேவர்கள் எழுந்து ஆரவாரித்துக்கொண்டு கூத்தாடினுர்கள்; தீவினை (தனக்குச் சார்பின்மை கண்டு துன்பத்தால்) வேர்த்து வெதும்பி விழுந்தது; 'இராவணன் போர்செய்யும் ஆற்றல் குறைந்தான்' என்று, சாரதி பின்வாங்குபவனுய்ப் பொன்மயமான தேரைத் திருப்பிக்கொண்டு சென்றுன்.

கு :— அறச்சார்புடைய இராமனது வெற்றியையும் பாவச் சார்புடைய இராவணனது தோல்வியையும் கண்டு தேவர்கள் மகிழ்ச்சியால் ஆடுகின்றுர்கள்; இராவணனது சோர்வு கண்டு வருந்துதற்குரிய அரக்கர்கள் எல்லாம் முன்னரே மாய்ந்து விட்டமையால், தீவினையே தனக்குச் சார்பின்றி வேர்த்து வெதும்பி வீழ்வதாயிற்று என்க. இராவணனது தோல்வியால், அறம் வென்றது; பாவம் தோற்றது என்பது பெறப்பட்டதோடு அது தோற்குங்கால் தன்னைக்கண்டு இரங்குவார் பிறரின்றித் தானே தனக்கு இரங்கும் நிலை ஏற்பட்டது என்பதும் பெறப்

பட்டவாறு அறியலாம். போர்த்துப்பு—போர்செய்யும் ஆற்றல். ஓய்தல் — குறைதல்; உள்ளதனுணுக்கம். 'ஆண்டொழில் துணிவோய்ந்தனே' (179) என்பதும் காண்க. இராவணன் போர்செய்யும் ஆற்றல் குறைந்தானுதலின் இராமன் அம்பினுல் அவன் உயிர் நீங்குதல் உறுதி என்பதை அறிந்த சாரதி தேரைப் பின்னுல் விலக்கி, அவ்விராவணனைக் காப்பாற்ற எண்ணினுன் என்க. ''ஓய்வும் ஊற்றமும் நோக்கி உயிர்ப் பொறைச், சாய்வு நீக்குதல் சாரதி தன்மைத்தால்'' (180) எனப் பின் சாரதி கூறுவதும் காணலாம். (170)

இராவணன் தளர்ச்சிகண்டு இரங்கி இராமன் அம்பு விடாமை

10015. கய்து றந்த படையினன் கண்ணகன்
மெய்து றந்த வுணர்வினன் வீழ்தலும்
எய்தி றந்தவிர்ந் தானிமை யோர்களை
உயதி றந்துணிந் தானற முன்னுவான்.

கய் துறந்த படையினன் கண் அகல்
மெய்துறந்த உணர்வினன், வீழ்தலும்,
எய்திறம் தவிர்ந்தான் — இமையோர்களை
உய்திறம் துணிந்தான், அறம் உன்னுவான்.

பொ :—தேவர்களை உய்வுறச் செய்யும் திறத்தில் துணிவு கொண்டு நின்றவனுகிய இராமன், -(இராவணன்) கையை விட்டு நழுவிய படைக்கலமுடையவனுகவும் இடமகன்ற உடம்பை விட்டு நீங்கிய உணர்வுடையவனுகவும் வீழ்ந்த அளவில், போர் அறத்தை நினைப்பவனுய் அவன்மேல் அம்பு எய்யும் தன்மையை விடுத்தான்.

கு :—இராவணனைக் கொன்றன்றித் தேவர்களை உய்விக்க இயலாமை அறிந்திருந்தும் இராமன் போரறம் நினைந்து அம்பு எய்யாது விடுத்தான் என இராமனது அறப்பற்றினைப் புலப் படுத்தியவாறு. படைதுறந்த கையினன், உணர்வு துறந்த மெய்யினன், என்பதை மாற்றிக் கூறியவாறு. 'அருங்கேடன்' (குறள் 210) என்புழிப்போல. அறம் என்றது, இங்கு அழிகுநர் புறக்கொடை யயில்வாளோச்சாக் கழிதறுகண்மை யாகிய போரறத்தை. (171)

### சோர்வுற்றபோழ்தே அவனுயிரை வாங்குக என மாதலி கூறுதல்

10016. தேறி னுற்பின்னை யாதுஞ் செயற்கரி
தூறு தானுற்ற போழ்தே உயிர்தனை
நூறு வாயென மாதலி நூக்கினுன்
ஏறு சேவக னும்மிதி யம்பினுன்.

'தேறினுல், பின்னை யாதும் செயற்கு அரிது;
ஊறு தான் உற்ற போழ்தே உயிர்தனை
நூறுவாய்' என, மாதலி நூக்கினுன்;
ஏறு சேவகனும், இது இயம்பினுன்.

பொ:— மாதலி, (இராமனை நோக்கி) 'இந்த இராவணன் சோர்வு நீங்கித் தேறினுல் பிறகு இவனை ஏதும் செய்ய இயலாது; இவன்தான் தளர்வுற்றபோது இவன் உயிரை மாய்ப்பாயாக' என்று கூறித் தூண்டினுனுக, மேலோங்கிய வீரமுடைய இராமனும் இதைச் சொன்னுன்.

கு:— ஊறு என்றது இங்குத் தளர்ந்து மூர்ச்சையுற்ற நிலையை. இவன் மூர்ச்சை தெளிந்தால் யாதும் செய்தல் அரிது ஆதலின், மூர்ச்சையுற்றுள்ளபோதே கொல்க என்பது மாதலியின் வேண்டுகோள். நூறுதல் — அழித்தல். நூக்குதல் — தூண்டுதல். ஏறு சேவகன் என்றது, இராவணனைக் காட்டிலும் உயர்ந்த வீரமுடைய இராமனை. பகைவரோடு போர்செய்யுங்கால் மேலும் மேலும் வளர்ச்சி பெறும் வீரமுடையவன் எனலும் ஆம். ''மிக்கன விராமற்கு வலியும் வீரமும்'' (146) என முன்னர்க் கூறியதும் நினைக. இராமன் இயம்பியதை வருஞ் செய்யுளிற் காணலாம். (172)

### படை துறந்து சோர்ந்தவன்மேல் படை துரத்தல் நீதியன்று எனல்

10017. படைது றந்து மயங்கிய பண்பினேன்
இடைபெ றுந்துயர் பார்த்திக னீதியின்
நடைது றந்துயிர் கோடலு நன்மையோ
கடைது றந்தது போரென் கருத்தென்ருன்.

'படைதுறந்து, மயங்கிய பண்பினேன்
இடை பெருந்துயர் பார்த்து, இகல்நீதியின்
நடைதுறந்து, உயிர்கோடலும் நன்மையோ?
கடைதுறந்தது போர், என்கருத்து' என்ருன்.

பொ:—'தன் கையில்உள்ள படையையும் துறந்து, மூர்ச்சையுற்றுள்ள தன்மையனுகிய இராவணன், நடுவே பெற்றுள்ள துயரத்தைப் பார்த்தும், போர்அறத்தின் ஒழுக்கத்தைத் துறந்து, அவன் உயிரைக் கவர்தலும் நல்லது ஆகுமோ? என் உள்ளம் இத்தகைய போரைக் கடையானது எனத் துறந்துவிட்டது' என்று கூறினுன்.

கு:—இகல் நீதி என்றது, போர் அறத்தை; ஆவது, படையெடாதவன்மேல் படை தொடாமை. நடை — ஒழுக்கம். கருத்து என்றது உள்ளத்தை. என் உள்ளம் இத்தகைய போரைக் கடையெனத் துறந்தது என மாற்றி வேண்டும் சொல் வருவித்து முடிக்க. (173)

இராவணன் தெளிதல்

10018. கூவி ரஞ்செறி பொற்கொடித் தேரொடும்
போவ ரஞ்சின ரன்னதொர் போழ்தினின்
ஏவ ரஞ்சலி யாதவ ரெண்ணுடைத்
தேவ ரஞ்சவி ராவணன் றேறினுன்.

கூவிரம் செறி பொன் கொடித் தேரொடும்
போவர் அஞ்சினர் அன்னது ஓர் போழ்தினின்,
ஏவர் அஞ்சலியாதவர்? எண்ணுடைத்
தேவர் அஞ்ச, இராவணன் தேறினுன்.

பொ:— கொடுஞ்சி பொருந்தியதும் பொற்கொடியோடு கூடினதுமான தேரோடும் செல்லுபவராய் அச்சம்கொண்ட அரக்கருள் அப்போது, (இராமனது அருட்குணத்திற்காக) அவனை அஞ்சலி செய்யாதவர் யாவர்? (எல்லோரும் அஞ்சலித்தனர்) பின்பு வென்ருேம் என்ற எண்ணம் கொண்ட தேவர்கள் அஞ்சுமாறு இராவணன் மூர்ச்சை தெளிந்தான்.

கு :—கூவிரம் என்பது தேர்த்தட்டின் எதிரில் நடப்பட்டதாய் வீரர் பற்றிக்கொள்ளுதற்குரிய தாமரை மொட்டுப்போன்ற ஓர் உறுப்பு. பகையாயுள்ள அரக்கர் அனைவரும் இராமனது அருட் குணத்தைக் கண்டு அஞ்சலிசெய்தனர் என்பார், 'ஏவரஞ்சலி யாதவர்' என்றார். எண் — எண்ணம். முன் இராவணன் மூர்ச்சையுற்றது கண்டு வெற்றிபெற்றதாக எண்ணங்கொண்டு மகிழ்ந்தாடிய தேவர்கள் அவன் தெளிந்ததுகண்டு அஞ்சுவாரா யினர் என்க. (174)

## தெளிவுற்ற இராவணன் இராமனைத் தன்முன் காணாமையால் சினந்து நோக்குதல்

10019. உறக்க நீங்கி யுணர்ச்சியுற் றானென
மறக்கண் வஞ்ச னிராமனை வான்றிசைச்
சிறக்குந் தேரொடுங் கண்டிலன் சீற்றத்தீப்
பிறக்க நோக்கினன் பின்னுற நோக்கினான்.

உறக்கம் நீங்கி உணர்ச்சி உற்றான் என,
மறக்கண் வஞ்சன், இராமனை வான்திசைச்
சிறக்கும் தேரொடும் கண்டிலன்; சீற்றத்தீப்
பிறக்க நோக்கினன், பின்னுற நோக்கினான்.

பொ :— கொடுமை தோன்றும் கண்களையுடைய வஞ்சகனாகிய இராவணன், உறக்கத்தில்நின்றும் நீங்கி உணர்ச்சி பெற்றவனைப்போல, (மூர்ச்சை தெளிந்தவனாய் எழுந்து) சிறந்த திசையில் இராமனைச் சிறப்புடைய தேரோடும் காணாதவனாய்க் கோபத்தீ பிறக்கச் சுற்றிலும் நோக்கினவன், தனக்குப் பின் புறம் இராமன் இருக்கப் பார்த்தான்.

கு :— உணர்ச்சியுற்றானென 'எழுந்து' என ஒரு சொல் வருவிக்க. மூர்ச்சையடைவதற்குமுன் தன் எதிரில் இராமனைத் தேரொடுங் கண்ட இராவணன், மூர்ச்சை தெளிந்ததும் அங்கே இராமனைக் காணாமையால் கோபத்தீத் தோன்றச் சுற்றிலும் நோக்குகின்றவன், தன் பின்புறத்தில் அவ் இராமன் இருப்பதைப் பார்த்தான் என்க. சாரதி தன் தேரைப் பின்னுக்குத் திருப்பி விட்டமையால் இராவணன் தன் பின்பக்கத்தில் இராமனைக் காணவேண்டியவனானான். (175)

சாரதியை இராவணன் சலித்துக்கொள்ளுதல்

10020. தேர்தி ரித்தனை தேவருங் காணவே
வீர விற்கை யிராமற்கு வெண்ணகை
பேர வுய்த்தனை யேபிழைத் தாயெனுச்
சார திப்பெய ரோனைச் சலிப்புறு.

'தேர்திரித்தனை, தேவரும் காணவே;
வீர விற்கை இராமற்கு வெண்நகை
பேர உய்த்தனையே; பிழைத்தாய்' எனு,
சாரதிப் பெயரோனைச் சலிப்புறு.

பொ :—சாரதி என்னும் பெயருடையவனை நோக்கி, '(நீ,) தேவரும் காணத் தேரைத் திருப்பினையாய் வீரத்தையுடைய வில்லை ஏந்திய இராமனுக்கு இகழ்ச்சிச் சிரிப்புத் தோன்றச் செய்துவிட்டாயே ; எனவே, நீ பிழை செய்தாய்' என வெறுத்து.

கு :— 'உருத்தெழா' என வருஞ்செய்யுளோடு தொடரும். சாரதிப் பெயரோனை நோக்கி, தேவரும் காணவே தேர் திரித்தனையாய் இராமற்கு வெண்ணகை பேர வுய்த்தனையே, பிழை செய்தாய் எனுச் சலிப்புறு என இயையும். தன் பகைவர்களாயுள்ள தேவர் காணத் தேரைப் பின்வாங்கத் திருப்பியதால் தேவர்களின் இகழ்ச்சியையும் வீரனுகிய இராமனது எள்ளல் சிரிப்பையும் பெறச் செய்துவிட்டான் பாகன் என இராவணன் அப்பாகனை வெறுத்தவாறு. சாரதிக்குரிய வீர உணர்ச்சியின்றி, அப்பெயரை மட்டும் தாங்கியுள்ளவன் என்ற குறிப்புத் தோன்றச் 'சாரதிப் பெயரோனை' என்ருர். சலித்தல் — வெறுத்தல். பிழைத்தல் — பிழை செய்தல். (176)

10021. தஞ்ச மென்றுனை யெண்ணத் தருதலால்
வஞ்ச நீபெருஞ் செல்வத்து வைகினை
அஞ்சி னேனெனச் செய்தனை யாதலான்
உஞ்சி போதிகொ லாமென் றுருத்தெழா.

'தஞ்சம் என்று உனைஎண்ணத் தருதலால்
வஞ்ச! நீபெருஞ் செல்வத்து வைகினை;
"அஞ்சினேன்'' எனச் செய்தனை ஆதலான்
உஞ்சிபோதி கொலாம்! 'என்று உருத்து எழா.

பொ :— வஞ்சகனே! எனக்குத் துணையென்று உனை உலகம் எண்ணுமாறு பாகனும் நிலையை யான் நினக்குத் தருதலால், நீ பெரிய செல்வத்துள் தங்கினாய்; (அவ்வாறு செல்வத்துள் தங்க வைத்த என்னை) 'அஞ்சினேன்' எனப் பிறர் எண்ணுமாறு செய்துவிட்டாய் ஆதலால், என்னிடத்திருந்து நீ தப்பிவிடு வாயோ! என்று கோபித்தெழுந்து,

கு :—தஞ்சம் — துணை. எனக்குத் தஞ்சம் நீ என்று உலகம் எண்ணுமாறு உன்னை எனக்குப் பாகன் ஆக்கினமையால் நீ பெருஞ்செல்வம் பெற்றாய்; அத்தகைய உதவியைச் செய்த என்னை, 'அஞ்சினேன்' எனப் பிறர் கருதுமாறு தேரைத் திருப்பித் தாழ்வுண்டாக்கினை. ஆதலின், இனி என்னிடத்திலிருந்து உய்ந்து போகவியலாது என இராவணன் சீற்றமடைந்தான் என்க. உனக்குப் பெருமைதந்த என்னைச் சிறுமையடையச் செய்தாய் எனச் சாரதியைக் குற்றம் கூறியவாறு. உருத்தல் — கோபித்தல். (177)

*சாரதி பணிந்து தேரைத் திருப்பிய காரணத்தை இராவணனுக்குத் தெரிவித்தல் — 10022—10024*

10022. வாள்க டைக்கணித் தோச்சலும் வந்தவன்
தாள்க டைக்கணி யாத்தலை தாழ்வுரு
மூள்க டைக்கடுந் தீயின் முனிவொழி
கோள்க டைக்கணித் தென்றவன் கூறுவான்.

வாள் கடைக்கணித்து
ஓச்சலும், வந்து, அவன்
தாள் கடைக்கணியாத்
தலை தாழ்வுரு,
'மூள் கடைக்கடுந்
தீயின் முனிவு ஒழி,
கோள் கடைக்கணித்து'
என்று அவன் கூறுவான்.

பொ :—(இராவணன்) வாளைக் கடைக்கண்ணால் பார்த்து (எடுத்துச்) சாரதியை வெட்ட ஓங்கிய அளவில், அச்சாரதி அணுகி வந்து, (இராவணன்) பாதங்களைப் பார்த்துத் தலையைத் தாழ்த்தி வணங்கிக்கொண்டு, 'என் எண்ணத்தை அருளொடு ஆராய்ந்து, கடையூழியில் மூண்டெழுகின்ற கடுமையான ஊழித் தீயைப்போல வெகுள்வதை விடுவாயாக' என்று வேண்டி, அவன் மேலும் கூறுவானானான்.

கு :—கோள் — கொள்கை ; கருத்து. தேரைத் திருப்பியதன் கருத்தை உணர்ந்தால் இராவணன் பெருங்கோபம் தணிவான் என்ற நம்பிக்கையால், 'கோள் கடைக்கணித்து, முனிவு ஒழி' என்றான். கடைக்கணித்தல் என்ற சொல் நோக்குதல், ஆராய் தல் என்ற இரு பொருளில் இங்கு ஆளப்பட்டுளது. மூளுதல் — வளர்தல். (178)

*10023.* ஆண்டொ ழிற்றுணி வோய்ந்தனை யாங்கிறை
ஈண்ட நிற்றிடி னையனே நின்னுயிர்
மாண்ட திக்கண மென்றிடர் மாற்றுவான்
மீண்ட தித்தொழி லெம்வினை மெய்ம்மையால்.

ஆண்தொழில் துணிவு
ஓய்ந்தனை; ஆங்கு இறை
ஈண்ட நிற்றிடின்,
ஐயனே! நின் உயிர்
மாண்டது இக்கணம்
என்று, இடர் மாற்றுவான்,
மீண்டது இத்தொழில், எம்
வினை; மெய்ம்மையால்.

பொ :— 'ஐயனே,— ஆண்மையோடு செய்யும் போர்த் தொழிலில் துணிவு குறைந்து மூர்ச்சித்தாய் ; அங்குச் சிறிது போழ்து பொருந்தி நின்றால், நினது உயிர் இக்கணமே மாண்டது ஆகும்' என்று உணர்ந்து நின் இடரை மாற்றுவதற்காகத் திரும்பியதாகிய இத்தொழில் பாகராகிய எமக்குரிய கடமை யாயது ; இது உண்மையாகும்.

கு :— ஆண்டொழில் என்றது போர்த்தொழிலை. ஓய்தல் — குறைதல். 'போர்த் துப்பு ஓய்ந்தனன்' என (170) முன்னும்

வந்துளது காண்க. இறை என்றது சிறு பொழுதினை. 'மாண்டது இக்கணம்' என்றது விரைவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாகக் கூறப்பட்டது. இடர் — துன்பம்; ஆவது இறத்தல் துன்பம். நின் துன்பத்தைத் தவிர்க்கும்பொருட்டுத் தேரைத் திருப்பிய தாகிய இத்தொழில் எமக்குரிய கடப்பாடு; இது உண்மையாகும் எனப் பாகன் தன் கடமையை வற்புறுத்தியவாறு. 'எம் வினை' என்றது பாகர் இனத்தையே உளப்படுத்திப் பாகர் கடமை இது என்பது புலப்படுத்தியவாறு. வினை இங்குக் கடமை என்னும் பொருளில் வந்தது. வஞ்சகத்தால் செய்யப்பட்டது அன்று என்பான் 'மெய்ம்மையால்' என்றான். பாகர் கடமை இன்னது என்பதை வரும் செய்யுளிலும் வற்புறுத்தல் காணலாம். (179)

10024. ஓய்வு மூற்றமு நோக்கி யுயிர்ப்பொறைச்
சாய்வு நீக்குதல் சாரதி தன்மையால்
மாய்வு நிச்சயம் வந்துழி வாளினால்
காய்வு தக்கதன் றூற்கடை காண்டியால்.

'ஓய்வும் ஊற்றமும் நோக்கி, உயிர்ப்பொறைச்
சாய்வு நீக்குதல் சாரதி தன்மையால்,
மாய்வு நிச்சயம் வந்துழி; வாளினால்
காய்வு தக்கது அன்றால்; கடைகாண்டியால்.

பொ:— (தேர்மேல் உள்ள தலைவரின்) ஓய்ந்துள்ள நிலையையும் வலிமைபெற்றுள்ள நிலையையும் நோக்கியறிந்து, (பகைவரால்) இறப்பு நிச்சயம் என்ற நிலை வந்தபோது, தம் தலைவரின் உயிரைத் தாங்கியுள்ள உடம்பின் வீழ்ச்சியை எப்படியேனும் நீக்கிக் காத்தல் சாரதியின் இயல்பாகும்; (என் கடமையைச் செய்த என்னை) நின் வாளினால் கொல்லுதல் தகுதியான செயலன்று; முடிவாகச் சிந்தித்துப் பார்ப்பாயாக.

கு:— ஓய்வு வலிமைபழிதல். ஊற்றம் வலிமை மிகுதல். உயிர்ப்பொறை என்றது, உயிரைத்தாங்கியுள்ள உடம்பை' சாய்வு என்றது உடம்பின் அழிவை. நீக்குதல் என்றது அவ் அழிவுவராமற் காத்தல். சாரதி தன்மை இது என்பதைப் புலப்படுத்தியவாறு. காய்வு — கொல்லுதல். தகுதி — நடுவு நிலைமை. என் கடமையைச் செய்த என்னை வாளினால் கொல்லுதல் நடுவுநிலையான செயலன்று என்பான் 'காய்வு

தக்கதன்ருல்' என்ருன். கடைகாணுதல் — தீர ஆலோசித்தல். நோக்கி, மாய்வு நிச்சயம் வந்துழிச்சாய்வு நீக்குதல் சாரதி தன்மை என மாறிக்கூட்டுக. (180)

## இராவணன் இரக்கங்கொண்டு தேரைத் திருப்பச்செய்து இராமனைக் காணுதல்

10025. என்றி றைஞ்சலு மெண்ணி யிரங்கினுன்
வென்றி யந்தடந் தேரினை மீட்கெனச்
சென்றெ திர்ந்தது தேருமத் தேர்மிசை
நின்ற வஞ்ச னிராமனை நேர்வுரு.

என்று இறைஞ்சலும், எண்ணி இரங்கினுன்,
'வென்றி அம்தடந் தேரினை மீட்க!' என,
சென்று எதிர்ந்தது, தேரும்; அத் தேர்மிசை
நின்ற வஞ்சன் இராமனை நேர்வுரு.

பொ:—என்று சொல்லிப் பாகன் வணங்குதலும், இராவணன் (பாகன் நிலையை) எண்ணிப்பார்த்து அவன்மேல் இரக்கம் கொண்டவனுய், 'வெற்றிக்குரிய அழகிய தேரினைத் திருப்புவாயாக' எனச்சொல்லத் தேரும் போய் இராமனை எதிர்ந்தது; அத்தேர்மேல் நின்ற வஞ்சனுகிய இராவணன் இராமனை நேரே எதிர்ந்து.

கு:—'நேர்வுரு' என்ற எச்சம் வருஞ்செய்யுளில் 'வெங்கணை கோடியின் கோடிகள் தூற்றினுன்' என்ற வினையோடு முடியும். இரங்கினுனுய் மீட்க என முற்றெச்சமாக்கி முடிக்க. இராவணனது கட்டளையை உடனே பாகன் நிறைவேற்றினுன் என்பார் 'சென்றெதிர்ந்தது தேரும்' என்ருர். முன் நேர்முகமாகக் காணுமல் பின்புறமாகப்பார்த்த இராவணன் தேரைத் திருப்பியவுடன் நேர்முகமாகக் கண்டு என்பார். 'நேர்வுரு' என்ருர். (181)

## இராவணன் இராமன்மேல் அம்புகளைச் சொரிதல்

10026. கூற்றின் வெங்கணை கோடியின் கோடிகள்
தூற்றி னுன்வலி மும்மடி தோற்றினுன்
வேற்றோர் வாளரக் கன்னென வெம்மையால்
ஆற்றி னுன்செருக் கண்டவ ரஞ்சினுர்.

கூற்றின் வெங்கணை கோடியின் கோடிகள்
தூற்றினன், வலி மும்மடி தோற்றினன்;
வேற்று ஓர் வாள் அரக்கன் என, வெம்மையால்
ஆற்றினன் செரு; கண்டவர் அஞ்சினர்.

பொ:—கூற்றுவனைக் காட்டிலும் கொடுமையுடைய அம்புகளைக் கோடிக்கணக்காக இராமன்மேல் சொரிந்தான். வலிமை முன்னையினும் மும்மடங்கு தோன்றப்பெற்றவனாகிய அவ்விராவணன், 'இவன் வேறோர் கொடிய அரக்கனோ' எனப்பிறர் கருதுமாறு கொடுமையோடு போரைச் செய்தான்; போரைக்கண்டவர்கள் அஞ்சினார்கள்.

கு:—கூற்றின் என்புழி 'இன்' உருபு உறழ்ச்சிப்பொருளது. சொரிந்த அம்புகளின் மிகுதி தோன்றக் 'கோடியின் கோடிகள்' என்றார். மூர்ச்சை தெளிந்த இராவணன் முன்னையினும் மும்மடங்கு வலிமைபெற்றுப் போர்செய்வதைக்கண்டோர், 'இவன் முன்னைய இராவணன் அல்லன்; வேறோர் கொடிய அரக்கன் போலும்' என்று எண்ணுவர் என்றவாறு. (182)

இச்செய்யுளின்பின் 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன :—

10026 (a) அஞ்ச லின்றி யுமர்க்களத் தாரியன்
வெஞ்சி னத்தொடு வேலரக் கன்பொர
எஞ்ச வேழு திவச மிராப்பகல்
விஞ்சு போர்செயும் வேலையில் வீரனும்.

10026 (b) ஆய கண்டங் கமலன் விடுசரம்
சாய கங்களை நூறி தலைத்தொகை
போய கன்றிடச் செய்தலும் போக்கிலாத்
தீய வன்சினந் திம்மொழி செப்புவான்.

10026 (c) துறக்கு மென்பதை யெண்ணிச் சிரத்தொகை,
அறுக்கு முன்முளைத் துய்குவ தன்றியே
மறுக்கு மென்று மனக்கொளல் மாநிலத்,
திறக்கு மானிடர் போன்றென் னுயிரும் நீ.

10026 (d) ஈதரக்கன் புகல விராமனும்,
தீதிருக்குறும் சிந்தையினீதெளிந்து
ஓதுரைக் கெதி ருற்றென் பகழியிப்
போதுரைக்கு மெனக்கொடு பொங்கினுன்.

*இராவணனது வில்லே முறிக்க இராமன் அம்பு எய்தல்*

10027. எல்லுண் டாகின் னெருப்புமுண் டென்னுமிச்
சொல்லுண் டாமது போலிவன் ரேளிடை
வில்லுண் டாகின் வெலற்கரி தாமெனுச்
செல்லுண் டாலன்ன தோர்கணே சிந்தினுன்.

'"எல் உண்டாகின்
நெருப்பும் உண்டு" என்னும் இச்
சொல் உண்டாம்; அது
போல், இவன் தோளிடை
வில் உண்டாகின்
வெலற்கு அரிது ஆம்' எனு,
செல் உண்டால் அன்னது
ஓர் கணே சிந்தினுன்.

பொ:— 'ஒளி சிறிது இருக்கும் வரை நெருப்பும் உண்டு' என்கின்ற இப்பழஞ் சொல் உண்டு; அதுபோல, இவன் தோளில் வில் இருக்கும்வரை வெல்லுதற்கு அரிய வலிமை இவனுக்கு உண்டாம் என்று கருதி (அவ்வில்லே முறிக்க) இடியையுட் கொண்டாற்போன்ற ஒரு கொடிய கணேயை (இராமன், இராவணன்மேல்) எய்தான்.

கு:— எல் — ஒளி. நெருப்பை அணேக்க முயலுபவர் சிறிது ஒளி காணப்படினும் அங்கு நெருப்பு இருப்பதாகக் கருதுவது இயல்பு; இராவணனேக் கொல்ல நினேக்கும் இராமனும் இராவணன் கையில் வில் இருக்கும் வரையில் அவன் வலிமை குன்ருன் என எண்ணி, அவ்வில்லே முறிக்கக் கணேயை ஏவினுன் என்றவாறு. ஒளிக்கும் நெருப்பிற்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதுபோல, இராவணன் வில்லுக்கும் அவன் வலிமைக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கின்றது என்றவாறு.

வெலற்கு அரிது என்றது, வெல்லுதற்கு அரிய வலிமை இருக்கும் என்றவாறு. உவமையோடு பொருந்திக் காண்க. செல் — இடி. (183)

இராவணன் வில் இரு கூறுதல்

10028. நார ணன்படை நாயக னுய்ப்புருப்
பார ணங்கினைத் தாங்குறும் பல்வகை
வார ணங்களை வென்றவன் வார்சிலை
ஆர ணங்கை யிருதுணி யாக்கினான்.

நாரணன் படை நாயகன் உய்ப்புரு,
பார் அணங்கினைத் தாங்குறும் பல்வகை
வாரணங்களை வென்றவன் வார்சிலை
ஆர் அணங்கை இருதுணி ஆக்கினான்.

பொ :— தலைவனாகிய இராமன் நாரணன்கணையைச் செலுத்தி, பூமிதேவியைத் தாங்கி நிற்கும் பலவகைத் திசை யானைகளை வென்றவனாகிய இராவணனது நீண்டவில் என்கின்ற வெலற்கரிய அச்சுறுத்தும் தெய்வத்தை இரு துண்டு ஆக்கினான்.

கு :— மேல் ஓர்கணை என்றது இதுவென விளங்க, இங்கு 'நாரணன் படை' எனப்புலப்படுத்தியவாறு. உய்த்தல் — செலுத்துதல். பாரணங்கு என்றது நிலமகளை. எட்டுத்திசை யானைகளும் பூமியைத் தாங்குவதாகக் கூறுதல் புராணமரபு. இராவணன் திசையானைகளின் மருப்பொசித்த பெருவீரம் உடையனாயினும் இராமனது அம்பால் முறியும் தன் வில்லைக் காக்க இயலாதவனானான் என இராமனது ஆற்றலைப் புலப் படுத்த இங்கு 'வாரணங்களை வென்றவன்' என இராவணனைக் குறிப்பிட்டவாறு. இராவணன் வில்லை ஆரணங்கு என உருவகஞ் செய்தது, வருத்தும் இயல்பு கருதி. அணங்கு — வருத்தும் தெய்வம். (184)

*வில் முறிந்தமை கண்டு தேவர்கள் மகிழ்ந்து குதித்தல்*

10029. அயன்ப டைத்தவில் லாயிரம் பேரினான்
வியன்ப டைக்கலத் தாலற்று வீழ்தலும்
உயர்ந் துயர்ந்து குதித்தன ரும்பரார்
பயன்ப டைத்தனம் பஃறவத் தாலென்றார்.

அயன் படைத்தவில், ஆயிரம் பேரினன்
வியன் படைக்கலத்தால் அற்று வீழ்தலும்,
உயர்ந்து உயர்ந்து குதித்தனர் உம்பரார்,
பயன் படைத்தனம் பல்தவத்தால் என்றார்.

பொ :—(இராவணன் கையிலிருந்த) பிரமன் படைத்துக் கொடுத்த வில், ஆயிரம் பேர்களையுடைய நாராயணனது பெருமை மிக்க அம்பினால் அற்றுக் கீழ்வீழ்ந்த அளவில், தேவர்கள் 'நாம் செய்த பலவகைத் தவங்களால் ஆய பயனைப் பெற்று விட்டோம்' என்று சொல்லிக்கொண்டு மகிழ்ந்து உயர்ந்து உயர்ந்து குதித்துக் கூத்தாடினர்.

கு :—இராவணனது வில் முறிந்தது தம் தவப்பயனே எனத் தேவர்கள் எண்ணி மகிழ்ந்தனர் என்றவாறு. ஆயிரம் பேரினன் என்றது இங்கு நாராயணனை. 'நம் பல்தவத்தால் பயன் படைத்தனம்' என்றாராய் உம்பரார் உயர்ந்து உயர்ந்து குதித்தனர் என்க. தேவர்களின் இம்மகிழ்ச்சியால் இராவணனது வில்லின் கடுமை நன்கு புலப்படுவதாகும். (185)

இராவணன் எடுத்த வேறு விற்களை எல்லாம் இராமன் நுறுக்குதல்

10030. மாறி மாறி வரிசிலை வாங்கினான்
ஆறு நூறினெ டையிரு நூறவை
வேறு வேறு திசையுற வெங்கணை
நூறி நூறி யிராம னுறுக்கினான்.

மாறி மாறி வரிசிலை வாங்கினான்
ஆறு நூறினெடு ஐ-இரு நூறு அவை
வேறு வேறு திசை உற, வெங்கணை
நூறி நூறி, இராமன் நுறுக்கினான்.

பொ :—(இராவணன் தன்கையில் இருந்த வில் அற்றவுடன்) மாறிமாறி ஆறு நூறும் ஆயிரமும் ஆகிய கட்டமைந்த விற்களை எடுத்துக் கொண்டேயிருந்தான்; அவற்றை எல்லாம் இராமன் வெவ்வேறு திசையில் போய் அழியுமாறு கொடிய கணையால் அழித்து அழித்துப் பொடியாக்கினான்.

கு :— வெங்கணையால் நூறி என உருபு விரிக்க. நுறுக்குதல் — பொடியாக்குதல். நூறுதல் — அழித்தல். இராவணன் எடுத்த விற்களையெல்லாம் இராமன் அழித்தொழித்தான் என்றவாறு. (186)

இராமன்மேல் இருப்புலக்கை முதலியவற்றை வீசுதல்

10031. இருப்பு லக்கைநீ டண்டுவே லீட்டிவாள்
நெருப்பு லக்கவ ருநெடுங் கப்பணம்
திருப்பு லக்கவுய்த் தான்றிசை யானையின்
மருப்பு லக்க வழங்கிய மார்பினுன்.

இருப்பு உலக்கை, நீள்
தண்டு, வேல், ஈட்டி, வாள்,
நெருப்பு உலக்க வரும்
நெடுங் கப்பணம்,
திருப் புலக்க உய்த்தான் —
திசை யானையின்
மருப்பு உலக்க
வழங்கிய மார்பினுன்.

பொ :— திசையானைகளின் கொம்புகள் ஒடியுமாறு எதிர் கொடுத்த மார்பினையுடைய இராவணன், (இராமன் மார்பில் அமர்ந்துள்ள) திருவும் புலந்து நீங்குமாறு, இருப்புலக்கை, நீண்டதண்டு, வேல், ஈட்டி, வாள், நெருப்பும் தன் வெம்மை குறையும்படி வருகின்ற நெடிய கப்பணம் என்பவற்றை விசினுன்.

கு :— வில் முறிந்தமையால் விற்போரை விடுத்து இருப்புலக்கை முதலியவற்றை இராமன்மேல் இராவணன் வீசலானுன். கப்பணம் என்பது இரும்பினுற் செய்த நெருஞ்சிமுள். இராமன் மார்பில் இந்தப் படைகளை வீசியதால் அங்கிருக்கும் திருமகளும் வெறுத்து நீங்குவாள் என்றவாறு. (187)

## இராவணனைக் கொல்லுநெறி யாதென இராமன் ஆராய்தல் 10032, 10033

10032. அவைய னைத்து மறுத்தகன் வேலையிற்
குவைய னைத்து மெனக்குவித் தான்குறித்
திவைய னைத்து மிவனைவெல் லாவெனா
நவைய னைத்துந் துறந்தவ னாடினான்.

அவை அனைத்தும்
அறுத்து, அகன் வேலையில்
குவை அனைத்தும்
எனக் குவித்தான், குறித்து,
'இவை அனைத்தும்
இவனை வெல்லா' எனா,
நவை அனைத்தும்
துறந்தவன் நாடினான்.

பொ :— (இராவணன் வீசிய இருப்புலக்கை முதலிய) அப் படைகள் எல்லாவற்றையும் (தன் அம்புகளால்) அறுத்து, அவை யாவும் விரிந்த கடலில் திட்டு எனக்கருதுமாறு குவித்த வனாய், குற்றம் யாவும் நீங்கினவனான இராமன், இவையாவும் இவ்விராவணனை வெல்லா என்று நினைத்து (அவனைக் கொல்லும் நெறி யாதென) ஆராயலானான்.

கு :— வேலையில் குவை என்றது கடலில் மணல் குவிந்து கிடக்கும் திட்டுகளை. எனாக் குறித்து நாடினான், என இயையும், குறித்தல் — நினைத்தல். நவை — குற்றம். இவை என்றது. இராமன்பால் உள்ள பிறபடைகளைச் சுட்டிக் கூறியது. நாடு தல் — ஆராய்தல். (188)

10033. கண்ணி னுண்மணி யூடு கழிந்தன
எண்ணி னுண்மண லிற்பல வெங்கணை
புண்ணி னுண்ணுழைந் தோடிய புந்தியோர்
எண்ணி னுண்ணிய வென்செயற் பாற்றெனா.

'கண்ணினுள் மணியூடு கழிந்தன,
எண்ணின் நுண்மணலின் பல வெங்கணை;
புண்ணினுள் நுழைந்து ஓடிய, புந்தியோர்
எண்ணின் நுண்ணிய;என் செயற்பாற்று' எனு,

பொ — எண்ணிப்பார்க்கு மிடத்து நுண்ணிய மணலினும் பலவாகிய வெவ்விய கணைகள் இவன் கண்ணினுள் மணி வழியே கழிந்து சென்றன; புத்தியுடையோர்தம் எண்ணத்தினும் நுண்ணிய முனையையுடைய கணைகள் இவன் புண்ணினுள் நுழைந்து ஓடின; (இவனோ இறக்கவில்லை) இனி என் செய்வது என்று,

கு:— எனு, நான்முகன் பாரவெங்கணை வாங்கி என வருஞ் செய்யுளில் முடியும். எண்ணுதல்—கருதுதல். எண் — அறிவு. கழித்தனவாகிய வெங்கணைகள் மணலிற்பல எனவும் ஓடிய வெங் கணைகள் எண்ணின் நுண்ணிய எனவும் இயைத்துக் கூறலும் ஆம். கூர்மையும் பன்மையும் உடைய கணைகளாலும் இவன் இறந்திலனே 'என்செயற்பாற்று' என இராமன் எண்ணு வானுனன். (189)

அயன்கணை எய்யத் துணிதல்

10034. நார ணன்றிரு வுந்தியி னுன்முகன்
பார வெம்படை வாங்கியிப் பாதகன்
மாரி னெய்வெனென் றெண்ணி வலித்தனன்
ஆரி யன்னவ னுவி யகற்றுவான்.

'நாரணன் திருஉந்தியில் நான்முகன்
பார வெம்படை வாங்கி, இப்பாதகன்
மாரின் எய்வென்' என்று எண்ணி, வலித்தனன்,
ஆரியன், அவன் ஆவி அகற்றுவான்.

பொ:—இராமன், அவ்விராவணனது உயிரைப் போக்கும் பொருட்டு நாராயணனது திருவுந்திக்கமலத்தில் தோன்றிய பிரமனது பெருமையுடைய கொடிய அம்பினை எடுத்து இந்தப் பாதகனுடைய மார்பில் எய்வேன் என்று எண்ணித் துணிந்தான்.

கு:—ஆரியன் என்றது உயர்ந்தோனுகிய இராமனை. மார்பு என்பது மார் என மருவிற்று. வலித்தல் — துணிதல். (190)

இராமன் பிரமாத்திரம் தொடுத்தல்

10035. முந்தி வந்துல கீன்ற முதற்பெயர்
அந்த ணன்படை வாங்கி யருச்சியாச்
சுந்த ரன்சிலை நாணிற் றொடுப்புரு
மந்த ரம்புரை தோளுற வாங்கினான்.

முந்தி வந்து உலகு ஈன்ற முதற் பெயர்
அந்தணன் படை வாங்கி அருச்சியா,
சுந்தரன் சிலை நாணில் தொடுப்புரு,
மந்தரம் புரை தோள்உற வாங்கினான்.

பொ :— முன்னே தோன்றி உலகத்தைப் படைத்த முதல்வன் என்று பெயர் பெற்ற பிரமனது கணையை எடுத்து அருச்சித்து அழகனாகிய இராமன், தன் வில் நாணில் தொடுத்து மந்தரமலை போன்ற தன் தோளில் பொருந்த நாணை இழுத்தான்.

கு :— முதல் தொழிலாகிய படைத்தல் தொழிலைச் செய்பவன் பிரமன் ஆகலின் ‘முதற்பெயர் அந்தணன்’ எனப்பட்டான். ‘தொடங்கற்கட் டோன்றிய முதியவன்’ (கலி — 2) எனப்பாலை பாடிய பெருங்கடுங்கோ பிரமனுக்குப் பெயர் கொடுத்திருப்பதும் இங்கு நினையலாம். வாங்குதல் — இழுத்தல். (191)

பிரமாத்திரம் விடுதல்

10036. புரஞ்சு டப்பண் டமைத்தது பொற்பணை
மரந்து ளைத்தது வாலியை மாய்த்துள
தரஞ்சு டச்சுட ரம்பதவ் வாற்றலான்
உரஞ்சு டச்சுட ரோன்மக னுந்தினான்.

புரம் சுடப் பண்டு அமைத்தது, பொன் பணை
மரம் துளைத்தது, வாலியை மாய்த்துளது
அரம் சுடச்சுடர் அம்பது அவ்வாற்றலான்
உரம் சுடச் சுடரோன்மகன் உந்தினான்.

பொ :—முப்புரத்தைச் சுடும்பொருட்டு முன்பு அமைத்ததும், அழகிய கிளைகளையுடைய மராமரங்களைத் தொளைத்ததும், வாலியைக் கொன்றதும் ஆகிய அரம் அராவுதலால் சுடர் வீசுகின்ற

அவ்அம்பினை அந்த வலிமைமிக்க இராவணனது மார்பில் சுடுமாறு சூரியகுலத்தோன்றலாகிய இராமன் செலுத்தினன்.

கு :— திரிபுரத்தை உருத்திரன் சிரிப்பினாலேயே எரித்தானாதலின், இங்குப் 'புரஞ்சுடப் பண்டு அமைத்தது' என்று கூறுவாராயினர். பொன் — அழகு. பணை — கிளை. பொற்பணை மரம் என்றது, மராமரங்களை. அரம் சுடுதலாவது தேய்த்தல். உந்துதல் — செலுத்துதல். குற்றியலுகரத்திற்குமுன் உடம்படு மெய் பெற்று 'வரஞ்சுட' என நின்றது. அம்பது என்புழிச் சுட்டினை மாற்றி அவ்வம்பு என இயைக்க. இனி, 'அது' பகுதிப்பொருள் விகுதி எனலும் ஆம். (192)

*அயன்கணை செல்லுதல் — 10037, 10038*

10037. காலும் வெங்கன லுங்கடை காண்கிலா
மாலுங் கொண்ட வடிக்கணை மாமுக
நாலுங் கொண்டு நடந்தது நான்முகன்
மூல மந்திரந் தன்னொடு மூட்டலால்.

காலும் வெங்கனலும் கடை காண்கிலா,
மாலும் கொண்ட வடிக்கணை, மாமுகம்
நாலும் கொண்டு நடந்தது, நான்முகன்
மூல மந்திரம் தன்னொடு மூட்டலால்.

பொ :— திருமாலின் அம்சமான இராமன் கையிற் கொண்ட, காற்றும் கொடிய நெருப்பும் முடிவுகாணமாட்டாத வேகமும் வெம்மையும் உடைய, கூரிய அம்பு, பிரமனுடைய மூலமந்திரத்தோடு அபிமந்திரித்து விட்டமையால் பெரிய முகங்கள் நான்கினைக்கொண்டு சென்றது.

:— மாலும் என்புழி உம்மை எதுகை நோக்கி வந்த அசை. காண்கிலாக் கணை என்க. நான்முகனுக்குரிய வித்தெழுத்தோடு கூடிய மூலமந்திரத்தான் அபிமந்திரித்து விட்டமையால் அக்கணையும் நான் முகமுடையதாய் இராவணன் மேற்சென்றது என்க. மூட்டுதல் — தொடுத்தல். (193)

10038. ஆழி மால்வரைக் கப்புறத் தப்புறம்
பாழி மால்கட லும்மொளி பாய்ந்ததால்
ஊழி ஞாயிறு மின்மினி யொப்புறும்
வாழி வெஞ்சுடர் பேரிருள் வாரவே.

ஆழி மால்வரைக்கு அப்புறத்து அப்புறம்
பாழி மால்கடலும் ஒளி பாய்ந்ததால்—
ஊழி ஞாயிறு மின்மினி ஒப்புறும்
வாழி வெஞ்சுடர் பேர் இருள் வாரவே.

பொ :— ஊழியிறுதியில் தோன்றும் சூரியன் மின்மினியை ஒத்துத் தோன்றுதற்குக் காரணமான அந்த அம்பின் வெவ்விய சுடர் பெரிய இருளைப் போக்கிக்கொண்டு செல்வதால், சக்கர வாளகிரிக்கு அப்புறத்திற்கும் அப்பால் உள்ள வலிய இருட்கடலி லும் அவ்வொளி பரவியது.

கு :— பிரமாத்திரத்தின் ஒளி மிகுதியால் ஊழிக்கடையில் தோன்றும் சூரியனும் மின்மினிபோலக் காணப்படுவான் என்பார், 'ஊழி ஞாயிறு மின்மினி ஒப்புறும் வெஞ்சுடர்' என்றார். ஒப்புறு தற்குக் காரணமான வெஞ்சுடர் என்க. சக்கரவாளகிரிக்கு அப்பால் பெரும்புறக்கடலும் அதற்கப்பால் பேரிருளும் சூழ்ந்திருக் கும் என்பது புராணமரபு. இராமன் விடுத்த அயன்கணையின் பேரொளியால் சக்கரவாளகிரிக்கு அப்புறத் தப்புறமுள்ள இருளி லும் ஒளி பாய்ந்தது என அவ்வம்பின் ஒளி மிகுதியைப் புலப்படுத் தியவாறு. மால் கடல் என்றது இருட்செறிவை. ஒருஞான்றும் ஒளி பரவாத அந்தப் பேரிருளிலும் இராமனது அம்பினால் ஒளி பாய்ந்தது என்றவாறு. (194)

அயன்கணை இராவணன் மார்பில் புகுதல்

10039. அக்க ணத்தி னயன்படை யாண்டகை
சக்க ரப்படை யோடுந் தழீஇச்சென்று
புக்க தக்கொடி யோனுரம் பூமியும்
திக்க னைத்தும் விசும்புந் திரியவே.

அக்கணத்தின் அயன்படை ஆண்தகை
சக்கரப் படையோடும் தழீஇச் சென்று,
புக்கது, அக்கொடியோன் உரம்; பூமியும்
திக்கு அனைத்தும், விசும்பும் திரியவே.

பொ:— அந்தக் கணத்தில் அயன் கணை, இராமனுக்குரிய சக்கரப்படையோடும் சேர்ந்து சென்று, பூமியும் திசைகள் யாவும் விண்ணும் சுழல, அந்தக்கொடியவனுகிய இராவணனது மார்பில் புக்கது.

கு:— இராமன் திருமாலின் அமிசமாதலின் அவனுக்கு உரிய சக்கரப்படையும் அயன்கணையோடு சேர்ந்து சென்றதாகக் கூறினுர். இராவணன் மார்பில் அயன்கணை புகுந்தபோது பூமியும் விசும்பும் நிலைதிரிந்து சுழல்வது போலத் தோன்றின என்றவாறு. அயன்படை, விசும்பும் திரிய அக்கொடியோன் உரம் புக்கது என இயையும். இராவணனைக் கொல்வதில் சக்கரப்படைக்கும் பங்கிருந்தது என்பது புலப்படுத்த 'சக்கரப் படையோடுந் தழீஇச் சென்று' என்ருர். (195)

இராமன் அம்பு இராவணன் உயிரைப் பருகிப்போதல்

10040. முக்கோடி வாணளு முயன்றுடைய
★ பெருந்தவமு முதல்வன் முன்னுள்
எக்கோடி யாராலும் வெலப்படா
யெனக்கொடுத்த வரமு மேனைத்
திக்கோடு முலகனைத்துஞ் செருக்கடந்த
புயவலியுந் தின்று மார்பில்
புக்கோடி யுயிர்பருகிப் புறம்போயிற்
றிராகவன்றன் புனித வாளி.

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய
பெருந்தவமும், முதல்வன் முன்நாள்,
'எக்கோடியாராலும் வெலப்படாய்'
எனக்கொடுத்த வரமும், ஏனைத்

திக்கோடும் உலகு அனைத்தும் செருக்கடந்த
புயவலியும், தின்று, மார்பில்
புக்குஓடி உயிர்பருகி, புறம் போயிற்று,
இராகவன்தன் புனித வாளி.

பொ :— இராமனுடைய தூய்மையான அம்பு, இராவணனுடைய மூன்று கோடி வாழ்நாளையும் அவன் முயன்று செய்த பெருந்தவத்தையும், பிரமன், முன்பு 'தேவர்களில் எந்த வரிசையில் உள்ளவராலும் வெல்லப்படமாட்டாய்' எனக் கொடுத்திருந்த வரத்தையும், மற்றும் திக்கோடும் உலகு முழுமையும் போர்செய்து வென்ற தோள்வலியையும் தின்று, மார்பில் புகுந்து உடம்பெலாம் குடைந்து உயிரை உண்டுவிட்டுப் புறத்தே போயிற்று.

கு.— இராகவன் வாளி, வாணாளும் தவமும், வரமும், புயவலியும் தின்று, மார்பில் புக்கு, ஓடி, உயிர்பருகிப் புறம் போயிற்று ; என்க. மூன்றரை கோடி ஆயுள் இராவணனுக்குண்டு என்பதை : "அரைகடையுற்றமைவுற்ற முக்கோடி ஆயுவும்" (241) எனப்பின் வருவதால் அறியலாம். இங்கு அரையாக உள்ளதைச் சேர்க்காது முழு எண்ணாக வுள்ளதையே கூறியவாறாகக்கொள்க. முதல்வன் என்றது பிரமனை. தின்று என்பதற்குச் செயப்படுபொருளாக ஓதப்பட்ட வாணாள் முதலியன பருப்பொருள் அல்ல; தின்னுதற்கு ஏலாதன என்பதை ஓர்க. "உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டன போலக் கூறலு மரபே" (தொல் - பொருள் — 213) என்ற விதியால் இங்ஙனம் கூறலும் மரபு என்பதை அறியலாம். புனிதவாளி ஆதலின், அரக்கனுடைய புனிதமற்ற உடம்பில் தங்காது புறம் போயிற்று என்க. (196)

இராவணனைக் கொன்ற அம்பு நீராடி இராமனது
தூணியில் புகுதல்

10041. ஆர்க்கின்ற வானவரு மந்தணரு
முனிவர்களு மாசி கூறித்
தூர்க்கின்ற மலர்மாரி தொடரப்போய்ப்
பாற்கடலிற் றூய்நீ ராடித்
தேர்க்குன்ற விராவணன்றன் செழுங்குருதிப்
பெரும்பரவைத் திரைமேற் சென்று
கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப்புட்
டிலினடுவட் கரந்த தம்மா.

ஆர்க்கின்ற வானவரும், அந்தணரும்,
முனிவர்களும், ஆசிகூறித்
தூர்க்கின்ற மலர்மாரி தொடரப்போய்,
பாற்கடலில் தூய்நீர் ஆடி,
தேர்க்குன்ற இராவணன்தன் செழுங்குருதிப்
பெரும்பரவைத் திரைமேல் சென்று,
கார்க்குன்றம் அனையான்தன் கடுங்கணைப்
புட்டிலின் நடுவண் கரந்தது அம்மா.

பொ:— அவ்வாறு சென்ற அம்பு மகிழ்ச்சியால் ஆரவாரிக்கின்ற தேவர்களும், பூதேவராகிய அந்தணரும் முனிவர்களும் வாழ்த்துச் சொல்லிச் சொரிகின்ற மலர் மாரி தன்பின் தொடரச் சென்று, பாற்கடலில் தூய்மையாக மூழ்கி, குன்றம் போன்ற தேரையுடைய இராவணன்தன் செழுமையான இரத்தக் கடலின் அலைகளின்மேலே சென்று, கரியமலை போன்ற இராமனுடைய கடுமையான அம்புப்புட்டிலின் நடுவே தங்கிற்று.

கு:— முன்னைச் செய்யுளில் கூறிய 'புனிதவாளி' என்பதே இச்செய்யுட்கும் எழுவாயாக நின்றது. இராவணனது உடம்பில் புகுந்த வாலாமை நீங்கும் பொருட்டு நீராடிய அம்பு அத் தூய்மை கெடாதவாறு, இராவணனது உடம்பிலிருந்து பெருகிய இரத்தக் கடலின் அலைகள் தன்மேற்படாவண்ணம், அவ்வலைகளின் மேலே சென்று இராமனை அண்மி அவன்புட்டிலில் நுழைந்தது என்றவாறு. கரந்தது என்பது புகுந்தது என்னும் பொருளது. குன்றம் போன்ற தேர் என்பதையே தேர்க்குன்றம் என உருவக வாய்பாட்டாற் கூறியவாறு. (197)

இராவணன், தேரிலிருந்து தலைகீழாகத் தரையில் வீழ்தல்

10042. கார்நின்ற மழைநின்று முருமுதிர்வ
வெனத்திணிதோட் காட்டி னின்றும்
தார்நின்ற மலைநின்றும் பணிக்குலமு
மணிக்குலமுந் தகர்ந்து சிந்தப்

போர்நின்ற விழிநின்றும் பொறிநின்ற
புகையோடுங் குருதி பொங்கத்
தேர்நின்று நெடுநிலத்துச் சினமுகங்கீழ்ப்
படவிழுந்தான் சிகரம் போல்வான்.

கார்நின்ற மழைநின்றும் உரும் உதிர்வ
எனத் திணிதோட் காட்டின் நின்றும்
தார்நின்ற மலைநின்றும், பணிக்குலமும்
மணிக்குலமும் தகர்ந்து சிந்த,
போர்நின்ற விழிநின்றும் பொறிநின்ற
புகையோடும் குருதி பொங்க,
தேர்நின்று நெடுநிலத்துச் சினமுகம் கீழ்ப்பட
விழுந்தான், சிகரம்போல்வான்.

பொ:— கருநிறம் பொருந்திய மேகத்திலிருந்தும் இடிகள் உதிர்வனபோலத் திணிந்த தோள்களாகிய காட்டில் நின்றும், மாலை நிலைபெற்ற மலைபோன்ற மார்பில் நின்றும் ஆபரணத் தொகுதியும், மணிகளின் கூட்டமும் உடைந்து சிந்தவும், போரின் தன்மை நிலைபெற்ற கண்களில் நின்று நெருப்புப்பொறிகள் நிலைபெற்ற சினப் புகையோடும் இரத்தம் பொங்கவும், மலைச் சிகரம் போன்றவனாகிய இராவணன் தேரிலிருந்து நெடிய நிலத்தில் சினமிக்க முகம் கீழ்ப்படுமாறு வீழ்ந்தான்.

கு:—இராமனம்பு மார்பில் நுழைந்து சென்றவுடன் இராவணனுடம்பு தேரினின்று தரையில் விழுந்த நிலையை உணர்த்திய வாறு. கரிய இராவணனது தோள்களிலும் மார்பிலும் அணிந்திருந்த அணிகலன்களும் மணி மாலைகளும் தகர்ந்து வீழ்ந்த தோற்றம், கரிய மேகத்திலிருந்து இடிகள் வீழ்வனபோலத் தோன்றின என்றவாறு. ஒளிமிக்க அணிகளும் மணிகளும் நெருப்புருவான இடிபோலத் தோன்றின. தார் நின்ற என்ற குறிப்பால் மலை என்றது மலைபோன்ற மார்பினையே என்பது தெளியலாம். இராவணனது மலைச்சிகரம் போன்ற உடம்பு தரையில் பட்ட வேகத்தால் அவ்வுடம்பில் அணிந்திருந்த அணிகளும் மணிகளும் உடைந்து சிந்தின என்க. இராவணனது விழி எப்போதும் வீரப் பார்வையோடு விளங்குவது ஆதலின் 'போர்

நின்ற விழி' என அவ்விழியிணைச் சிறப்பித்தார். விழியில் சினக் குறிப்பால் நெருப்புப்பொறியும் புகையும் இருத்தல் இயல்பு; இப் போது அவற்றோடு குருதியும் பொங்க விழுந்தான் என்க. சின முகம் என்றது சினக் குறிப்புள்ள முகம் என்றவாறு. (198)

இராவணன் உயிர் துறந்த முகங்கள் பொலிவுடன் தோன்றுதல்

10043. வெம்மடங்கல் வெகுண்டனைய சினமடங்க
மனமடங்க வினையம் வீயத்
தெம்மடங்கப் பொருதடக்கைச் செயலடங்க
மயலடங்க வாற்ற றேயத்
தம்மடங்கு முனிவரையுந் தலையடங்க
நிலையடங்கச் சாய்த்த நாளின்
மும்மடங்கு பொலிந்தனவம் முறைதுறந்தா
னுயிர்துறந்த முகங்க ளம்மா.

வெம்மடங்கல் வெகுண்டனைய சினம் அடங்க,
மனம் அடங்க, வினையம் வீய,
தெம் அடங்கப் பொருதடக்கைச் செயல் அடங்க,
மயல்அடங்க, ஆற்றல்தேய,
தம் அடங்கு முனிவரையும் தலைஅடங்க,
நிலைஅடங்கச் சாய்த்த நாளின்
மும்மடங்கு பொலிந்தன, அம்முறை துறந்தான்
உயிர்துறந்த முகங்கள் அம்மா.

பொ :—கொடிய சிங்கம் கோபித்தாற்போன்ற பெரிய கோபம் அடங்கவும், மனம் அடங்கவும், வஞ்சக நினைவுகள் அழியவும், பகைவர் அடங்குமாறு போர் செய்கின்ற பெரிய கைகளின் செயல் அடங்கவும், (சீதை மேல் வைத்த காம) மயக்கம் அடங் கவும், வலிமை ஒடுங்கவும், அந்த அறநெறியைத் துறந்த வஞ்சகிய இராவணனின் உயிர்துறந்த முகங்கள், தம் ஐம்பொறி களும் அடங்கி நிற்கின்ற முனிவரையும், அவர்தலை மறைந்து நிற்கும்படியும், தவநிலையை விட்டு நிற்கும்படியும், வருத்திய நாளில் இருந்த பொலிவைக் காட்டிலும் மூன்று மடங்கு பொலிவு மிக்கிருந்தன.

கு :—மகிழ்ச்சியினுல் முகம் பொலிதல் இயல்பு. இராவணன், வாழ்ந்த நாளில் ஒரு பாவமும் அறியாத முனிவர்களை வருத்துவதில் பெருமகிழ்ச்சி யுடையவனுக இருந்தான்; முனிவர்கள் தலை மறைந்து தவநிலையை விட்டு ஒளியுமாறு இராவணன் செய்தபோது அவன் முகம் மிகவும் பொலிவுடையதாக இருக்கும்; அந்தப் பொலிவினும், அத்தகைய தவவேடந் தாங்கிய இராமன் என்னும் பெருவீரனுல் இறக்கும் வாய்ப்புக் கிடைத்தமையால் இப்போது மூன்றுமடங்கு பொலிவுமிக்குத் தோன்றின என்க. முனிவரை இராவணன் வருத்தினமை அகத்தியப் படலத்தில் அம்முனிவர் இராமனிடம், ''இரக்கமொன்ருெருபொருள் இலாத நெஞ்சினர் அரக்கர் என்றுளர் சிலர் அறத்தின் நீங்கினுர், நெருக்கவும் யாம்படர் நெறியலா நெறி, துரக்கவும் அருந்தவத் துறையுள் நீங்கினேம்'' (12) எனத் தொடங்கிக் கூறியவற்ருல் அறியலாம். நல்ல வீரனுல் மாள்வதை இராவணன் மகிழ்ச்சியுடன் எதிர்நோக்கி இருந்தான் என்பதை,''வாசவன் மாயன்மற்றை மலருளோன் மழுவாளங்கை ஈசனென்றினைய தன்மையிளிவரு மிவரா லன்றி, நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்'' (கும்பகருணன் வதைப்படலம்—31) என இராவணன் மாலியவானிடத்தில் கூறியது கொண்டு உணரலாம். தவத்தினரை வருத்திய மகிழ்ச்சியைவிட தவவேடத்தவரால் இறக்கப் பெற்றதற்கு இராவணன் பெரிதும் மகிழ்ச்சியடைந்தான் என்றவாறு. ''அம்புயந் தன்னினும் மும்மடங்கு பொலிந்த முகத்தினன்'' (சுந்தர — காட்சிப் — 19) என இராமனும் சொல்லப்படுதல் நினையலாம். தம்மடங்குதல் — தம் ஐம்பொறி யடங்க நிற்றல். நிலை என்றது தவ நிலையை. சாய்த்தலாவது முனிவரைத் தவஞ்செய்ய வொட்டாது துரத்தி வருத்துதல். முனிவரையும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. ஏனையோரைச் சாய்த்தல் சொல்ல வேண்டா என்றவாறு. (199)

இச்செய்யுளின் பின் 52-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது :—

10043 (a) மாறுபடத் தேவர்களை யேவல் கொளும்,
வாளரக்கன் மடிய வன்னுன்
ஏறிவரு பொற்றடந்தேர்ப் பாகனும்
பொன்றிடப், பண்டங் கிமையா முக்கண்

ஈறில் பரன்புகன்ற படி

கரந்திமைப்பின் ஏகியதால், இடையே கூடித்

தேறுதல் செய்துழல் போதில் தீவினை

மாய்த்திடப் போம் நல்வினையே போல.

விண்ணிலிருந்து

இராமன் இராவணன் மேனியை முற்றும் பார்த்தல்

10044. பூதலத்த தாக்குவா யாகவினிப்

பொலந்தேரை யென்ற போதின்

மாதலிப்பே ரவன்கடவ மண்டலத்தி

னப்பொழுதே வருத லோடும்

மீதலேத்த பெருந்தாரை விசும்பளப்பக்

கிடந்தான்றன் மேனி முற்றும்

காதலித்த வுருவாகி யறம் வளர்க்கும்

கண்ணுளன் றெரியக் கண்டான்.

'பூதலத்தது ஆக்குவாயாக, இனிப்

பொலந்தேரை' என்ற போதில்,

மாதலிப் பேரவன் கடவ, மண்தலத்தின்

அப்பொழுதே வருதலோடும்,

மீதுஅலேத்த பெருந்தாரை விசும்பு அளப்பக்

கிடந்தான்தன் மேனி முற்றும்

காதலித்த உருவாகி, அறம் வளர்க்கும்

கண்ணுளன் தெரியக் கண்டான்.

பொ :— (இராமன் சாரதியை நோக்கி) 'இனி, இப்பொன்னு லியன்ற தேரைப் பூமியில் இறக்குவாயாக' என்று கூறிய அளவில், மாதலி என்னும் பேரையுடைய சாரதி செலுத்த, அப்பொழுதே பூமியில் அத்தேர் வருதலோடும், தான் விரும்பிய உருவமுடைய னுகி இவ்வுலகில் அறத்தைவளர்க்கும் நோக்கமுடைய இராமன், உடம்பின் மீது அலேத்துக் கொண்டெழுந்த பெரிய இரத்ததாரை பிறிட்டு விண்ணேமுட்டக் கிடந்த இராவணன் மேனி முழுவதை யும் உற்றுப் பார்த்தான்.

கு :— தான் மேற்கொள்ளும் உருவங்கள் வேறுபடினும் அறம் வளர்த்தலாகிய நோக்கம் வேறுபடாமல் திருமால் அவதரித்து நடத்துகின்ருன் என்பார், 'காதலித்த உருவாகி அறம் வளர்க்கும் கண்ணுளன்' என இராமனைக் குறிப்பிட்டார். திருமால், ''பிறவாப் பிறப்பிலே பிறப்பித்தோரிலேயே'' (பரிபாடல்-3: 72) என்றபடி பல அவதாரங்களைச் செய்து அறத்தைக் காக்கும் இயல்பினன் என்பதை அவன் அவதாரக் கதைகளால் அறியலாம். பெருந்தாரை விசும்பளத்தலாவது, இராவணனுடம்பில், இராமன் அம்பு பாய்ந்த புண்வழி வெளிப்பட்ட பெரிய இரத்த தாரைகள் பீறிட்டெழும் வேகத்தால் விசும்பினை எட்டுதல். விசும்புள்ள அளவும் இரத்த தாரை செல்வது அவ்விசும்பை அளப்பது போலத் தோன்றும் ஆகலின் 'விசும்பளப்ப' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். கிடந்தான் தன் மேனிமுற்றும் கண்ணுளன் தெரியக் கண்டான் என இயையும். தேரின் மீதிருந்தே நோக்கியதை இப்பாடல் தெரிவிக்கின்றது. (200)

இராமன் தரையில் இறங்கி இராவணனுடம்பை நெருங்கி நோக்குதல்

10045. தேரினை நீ கொடுவிசும்பிற் செல்கென்ன
மாதலியைச் செலுத்திப் பின்னர்ப்
பாரிடமீ தினினணுகித் தம்பியொடும்
படைத்தலைவர் பலருஞ் சுற்றப்
போரிடைமீண் டொருவருக்கும் புறங்கொடாப்
போர்வீரன் பொருது வீழ்ந்த
சீரினையே மனமுவப்ப வுருமுற்றுந்
திருவாளன் றெரியக் கண்டான்.

'தேரினை நீகொடு விசும்பில் செல்க' என்ன
மாதலியைச் செலுத்தி, பின்னர்,
பாரிடம் மீதினின் அணுகி, தம்பியொடும்
படைத்தலைவர் பலரும் சுற்ற,
போரிடை மீண்டு ஒருவருக்கும் புறங்கொடாப்
போர்வீரன் பொருது வீழ்ந்த
சீரினையே மனம் உவப்ப, உருமுற்றும்
திருவாளன் தெரியக் கண்டான்.

பொ :— 'நீ தேரைக் கொண்டு விண்ணுலகிற்குச் செல்க' என்று கூறி, மாதலியை அனுப்பிவிட்டுப் பின்பு, பூமியில் சேர்ந்து தம்பியோடு சேனைத் தலைவர் பலரும் தன்னைச் சூழ்ந்து வர, இராமன், போரில் ஒருவருக்கும் மீண்டு புறம் கொடாத போர் வீரனாகிய இராவணன் போர் செய்து வீழ்ந்த சிறப்பினையே தன் மனம் மகிழ, அவன் உருவம் முழுவதையும் தெளிவாகப் பார்த்தான்.

கு :— மேலைச் செய்யுளில் தேரில் இருந்தபடி இராமன் இராவணனது மேனியைக் கண்டமை கூறி, இச்செய்யுளில் அவன் தரையில் இறங்கி நெருங்கி அவனது உடம்பைக் கண்டமை கூறியவாறு. மீண்டு புறங்கொடாவீரன் என்க. திருவாளன் என்றது திருமகள் மணாளனாகிய இராமனை. உருமுற்றும் தெரியக்கண்டான் என இயையும். (201)

கவிக்கூற்று :

இராவணன் மேனிமேல் வானரங்கள் ஏறி விளையாடுதல்

10046. புலைமேலுஞ் செலற்கொத்துப் பொதுநின்ற
செல்வத்தின் புன்மைத் தன்மை
நிலைமேலு மினியுண்டே நீர்மேலைக்
கோலமெனு நீர்மைத் தன்றே
தலைமேலுந் தோண்மேலுந் தடமுதுகின்
படர்புறத்துந் தாவி யேறி
மலைமேனின் றுடுவபோ லாடினவால்
வானரங்கள் வரம்பி லாத.

புலைமேலும் செலற்கு ஒத்துப் பொதுநின்ற
செல்வத்தின் புன்மைத் தன்மை
நிலைமேலும் இனிஉண்டே? 'நீர்மேலைக்
கோலம்' எனும் நீர்மைத்து அன்றே
தலைமேலும் தோள்மேலும் தடமுதுகின்
படர்புறத்தும் தாவி ஏறி,
மலைமேல் நின்று ஆடுவபோல் ஆடினவால்,
வானரங்கள், வரம்பு இலாத.

பொ :— (நல்லதன் மேற்செல்வதேயன்றிக்) கீழ்மையின் மேலும் செல்லுதற்கு ஒத்ததாய் அவையிரண்டற்குப் பொதுவாய் நின்ற செல்வத்தின் அற்பத்தன்மையான நிலை இதற்கு மேலும் (கீழ்ப்பட்டது) உண்டோ? நீர்மேல் இட்ட கோலம் என்று சொல்லுதற்குரிய தன்மையன்றோ? (இராவணனது) தலைமேலும் தோள் மேலும், பெரிய முதுகின் விரிந்த புறத்திலும், வரம்பு இல்லாத வானரங்கள் தாவி ஏறி, மலைமேல் நின்று ஆடுவன போல ஆடின.

கு :— எத்தகைய பெருந் தேவரும் நெருங்கற்கு அரியனுய்ச் செல்வமொடு வாழ்ந்த இராவணன் இப்போது சிறிய குரங்குகளும் தன்மேனிமேல் ஏறி விளையாடுதற்கு எளியனுகக் கிடந்தமை நோக்கின் செல்வம் நீர்மேலைக் கோலம் எனும் நீர்மைத்து என்பது தெளிவாகின்றது என்றவாறு. இது வேற்றுப்பொருள் வைப்பணி. செல்வத்தின் நிலை பேறில்லாத புல்லிய நிலைக்கு இராவணன் செல்வமிழந்து சீர்கெட்ட நிலையினும் கீழ்ப்பட்ட உதாரணம்வேறின்மையின்,'செல்வத்தின் புன்மைத்தன்மை நிலை இனி மேலும்உண்டே?' என்று வினவி விளக்கியவாறு. இராவணனது தலையும் தோளும் புறமும் மலை போன்றனவாதலின் அவற்றின்மேல் நின்று குரங்குகள் விளையாடுவது மலைமேல் நின்று ஆடுவபோன்று இருந்தது என்றவாறு. ''நீர்க்கோல வாழ்வை நச்சி'' (கும்பகருணன் வதைப் - 155) என்பது இங்கு நினைத்தற் குரியது. (202)

இராவணன் முதுகில் திசை யானையின் கொம்புகள்
வெளிப்பட்டிருப்பதை இராமன் பார்க்கின்ருன்

10047. தோடுழுத நறுந்தொடையற் ருெகையுழுத
கிளைவண்டின் சுழியற் ருெங்கல்
பாடுழுத படர்வெரிநின் பணியுழுத
வணிநிகர்ப்பப் பணைக்கை யானைக்
கோடுழுத நெடுந்தழும்பின் குவைதழுவி
யெழுமேகக் குழுவின் கோவைக்
காடுழுத கொழும்பிறையின் கறைகழன்று
கிடந்தனபோற் கிடக்கக் கண்டான்.

தோடு உழுத நறுந்தொடையல் தொகைஉழுத
கிளைவண்டின் சுழியல் தொங்கல்
பாடுஉழுத படர்வெரிநின் பணிஉழுத
அணிநிகர்ப்ப, பணைக்கை யானைக்
கோடுஉழுத நெடுந்தழும்பின் குவைதழுவி,
எழுமேகக் குழுவின் கோவைக்
காடுஉழுத கொழும்பிறையின் கறைகழன்று
கிடந்தனபோல் கிடக்கக் கண்டான்.

பொ — வண்டின் இனங்கள் கிண்டும் இதழ்கள் பொருந்திய நறுமணம் வீசும் மலர் மாலைகளின் தொகையும், சுழிந்து தோன்றும் தொங்கலும், பெருமை பொருந்திய படர்ந்த முதுகின் கண் வேலைப்பாடு அமைந்த அணிகலனை ஒத்துத் தோன்ற, பருத்த துதிக்கையினை யுடைய யானையின் கொம்புகள், குத்திய நெடிய தழும்பின் திரளைத் தழுவி, எழுவகையான மேகக் கூட்டத்தின் வரிசையான காட்டை உழுது சென்ற செழுமை யான பிறைச்சந்திரன் களங்கம் நீங்கிக் கிடந்தன போல் கிடப் பதை இராமன் பார்த்தான்.

கு:— வண்டின் கிளை உழுத தொடையல் தொகையும் தொங்கலும் வெரிநின் அணிநிகர்ப்ப என மாற்றி இயைக்க. தொடையல் — மாலை. சுழியல் தொங்கல் என்றது, மாலையின் நடுவே சுழிந்து தோன்றத் தொங்க விடும் தொங்கல். இப் போது காணப்படும் மாலையிலும் இந்த அமைப்பு இருத்தலைக் காணலாம். இராவணன் மார்பில் அழகுடன் அணிந்திருந்த மாலையும் அம்மாலையில் அமைந்த தொங்கலும் அவன் இறந்து வீழ்ந்த நிலையில் முதுகுப்புறத்தில் புரண்டு, வேலைப்பாடு அமைந்த அணிகலனைப்போலக் காட்சியளித்தன என்க. சொற்பின்வரு நிலை அணி பொருந்த இச்செய்யுளில் அடுத்து அடுத்து வந்துள்ள உழுத என்னும் வினைச்சொல், இடத்திற்கேற்ப வெவ்வேறு பொருளில் பயின்றுளது. யானைக்கோடு, கொழும்பிறை கறை கழன்று கிடந்தனபோல் கிடக்கக் கண்டான் என்க. பிறை யின் என்புழி 'இன்' தவிர்வழிச்சாரியை. யானைக்கோடுகள் பாய்ந்தமையால் உளதாய உடம்பின் தழும்புகளைத் தழுவினாற் போல் அவ் யானைக்கோடுகள் கிடந்த தோற்றம், மேகக்

குழுவினைச் சார்ந்து பிறைச்சந்திரன் கறை நீங்கிக் கிடந்தன போலத் தோன்றிற்று என்றவாறு. இராவணனது கரிய உடம்பில் யானைக்கோடுகள் பாய்ந்திருந்த தழும்பு மேகக் குழுவைப் போன்றது என்க. கறை — திங்களின் களங்கம். யானையின் கோடுகள் தூய வெண்ணிறமுடையன வாதலின் கறை நீங்கிய பிறை மதியை உவமித்தவாறு. (203)

*இராவணனது புறப்புண் வடுவைக் கண்ட இராமன் சிரித்தல்*

10048. தளிரியல் பொருட்டின் வந்த
★ சீற்றமுந் தருக்கி னோன்றன்
கிளரிய லுருவி னோடுங்
குழிப்புறக் கிளர்ந்து தோன்றும்
வளரியல் வடுவிற் செம்மைத்
தன்மையு மருவ நின்ற
முளரியங் கண்ணன் மூரன்
முறுவலன் மொழிவ தானான்.

தளிர் இயல் பொருட்டின் வந்த
சீற்றமும் தருக்கினோன் தன்
கிளர் இயல் உருவினோடும்
குழிப்புறக் கிளர்ந்து தோன்றும்
வளர்இயல் வடுவின் செம்மைத்
தன்மையும் மருவ நின்ற
முளரி அம்கண்ணன் மூரல்
முறுவலன், மொழிவதானான்.

பொ :— தளிர் போன்ற மெல்லியளாகிய சீதையின் பொருட்டால் வந்த கோபமும், செருக்குடையவனாகிய இராவணனது, ஓங்கிய இயல்பையுடைய வடிவத்தின் எல்லை வரையில் குழியுண்டாக விளங்கித் தோன்றுகின்ற வளர்ந்த தன்மையுடைய புறப்புண் வடுவின்காரணமாக (வந்த) சிவப்புத்தன்மையும், பொருந்த நின்ற செந்தாமரை மலர் போன்ற கண்ணையுடைய இராமன் (எள்ளுங் குறிப்புடைய) புன்சிரிப்புடையவனாய்ச் சொல்லலானான்.

கு:— சீற்றமும், செம்மைத் தன்மையும் மருவி நின்ற கண்ணன் என்க. இராமன் கண்களில் சீற்றக் குறிப்பும் அதன் காரணமாகத் தோன்றும் சிவப்பு நிறமும் பொருந்தி நிற்கச்சிரித்து மொழியலானுன். எனவே, அச்சிரிப்புக் கோபத்தில் தோன்றிய எள்ளல் சிரிப்பு என்பது பெறலாம். 'இப்பெரிய போரின் விளைவிற் கெல்லாம் சீதையன்றோ காரணம்' என்று எண்ணுங்கால் அவள் மேல் பொங்கியெழும் சீற்றக்குறிப்பு இராமன் கண்ணில் தோன்றுதல் இயல்பு. அதற்கு மேலும் அவள் காரணமாகத் தன்னுல் கொல்லப்பட்ட இராவணன் புறப்புண் பட்டவனுகக் காணப்படுகின்றமையால் அவனைக் கொன்ற தன்மேல் எழும் வெகுளியாலாகிய சிவப்பும் அவ்விராமன் கண்ணில் விரவியது என்றவாறு. இனி, வடுவின் செம்மைத்தன்மை என்று இயைத்து, இராவணனது முதுகில் உள்ள வடுவின் சிவப்பு நிறம் இராமன் கண்ணில் வந்து பொருந்திநின்றது என்று பொருள்கூறலும் ஆம். இராவணனுடைய புறப்புண் வடு இராமன் கண்களில் உருத்திக்கொண்டே இருந்தது என்றவாறு. (204)

*இராவணன் முதுகில்பட்ட பிழம்பு இருத்தலால் இவன் போரில் புறமுதுகிட்டவனே என இராமன் வருந்துதல்*
*10049 — 10051*

10049. வென்றியா னுலக மூன்று
மெய்ம்மையான் மேவி னுனும்
பொன்றினு னென்று தோளைப்
பொதுவற நோக்கும் பொற்பும்
குன்றியா சுற்ற தன்றே
யிவனெதிர் குறித்த போரில்
பின்றியான் முதுகிற் பட்ட
பிழம்புள தழும்பி னம்மா.

வென்றியான் உலகம் மூன்றும்
மெய்ம்மையால் மேவினுனும்
பொன்றினுன் என்று தோளைப்
பொதுஅற நோக்கும் பொற்பும்

குன்றி ஆசுற்றது அன்றே —
இவன் எதிர் குறித்த போரில்
பின்றியான் முதுகில்பட்ட
பிழம்புள தழும்பின் அம்மா.

பொ :— 'தன் வென்றியினுல் உலகம் மூன்றையும் (தன்னுட்சிக்குக் கீழாக) உண்மையாகப் பெற்றிருந்த இராவணனும் (என் அம்பினுல்) இறந்தான்' என்று என் தோளைச் சிறப்பாக நோக்குதற்குரிய வீரஅழகும், இங்கு இராவணன் முதுகில்பட்டுள்ள பிழம்பாக உள்ள தழும்பினுல், இவன் எதிராக நின்று குறித்துச்செய்த போரில் புறமுதுகு காட்டினவன் என்பது புலப்படுதலால், குறைந்து, குற்றமும் பொருந்துவதாயிற்று அன்ருே?

கு :— இராவணன் முதுகில் தழும்பு இல்லையாயின் இவனைக் கொன்ற என் தோளைச் சிறப்பாக நோக்கி மகிழலாம்; இவன் முதுகில் உள்ள தழும்பினுல் இவன் போரில் முதுகிட்டவன் என்பது பெறப்படுதலால், 'வென்றிமிக்க இராவணனும் இறந்தான்' என்று என் தோளைச் சிறப்பாக நோக்கிப் பாராட்டும் அழகும் குறைந்தது, புறப்புண்ணுடையனுய்ப் பிறர் எச்சிலாக நின்ற இராவணனைக் கொன்ருன் என்ற குற்றமும் வந்து சேர்ந்தது என்றவாறு. ''ஏறுண்டவர் நிகராயினும் பிறரெச்சிலென் றெறியான்'' (சீவக-மண்மகளிலம்-160) என்பதால் ஏறுண்டவரைப் பிறர் எச்சில் என்று இகழ்ந்து படைக்கலம் எறியாதிருப்பதே வீரர் மரபு என்பது புலனுதல் காண்க. இவன் முதுகில்பட்ட தழும்பினுல் போரில் பின்றியானே ஆதலின் இவன் பொன்றினுன் என்று தோளைப் பொதுவற நோக்கும் பொற்பும் குன்றி, ஆசும் உற்றது அன்றே என்க. மேவினுன் என்பது வினைப்பெயராய் இராவணனைச் சுட்டியது. தன் வென்றியினுல் மூவுலகையும் தன்னடிப்படுத்த இராவணனைப் பொன்றுவித்தோம் என்று மகிழ்தற்கு இடமில்லை. பிறர் இகழ்தற்கே இடமாயது என்று இராமன் ஏங்கியவாறு. (205)

10050. கார்த்தவீ ரியனென் பானுற்
கட்டுண்டா னென்னச் சொல்லும்
வார்த்தையுண் டதனைக் கேட்டு
நாணுறு மனத்தி னேற்குப்

போர்த்தலைப் புறகிட் டேற்ற
புண்ணுடைத் தழும்பு போலாம்
நேர்த்ததுங் காண லுற்ற
தீசனு ரிருக்கை நிற்க.

' "கார்த்த வீரியன் என்பானால்
கட்டுண்டான்" என்னச் சொல்லும்
வார்த்தை உண்டு; அதனைக் கேட்டு,
நாணுறு மனத்தி னேற்குப்
போர்த்தலை புறகிட்டு ஏற்ற
புண்ணுடைத் தழும்பு போலாம்
நேர்த்ததும் காணலுற்றது;
ஈசனார் இருக்கை நிற்க!

பொ:— (இராவணனை நசுக்கி அழச் செய்த) ஈசனாரின் இருப்பிடமாகிய கயிலைமலை இருக்கட்டும்! (தெய்வமலையால் நசுக்குண்டது தாழ்வன்று) கார்த்த வீரியன் என்பவனால் கட்டுண்டான் என்று சொல்லும் வார்த்தை உண்டு; அச்சொல்லைக் கேட்டு (பிறனால் கட்டுண்டவனைப் போரில் எதிர்க்கின்றோமே என்று) நாணப்படுகின்ற மனத்தையுடைய எனக்கு, அவன் போரில் புறமுதுகு காட்டி ஏற்ற புண்ணின் தழும்பும் அன்றோ (அவ்விராவணனை) நேர்பட்டதும் என் கண்களில் காண வாய்த்தது.!

கு:— கயிலை மலையால் நசுக்குண்டது இராவணன் வலிமைக்கு இழுக்குப் போலத் தோன்றினும், தெய்வ மலையால் நசுக்குண்டது அவன் வீரத்திற்குத் தாழ்வு இல்லை ஆதல் நினைந்து இராமன் 'ஈசனாரிருக்கை நிற்க' என்றான். தெய்வ மலையால் நசுக்குண்டதைத் தாழ்வாக எண்ணாது விடுத்தாலும் கார்த்த வீரியன் என்பவனால் கட்டுண்டமை இராவணனுக்கு இழுக்கே யாதலின், அது நினைந்து நாணுகின்ற மனத்தை யுடைய எனக்கு, அவன் புறப்புண் தழும்பும் அன்றோ என்கண் களில் காணவாய்த்தது என இராமன் இரங்கியவாறு. கட்டுண்டமைக்குரிய அடையாளம் இராவணன் உடம்பில் இல்லை என்பான் 'கட்டுண்டான் என்னச் சொல்லும் வார்த்தையுண்டு' என்றான். கயிலையின் கீழ் நசுக்குண்டும் கார்த்த வீரியனால்

கட்டுண்டும் வலிமை குறைந்ததைவிட, இராவணன், புறப்புண் தழும்பு பெற்றிருப்பது எனக்குமிக்க இழுக்காகும் என்றவாறு. (206)

இராமன், இராவணனை வென்ற வெற்றி சிறந்தது ஆகாது
என வீடணனை விளித்துக்கூறியது

10051. மாண்டொழிந் துலகி னிற்கும்
வயங்கிசை முயங்க மாட்டா
தூண்டொழி லுகந்து தெவ்வர்
முறுவலென் புகழை யுண்ண
பூண்டொழி லுடைய மார்பா
போர்ப்புறங் கொடுத்தோர்ப் போன்ற
ஆண்டொழி லோரிற் பெற்ற
வெற்றியு மவத்த மென்றான்.

'மாண்டு ஒழிந்து உலகில் நிற்கும்
வயங்கு இசை முயங்க மாட்டாது,
ஊண்தொழில் உகந்து, தெவ்வர்
முறுவல் என் புகழை உண்ண,
பூண்தொழில் உடைய மார்பா!
போர்ப்புறங் கொடுத்தோர்ப் போன்ற
ஆண்தொழிலோரின் பெற்ற
வெற்றியும் அவத்தம்' என்றான்.

பொ :— அணிகலன்களைப் பூணும் தொழிலையுடைய மார்பையுடையவனே! யான் இறந்துபட்டு, உலகத்து நிலைபேறு உடையதாக நிற்கின்ற விளக்கமுடைய புகழைத் தழுவ மாட்டாமல், (பின்னும் உயிர் வாழ்ந்து சுவைமிக்க உணவுகளை) உண்ணும் தொழிலையே விரும்பி, பகைவரின் எள்ளல் சிரிப்பு என் புகழை உண்ணும்படியாக, போரில் புறங்கொடுத்தோனாகிய ஆண்மைத் தொழிலையுடைய இராவணன்பால் யான் பெற்ற வெற்றியும் பொய்யானதே' என்றான்.

கு :— 'போரில் புறங் கொடுத்தோரைப்போன்று புறத்தே வடுவுடைய இராவணனை வெல்வதை விடுத்து யான் மாண்டு

ஒழிந்திருந்தால் நிலைபேறுடைய புகழ் எனக்குக் கிட்டியிருக்கும்; பகைவரின் எள்ளற் சிரிப்பு என் புகழையும் உண்ணுது. யான் மாண்டொழியாமல் ஊண்டொழிலை உவந்து இராவணனைக் கொன்றமையால் இவ்வுலகில் விளக்கமுடைய புகழும் யான் பெற வியலாது போயது; பகைவரின் எள்ளற் சிரிப்பும் என் பழைய புகழையும் உண்டுவிடும்' என்று இராமன் வீடணனை நோக்கிக் கூறி வருந்தியவாறு. பிறவீரரின் எச்சிலாய்ப் புறத்தே வடுவுற்றுள்ள இராவணனை வென்றது வீரவெற்றி யாகாது; பகைவர் இகழ்ந்து சிரிக்கத்தக்க இழிதகவுடை யதாகும் என்றவாறு. புறப்புண்ணையுடைய இராவணனை 'ஆண்டொழிலோர்' என இகழ்ச்சிக் குறிப்பால் கூறியவாறு. போன்ற என்றது ஒப்பில்போலி. புறங்கொடுத்தோ ராகிய ஆண் டொழிலோர் என்பதே பொருள். பிறரைக் கூறுவதுபோல் பொதுவகையாகக் கூறியிருப்பினும் ஆண்டொழிலோர் என்றது, இராவணனையே சுட்டி நின்றது. இசை முயங்க மாட்டாது, ஊண் தொழிலுகந்து பெற்ற வெற்றியும் அவத்தம் என இயையும். அவத்தம் — பொய். "வேண்டுவதன்றிது வீர! நோய் தெற மாண்டன னென்றது மாட்சிப்பாலதே" (கார்காலப் - 89) எனவும், "பொறியிலே னுடு மெய்யடையாது இனி விளிதல் நன்றரோ" (கார்காலப் - 92) எனவும், இராமன் மாண்டொழி வதில் கருத்துடையவனுகப் பேசியிருத்தல் இங்கு நினையத்தகும். (207)

வீடணன் வருந்திச் சொல்லத் தொடங்குதல்

10052. அவ்வுரை யுரைப்பக் கேட்ட
★ வீடண னருவிக் கண்ணன்
வெவ்வுயிர்ப் போடு நீண்ட
விம்மலன் வெதும்பு நெஞ்சன்
செவ்வியிற் ளுடர்ந்த வல்ல
செப்பலை செல்வ வென்னு
எவ்வுயிர்ப் பொறையு நல்கி
யிரங்கிநின் றினைய சொன்னுன்.

அவ்உரை உரைப்பக் கேட்ட
வீடணன், அருவிக் கண்ணன்,
வெவ்உயிர்ப்போடு நீண்ட
விம்மலன், வெதும்பும் நெஞ்சன்,

'செவ்வியின் தொடர்ந்த அல்ல
செப்பலை, செல்வ!' என்று,
எவ்உயிர்ப் பொறையும் நல்கி
இரங்கிநின்று, இனைய சொன்னான்.

பொ :— அச்சொல்லைச் சொல்லக் கேட்ட வீடணன், அருவி போன்று கண்ணீர் பெருகுகின்ற கண்ணையுடையவனாய், வெப்ப மான பெருமூச்சோடு நெடிய விம்முதலையுடையனாய், வெதும்பு கின்ற மனத்தையுடையவனாய், 'செல்வனே! செம்மையோடு பொருந்தாத சொற்களைச் சொல்லாதே' என்று தொடங்கி, எல்லாஉடம்புகளும் அன்புடையனவாய் இரக்கங்கொண்டு நிற்கு மாறு, இத்தன்மையான சொற்களைச் சொல்லலானான்.

கு :—'இராவணன் போரில் புறமுதுகுகாட்டி வடுப்பெற்றவன்' என்று இராமன் சொல்லியசொல் உண்மையன்று ஆகலின் 'செம் மையின் தொடர்ந்த அல்ல செப்பலை' என வீடணன் இராமனை வேண்டிக் கொள்ளலானான். இராவணனது வீரப்பெருமையை வீடணன் விளம்புங்கால், கேட்டிருந்தோர் அனைவருமே இராவ ணன்பால் அன்புடையராய் இரக்கங்காட்டி நின்றனர் என்பார், 'எவ்வுயிர்ப் பொறையு நல்கி யிரங்கி நின்று' என்றார். நிற்ப என் பது நின்று எனத் திரிந்து நின்றது. 'வானின்றுலகம் வழங்கி வருதலால்' (குறள்-11) என்புழிப்போல. உயிர்ப்பொறை என் றது உயிரைத் தாங்கி நிற்கும் உடம்புகளை. போர்க்களத்தில் உயிரோடிருப்பவர்கள் எல்லாம் இராவணன் பால் இரக்கங் கொண்டு நிற்குமாறு வீடணன் அவ்விராவணனது வீரப் பெரு மையை விளம்பினான் என்க. (208)

இராவணனது வீரம்

10053. ஆயிரந் தோளி னானும்
வாலியு மரிதி னைய
மேயின வென்றி விண்ணோர்
சாபத்தின் விளைந்த மெய்ம்மை
தாயினுந் தொழத்தக் காண்மேற்
றங்கிய காதற் றன்மை
நோயுநின் முனிவு மல்லால்
வெல்வரோ நுவலற் பாலார்.

'ஆயிரம் தோளினானும்,
வாலியும் அரிதின், ஐய!
மேயின வென்றி விண்ணோர்
சாபத்தின் விளைந்த; மெய்ம்மை;
தாயினும் தொழத்தக்காள்மேல்
தங்கிய காதல் — தன்மை
நோயும் நின்முனிவும் அல்லால்,
வெல்வரோ நுவலற்பாலார்?

பொ :— ஐயனே! ஆயிரம் தோள்களையுடைய கார்த்தவீரியனும், வாலியும் அரிதாகப்பெற்ற வெற்றி தேவர்களின் சாபத்தினால் விளைந்தவை; இது உண்மையாகும்; தாயைத் தொழுவதினும் அன்பாகத் தொழத்தக்க சீதையின்மேல் (இராவணனுக்குப்) பொருந்தியிருந்த காதல் தன்மையான நோயும் நின் செற்றமும் அல்லாமல் சிறப்பித்துச்சொல்லப்படும் வீரர்கள் யாரேனும் அவனை வெல்வார்களோ? (வெல்லார்).

கு :— ஆயிரம் தோளினான் என்றது கார்த்தவீரியனை. கட்டுண்டமை கூறியதனால் வாலியின் வாலினால் கட்டுண்டநிகழ்ச்சியையும் நினைந்து அதையும் சேர்த்து இங்கு விளக்கியவாறு. மேல் இராமனே 'ஈசனார் இருக்கை நிற்க' எனத் தெய்வச் சார்புடையதை விலக்கினமையால் கார்த்தவீரியனாலும் வாலியாலும் இராவணன் கட்டுண்டதும் விண்ணவர் சாபத்தினால் ஆயினமையின் அதை ஒருதோல்வியாகக் கூறலாகாது என்றவாறு. தாயாக நினைந்து தொழத்தக்க சீதையைக்கண்டு இராவணன்கொண்ட தவறான காதல் நோய் அவன் வலிமையைக் குறைத்துவிட்டது; அதற்குமேல் பெருவீரனாகிய நின் கோபம் அவனை வென்றது. நின்னையன்றி மற்றைய வீரர் எவரும் இராவணனை வெல்வியலாது என்றவாறு. ''நாலுதோணந்திதான் நவின்றசாபத்தால், கூலவான் குரங்கினாற் குறுகுங் கோளது, வாலிபாற் கண்டனம்'' (மந்திரப்-80) என்று முன் கூறியதாலும் அறிவனாணையால் மனிசர்பால் கொற்றங் கொள்ளாமையால் ஆயிரந் தோளவற் காற்றல் தோற்றதாகக் கூறியதாலும் இங்கு விண்ணோர் சாபத்தின் விளைந்ததாகக் கூறினான்போலும். (209)

## இராவணன் முதுகில் வடு இருந்தமைக்குக் காரணம் கூறுதல் 10054 — 10057

10054. நாடுள தனையு மோடி
நண்ணலார்க் காண்கி லாமல்
பீடுள குன்றம் போலும்
பெருந்திசை யெல்லே யானைக்
கோடுள தனையும் புக்குக்
கொடும்புறத் தழுந்து புண்ணின்
பாடுள தன்றித் தெவ்வர்
படைக்கலம் பட்டென் செய்யும்.

'நாடு உளதனையும் ஓடி
நண்ணலார்க் காண்கிலாமல்,
பீடுஉள குன்றம் போலும்
பெருந்திசை எல்லே யானைக்
கோடுஉள தனையும் புக்குக்
கொடும்புறத்து அழுந்து புண்ணின்
பாடுஉளது அன்றி, தெவ்வர்
படைக்கலம்பட்டு என் செய்யும்?

பொ :— (போர் செய்யும் விருப்பத்தால்) உலகத்தில் நாடு உள்ள அளவும் சென்று (தேடியும் தன்னோடு போர் செய்யும்) பகைவரைக் காண்கிலாமையால், பெரிய திசைகளின் எல்லேயில் (காவல் செய்கின்ற) பெருமையுடைய மலேயைப் போலும் யானே களின் (கொம்புகளால் தன் மார்பிற் குத்தச் செய்த போது அக்) கொம்புகளின் நீளம் உள்ளவரையில் (மார்பில்) புகுந்து, வளேந்த முதுகில் அழுந்தியதாலாய புண்ணின் வடு உள்ளது; அதுவன் றிப் பகைவர்களின் படைக்கலம்பட்டு அவ்வுடம்பை என்ன செய்யும்?

கு :— பெருந்திசை யெல்லேயானே, குன்றம்போலும் யானே எனத் தனித்தனி இயையும். இராவணன் மார்பில் திசை யானே களின் கொம்பு எவ்வளவுநீளமிருக்குமோ அவ்வளவும் புகுந்தமை யால், அக்கொம்புகளின்முனே முதுகுவரையிலும் சென்று பொருந் தியது. அதனுலாகிய புண்ணின் வடுவே இப்போது முதுகில்

தோன்றுகின்றது என்றவாறு. புண்ணின்பாடு என்றது வடுவினை. புண்ணான இடம் ஆறி வடுவாதல் இயல்பு. வயிரம் போன்று உறுதியான உடம்பு ஆகலின், அவ்வுடம்பில் பகைவர் படைக் கலம்பட்டுப் புண் உண்டாக்க வியலாது என்பான், 'தெவ்வர் படைக்கலம் பட்டு என் செய்யும்?' என்றான். (210)

10055. அப்பணை யனைத்து மார்புக்
கணியெனக் கிடந்த வீரக்
கைப்பணை முழங்க முன்னா
ளமரிடைக் கிடைத்த போதுன்
துப்பணை வயிரவாளி விசையினுங்
காலின் றோன்றல்
வெப்பணை குத்தினாலே வெரிநிடைப்
போய வன்றே.

அப்பணை அனைத்தும் மார்புக்கு
அணிஎனக் கிடந்த; வீரக்
கைப்பணை முழங்க, முன்நாள்
அமரிடைக் கிடைத்த போதுஉன்
துப்புஅணை வயிர வாளி விசையினும்
காலின் தோன்றல்
வெப்புஅணை குத்தினாலே வெரிநிடைப்
போய அன்றே.

பொ :— அந்தத் திசையானைகளின் கொம்புகள் அனைத்தும் (இவ்விராவணன்) மார்புக்கு அணிகலன் என்னும்படி பதிந்து கிடந்தன; வீரத்தை வெளிப்படுத்தும் கைச் சங்குகள் முழங்க முதல் நாள் போரில் இவன் நெருங்கிப் போர் செய்ய வந்தபோது, உன்னுடைய வலிமை பொருந்திய வயிரத்தன்மையுடைய அம்புகளின் வேகத்திலும் மிக்க வெம்மையுடைய, காற்றின் மகனாகிய அனுமனின் குத்தினாலே அக்கொம்புகள் முதுகுவழியே வெளிவந்தன.

கு :— இராவணன் தன் மார்பில் திசையானைகளைக் குத்தச் செய்து நிமிர்ந்தபோது அக்கொம்புகள் முறிந்து அவன் மார்பில் அணிகலன்போலத் தங்கிக் கிடந்தவை, முதற்போரில் அனுமன்

குத்திய குத்தினுலே முதுகு வழியாக வெளிவந்தன என்றவாறு. அனுமன் குத்து, இராமனுடைய அம்பு விசையினும் வெம்மை யுடையது என்பார், ''உன் துப்பணை வயிரவாளி விசையினுங் காலின் தோன்றல் வெப்பணை குத்தினுலே'' என்று இராமனை நோக்கிக் கூறினுன். விசையினும் வெப்பு அணைகுத்து, காலின் தோன்றல் குத்து எனத் தனித்தனி இயையும். ''கைக்குத்தது படலுங் கழனிருதர்க்கிறை கறை நீர், மைக்குப் பையின் எழில் கொண்டொளிர் வயிரத்தட மார்பில், திக்கிற்சின மதயானைகள் வயவெம்பணை செருவில் புக்கிற்றன போகாதன புறமுக்கன புகழின்'' (முதற்போர்-176) என முன் கூறியிருத்தலால் அனுமன் குத்தினுல் இராவணன் மார்பில் தைத்திருந்த திசையானையின் கொம்புகள் முதுகு வழியே வெளிப் போந்தமை யறியலாம். அனுமனை இராமன் அம்போடு ஒப்பித்துக் கூறுதலுண்டு என்பதை ''வெம்பு வஞ்சகர் விழி தொறும் திரியுமே னின்றுன், அம்பின் முன் செலும் மனத்திற்கும் முன் செலும் அனுமன்'' (முதற்போர் - 232) ''தந்தை வேகமுந் தனது நாயகன் தனிச் சிலையின் முந்து சாயகக் கடுமையும் பிற்பட முடுகிச் சிந்தை பின் வரச் செல்பவன்'' (மீட்சிப்—203) என வருதலால் அறியலாம். பணை—கொம்பு. கைப்பணை—கையில் கொண்டு ஊதும் சங்கு. கிடைத்தல்—நெருங்குதல். துப்பு—வலிமை. விசையினும் என்புழி 'இன்' உருபு உறழ்ச்சிப் பொருளில் வந்தது. அன்று, ஏ அசை நிலை. கிடந்த, வினைப் பெயர். கிடந்த குத்தினுலே வெரிநிடைப் போயவன்றே என இயையும். (211)

10056. அவ்வடு வென்றி யிந்த
வண்டத்தும் புறத்து மான்ற
தெவ்வடு படைக ளஞ்சா
திவன்வயிற் செல்லிற் றேவ
வெவ்விட மீசன் றன்னை
விழுங்கினும் பறவை வேந்தை
அவ்விட நாக மெல்லா
மணுகினு மணுக லாற்ரு.

அவ்வடு அன்றி, இந்த
அண்டத்தும் புறத்தும் ஆன்ற
தெவ்அடு படைகள் அஞ்சாது
இவன்வயின் செல்லின், தேவ!

வெவ்விடம் ஈசன் தன்னை
விழுங்கினும், பறவை வேந்தை
அவ்விட நாகம் எல்லாம்
அணுகினும், அணுகல் ஆற்ரு.

பொ :— தேவா, அந்த வடுவல்லது, இந்த மண் அண்டத்திலும் இதற்குப் புறம்பாகவுள்ள விண்ணுலகத்தும் பாதலத்தும் நிறைந்த பகைவரைக் கொல்லும் படைக்கலங்கள், அஞ்சாமல் இவ்விராவணனிடத்தில் செல்லுமாயின், கொடிய விடம் ஈசனை விழுங்கினுலும், பறவைகட்கு வேந்தனுகிய கருடனை அந்த நஞ்சுடைய நாகங்கள் எல்லாம் நெருங்கினுலும் இவனை நெருங்க இயலாதனவாம்; (எனவே, வேறு பகைவர் படையாலாய வடுக்கள் இவனுக்கு இல்லை.)

கு :— 'அவ்வடு வன்றி' என்ற எச்சம், இசை யெச்சமாக வருவித்துக்கொண்ட 'வேறு பகைவர் படையாலாய வடுக்கள் இவனுக்கு இல்லை' என்ற தொடர்மொழியைக் கொண்டு முடிந்தது. இந்த அண்டம் என்று மண்ணுலகத்தைச் சுட்டியதால் 'புறத்தும்' என்றது, விண்ணும் பாதலமும் ஆகிய உலகம் இரண்டையும் குறித்தது. இராவணன் மூவுலகங்களையும் தன்னடிப் படுத்து ஆண்டவன் ஆகலின், அம்மூவுலகத்தும் உள்ளோர் படைக்கலங்கள் இவனை நெருங்கவும் ஆற்றல் அற்றனவாயின என்க. பாற்கடலில் எழுந்த பெருநஞ்சினையுண்டவன் சிவபிரான் ஆதலின், அவனை விழுங்கற்கு எந்த விடத்தினுலும் இயலாது என்பதும், தன்னிழலினுலேயே பாம்புகளைக் கொல்ல வல்ல கருடனை நாகங்கள்நெருங்கா என்பதும் வெளிப்படையாகலின், இயலாமை யுணர்த்த அவற்றையே இங்குக் கூறியவாறு. பாஅல் புளிப்பினும் பகலிருளினும் (புறநா–2) என்புழிப்போல. இச்செய்யுள் சில ஏடுகளில் இல்லை. (212)

10057. வென்றியாய் பிறிது முண்டோ
வேலைசூழ் ஞால மெல்லாம்
பன்றியா யெயிற்றுக் கொண்ட
பரம்பரன் முதல பல்லோர்

என்றியா மிடுக்கண் டீர்வ
தென்கின்ற ரிவனின் றுன்னல்
பொன்றினு னென்ற போதும்
புலப்படார் பொய்கொ லென்பார்.

'வென்றியாய்! பிறிதும் உண்டோ
வேலைசூழ் ஞாலம் எல்லாம்
பன்றியாய் எயிற்றுக்கொண்ட
பரம்பரன் முதல பல்லோர்,
''என்றுயாம் இடுக்கண் தீர்வது?''
என்கின்றார்; ''இவன் இன்று உன்னால்
பொன்றினன்'' என்ற போதும்,
புலப்படார், ''பொய்கொல்'' என்பார்'.

பொ :— வெற்றியை யுடையவனே! கடல் சூழ்ந்த உலகம் முழுவதையும் வராக மூர்த்தியாய் வடிவெடுத்துத்தன் கோரப் பற்களில் தாங்கிக் காப்பாற்றிய திருமால் முதலிய தேவர்கள் பலரும், 'யாம் இவனாலாகிய துன்பம் தீர்வது என்று கொல்' என்று எண்ணமிடுகின்றவர்கள், இவன் இன்று உன்னால் இறந்தான் என்று கேட்டபோதும், அச்சொல் பொய்யாக இருக்கலாமோ? என்று ஐயங்கொண்டவராய் (அச்சத்தால்) வெளிப்படாமல் இருக்கின்றனர்; (எனவே இவனை வென்ற வென்றியினும் சிறந்த வென்றி) வேறும் உண்டோ? (இல்லை)

கு :— பூமியைத் தன்னெயிற்றில் கொண்ட பெருவலியுடைய வராக மூர்த்தியான திருமாலே, 'இவ்விராவணனால் ஆய இடுக்கண் தீர்வது என்று கொல்' எனக் காலம் பார்த்திருக்கத் தக்க பேராற்றலை யுடைய இராவணனை வென்ற வெற்றியே தலை சிறந்த வெற்றி என்பதை வீடணன் நிறுவியவாறு. ''போர்ப்புறங் கொடுத்தோர்ப்போன்ற ஆண்டொழி லோரிற் பெற்ற வெற்றியும் அவத்தம்'' என (207) முன் இராமன், இராவணனை வென்ற வெற்றியை இழித்துக் கூறினனாகலின், வீடணன் இங்கு இராமனை 'வென்றியாய்' என விளித்து, 'பிறிதுமுண்டோ?' என இவனை வென்ற வெற்றியினும் சிறந்த வெற்றிப் பிறிதில்லை என்பதை விளக்கியவாறு. பொய் கொல் என்பார் புலப்படார்; பிறிதுமுண்டோ, என முற்றெச்சமாக்கி மாறி

முடிக்க. என்கின்ருராய பரம்பரன் முதல பல்லோர் என மாற்றலும் ஆம். இராவணனுக்கு அஞ்சுகின்றவர்களின் ஆற்றல் புலப்பட 'ஞாலமெல்லாம் பன்றியாய் எயிற்றுக் கொண்ட பரம்பரன் முதல பல்லோர்' என்ருன். (213)

இச்செய்யுளின் பின், 23ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10057 (அ) வேளற்ற மாய்க்குங் கண்ணன்
வெம்மலே வேருங்கொண்டான்,
நீளுற்ற கழலினுணே நெடுந்திசை
துரந்து நின்ருன்,
மூளுற்ற சமரிலியாவர் ஓடிலர்
முன்பு பின்பு,
நாளற்ருர் யாவர் வீயார் நாம்
சொல நம்ப வென்ருன்.

வீடணன் சொல்லேக் கேட்ட இராமன் மன நிறைவு பெற்றவனுய் இராவணனுக்கு இறுதிக்கடன் செய்ய ஏவுதல்

10058. அன்னதோ வென்னு வீர
ஊயமு நாணு நீங்கித்
தன்னதோ ளிணையை நோக்கி
வீடண தக்க தன்ருல்
என்னதோ விறந்து ளான்மேல்
வயிர்த்தனீ யிவனுக் கீண்டு
சொன்னதோர் விதியி னுலே
கடன்செயத் துணிதி யென்ருன்.

'அன்னதோ?' என்ன, வீரன்
ஐயமும் நாணும் நீங்கி,
தன்னதோள் இணையை நோக்கி,
'வீடண! தக்கது அன்ருல்;

என்னதோ இறந்துளான்மேல்
வயிர்த்தல்? நீ இவனுக்கு ஈண்டு
சொன்னதுஓர் விதியினாலே
கடன்செயத் துணிதி' என்றான்.

பொ :— (அதுகேட்ட) வீரனாகிய இராமன் 'அதுதானோ?' என்று சொல்லி, முன்பிருந்த ஐயமும் நாணமும் நீங்கப்பெற்று, தன் தோள்கள் இரண்டையும் (பாராட்டுங்குறிப்பினால்) பார்த்துக் கொண்டு, (பிறகு வீடணனை நோக்கி) 'வீடணா! நீ, இறந்தவன் மேல் பின்னும் பகைமை கொள்ளுதல் எதற்கு? தக்கதன்று; இவ் விராவணனுக்கு இப்போதே நூல்களில்சொன்ன விதிப்படி இறுதிக்கடன் செய்யத் துணிவாயாக' என்று ஏவினான்.

கு :— இராவணன் முதுகில் உள்ள தழும்பு இவனது என வீடணன் விளக்கினமையால் இராமன் 'அன்னதோ' எனத்தெளிந்து உடன்பட்டுக் கூறியவாறு. முன்பு முதுகின் வடுக்கண்டுகொண்ட ஐயமும் நாணும் வீடணன் சொல்லால் நீங்கப்பெற்ற இராமன் இராவணனை வென்ற தன் தோள்களின் சிறப்பைப் பாராட்டுங் குறிப்பால் பார்த்துக்கொண்டான் என்க. முன்பு, ''வென்றியா னுலகமூன்றும் மெய்ம்மையான்மேவினானும், பொன்றினான் என்று தோளைப் பொதுவற நோக்கும் பொற்புங்குன்றி ஆசுற்றது'' என்று இரங்கியவன், இப்போது தன் தோள்களின் வென்றி உண்மையானதே என நோக்கிப் பாராட்டி மகிழ்வானாரு என்க. வயிர்த்தல்—பகைமை கொள்ளுதல். பகைமையெல்லாம் இறக்கும் வரையில்தான் ஆதலின் 'இறந்துளான்மேல் வயிர்த்தல் என்னதோ? தக்கதன்றல்' என்றான் இராமன். (214)

*தன்னைக் காண வந்த தேவர் முதலியோரை இராமன் காணச் செல்லுதல்*

10059. அவ்வகை யருளி வள்ள
லனைத்துல கங்க ளோடும்
எவ்வகை யுள்ள தேவர்
யாவரு மிரைத்துப் பொங்கிக்

கவ்வையிற் றீர்ந்தார் வந்து
வீழ்கின்றூர் தம்மைக் காணச்
செவ்வையி னவர்முன் சென்றுன்
வீடண னிதனைச் செய்தான்.

அவ்வகை அருளி, வள்ளல்
அனைத்து உலகங்களோடும்
எவ்வகை உள்ள தேவர்
யாவரும் இரைத்துப் பொங்கிக்
கவ்வையின் தீர்ந்தார் வந்து
வீழ்கின்றூர் தம்மைக் காண,
செவ்வையின் அவர்முன் சென்றுன்;
வீடணன் இதனைச் செய்தான்.

பொ:— வள்ளல் தன்மை வாய்ந்த இராமன், வீடணனுக்கு அவ்வாறு சொல்லியருளிவிட்டு, எல்லா உலகத்தவர்களோடு எல்லா வகையான தேவர்கள்யாவரும் (இராவணனைக் கொன்றமையால்) மகிழ்ச்சிமிக்கு ஆரவாரித்துக் கொண்டு, துன்பம் நீங்கினவராய் வந்து வீழ்கின்றவர்களைச்சென்று காணவேண்டி, நேராக அவர்கட்கு முன் சென்றுன்; வீடணன் இத்தகைய செயலைச் செய்வானுனுன்.

கு:— பகைவனுகிய இராவணனிடத்தும் அன்பு காட்டி வீடணனைக் கொண்டு இறுதிக்கடன் செய்வித்த இராமனது இரக்கவுள்ளத்தை நினைந்து இங்கு 'வள்ளல்' என்று அவனுக்குப்பெயர் கூறினுர். இனித் தன்னைக்காணவந்த அனைவர்க்கும் எளியனுய்க் காட்சியளித்தமை நினைந்து அப்பெயரால் கூறினுர் எனினும் அமையும். வீடணன் செய்ததை வருஞ் செய்யுளிற் காணலாம். (215)

வீடணன் இராவணன் மேனிமேல் வீழ்தல்

10060. போழ்ந்தென வரக்கன் செய்த
புன்றெழில் பொறையிற் றுமால்
வாழ்ந்தநீ யிவனுக் கேற்ற
வரன்முறை வகுத்தி யென்னத்

தாழ்ந்ததோர் கருணை தன்னுற்
றலைமக னருளத் தள்ளி
வீழ்ந்தன னவன்மேல் வீழ்ந்த
மலையின்மேல் மலைவீழ்ந் தென்ன.

'போழ்ந்தென அரக்கன்செய்த
புன்தொழில் பொறையிற்று ஆமால்,
வாழ்ந்தநீ இவனுக்கு ஏற்ற
வரன்முறை வகுத்தி' என்ன,
தாழ்ந்தது ஓர் கருணைதன்னுல்,
தலைமகன் அருள, தள்ளி,
வீழ்ந்தனன் அவன்மேல், வீழ்ந்த
மலையின்மேல் மலைவீழ்ந்தென்ன.

பொ :— 'உடம்பைப் பிளந்தாற்போல, இராவணன் சீதையைப் பிரித்த கீழான தொழில் பொறுத்தற்குரியதாகும்; உயிரோடு வாழ்ந்திருக்கும் நீ இவனுக்கேற்ற கடன்களை வரன்முறையாகச்செய்க' என்று தலைமகனுகிய இராமன் பெருகிவழிகின்ற கருணையினுல் சொல்லியருளியவுடனே வீடணன், வீழ்ந்து கிடக்கும் மலையின்மேல் மற்றொருமலை வீழ்ந்தாற்போல அவ்விராவணன்மேல் துன்பத்தால் தள்ளப்பட்டு வீழ்ந்தான்.

கு :— போழ்தல்—பிளத்தல். சீதையும் இராமனும் ஒருடம்புடையர் போல அன்பால் ஒன்றிவாழ்ந்தவர்கள் ஆதலின் அந்நிலைமை கெடச் சீதையைப்பிரித்த பாவியின்செயலைப் 'போழ்ந்தென' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினுன். அவன் இறந்துபட்டமையால் பொறுக்கத்தக்கது என்றவாறு. ஏற்ற என்றது பெயர்; ஏற்ற கடன்களை என்க. தாழ்தல் என்பது பெருக்கெடுத்து வழிதலையுணர்த்தியது. இராவணன் மலைபோன்ற வடிவமுடையன் ஆதல் போலவே அவன் தம்பி வீடணனும் மலைபோன்ற வடிவினன் ஆதலின் மலையின்மேல் மலை வீழ்தலை உவமையாக்கினுர். அவ்விராமன் அருளால் தள்ளப்பட்டு வீழ்ந்தனன் எனலும் ஆம். (216)

10061. ஏவரு முலகத் தெல்லா
வுயிர்களு மெரியு நெஞ்சத்
தேவரு முனிவர் தாமுஞ்
சிந்தையி னிரக்கங் கூரத்
தாவரும் பொறையி ஞன்ற
னறிவிஞற் றகைக்க நின்ற
ஆவலுந் துயருந் தீர
வரற்றிஞன் பகுவா யார.

ஏவரும், உலகத்து எல்லா
உயிர்களும், எரியும் நெஞ்சத்
தேவரும், முனிவர் தாமும்
சிந்தையின் இரக்கம் கூர,
தா அரும் பொறையினுன் தன்
அறிவினுல் தகைக்க நின்ற
ஆவலும் துயரும் தீர,
அரற்றினுன் பகுவாய் ஆர.

பொ :— உலகத்துள்ள மக்கள் யாவரும், மற்றை எல்லா உயிர்களும் (இராவணனது கொடுமை நினைந்து) எரியும் நெஞ்சினையுடைய தேவர்களும் முனிவர்களும்கூடச் சிந்தையில் இரக்கம் மிகக் கொள்ளுமாறு, குற்றமற்ற பொறுமையுடைய வனுகிய வீடணன் முன்பு தன் அறிவினுல் தடுக்கத் தடைபட்டு நின்ற ஆவலும் துயரமும் தீருமாறு தன் பெரிய வாயார அழுது அரற்றினுன்.

கு :— இராவணனை நினைந்து மனம் எரிகின்ற தேவரும் முனிவரும்கூட வீடணன் அரற்றலைக் கேட்டு இரக்கங்கொள்ள லாயினர் என வீடணனது அரற்றலின் ஆற்றலைப் புலப்படுத்திய வாறு. தன் அண்ணன் இறந்துபட்டபோது, அவன் மேல் வீழ்ந்து அழவேண்டும் என்ற ஆவலும் துயரமும் வீடணனுக்கு முன்னமே இருந்தாலும், தன்னேடு மாறுபட்டுத் துரத்திய அவனுக்காக அழுவது பொருந்தாது எனத் தன்னறிவினுல் அடக்கிக் கொண்டிருந்தமை புலப்பட ‘‘அறிவினுல் தகைக்க நின்ற ஆவலும் துயரும் தீர’’ என்ருர். தகைத்தல்—தடுத்தல். பகுவாய்—பெரியவாய். கூர்தல்—மிகுதல். (217)

*வீடணன் வாய்திறந்தரற்றியது 10062 — 10068*

10062. உண்ணாதே யுயிருண்ணா தொருநஞ்சு
★ சனகியெனும் பெருநஞ் சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
யுயிர்நீயுங் களப்பட் டாயே
எண்ணாதே னெண்ணியசொ லின்றினித்தா
னெண்ணுதியோ வெண்ணி லாற்றல்
அண்ணாவோ வண்ணாவோ வசுரர்கடம்
பிரளயமே யமரர் கூற்றே.

'உண்ணாதே உயிர் உண்ணாது ஒருநஞ்சு;
சனகிஎனும் பெருநஞ்சு உன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
உயிர்; நீயும் களப்பட்டாயே!
எண்ணாதேன் எண்ணியசொல் இன்று இனித்தான்
எண்ணுதியோ? — எண் இல் ஆற்றல்
அண்ணாவோ! அண்ணாவோ! அசுரர்கள்தம்
பிரளயமே! அமரர் கூற்றே.

பொ:— ஒப்பற்ற கொடிய நஞ்சு (தன்னை உண்டாரை உயிருண்ணுமே யன்றி), உண்ணாமலிருக்கவும் உயிரையுண்ணாது; ஆனால், சானகி என்கின்ற பெரிய நஞ்சு, நீ கண்ணாலே நோக்கின அளவிலே உன்னை உயிர் போக்கியதே! (பெருவீரனாகிய) நீயும் போர்க்களத்தில் (எளியவன் போல) இறந்துபட்டாயே! நின்னால் மதிக்கப்படாத யான் அன்று ஆய்ந்துசொன்ன (பரம்பொருளே இராமனாக வந்துள்ளான்; அவனை வெல்ல இயலாது என்ற) சொல்லை இன்றைக்கு இப்போதுதான் எண்ணுகின்றாயோ? அளவில்லாத ஆற்றலையுடைய அண்ணா ஓ! அண்ணா ஓ! அசுரர்களுக்கு (அழிவுதந்ததில்) பிரளயம் போன்றவனே! தேவர்களுக்கு எமன் போன்றவனே!

கு:— உண்ட பின்னன்றி உயிரை யுண்ணாத நஞ்சினைக் காட்டிலும், கண்டஅளவிலே உயிரைஉண்ணும் நஞ்சு கொடுமையால் பெரியதாகலின் 'சனகி எனும் பெருநஞ்சு' என உருவகஞ் செய்தான். நீயும் என்புழி, உம்மை உயர்வு சிறப்பு. எண்ணா

தேன்என்று விடணன் தன்னைக்கூறிக் கொள்கின்றான்; நின்னால் மதிக்கப்படாத யான் என்றவாறு. மதிக்கப்பட்டிருந்தால் என் சொல்லைக் கேட்டிருப்பாய்; இந்த நிலை நேராது என்பது குறிப்பு. எண்ணிய சொல்—ஆராய்ந்துரைத்த சொல்; 'பரம்பொருளே இராமனாக வந்துள்ளான் அவனை வெல்ல இயலாது' என்றசொல். இச்சொல்லை இந்திரசித்தும் இராவணனுக்கு, "வீடணன் மெய்யிற் சொன்ன, யானெனதெண்ணல் தீர்ந்தார் எண்ணுறு மொருவனென்றே... சேகறத் தெரிந்ததன்றே" (மாயா சீதைப்-13) என நினைவூட்டியிருத்தலும், இராவணனே, 'அந்நாள் வீடணனர் சொல் நினைவுற்றான்' (இராவணன் வதைப்-134) என்புழி நினைத்திருத்தலும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கன. முன்னமே எண்ணவேண்டிய ஒன்றை மரண நிலையில் நினைப்பதால் பயனில்லை என்று எள்ளுங் குறிப்பால் 'இன்றினித்தான் எண்ணுதியோ?' என்றான். பிரளயவெள்ளம் ஒருவரை விடாது அழிப்பது போல இராவணன், அசுரர் ஒருவரும் நில்லாது அழியக் காரணமாக இருந்தமை நினைந்து 'அசுரர்கள் தம் பிரளயமே' என விளித்தான். (218)

10063. ஓராசை யொருவன்மே லுயிராசைக்
குலமகள்மே லுடைய காதல்
தீராசை பழியென்றே னெனைமுனிந்த
முனிவாறித் தேறி னையோ
போராசைப் பட்டெழுந்த குலமுற்றும்
பொன்றவுந்தான் பொங்கி நின்ற
பேராசை பேர்ந்ததோ பேர்ந்தாசைக்
கரியிரியப் புருவம் பேர்த்தோய்.

'ஓர்ஆசை ஒருவன்மேல் உயிர்ஆசைக்
குலமகள்மேல் உடைய காதல்
தீர்; ஆசை பழி" என்றேன்; எனைமுனிந்த
முனிவு ஆறித் தேறினையோ?
போர் ஆசைப்பட்டு எழுந்த குலம் முற்றும்
பொன்றவும்தான் பொங்கி நின்ற
பேர்ஆசை பேர்ந்ததோ?— பேர்ந்துஆசைக்
கரிஇரியப் புருவம் பேர்த்தோய்!

பொ :— '(பலதிறப்படாது) ஒரு திறப்பட்ட ஆசையை யுடைய ஒப்பற்ற இராமன்மேல் உயிர்போன்ற ஆசையையுடைய குலமகளாகிய சீதையின் மேல் நீ கொண்டுள்ள காதலை விடு; (பிறன்மனைமேல் கொண்ட) ஆசை பழியாகும்' என்று சொன்ன என்னைக் கோபித்துக் கொண்டகோபம் ஆறித் தெளிவு அடைந் தாயோ? போர் செய்வதில் ஆசைகொண்டெழுந்த நின்குலம் முழுவதும் அழியவுந்தான் நின் உள்ளத்தில் பொங்கி எழுந்த பெரிய பெண்ஆசை நீங்கியதோ? திசையானைகள் பெயர்ந்து ஓடுமாறு (சினக் குறிப்பால்) புருவம் நெரித்த பெருவீரனே!

கு :— ஓராசை ஒருவன் என்றது இராமனை. சீதையை யன்றிப் பிற மகளிரை விரும்பாத ஒருமை மனத்தான் ஆகலின், இங்ஙனம் கூறப் பெற்றான். "இந்த விப்பிறவிக்கிரு மாதரைச் சிந்தையாலுந் தொடேனென்ற செவ்வரம் தந்த வார்த்தை திருச் செவி சாற்றுவாய்" (சுந்தர - சூளாமணிப் - 34) என்பது இங்கு நினைதல் தகும். உயிராசைக் குலமகள் என்றது சீதையை. இராமனைத் தன்னுயிராகவே நினைத்து அன்புசெய்பவள் என்ற வாறு. "எனக்குயிர் பிறிதுமொன்றுண்டென்றிரேல் எனக்குமல் லால், தனக்குயிர் வேறின்றாகித் தாமரைக் கண்ணதாகிக், கனக்கரு மேகமொன்று கார் முகந்தாங்கியார்க்கும், மனக்கினி தாகிநிற்கு மதுவன்றி வரம்பிலாதாய்" (மாயாசனகப்-24) என்று சீதையே கூறியுள்ளது காணலாம். ஆசை என்றது பிறர் மனை மேல் வைத்த ஆசையை. ஆசை பழிக்குக் காரணம் என்பார் 'ஆசை பழி' என உபசரித்தார். இராவணன் தன் குலத் தினர் அனைவரையும் கொன்ற பின்னும் ஒருத்திமேல் வைத்த பேராசை நீங்கப்பெற்றானே? என்னும் ஐயத்தால் 'குலமுற்றும் பொன்றவுந்தான் பொங்கி நின்ற பேராசை பேர்ந்ததோ?' என்று வினவிப் புலம்பலானான். ஆசைக்கரி — திசையானை. பேர்ந்து இரிய என இயையும். புருவம் பேர்த்தலாவது, புருவம் நெரித்தல். (219)

இச்செய்யுளின் பின் 52-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது.

10063 (a) வான்கயிலை யீசனயன் வானவர்கோன்
முதலமரர் வாழ்த்தி ஏத்த
தான்புவன மொருமூன்றும் தனி புரந்து
வைகியநீ தாய் சொல் தாங்கி

கான்புகுந்த மறைமுதல்வன் விடும்கடவுள்
வாளிஒன்று கடிதின் வந்துன்
ஊன்புகுங்கல் லூரமுருவி யோட வுளம்
நாணிலேயோ? உயிரும் உண்டோ?

10064. அன்றெரியில் விழுவேத வதியிவள்கா
ணுலகுக்கோ ரன்னை யென்று
குன்றனைய நெடுந்தோளாய் கூறினே
னதுமனத்துட் கொள்ளா தேபோய்
உன்றனது குலமடங்க வுருத்தமரிற்
படக்கண்டு முறவா காதே
பொன்றினையே யிராகவன்றன் புயவலியை
யின்றறிந்து போயினுயோ.

"அன்று எரியில்விழு வேதவதி இவள்காண்;
உலகுக்கு ஓர் அன்னை" என்று,
குன்றுஅனைய நெடுந்தோளாய்! கூறினேன்,
அது மனத்துள் கொள்ளாதே போய்,
உன்தனது குலம் அடங்க, உருத்துஅமரில்
படக்கண்டும், உறவு ஆகாதே
பொன்றினையே! இராகவன்தன் புயவலியை
இன்று அறிந்து போயினுயோ?

பொ :— "மலை போன்ற நீண்ட தோளையுடையவனே! அக்காலத்து நெருப்பில் விழுந்து இறந்த வேதவதி இச்சீதை காண், இவள் உலகுக்கு ஒரு தாய்" என்று சொன்னேன்; அச்சொல்லை உன் மனத்தில் கொள்ளாமல் சென்று, உன் குலமுழுவதும் கோபித்துப்போர்செய்து போரில் இறந்துபடக் கண்டும், (இராமனோடு) உறவு கொள்ளாமல் பயனின்றி இறந்தாயே; இராகவனுடைய தோள்வலியை இன்றைக்கு அறிந்துதான் போகின்ருயோ? (இன்னும் அறிந்திலையோ?)

கு :— வேதவதி என்பவள் குசத்துவசன் என்னும் முனிவன் மகள். இவள் அழகைக்கண்டு மணம்பேசி வந்தவர்களுக்கு இம்முனிவன், இவள் நாராயணனையே மணக்கப் போகின்ருள் என்று

கூறி அவர்களை அனுப்பிவிட்டான். சம்பு என்பவன் அது மனம் பொருமல் அம்முனிவன் உறங்கும்போது அவனைக் கொன்றுவிட்டான்; அவன் மனைவியும் உடனெரி மூழ்கி உயிர்துறந்தாள். அது முதல் தந்தையின் எண்ணம் ஈடேற வேதவதி நாராயணனை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருந்தாள். இராவணன் திக்கு விசயம் செய்யப் போகும்போது இத் தவ மகளாகிய வேதவதியைக் கண்டு காதல் கொண்டு தன்னை மணக்கும்படி அவளை வேண்டினுனுக அவள் நாராயணனையே மணக்கப்போகின்றேன் என்று கூறி மறுக்க, இராவணன் நாராயணனைப் பழித்துத் தன்னைப் புகழ்ந்து தன்னையே மணக்குமாறு வற்புறுத்தினுன். அவள் உடன்படாது போகவே அவள் கரத்தைப் பற்றினுன் இராவணன். அது பொருது நெருப்பாக எரிகின்ற உடம்புடைய வேதவதி, ''ஏடாவுனக்கு மிலங்கைக்கு முன் கிளைக்கும் கேடாகத் தோன்றுவே னென்றுள் கிளர் சினத்தாள்'' (உத்தரகாண்டம்-திக்குவிசயப்-18) என்று தீயில்மூழ்கினுள் என்பதும் அவளே சீதையாகப் பிறந்தாள் என்பதும் உத்தரகாண்டத்தில் அறியலாம். 'யான் கூறியதை மனத்துள் கொண்டிருந்தாலும் உய்யலாம்; அதற்குப்பின்னும் உன் குலத்தார் எல்லாம் படக்கண்ட பின்னரேனும் இராமனையடைந்து சீதையை விடுத்து உறவுகொண்டு உய்ந்திருக்கலாம்; அதுவும் செய்யாது இறந்தாய்; இராமனது தோள்வலியை இன்று இறக்கும்போதேனும் அறிந்து செல்கின்றுயோ? இல்லையோ? என வீடணன் புலம்பிய வாறு. (220)

10065. மன்றன்மா மலரானும் வடிமழுவாட்
படையானும் வரங்க ளீந்த
ஒன்றலா தனவுடைய முடியோடும்
பொடியாகி யுதிர்ந்துபோன
அன்றுதா னுணர்ந்திலையே யானுலும்
வானுட்டை யணுகா நின்ற
இன்றுதா னுணர்ந்தனையே யிராமன்றுன்
யாவருக்கு மிறைவனுதல்.

'மன்றல் மாமலரானும், வடிமழுவாள்
படையானும், வரங்கள் ஈந்த
ஒன்று அலாதன உடைய முடியோடும்
பொடிஆகி உதிர்ந்து போன;
அன்றுதான் உணர்ந்திலையே ஆனாலும்
வான்நாட்டை அணுகா நின்ற
இன்றுதான் உணர்ந்தனையே, இராமன் தான்
யாவருக்கும் இறைவன் ஆதல்.

பொ:— மணம்பொருந்திய சிறந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், கூறிய மழுப்படையையுடைய உருத்திரனும் ஈந்த ஒன்றல்லாதனவாக நீ பெற்றுள்ள பலவரங்களும் நின் முடியோடும் பொடியாகி உதிர்ந்து போயின: இராமனர் யாவருக்கும் கடவுள் ஆதலை (யான் கூறிய) அன்றுதான் உணர்ந்திலை ஆயினும் விண்ணுலகத்தை அணுகுகின்ற இன்றேனும் உணர்ந்தனையோ?

கு:— உடைய வரங்கள் என இயையும். அயனும் அரனும் கொடுத்த வரங்கள் உன்னைக் காப்பாற்ற இயலாமல் நின்முடியோடும் பொடியாயின என்றது, அவ்வரங்களின் நிலைபேறின்மை புலப்படுத்தியவாறு. இராமன் இறைவனாதலை அன்று உணராயாயினும் விண்ணாடு புகும் இன்றேனும் உணர்ந்தாயோ என வினவியவாறு. வானாடு என்றது வீரசுவர்க்கத்தை. இன்று உணர்ந்திருப்பாய் என்பதே கருத்து. யாவர்க்கும் என்புழி உம்மை முற்றும்மை. இறைவன் — பரம் பொருள்; தலைவன். (221)

இச்செய்யுளின்பின் 41, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

10065 (a) அருவினைவந் தெய்தியபோ
தாரரசே யுன்றன்
திருவினைநீ பெறுவதற்கிங் கிவன்றிருநா
மங்கள்தமைச் சிந்தித்தேத்த
ஒருபதுவாயுள வணங்க ஒண்முடிகள்
பத்துளவே யிறைஞ்ச
இருபது கையுள விலங்கை
யென்னுக வீந்தாயே.

10065 (b) அருவினைவந் தெய்தியபோழ் தார்தடுப்பா
ராரதனை யறிவார் வீட்டின்
திருவினைநீ பெறுவதற்கிங் கிவன்றிருநா
மங்கள்தமைச் சிந்தித் தேத்த
ஒருபதுநா வுளவணங்க வொண்முடிகள்
பத்துளவே யிறைஞ்சமேரு
இருபதுகை யுளவிலங்கை யென்னுக
வுயிரோடு மிழந்திட்டாயே.

10066. வீரநா டுற்ருயோ விரிஞ்சனும்
யாவருக்கு மேலா முன்றன்
பேரனு டுற்ருயோ பிறைசூடும்
பிஞ்ஞகன்றன் புரம்பெற் ருயோ
ஆரணு வுன்னுயிரை யஞ்சாதே
கொண்டகன்ரு ரதெலா நிற்க
மாரனுர் வலியாட்டந் தவிர்ந்தாரோ
குளிர்ந்தானே மதிய மென்பான்.

‘வீரநாடு உற்ருயோ? விரிஞ்சனும்
யாவருக்கும் மேலாம் உன்தன்
பேரன்நாடு உற்ருயோ? பிறைசூடும்
பிஞ்ஞகன்தன் புரம் பெற்ருயோ?
ஆர்,அணு! உன்உயிரை, அஞ்சாதே,
கொண்டுஅகன்ருர்? அதுஎலாம் நிற்க,
மாரனுர் வலிஆட்டம் தவிர்ந்தாரோ?
குளிர்ந்தானே, மதியம் என்பான்?

பொ :— அண்ணு! நீ வீரர் அடையும் வீரசுவர்க்கம் அடைந்தனேயோ? அல்லது, யாவர்க்கும் மேலாக விளங்கும் பிரமனுகிய உன்தன் பாட்டன் நாட்டை அடைந்தாயோ? அல்லது, பிறை சூடிய சிவபிரான் தன் சிவலோகத்தைப் பெற்ருயோ? எமனும் அஞ்சும் நின் உயிரை அஞ்சாமல் கொண்டு போனவர் யார்? அஃதெல்லாம் கிடக்க, மன்மதனுர், தம் வலிகாட்டும் ஆட்டத்தை விடுத்தாரா? சந்திரன் என்பவன், நினக்குக் குளிர்ச்சியாகத் தோன்றினனு?

கு :— வீர நாடு என்றது வீரசுவர்க்கத்தை. இராவணன் பிரமனது வழித் தோன்றலாதலின் பிரமன் அவனுக்குப் பாட்டன் எனப்பட்டான். பிரமன் மகன் புலத்தியன்; புலத்தியன் மகன் விச்சிரவசு; விச்சிரவசுவின் மகன் இராவணன். எனவே இராவணனுக்குப் பிரமன் இரண்டாம்பாட்டன் ஆகின்ருன். பேரன் — பாட்டன்; ''மாசிலா மறையோரையா மற்றுங்கள் பேரனர் தம், தேசுடை யெழுத்தேயாகில் தெளியப்பார்த் தறிமி னென்ருர்'' (பெரியபு—தடுத்தாட்கொண்ட.—206) என்புழியும் இச்சொல் இப் பொருளில் வந்துள்ளமை காணலாம். மூவுலகத்தவரையும் வென்ற இராவணனைத் தன் வலியால் வென்று ஆட்டுவித்தவன் மன்மதனே என்பது புலப்பட 'மாரனர் வலியாட்டம் தவிர்ந் தாரோ' என்று வினவினுன். இராவணனுக்குத் தண் மதியும் வெம்மதியாய் வெதுப்பினுன் ஆகலின், 'குளிர்ந்தானே மதியம் என்பான்' என்று வினவினுன். இராவணனுயிர் உடம்பை விடுத் துப் பிரிந்தமையால் இனி மன்மதன் வலியாட்டமும், மதியின் வெதுப்புதலும் இராவணன்பால் நிகழா என்பது உணர்த்திய வாறு. (222)

10067. கொல்லாத மைத்துனனைக் கொன்ருயென்
றதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே யிதழதுக்குங் கொடும்பாவி
நெடும்பாரப் பகைதீர்ந் தாளோ
நல்லாருந் தீயாரு நரகத்தார்
துறக்கத்தார் நம்பி நம்மோ
டெல்லாரும் பகைஞரே யார்முகத்தே
விழிக்கின்ரு யெளியை யானுய்.

''கொல்லாத மைத்துனனைக் கொன்ருய்'' என்று
அதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து,
பல்லாலே இதழ் அதுக்கும் கொடும்பாவி
நெடும்பாரப் பகை தீர்ந்தாளோ?
நல்லாரும் தீயாரும் நரகத்தார்
துறக்கத்தார், நம்பி! நம்மோடு
எல்லாரும் பகைஞரே; யார்முகத்தே
விழிக்கின்ருய்? எளியை ஆனுய்!

பொ :— கொல்லத்தகாத மைத்துனனைக் கொன்றுவிட்டாய் என்று அதுகுறித்து அதற்கு ஈடாகக் கொடுமை செய்யச் சூழ்ச்சி செய்துகொண்டு பல்லாலே உதட்டைக் கடிக்கின்ற கொடிய பாவியாகிய சூர்ப்பணகை, நெடிதுகாலமாய்ப் பாரமாகக்கொண் டிருந்த பகைமை தீர்ந்தாளோ? நம்பீ! துறக்கத்தாரும் நரகத் தாருமாகிய நல்லோரும் தீயோரும் ஆகிய எல்லோரும் நம்மோடு பகைமை கொண்டவர்களே ஆவர்; யார் முகத்தில் விழிக்கின் ருயோ? (அன்புடையார் யாரும் இல்லாது) எளியையாகி விட் டாயே!

கு :— அன்பினுல் ஆக்கம் செய்வதன்றி மைத்துனனைக் கொல்லுதற்கு யாரும் ஒருப்படார் ஆகலின், ‘கொல்லாத மைத் துனனை’ என்ருன். இராவணன் நிவாதகவச காலகேயருடன் போர் செய்யும்போது சூர்ப்பணகையின் கணவனைத் தெரியாமல் கொன்றுவிட்டான் என்ற செய்தி உத்தரகாண்டத்துத் திக்குவிச யப் படலத்தில் கூறப்பட்டுள்ளது. பல்லாலே இதழதுக்குதல், ‘பிறகு காலம்வரும்போது ஒழித்துவிடுவேன்’ என்னும் குறிப்பை யுணர்த்தும் மெய்ப்பாடு. தன் கணவனைக் கொன்றவனைக் கொன்று தீரவேண்டும் என்று நெடுங்காலமாகச் சூர்ப்பணகை வயிரங்கொண்டிருந்தாள் ஆதலின் ‘நெடும்பாரப்பகை’ என்றும், இராவணன் ஒழியும் வரையில் அவன்பால் கொண்ட பகைமை சூர்ப்பணகைக்குப் பாரமாகத் தோன்றினமை புலப்பட ‘பாரப் பகை’ என்றும் கூறினுன். ‘நல்லாரும் தீயாரும் நரகத்தார் துறக் கத்தார்’ என்றது எதிர் நிரனிறைப் பொருள்கோள். நரகத்தா ராகிய தீயாரும், துறக்கத்தாராகிய நல்லாரும் என்க. நரகம் புகினும் துறக்கம் புகினும் இராவணனை அன்போடு வரவேற்கத் தக்க நண்புடையார் இலராதலின் ‘யார்முகத்தே விழிக்கின்ருய்’ என்றும், பகைமுகத்தே விழிக்கும் பரிதாபத்தோடு உறவாருமில் லாத எளிய நிலைக்கும் இடனுயினையே என இரங்குவானுய் ‘எளி யையானுய்’ என்றும் கூறினுன். (223)

10068. போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத்
தழுவியகை பொருமைக் கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந்
தெரிவரிய தெய்வக் கற்பின்

பேர்மகளைத் தழுவுவா னுயிர்கொடுத்துப்
பழிகொண்ட பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ திசையானைப்
பணையிறுத்த பணைத்த மார்பால்.

'போர்மகளை, கலைமகளை, புகழ்மகளை,
தழுவியகை பொருமை கூர,
சீர்மகளை, திருமகளை, தேவர்க்கும்
தெரிவரிய தெய்வக் கற்பின்
பேர்மகளை, தழுவுவான் உயிர்கொடுத்து,
பழிகொண்ட பித்தா! பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ, திசையானை
பணை இறுத்த பணைத்த மார்பால்?

பொ :— வீரத்திருவையும் கலை மகளையும் புகழாகிய மகளையும் தழுவிய கைகளும் பொருது மிகவருந்தச் சிறப்புடைய நங்கையை, திருமகளின் அமிசமானவளை, தேவர்கட்கும் தெரிதற்கு இயலாத தெய்வக் கற்பினையுடைமையால் பெற்ற புகழினையுடைய சீதையைத் தழுவுதற்காக ஆசைப்பட்டு உயிரைக் கொடுத்துப் பழியைக் கொண்ட பித்தனே! திசை யானைகளின் கொம்புகளை முறித்த பருத்த மார்பினால் பிறகு பூமிதேவியைத் தழுவினையோ?

கு :— நினக்கேயுரிய பெண்டிர் மூவர் இருக்கும்போது, அம்மூவரின் இயல்புகள்யாவும் நிறைந்த சீதையைத்தழுவ ஆசைப்பட்டு, அவ்வாசைக்கெதிராக உயிரைக் கொடுத்துப் பழி கொண்டதோடு மண்ணைக் கவ்வினையே என்று இரங்கியவாறு. போரால் பெற்ற வெற்றியையும் கலைகளைக்கற்ற அறிவையும் இவ்விரண்டாலும் பெற்ற புகழையும் பெண்டிராக உருவகஞ் செய்தவாறு. வீரத்திரு முதலிய மூவரையும் தழுவிய தன் கைகளே சீதையைத்தழுவ விரும்பும் இராவணனுக்கு மாறுய்ப் பொருமை மிக்குவருந்தின என்றவாறு. உயிர்கொடுத்துப் புகழ் கொள்ள வேண்டியிருக்க, உயர்ந்ததாகிய உயிரை விடுத்து மிகத் தாழ்ந்ததாகிய பழியைப் பெறுதல் அறிஞர் செயலாகாது பித்தர் செயலேயாகும். ஆதலின், 'பழிகொண்ட பித்தா' என்று விளித்தவாறு. பணை—கொம்பு. பணைத்தல் — பருத்தல் மண்மேல் படுதற்குரியது அன்மை புலப்பட, திசையானை' பணையிறுத்த பணைத்த மார்பால்' என்றவாறு. (224)

### சாம்பவன் ஆறுதல் கூற வீடணன் தேறுதல்

10069. என்றேங்கி யரற்றுவான் றனையெடுத்துச்
சாம்பவனு மெண்கின் வேந்தன்
குன்ருேங்கு நெடுந்தோளாய் விதிநிலையை
மதியாத கொள்கைத் தாகிச்
சென்ருேங்கு முணர்வினையோ தேருது
வருந்துதியோ வென்னத் தேறி
நின்ருனப் புறத்தரக்க னிலைகேட்டாள்
மயன்பயந்த நெடுங்கட் பாவை.

என்று ஏங்கி, அரற்றுவான் தனை எடுத்து,
சாம்பவனும் எண்கின் வேந்தன்,
'குன்றுஓங்கு நெடுந்தோளாய்! விதிநிலையை
மதியாத கொள்கைத்து ஆகிச்
சென்று ஓங்கும் உணர்வினையோ? தேருது
வருந்துதியோ?' என்னத் தேறி
நின்ருன், அப்புறத்து அரக்கன் நிலைகேட்டாள்,
மயன்பயந்த நெடுங்கண் பாவை.

பொ:-என்று கூறி வருந்தி வாய்திறந்து அரற்றுகின்ற வீடணனைச் சாம்பவன் என்கின்ற கரடிகட்கு அரசன் எடுத்து 'மலை போல் உயர்ந்து நீண்ட தோளையுடையவனே! விதியின் இயல்பை மதியாத கொள்கையுடையதாய்ப் போய் வளர்ந்த உணர்வினையுடையையோ? தெளியாமல் வருந்துவையோ?' என்று கூற, வீடணன் தேறி நின்ருன்; அப்பக்கத்தில் (இலங்கை அரண்மனையில்) மயன் பெற்ற நீண்ட கண்களையுடைய பாவை போன்றவளான மண்டோதரி இராவணன் நிலைமையைக் கேள்வியுற்ருள்.

கு :— விதியின் செயலை மதித்து ஒழுகுகின்ற நீ அதை மதியாதவர்களைப் போலத் தேருது வருந்துதல் பொருந்தாது என்றவாறு. இராவணன் இறந்தது விதியின் விளைவு என்று அமைதலே தக்கது என்றவாறு. இராமன் பக்கத்தில் உள்ள வீடணன் செயலைக் கூறி முடித்துவிட்டு அரண்மனையில் மண்டோதரியின் செய்கையைக் கூறத் தொடங்குகின்ருர் ஆத

லின் ‘அப்புறத்து’ என்று தொடங்கினர். அரக்கன் நிலை என்றது இராவணன் இறந்துபட்ட நிலையை. (225)

### மண்டோதரி இராவணன் கிடக்கும் இடத்தை அடைதல்

10070. அனந்தநூ ருயிர மரக்கர் மங்கைமார்
★ புனைந்தபூங் குழல்விரித் தரற்றும் பூசலார்
இனந்தொடர்ந் துடன்வர வெய்தி னளரோ
நினைந்தது மறந்தது மிலாத நெஞ்சினள்.

அனந்தம் நூறுஆயிரம் அரக்கர் மங்கைமார்,
புனைந்த பூங்குழல் விரித்துஅரற்றும் பூசலார்,
இனம் தொடர்ந்து உடன்வர, எய்தினளரோ
நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினள்.

பொ :— பலகோடி அரக்கர் மகளிர் மலரணிந்த கூந்தலை விரித்துக்கொண்டு அழும் ஆரவாரத்தையுடையாராய் இனமாகத் தன்னைத் தொடர்ந்துவரத் தன்கணவனை மறத்தலும் நினைத்தலும் இல்லாது எப்போதும், நினைத்துக்கொண்டிருக்கும் நெஞ்சினையுடைய மண்டோதரி (இராவணன் வீழ்ந்து கிடக்கும் இடத்திற்கு) வந்தாள்.

கு :— மறந்தவர்களே மீண்டும் நினைவுகூர்வர். எப்போதும் மனத்துக்கொண்டுள்ளவர்கள் மறத்தலும் நினைத்தலும் இலராவர் ஆதலின் ‘நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினள்’ என மண்டோதரி சிறப்பிக்கப்பெற்றுள். ‘‘உள்ளினேன் என்றேன் மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள்’’ (குறள் – 1316) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (226)

### அரக்கியர் அரற்றும் ஓசை

10071. இரக்கமுந் தருமமுந்
துணைக்கொண் டின்னுயிர்
புரக்குநன் குலத்துவந்
தொருவன் பூண்டதோர்

பரக்கழி யாமெனப்
பரந்து நீண்டதால்
அரக்கியர் வாய்திறந்
தரற்று மோதையே.

இரக்கமும் தருமமும் துணைக்கொண்டு, இன்உயிர்
புரக்கும் நன்குலத்து வந்துஒருவன் பூண்டது ஓர்
பரக்கழிஆம் எனப் பரந்து, நீண்டதால்—
அரக்கியர் வாய்திறந்து அரற்றும் ஓதையே.

பொ:—அரக்கமாதர்கள் வாய்திறந்து அழுது அரற்றும் ஓசை, இரக்கநெஞ்சையும் தருமத்தையும் துணையாகக்கொண்டு உலகத்து இனிய உயிர்களைக் காப்பாற்றும் நல்ல அரசகுலத்தில் பிறந்த ஒருவன் பூண்ட ஒரு பெரும்பழிபோல, எங்கும்பரவி நீண்டது.

கு:—பரக்கழி—பெரும்பழி. வந்த ஒருவன் என்றது தொக்கு வந்தொருவன் என நின்றது. உயர்குடிப் பிறந்தோர்க்கு நேர்ந்த பழி விரைவில் பரவுவதுபோல, அரக்கியர் அழும் ஓசை விரைந்து பரந்தது என்றவாறு. ''குடிப்பிறந்தார் கண் விளங்குங்குற்றம் விசும்பின் மதிக்கண் மறுப்போலுயர்ந்து'' (குறள் – 957) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். உயர்குடிப் பிறந்த மண்டோதரியின் அழுகைஒலி இலங்கை முழுவதும் விரைவில் பரவியது என்றவாறு. (227)

மேலும் அரக்கியர் வருதல் — *10072, 10073*

*10072.* நூபுரம் புலம்பிடச் சிலம்பு நொந்தழக்
கோபுரந் தொறும்புறங் குறுகி னார்சிலர்
ஆபுரந் தரன்பகை யற்ற தாமென
மாபுரந் தவிரவிண் வழிச்சென் றார்சிலர்.

நூபுரம் புலம்பிட, சிலம்பு நொந்துஅழ,
கோபுரந் தொறும் புறம் குறுகினார் சிலர்;
'ஆ! புரந்தரன் பகைஅற்றது ஆம்' என,
மாபுரம் தவிர விண்வழிச் சென்றார்சிலர்.

பொ :— தங்கள் கால்களில் அணிந்துள்ள, நூபுரங்கள் புலம்பவும் சிலம்பு வருந்தி அழவும் சிலர், கோபுரங்கள் தோறும் நுழைந்து புறத்தே யுள்ள போர்க்களத்தை அடைந்தனர்; மேலும், சிலர், (இராவணன் இறந்ததைக் கேள்வியுற்றவுடனே) 'ஐயோ! இந்திரன் பகை அற்றுவிட்டதாமே' என்று சொல்லிக் கொண்டு விரைந்தவராய், (கோபுரவாயில்களில் நெருக்க மிக்கிருக்கின்றமையால்) பெரிதாகிய அம்மதில் வழிதவிர்ந்து நிற்க, விண்வழியே சென்றனர்.

கு :— நூபுரமும் சிலம்பும் ஆகிய காலில் அணியும் அணிகலன்களின் ஒலி அரக்கியர்களின் புலம்பொலியும் அழுகை ஒலியும் போன்றிருந்தது என்பார், தற்குறிப்பேற்றமாக 'நூபுரம் புலம்பிட' எனவும் 'சிலம்பு நொந்தழ' எனவும் கூறினர். மாபுரம் என்றது பெரிய மதிலே. கூட்ட மிகுதியால் வாயில் வழிச் செல்ல இயலாமல் மதில்மேல் ஏறி விண் வழிச் சென்றனர் என்றவாறு. இங்ஙனம் செல்லுதல் உண்டு என்பதை:— நெருக்குடைவாயிலூடு புகுமெனின் நெடிது காலம் இருக்குமித்தன்மை யென்று மதிலினுக் கும்பரெய்தி, அரக்கன திலங்கையுற்ற" (படைக்காட்சிப்—7) என்று முன் கூறியுள்ளதால் உணரலாம். 'ஆ' இரக்கக் குறிப்பு உணர்த்தியது. (228)

10073. அழைப்பொலி முழக்கெழ வழகு மின்னிடக்
குழைப்பொலி நல்லணிக் குலங்கள் வில்லிட
உழைப்பொலி யுண்கணீர்த் தாரை மீதுக
மழைப்பெருங் குலமென வான்வந் தார்சிலர்.

அழைப்பு ஒலி முழக்குஎழ, அழகு மின்னிட
குழைப்பொலி நல்அணிக் குலங்கள் வில்லிட,
உழைப்பொலி உண்கண் நீர்த்தாரை மீதுஉக,
மழைப்பெருங் குலம்என, வான்வந்தார் சிலர்.

பொ :— (இராவணனை அழைக்கின்ற) அழைப்பின் ஒலியாகிய இடி முழக்கம் எழுதலாலும், அழகு என்கின்ற மின்னொளி வீசுதலாலும், காதணி முதலிய பொலிவுடைய நல்ல அணிகளின் வகைகள், பல வண்ணமுடைய வானவில்லின் தன்மையைத் தோற்றுவித்தலாலும் மான்விழிபோன்று விளங்குகின்ற

மையுண்ட கண்களினின்று சிந்துகின்ற கண்ணீர், மழைநீர்த் தாரையாக மேலிருந்து தரையில் சிந்துதலாலும், மேகங்களின் பெரிய கூட்டமே என்னுமாறு சில அரக்கர்பெண்டிர் வான்வழியாக வந்தார்கள்.

கு :— மேகத்தில் காணப்படும் இடிமுழக்கமும் மின்னும் இந்திர வில்லும் நீர்த்தாரையும் இவ்வரக்க மாதரிடத்தும் காணப்படுதலின், மழைப்பெருங்குலம் என்னுமாறு வான்வழியே வந்தனர் என ஏதுத்தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. அரக்க மாதரின் கரியநிறமும் வான்வழி வருதலும் ஆகிய இரண்டும் அவ்வாறு கருத ஏதுவ்ாயின என்பது உடம்பொடுபுணர்த்திக் கூறியவாறு. (229)

அரக்கியர்
*இராவணன்மேல் வீழ்ந்து அழுதல், 10074—10078*

*10074.* தலைமிசைத் தாங்கிய
கரத்தர் தாரைநீர்
முலைமிசைத் தூங்கிய
முகத்தர் மொய்த்துவந்
தலைமிசைக் கடலின்வீ
ழன்னம் போலவன்
மலைமிசைத் தோள்கண்மேல்
வீழ்ந்து மாழ்கினர்.

தலைமிசைத் தாங்கிய கரத்தர், தாரைநீர்
முலைமிசைத் தூங்கிய முகத்தர், மொய்த்துவந்து,
அலைமிசைக் கடலின்வீழ் அன்னம்போல், அவன்
மலைமிசைத் தோள்கள்மேல் வீழ்ந்து, மாழ்கினர்.

பொ :— தலைமேல் சுமந்த கையையுடையவர்களாய், கண்ணீர்த்தாரை முலைமேல் சோர்ந்து வீழ்தற்குக் காரணமான முகத்தையுடையவர்களாய் அரக்கியர் நெருங்கிவந்து, அலைகளைத் தன் மேற்கொண்டுள்ள கடலின்கண் வீழ்கின்ற அன்னங்களைப் போல அவ்விராவணனது, கயிலைமலையை மிசைக் கொண்ட, தோள்கள்மேல் வீழ்ந்து அழுதனர்.

கு :— இருபது கரங்களோடு கருநிறங் கொண்டு விளங்கும் இராவணன் உடம்பு அலைகளையுடைய கடல் போன்றது என்க. அரக்க மகளிர் நடையால் அன்னத்தை யொத்தவர் ஆதல் அறிக. மலை மிசைத் தோள் என்றது, கயிலை மலையை மிசையே கொண்ட பெருமையுடைய தோள்களை. மாழ்குதல் இங்கு அழுது வருந்துதலை உணர்த்தியது. (230)

10075. தழுவினர் தழுவினர் தலையுந் தாள்களும்
எழுவுயர் புயங்களும் மார்பு மெங்கணும்
குழுவினர் முறைமுறை கூறு கூறுகொண்
டழுதன ரயர்த்தன ரரக்கி மார்களே.

தழுவினர் தழுவினர் தலையும், தாள்களும்,
எழு உயர் புயங்களும், மார்பும், எங்கணும்,
குழுவினர், முறைமுறை கூறுகூறு கொண்டு
அழுதனர் அயர்த்தனர் அரக்கி மார்களே.

பொ :—அரக்கிமார்கள்—ஒன்றாகக் கூடினவராய், (இராவணனது) தலைகளையும் கால்களையும் எழுப்போல்உயர்ந்த தோள்களையும் மார்பத்தையும் எல்லாவிடங்களையும் முறைமுறையே பாகம் பாகமாகப் பகிர்ந்துகொண்டு தழுவிக்கொண்டு தழுவிக்கொண்டு அழுதார்கள்; பின்பு அறிவு ஒடுங்கிக் கிடந்தார்கள்.

கு :— தழுவினர், தழுவினர்; முறை முறை, கூறு கூறு என்ற அடுக்குகள் பன்மையுணர்த்தின. அரக்கிமார்கள், குழுவினராய், தலையும் தாள்களும் புயங்களும் மார்பும் முறை முறையே கூறுகூறு கொண்டு தழுவினர் தழுவினராய் அழுதனர்; அயர்த்தனர். அழுது அயர்த்தனர் என முற்றெச்சமாக்கி முடித்தலும் ஆம். குழுவினர், தழுவினர் என்பன முற்றெச்சங்கள். (231)

10076. வருத்தமே தெனினது
புலவி னைகலும்
பொருத்தமே வாழ்வெனப்
பொழுது போக்குவார்

ஒருத்தர்மே லொருத்தர்வீழ்ந்
துயிரிற் புல்லினர்
திருத்தமே யெனவவன்
சிகரத் தோள்கள்மேல்.

வருத்தம் ஏதுஎனின், அது
புலவி; வைகலும்,
பொருத்தமே வாழ்வு எனப்
பொழுது போக்குவார்,
ஒருத்தர்மேல் ஒருத்தர் வீழ்ந்து
உயிரின் புல்லினர் —
'திருத்தமே' என அவன்
சிகரத் தோள்கள்மேல்.

பொ :— '(இம்மகளிர்க்கு) நாள்தொறும் வருத்தம் ஏது எனின்? அது, இராவணனோடு கொண்ட புலவி வருத்தந்தான் வாழ்வாவது இராவணனைப் பொருந்திப் புணர்வதே' என்று பொழுது போக்கும் இயல்பினராய அவன் பெண்டிர் (இராவணன் இறத்தலின் கண்டவர்) திருத்தமானசெயலே என நினைக்குமாறு, அவ்விராவணனுடைய மலைச் சிகரம் போன்ற தோள்கள்மேல் ஒருத்தர்மேல் ஒருத்தர் வீழ்ந்து தம் உயிரைத் தழுவுவது போல அன்போடு தழுவினர்கள்.

கு :— முன் இரண்டடிகளில் அரக்கியரின் முன்னைய இயல்பு கூறியவாறு. ஊடல் வருத்தம் தவிர வேறு வருத்தம் அறியாதவர்கள்; புணர்ச்சியின்பமே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டவர்கள் என்றவாறு. பொழுதுபோக்குவார், வினைப் பெயர்; பொழுது போக்குவாராய அவன் மனைவியர் என்க. வருத்தமறியாத அப்பெண்டிர் இராவணன் இறந்து படுதலின், வருத்தத்தின் வரம்பை எட்டியவராய் அவன் தோள்கள்மேல் ஒருத்தர்மேல் ஒருத்தர் வீழ்ந்து உயிரைத் தழுவுவது போலத் தழுவுவராயினர் என்க. அவர்கள்தம் அன்புறு தழுவல் திருத்தமான செயலே எனக் கண்டவர் கருதுவர் என்பார், 'திருத்தமே என' என்றார். திருத்தம் — நாகரிகம். கணவர் தம் தோளைப் பலர் காணத் தழுவுதல் நாகரிகமற்ற செயலே யாயினும், இறந்துபட்ட நிலையில் அவ்வாறு தழுவுதல் அத்

தகையதன்று என்றவாறு. மனைவியர் பலராதலின் இருபது தோள்கள் அவர்கள் யாவரும் தழுவுதற்குப் போதாமையின் ஒருத்தர்மேல் ஒருத்தர் விழ்ந்து புல்ல நேர்ந்தது. உயிரிற்புல்லி னுர் என்பதற்கு, அவன் உயிரோடு இருக்குங்கால் அவனைப் புல்லுதல் போலவே புல்லினர் எனப் பொருள் கூறலும் ஆம். புல்லுதலே வாழ்வு எனப் பொழுது போக்கினவர்கள், இராவ ணன் இறந்தவிடத்தும் அப்புல்லுதலையே செய்தல் இயல் பாதலின் அது திருத்தமே எனக்கண்டோர் கருதுவாராயினர் என்க. (232)

10077. இயக்கிய ரரக்கிய ருரக ரேழையர்
மயக்கமில் சித்தியர் விஞ்சை மங்கையர்
முயக்கியல் முறைகெட முயங்கி னுர்கடந்
துயக்கிலா வன்புகண் டெவருஞ் சோரவே.

இயக்கியர் அரக்கியர், உரகர் ஏழையர்,
மயக்கம்இல் சித்தியர், விஞ்சை மங்கையர்,—
முயக்கு இயல் முறைகெட முயங்கினுர்கள்— தம்
துயக்குஇலா அன்புகண்டு, எவரும் சோரவே.

பொ :— இயக்க மாதரும், அரக்க மாதரும், நாகர் பெண்டி ரும், மயக்கம் இல்லாத சித்தர் மகளிரும், வித்தியாதரர் மகளி ரும் தம் மாறுபடாத அன்பினைக்கண்டு யாவரும் சோர்வுற்று வருந்துமாறு, தழுவும் முறைமை கெட இராவணனைத் தழுவி னுர்கள்.

கு :— இயக்கியர் முதலோர் இராவணன் காதலியர். உரகர்—நாகர். சித்தர்களின் பெண்டிர் சித்தியர் எனப்பட்டார். தம்மை அவன் விரும்பித் தழுவத் தாமும் தழுவுதலே முறைமையாகலின் இராவணன் இறந்து கிடக்கும் இந்தநிலையில் அப்பெண்டிர் மட்டும் தழுவும் நிலை முயக்கியல் முறைக்கு மாருனது என்பார். 'முயக் கியல் முறை கெட முயங்கினுர்' என்ருர். இனி பிறர் காண முயங் குதல் முறையன்று ஆதல் நினைந்து அங்ஙனம் கூறினுர் எனலும் ஆம். அவ்வாறு தழுவும் அப்பெண்டிரின் அன்பு மிகுதியைக் கண்டவர்கள், அவர்தம் வருத்தம் பொருமல் சோர்வுற்றனர் என்க. (233)

10078. அறந்தொலை வுறமனத்
தடைத்த சீதையை
மறந்திலை யோவினு
மெமக்குன் வாய்மலர்
திறந்திலை விழித்திலை
யருளுஞ் செய்கிலை
இறந்தனை யோவென
விரங்கி யேங்கினர்.

'அறம்தொலைவுற மனத்து அடைத்த சீதையை
மறந்திலையோ, இனும்? எமக்கு உன் வாய்மலர்
திறந்திலை; விழித்திலை; அருளும் செய்கிலை;
இறந்தனையோ?' என இரங்கி, ஏங்கினர்.

பொ:— அறநெறி அழிய, நின் மனச்சிறையில் அடைத்து வைத்த சீதையை இன்னும் மறக்கவில்லையோ? அதனால்தான், (உன்மேல் அன்பு கொண்டுள்ள) எமக்கு உன் வாயாகிய மலரைத் திறந்து ஒன்று பேசவும் இல்லை; கண்விழித்து எம்மைப் பார்க்கவும் இல்லை; அணைத்து அருளும் செய்கின்றிலை; (அல்லது, மற்றவர்கள் நினைப்பது போல) இறந்துதான் போயினையோ? என்று கூறி இரங்கி அழுது ஏங்கினர்கள்.

கு:— இறந்தமை தெரிந்தும் இறவாத நிலையில் வைத்துப் பேசுவது மகளிர் இயல்பு என்பது இன்றும் உலகியலில் கண்டு தெளியலாம். இராவணன் தம்மைக் கண்திறந்து பாராமலும் வாய்திறந்து தம்மோடு ஒன்றும் பேசாமலும் அருள் செய்யாமலும் இருப்பதற்குக் காரணம், இன்னும் சீதையை மறவாமையோ? அல்லது, இறந்து பட்டமையோ? என அம்மகளிர் ஐயவாய் பாட்டால் சொல்லிப்புலம்பியவாறு. இராவணன் உயிரோடு இருந்தபோது அவன் சீதையை மறவாமையால் தம்மைப் புறக்கணித்திருந்தது நினைந்து போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் இப்போதும் அந்தநிலை மாறவில்லையோ என்பது அவர்கள் குறிப்பு. சீதை பிறன் மனையாதலின் அவளை விரும்பிமனத்திற் கொண்டது பெரும்பாவம் என்ற கருத்தால் 'அறந்தொலைவுற மனத்தடைத்த சீதையை' என்றனர். ''பிறன் பொருளாட்

பெட்டொழுகும் பேதமை ஞாலத் தறம்பொருள் கண்டார்கண் இல் '' (குறள்—141) என்பது இங்கு நினைவு கூர்தல்தகும். (234)

*மண்டோதரி இராவணன்மேல் விழுந்து அழுதல்*
*10079 — 10087*

10079. தரங்கநீர் வேலையிற் றடித்து வீழ்ந்தென
உரங்கிளர் மதுகையா னுருவின் வீழ்ந்தனள்
மரங்களு மலைகளு முருக வாய்திறந்
திரங்கினள் மயன்மக ளினைய பன்னினாள்.

தரங்கநீர் வேலையில் தடித்து வீழ்ந்தென
உரங்கிளர் மதுகையான் உருவின் வீழ்ந்தனள்,
மரங்களும் மலைகளும் உருக, வாய்திறந்து,
இரங்கினள்– மயன்மகள்,– இனைய பன்னினாள்.

பொ :— மயன் மகளாகிய மண்டோதரி, மன வலியும் மிக்க உடல்வலியுமுடைய இராவணனது உடம்பின்மேல், அலைகள் நிறைந்த நீரையுடைய கடலில் மின்னல் வீழ்ந்தாற்போல வீழ்ந்து, (ஓரறிவுயிராகிய) மரங்களும், (அதுவுமற்ற) மலைகளும் உருகுமாறு வாய்திறந்து அழுதனளாய் இத்தன்மையானவற்றைச் சொன்னாள்.

கு :— இருபது கைகளும் கரியநிறமும் பெற்றுள்ள இராவணனுடம்பு, அலைகள் நிறைந்த கருங்கடல் போன்றது என்க. மண்டோதரி மின்னலைப் போன்றவள் என்றது, அவள் மேனியொளியைப் புலப்படுத்தவேண்டி. உணர்ச்சியில்லாத மரங்களும், மலைகளுமே அவள் அழுகையைக் கேட்டு உள்ளம் உருகின என்றால், உணர்ச்சியுடைய மற்றையுயிர் உருகுதல் சொல்லவேண்டுமோ என்றவாறு. இரங்கினள் முற்றெச்சம். தரங்கம்—அலை. வேலை—கடல். தடித்து—மின்னல். (235)

10080. அன்னேயோ வன்னேயோ வாகொடியேற்
★ கடுத்ததுநா னரக்கர் வேந்தன்
பின்னேயோ விறப்பதுமுன் பிடித்திருந்த
கருத்ததுவும் பெற்றி லேனே

முன்னேயோ விழுந்ததுவு முடித்தொகையோ
படித்தலைய முகங்க டாணே
வென்னேயோ வென்னேயோ விராவணனார்
முடிந்தபரி சிதுவோ பாவம்.

'அன்னேயோ! அன்னேயோ! ஆ, கொடியேற்கு
அடுத்தது! நான் அரக்கர் வேந்தன்
பின்னேயோ, இறப்பது? முன்பிடித்திருந்த
கருத்ததுவும் பெற்றிலேனே!
முன்னேயோ விழுந்ததுவும் முடித்தொகையோ?
படித்தலைய முகங்கள் தாணே?
என்னேயோ, என்னேயோ, இராவணனார்
முடிந்த பரிசு! இதுவோ பாவம்!

பொ :— அன்னேயோ! அன்னேயோ கொடியேனாகிய எனக்கு நேர்ந்திருப்பது, ஆ! பெருந்துயரம்; நான், அரக்கர் வேந்தனாகிய என் கணவரின் பின்னேயோ இறப்பது? (அவர்க்கு முன் இறக்க வேண்டும் என்று யான்) முன்பு கொண்டிருந்த கருத்தையும் பெற்றிலேன் ஆயினேனே! என் முன்னே விழுந்து கிடப்பதும் அவர்தம் முடிகளின் கூட்டந்தாமோ? தரையின்கண் வீழ்ந்துள்ளவை அவர்தம் முகங்கள்தாமோ? இராவணனார் உயிர் முடிந்த தன்மை, என்னேயோ என்னேயோ! இதுவோ பாவத்தின் விளைவு!

கு:- அன்னேயோ என்பது இரக்கக்குறிப்புணர்த்தும் சொல். ஆ என்பது துன்பமிகுதியை யுணர்த்தும் குறிப்புச் சொல். தன் கணவர்க்கு முன் இறக்க வேண்டும் — மங்கல மகளாகவே உயிர் விட வேண்டும் என்பது நல்லியல் மகளிர் எல்லோர்க்கும் ஏற்புடைய கருத்தேயாகும். மண்டோதரி இத்தகைய கருத்தையே கொண்டிருந்தாளாயினும் அக்கருத்து நிறைவேறாமையின் 'நான் அரக்கர் வேந்தன் பின்னேயோ இறப்பது? முன் பிடித்திருந்த கருத்ததுவும் பெற்றிலேனே!' என இரங்குவாளாயினள். இராவணனுடைய முடிகளும் முகங்களும் தரையில் வீழத்தக்கன அல்லவாதலின் 'விழுந்தது முடித்தொகையோ? படித்தலைய முகங்கடாணே?' என ஐயவாய்பாட்டால் வினவி அவன் பெருமையைப் புலப்படுத்துவாளாயினள். 'இதுவோ பாவம்' என்பதற்கு,

'இதுவோ இராவணனுர் இதுகாறும் செய்து வந்த பாவத்தின் விளைவு?' என்றும், 'இதுவோ யான் செய்த பாவத்தின் விளைவு?' என்றும் பொருள் கொள்ளலாம். தேவர்களெல்லாம் ஏவல் செய்யுமாறு உயர்ந்தநிலையிலிருந்த இராவணன் இப்போது புழுதியில் விழ்ந்துகிடக்கும் அவல நிலையை நினைந்து இங்ஙனம் வினவினுள் என்க. (236)

10081. வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலுங் கீழும்
எள்ளிருக்கு மிடனின்றி யுயிரிருக்கு
மிடனுடி யிழைத்த வாறே
கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை
மனச்சிறையிற் கரந்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்புகுந்து
தடவியதோ வொருவன் வாளி.

'வெள்எருக்கஞ் சடைமுடியான் வெற்பு எடுத்த
திருமேனி, மேலும் கீழும்
எள் இருக்கும் இடன்இன்றி, உயிர் இருக்கும்
இடன்நாடி, இழைத்தவாறே?
"கள்இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்இருக்கும்" எனக் கருதி, உடல் புகுந்து,
தடவியதோ ஒருவன் வாளி?

பொ:— இராமன் என்னும் ஒரு மனிதனுடைய அம்பு வெள்ளெருக்கமாலை யணிந்த சடை முடியையுடைய சிவபிரான் எழுந்தருளியிருக்கும் கயிலைமலையைப் பெயர்த்தெடுத்த (இராவணனுடைய) அழகிய உடம்பின் மேலும் கீழும் எள் இருப்பதற்குரிய சிற்றிடமும் இல்லாதபடி அவன் உயிர் இருக்கும் இடத்தைத் தேடித் துளைசெய்த தன்மையோ? அல்லது, தேன் இருக்கும் மலர்களை யணிந்த கூந்தலை யுடைய சீதையை இதயமாகிய சிறையில் மறைத்து வைத்த காதல் உள்ளே எங்கேனும் மறைந்திருக்கும் என்று கருதி அவனுடலில் புகுந்து தேடியவாறே?

கு:— இராவணனுடம்பில் எள்ளிடவும் இடமில்லாதபடி இராமபாணம் துளைத்திருப்பது கண்ட மண்டோதரி, இராவணனது உயிர் இருக்கும் இடத்தைத் தேடித்தான் இராமபாணம் இவ்வாறு துளை செய்ததா? அல்லது, சீதையை இதயமாஞ் சிறையில் வைத்த இராவணனது காதல் உள்ளே ஒளிந்திருக்கும் என்று அதனைப் போக்க அவன் உடலில் புகுந்து துளை பல செய்து தேடியதோ என வினவி இரங்கினள் என்க. இராவணனது வலிமையும் பெருமையும் புலப்பட 'வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி' என்று சிறப்பித்தாள். ஒருவன் வாளியால் தொளைபடுதற்குரிய திருமேனி அன்று என்றவாறு. உயிர் இருக்கும் இடத்தைத் தேடித் துளைத்ததினும் அவன் காதல் உள்ளிருக்கும் எனத் தடவித் துளைத்ததுதான் மிகுதியாக இருத்தல் வேண்டும் என்பது மண்டோதரியின் கருத்தாகும்; முற் கூறியதில் பிற் கூறியது வலியுடைத்து என்ற அளவை நூல் முறையை இங்கு நினையலாம். கற்புடைப் பெண்டிர் பிறர் நெஞ்சு புகார் என்ற மரபை மாற்றி இராவணன் தன் கொடுமையினால் சீதையைத் தன் இதயமாஞ் சிறையில் வைத்தான் என்பதை:— ''மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்ன நீண்ட, எயிலுடை யிலங்கை வேந்தன் இதயமாஞ் சிறையில் வைத்தான்'' (ஆரணிய—மாரிசன் வதைப்—85) என்று முன்னர்க் கூறி யிருத்தலால் அறியலாம். சீதையை இதயச் சிறையில் நின்றும் வெளிப்படுத்த வேண்டின் அவ்விராவணன் காதலை அழித்தல் வேண்டும். அக்காதல் உள்ள இடத்தைத் தேடியே இராமன் அம்பு இராவணன் உடலைத் துளைத்துக் காதலை அழித்து, அவன் இதயமாஞ் சிறையிலிருந்து சீதையை விடுவித்து, சிறந்த கற்புடையளாக்கியிருத்தல் வேண்டும் என்பது மண்டோதரியின் குறிப்பு. (237)

10082. ஆரம்போர் திருமார்பை யகன்முழைக
ளெனத்திறந்திவ் வுலகுக் கப்பால்
தூரம்போ யினவொருவன் சிலைதுரந்த
சரங்களே போரிற் றேற்று
வீரம்போ யுரங்குறைந்து வரங்குறைந்து
வீழ்ந்தானே வேறே கெட்டேன்
ஓரம்போ வுயிர்பருகிற் றிராவணனை
மானுடவ னூற்ற மீதோ.

'ஆரம்போர் திருமார்பை அகல் முழைகள்
எனத் திறந்து, இவ் உலகுக்கு அப்பால்
தூரம்போயின, ஒருவன் சிலைதுரந்த
சரங்களே ; போரில் தோற்று,
வீரம்போய், உரம்குறைந்து, வரம்குறைந்து,
வீழ்ந்தானே ! வேறே! கெட்டேன் !
ஓர் அம்போ, உயிர்பருகிற்று, இராவணனை !
மானுடவன் ஊற்றம் ஈதோ !

பொ :— ஒப்பற்றவனான இராமன் வில்லினின்றும் விடுத்த அம்புகளா, முத்து மாலைகளை அணிந்த (இராவணனது) அழகிய மார்பை வாயகன்ற குகைகளைப்போலப் பிளந்துவிட்டு இந்த உலகத்திற்கு அப்புறம் நெடுந்தொலைவு சென்றன ! (அவ்வம்புகளால்) போரில் காட்டுதற்குரிய வீரம்போய், வலிமை குறைந்து, பெற்றிருந்த வரங்களும் குறைந்து முன்னைய நிலையில் வேறுபட்டவனாக (இராவணன்) வீழ்ந்தானே! கெட்டேன் !! இராவணனை ஒரு கணையா உயிர் உண்டது ? மானிடனது வலிமை இத் தகையதோ!

கு :— ஒருவன் சிலைதுரந்த சரங்களே மார்பை அகன் முழைகள் எனத் திறந்து இவ்வுலகுக்கு அப்பால் தூரம்போயின ! எனவும், இராவணனை ஓரம்போ உயிர்பருகிற்று? எனவும், மானுடவன் ஊற்றம் ஈதோ எனவும் மண்டோதரி வியந்து கூறியவாறு. ஆரம்—முத்து. போர்த்தல் இங்கு மிகுதியாக அணிந்திருந் தமையை யுணர்த்தியது. ஒரு மனிதன் ஒரு வில்லின் வழியாக விடுத்த அம்புகள் இராவணனது வயிரமார்பை மலைக்குகைகளைப் போலப் பிளந்ததும், இவ்வுலகுக்கு அப்பால் விரைந்து போனதும் இதுகாறும் நிகழாதனவாதலின் இங்ஙனம் வியந்து வினவுவாளா யினள். தோற்றுதல் — காட்டுதல். வேறே வீழ்ந்தான் என மாற்றுக. 'கெட்டேன்' என்பது இரக்க மிகுதியால் தன்னை நொந்துகொள்ளும் சொல். இராவணனுயிரை ஓர் அம்பு பருகியது என்பது நம்புதற்குரியதாக இன்மையின் ஓரம்போ உயிர் பருகிற்று ! என வியந்து வினவுவாளானாள். இராமன் மானிடன் அல்லன்; பரம்பொருளே என்னும் குறிப்பினள் மண்டோதரி ஆதலின் 'மானுடவன் ஊற்றமீதோ' என்பாளாயினள்.

(238)

10083. காந்தையருக் கணியனைய சானகியார்
பேரழகு மவர்தங் கற்பும்
ஏந்துபுயத் திராவணனார் காதலுமச்
சூர்ப்பணகை யிழந்த மூக்கும்
வேந்தர்பிரான் றயரதனார் பணியினால்
வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவுங் கடைமுறையே புரந்தரனார்
பெருந்தவமாய்ப் போயிற் றம்மா.

'காந்தையருக்கு அணியனைய சானகியார்
பேர்அழகும், அவர்தம் கற்பும்,
ஏந்து புயத்து இராவணனார் காதலும்,
அச்சூர்ப்பணகை இழந்த மூக்கும்,
வேந்தர் பிரான், தயரதனார் பணியினால்
வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவும், கடைமுறையே புரந்தரனார்
பெருந்தவமாய்ப் போயிற்று, அம்மா!

பொ:— பெண்பாலார்க் கெல்லாம் அணிபோன்றவரான சானகியாரின் பெரிய அழகும், அவர்தம் கற்பும், உயர்ந்த தோள்களையுடைய இராவணனார் காதலும், அந்தச் சூர்ப்பணகை இழந்த மூக்கும், அரசர்க்கரசனாகிய தயரதன் ஏவலால் (இராமன்) விரதம் மேற்கொண்டு கொடிய காட்டிற்கு வந்ததும், முடிவில் இந்திரனுடைய பெருந்தவமாய்ப் போயிற்று; இஃ தென்னே வியப்பு!

கு:— இராமன், தந்தை பணியால் கான் புகுந்ததும், சூர்ப்பணகை அவ்விராமனிடம் வைத்த காதலால் சீதையை யெடுக்கச் சென்று மூக்கையிழந்ததும், மூக்கையிழந்தவள் சொன்னபடி அழகிற் சிறந்த சீதையை இராவணன் கவர்ந்து சென்றதும், அவன் கருத்திற்கு உடன்படாத சீதையின் கற்பும், அச்சீதையின் மேல் இராவணன் கொண்டிருந்த காதலும், அவ் இராவணனது இறப்பிற்குக் காரணமாயின என்னும் கருத்தால் மண்டோதரி இவையாவும் இந்திரனது பெருந்தவப்பயனாய்ப் போயின என்று கூறினாள். இராவணனது இறப்பு இந்திரனுக்கு மகிழ்ச்சியை யூட்டித் தன்னை மீளாத் துன்பத்திற்கு ஆளாக்கியது

நினைந்து மண்டோதரி இங்ஙனம் கூறலானாள். சானகியின் பேரழகு இராவணன் காதலுக்குக் காரணமாயது போலவே, அவள் கற்பு அவன் சாதலுக்குக் காரணமாயது என்றவாறு. இராமன் தந்தை பணியால் கானம் புகவில்லையானால் சூர்ப்பணகை மூக்கிழத்தல் இல்லை. சீதையின் பேரழகை இராவணனுக்குச் சூர்ப்பணகை சொல்லியிருக்க மாட்டாள்; இராவணன் சீதையின்மேல் காதல் கொண்டிருக்க மாட்டான்; சீதையின் கற்புக்கனல் இராவணனை அழித்திருக்காது என்க. இந்திரன் பெருந்தவமே இராமனைக் கான்புகச் செய்தது; மற்றை விளைவுகளையும் உண்டாக்கியது என்றவாறு. 'அரக்கர் பாவமு மல்லவர் இயற்றிய வறமும், துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழிமடமான்' (அயோத்தி — மந்தரை சூழ்ச்சி — 78) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (239)

10084. தேவர்க்குந் திசைக்கரிக்குஞ் சிவனார்க்கு
மயனார்க்குஞ் செங்கண் மாற்கும்
ஏவர்க்கும் வலியானுக் கென்றுண்டா
மிறுதியென வேமாப் புற்றேன்
ஆவற்க ணீயுழந்த வருந்தவத்தின்
பெருங்கடற்கும் வரமென் றான்ற
காவற்கும் வலியானோர் மானுடவ
னுளனென்னக் கருதி னேனே

"'தேவர்க்கும், திசைக்கரிக்கும், சிவனார்க்கும்,
அயனார்க்கும், செங்கண்மாற்கும்,
ஏவர்க்கும் வலியானுக்கு என்று உண்டாம்
இறுதி?" என ஏமாப்புற்றேன்;
ஆவற்கண் நீ உழந்த அருந்தவத்தின்
பெருங்கடற்கும், வரம்என்று ஆன்ற
காவற்கும் வலியான்ஓர் மானுடவன்
உளன் என்னக் கருதினேனே?

பொ :— தேவர்கட்கும், திசையானைகட்கும், சிவனுக்கும், பிரமனுக்கும் செங்கண்ணனாகிய திருமாலுக்கும் மற்றும் எத்தகையோர்க்கும் வலியவனாகிய உனக்கு என்று உண்டாகும் இறப்பு? (ஒரு நாளும் உண்டாகாது) என இறுமாப்புக்கொண்டிருந்தேன்.

நீ ஆவலோடு வருந்திச் செய்த அரிய தவமாகிய பெரிய கடலுக்கும், அத்தவத்திஞல் பெற்ற வரம் என்று அமைந்த காவலுக்கும் (அழிவை யுண்டாக்கும்) வலியவஞக ஒரு மனிதன் உளன் என்று எண்ணினேஞே? (எண்ணவில்லையே)

கு:— என்று உண்டாம் இறுதி என்பது என்றும் உண்டாகாமையை யுணர்த்தியது. ஏமாப்பு — இறுமாப்பு. ஆவற்கண் என்புழி ஏழனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. உழத்தல் — வருந்திச் செய்தல்; புற்றுமாய் மரமாய்ப் புனல்காலே உண்டியாய்க் கொண்டு வருந்தித் தவம் செய்தல். தவத்தின் பெருமை தோன்ற 'அருந் தவத்தின் பெருங்கடல்' என்று உருவகஞ் செய்தார். அத்தும் இன்னும் தவிர்வழிச்சாரியை. ஆன்ற— அமைந்த. தவம் செய்து பெற்ற வரமாகிய பாதுகாப்பையும் அழிக்கவல்லஞக ஒரு மானுடவன் இருப்பான் என்று யான் எதிர் பார்க்கவில்லை என்றவாறு. எதிர்பாராத நிலையில் வரும் துன்பம் மிகக் கொடியதாகலின் 'கருதினேஞே' என்று கூறிஞள். ஏகாரம் விஞப்பொருளது. கருதவில்லையே என்பது கருத்து. தேவர்க்கும் மூவர்க்கும் வலியவஞகிய இராவணனை வெல்லவல்லவஞக ஒரு மானிடன் உளன் என்று கருதல் கூடாமையின் கருதினேஞே என வினவிஞள் என்க. (240)

10085. அரைகடையிட் டமைவுற்ற முக்கோடி
யாயுவும்பே ரறிஞர்க் கேயும்
உரைகடையிட் டளப்பரிய பேராற்றற்
றோளாற்றற் குலப்போ வில்லை
திரைகடையிட் டளப்பரிய வரமென்னும்
பாற்கடலைச் சீதை யென்னும்
பிரைகடையிட் டழிப்பதனை யறிந்தேஞே
தவப்பயனின் பெருமை பார்ப்பேன்

அரைகடை இட்டு அமைவுற்ற முக்கோடி
ஆயுவும் பேர் அறிஞர்க்கேயும்
உரைகடை இட்டு அளப்பு அரிய பேர்
ஆற்றல் தோள்ஆற்றற்கு உலப்போ இல்லை

திரைகடை இட்டு அளப்புஅரிய வரம்என்னும்
பாற்கடலைச் சீதை என்னும்
பிரைகடை இட்டு அழிப்பதனை அறிந்தேனோ,
தவப்பயனின் பெருமை பார்ப்பேன்?

பொ :— மூன்றரைக்கோடி ஆயுளுக்கும், பெரிய அறிஞர்க்கும் சொல்லால் முடிவு கட்டி அளந்து சொல்ல இயலாத பெரிய வலிமையையுடைய தோள் ஆற்றலுக்கும் அழிவே வில்லை; (என்று எண்ணியிருந்தேன்: ஆனால்,) தவப்பயனின் பெருமை யையே பார்த்துக்கொண்டிருக்கும் யான், அலைகளை முடிவிட்டு அளத்தற்கு அரிய, வரம் என்கின்ற பாற்கடலைச் சீதை என்கின்ற பிரையை இட்டு (விதி) கடைசியில் அழிப்பதை அறிந்தேனோ? (அறிந்திலேனே)

கு:— அரைகடை இட்டு அமைவுற்ற முக்கோடி ஆயு என்றது, மூன்றரைக்கோடி ஆயுளை. வரத்தினைப் பாற்கடலாக உருவகம் செய்தற்கேற்ப அவ்வரத்தினைத் திரித்த சீதையைப் பிரையாக உருவகம் செய்தார். பாற்கடல் பெரிதாயினும் சிறிய அளவினையுடைய பிரைமோர் அதில் விட்டால் அத்துணைப்பாலும் திரிந்து வேறுபடுதல்போல இராவணனுடைய வரங்கள் எத்துணைப் பெரியவாயினும் சீதைமேல் வைத்த காதலால் அவ்வரங்கள் பயன் தாராமல் திரிந்து வேறுபட்டன என்றவாறு. 'திரைகடையிட்டளப்பரிய' என்பது பாற்கடற்கு இயற்கையடை; குருதிக் கோட்டுக் குஞ்சரநகரம் என்புழிப்போல· பிரை இட்டு என்ற வினையால் விதி என்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது. (241)

10086. ஆரனு ருலகியற்கை யறிதக்கா
ரவையேழு மேழு மஞ்சும்
வீரனு ருடல்துறந்து விண்புக்கார்
கண்புக்க வேழ வில்லால்
நாரநாண் மலர்க்கணையான் நாளெல்லாந்
தோளெல்லா நைய வெய்யும்
மாரனுர் தனியிலக்கை மனித்தனு
ரழித்தனரே வலத்தி னுலே.

'ஆர் அனுர், உலகு இயற்கை அறிதக்கார்?
அவை ஏழும் எழும் அஞ்சும்
வீரனுர் உடல் துறந்து, விண் புக்கார்;
கண்புக்க வேழ வில்லால்
நார நாண் மலர்க்கணையால், நாள்எல்லாம்
தோள் எல்லாம், நைய எய்யும்
மாரனுர் தனிஇலக்கை மனித்தனுர்
அழித்தனரே, வலத்தினுலே!

பொ :— உலகின் இயல்பை உள்ளவாறு உணரத்தக்க அத் தன்மையோர் யார் தாம்? (எவரும் இலர்) அந்தப் பதினுன்கு உலகங்களும் அஞ்சுதற்குரிய வீரனுராகிய இராவணனுர், உடலை விடுத்து விண்ணுலகம் புகுந்தார்; கணுக்கள்பொருந்திய கரும்பு வில்லால் (வண்டொழுங்காகிய) நாணினின்று புறப்படும் நாண் மலராகிய அம்புகளால் நாள் எல்லாம் தோள் எல்லாம் நையுமாறு எய்கின்ற மன்மதனுடைய தனிப்பட்ட இலக்காக இருந்த இராவணனுரை மனிதராக இருப்பவர் தம் வலிமையினுலே அழித்து விட்டாரே!

கு :— பதினுன்குஉலகங்களிலுள்ளோரும் அஞ்சுமாறு அடக்கி ஆண்ட இராவணனை வலிமைகுறைந்த மனிதர்ஒருவர் அழிப்பார் என்று யாரும் முன்னறிந்திலர் ஆதலின், உலகியற்கை யறிதக் கார் ஆர் அனுர்' என்று கூறினுள். மன்மதனுல் அன்றிப் பிறர் யாராலும் எய்யப்படாத பெருவலியுடையவன் இராவணன் என்பது தோன்ற 'மாரனுர் தனியிலக்கை' என்ருள். மாரன் கணைக்கு மட்டுமே இலக்காகின்றவன் இராவணன் என்றவாறு. இனி, மாரன் மற்றவர்களையெல்லாம் விடுத்து இராவணனையே மலர்க் கணையால் எய்து இன்பவுணர்வினை எழுப்பினன் என்பது புலப்பட அங்ஙனம் கூறினுள் எனலும் ஆம். ''காமவேளென்னு நாமத் தண்ணலெய்வானுமாக்கி யைங்கணை யரியத்தக்க புண்ணெலா மெனக்கே யாக்கி விபரீதம் புணர்த்துவிட்டீர்'' (மாயா-சனகப்-12) என இராவணனே கூறியிருப்பதும் இங்கு நினையலாம். தோள் எல்லாம் நைய என்பதற்கு, மன்மதன் தோள்முழுவதும் எய்யுந் தொழிலால் இளைத்து வருந்த என்றும், இராவணன் தோள்கள் இருபதும் மலர்க்கணை பாயப்பெற்று வருந்த என்றும் இரு பொருள் கொள்ளலாம். (242)

இச்செய்யுளின்பின் 41, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10086 (a) அன்னையவள் சீதை யனைத்துலக மீன்றாளென்று
உன்னி யுரைத்தே னுரைகேளா துத்தமனே
பின்னை யிராமன் சரத்தால் பிளப்புண்ட
உன்னுடைய பேருடலம் உற்றெருகால் நோக்காயோ.

10087. ஆரா வமுதா
★ யலைகடலிற் கண்வளரும்
நாரா யணனென்
றிருப்பேனி ராமனைநான்
ஓராதே கொண்டகன்று
யுத்தமனார் தேவிதனைப்
பாராயோ நின்னுடைய
மார்பகலம் பட்டவெலாம்.

ஆரா அமுதாய்
அலைகடலில் கண்வளரும்
நாராயணன் என்று
இருப்பேன் இராமனை நான்;
ஓராதே கொண்டு அகன்றாய்,
உத்தமனார் தேவிதனை;
பாராயோ, நின்னுடைய
மார்புஅகலம் பட்ட எலாம்?

பெ :— நான், இராமனை ஆராத அமுதம்போன்று இனிய வனாய் அலைகளையுடைய திருப்பாற் கடலில் அறிதுயில் புரிகின்ற நாராயணன் அமிசம் என்று தெளிந்திருக்கும் தன்மையேன்; என் கருத்தை ஆராயாமல் அந்த உத்தமனார் தேவியாகிய சீதையைக் கவர்ந்து கொண்டு அங்கு நின்று அகன்றுவிட்டாய்; (அதன் பயனாக இப்போது) நின்னுடைய மார்பின் பரப்பு அடைந்த கதியை எல்லாம் பார்க்கமாட்டாயோ ?

கு :— ஆரா அமுது என்றது, எவ்வளவு நுகர்ந்தாலும் மன நிறைவு வாராத இனிமை மிக்க அமிழ்தம். இப்பாடல் பல சிறந்த ஏடுகளில் இல்லை. இச்செய்யுளின் நடையும் அமைப்பும் இது இடைச்செருகல் என்பதை நிறுவிவிடும். (243)

*மண்டோதரி இராவணன் உடலைத் தழுவி உயிர்விடுதல்*

10088. என்ற ழைத்தன
ளேங்கி யெழுந்தவன்
பொன்ற ழைத்த
பொருவரு மார்பினைத்
தன்ற ழைக்கைக
ளாற்றழு வித்தனி
நின்ற ழைத்துயிர்த்
தாளுயிர் நீங்கினாள்.

என்று அழைத்தனள், ஏங்கி எழுந்து, அவன்
பொன் தழைத்த பொருஅரு மார்பினைத்
தன் தழைக்கைகளால் தழுவித் தனி
நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர்நீங்கினாள்.

பொ :— என்று மண்டோதரி புலம்பி அழைத்தவளாய் ஏக்கங் கொண்டு எழுந்து அந்த இராவணனது பொன் அணிகலங்கள் பொருந்தியுள்ள ஒப்பற்ற மார்பினைத் தன் தளிர்போன்ற கைகளால் தழுவிக்கொண்டு தனித் தன்மையோடு நின்று உரத்த குரலால் அழைத்துப் பெருமூச்சுவிட்டாள்; பின் உயிர் நீங்கினாள்.

கு :— பொன் தழைத்த என்றது பொன்னணிகலங்கள் பெருக அணிந்த என்றவாறு. 'தனி நின்று' என்றது, உறவினர்களை யெல்லாம் துறந்து இராவணனையே சாரவேண்டும் என்ற உறுதியோடு தனித்தன்மை கொண்டு நின்று என்றவாறு. இது ஆஞ்சிக் காஞ்சி என்னும் புறத்துறையுள் அடங்கும். (244)

*கணவனோடு மாண்ட மண்டோதரியை மாதர்கள் வாழ்த்துதல்*

10089. வான மங்கையர்
விஞ்சையர் மற்றுமத்
தான மங்கைய
ருந்தவப் பாலவர்

ஆன மங்கைய
    ரும்மருங் கற்புடை
மான மங்கையர்
    தாமும் வழுத்தினர்.

வான மங்கையர், விஞ்சையர், மற்றும் அத்
தான மங்கையரும் தவப் பாலவர்
ஆன மங்கையரும் அருங் கற்புடை
மான மங்கையர் தாமும் வழுத்தினர்.

பொ :— வானுலகத்து வாழும் தேவ மாதரும், விஞ்சை மகளிரும், மேலும் அந்தத் தானவர்மகளிரும், தவத்தின்சார்புடைய முனிவர் பத்தினியரும் அரிய கற்புடைய மானிட மங்கையரும் உயிர்நீத்த மண்டோதரியை வாழ்த்தினர்கள்.

கு :— கணவனோடு உயிர்துறத்தல் கற்புடைப் பெண்டிர் கடமையாதலின் அக்கற்புடைமை மண்டோதரியிடத்தில் கண்ட வான மங்கையரும், விஞ்சை மாதரும், தானவ மங்கையரும், முனிவர் பன்னியரும், மானிட மகளிரும் அவளை வாழ்த்தினர்கள் என்க. (245)

*வீடணன் இராவணனுக்கு ஈமக்கடன் புரிதல், 10090 - 10093*

10090. பின்னர் வீடணன் பேரெழிற் றம்முனை
வன்னி கூவி வரன்முறை யான்மறை
சொன்ன வீமம் விதிமுறை யாற்றொகுத்
தின்ன னெஞ்சினொ டஞ்சலித் தேற்றினான்.

பின்னர் வீடணன் பேர்எழில் தம்முனை
வன்னி கூவி, வரன்முறையால் மறை
சொன்ன ஈமம் விதிமுறையால் தொகுத்து,
இன்னல் நெஞ்சினொடு அஞ்சலித்து ஏற்றினான்.

பொ :— பின்பு வீடணன், முறைப்படி அக்கினியைப் பிரதிட்டை செய்து ஈமவிதியை வேதம் கூறிய முறையில் தொகுத்து, துன்பம்மிக்க நெஞ்சினோடு, மிக்க அழகுடைய தன் அண்ணனை அஞ்சலிசெய்து (ஈமத்தில்) ஏற்றினான்.

கு :— வீடணன் முன்புசெய்ய வேண்டியவற்றை முறையால் செய்து இராவணனுடம்பை ஈமவிறகின்மேல் ஏற்றினன் என்ற வாறு. இனி எரியில் எரியப்போகின்ற தன் அண்ணனை நினைந்து இன்னல் நெஞ்சினோடு அஞ்சலி செய்வானாயினன் வீடணன். (246)

10091. இந்த னத்தகில் சந்தன மிட்டுமேல்
அந்த மானத் தழகுறத் தானமைத்
தெந்த வோசையுங் கீழுற வார்த்திடை
முந்து சங்கொலி யெங்கு முழங்குற.

இந்தனத்து அகில் சந்தனம்இட்டு, மேல்
அந்த மானத்து அழகுறத் தான் அமைத்து,
எந்த ஓசையும் கீழ்உற ஆர்த்து, இடை
முந்து சங்குஒலி எங்கும் முழங்குற.

பொ :— இராவணனைக் கிடத்திய ஈம விறகின்மேல் அகில் கட்டையையும் சந்தனக் கட்டையையும் இட்டு அந்தத் தேவ விமானத்தின் அழகு பொருந்துமாறு தானே அமைத்து எந்த ஓசையும் கீழ்ப்படுமாறு ஆரவாரித்து நடுவே முற்படுகின்ற சங் கொலி எங்கும் முழங்க,

கு :— அடுத்த செய்யுளில் முடியும்; குளகம். இந்தனம் என்றது ஈம விறகினை. முன் தம்முனை ஏற்றினன் என்று வந்தமை யால் ஏற்றியபின் அவன்உடம்பின்மேல் அகிலும் சந்தனமுமாகிய விறகுகளைக்கொண்டு தேவ விமானத்தின் அமைப்புப் பொருந்த அடுக்கினன் என்க. (247)

10092. கொற்ற வெண்குடை யோடு கொடிமிடைந்
துற்ற வீம விதியி னுடன்பட
சுற்ற மாதர் தொடர்ந்துடன் சூழ்வர
மற்ற வீரன் விதியின் வழங்கினன்.

கொற்ற வெண்குடையோடு கொடி மிடைந்து,
உற்ற ஈம விதியின் உடன்பட,
சுற்றம் மாதர் தொடர்ந்து உடன்சூழ்வர,
மற்ற வீரன் விதியின் வழங்கினன்.

பொ :— வெற்றி வெண்குடையோடு கொடிகள் நெருங்கிப் பொருந்திய ஈம விதிச்சடங்கின்கண் உடன் பொருந்தவும் சுற்றத்தாரும் பெண்டிரும் தன்னைத் தொடர்ந்து சூழ்ந்துவரவும், அவ்விடணனாகிய வீரன் விதிப்படி (நெருப்பை) வழங்கினான்.

கு :— இராவணன் பேரரசன் ஆதலின், அவன் இறுதிச் சடங்கு அவ்வரச மரியாதையோடு நிகழ்ந்தது என்பார், 'கொற்ற வெண்குடையோடு கொடிமிடைந்து........உடன்பட' என்றார். ஈமச்சடங்கின்கண் அரசனுக்குரிய வெண்குடையும் கொடியும் உடன் பொருந்திவரவும், சுற்றமும் மாதரும் தொடர்ந்து சுற்றவும், வீடணன் ஈமப்பள்ளியை வலம்செய்துவந்து நெருப்பை மூட்டினான் என்றவாறு. (248)

10093. கடன்கள் செய்து முடித்துக் கணவனை
உடன்தொ டர்ந்த மயன்மக ளோடுடன்
அடங்க வெங்கன லுக்கவி யாக்கினான்
குடங்கொ ணீரினுங் கண்சோர் குமிழியான்.

கடன்கள் செய்து முடித்து, கணவனை
உடன் தொடர்ந்த மயன்மகளோடு உடன்
அடங்க வெங்கனலுக்கு அவி ஆக்கினான்—
குடங்கொள் நீரினும் கண்சோர் குமிழியான்.

பொ :— குடத்தில் கொண்ட நீரினும் அதிகமாகக் கண்களிலிருந்து பெருகுகின்ற குமிழியோடு கூடிய நீரினையுடையவனான வீடணன், இறுதிக்கடன்களைச் செய்து முடித்துவிட்டு, கணவனை உடன்தொடர்ந்து உயிர்விடுத்த மயன்மகளாகிய மண்டோதரியோடு (இராவணன்) உடன் அடங்குமாறு வெம்மைமிக்க கனலுக்கு அவியாகுமாறு செய்தான்.

கு :— ஈமத்தீ வேள்வித்தீப் போன்றது என்ற கருத்தால் 'மயன் மகளோடு அடங்க வெங்கனலுக்கு அவி ஆக்கினான்' என்றார். அவி—அவிசு. அங்கிக்கு உணவு. மண்டோதரியின் உடம்பையும் இராவணன்உடம்பையும் அங்கியங் கடவுட்கு உணவாக்கினான் என்றவாறு. நீர்க்கடன் செய்தற்குக் கொண்ட குடத்திலுள்ள நீரைக்காட்டிலும் அதிகமான நீர்பெருகும் கண்ணையுடையவனாக வீடணன் இருந்தான் என்றதால், இராவணனுக்

குத் தீவைக்கும் நிலையில் உடன்பிறப்பு என்னும் பாசத்தால் வீடணன் எவ்வாறு உந்தப்பட்டான் என்பது புலப்படுத்தியவாறு. (249)

*மற்றையரக்கர்க்கும் உரிய கடன்களைச் செய்து வீடணன் இராமனை அணுகுதல்*

10094. மற்றை யோர்க்கும் வரன்முறை யால்வகுத்
துற்ற தீக்கொடுத் துண்குறு நீருகுத்
தெற்றை யோர்க்கு மிவனல தில்லென
வெற்றி வீரன் குரைகழன் மேவினான்.

மற்றையோர்க்கும் வரன்முறையால் வகுத்து,
உற்ற தீக் கொடுத்து, உண்குறு நீர் உகுத்து,
'எற்றையோர்க்கும் இவன்அலது இல்' என,
வெற்றிவீரன் குரைகழல் மேவினான்.

பொ :— மற்றைய அரக்கர்க்கும் வரன் முறைப்படி ஈமம் வகுத்துப் பொருந்திய நெருப்பை மூட்டி, அவர்கள் உண்ணுதற்குரிய நீரைச் சொரிந்து 'எத்தகையோர்க்கும் ஈமக்கடன் செய்பவர் இவன் அல்லது பிறர் இல்லை' என உலகம் புகழப் பெற்று வெற்றி வீரனாகிய இராமனுடைய ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த திருவடிகளை அணுகினான்.

கு :— மற்றையோர் என்றது இராவணனை யொழிந்த கும்பகருணன் முதலிய அரக்கர்களை. உண்குறு நீர் என்றது எள்ளொடு விராய நீரினை. எனப் புகழப் பெற்று என வேண்டும் சொல்வருவிக்க. வெற்றி வீரன் என்றது, இராவணனை வென்று வீரம் காட்டிய இராமனை. 'குரைகழன் மேவினான்' என்றது இராமனை அணுகினான் என்னும் பொருளது. (250)

10095. வந்து தாழ்ந்த துணைவனை வள்ளலும்
சிந்தை வெந்துயர் தீருதி தெள்ளியோய்
முந்தை யெய்து முறைமை யிதாமென
அந்த மில்லிடர்ப் பார மகற்றினான்.

வந்து தாழ்ந்த துணைவனை, வள்ளலும்,
'சிந்தை வெந்துயர் தீருதி, தெள்ளியோய்!
முந்தை எய்தும் முறைமை இதுஆம்' என,
அந்தம் இல் இடர்ப்பாரம் அகற்றினன்.

பொ :— வள்ளலாகிய இராமனும் வந்து தன்னை வணங்கிய துணைவனாகிய வீடணனை (நோக்கி) 'தெள்ளிய அறிவுடையோனே! நின் சிந்தையில் உள்ள கொடிய துயரம் தீர்வாயாக! (பிறந்தவர்யாரும் இறத்தல் என்னும்) இது பண்டுதொட்டு நடக்கும் முறையாகும்' என்று கூறி, வீடணனுக்கிருந்த எல்லை இல்லாத துன்பச்சுமையை நீக்கினன்.

கு :— இராவணனது இறப்பை நினைந்து வருந்துகின்ற வீடணன் முகக்குறிப்பை இராமன் கண்டு, இவ்வாறு தேற்றினன் என்க. பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி என்பதை யறியும் தெளிந்த அறிவுடையனாயிருந்தும் அதன் பொருட்டு வருந்துதல் பொருந்தாது என்ற கருத்தைப் புலப்படுத்த 'தெள்ளியோய்!' என வீடணனை விளித்தவாறு. இது என்றது மரணத்தை. பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும் இவ்வுலகில் என்றும் நிகழும் நிகழ்ச்சியாதலின், 'முந்தை எய்தும் முறைமை இது' என்றான். இடர்ப்பாரம்—துன்பமாகிய சுமை. இராமன் கூறிய ஆறுதல் மொழியால் வீடணன் தன் துன்பம்ஆறினன் என்பார், 'இடர்ப் பாரம் அகற்றினன்' என இராமன் வினையாகக் கூறினார். (251)

இச்செய்யுளுக்குப் பின், 41, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது :—

10095 (a) இனைய வீர னிளவலை நோக்கிநீ
புனையு நன்முடி சூட்டுதி போயென
அனைய வீர னடியி னிறைஞ்சவே
அனைய னோடு மனுமனைச் சார்கென.

இராவணன் வதைப்படலம் முற்றிற்று

# 37. மீட்சிப்படலம்

இராமபிரான் இராவணனைக் கொன்றபின் சீதை சிறையி னின்று மீண்டமையும், இராமபிரான் சீதையோடும் இலக்குவ னேடும் பதினன்காண்டுகள் வனத்தின் வாழ்தலை முடித்து அயோத்தி நகரத்திற்கு மீண்டமையும் கூறுதலின் இது மீட்சிப் படலம் என்னும் பெயர்த்தாயிற்று.

இதன்கண் 1 முதல் 13 வரையுள்ள செய்யுட்கள் 18, 40, 52, 54, 60, 61, 74 என்னும் குறியீடுள்ள பிரதிகளில் வீடணன் முடி சூட்டுபடலம்—வீடணன் அபிடேகப்படலம் எனவும், 14 முதல் 141 முடியவுள்ள செய்யுட்கள் பிராட்டி திருவடிதொழுத படலம்—சீதை சிறைமீட்சிப் படலம் எனவும், 142 முதல் 358 முடியவுள்ள செய்யுட்கள் மீட்சிப்படலம் எனவும் குறிப்பிடப்பெற்றுள்ளன. இனி, சில பிரதிகளில் 14 முதல் 97 வரையுள்ள செய்யுட்கள் பிராட்டி திருவடி தொழுத படலம் எனவும், 98 முதல் 141 வரை யுள்ள செய்யுட்கள் கடவுளர் காட்சிப்படலம் எனவும் குறிக்கப் பெற்றுள்ளன. இப் படலத்தில் 133 முதல் 144 வரையுள்ள செய் யுட்கள் 29 ஆம் பிரதியில் தேவர் வரத்துப் படலம் எனவும், 63, 74 ஆம் பிரதிகளில் தசரதர் காட்சிப்படலம் எனவும் குறிக்கப் பெற் றுள்ளன. இப்படலத்தில் 172 முதல் 202 முடியவுள்ள செய்யுட் கள் 23, 29, 40, 43, 44, 54, 60, 61, 63, 74 ஆம் பிரதிகளில் பரத்துவாசர் ஆச்சிரமப்படலம் எனவும், 9, 12, 23, 26, 43, 62, 66 ஆம் பிரதிகளில் குகன் செய்தி கூறும் பாடல்கள் குகன் விரதப்படலம் எனவும், பரதனது இயல்பு கூறும் செய்யுட்கள் பரதன் விரதப் படலம் — பரதன் உயிர்வரு படலம் எனவும், 60, 61 ஆம் பிரதிகளில் மீட்சிப்படலம் 322 முதல் திருமுடி சூட்டு படலம் 11 முடியவுள்ள செய்யுட்கள் நகர்புகு படலம் எனவும் குறிக்கப்பெற்றுள்ளன.

மேற்குறித்தவாறு மீட்சிப் படலப் பகுதிகளுக்குப் பிரதிகள் தோறும் காணப்படும் பல்வேறு பெயர்களைக் கூர்ந்து நோக்குங் கால் மீட்சிப்படலம் ஒன்றே அதன்கண் அமைந்த பொருட்பகுதி களைப் பிரித்துணரும் முறையிற் பின்வந்த அறிஞர்களாற் பல

படலங்களாகப் பகுத்தெழுதப் பெற்றது என்பது இனிது புல னாகும்.

இப்படலத்தில் இடைச்செருகலாக இடம்பெற்ற படலங் களும் உள்ளன. அவை இயமப் படலம் அல்லது வசந்தன் உயிர் வருபடலம், திருவணைச் சிறப்புப் படலம், பூசைப் படலம் என்பன வாகும். மீட்சிப் படலத்தில் 'வாங்கினனிரு நிதியொடு' என் னும் முதற்குறிப்புடைய 143ஆம் செய்யுளுக்கும் 'தெவ்வடு சிலைக் கை வீரன்' என்னும் முதற்குறிப்புடைய 173ஆம் செய்யுளுக்கு மிடையே சில பிரதிகளில் இயமப் படலம் என்ற தலைப்பிலும் சில பிரதிகளில் வசந்தனுயிர் வருபடலம் என்ற தலைப்பிலும் ஒரு படலம் அமைந்துளது. 147ஆம் செய்யுளை யடுத்துத் திருவணைச் சிறப்புப் படலம் அல்லது சேதுப் படலம் என்ற தலைப்பில் ஒரு படலமும், அதனையடுத்து 26, 71, 74ஆம் பிரதிகளில் பூசைப் படலம்-இராமன் பூசித்த படலம் என்ற தலைப்புக்களில் வேறொரு படலமும் இடம் பெற்றுள்ளன. இவற்றுள், இயமப் படலம் - வசந்தன் உயிர்வரு படலம் என்ற தலைப்பிலமைந்த செய்யுட்கள், உத்தரகாண்டத்து அசுவமேதப் படலத்திலுள்ள 'வெய்யவன் மறுத்து வயந்தனைப் பிசைந்து' என்னும் பாடலிற் குறிக்கப்பட்ட கதையினை விரித் துரைக்குமுறையிற் பின்வந்தோராற் பாடிச் சேர்க்கப்பட்டன வாதல் வேண்டும். திருவணைச் சிறப்பு - சேதுப் படலம் என்ற தலைப்பில் அமைந்த பாடல்கள் மீட்சிப் படலத்தில் 166 முதல் 172 வரை சேதுவின் சிறப்புரைப்பனவாக அமைந்த இந்நூல் மூலச் செய்யுட்களை யடியொற்றிப் பின்வந்தோரால் தனியே ஒரு படல மாகப் பாடிச் சேர்க்கப்பெற்றிருத்தல் வேண்டும். திருவணைச் சிறப்பினை யடுத்து 26, 71, 74ஆம் பிரதிகளிலும் ஏட்டுப் பிரதி ஒன்றிற்கண்டதாக 41ஆம் பிரதியிலும் 52ஆம் பிரதியிலும் குறிக்கப் பட்ட பூசைப் படலம், இராமபிரான் இராவணனைக் கொன்ற கொலைப் பாதகம் தீர்தற்பொருட்டுச் சேதுவை யடுத்துள்ள திடலில் சிவலிங்கம் நிறுவிச் சிவபெருமானைப் பூசித்த செய்தியை விரித்துரைக்கும் நிலையிற் பின்வந்தோராற் பாடிச் சேர்க்கப் பெற்றதாதல் வேண்டும்.

இராவணனைக் கொன்று மீளும் நிலையில் புட்பக விமானத்தில் வான்வழியாகவரும் இராமபிரான் சீதைக்குச் சேது அணையைக் காட்டிச் சமுத்திரத்தின் கரையையும் காட்டி "இவ்விடத்தில் முன்பு சர்வ சக்தராகிய மகாதேவன் அனுக்கிரகித்தார்" எனச்

சீதைக்குக் கூறியதாக வான்மீகத்திற் கூறப்பட்டிருத்தலால், இராமபிரான் இராவணனைக் கொல்லுதற்குமுன் சேதுவிற் சிவபெருமானை வழிபட்டு அருள்பெற்றமை இனிது புலனும்.

இராமபிரான் இராவணனைக் கொன்ற பாவந்தீர இராமேச்சுரத்தில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்த திறத்தினை,

'தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னுர்கடம் மேல்வினை வீடுமே'

எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரும்,

'பாசமுங் கழிக்க கில்லா வரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு மதியினுல் மால்செய் கோயில்
நேசமிக் கன்பினுலே நினைமினீர் நின்று நாளுந்
தேசமிக் கானி நந்த திருவிரா மேச்சுரமே'

எனத் திருநாவுக்கரசடிகளாரும் திருவிராமேச்சுரத் திருப்பதிகங்களிற் பாடல்தோறும் விரித்துக் கூறியுள்ளனர். இராமாயண காலத்தில் தென்னுட்டில் நிகழ்ந்த செய்திகளிலொன்ருகத் தமிழகத்தில் உலகவழக்கிலும் செய்யுள் வழக்கிலும் இடம்பெற்றுள்ள இந்நிகழ்ச்சியினை,

'தென்னிலங்கை யிராவணன்றன்
சிரமீரைந்துந் துணித்த
மன்னவனு மிராமனுக்கு
வரும்பெரும் பாதகந்தீர்த்த
பிஞ்ஞகனைத் தொழுவதற்கு
நினைந்துபோய்ப் பெருமகிழ்ச்சி
துன்னிமனங் கரைந்துருகத்
தொழுதெழுந்தார் சொல்லரசர்'

எனவும்,

'விண்ணவரைச் செற்றுகந்தான் இலங்கைசெற்ற
மிக்க பெரும் பாதகத்தை நீக்கவேண்டித்
திண்ணியபொற் சிலைத்தடக்கை யிராமன் செய்த
திருவிரா மேச்சுரத்தைச் சென்று சேர்ந்தார்'

எனவும் சேக்கிழார் நாயனுர் குறித்துள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும்.

இவ்வாறு தேவார ஆசிரியர்களால் விரித்துரைக்கப் பெற்ற இச்செய்தியை அவர்கள் காலத்திற்குப்பின் தோன்றிய கம்பர் தம் காப்பியத்திற் குறிப்பிடாமைக்கு, இராவணனைக் கொன்ற பின் நிகழ்ந்த இந்நிகழ்ச்சி முதல்நூலாகிய வான்மீகத்திற் கூறப் படாமையும், குறித்த காலத்தில் தான் அயோத்திக்குச் செல்லா தொழியின் பரதன் தீப்பாய்வான் என்னும் பெருங் கவலையுடன் புட்பக விமானத்தில் விரைந்து செல்லும் இராமன் இராமேச்சுரத் தில் இறங்கிச் சிவபூசை செய்தான் என்று கூறுதல், பரதன்பால் வைத்துள்ள பரிவின் மிகுதியால் விமானத்தில் விரைந்து செல் லும் இராமனது மனநிலைக்குப் பொருந்துவதன்றென எண்ணின மையும் ஏற்புடைய காரணங்களாதல் கூடும்.

இராவணனுக்கு ஈமக்கடன் செய்து முடித்துத் தன்னடி பணிந்த வீடணனுக்குத் தேறுதல்மொழிபகர்ந்த இராமன், இலக் குவனை நோக்கி, 'நீ வானர வீரர்களுடன் சென்று நீதியாள னுகிய இவ்வீடணனுக்கு வேதவிதிப்படி முடி சூட்டுவாயாக' எனப் பணித்தனன். முடிசூட்டுவிழாவுக்கு வேண்டியவற்றைத் தேவர்கள் செய்ய இலக்குவன் வீடணனுக்குத் தன் கையால் மகுடம் கவித்தான். முடிபுனைந்த வீடணன் இராமபிரானை வணங்குதற்கு எண்ணி இலக்குவனிடம் அரசை ஒப்புவித்துச் சுக்கிரீவனேடும் அங்கதனேடும் இராமன் திருவடிகளை வணங் கினுன். இராமன் தன்னை வணங்கிய வீடணனை அன்புடன் தழுவி அவனுக்கு அரசியல் நீதியினை அறிவுறுத்தினுன். பின்பு இராமனது ஏவலால் அனுமன் பிராட்டியை அடைந்து கொடியோனுகிய இராவணன் இராமனது அம்பினுல் இறந்துபட்ட செய்தியைச் சொல்லி மகிழ்ச்சியால் ஆடிப் பாடி நின்றுன். அப்பொழுது பிராட்டி உள்ளமும் உடம்பும் பூரித்துப் பெருமகிழ்ச்சியாற் பேச நாவெழாது சிறிது நேரம் ஒன்றும் பேசாதிருந்தனள். அனுமன் பிராட்டியை நோக்கித் 'தாங்கள் ஒன்றும் கூருதது ஏன்' என வினவினுன். அதுகேட்ட சீதை 'அரக்கரது சிறையினின்றும் என்னை விடுவித்து மகிழ்ச்சிச் செய்தியினைக் கூறிய உனக்கு என்ன பேற்றினை ஈகுவது என்பதை எண்ணி (ஒன்றும் புலப்படாமையால்) பேசுதலை மறந் திருந்தேன். உனக்கு யான் செய்யத்தக்கது யாதுளது?' என்ருள். 'உன்னை நலிந்த அரக்கியரைக் கொல்லுதற்கு வரந்

தருக ' என்ருன் அனுமன். அரக்கியர் அஞ்சிப் பிராட்டியைச் சரணடைந்தனர். அந்நிலையிற் பிராட்டி அரக்கியர்க்கு அபய மளித்து அனுமனை நோக்கி, ' இவ்வரக்கியர்கள் தம் தலைவன் இட்ட ஏவலைச் செய்தனர் ஆதலால் இவர்கள்மீது குற்றமில்லை. இவர்களைத் துன்புறுத்தாதே ' என்றனள். அனுமனும் உனது அருள் அது என்ருன்.

இராமபிரான் வீடணனை நோக்கி, சீதையைக் கோலம் செய்து அழைத்து வருமாறு பணித்தான். வீடணன் சென்று பிராட்டியை வணங்கி வேதியர் வேதனுகிய இராமபிரான் ' அணி தற்குரிய அணிகலன்களை யணிந்து நின்னை அழைத்துவரும்படி கட்டளையிட்டருளினன் ' என்ருன். அது கேட்ட சீதை ' யான் இங்கிருந்த தன்மையினைத் தேவர்கூட்டமும் எம் கணவரும் முனிவர் முதலியோரும் காணுதல் தகுதியாகும். அணிகலன் களால் அணிசெய்துகொள்ளுதல் சிறப்பன்று' என்ருள். வீடணன் இஃது இராமபிரான் பணியென்று கூறச் சீதையும் அதற்கு இசைந்தனள். வானுலகிலுள்ள திலோத்தமை முதலிய தேவ மாதர்கள் பிராட்டியின் சடையான கூந்தலை வகிர்ந்து திருமஞ்சன மாட்டி, முத்தினும் மணியினும் சிறந்த பொன்னணிகளை யணிந்து கோலஞ்செய்தனர். பிராட்டியை விமானத்தின்மீது அமரச் செய்து தேவர் மங்கையர் உடன்வர இராமபிரான்பக்கல் அழைத்துச் சென்ருன் வீடணன். தேவர் முனிவர் முதலி யோரின் மங்கையர்கள் தொடர்ந்துவரச் சென்ற சீதை இராம பிரானைக் கண்டு சிவிகையைவிட்டு இறங்கி உவகைக் கண்ணீர் பெருக வணங்கி நின்ருள். சீதையைக் கண்ணுற்ற இராமன் அவளது கற்பின் திறத்தை அறியாதவன்போன்று பலவாறு கடிந்துரைத்து ' நீ இறத்தலே தக்கது ' என்ருன். அதுகேட்டு அங்கு உள்ள தேவர் முனிவர் முதலியோரும் அவர்தம் மகளிரும் அரக்கர் முதலிய ஏனையோரும் வாய் திறந்து அரற்றினர்கள். இராமன் கூறிய கடுஞ்சொற்களைக் கேட்டுக் கலக்கமுற்ற சீதை கண்ணீர் சொரிந்து, ' யான் இத்தனை நாள் உயிர் வாழ்ந்திருந்து பெற்ற பேறு இத்தன்மையதுபோலும் ' என வருந்தி இராம பிரானை நோக்கி ' வேதத்தின் உருவாகிய பெரியோய் ! எனது மெய்ம்மை யொழுக்கத்தினை எல்லாவற்றையும் அறியவல்ல நீயே ஏற்றுக்கொள்ளாத நிலையில் வேறு யாருக்கு உணர்த்தக் கடவேன். இந்நிலையில் எனக்குச் சாதலைப்போலச் சிறப்புடைய வாழ்வு பிறிதொன்றில்லை. நீ கட்டளையிட்டது தக்கதே. அதுவே

என் விதிப்பயனும் ஆகும்' என்று கூறி, இலக்குவனை அழைத்து 'எனக்குத் தீ அமைப்பாயாக' என்றாள். அம்மொழியினைக் கேட்டு வருந்திய மனத்தினனாகிய இலக்குவன் இராமபிரானை நோக்கினான். அம்முதல்வனும் தனது கண்ணேக்கினால் தனது இசைவினைப் புலப்படுத்தினான். இலக்குவனால் மூட்டப்பெற்ற தீயினுள்ளே பாய்ந்து உயிர் துறக்க எண்ணிய சீதை, அத் தீயினை அணுகிநின்று 'அங்கியஞ் செல்வனே! யான் மனமொழி மெய்களாற் குற்றமுடையேனாயின் என்னைச் சினந்து எரிப் பாயாக' என்று கூறித் தன் கணவனுக்கும் வணக்கஞ் செலுத்தித் தனக்கு உறைவிடமாகிய தாமரைக்கோயிலினுள்ளே புகுவாளைப் போன்று தீயினுள்ளே பாய்ந்தனள். அந்நிலையில் அத்தீயானது சீதையின் கற்புத்தீயினால் பஞ்சினைப்போன்று தீய்ந்தழிந்தது.

பிராட்டியின் கற்புக்கனலால் தன்னுடல் வெதும்பிய தீக் கடவுள், தீக்குண்டத்தில் வீழ்ந்த பிராட்டியை ஏந்திக் கொண்டு இராமபிரான் முன்னிலையில் அரற்றி வணங்கிநின்று சீதையின் கற்பின் மாண்பினை எடுத்துரைத்து இராமனருகிற் கொணர்ந்த னன். அப்பொழுது இராமபிரான் தீக்கடவுளை நோக்கி 'உலகத்து உயிர்கட்கெல்லாம் சான்றாகிய நீ 'இவளைப் பழிப்பில்லாதவள்' எனக் கூறினமையால் இவள்பால் யாதொரு பழியுமில்லை. இவள் என்றால் நீக்கத்தக்கவள் அல்லள்' என்று கூறிச் சீதையை ஏற்றருளினன்.

அப்பொழுது தேவர்கள் பிரமதேவனை யணுகி இராமபிரா னுக்கு அவனது உண்மைநிலையை உணர்த்தும்படி வேண்ட, அவன் இராமனுக்கு அவனது முழுமுதற்றன்மையையும் சீதை யின் பெருமையினையும் எடுத்துரைத்தான். அவன் கூறியவற்றை அவ்வாறே உடன்பட்ட சிவபெருமான் இராமனது இறைமைத் தன்மையையும் சீதையின் தெய்வக்கற்பினையும் எடுத்துரைத்து மேலுலகத்திலிருந்த தசரதனை யழைத்து 'மன்னனே! நின் மைந்தனைக் கண்டு தெளிவித்து, நின் மனத்திலுள்ள பிரிவுத் துன்பத்தைப் போக்குவாயாக' என்று கூற, தசரதனும் காதல் மைந்தனைக் காணும் விருப்பினால் பூமியை யடைந்தான். தந்தை யைக் கண்ட இராமன் அவன் பாதங்களில் வீழ்ந்து வணங்கி னான். தசரதன் இராமனை அன்புடன் தழுவிக்கொண்டு அன்று கைகேயி கொண்ட வரம் என்னும் அம்பு இன்றளவும் என்னெஞ் சில் தைத்து வருத்திக்கொண்டு நின்றது; நின் மார்பாகிய

காந்தமணியினால் இப்பொழுது ஒழிந்தது. நின்னை மகனாகப் பெற்றமையால் எல்லாராலும் தொழப்படும் தேவரும் முனிவரும் என்னை வணங்கும் பேறு பெற்றேன்' என்று கூறிச் சீதையை அணுகிய நிலையில் பிராட்டி அவன் திருவடிகளை வணங்கினாள். தசரதன் சீதையை நோக்கி, 'நங்கையே! உன்னைக் கற்பினுக்கரசியென்று உலகத்தார்க்குக் காட்டுதற்பொருட்டே இராமன் உன்னைத் தீயிற் புகச்செய்தனன் என்பதனை நின் மனத்திற் கொண்டு நின் கணவனைச் சினவாதிருத்தல்வேண்டும்' எனக் கூறினான். அவள் நெஞ்சத்தில் முனிவின்மை யறிந்த தசரதன், இலக்குவனைத் தழுவிக்கொண்டு, தமயனைத் தொடர்ந்துசென்று துயர்துடைத்த அவனது தொண்டின் திறத்தையும் புரந்தரன் பகைவனைக் கொன்ற வெற்றித்திறனையும் பாராட்டி மகிழ்ந்தான். இராமனை நோக்கி 'யான் உனக்குத் தரத்தகுவதோர் வரம் யாது? கூறுக' என்றான். அது கேட்ட இராமன், 'தந்தையே! நின்னை மேலுலகிற்கண்டு என் மனத்துயரை நீக்கலாம் என்று நினைந்திருந்தேன். இன்று நின்னைக் காணப்பெற்றேன். இதனினும் பெறத்தக்க பேறு யாதுளது?' என்றான். 'ஆயினும் உனக்குப் பொருந்தியதொரு வரத்தைக் கேள்' எனத் தசரதன் கூறினான். அழகனாகிய இராமன் தந்தையை நோக்கி, 'நீ தீயவள் என்று விலக்கிய என் தெய்வமும் அவள் பெற்ற மகனும் எனக்குத் தாயும் தம்பியும் ஆகும்படியான வரத்தினைத் தந்தருள்வாயாக' என வேண்டிக்கொண்டான். அந்நிலையில் தசரதன் இராமனைத் தழுவிய கை சிறிது நெகிழ்ந்தவனாகி, 'பரதன் அன்னது பெறுக. நின் முடியினைப் பறித்து நினக்கு விரத வேடம் உதவிய பாவிமேல் என் வெகுளி நிச்சயமாக நீங்காது' என்றான். அது கேட்ட இராமன் 'உயிர்களுக்குத் துன்பமின்றி ஆட்சிபுரிதலாகிய அரச பதவியை விளைவறியாத யான் ஏற்றுக்கொண்டது பெருங் குற்றமே தவிர என்னைப் பெற்ற எம்பெருமாட்டியாகிய அன்னை செய்த தவறுண்டோ?' என வினவினான். தசரதனும் தன் மனத்திற்கொண்ட வெகுளி நீங்கி அவ்வரமிரண்டினையும் தந்து இராமனையும் இலக்குவனையும் சீதையையும் பூமியிலிருக்குமாறு நிறுத்தி விமானத்தின் மீதேறி விண்ணுலகை அடைந்தான்.

பின்னர்த் தேவர்கள் வந்து 'வேண்டும் வரம் கேள்' என இராமனிடம் கூறினர். இராமனும் போர்க்களத்தில் இறந்த வானரர்களெல்லாம் உயிர்பெற்றெழும்படி வேண்டினன். அவ்வாறே வரத்தினைத் தந்த தேவர்கள், 'இராமனே! நீ அயோத்

தியை விட்டுப் புறப்பட்டு வந்தபின் இன்றுடன் பதினன்காண்டு கள் ஆகின்றன. இன்றைக்குப் பஞ்சமி திதி. இத்திதிக்குள் நீ பரதனைச் சென்று காண்கிலாயாயின் அவன் தீயில் வீழ்ந்து இறந்து விடுவான். அத்துயர்தீர விரைந்து அயோத்தியை அடைவாயாக' என்று சொல்லித் தம் இருப்பிடத்தையடைந் தனர். இராமன் வீடணனைப் பார்த்து 'அயோத்திக்கு விரைந்து செல்ல ஊர்தியுண்டோ' என வினவினன். வீடணன் புட்பக விமானத்தின் தன்மையைக் கூறி 'இவ்விமானத்தில் ஏறின் நின்னகரத்தை இன்றே அடைதல் எளிது' என்ருன். இராம பிரான் வீடணன் கொணர்ந்த புட்பகவிமானத்தில் சீதையோடும் இலக்குவனேடும் ஏறி யமர்ந்து வீடணன் சுக்கிரீவன் அனுமன் அங்கதன் முதலிய பரிவாரங்கள் யாவும் தன்னைச் சூழ்ந்திருக்க அயோத்திக்குப் புறப்பட்டான். அவன் ஏறிய புட்பகவிமானம் வானவழியே அயோத்தியை நோக்கி விரைந்தது. விமானத்தில் அமர்ந்த இராமன், இலங்கை நகரத்தின் எழிலையும் அங்குப் போர் நிகழ்ந்த இடங்களையும் கடலில் வானரர் கட்டிய அணையையும் நிலமிசையுள்ள பிறவற்றையும் சீதைக்குக் காட்டிக்கொண்டே வர, அவ்விமானம் கிட்கிந்தையை அடைந்தது. கிட்கிந்தை யிதுவெனக் கேட்ட சீதை, அங்குள்ள வானர மகளிரையும் தன் னுடன் அழைத்துக்கொண்டு அயோத்திக்குச் செல்லவேண்டும் என விரும்பினள். அவள் விரும்பியவண்ணம் இராமன் கிட்கிந்தை யிலுள்ள வானர மகளிரையும் விமானத்தில் ஏற்றிக்கொண்டு, 'இது கோதாவரி; இது உன் பிரிவுத்துயரை உண்டாக்கிய இடம்' என்று சீதைக்குக் காட்டிவரப் புட்பகவிமானம் பரத்து வாசர் ஆச்சிரமத்தருகே செல்லுகையில், 'இதுதான் பரத்து வாசர் ஆச்சிரமம்' என்று கூறி அங்கே இறங்கி அம்முனிவர் திருவடிகளைப் பணிந்து தன்னையுபசரிக்க விரும்பிய முனிவர்பால் வானரர் செல்லும் இடங்கள் யாவும் வளம்பெற வரம்பெற்றனன். தவச்செல்வராகிய பரத்துவாச முனிவர் இராமன் முதலியோர்க் கும் வானரசேனைகளுக்கும் சிறப்புடைய விருந்தளித்தார். அப் பொழுது இராமன், தான் மீண்டுவருவதனைப் பரதனுக்கு விரைந்து அறிவிக்கும்படி அனுமனை அனுப்பினன். பரதனை நோக்கிச் செல்லும் அனுமன், வழியிடையே குகனைக் கண்டு இராமபிரான் மீண்டுவருவதனைத் தெரிவித்து நந்திக்கிராமத்தில் தமையனது வருகையை எதிர்நோக்கியிருக்கும் பரதனை அடைந் தான். அப்பொழுது பதினன்கு ஆண்டுகள் சென்றும் இராமன்

தான் குறித்த நாளில் வாராமையால் தீப்பாய்ந்து உயிர் துறக்க எண்ணிய பரதன், அச்செய்தியைத் தம்பி சத்துருக்கனனுக்குத் தெரிவித்து அன்புடைய தாயாகிய கோசலை தடுக்கவும் கேளாமல் தீயில் விழுதற்கு முற்பட்டுச் சென்றான். அந்நிலையில் அங்கு விரைந்துவந்த அனுமன், பரதனைத் தடுத்து, இராம பிரானது வருகையைக் கூறி மூண்டெரியும் தீயினை அவித்து இராமனது கணையாழியைப் பரதனிடம் அளித்தனன். அதுகண்டு அங்கு நின்ற யாவரும் துயர்நீங்கிப் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். இராமனது மோதிரத்தைப் பெற்ற பரதன் மகிழ்ந்து ஆடிப் பாடினான்; அனுமனைப் பாராட்டி 'நீ யார்?' என வினவினான். அனுமன் பரதனுக்குத் தனது வரலாற்றை எடுத்துரைத்துத் தனது பெருவடிவத்தைக் காட்டினான். அவ்வடிவினைக் கண்டோர் வியப்பும் அச்சமும் அடைந்தனர். பரதன் அனுமனது பெருவடிவத்தைச் சுருக்கிக் கொள்ளும்படி வேண்டினான். அனுமனும் தனது பெருவடிவினைச் சுருக்கித் தொழுதுநின்றான். பரதன் அனுமனுக்கு நிதியமும் பூணும் துகிலும் முதலிய பல பரிசுகள் தந்தான். நகரை அலங்கரித்து இராமபிரானை எதிர்கொள்ளும்படி அயோத்திநகர மாந்தர்க்கு முரசறைந்து அறிவிக்கச் செய்யும்படி சத்துருக்கனனை ஏவ, அவன் அமைச்சன் சுமந்திரனுக்கு அறிவித்தான். வள்ளுவர் முழக்கிய முரசொலிகேட்டு மகிழ்ந்த அறுபதினாயிரம்அக்குரோணி சேனை வெள்ளமும் ஏனைய வேந்தர்களும் அயோத்திநகர மக்களும் இராமபிரானை எதிர்கொள்ளச் சென்றனர். பரதன் அன்னையர் மூவரும் சிவிகையில் முன்செல்ல முனிவர்களும் சுற்றத்தாரும் சூழ்ந்துவர அனுமனது கையைப் பிடித்துக்கொண்டு இராமன் திருவடிநிலையைத் தலைமேற்சூடிக்கொண்டு சென்றான். அந்நிலையிற் கதிரவன் மறைந்தனன். அப்பொழுது பரதன் அனுமனை நோக்கி 'இராமபிரான் எங்கே தங்கியிருந்தது? அப்பெருமானது வரலாறு முழுவதையும் நீ எங்களுக்கு விரித்துக் கூறுவாயாக' என வேண்டினன். அனுமன், வனம்புக்க இராமபிரான் சித்திர கூடத்தைவிட்டுப் புறப்பட்டதுமுதல் இராவணனைக் கொன்று இங்கு மீண்டதுவரையிலும் நிகழ்ந்த வரலாறுகளை விரித்துக் கூறினான். பரதன் அதனைக் கேட்டுக்கொண்டே தன் கண்களினின்றும் நீர் தாரைதாரையாச் சொரியக் கங்கைக் கரையை அடைந்தான். அப்பொழுது இரவு நீங்கிப் பொழுது புலர்ந்தது. காலைக்கடன்களை முடித்த பரதன், அங்கு ஆரவாரமற்ற

தன்மையை நோக்கி இராமனது வருகையிற் சந்தேகங் கொண்டு அநுமனை நோக்கி, 'கலைகளில் வல்லவனே! நீ கூறிய வார்த்தையில் தவறுண்டு போலும்' என்ருன். அதுகேட்ட அநுமன் 'விரதத்தால் மேம்பட்டவனே! பரத்துவாச முனிவர் தேவர்களை வேண்டி அங்கு அளித்த வரத்தினுல் வந்த மலரையும் தேனையும் மிகுதியாக உண்டு வானர சேனைகளெல்லாம் துயில்கின்றன. இனி ஒருகணத்திற்குள் எம்பெருமானுகிய இராமபிரான் துயில் நீங்கி யெழுந்தருள்வதனை நீயே நின்கண்களாற் பார்ப்பாய்' என்று கூறினுன்.

இப்பால், பரத்துவாசர் ஆச்சிரமத்தில் இராமபிரான் பிராட்டியுடனும் துணைவர்களோடும் விருந்துண்டு அமர்ந்த நிலையில் குகன் தன் சேனையோடும் இராமனைக் காண வந்தான். அன்பின் மிகுதியால் தன் பாதங்களில் வீழ்ந்து வணங்கியகுகனை இராமன் தம்பியைத் தழுவுமாறு போன்று இறுகத்தழுவியெடுத்து 'நின் மக்களும் மனைவியும் வலியரன்றே' என நலம் விசாரித்துத் தனக்கு அடிமை செய்யப்பெருமைக்கு வருந்தியகுகனுக்கு ஆறுதல் கூறினுன். பின்பு குகன் இலக்குவனையும் சீதையையும் வணங்கினுன். இராமபிரான் சுக்கிரீவன் முதலியோர்க்குக் குகனை இத்தன்மையன் எனத் தெரிவிக்க, அவர்கள் குகனை நட்புக்கொண்டு மகிழ்ந்தனர். இரவுப்பொழுது நீங்கக் கதிரவன் தோன்றினுன். இராமபிரான், காலைக்கடன்களை முடித்துத் தானும் சீதையும் தம்பியும் பரத்துவாசர் திருவடிகளை வணங்கித் துணைவர்களோடும் சேனைகளோடும் புட்பகவிமானத்திற் புறப்பட்டுச் சென்ருன். வான்வழியாக விமானம் செல்லும்போது அயோத்தி நகரத்தின் புறமதில் தோன்றக் கண்ட இராமன் 'இதுதான் அயோத்தி' எனக் காட்ட, அதனைக் கண்டு எல்லோரும் கைகூப்பி வணங்கி நின்றனர்.

அந்நிலையில், பரதனுடன் நிலத்தில் நிற்கும் அநுமன், அவ்விமானத்தைக் கண்டு, அதன்கண் உள்ளாரைப் பரதனுக்குக் காட்டினுன். விமானத்திலே மின்னெளி மேகம்போல் விளங்கிய இராமபிரானைக் கண்டு எதிர்கொள்ளவந்தோர் அனைவரும் மகிழ்ச்சிமிகுதியாற் பேராரவாரஞ் செய்தனர். அநுமன் விமானத்திற்பாய்ந்து பரதன் செய்கையினை இராமபிரானுக்கு எடுத்துரைத்தான். அப்பொழுது இராமன் எண்ணியவண்ணம் புட்பகம் பூமியில் இறங்கியது. இராமன் முதலியோர் தாய்மாரையும் வசிட்டன்

முதலியோரையும் வணங்கினர். பரதன் முதலியோர் இராமன் முதலியோரை இறைஞ்சினர். பின்னர் இராமன் தன்னை எதிர் கொள்ளவந்தோர் யாவரையும் புட்பக விமானத்தில் ஏறும்படி பணிக்க, எல்லோரும் விமானத்தில் ஏறிக்கொண்டனர். நந்திக் கிராமத்தை அணுகிய நிலையில் புட்பகவிமானம் பூமியில் இறங்கியது என்பது இப்படலத்தின் பொருட் சுருக்கமாகும்.

இராமனது வருகையை உரைத்துத் தன்னைத் தீயில் வீழ்ந்து இறவாது தடுத்து இராமனது மோதிரத்தை அடையாளமாகக் காட்டிய அனுமனுக்குப் பரதன் பரிசு முதலியன நல்கியபோது, இராமபிரான் முதலியோருடன் புட்பக விமானம் நந்திக் கிராமத்தையடைய, அனுமன் விமானத்திலுள்ளாரைப் பரதன் முதலியோர்க்குச் சுட்டிக் காட்டினன் எனக் கதைத் தொடர் பமைய இப்படலத்தில் 262 முதல் 321 முடிய வுள்ள செய்யுட்கள் மிகைச் செய்யுட்களாக 52-ஆம் பிரதியிற் குறிக்கப்பட்டன. இவற்றுள் 262 முதல் 275 முடியவுள்ளவை 9, 18, 21, 23, 25, 26, 29, 43, 44, 66, 74 என்னும் எண்ணுள்ள பிரதிகளிலும் 276 முதல் 321 முடியவுள்ளவை 74-ஆம் பிரதியிலும் இவற்றுட் சில 9, 18-ஆம் பிரதிகளிலும் இல்லாமையும், இச்செய்யுட்களில் தொகுத்துச் சொல்லப்படும் செய்திகள் முன்னர் விரித்துக் கூறப் பெற்றன ஆதலால் இவற்றை மீண்டும் தொகுத்துக் கூறுதல் மேற் சொல்ல விருக்கும் நிகழ்ச்சிக்கு இடையறவுபடும் நிலையில் அமை தலும் கருதி இவற்றை மிகைச் செய்யுட்களென அறிஞர் சிலர் ஒதுக்குவர். ஆயினும், மீட்சிப் படலமாகிய இப்படலத்தின் கதைநிகழ்ச்சிகள் முதல் நூலாகிய வான்மீகத்தை அடி யொற்றியமைந்திருத்தலையும், அனுமன் வாயிலாக இராமன் செயல்களைப் பரதன் கேட்டு மகிழ்தலாகிய இப்பகுதி வான்மீகத் தில் இடம் பெற்றிருத்தலையும் அதனையடியொற்றி இப்படலத்தில் வந்துள்ள 262 முதல் 321 முடியவுள்ள செய்யுட்கள் தஞ்சைச் சரசுவதிமகால் நூல்நிலையத்திலும் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் உள்ள மிகப் பழைய சுவடிகளிற் காணப்பெறுதலையும் கூர்ந்து நோக்குங்கால் இச்செய்யுட்களைக் கம்பர் வாக்கென்றே கொள்ள வேண்டியுளது. அன்றியும், தன் இன்னுயிரனைய தமையனாகிய இராமனைப் பிரிந்து அவனது வருகையை எதிர் நோக்கிப் பதி னான்காண்டுகள் ஊணுறக்க மின்றியிருக்கும் பரதனது உள்ளத் திலே தன்தமையனாகிய இராமபிரானது காடுறைவாழ்க்கையைப்

பற்றியும் அவன் செய்த செயல்களைப் பற்றியும் அறிந்துகொள்ள வேண்டும் என்னும் பேரவா எழுதல் இயல்பாதலின் அதனை நிறைவு செய்யும் முறையில் இராமன் செயல்களைப் பரதனுக்கு அனுமன் எடுத்துரைத்தலாகிய இப்பகுதி காப்பியக் கதை யமைப்புக்கு மிகவும் பொருத்த முடையதாகவே தோன்றுகிறது. எனவே இப்பகுதிக்குரிய செய்யுட்கள் பெரும்பாலான ஏடுகளிற் கண்டவாறு கம்பர் வாக்காகவே கொண்டு இப்பதிப்பில் மூலத்தொடு சேர்க்கப்பெற்றன.

மீட்சிப்படலத்திற் கூறப்படும் செய்திகள் முதனூலாகிய வான்மீகத்தில் யுத்த காண்டம் 115 முதல் 130 வரையுள்ள சருக்கங்களில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

# 37. மீட்சிப் படலம்

*வீடணனுக்குத் தேறுதலுரை பகர்ந்த இராமன், இலக்குவனை நோக்கி 'நீ வீடணனுக்கு முடிசூட்டுவாயாக' என ஏவுதல்*

10096. வருந்த னீதி மனுநெறி யாவையும்
பொருந்து கேள்விப் புலமையி னோயெனு
அருந்த வப்பய னுலடைந் தாற்கறைந்
திருந்த வத்திளை யோற்கி தியம்பினான்.

'வருந்தல், நீதி மனு நெறி யாவையும்
பொருந்து கேள்விப் புலமையினோய்!' எனு,
அருந்தவப் பயனால் அடைந்தாற்கு அறைந்து,
இருந்தவத்து இளையோற்கு இது இயம்பினான்.

பொ :— 'மனுமுறையாகிய நீதிநெறிகள் எல்லாவற்றையும் பொருந்திய நூற்கேள்வியையும் இயல்பாகிய நுண்ணறிவினையும் உடையவனே! (நீ) வருந்தாதே' என்று, செய்தற்கரிய பெருந் தவப்பயனால் (தன்னைச் சரணாக) அடைந்தவனாகிய வீடணனுக்கு (ஆறுதலுரை) கூறிப் பெரிய தவச்செயலையுடைய தம்பி இலக்குவனுக்கு (ப் பின்வரும்) இம்மொழியைச் சொன்னான் (இராமன்).

கு :— அறத்தினை நிலைநிறுத்தும் வேந்தர், தீவினையாளராகிய கொடியோரை ஒறுத்துக்கொல்லுதலும், அருளால் நல்லோரைப்பேணி உயிர்கட்கு நலம்புரிதலாகிய தமது கடமையினை மேற்கொள்ளுதலும் மனுமுதலிய அறநூல்களில் விரித்துரைக்கப்பட்ட அறநெறியே என்பதனை நன்குணர்ந்த நீ தீவினை காரணமாக நின் தமையனுக்கு நேர்ந்த இத்துன்ப விளைவினையெண்ணி மனந்தளர்தலாகாது என அறிவுறுத்துவான், 'நீதி மனுநெறியாவையும் பொருந்து கேள்விப் புலமையினோய்! வருந்தல்' என வீடணனுக்கு இராமன் ஆறுதல் கூறினான்.

அருந்தவப்பயனுல் அடைந்தான் என்றது, பிரமனை நோக்கி தான் செய்த செயற்கரிய தவத்தின் பயனுக இராமனைச் சரண மாக அடைந்த வீடணனை. அடைதல் — அடைக்கலமாக வந்தடைதல். அறைதல் — சொல்லுதல். தமையனுக்கு அடி யாரின் ஏவல் செய்தலே தனக்குரிய கடமையெனக் கொண்டு அல்லும் பகலும் ஊணுறக்கமென்பதின்றி இராமனுக்கு அடித் தொண்டு புரிதலாகிய பெருந்தவமுடையான் இலக்குவனுதல் பற்றி அவனை 'இருந்தவத்து இளையோன்' எனக் குறித்தார் ஆசிரியர். (1)

10097. சோதி யான்மகன் வாயுவின் றேன்றன்மற்
றேதில் வானர வீரரோ டேகிநீ
ஆதி நாயக னுக்கிய நூன்முறை
நீதி யானை நெடுமுடி சூட்டுவாய்.

'சோதியான் மகன், வாயுவின் தோன்றல், மற்று
ஏதுஇல் வானர வீரரோடு ஏகி, நீ
ஆதிநாயகன் ஆக்கிய நூல் முறை
நீதியானை நெடுமுடி சூட்டுவாய்'

பொ :— கதிரவன் மைந்தனுகிய சுக்கிரீவனும், காற்றின் புதல்வனுகிய அனுமனும் மற்றுமுள்ள குற்றமற்ற வானர வீரர் களும் ஆகியவர்களோடு நீ சென்று, முதியவனுகிய பிரமன் வகுத்தருளிய வேதநூல் முறைப்படி நீதிநெறியாளனுகிய வீடண னுக்கு நெடிய முடியினைச் சூட்டுவாயாக.

கு :— இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். சோதி யான் — ஒளிக்கதிர்களையுடைய சூரியன். அவன் மகன் சுக்கிரீ வன். வாயுவின் தோன்றல் — காற்றின் புதல்வன்; என்றது அனுமனை. ஆதியான் என்றது, உலகத் தோற்றத்திற்குக் காரண மாய் முன்தோன்றிப் படைப்புத் தொழிலைச் செய்பவனுகிய பிரமனை. இவ்வாறு, பிரமன் உலகத் தோற்றத்திற்குக் காரண மாய் முன்தோன்றினமைபற்றி அவனை 'ஆதிக்கணுன்' (6–20–1) என்ற பெயராற் குறிப்பிடுவர் திருநாவுக்கரசர். 'தொடங்கற்கண் தோன்றிய முதியவன்' (கலி–கடவுள் வாழ்த்து) எனவரும் கலித் தொகைத் தொடரும் இங்கு ஒப்புநோக்குதற்கு உரியதாகும்.

நீதியான் என்றது நீதியில்லாத அரக்கர் குலத்திற் பிறந்தும் நல்வினைத் திறத்தால் நீதிநெறியினையே மேற்கொண்டொழுகும் விடணனை. நெடுமுடி என்றது, அரக்கர் வேந்தர்க்குரியதாய்த் தொன்றுதொட்டுச் சூட்டப் பெற்றுவரும் அரச முடியினை. பதினான்காண்டுகள் காட்டில் வாழ்தல் வேண்டும் என்னும் சிற்றன்னையின் கட்டளையினைத் தான் மேற்கொண்டமைபற்றி இலங்கை நகருட்புகுதல் முறையன்றெனக் கருதிய இராமன், இலக்குவனை இலங்கையிற் சென்று வீடணனுக்கு முடிசூட்டி வரும்படி கட்டளையிட்டனன் என்க. முன்பு கிட்கிந்தையில் சுக்கிரீவனுக்கு முடிசூட்டும்படி இலக்குவனைப் பணித்தமையும் இக்கருத்துப்பற்றியேயாகும். (2)

10098. என்று கூறி யிளவலொ டியாரையும்
வென்றி வீரன் விடையருள் வேலையின்
நின்ற தேவர் நெடுந்திசை யோரொடும்
சென்று தத்தம செய்கை புரிந்தனர்.

என்று கூறி, இளவலொடு யாரையும்
வென்றிவீரன் விடை அருள் வேலையில்,
நின்ற தேவர் நெடுந்திசையோரொடும்
சென்று, தம்தம செய்கை புரிந்தனர்.

பொ :— என்று கூறி, வென்றி வீரனாகிய இராமன் தம்பியாகிய இலக்குவனுடன் (சுக்கிரீவன் முதலிய) யாவரையும் விடை கொடுத்து அனுப்பிய பொழுது (அதனை யுணர்ந்து அங்கு) நின்ற தேவர்கள் நீண்ட திசைகாவலர்களுடன் சென்று (முடி சூட்டு விழாவில்) தங்கள் தங்களுக்குள்ள கடமைகளை விருப்புடன் செய்வாராயினர்.

கு :— என்று கூறி, வென்றி வீரன், இளவலொடு யாரையும் விடை அருள் வேலையில், தேவர் நெடுந்திசையோரொடும் சென்று தத்தம செய்கை புரிந்தனர் என்க. தேவர் முதலிய யாவராலும் எதிர்த்துப் பொருதற்கியலாத பெருவீரனாகிய இராவணனைத் தனி நின்று கொன்றொழித்த கொற்றவன் இவ்விராமன் என்பார் ‘வென்றி வீரன்’ என்றார். இளவல் — தம்பி; இலக்குவன். நெடுந்திசையோர் — நீண்ட திசைகாப்போராகிய

திக்குப் பாலகர்கள்; என்றது, இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய எண்மரையும். இவர்கள் முறையே கீழ்த்திசை முதலாக வடகீழ்த்திசையிறுதியாகவுள்ள எண்திசைகளுக்குத் தலைவராவர். புரிதல்-விருப்புடன் செய்தல். (3)

முடிசூட்டுதற்கு அமரர்கள் ஆவனசெய்தல்

10099. சூழ்க டற்புன லும்பல தோயமும்
நீள்மு டித்தொகை யும்பிற நீர்மையும்
பாழி துற்றரி பற்றிய பீடமும்
தாழ்வில் கொற்றத் தமரர் கடந்தனர்.

சூழ் கடல் புனலும், பல தோயமும்,
நீள் முடித் தொகையும், பிறநீர்மையும்,
பாழி துற்று அரி பற்றிய பீடமும்,
தாழ்வுஇல் கொற்றத்து அமரர்கள் தந்தனர்.

பொ:— (உலகினைச்) சூழ்ந்துள்ள கடல்களின் நீரும், (கங்கை முதலிய) பல (புண்ணிய நதிகளின்) தீர்த்தங்களும், நீண்ட முடித் தொகுதியும் மற்றும் (முடி சூட்டு விழாவிற்கு இன்றியமையாத) இயல்புடையன பிறவும், வன்மை பொருந்திய சிங்கம் சுமந்த தவிசும் ஆகியவற்றைத் தளராத வெற்றித்திறனையுடைய தேவர்கள் (விரைந்து) கொணர்ந்தார்கள்.

கு:— வீடணனது முடிசூட்டு விழாவிற்குரிய அரும் பொருள்களை யாண்டும் சென்று விரைந்து கொணரும் வெற்றித் திறமுடையார் இத்தேவர்கள் என்பது தோன்றத் 'தாழ்வில் கொற்றத்து அமரர்கள்' என்ருர். தோயம் — நீர். நீள் என்னும் நிலைமொழியின் ளகரம் வருமொழி முதல் மகரத்தொடு புணருங்கால் ணகரமாகத் திரியவேண்டியது இங்கு எதுகை நயங்கருதித் திரியாது நீள் முடித்தொகை என இயல்பாய் நின்றது. (4)

இச்செய்யுளின் பின், 41,:45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன :—

10099 (a) மாரு திச்செல மங்கலம் யாவையும்
மாரு திப்பெயர் கொண்டுடன் வந்தனன்
வீர விற்கை யிளவலவ் வீடணன்
வீர பட்ட மெனநுதல் வீக்கினுன்.

10100. வாச நாண்மல ரோன்சொல மான்முகன்
காசு மாநிதி யுங்கொடு கங்கைசூ
டீச னேமுத லோர்வியந் தேத்திடத்
தேசு லாமணி மண்டபஞ் செய்தனன்.

வாசநாள் மலரோன் சொல, மான்முகன்
காசும் மாநிதியும் கொடு, கங்கைசூடு
ஈசனே முதலோர் வியந்து ஏத்திட,
தேசு உலாம் மணிமண்டபம் செய்தனன்.

பொ :— நறுமணம் வாய்ந்த அன்றலர்ந்த (புதிய) தாமரை மலரில் தோன்றியவனுகிய பிரமன் பணிக்க, மானின் முக முடையவனுகிய மயன் என்னும் தச்சன் மணியும் பெருமை வாய்ந்த பொன்னுங்கொண்டு, கங்கையாற்றினை (ச் சடையில்) அணிந்த சிவபெருமான் முதலிய கடவுளர் வியந்து பாராட்ட ஒளிவீசும் மணிமண்டபத்தை அமைத்தான்.

கு :— மலரோன்—பிரமன். அசுரத்தச்சனுகிய மயன் என்பவன் மானின் முகமுடையவன் என்பது, 'மான் முகத்தயன் மயன்' என முன்னும் கிட்கிந்தாகாண்டத்தில் கூறப்பட்டிருத்தல் நினைக்கத்தக்கது. காசு — மணி. பெருஞ் செல்வம் என்னும் பொருளுடைய மாதிநி என்பது, இங்குப் பொன்னைக் குறித்து நின்றது. தேசு — ஒளி. (5)

இச்செய்யுளின் பின் 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10100 (a) செய்த மாமணி மண்டபத்தே செழும்
துய்ய நல்மணிப் பீடமும் தோற்றுவித்து,
எய்து வானவ ... ... கம்மி ...
... ... ... ... ... ... ... .

10100 (b) மேவி நாரத னேமுதல் வேதியர்
ஓவில் நான்மறை ஓதிய நீதியில்
கூவி ஓம விதிமுறை கொண்டிட
தாவில் சங்கொலி யாதி தழைக்கவே.

10100 (c) பொய்யினுக் கொருவெ ... ...
... ... ... ... ... ... ... ... ...
உய்திறத்தினுக்கே யுவந்தும்பர்கள்
கையினின் கலசப்புனல் ஆட்டினுர்.

இலக்குவன் வீடணனுக்கு முடிசூட்டுதல்

10101. மெய்கொள் வேத விதிமுறை விண்ணுளோர்
தெய்வ நீள்புன லாட லிருத்திட
ஐய ணுணையி ணுலிளங் கோளரி
கையி ணுன்மகு டங்கவித் தானரோ.

மெய்கொள் வேத விதிமுறை விண்ணுளோர்
தெய்வ நீள்புனல் ஆடல் திருத்திட,
ஐயன் ஆணையினுல், இளங் கோளரி
கையினுல் மகுடம் கவித்தான் அரோ.

பொ :— மெய்ம்மையினைக் கொண்ட வேதங்களிற் கூறிய விதிமுறைப்படி வானவர்கள் தெய்வத்தன்மை வாய்ந்த நெடிய தீர்த்தங்களால் நீராடலைத் திருத்தமுற நிகழ்த்த யாவருக்குந் தலைவனுகிய இராமனது கட்டளையின்படி வலிய இளஞ்சிங்கம் போல்வானுகிய இலக்குவன் (தன்) கையினுல் (வீடணனுக்கு) முடி சூட்டினுன்.

கு :— எக்காலத்தும் தப்பாத உண்மைகளைத் தம்பாற் கொண்டன வேதங்கள் என்பார், 'மெய்கொள்வேதம்' என்ருர். நீள்புனல் — நெடுந்தூரத்தினின்று கொணரப்பட்ட தீர்த்தம். திருத்துதல் — செய்தல். ஐயன் — தலைவன் ; இராமன். இளங் கோளரி என்றது இலக்குவனை. முடிகவித்தல்—முடி சூட்டுதல். அரோ – அசை.

இச்செய்யுளின் பின் 41, 45, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10101 (a) வேத வோசை விழாவொலி மேலிட
நாத துந்துபி யெங்கு நடித்திட
வேத பாரக ராசி விளம்பிட
ஆதி தேவ ரலர்மழை யார்த்திட.

வீடணன் அரியணையில் அமர்ந்திருத்தல்

10102. கரிய குன்று கதிரிணைச் சூடியோ
ரெரிம ணித்தவி சிற்பொலிந் தென்னவே
விரியும் வெற்றி யிலங்கையர் வேந்தனீ
டரிய ணைப்பொலிந் தான்றம ரார்த்தெழ.

கரிய குன்று கதிரிணைச் சூடி ஓர்
எரி மணித் தவிசில் பொலிந்தென்னவே,
விரியும் வெற்றி இலங்கையர் வேந்தன் நீடு
அரியணைப் பொலிந்தான், தமர் ஆர்த்து எழ.

பொ :— கருநிறம் வாய்ந்த மலையொன்று ஞாயிற்றைத் தன் முடிமேற் சூடிக்கொண்டு, ஒளி வீசும் மணிகள் பதிக்கப் பெற்ற ஆசனத்தின்மேல் பொலிவுற்று விளங்கினாற்போன்று பரவிய வெற்றித்திறனுடைய இலங்கையிலுள்ளார்க்கு அரசனாகிய வீடணன் தன்னுடைய சுற்றத்தார்கள் ஆரவாரித்து (ஊக்கத்தாற்) கிளர்ந்தெழ நெடுங்காலமாக நிலைபெற்றுவரும் சிங்காதனத்தின் மேல் பொலிவுடன் வீற்றிருந்தான்.

கு :— கருநிறமலை வீடணனுக்கும், ஞாயிறு அவன் தலைமீது கவிக்கப்பெற்று ஒளிரும் மணிமுடிக்கும் உவமை. ‘அறமார்த் தெழ’ எனப் பாடங்கொண்டு, இராவணனது ஆட்சியில் அடங்கி வலியற்றுக்கிடந்த அறமானது மகிழ்ச்சிமிக்கு ஆரவாரித்துக் கிளர்ந்தெழுமாறு வீடணன் அரியணையிற் பொலிந்து விளங்கினான் எனப் பொருள்கூறுதலும் அமையும். (7)

10103. தேவர் பூமழை சித்தர் முதலினோர்
மேவு காதல் விரைமலர் வேறிலா
மூவ ரோடு முனிவர்மற் றியாவரும்
நாவி லாசி நறைமலர் தூவினர்.

தேவர் பூமழை, சித்தர் முதலினேர்
மேவு காதல் விரைமலர், வேறு இலா
மூவரோடு, முனிவர், மற்று யாவரும்,
நாவில் ஆசி நறைமலர், தூவினர்.

பொ :— தேவர்கள் (கற்பக) மலர் மழையையும் சித்தர் முதலாயினோர், நிறைந்த அன்பினுல் மணமிக்க (பலவகை) மலர்களையும் (தம்மில்) வேறுபாடில்லாத கடவுளர் மூவருடன் முனிவர்களும் மற்றும் உள்ளாரும் நாவினுற் கூறும் வாழ்த்துரையாகிய (சொல்) மலர்களையும் (வீடணன்மீது) சொரிந்தார்கள்.

கு :— சித்தர் முதலினேர் என்றது, பதினெண் கணத்தாருள் முற்கூறிய தேவர்களும் பிற்கூறிய முனிவர்களும் நீங்கலாகவுள்ள சித்தர் இயக்கர் கந்தருவர், கருடர், கின்னரர், கிம்புருடர், அசுரர், இராக்கதர், சாரணர், வித்தியாதரர், நாகர், பூதம், வேதாளம், தாராகணம், ஆகாசவாசிகள், போகபூமியோர் ஆகியோரை. சித்தராவார் யோகவன்மையினுல் எண்வகைச் சித்திகளில் வல்லவர்கள். வேறிலா மூவர் என்றது அயன், அரி, அரன் என்னும் கடவுளர் மூவரையும். இம் மூவரும் பண்பு, தொழில் முதலியவற்ருல் வேறுபட்டவராகக் கூறப்படினும் உலகினை இயக்குந்திறத்தில் முரணின்று ஒருநெறிச் செலுத்தும் இறைமைத்தன்மையில் ஒருவராகவே கொள்ளத் தக்கவர்கள் என்பதுபட 'வேறிலா மூவர்' என்ருர். மற்று யாவரும் என்றது வேதியர் முதலியோரை. (8)

*முடிசூடிய வீடணன் இலக்குவனை வணங்கி உபசரித்து இராமபிரானை யெய்தி இறைஞ்சுதல்*

10104. முடிபு னைந்த நிருதர் முதலவன்
அடிவ ணங்கி யிளவலை யாண்டையந்
நெடிய காதலி னேற்குயர் நீர்மைசெய்
திடிகொள் சொல்ல னவற்கி தியம்பினன்.

முடி புனைந்த நிருதர் முதலவன்,
அடி வணங்கி இளவலை, ஆண்டைஅந்
நெடிய காதலினேற்கு உயர் நீர்மை செய்து,
இடிகொள் சொல்லன், அவற்கு இது இயம்பினன்.

பொ :—(இலக்குவனுல்) முடிசூட்டப்பெற்ற அரக்கர் கோமானுகிய வீடணன் (இராமனது) தம்பியாகிய இலக்குவனைத் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அப்பொழுது பேரன்புடையனுகிய இலக்குவனுக்கு உயர்ந்த சிறப்புச் செய்து, இடியின் ஓசையினைக் கொண்ட சொற்களையுடையனுய் அவ்விலக்குவனுக்கு (ப் பின் வரும்) இம்மொழியினைக் கூறினுன்.

கு :— புனைந்த — புனையப்பட்ட; செயப்பாட்டுவினைக்குரிய படுவிகுதி தொக்கது. நிருதர் முதலவன் — அரக்கருள் முதல்வன்; என்றது நிருதர் வேந்தனுகிய வீடணனை. இளவலை அடி வணங்கி என இயைக்க. இளவல் — தம்பி; இராமன் தம்பியாய இலக்குவன். நெடிய காதல் — நெடுங்காலம் அழிவின்றி நிலை பெறுந்தன்மையினையுடைய பேரன்பு. உயர் நீர்மை — உயர்ந்த சிறப்பு; என்றது, ஈண்டு அரியணையில் அரசர் நிலையில் வீற்றிருக்கச் செய்து போற்றும் பெருஞ்சிறப்பு. இடிகொள்சொல் என்றது, அரக்கர் குடியிற் பிறந்தமைக்கேற்ப வீடணன்பால் இடியின் ஓசையினையொத்து அமைந்த பெரு முழக்கமுடைய சொல்லினை. இது என்றது, வீடணன் கூற்ருக அடுத்த செய்யுளிற் கூறப்படும் வார்த்தையினை. (9)

10105. விலங்க ஞண மிடைதரு தோளினுய்
இலங்கை மாநகர் யான்வரு மெல்லைநீ
கலங்க லாநெடுங் காவ லியற்றெனு
அலங்கல் வீர னடியிணை யெய்தினுன்.

'விலங்கல் நாண மிடைதரு தோளினுய்!
இலங்கை மாநகர் யான்வரும் எல்லைநீ
கலங்கலா நெடுங்காவல் இயற்று' எனு,
அலங்கல் வீரன் அடியிணை எய்தினுன்.

பொ.— 'மலையும் (நினக்கு ஒப்பாக மாட்டாது) நாணமுறுமாறு செறிந்த திண்ணிய தோள்களையுடையவனே! யான் (இராமபிரானை வணங்கி) இலங்கையாகிய பெருநகரத்திற்கு (மீண்டு) வருமளவும் நீ மனக்கலக்கமுருவகையில் பெருங் காவலைச் செய்வாயாக' என்று சொல்லி, வெற்றிமாலையையணிந்த வீரனுகிய இராமபிரானுடைய திருவடியிணைகளை வந்தடைந்தான் (வீடணன்).

கு :— விலங்கல் — மலை. நாணுதல் — இலக்குவன் தோள்களுக்குத்தான் ஒப்பாகாமைகண்டு வெட்கமுறுதல். 'யான் இலங்கை மாநகர் வரும் எல்லை நீ கலங்கலாது நெடுங்காவல் இயற்று' என்பது, இலக்குவனை நோக்கி வீடணன் கூறிய வேண்டுகோள். அலங்கல் வீரன் என்றது, இராவணனையழித்து வாகைசூடிய வீரனாகிய இராமனை. (10)

இச்செய்யுளின்பின் 41, 45, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது :—

10105 (a) வீர மாமுடி சூடிய வீடணன்
வீர ராகவன் ருளிணை மேவிட
ஆர மார்பொ டமுந்திடப் புல்லினன்.
ஆரி னுனு மறிவரு மாதியான்.

வணங்கிய வீடணனை இராமன் தழுவிக்கொண்டு
அவனுக்கு நீதிகளை எடுத்துரைத்தல்

10106. குரக்கு வீர னரசிளங் கோளரி
அரக்கர் கோமக ஞேடடி தாழ்தலும்
பொருக்கெ னப்புகல் புக்கவற் புல்லியத்
திருக்கொண் மார்ப னிணையன செப்பினன்.

குரக்கு வீரன், அரசு இளங்கோளரி,
அரக்கர் கோமகனேடு அடி தாழ்தலும்,
பொருக்கெனப் புகல்புக்கவற் புல்லி, அத்
திருக்கொள் மார்பன் இனையன செப்பினன்.

பொ :— (அங்ஙனம் வந்தடைந்த) அரக்கர் வேந்தனாகிய வீடணனேடு குரங்கினத் தலைவனாகிய சுக்கிரீவமன்னனும் இளவரசனாகிய வலிய சிங்கம் போன்ற அங்கதனும் இராமன் திருவடிகளை வணங்கியபொழுது, அத்திருமகளைத் தன்பாற் கொண்டு விளங்கும் மார்பினையுடைய (திருமாலின் அவதாரமாகிய) இராமன் விரைந்து சரண்புக்கவனாகிய வீடணனை ஆரத் தழுவிக்கொண்டு (பின்வருமாறு) இத்தகைய சொற்களைக் கூறுவானாயினன்.

கு :— அரக்கர் கோமகனோடு, குரக்கு அரசு வீரன், இளங் கோளரி, அடிதாழ்தலும், திருக்கொள்மார்பன் பொருக்கெனப் புகல் புக்கவற்புல்லி, இனையனசெப்பினன் என இயைத்துரைக்க. அரக்கர் கோமகன்—வீடணன். குரக்குவீரன் என்றது வீரத்திற் சிறந்த சுக்கிரீவமன்னனை. அரசிளங்கோளரி என்றது கிட் கிந்தைக்கு இளவரசனாகிய அங்கதனை. பிறன் மனையாளிடத்தே வைத்த காமவேட்கையால் அவளை வஞ்சனையாற் கவர்ந்து சென்று சிறைவைத்த கொடியோனாகிய தமையனது கொடு வினைக்கு அஞ்சி அவனுடைய தொடர்பில், தான் இருத்தல் தகா தென்றெண்ணித் தீப்பற்றிய வீட்டினின்றும் தப்பியோடுவாரைப் போன்று இலங்கையை விட்டு விரைந்தோடிச் சென்று இராமனைச் சரண்புக்கவன் வீடணன் ஆதலின் 'பொருக்கெனச் சரண்புக்கவன்' என்றார். திருக்கொள்மார்பன் என்றது, திரு மகளைத் தன் மார்பிற்கொண்ட திருமாலின் அமிசமாகிய இராமனை. (11)

இச்செய்யுளின் பின் 41, 44, 45, 52–ஆம் பிரதிகளில் பின் வரும் மிகைப் பாடல் உள்ளது.

10106 (a) ஆதி நாளி லருண்முடி நின்னதென்
றோதி னேனவை யுற்றுள துத்தம
வேத பாரகர் வேறுளர் யாவரும்
ஓது நீதி யொழுக்கி னொழுக்குவாய்.

10107. உரிமை மூவுல குந்தொழ வும்பர்தம்
பெருமை நீதி யறன்வழிப் பேர்கிலா
திருமை யேயர சானதி யீறிலாத்
தரும சீலவென் றன்மறை தந்துளான்.

'உரிமை மூவுலகும் தொழ, உம்பர்தம்
பெருமை நீதி அறன்வழிப் பேர்கிலாது
இருமைஏய் அரசுஆனதி, ஈறு இலாத்
தருமசீல!' என்றான் மறை தந்துளான்.

பொ :— வேதங்களை வெளியிட்டருளிய திருமாலாகிய இராமன், (வீடணனை நோக்கி) 'அழிவில்லாத அறவொழுக்கத் தினையுடையவனே! உரிமையுடைமையால் மூன்றுலகங்களில் வாழ்வாரும் நின்னைத் தொழுது போற்றத் தேவர்களுக்குரிய

பெருமையினின்றும் (அரசியல்) நீதிமுறையினின்றும் அறநெறியினின்றும் பிறழாது (இம்மை மறுமையாகிய) இருமை நலங்களும் ஒருங்கு பொருந்திய அரசு முறையினை மேற்கொண்டு ஆட்சி புரிவாயாக ' என்று கூறினான்.

கு :— தேவர்களது இயல்பாகிய பெருமைக்கும் அரச நீதிக்கும் அறநெறிக்கும் முரண்படாதவகையில் நீ ஆட்சி புரிவாயாயின், மூவுலகங்களும் நினக்கு உரிமையுடையனவாக, அவ்வுலகங்களில் வாழ்வார் அனைவரும் நின்னைத் தொழுது போற்றுவர் என இராமபிரான் வீடணனுக்குப் பகையற்ற அரச நீதியின் இன்றியமையாமையினை அறிவுறுத்தினான் என்பதாம். இருமை ஏய் அரசு — இம்மை மறுமையாகிய இருமையின்பங்களையும் நாட்டில் வாழ்வார் முறையே துய்த்து மகிழும் நிலையில் அமைந்த சிறந்த ஆட்சிமுறை. ''இருமையுலகுக் கொருமை முடிகவித்தார் எல்லாவுயிரும் மகிழ்தரும நிலைமையறிந்து புவி தாங்கும் கழறிற்றறிவார்தாம்'' (பெரிய-கழறிற்-16) எனவரும் சேக்கிழார் வாய்மொழி இங்கு ஒப்பு நோக்கியுணரத்தகுவதாகும். என்றும் இறவாது நிலைபெற்று வாழும் வரத்தினைப் பிரமன் தரப் பெற்றவன் வீடணனாதலின் அவனை 'ஈறிலாத் தரும சீல!' என அழைத்தான் இராமன். சோமகாசுரன் என்னும் அசுரனாற் கவரப்பட்டு மறைந்து அருமறைகளைத் திருமால் மீனுருவங்கொண்டு மீட்டுக் கொணர்ந்து அன்னமாய்த் தோன்றி நான்முகனுக்கு அறிவுறுத்தினமை பற்றி 'மறைதந்துளான்' என்றார். (12)

10108. பன்னு நீதிகள் பற்பல கூறிமற்
றுன்ன டைந்தவ ரோடுயர் கீர்த்தியே
மன்னி வாழ்கென் றுரைத்தடன் மாருதி
தன்னை நோக்கினன் றாயர்சொ னோக்கினான்.

பன்னும் நீதிகள் பற்பலகூறி, 'மற்று
உன் அடைந்தவரோடு உயர் கீர்த்தியே
மன்னி வாழ்க' என்றுஉரைத்து, அடல்மாருதி—
தன்னை நோக்கினன், தாயர்சொல் நோக்கினான்.

பொ :— (தன் மாற்றாந்) தாயாகிய கைகேயியின் சொல்லைக் குறிக்கொண்டு பாதுகாக்கும் நிலையினனாகிய இராமன், (பெரியோர் ஆராய்ந்துரைத்த) பற்பல நீதியுரைகளை எடுத்துக் கூறி

(மேலும் வீடணனை நோக்கி,) 'உயர்ந்த புகழையுடையோனே உன்னைப் பற்றுக் கோடாக வந்தடைந்தவர்களாகிய சுற்றத்தார் நண்பர் முதலியோருடன் நிலைபெற்று வாழ்வாயாக' என்று கூறி, வலிமை பொருந்திய அனுமனை நோக்கினன்.

கு:— தயரதன்பால் இருவரங்கள் பெற்ற சிற்றன்னையாகிய கைகேயி, 'ஆழி சூழுலகமெல்லாம் பரதனேயாள நீ போய்ச் சடைகள் தாங்கித் தவமேற்கொண்டு பூழி வெங்கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடிப் பதினான்காண்டு கழிந்த பின்னர் வா' எனக்கூறிய கட்டளையினைப் போற்றிக் காக்கும் கடமையுணர்வும் தாயன்பும் ஒருங்கு வாய்க்கப் பெற்றவன் இராமன் என்பது தோன்றத் 'தாயர் சொல் நோக்கினன்' என்றார். நோக்குதல் — குறிக்கொண்டு காத்தல். (13)

இதன்பின் 41, 44, 45, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10108 (a) 'வஞ்ச னைக்கொடி யான்முனம் வவ்விடப்
பஞ்ச ரக்கிளி யென்னப் பதைப்பவள்
நெஞ்சி னிற்றுயர் நீங்கிய தென்றுநீ
அஞ்ச னைப்புதல் வாவருள் வாயென்றான்'.

*சீதைக்குச் செய்தி சொல்லி வருமாறு, இராமன், அனுமனை அனுப்புதல்*

10109. இப்பு றத்தின வெய்துறு காலையில்
அப்பு றத்ததை யுன்னி யனுமனைத்
துப்பு றச்செய்ய வாய்மணித் தோகைபால்
செப்பு றிப்படிப் போயெனச் செப்பினான்.

இப்புறத்து, இ(ன்)ன எய்துறு காலையில்,
அப்புறத்ததை உன்னி, அனுமனை,
'துப்பு உறுஅச் செய்யவாய் மணித்தோகைபால்
செப்புறு, இப்படிப் போய்' எனச் செப்பினான்.

பொ :- இப்புறத்தில் இத்தன்மையவாகிய செயல்கள் நிகழ்ந்த பொழுது இராமன் (சீதை சிறையிருந்த இடமாகிய) அப்புறத்தின் நிலைமையை எண்ணி, அனுமனை (நோக்கி) 'பவளத்தினை

யொத்த அழகிய சிவந்த வாயினையும் அழகிய மயில்போலும் சாயலினையும் உடையளாகிய சீதையினிடத்தில் (நீ) சென்று (இங்கு நிகழ்ந்த) இச்செய்திகளைச் சொல்வாயாக' எனக் கூறினான்.

கு:— இப்புறம் என்றது இலங்கையின் புறத்தே யமைந்த போர்க்களத்தினையும், அப்புறம் என்றது சீதை சிறையிருந்த அசோகவனத்தையும் குறிக்கும்; இவை யிரண்டும் முறையே சென்றகால நிகழ்ச்சியையும் எதிர்கால நிகழ்ச்சியையும் குறித்தனவாகக் கொள்வதும் உண்டு. இன — இன்ன; இத்தன்மையனவாகிய செயல்கள். (14)

*அனுமன் அசோகவனம் சென்று, பிராட்டியைத் தொழுது சோபனம் பாடி இராமனால் இராவணன் கொல்லப்பட்ட செய்தியைக் கூறுதல்*

10110. வணங்கி யந்தமின் மாருதி மாமலர்
அணங்கு சேர்கடி காவுசென் றண்மினான்
உணங்கு கொம்புக் குயிர்வரு நீரெனச்
சுணங்கு தோய்முலை யாட்கிவை சொல்லுவான்

வணங்கி, அந்தம்இல் மாருதி, மாமலர்
அணங்கு சேர் கடிகாவுசென்று அண்மினான்;
உணங்கு கொம்புக்கு உயிர்வரு நீர்என,
சுணங்குதோய் முலையாட்கு இவை சொல்லுவான்.

பொ:— இறவாப் பெரும்பேறுடைய அனுமன், (இராமனை) வணங்கி (விடைபெற்று,) பெருமை வாய்ந்த தாமரைமலரில் அமர்ந்த திருமகளின் அமிசமாகிய சீதை (சிறை) இருந்த காவல் மிக்க அசோகவனத்தை அடைந்து, நீரின்றி வாட்டமுறும் பூங் கொம்புக்கு (மீளவும்) உயிர் தளிர்த்தற்குக் காரணமான நீரைப் போன்று, தேமல் பரவிய கொங்கையினை யுடையளாகிய பிராட்டிக்கு (உயிரைத் தளிர்ப்பிக்கும்) இச்சொற்களைச் சொல்வானாயினான்.

கு:— அனுமன் கூறியவை 17 முதல் 20 வரையுள்ள மூன்று செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (15)

10111. பாடி ஞன்றிரு நாமங்கள் பன்முறை
கூடு சாரியிற் குப்புற்றுக் கூத்துநின்
ருடி யங்கை யிரண்டு மலங்குறச்
சூடி நின்றனன் குன்றன்ன தோளினுன்.

பாடினுன் திருநாமங்கள் ; பல் முறை
கூடு சாரியின் குப்புற்றுக் கூத்து நின்று
ஆடி, அங்கை இரண்டும் அலங்குறச்
சூடி நின்றனன், குன்று அன்ன தோளினுன்.

பொ :— மலேயினை யொத்த (திண்ணிய) தோள்களேயுடையனுகிய அனுமன் (இராமபிரானுடைய) திருப்பெயர்களேப் பல முறை சொல்லிப் பாடினுனகிப் பொருந்திய வலசாரி இடசாரியாகத் திரிந்து நின்று துள்ளிக் குதித்துக் கூத்தாடி அழகிய கைகள் இரண்டும் விளங்கக் குவித்த நிலேயில் (தலேமிசைச்) சூடி நின்ருன்.

கு :— குன்றன்ன தோளினுன், திருநாமங்கள் பன்முறை பாடினுன் ; கூடு சாரியின் குப்புற்று நின்று கூத்தாடி அங்கை இரண்டும் அலங்குறச் சூடி நின்றனன் என இயையும். குப்புறுதல் — குதித்தல். அலங்குதல் — விளங்குதல். (16)

10112. ஏழை சோபனம் ஏந்திழை சோபனம்
வாழி சோபன மங்கல சோபனம்
ஆழி யான வரக்கனே யாரியச்
சூழி யானே துகைத்தது சோபனம்

'ஏழை, சோபனம்! ஏந்திழை, சோபனம்!
வாழி சோபனம்! மங்கல சோபனம்!
ஆழி ஆன அரக்கனே ஆரியச்
சூழி யானே துகைத்தது, சோபனம்!'

பொ :— பேதைமைக் குணமுடையவளே! மங்கலம். பொருந்த அணிந்த அணிகலன்களே யுடையவளே! மங்கலம். வாழ்வாயாக மங்கலம். மங்கலத்தின் மேலும் மங்கலம். (தீமைக்கெல்லாம்) கடல்போன்ற அரக்கனுகிய இராவணனே

மேலோனுகிய (இராமன் என்னும்) முகபடாத்திஃனயுடைய களிறு மிதித்து அழித்துவிட்டது.

கு :— ஏழை — பேதைமையுடையாள். பேதைமை என்பது மகளிர்க்கு அணிகலமாகியதோர் பண்பு. சோபனம் என்னும் வடசொல் நன்மையுண்டாயிற்று என்னும் பொருளில் வழங்கும் மங்கலமொழியாகும். ஆழி — கடல்; எல்லை எனப் பொருள் கொண்டு தீமைகட்கெல்லாம் வரம்பாயமைந்தமைபற்றி ‘ஆழி யான அரக்கன்’ என்ருர் எனினும் அமையும். அரக்கன் என்றது இராவணஃன. ஆரியச் சூழியாஃன — ஆரியனுகிய முகபடாத் திஃனயுடைய களிறு; இராமஃனக் களிருக உருவகித்தார். ஆரியன் — மேலோன்; என்றது இராமஃன. சூழி — முகபடாம். துகைத்தல் — கால்களால் மிதித்து அழித்தல். (17)

இச்செய்யுளின் பின் 41, 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10112 (a) மங்கை சோபனம் மாமயில் சோபனம்
பங்க யத்துறை பாவையே சோபனம்
மங்குல் வாளி யரக்கஃன யாரியச்
சிங்க மின்று சிதைத்தது சோபனம்.

10112 (b) வல்லி சோபன மாதரே சோபனம்
சொல்லி னல்லசொற் ருேகையே சோபனம்
அல்லி ளுளி யரக்கஃன யாரிய
வல்லி யங்கள் வதைத்தது சோபனம்.

10112 (c) அன்ஃன சோபன மாயிழை சோபனம்
மின்னி னுண்ணிடை மெல்லியல் சோபனம்
அன்ன வாளி னரக்கஃன யாரிய
மன்ன னின்று வதைத்தது சோபனம்.

10112 (d) நாறு பூங்குழ ஞயகி சோபனம்
நாறு பூங்குழ ஞரியே சோபனம்
ஆறு வாளி யரக்கஃன யாரிய
வேறு மின்று மெரித்தது சோபனம்.

10112 (e) சொன்ன சோபனந் தோகை செவிபுக
அன்ன முன்னி யனுமஃன நோக்கியே
அன்ன போரி லறிந்துள தையநீ
இன்ன மின்ன மியம்புதி யாலென்ருள்.

10113. தலைகி டந்தன தாரணி தாங்கிய
மலைகி டந்தன போன்மணித் தோளெனும்
அலைகி டந்தன வாழி கிடந்தென
நிலைகி டந்த துடனிலத் தேயென்றான்.

'தலை, கிடந்தன, தாரணி தாங்கிய
மலை கிடந்தனபோல்; மணித்தோள் எனும்
அலை கிடத்தன; ஆழி கிடந்தென,
நிலைகிடந்தது, உடல் நிலத்தே' என்றான்.

பொ:—(இராவணனுடைய) தலைகள், பூமியைத் தாங்கிய மலைகள் கிடந்தாற்போன்று (நிலத்தில் ஊன்றிக்) கிடந்தன; மணிகள் பதிக்கப்பெற்ற (வாகுவலயங்கள் அணிந்த) தோள்கள் என்னும் அலைகள் கிடந்தன; (அலைகளையுடைய)கடல் கிடந்தாற் போன்று (அவனது) உடல் நிலத்தின்கண் அசைவின்றிக் கிடந்தது.

கு:— நிலத்தைவிட்டுப் பெயர்த்தெடுக்கவொண்ணுதவாறு மலைபோலும் தோற்றமுடையனவாய்த் தரையிற் பதிந்து கிடத்தல் பற்றி இராவணன் தலைகளுக்கு மலைகளும், இரத்தநீர்ப் பெருக்குடன் வரிசை வரிசையாய் நீண்டு கிடத்தல்பற்றி அவனுடைய தோள்களுக்கு அலைகளும், கருநிறமுடையதாய் விரிந்து பரவிக் கிடத்தல்பற்றி அவனது பேருடலுக்குக் கடலும் உவமையாயின. (18)

10114. அண்ண லாணையின் வீடண ணுமறக்
கண்ணி லாதவன் காத றொடர்தலாற்
பெண்ண லாது பிழைத்துள தாகுமென்
றெண்ண லாவதொர் பேரில தாலென்றான்.

'அண்ணல் ஆணையின் வீடணனும் மறக்
கண் இலாதவன் காதல் தொடர்தலால்,
பெண் அலாது, பிழைத்துளதாகும் என்று
எண்ணல் ஆவது ஓர்பேர் இலதால்' என்றான்.

பொ:— பெரியோனாகிய இராமனது கட்டளையினாலும் வீடணன் என்னும் கொடுந்தன்மையில்லாத நல்லோனது

பேரன்பு தொடர்ந்து நிலைபெற்றமையாலும் பெண்பால் தவிரப் பிழைத்து உயிரோடுள்ளதென்று எண்ணுதற்குரியதாக ஆண்பாற் பேர் ஒன்றுகூட (இலங்கையில்) இலதாயிற்று என்று (அனுமன் சீதைக்குக்) கூறினான்.

கு:— அண்ணல் — பெரியோன்; இராமன். ஆணை — போரில் எதிர்நின்று பொரும் ஆண்மையுடைய வீரர்களையே கொல்லுதல் வேண்டும் என்னும் கட்டளை. இதனால் போர் செய்யும் நிலையினரல்லாத பெண்டிரைக் கொல்லலாகாது என்பது வற்புறுத்தப் பெற்றமை குறிக்கத் தகுவதாகும். இராமணன் முதலிய கொடியோரை அழிக்குந்திறத்தில் இராமனுக்கு உதவி புரியும் நல்லோனாகிய வீடணனது அன்பின் தொடர்பினாலும் அரக்கர்குலத்து மகளிர் அழிவின்றி உய்ந்தனர். இலங்கைவாழ் அரக்கரினத்தவருள் போரிற் கொல்லப்படாது உயிரோடுள்ளார் பெண்களையன்றி ஆடவருள் பிழைத்து உய்ந்தவராகப் பேர் சொல்லுதற்கு ஒருவரும் இலர் என்பதாம். (19)

## செய்திகேட்டுச் சீதை மகிழ்ச்சியால் உடம்பு பூரித்தல்

10115. ஒருக லைத்தனி வெண்மதி நாளொடும்
வருக லைக்குள் வளர்வது மானுறப்
பொருக லைக்குலம் பூத்தது போன்றனள்
பருக லுற்ற வமுது பயந்தநாள்.

ஒரு கலைத்தனி வெண்மதி நாளொடும்
வரு கலைக்குள் வளர்வது மானுறப்
பொரு கலைக்குலம் பூத்தது போன்றனள் —
பருகல் உற்ற அமுது பயந்த நாள்.

பொ:— (விரும்பிப்) பருகுதற்குப் பொருந்திய (இனிய) அமுதமாகிய இம்மொழியினை (அனுமன் சீதைக்கு)க் கூறிய பொழுது, (அவள்) ஒரு கலையினையுடைய வெள்ளிய பிறைச் சந்திரன் நாள்தோறும் (ஒவ்வொன்றாகத் தோன்றி) வருகின்ற கலைகளுக்குள்ளே (உடன்) வளர்வதாகிய களங்கப் பகுதியிற் பொருந்திச் செறியும் வண்ணம் (ஒன்றின் ஒன்று) மிக்குச் செறி

கின்ற கலைகளின் தொகுதி ஒருங்கே நிரம்பப் பெற்றதனை ஒத்துத் தோன்றினாள்.

கு :— 'பருகலுற்ற அமுது' என்றது, விரும்பிப் பருகுதற்கு ஏற்புடைய இனிய அமுதத்தை யொத்துச் சீதையின் வாட்டம் போக்கி உயிரைத் தளிர்க்கச் செய்யுந் திறத்தில் அனுமன் கூறிய இன்மொழியினை. பயத்தல் — தருதல்; இங்குக் கூறுதல் என்னும் பொருளது. அனுமன் கூறிய அமுதத்தை யொத்த இன்னுரையைச் செவிமடுத்த சீதை, ஒரு கலையாயுள்ள பிறை மதி, தான் நாளும் ஒவ்வொரு கலையாக முறையே பெற்று வளருங் காலத்தில் தன்னுள்ளே தோன்றி வளர்கின்ற களங்கப் பகுதி தன் கலைகளில் அடங்கி மறையும்படி ஒரே நாளில் தனக்குரிய எல்லாக் கலைகளும் ஒருங்கே நிரம்பப் பெற்று விளங்கினாற் போன்று, இராவணனது கொடுமையால் தனக்கேற்பட்ட வாட்டமெலாந் தீர்ந்து களங்க மற்ற முகத்தினளாய் விளங்கித் தோன்றினாள் என்றவாறு. மான் என்றது, நிறை மதியிற்காணப் படும் களங்கத்தினை. உறுதல் — மேலே பொருந்திச் செறிதல். (20

10116. ஆம்பல் வாயு முகமு மலர்ந்திடத்
தேம்பு நுண்ணிடை நோவத் திரண்முலை
ஏம்ப லாசைக் கிரட்டிவந் தெய்தினாள்
பாம்பு கான்ற பனிமதிப் பான்மையாள்.

ஆம்பல் வாயும் முகமும் அலர்ந்திட,
தேம்பு நுண் இடை நோவ, திரள்முலை
ஏம்பல் ஆசைக்கு இரட்டிவந்து எய்தினாள்—
பாம்பு கான்ற பனிமதிப் பான்மையாள்.

பொ :— (இராகு என்னும்) பாம்பினால் (விழுங்கப்பட்டு) வெளிப்படுத்தப்பட்ட குளிர்ந்த நிறைமதியின் தன்மையளாகிய சீதை, செவ்வல்லிமலரை யொத்த சிவந்த வாயும் முகமும் மலர்ச்சியுற்று விளங்க, (இயல்பாகவே சிறுமையுடையதாய்த்) தளர்கின்ற நுண்ணிய இடை, மேலும் வருந்தித் தளரத் திரண்ட கொங்கைகள் (இராமனை அடையும்) அவாவின் வழிப்பட்ட

விருப்பத்தால் இருமடங்கு பூரிக்கப்பெறும் மகிழ்ச்சிநிலை வந்தடையப் பெற்றுள்.

கு :— ஆம்பல்—அல்லி; இங்குச் செவ்வல்லியைக் குறித்தது. தேம்புதல் — வாடித் தளர்தல். நோவ — வருந்த. ஏம்பல் ஆசை-அவாவின் வழிப்பட்ட விருப்பம். ஈண்டுப் பாம்பு என்றது, திங்களைப் பற்றுவதாகிய இராகுவை. காலுதல் — உமிழ்தல்; வெளிப்படுத்தல். பனி — குளிர்ச்சி. பான்மை — தன்மை. பனி மதிப்பான்மையாள், வாயும் முகமும் அலர்ந்திட, நுண்ணிடை நோவ, இரட்டிவந்தெய்தினுள் என முடிக்க. (21)

10117. புந்தி யோங்கு முவகைப் பொருமலோ
உந்தி யோங்கு மொளிவளைத் தோள்கொலோ
சிந்தி யோடு கலையுடைத் தேர்கொலோ
முந்தி யோங்கின யாவை முலைகொலோ.

புந்தி ஓங்கும் உவகைப் பொருமலோ,
உந்தி ஓங்கும் ஒளிவளைத் தோள்கொலோ,
சிந்தி ஓடு கலையுடைத் தேர்கொலோ —
முந்தி ஓங்கின யாவை — முலைகொலோ?

பொ :—(பிராட்டியின்) மனத்தில் வளர்ந்தோங்கிய உவகையின் கிளர்ச்சியோ, (உடம்பு பூரித்தலால்) உந்தப்பட்டு மேலெழுகின்ற ஒளியுடைய வளையலை யணிந்த தோள்களோ, சிதறி அலையும் துகிலிணையுடைய தேர்த்தட்டினை யொத்த அல்குலோ, கொங்கைகளோ, (இவற்றுள்) முற்பட வளர்ந்து ஓங்கியவை யாவையோ?

கு :— கொடியோனுகிய இராவணனைத் தன் நாயகனுகிய இராமபிரான் கொன்றொழித்த நற்செய்தியை அனுமன் சொல்லக் கேட்ட சீதையின் மனமகிழ்ச்சியையும் அவயவங்களின் பூரிப்பினையும் வியந்துரைக்கும் முறையில் இச்செய்யுள் கவிக்கூற்றுக அமைந்துளது. புந்தி — மனம். பொருமல் — உள்ளத்தின் பூரிப்பு. உந்துதல் — தள்ளுதல். சிந்துதல் — சிதறி அலைதல். கலை — துகில். கலையுடைத்தேர் என்றது, தேர்த்தட்டினை யொத்த அவயவத்தினைக் குறித்தது. (22

10118. குனித்த கோலப்
புருவங்கள் கொம்மைவேர்
பனித்த கொங்கை
மழலைப் பணிமொழி
நுனித்த தொன்று
நுவல்வதொன் றுயினுள்
கனித்த வின்களி
கள்ளினிற் காட்டுமோ.

குனித்த, கோலப் புருவங்கள்; கொம்மைவேர்
பனித்த, கொங்கை; மழலைப் பணிமொழி
நுனித்தது ஒன்று, நுவல்வது ஒன்று, ஆயினுள்;—
கனித்த இன்களி கள்ளினின் காட்டுமோ?

பொ:— அழகிய புருவங்கள் வளையப்பெற்றன; தனங்கள் பருமையுடையவாய் வியர்வை அரும்பப் பெற்றன; குதலையாகிய மெல்லிய மொழியினையுடையாளாகிய சீதை, தான் கூர்ந்து ஆராய்ந்து (சொல்லக்) கருதியது ஒன்று சொல்வது (வேறு) ஒன்றுகப் பெற்றுள். முதிர்ந்த இனிய மகிழ்ச்சி கள்ளைப்போன்று மயக்கத்தைத் தர வல்லதோ?

கு:— கோலப் புருவங்கள் குனித்த; கொங்கை கொம்மை வேர் பனித்த; மழலைப் பணிமொழி நுனித்தது ஒன்று நுவல்வது ஒன்று ஆயினுள் என்க. குனித்தல் — வளைதல். பனித்தல் — நீர்த்துளியரும்புதல். மழலை என்றது, இங்கு எழுத்து வடிவு பெற்றுத் தோன்றும் இளஞ் சொல்லினை. 'மெய்பெரு வெழுத் துயிர்க்கு மழலை வாயின் முறுவற்றையலாள்' (181) என வரும் சீவக சிந்தாமணித் தொடர் இங்கு நினைக்கத்தக்கதாகும். பணி மொழி — மெல்லிய மொழியினையுடையாள். (திருக்குறள் – 1121 – பரிமேலழகருரை). கனித்தல் — கனிதல்; முதிர்தல்; எதுகை யின்பம் நோக்கிக் கனிதல், கனித்தல் எனத் தகரவொற்றிரட்டி யது. கள்ளினின் — கள்ளைப்போல; இன், உவமவுருபு. கள் ளுண்டு களித்தார்பாற் காணப்படும் புருவங் குனித்தல் முதலாக வுள்ள மெய்ப்பாடுகள், மகிழ்ந்த உள்ளத்தளாய பிராட்டியினிடத் தும் காணப்படுதலால் மிக்க மகிழ்ச்சி காரணமாகவும் இவை

தோன்றுவனவோ என ஆசிரியர் வியந்துரைத்தவாறு. இச் செய்யுள் கவிக்கூற்று. (23)

களிப்பின் மிகுதியால் ஒன்றும் பேசமாட்டாது பிராட்டியிருந்தாளாக, 'ஒன்றும் பேசாதது ஏன்?' என அனுமன் வினவுதல்

10119. அனைய ளாகி யனுமனை நோக்கினள்
இனைய தின்ன தியம்புவ தென்பதோர்
நினைவி லாது நெடிதிருந் தாணெடு
மனையின் மாசு துடைத்த மனத்தினள்.

அனையள் ஆகி, அனுமனை நோக்கினள்,
இனையது இன்னது இயம்புவது என்பது ஓர்
நினைவு இலாது நெடிது இருந்தாள் — நெடு
மனையின் மாசு துடைத்த மனத்தினள்.

பொ.— பெருமைமிக்க மனைவாழ்க்கையில் ஏற்பட்ட குற்றத்தை அறவேதுடைத்த மனத்தினளாகிய சீதை, (மேற் குறித்த) அத்தன்மை யுடையவளாகி அனுமனை நோக்கிய வளாய், இத்தன்மையதாகிய இன்னவார்த்தையினை (மறுமொழி யாக)ச் சொல்வது என்னும் எண்ணந் தோன்றுமல் (தன்னை மறந்து) நெடுநேரம் சும்மா இருந்தாள்.

கு:-மனத்தினள், நோக்கினள், நினைவிலாது நெடிதிருந்தாள் என முடிக்க. நெடுமனை என்றது, பெருமைமிக்க மனைவாழ்க்கை யாகிய கற்பின் திறத்தினை. மாசு என்றது, அத்திறத்துக்கு மாசுண்டாம் நிலையில் அயலானொருவனாற் காமுறப்பட்டு அவன் மனத்தில் இடம் பெறுதலை. தூர்த்தனாகிய இராவணன் இராமனது அம்பினால் உடல் முழுதும் துளைக்கப்பட்டுச் சீதையை மனச்சிறை யிற் கரந்த காதலாகிய தீமை சிதைந்தகல வீழ்ந்தான் என்பது, "அவனியெலாங் காத்தளிக்கும் அடற்கை வீரன், சிலைமேவுங் கடுங்கணையாற் படுகளத்தே மனத்தீமை சிதைந்து வீழ்ந்தான்" (கம்பர் - இராவணன் வதைப் - 204) என முன்னர்க் குறித்தமை யாற் புலனாகும். இச்செய்தியினை அனுமன் வாயிலாக அறிந்த பிராட்டி அயலானாற் காமுறப்பட்டமையால் தன் கற்பின் திறத் துக்குளதாகிய மாசினைத் துடைத்துப் போக்கிய மனத்தினளாயி

னுள் என்பார், 'நெடுமணியின் மாசு துடைத்த மனத்தினுள்' என்றார். ''தீதிலாவட மீனின் திறம்'' (சிலப் - மங்கல. 27) என வருந்தொடர்க்கு உரை கூறுமிடத்து, 'தீது — பிறர் நெஞ்சு புகுதல். திறம் — கற்பு' என அடியார்க்கு நல்லார் தரும் விளக்கம் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். (24)

10120. யாதி தற்கொன்
றியம்பலெ யென்பது
மீது யர்ந்த
வுவகையின் விம்மலோ
தூது பொய்க்குமென்
றேவெனச் சொல்லினான்
நீதி வித்தக
னங்கை நிகழ்த்தினாள்.

'யாது இதற்கு ஒன்று இயம்பலெ என்பது,
மீது உயர்ந்த உவகையின் விம்மலோ?
தூது பொய்க்கும் என்றே?' எனச் சொல்லினான்,
நீதி வித்தகன்; நங்கை நிகழ்த்தினாள்.

பொ:— நீதி நெறியின் கண்ணே திறம்பெற ஒழுகவல்லனாய அனுமன் (பிராட்டியை நோக்கி ''யான் கூறிய) இச்செய்திக்கு (மறுமாற்றமாக) யாதொன்றும் சொல்லாதிருந்ததனை என்பதற்குக் காரணம், (நின்னுள்ளத்தில்) மேற்பட்டோங்கிய மகிழ்ச்சியின் மிகுதியோ? அன்றி 'இத்தூதன் வார்த்தை பொய்ப்படும்' என்ற கருத்தோ?'' என வினவினான். (அதுகேட்ட பெண்ணிற் சிறந்தாளாகிய சீதை (பின்வருமாறு) கூறுவாளாயினாள்.

கு:— நீதி வித்தகன் என்றது, அனுமனை. 'இதற்கு யாது ஒன்று இயம்பலெ என்பது, மீதுயர்ந்த உவகையின் விம்மலோ? தூது பொய்க்கும் என்றே?' என நீதி வித்தகன் சொல்லினான் என்க. சொல்லுதல் — வினவுதல். நங்கை—பெண்ணிற் சிறந்தாள்; சீதை. சீதை கூறியன அடுத்து வரும் நான்கு செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். 'ஐந்தவித்தானாற்றல்' என்புழி 'ஆற்றற்கு' என்னும் நான்கனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்காற்போன்று இச்செய்யுளில் 'என்பது' என்புழி 'என்பதற்கு' என்னும் குவ்வுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கது. (25)

## பிராட்டியின் மறுமொழி

10121. மேக்கு நீங்கிய வெள்ள வுவகையால்
ஏக்க முற்றௌன் றியம்புவ தியாதென
நோக்கி நோக்கி யரிதென நொந்துளேன்
பாக்கி யம்பெரும் பித்தும் பயக்குமோ.

மேக்கு நீங்கிய வெள்ள உவகையால்,
ஏக்கம் உற்று, “ஒன்று இயம்புவது யாது” ?என
நோக்கி நோக்கி, அரிது என நொந்துளேன் ;
பாக்கியம் பெரும் பித்தும் பயக்குமோ ?

பொ :— (தனக்கு) மேலானது இல்லாத மகிழ்ச்சிப் பெருக்கினுல் (யான்) திகைப்புற்று (நீ கூறிய நல்லுரைக்கு ஏற்ற மறு மொழியாக) ச் சொல்லத்தகுவது யாதொன்றுளது என்று எண்ணி எண்ணி (அங்ஙனம் சொல்லுதற்கு ஒன்றும்) இல்லையே என்று பேதுற்று வருந்துகின்றேன். நற்பேறு (இத்தகைய) பெரும் பேதுறவாகிய அறிவின் திரிவினையும் தருந்தன்மையதோ ?

கு :— மேக்கு நீங்கிய உவகை, வெள்ள உவகை எனத் தனித்தனி இயையும். மேக்கு — மேற்பட்டதாக உள்ளது. வெள்ள உவகை வெள்ளம்போற் பெருகிய மகிழ்ச்சி ; மகிழ்ச்சிப் பெருக்கு ; அளவற்ற பேரானந்தம். ஏக்கமுறுதல் — திகைப் படைதல். நோக்குதல் — மனத்தால் சிந்தித்துப் பார்த்தல் ; இது ‘நோக்கல் நோக்கம்’ எனப்படும். அரிது என்புழி அருமை இன்மைகுறித்து நின்றது. பாக்கியம் — நல்வினைப் பயனாகிய நற்பேறு. பெரும்பித்து என்றது செய்வதறியாப் பித்தர் தன்மையாகிய அறிவின் திரிபினை. உலக வாழ்க்கையில் தீவினைப் பயனாலுளதாம் அறிவின் திரிவாகிய பைத்தியம் நல் வினைப்பயனாகிய நற்பேற்றின் காரணமாகவும் உண்டாதல் கூடுமோ? எனப் பிராட்டி மகிழ்ச்சி மிகுதியால் தனக்கேற்பட்ட மன நிலையினை வியந்து கூறியவாறு. (26)

10122. முன்னை நீக்குவென் மொய்சிறை யென்றநீ
பின்னை நீக்கி யுவகையும் பேசினை
என்ன பேற்றினை யீகுவ தென்பதை
உன்னி நோக்கி யுரைமறந் தோவினேன்.

'முன்னை, "நீக்குவென் மொய்சிறை" என்ற நீ
பின்னை நீக்கி உவகையும் பேசினை;
"என்ன பேற்றினை ஈகுவது?" என்பதை
உன்னி நோக்கி, உரை மறந்து ஓவினேன்

பொ:— முன்னர் (நீ தூதனாக வந்தபோது) 'வலிய சிறை யிருப்பினை நீக்குவேன்' என (எனக்கு) உறுதிகூறிய நீ (சொல்லிய வண்ணம் எனது நாயகனுடன் வந்த) பின்பு (எனது சிறைத் துயரினை) நீக்கி (யான் உயிர்பெற்று) உவத்தற்குரிய நற்செய்தியினையும் எடுத்துரைத்தாய். (இத்தகைய பேருதவியைச் செய்த அருளாளனாகிய உனக்கு) எத்தகைய பெரும் பேற்றினை (க் கைம் மாருக)த் தருவது என்று எண்ணிப்பார்த்து (அங்ஙனம் தருதற் குரியதாக ஒன்றும் இல்லையே என்ற எண்ணத்தால்) பேச மறந்து ஒன்றும் கூறாது செயலற்றிருந்தேன்.

கு:— முன்னை — முன்பு; என்றது, அனுமன் கடலைத் தாவி இலங்கையை யடைந்து அசோக வனத்தில் உயிர்துறக்கும் நிலையிலிருந்த சீதையைக் கண்டு ஆறுதல் கூறி உய்வித்த அப் பொழுதினை. பின்னை நீக்கி உவகையும் பேசுதலாவது, அனுமன் இராம இலக்குவருடனும் வானர சேனைகளோடும் இலங்கையிற் புக்கு இராவணனைக் குலத்தொடும் கொன்று நீக்கிய அந்நற் செய்தியை விரைந்து வந்து அறிவித்தமையை. 'நீ பயன் கருதாது செய்த இப்பேருதவிக்கு யான் நினக்கு என்ன கைம் மாறு செய்வது என்று எண்ணிப் பார்த்து ஒன்றும் செய்தற்குரிய தாகக் தோன்றவில்லையே என்ற ஏக்கத்தால் இன்னது சொல்வ தென்றறியாமல் ஒன்றும் பேசாதிருந்தேன்' எனப் பிராட்டி தான் பேசாதிருந்தமைக்குரிய காரணம் இதுவென அனுமனுக்கு எடுத் துரைத்தாள் என்பதாம். (27)

10123. உலக மூன்று
முதவற் கொருதனி
விலையி லாமையு
முன்னினென் மேலவை
நிலையி லாமை
நினைந்தனெ னின்னையென்
தலையி னுற்றெழ
வுந்தகுந் தன்மையோய்.

'உலகம் மூன்றும் உதவற்கு ஒரு தனி
விலை இலாமையும் உன்னினென்; மேல் அவை
நிலைஇலாமை நினைந்தனென்; நின்னை என்
தலையினுல் தொழவுந் தகும் — தன்மையோய்!

பொ :— (நல்லியல்பாகிய) தன்மையுடையவனே! (நீ செய்த இப்பேருதவிக்குக் கைம்மாருக) மூவுலகங்களையும் கொடுக்கலாம் என்ருலோ (அவ்வாறு கைம்மாருகக் கொடுத்தற் குரிய வகையில்) அவ்வுலகங்கள் (நீ செய்த உதவிக்குரிய) விலையாந்தன்மையில்லாத எளிமையினையும் எண்ணினேன். மேலும் அவை (நினது உதவியைப் போன்று என்றும்) நிலையாக நிற்கும் தன்மையன அல்ல என்பதனையும் நினைந்தேன். (எனவே எனக்கு இன்னுயிர் தந்துதவிய பெரியோனுகிய) உன்னை (மனத் தால் நினைந்து வாயினுற் பாராட்டுவதுடன்) என் தலையினுல் வணங்குவதும் இனிச் செய்யத்தகுவதாகும்.

கு :— நிலையிற்றிரியாதடங்கிய பெருந்தன்மையுடையவன் அனுமன் என்பது புலப்படத் 'தன்மையோய்' என அழைத் தாள். காலத்தினுல் பயன்கருதாது நீ செய்த இப்பேருதவிக்கு நன்றி பாராட்டும் முறையில் யான் நின்னை மனத்தால் நினைந்து வாயினுல் வாழ்த்துவதுடன் நின்னைத் தலையினுல் வணங்குவதும் என்னுற் செய்யத்தகுவது என்பாள் 'நின்னை என்தலையினுல் தொழவும் தகும்' என்ருள். 'தொழவும்' என்புழி உம்மை இறந்தது தழிஇய எச்சவும்மை; மனத்தால் நினைத்தலும் வாயி னுல் வாழ்த்தலும் செய்வதுடன் தலையினுல் தொழுதலும் என்னுற் செய்யத்தகுவது என்பதாம். ''தலையல்லாற் கைம்மாறிலேனே'' எனவரும் ஆண்டாள் அருளிச் செயலும், ''நீ பண்ணின உப காரத்துக்கு இத் தலையாற் செய்வது ஒன்று உண்டோ என்று என் தலையை உனக்கு ஆக்கிக் காலமெல்லாம் உன் காலிலே வணங்கிக் கிடக்கும் அத்தனை'' என அதற்கு முன்னேர் கூறிய உரைவிளக்கமும் இங்கு நினைக்கத் தக்கனவாம் (28)

10124. ஆத லானென் றுதவுத லாற்றலேன்
யாது செய்வதென் றெண்ணி யிருந்தனென்
வேத நன்மணி வேகடஞ் செய்தன்ன
தூத வென்னினிச் செப்திறஞ் சொல்லென்ருள்.

'ஆதலான், ஒன்று உதவுதல் ஆற்றலேன்;
"யாது செய்வது?" என்று எண்ணி இருந்தனென்
வேத நல்மணி வேகடம் செய்து அன்ன
தூத! என் இனிச் செய்திறம்? சொல்' என்ருள்.

பொ:— (எனது மனநிலை இத்தன்மையது) ஆதலால், யாதொன்றினையும் (உனக்குக் கைம்மாருகக்) கொடுத்தற்கு இயலாதேனுகிய யான், என்ன செய்யத் தகுவதென்று எண்ணி (ஒன்றும் பேசாமல்) இருந்தேன். துளையிட்டு அணிதற்குரிய நல்லமணியினைச் சாணைபிடித்துத் தூய்மை செய்தாற்போன்று ஒளிரும் தூதனே! (யான் உனக்குச்) செய்தற்குரிய நன்மைத்திறம் யாதுளது? சொல்வாயாக' எனக் கூறினுள் (பிராட்டி).

கு:— நீ ஒன்றும் பேசாமல் இருந்தமைக்குரிய காரணம் மீதுயர்ந்த உவகையின் விம்மலோ? தூது பொய்க்கும் என்ருே? என வினவிய அனுமனுக்கு 'நீ செய்த பேருதவியினுலுளதாகிய பெரு மகிழ்ச்சியின் மீதூர்தலே காரணம்' எனத் தன் நன்றியுணர்வு புலப்படப் பிராட்டி மறுமொழி பகர்ந்தாள் என்பதாம். 'வேதம்' என்ற வடசொல் 'துளையிடுதல்' என்னும் பொருளினது. வேகடம் செய்தல் (மணியினைச்) சாணைபிடித்துத் தூய்மை செய்தல். முன்னர் இராமனது தூதனுக வந்து தன்னை இறவாது உய்வித்த திறம் பற்றி 'வேத நன்மணிவேகடஞ்செய் தன்ன தூத!' என அனுமனை அழைத்தாள் பிராட்டி.
(29)

அனுமன் தான் விரும்பிய பணி இதுவெனக் கூறுதல்

10125. எனக்க ளிக்கும் வரமெம்பி ராட்டிநின்
மனக்க ளிக்குமற் றுன்னையம் மானவன்
றனக்க ளிக்கும் பணியினுந் தக்கதோ
புனக்க ளிக்குல மாமயில் போன்றுளாய்.

'எனக்கு அளிக்கும் வரம், எம்பிராட்டி! நின்
மனக்களிக்கு மற்று உன்னை அம் மானவன்
தனக்கு அளிக்கும் பணியினும் தக்கதோ? —
புனக் களிக்குல மாமயில் போன்றுளாய்!'

பொ :— 'எம்பெருமாட்டியே! வனத்திலே களிப்புடன் உலவும் நல்லினத்து மயில் போன்றவளே! அடியேனுக்கு நீ அளித்தருளும் வரமாக வேண்டுதற்குரியது, நீ பெற்றுள்ள மன மகிழ்ச்சிக்கு ஏற்ப நின்னை (அழைத்துச் சென்று) அம்மனுகுலத் தோன்றலாகிய இராமன்பால் சேர்க்கின்ற அடித்தொண்டினும் தக்க தொன்றுளதோ'?

கு :— 'தூத என் இனிச் செய்திறம், சொல்' என்ற பிராட்டி யின் வினவுக்கு விடையாக, 'பிராட்டியாகிய நின்னை எம்பிரானாகிய இராமன்பால் சேர்ப்பிக்கும் அடித்தொண்டே அடியேன் நின்பால் வேண்டிப் பெறத்தக்க சிறந்த வரமாகும்' என அனுமன் மறுமொழி பகர்ந்தான் என்பதாம். மானவன்-மனு வின் வழியில் தோன்றியவன்; இராமன். (30)

'நின்னை வருத்திய கொடிய அரக்கியரை யான் வருத்தும்படி எனக்கு அனுமதி தருக' என அனுமன் பிராட்டியை வேண்டுதல்

10126. எனவு ரைத்துத் திரிசடை யாளெம்மோய்
மனவி னிற்சுடர் மாமுக மாட்சியாள்
தனையொ ழித்திவ் வரக்கியர் தங்களை
வினையி னிற்சுட வேண்டுவன் யானென்றான்.

என உரைத்து, 'திரிசடையாள், எம்மோய்!
மனவினில் சுடர் மாமுக மாட்சியாள்
தனை ஒழித்து, இவ் அரக்கியர் தங்களை
வினையினின் சுட வேண்டுவன் யான்' என்றான்

பொ :—என்று கூறி (ச் சீதையை நோக்கி) 'எமது தாயே! (ஒளிமிக்க) மணிபோன்று சுடர்விட்டு விளங்கும் அழகிய மாண்பு மிக்க முகத்தினையுடையாளாகிய திரிசடை என்பவளைத் தவிர்த்து இங்குள்ள அரக்கியர் எல்லோரையும் (தப்பாது பயனளிக்கும்) ஊழ்வினையை யொத்துச் சுட்டழித்தற்கு (நினது இசைவினை அளிக்கும்படி) வேண்டுகிறேன்' என்று கூறினான் (அனுமன்).

கு :— மோய்—தாய். மனவு—மணி; இரத்தினவகைகட்குப் பொதுப் பெயர். மா—அழகு. இருவினைப் பயன்களையும் தப்பாது நுகர்விக்கவல்ல வலிமிக்க ஊழ்வினையை யொத்துக் கொடியோ

ராகிய இவ்வரக்கியரை யான் ஒறுத்தழித்தற்கு நீ வரந்தரல் வேண்டும் என்பான், 'வினையினின் சுடவேண்டுவன் யான்' என்றான். வினை என்றது ஊழ்வினையை. அரக்கியர் எல்லோரும் இராவணனது கட்டளைப்படி சிறையிருந்த செல்வியாகிய பிராட்டிக்குப் பலவகைத் தொல்லைகளை விளைத்து அச்சுறுத்தியபொழுதெல்லாம் சீதையின் அச்சமகற்றி ஆறுதல் அளித்து வந்த பண்புடைய நங்கை திரிசடையாதலின் அவள் நீங்கலாகவுள்ள கொடியோராகிய அரக்கியரைத் தான் கொன்றொழித்தற்குப் பிராட்டியின் இசைவினை வேண்டுகின்றான் அனுமன். (31)

10127. உரைய லாவுரை
யுன்னை யுரைத்துராய்
விரைய வோடி
விழுங்குவ மென்றுளார்
வரைசெய் மேனியை
வள்ளுகி ராற்பிளந்
திரைசெய் வேன்மற
லிக்கினி யென்னுமால்.

'உரை அலா உரை உன்னை உரைத்து, உராய்
விரைய ஓடி, 'விழுங்குவம்' என்றுளார்
வரைசெய் மேனியை வள் உகிரால் பிளந்து,
இரை செய்வேன், மறலிக்கு, இனி' என்னுமால்.

பொ :— (கற்பின் செல்வியாகிய) உன்னைச் சொல்லுதற்குரியனவல்லாத (இழிந்த) சொற்களைச் சொல்லி இகழ்ந்து விரைந்தோடி மேல்விழுந்து (உன்னை) விழுங்குவேம் என்று அச்சுறுத்தியுள்ளவர்களாகிய அரக்கியரின் மலைபோலும் பெரிய உடம்பினை (என்னுடைய) கூரிய நகங்களாற் பிளந்து இப்பொழுதே இயமனுக்கு இரையாக்குவேன்' என்று சொல்வானாயினன்.

கு :— உரையலா உரை — கற்புடைய மகளிர்பாற் சொல்லத்தகாதனவாகிய இழிந்த பொருளுடைய சொற்கள். உராய்தல் — உரசுதல் ; நெருக்கி மேல்விழுதல். வரை செய் மேனி — மலைபோலும் பேருடல். வரை செய்மேனியை வள்உகிராற் பிளந்து இனி மறலிக்கு இரைசெய்வேன் என

இயைக்க. இரைசெய்தல் — உணவாக்குதல்; ஈண்டு, கொன் றொழித்தல் என்னும் பொருளில் ஆளப்பட்டது. (32)

### அனுமன் சொல்லிய சொல்லினைக் கேட்ட அரக்கியர் சீதையைச் சரண்புகுதல்

10128. குடல்கு றைத்துக்
குருதி குடித்திவர்
உடன்மு ருக்கியிட்
டுண்குவெ னென்றலும்
அடல ரக்கிய
ரன்னை நின் பாதமே
விடல மெய்ச்சர
ணென்று விளம்பலும்.

'குடல் குறைத்து, குருதி குடித்து இவர்
உடல் முருக்கியிட்டு உண்குவென்' என்றலும்,
அடல் அரக்கியர் 'அன்னை! நின் பாதமே
விடலம்; மெய்ச்சரண்' என்று விளம்பலும்.

பொ :— 'இவ்வரக்கியருடைய குடர்களைப் பறித்து அறுத்து இரத்தத்தைக் குடித்து உடம்பினைச் சிதைத்தழித்து உண்பேன்' என்று (அனுமன்) வெகுண்டுரைத்த நிலையில் (அதனைக்கேட்ட) கொடிய அரக்கியர்கள் (சீதையை அணுகி) 'அன்னையே! உன் திருவடிகளே (எமக்கு) மெய்ம்மையான பாதுகாப்பாவன; (ஆகவே அவற்றை) விடமாட்டோம்' என்று கூறி (ச் சீதையை)ச் சரணடைந்த அளவில்,

கு :— 'இவர் குடல் குறைத்துக் குருதி குடித்து உடல் முருக்கி யிட்டு உண்குவென்' என்றது, சீதைக்கு இன்னல் விளைத்த அரக்கியர்களைக் குறித்து அனுமன் கூறிய சினமொழி. முருக்கு தல் — அழித்தல். இடு, பகுதிப் பொருள் விகுதி. 'அன்னை நின்பாதமே விடலம், மெய்ச்சரண்' என்றது, அனுமனது சின மொழிகேட்டு அஞ்சிச் சீதையைச் சரண்புக்க அரக்கியர் அரற் றுரை. விடலம் — விடமாட்டோம். (33)

*பிராட்டி அரக்கியர்க்கு அபயம் அளித்து, அனுமனை நோக்கி, 'அவர்களுக்கு இடர்செய்யற்க' என இரந்து வேண்டுதல்*

10129. அன்னை யஞ்சன்மி னஞ்சன்மி னீரெனு
மன்னு மாருதி மாமுக நோக்கிவே
றென்ன தீமை யிவரிழைத் தாரவன்
சொன்ன சொல்லின தல்லது தூய்மையோய்.

அன்னை, 'அஞ்சல்மின்! அஞ்சல்மின்! நீர்' எனு
மன்னும் மாருதி மாமுகம் நோக்கி, வேறு
என்ன தீமை இவர் இழைத்தார், அவன்
சொன்ன சொல்லினது அல்லது? தூய்மையோய்!

பொ:— (உலகின்) தாயாகிய பிராட்டி (தன்னைச் சரணடைந்த அரக்கியரை நோக்கி) 'நீவிர் அஞ்சாதீர்கள்! அஞ்சாதீர்கள்' என்று சொல்லி அபயமளித்து, நிலைபெற்ற அனுமனது அழகிய முகத்தினை நோக்கி, (மன மொழிமெய் ஆகிய முக்கரணங்களாலும்) தூயோனே! இவ் அரக்கியர்கள் அவ் இராவணன் சொன்னவண்ணம் (என்னைக்) கடிந்துரைத்த தல்லது (தாமாக) வேறு என்ன தீங்கினை (எனக்குச்) செய்தார்கள்?

கு:— இதுமுதல் மூன்று செய்யுட்கள் ஒரு தொடர். அன்னை என்றது, உலகுயிர்களின் தாயாகிய பிராட்டியை. இறப்பின்றி என்றும் நிலைபெற்றிருத்தலாகிய சிறப்பினைச் சீதையின் அருளாற் பெற்றவன் அனுமனாதல் பற்றி 'மன்னும் மாருதி' எனச் சிறப்பித்தார். மன்னுதல் — நிலைபெறுதல். இவர், அவன் சொன்ன சொல்லினது அல்லது வேறு என்ன தீமை இழைத்தார்? என அனுமனை நோக்கி வினவியவாறு. இவர் என்றது தன்னைச் சரண்புக்க அரக்கியரைக் குறித்த அண்மைச் சுட்டு. அவன் என்றது, தனக்குத் தீங்கிழைத்து இறந்தொழிந்தோனாகிய இராவணனைச் சுட்டிய சேய்மைச் சுட்டு. அரக்கியராகிய இவர்கள் தம் வேந்தன் கட்டளைக்கு உட்பட்டு என்பாற் கடுஞ்சொற் கூறியதல்லது தாமாக எந்தக் குற்றத்தையும் என்பாற் செய்திலர் ஆதலால் தூயோனாகிய நின்னால் வெகுண்டு கொல்லத்தக்க பெருங்குற்ற முடையாரல்லர் எனப் பிராட்டி அனுமனுக்கு எடுத்துரைத்தாள் என்பதாம். அசோகவனத்துச் சிறையிருந்த

பிராட்டி தன்னுயிரைத் துறத்தற்கு எண்ணிய நிலையில் திரிசடையென்பாள் தான் கண்ட கனுநிகழ்ச்சியை எடுத்துரைத்துக் கொடியோனுகிய இராவணன் அழிந்தொழிதல் உறுதியெனத் தேறுதல் கூறியபொழுது உடனிருந்த அரக்கிமார்கள் சீதையைச் சரண்புக்கனராக அந்நிலையில் பிராட்டி அவ்வரக்கியர்க்கு அபயம் அளித்தனள் என முதனூலாகிய வான்மீகத்திற் சுந்தர காண்டத்திற் கூறப்பட்டுள்ளமை இங்கு நினைக்கத்தகுவதாகும். (34)

10130. யானி ழைத்த வினையினி னிவ்விடர்
தான டுத்தது தாயினு மன்பினேய்
கூனி யிற்கொடி யாரல ரேயிவர்
போன வப்பொருள் போற்றலை புந்தியோய்.

'யான் இழைத்த வினையினின் இவ்இடர்
தான் அடுத்தது; தாயினும் அன்பினேய்!
கூனியின் கொடியார் அ(ல்)லரே, இவர்?
போன அப்பொருள் போற்றலை, புந்தியோய்!

பொ:-பெற்ற தாயினும் (என்பால்) மிக்க அன்பினையுடையவனே! யான் (முன்பு) செய்த தீவினையின் காரணமாக இத்துன்பம் எனக்கு நேர்ந்துள்ளது. ஆதலால் (இது குறித்து இவ்வரக்கியரை வெகுண்டொறுத்தல் முறையன்று) இவ்வரக்கியர்கள் கூனி என்பவளைவிடக் கொடுமையுடையவர்கள் அல்லரே? அறிவிற் சிறந்தவனே! முடிந்துபோன அச்செயலை நின் மனத்திற் கொள்ளற்க.

கு:— யான் இழைத்த வினை என்றது, சீதை, வனத்தில் மாய மானைக் கண்டு அதனைப்பற்றித் தரும்படி நாயகனை ஏவி, இலக்குவனையும் கடிந்துரைத்து அவன் பின்னே செல்லுமாறு செய்த பிழையுடைய செய்கையினை. இவ்விடர் என்றது, அப்பிழையுடைய செயலால் தான் தனிமையுற்ற நிலையில் தூர்த்தனுகிய இராவணனுல் வலிதிற் கவரப்பட்டு அரக்கியர் காவலிற் சிறைவைக்கப்பட்ட அவல நிலையினை. இறைவன் திறத்துச்செய்யும் குற்றத்தினும் அவனடியார்திறத்துச் செய்யும் குற்றம் பொறுத்தற்கியலாத கடுமையுடையதாதலின் சீதை இராமனது அடிமைத் தொண்டில் ஈடுபட்ட இலக்குவனை வைதுரைத்த தீச்செயலே

அவள் இராவணனுற் சிறைவைக்கப்பட்டு அல்லற்படுதற்கு ஏது வாயிற்று என்பர் பெரியோர். ‘இராவணனுல் யான் அடைந்த இப்பெருந்துன்பத்திற்கு யான் முன்பு செய்த தீவினையே காரண மாயிற்றன்றி இவ்வரக்கியர் காரணமாகார். ஆகவே இவர்களை நீ வெகுண்டொறுத்தல் நீதியாகாது. அன்றியும் யான் இத்துன் பத்தினை நுகர்தற்கு இவ்வரக்கியர் கருவியாயமைந்தமைபற்றி வெகுளத் தக்கார் எனின் யானும் என் நாயகரும் தம்பியும் நாடி ழந்து காடுபோந்து இத்தகைய அல்லலுறுதற்குக் கருவியா யமைந்தவள் கூனியல்லவா? தன்னிலையில் தீமைபுரிய முற்பட்ட கூனியைவிட அரசன் கட்டளைவழி நின்ற இவ்வரக்கியர் கொடு மையுடை யாரல்லரே? கொடுமைக்குறைவிடமாயமைந்த கூனி யையும் என் கணவர் வெகுளாது பொறுத்தநிலையில் சுதந்தர மில்லாத இவ்வரக்கியர் என்னைக் கடிந்துரைத்தமைக்கு இவர் களை வெகுண்டழித்தல் அறமாகாது’ எனப் பிராட்டி, தன் அருளின் மிகுதியால் அனுமனது வெகுளியைத் தணிவித்தாள் என்பதாம். (35)

10131. எனக்கு நீயரு ளிவ்வரந் தீவினை
தனக்கு வாழ்விட மாய சழக்கியர்
மனக்கு நோய்செய லென்றனள் மாமதி
தனக்கு மாமறுத் தந்த முகத்தினுள்.

‘எனக்கு நீஅருள் இவ்வரம்: தீவினை
தனக்கு வாழ்வு இடமாய சழக்கியர்
மனக்கு நோய்செயல்’ என்றனள்; மாமதி
தனக்கு மா மறு தந்த முகத்தினுள்.

பொ :— கொடிய பாவச் செயல்களுக்கு இருப்பிடமாகிய அறிவற்ற அரக்கியர்களுடைய மனத்திற்குத் துன்பம் செய்யற்க. இவ்வரத்தினை நீ எனக்கு அருள்வாயாக என்று கூறினுள், நிறைந்த முழுமதிக்கும் குற்றத்தினைத் தந்த (களங்கமற்று விளங் கும்) முகத்தினையுடையாளாகிய சீதை.

கு :— ‘நின்னைக் கடிந்துரைத்த கொடியோர்களாகிய அரக்கியர்களைக் கொன்றொழித்தற்கு வரந்தருக’ எனக்கேட்ட அனுமனை நோக்கி, ‘தீமைபுரிதலையே தம்மியல்பாகவுடைய அறிவற்ற இவ்வரக்கியர் மனத்திற்குத் துன்பம் செய்யற்க. நீ

இவ்வரத்தினை எனக்குத் தந்தருள்க’ எனச் சீதை இரந்து வேண்டினள் என்பதாம். சமக்கு — குற்றம்; என்றது, எல்லாக் குற்றங்கட்கும் காரணமாகிய அறிவின்மையைக் குறித்தது. மனக்கு — மனத்துக்கு; அத்துச் சாரியையின்றி வந்தது. செயல் — செய்யற்க; அல்லீற்று வியங்கோள் எதிர்மறையில் வந்தது. இராவணனது அழிவினையும் இராமனது வெற்றித் திறத்தினையும் அனுமன் வாயிலாகக் கேள்வியுற்ற சீதையின் முகம் களங்கமற்ற ஒளியுடையதாய்க் களங்க முடைய முழு மதியைக் குற்றமுடையதாக்கி மேற்பட்டு விளங்கியது என்பார், ‘மாமதி தனக்கு மாமறுத் தந்த முகத்தினாள்’ என்றார் (36)

*பிராட்டியின் அருள் நினைந்து அனுமன் பணிதலும், இராமன் வீடணனை நோக்கிச் சீதையை அழைத்துவருமாறு பணித்தலும்*

10132. என்ற போதி னிறைஞ்சின னெம்பிரான்
றன்று ணைப்பெருந் தேவி தயாவென
நின்ற காலை நெடியவன் வீடண
சென்று தாநம தேவியைச் சீரொடும்.

என்ற போதின் இறைஞ்சினன், ‘எம்பிரான்
தன்துணைப் பெருந்தேவி தயா’ என
நின்ற காலை, நெடியவன், ‘வீடண!
சென்று தா, நம தேவியைச் சீரொடும்’

பொ:— என்று (சீதை) கூறியபோது, ‘எம் பெருமானாகிய இராமனது வாழ்க்கைத்துணைவியாகிய எம்பெருமாட்டியின் பேரருள்வண்ணமே செய்யத்தக்கது’ என்று (அனுமன்) பிராட்டியை வணங்கி நின்றனனாக, நெடிய திருமாலின் அமிச மாகிய இராமபிரான் (அரக்கர் வேந்தனை நோக்கி) ‘வீடணனே! நீ சென்று என்னுடைய மனைவியை அணிநலச்சிறப்புடன் அழைத்து வருவாயாக’

கு:— இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். தன்னைச் சரணடைந்தவர்களை இடர்நீக்கிக் காத்தருளுந்திறத்தில் தன் நாயகனாகிய இராமனைப்போன்று அருளின் நீர்மையுடையளாய் அவ்விறைவனது மனைவாழ்க்கைக்குத் துணைபுரியும் மாண்புடை

யாள் சீதை என்பது தோன்ற 'எம்பிரான் தன் துணைப்பெருந் தேவி' என்றான். தயா — பேரருள். நெடியவன் — திருமால்; என்றது இராமபிரானை. 'வீடண சென்று நம தேவியைச் சீரொடும் தா' என இயையும். நம — நம்முடைய; நம் என்பது உயர்த்தற்கண் வந்த தன்மைப் பன்மை. சீர் — ஆடையணி முதலியவற்றாலாகிய சிறப்பு. (37)

*வீடணன் சென்று பிராட்டியின் திருவடிகளை வணங்குதல்*

10133. என்னுங் காலை யிருளும் வெயிலுங்கார்
மின்னுங் காலை யியற்கைய வீடணன்
உன்னுங் காலைக் கொணர்தியென் றோதுமப்
பொன்னின் காற்றளிர் சூடினன் போந்துளான்.

என்னும்காலை, இருளும் வெயிலும் கார்
மின்னும் கால்ஐ இயற்கைய வீடணன்
'உன்னும்காலைக் கொணர்தி' என்று ஓதும் அப்
பொன்னின் கால்தளிர் சூடினன், போந்துளான்.

பொ :— என்று (இராமபிரான்) பணித்த பொழுது, இருளையும் வெயிலையும் மேகத்தின்கண் தோன்றும் மின்னலையும் வெளிப்படுத்துகின்ற அழகிய (மேனியின்) இயல்பையுடைய வீடணன், நினைக்கும் அளவிலே (விரைந்து அசோகவனத்தை) அடைந்தவனாகி, 'அழைத்துக் கொணர்வாயாக' எனச் சொல்லப்பெற்ற அத்திருமகளின் அமிசமாகிய சீதையின் திருவடிகளாகிய தளிர்களை (த் தனது முடியிற்) சூடினான்.

கு :— இராமன் வீடணனை நோக்கி, 'சீதையை அழைத்து வா' எனப் பணித்தவுடனே மனத்தால் நினைக்கும் நேரமாகிய நொடிப் பொழுதிற்குள் அசோகவனத்தையடைந்து சீதையின் திருவடிகளைத் தலையால் வணங்கினான் என்பதாம். அரக்கர் வேந்தனாக முடி சூடிய வீடணன் தன் மேனியின் கருநிறத்தால் இருளையும், தான் அணிந்த மணிமுடியால் வெயிலையும், தன் ஆகத்தணியப்பெற்ற ஆடையணிகளால் மேகத்திலுள்ள மின்னலையும் வெளிப்படுத்தும் அழகிய இயல்பினையுடையவனாக விளங்கினான் என்பார், 'இருளும் வெயிலுங் கார்மின்னும்கால் ஐ இயற்

கைய வீடணன்' என்றார். வீடணன், உன்னுங்காலை போந்துளான், அப் பொன்னின் கால்தளிர் சூடினன். உன்னும் காலை — நினைப்பளவுக்குள். பொன் — திருமகள்; என்றது, திருமகளின் அமிசமாகிய பிராட்டியை. (38)

*வீடணன் பிராட்டியை நோக்கி, 'பூணத்தக்க கோலம் புனைந்து இராமன்பக்கல் எழுந்தருள்க' எனக் கூறுதல்*

10134. வேண்டிற்று முடிந்த தன்றே
வேதியர் வேத னின்னைக்
காண்டற்கு விரும்பு கின்றா
னும்பருங் காண வந்தார்
பூண்டக்க கோலம் வல்லை
புனைந்தனை வருத்தம் போக்கி
ஈண்டுக்கொண் டணைதி யென்றா
னெழுந்தரு ளிறைவி யென்றான்.

'வேண்டிற்று முடிந்தது அன்றே
வேதியர் வேதன், நின்னைக்
காண்டற்கு விரும்புகின்றான்;
உம்பரும் காண வந்தார்;
''பூண்தக்க கோலம் வல்லை
புனைந்தனை வருத்தம் போக்கி,
ஈண்டு, கொண்டணைதி'' என்றான்;
எழுந்தருள் இறைவி' என்றான்.

பொ:— 'விரும்பப் பட்டதாகிய பகைவனை வென்றழித்தற் செயல் நிறைவேறிவிட்டது. வேதியர்களால் ஓதப்பெறும் வேதத்தின் உட்பொருளாய் விளங்கும் இராமன், (எம்பிராட்டியாகிய) நின்னைக் காணுதற்கு விரும்புகின்றான். தேவர்களும் (நின்னைக்) காணுதற்கு வந்துள்ளார்கள். ''பூணத்தக்க கோலத்தை விரைவிற் பூணும்படி செய்து வருத்தத்தைப் போக்கி இவ்விடத்து அழைத்து வருக'' எனப் பணித்தருளினான். (ஆதலால்) எப்பொருட்கும் தலைவியே எழுந்தருள்வாயாக' என்று கூறினான் (வீடணன்).

கு :— வேண்டிற்று — விரும்பப்பெற்ற செயல் ; என்றது, தூர்த்தனாகிய இராவணனை வென்றழித்தலை. முடிந்தது — நிறைவேறியது. அன்று, ஏ என்பன அசை. வேதியர் வேதன்—வேதியர்கள் ஓதும் வேதத்தின் உட்பொருளாய் விளங்கும் முதல்வன் ; என்றது, இராமபிரானை. உம்பர் — மேலோர் ; தேவர். 'பூண்டக்க கோலம் வல்லை புனைந்தனை வருத்தம் போக்கி, ஈண்டுக் கொண்டணைதி' என்றான் என்றது, இராமன் தன்னை நோக்கிக் கூறிய கூற்றினை வீடணன் உட்கொண்டு கூறியது. 'எழுந்தருள் இறைவி' என்றது வீடணன் பிராட்டியை நோக்கிக் கூறிய வேண்டுகோள். (39)

'அணி புனைந்துகொள்ளாமல் இங்கிருந்த கோலத்துடன் வருதலே எனக்குத் தகுதி' என்று சீதை கூறுதல்

10135. யானிவ ணிருந்த தன்மை
யிமையவர் குழுவு மெங்கள்
கோனுமம் முனிவர் தங்கள்
கூட்டமுங் குலத்துக் கேற்ற
வானுயர் கற்பின் மாத
ரீட்டமுங் காண்டன் மாட்சி
மேனிலை கோலங் கோடல்
விழுமிய தன்று வீர.

'யான் இவண் இருந்த தன்மை,
இமையவர் குழுவும், எங்கள்
கோனும், அம் முனிவர்தங்கள்
கூட்டமும், குலத்துக்கு ஏற்ற
வான் உயர் கற்பின் மாதர்
ஈட்டமும் காண்டல் மாட்சி;
மேல் நிலை கோலம் கோடல்
விழுமியது அன்று; வீர!'

பொ :— வீரனே ! யான் இவ்விடத்தில் இருந்த இயல்பினைத் தேவர் கூட்டமும் எங்கள் தலைவனாகிய இராகவனும் அந்த முனிவர்களது கூட்டமும் நற்குடிப் பிறப்புக்கேற்ற வானளவுயர்ந்த கற்பினையுடைய மங்கையர் கூட்டமும் காணுதல் மாண்பு

டையதாகும். (ஆகவே) மேன்மையுடையதாகக் கருதிச் சொல்லப்பட்ட அலங்காரத்தை (யான்) புனைந்துகொள்ளுதல் பெருமையுடையதாகாது.

கு :— 'பூண்டக்க கோலம் வல்லை புனைந்தனை எழுந்தருள்' என்ற விடணனை நோக்கி, 'நான் இங்குப் பகைவராற் சிறைப் பட்டிருக்கும் நிலையில் எனது துயரமிகுதியை என் கணவரும் தேவர் முனிவர் கற்புடை மகளிர் ஆகியோர் குழுவும் காணுமாறு யான் இப்பொழுதுள்ள கோலத்துடனே என் கணவர் திருமுன் செல்லுதலே தகுதியாகும். இதற்கு மாருக அணிகலங்களால் அலங்கரித்துக் கொண்டு செல்லுதல் தகாது' எனப் பிராட்டி மறுமொழி பகர்ந்தாள் என்பதாம். இராமன் எனக்குத் தலைவ னுதல் போன்றே எல்லா வுயிர்க்குந் தலைவனுவன் என்பது புலப் பட 'எங்கள் கோன்' எனக் குறித்தாள். திருமாலுக்கு அடிமை யாகுந்திறத்தில் திருமகளோடு ஏனை யுயிர்களிடைச் சிறிதும் வேற்றுமையில்லை யெனவும், திருமகளும் உயிர்த்தொகுதியிற் சேர்ந்தவளே எனவும் கூறுவர் ஒருசார் வைணவர்கள். (40)

'அணி புனைந்து வருதல்வேண்டும்' என்பது இராமனது கட்டளை என வீடணன் வற்புறுத்திக் கூறப் பிராட்டி அதற்கிசைந்தநிலையில் தேவமாதர்கள் பிராட்டியை நீராட்டிக் கோலஞ்செய்தல்

10136. என்றன ளிறைவி கேட்ட
விராக்கதர்க் கிறைவ னீலக்
குன்றன தோளி னுன்றன்
பணியினிற் குறிப்ப தென்ருன்
நன்றென நங்கை நேர்ந்தா
ணுயகக் கோலங் கொள்ளச்
சென்றனர் வான நாட்டுத்
திலோத்தமை முதலோர் சேர.

என்றனள், இறைவி; கேட்ட
இராக்கதர்க்கு இறைவன், 'நீலக்
குன்று அன தோளினுன் தன்
பணியினின் குறிப்பு அது' என்ருன்;

'நன்று' என, நங்கை நேர்ந்தாள்,
நாயகக் கோலம் கொள்ள;
சென்றனர், வானநாட்டுத்
திலோத்தமை முதலோர், சேர.

பொ :— என்று (மறுத்துக்) கூறினுள் இறைவியாகிய சீதை. (அம்மொழியினைக் கேட்ட) அரக்கர் வேந்தனுகிய வீடணன் '(கோலங்கொள்ளும்படி யான் கூறிய) அது மலையினையொத்த தோள்களையுடைய இராமபிரானது ஏவலொடு பொருந்திய உள்ளக் குறிப்பாகும்' என்ருன். (அதுகேட்ட) பிராட்டி 'நல்லது' என்று சொல்லி நாயகனுக்கு ஏற்ற கோலங்கொள்ளுதற்கு உடன் பட்டாள். வானுலகத்தோராகிய திலோத்தமை முதலிய தேவ மங்கையர்கள் (பிராட்டியைக் கோலஞ் செய்தற்பொருட்டு) அவளுடன் ஒருங்கு சென்ருர்கள்.

கு :— இராக்கதர்க்கு இறைவன் என்றது, இலங்கைக்கு அரசனுக முடிபுனைந்துகொண்ட வீடணனை. 'அணிகளைப் புனைந்துகொள்ளும் வண்ணம் யான் கூறிய இச்சொல் என் கருத்திறை் கூறப்பட்டதன்று; இராம பிரானது திருவுள்ளக் குறிப்பின் வெளி வந்த கட்டளையேயாகும்' என வீடணன் தெரிவித்த பொழுது, 'எனது நாயகன் மனக்குறிப்பு அதுவாயின் யான் அதற்கு இசையேன் என்றல் முறையன்று' எனக் கருதிய சீதை 'நன்று' என அதற்கு நேர்ந்தாள் என்க. நேர்தல் — உடன் படுதல். 'நன்று' என, நாயகக் கோலம்கொள்ள நேர்ந்தாள் என்க. நாயகக் கோலம் — எவ்வுயிர்க்கும் இறைவனுகிய இராமனுக்கு நாயகி இவளே என்பதனை உலகத்தார்க்குப் புலப் படுத்தும் மணக்கோலம். திலோத்தமை முதலோர் சேரச் சென்றனர் என இயையும். (41)

10137. மேனகை யரம்பை மற்றை
யுருப்பசி வேறு முள்ள
வானக நாட்டு மாதர்
யாருமஞ் சனத்துக் கேற்ற
நானநெய் யூட்டப் பட்ட
நவையில கலவை தாங்கிப்
போனகந் துறந்த தையன்
மருங்குற நெருங்கிப் புக்கார்.

மேனகை, அரம்பை, மற்றை
உருப்பசி, வேறும் உள்ள
வானக நாட்டு மாதர்
யாரும், மஞ்சனத்துக்கு ஏற்ற
நானநெய் ஊட்டப் பட்ட
நவைஇல கலவை தாங்கி,
போனகம் துறந்த தையல்
மருங்குற நெருங்கிப் புக்கார்.

பொ :— மேனகையும் அரம்பையும் ஏனை ஊர்வசியும் வேறும் உள்ள வானநாட்டு மங்கையர் யாவரும் (பிராட்டி) திருமஞ்சனம் செய்தற்குரிய கத்தூரி புனுகு சேர்க்கப்பட்ட குற்றமற்ற கலவைச் சாந்தினை எடுத்துக் கொண்டு உணவினைத் துறந்த நோன்பின ளாகிய பிராட்டியின் அருகே நெருங்கி வந்தடைந்தார்கள்.

கு :— நான நெய் — கத்தூரி, புனுகு. நவை — குற்றம். சீதை இராவணனாற் சிறைவைக்கப்பட்டது முதல் இராமனைப் பிரிந்த பிரிவாற்றாமையினால் ஊணுறக்கமின்றி யிருந்த நோன்பி னள் என்பார் 'போனகம் துறந்த தையல்' என்றார். (42)

10138. காணியைப் பெண்மைக் கெல்லாங்
கற்பினுக் கணியைப் பொற்பின்
ஆணியை யமிழ்தின் வந்த
வமிழ்தினை யறத்தின் றாயைச்
சேணுயர் மறையை யெல்லா
முறைசெய்த செல்வ னென்ன
வேணியை யரம்பை மெல்ல
விரன்முறை சுகிர்ந்து விட்டாள்.

காணியைப் பெண்மைக்கு எல்லாம்,
கற்பினுக்கு அணியை, பொற்பின்
ஆணியை, அமிழ்தின் வந்த
அமிழ்தினை, அறத்தின் தாயை,

சேண்உயர் மறையை எல்லாம்
முறைசெய்த செல்வன் என்ன,
வேணியை, அரம்பை, மெல்ல,
விரல்முறை சுகிர்ந்து விட்டாள்.

பொ :— பெண்தன்மைக்கெல்லாம் விளைநிலம் போன்றவளும் கற்பினுக்கு அணிகலனாகத் திகழ்பவளும், அழகென்னும் பொன்னின் மாற்றறிதற்குரிய உரையாணியும் அமிழ்தில் வந்த அமிழ்தம் போல்பவளும், நல்லறத்தின் தாயாக விளங்குபவளும் ஆகிய பிராட்டியை அரம்பையென்னும் தெய்வமகள் மிகவுயர்ந்த வேதங்களை யெல்லாம் (சிக்கறுத்து) முறைப்படுத்திய வியாத முனிவரை யொத்து (ப் பிராட்டியின்) சடைப்பட்ட கூந்தலை மெதுவாகத் தன் விரல்களால் ஒழுங்காகச் சிக்கெடுத்துக் கோதி விட்டாள்.

கு :— தேவமங்கையர் சீதையை அலங்கரித்துக் கோலஞ் செய்தமை இது முதல் நான்கு செய்யுட்களால் விரித்துக் கூறப்படும். அரம்பை என்பாள், பிராட்டியின் கூந்தலைச் சிக்கெடுத்துக் கோதி விட்டமைக்கு நிலைகுலைந்த வேதங்களை வேத வியாதர் ஆராய்ந்து சிக்கற முறைப்படுத்திய செய்தியினை ஆசிரியர் உவமை கூறினர். (43)

10139. பாகடர்ந் தமுது பில்கும்
பவளவாய்த் தரளப் பத்தி
சேகற விளக்கி நானந்
தீட்டிமண் சேர்ந்த காசை
வேகடஞ் செய்யு மாபோன்
மஞ்சன விதியின் வேதத்
தோகை மங்கலங்கள் பாட
வாட்டின ரும்பர் மாதர்.

பாகுஅடர்ந்து அமுது பில்கும்
பவளவாய்த் தரளப் பத்தி
சேகுஅற விளக்கி, நானம்
தீட்டி, மண்சேர்ந்த காசை

வேகடம் செய்யுமாபோல்,
மஞ்சன விதியின், வேதத்து
ஓகை மங்கலங்கள் பாட,
ஆட்டினர், உம்பர் மாதர்.

பொ :— தேவமங்கையர்கள், (சர்க்கரைப்) பாகினையொத்து (இன் சுவை) செறிந்து அமிழ்தூறும் பவளம் போலும் சிவந்த (சீதையின்) வாயின்கண்ணே முத்தின் வரிசையினை யொத்த பல்வரிசையினை மாசறத் துலக்கித் தூய்மை செய்து நறுமணத் தைலத்தினை (க் கூந்தலிலிட்டு) த் தேய்த்து, வேதங்களில் உள்ள உவகைதரும் மங்கலப் பாடல்களைப் (பலரும்) பாடா நிற்க, மண்ணிற்படிந்த இரத்தினத்தினைச் சாணை பிடித்துத் தூய்மை செய்யுமாறு போலத் திருமஞ்சனத்திற்குரிய விதிமுறைப்படி (பிராட்டியை) நன்னீராட்டினார்கள்.

கு :— பில்குதல் — ஊறி வெளிப்படுதல். அமுது என்றது பணி மொழிவாலெயிறூறிய நீரினை. சேகு—குற்றம். காசு—மணி; இரத்தினம். ஓகைமங்கலம் — உவகையினை விளக்கும் மங்கல வாழ்த்துப் பாடல்கள். வேகடம் செய்தல் — (மணியினைச்) சாணை பிடித்துத் தூய்மை செய்தல். உம்பர் மாதர், விளக்கி, தேய்த்து, மங்கலங்கள்பாட, மஞ்சன விதியின் ஆட்டினர் என முடிக்க. (44)

10140. உருவினை பவள வல்லி
பானுரை யுண்ட தென்ன
மருவினை கலவை யூட்டிக்
குங்கும முலையின் மாட்டிக்
கருவினை மலரின் காட்சிக்
காசறு தூசுங் காமர்
திருவினை யல்குற் கேற்ப
மேகலை தழுவச் சேர்த்தார்.

உருவினை பவள வல்லி
பால்நுரை உண்ட தென்ன
மருவினை கலவை ஊட்டிக்
குங்குமம் முலையின் மாட்டி,

கருவிளை மலரின் காட்சிக்
காசு அறு தூசும் காமர்
திருவிளை அல்குற்கு ஏற்ப
மேகலை தழுவச் சேர்த்தார்.

பொ :— செந்நிறம்மிக்கு விளைந்த பவளக்கொடி பால்நுரையால் மூடப்பட்டதென்னும்படி மணம்நிறைந்த (வெண்ணிறக்) கலவைச் சாந்தினைப் பூசிக்குங்குமக் குழம்பினைக் கொங்கையில் அப்பிக் கருவிளை மலர்போலும் தோற்றத்தினையுடைய குற்றமற்ற (நீலநிறப்) பட்டினையும் (அதன்மேல்) காமனது செல்வம் விளைகின்ற இடைக்கு ஏற்ப மேகலையினையும் (பிராட்டியின் மேனியிற்) பொருந்தி அமைய அணிந்தனர் (தேவ மங்கையர்).

கு :— உரு — நிறம் ; என்றது இங்குச் செந்நிறத்தினை. சிவந்த மேனியளாகிய பிராட்டியின் திருமேனியில் வெண்ணிறக் கலவையினைப் பூசிய தோற்றம், செந்நிறப் பவளக்கொடி பாலின் வெள்ளிய நுரையால் மூடப்பட்டிருந்த தோற்றத்தையொத்து விளங்கியதென்பதாம். மெல்லிய பட்டாடையின் நீல நிறத்துக்குக் கருவிளை மலரை உவமை கூறினர். காசு—குற்றம். மேகலை என்பது மகளிர் இடையில் உடுத்த துகிலின்மேல் அணியப்படும் மணிவடம். (45)

தேவமாதர் பிராட்டிக்கு மங்கல ஆரத்திசுழற்றிக் காப்பிடுதல்

10141. சந்திரன் றேவி மாரிற்
றகையுறு தரளப் பைம்பூண்
இந்திரன் றேவிக் கேற்ப
வியைவன பூட்டி யாணர்ச்
சிந்துரப் பவளச் செவ்வாய்த்
தேம்பசும் பாகு தீற்றி
மந்திரத் தயினி நீரால்
வலஞ்செய்து காப்பு மிட்டார்.

சந்திரன் தேவிமாரின்
தகை உறு தரளப் பைம்பூண்,
இந்திரன் தேவிக்கு ஏற்ப,
இயைவன பூட்டி, யாணர்ச்

சிந்துரப் பவளச் செவ்வாய்த்
தேம்பசும் பாகு தீற்றி,
மந்திரத்து அயினி நீரால்
வலஞ்செய்து காப்பும் இட்டார்.

பொ :— இந்திராணி அணிதற்கு ஏற்பப் பொருந்தியனவும் சந்திரனுடைய மனைவிமார்களாகிய விண்மீன்களின் அழகினை யுடைய முத்துக்களால் ஆகியனவும் பசிய பொன்னால் இயன்றன வும் ஆகிய அணிகலன்களைப் பூணச்செய்து புதுமை வாய்ந்த சிந்துரத்தினையும் பவளத்தையும் ஒத்த சிவந்த வாயினிடத்தே இனிய பசிய தாம்பூலப்பாகினைத் தடவி மந்திரத்துடன் பொருந் திய ஆலத்திநீரை வலமாகச் சுழற்றி (க் கண்ணேறு படாதவாறு பிராட்டிக்கு)க் காப்புச் செய்தார்கள்.

கு :— சந்திரன் தேவிமார்கள் என்றது இருபத்தேழு விண் மீன்களை. இருபத்தேழு நாண்மீன்களும் தக்கன் என் பானுக்குப் புதல்வியர்களாகத் தோன்றிச் சந்திரனை மணந்து கொண்டனர் என்னும் புராண கதைபற்றி இங்ஙனம் கூறினார். தகை — அழகு. தரளம் — முத்து. இந்திரன்தேவி—இந்திராணி. இந்திரன் தேவிக்கு ஏற்ப இயைவன தரளப்பைம்பூண் எனவும் சந்திரன் தேவிமாரின் தகையுறு தரளப்பைம்பூண் எனவும் தனித்தனி இயையும். யாணர் — புதுமை. சிந்துரம் — செந் நிறப் பொடி. தேம் பசும்பாகு என்றது, வெற்றிலை, பாக்கு, சுண்ணம் கலந்திடித்த இனிய பாகினை. தீற்றுதல் — தடவுதல். அயினிநீர் — ஆலத்திநீர். ஆலத்திநீரை வலமாகச் சுழற்றி அந்நீரைக் கைவிரலால் தொட்டு நெற்றியிற் பொட்டிட்டுக் காப்புச்செய்தல் என்பது கண்ணேறு கழித்தற்குச் செய்யும் மங்கலச் சடங்காகும். (46)

இதன்பின், 41, 45, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10141 (a) சென்றவன் றன்னை நோக்கித்
திருவினாளெங்கே யென்ன
மன்றலங் கோதை யாளும்
வந்தனள் மானந்தன்னில்

என்றன னென்ன லோடு
மீண்டுநீ கொணர்க வென்ன
நன்றென வணங்கிப் போந்து
நால்வரைக் கொணர்க வென்ருன்.

10141 (b) காத்திர மிகுத்தோர் நால்வர்
கஞ்சுகிப் போர்வை யாளர்
வேத்திரக் கையோ ரீண்டி
விரைவுடன் வெள்ளந் தன்ணைப்
பாத்திடப் பரந்த சேணை
பாறிடப் பரமன் சீறி
ஆர்த்தபோ ரொலியென் னென்ன
அரிகளார்ப் பரவ மென்ருர்.

10141 (c) என்றபோ திராம ணைய
வீடணு வென்ன கொள்கை
மன்றலங் குழலி ஞளை
மணம்புணர் கால மன்றித்
துன்றிய குழலி ஞர்தஞ்
சுயம்வர வாஞ்சை சூழும்
வென்றிசேர் களத்தும் வீர
விழுமிய தன்று வீரம்.

10141 (d) அற்புத ளிணைய கூற
ஐயவீ டணனு மெய்திச்
செப்பிள முலையா டன்பாற்
செப்பவுந் திருவ ளுளும்
அப்பினுட் டுயிலை நீத்து
வயோத்தியி லடைந்த வண்ணல்
ஒப்பிணைக் கண்ணிற் கண்டே
யுளநிணைந் திணைய சொன்ளுள்.

*பிராட்டியை விமானத்திலேற்றி இராமனிடம் அழைத்துச் செல்லுதல்*

10142. மண்டல மதியி ளுப்பண்
மானிருந் தென்ன மானம்
கொண்டன ரேற்றி வான
மடந்தையர் தொடர்ந்து கூட

வுண்டைவா னரரு மொள்வா
ளரக்கரும் புறஞ்சூழ்ந் தோட
அண்டர்நா யகன்பா லண்ணல்
வீடண னருளிற் சென்ருன்.

மண்டல மதியின் நாப்பண்
மான் இருந்தென்ன, மானம்
கொண்டனர் ஏற்றி, வான
மடந்தையர் தொடர்ந்து கூட
உண்டை வானரரும் ஒள்வாள்
அரக்கரும் புறஞ்சூழ்ந்து ஓட,
அண்டர் நாயகன்பால், அண்ணல்
வீடணன் அருளின் சென்ருன்.

பொ :— மதி மண்டலத்தின் நடுவே மான் இருந்தாற் போன்று விமானத்திலே (பிராட்டி வீற்றிருக்கும்வண்ணம் அவளை) ஏற்றிக்கொண்டு தேவமங்கையர் தொடர்ந்து சூழ்ந்துவர (தாக்குங்கல்லாகிய) உண்டையிணைக் கொண்ட வானரவீரர்களும் ஒளிபொருந்திய வாட்படையையேந்திய அரக்கர்களும் புறத்தே (காவலாகச்) சூழ்ந்து ஓடிவர, (அரக்கர்) தலைவனுகிய வீடணன் அமரர் நாயகனுகிய இராமபிரான்பால் (அப்பெருமான்) அருளாற் பணித்தவண்ணம் (பிராட்டியை அழைத்துச்) சென்றனன்.

கு :— மதி மண்டலத்தின் நாப்பண் மான் இருந்தென்ன என மாற்றிப் பொருள் கொள்க. விமானத்துக்குச் சந்திர மண்டலமும் விமானத்துள் அமர்ந்த மானேக்கினளாய சீதைக்கு மானும் உவமை. சந்திரனிற் காணப்படும் கறையினை மான் என்றல் கவிமரபு. மானம் — விமானம்; முதற்குறை. பிராட்டி அமர்ந்து செல்லும் விமானத்தைச் சுற்றித் தேவமாதர்களும் அவர்களைச் சுற்றி வானர வீரர்களும் அவர்களின் புறத்தே அரக்க வீரர்களும் சூழ்ந்து சென்றனர் என்பதாம். மதியினிடத்தே காணப்படும் மானுரு களங்கமாகக் கருதப்படுமாறு போன்று மதிபோலும் விமானத்தின் நடுவே விளங்கும் மானேக்கினளாகிய பிராட்டி களங்கமுடையவள் என இராமனுற் கருதப்படும் பின்னிகழ்ச்சியினை ஆசிரியர் குறிப்பாற் புலப்படுத்தியுள்ளமை கூர்ந்துணரத்தகுவதாகும். (47)

தேவர்களும் முனிவர்களும் தேவர்மகளிரும் முனிவர் மனைவியரும் பிராட்டியைக் காணுதற்கு நெருங்குதல்

10143. இப்புறத் திமையவர் முனிவ ரேழையர்
துப்புறச் சிவந்தவாய் விஞ்சைத் தோகையர்
முப்புறத் துலகினு மெண்ணின் முற்றினர்
ஒப்புறக் குவிந்தன ரோகை கூறுவார்.

இப்புறத்து இமையவர், முனிவர் ஏழையர்,
துப்புஉறச் சிவந்தவாய் விஞ்சைத் தோகையர்,
முப்புறத்து உலகினும் எண்ணின் முற்றினர்,
ஒப்புறக் குவிந்தனர், ஓகை கூறுவார்.

பொ:- இப்பால் (பிராட்டி இராமனைநோக்கிச் சென்றவிடத்து) முனிவர்களும் தேவர்களும் (அவர்தம்) மனைவிமார்களும் பவளம் போற்சிவந்த வாயினையுடைய வித்தியாதர மங்கையர்களும் மற்றும் மூவகை யுலகங்களிலும் உள்ள எண்ணில் நிரம்பியமாதர்களும் மனமகிழ்ச்சியை எடுத்துரைப்பாராகி ஒருசேர வந்து கூடினார்கள்.

கு:— ஏழையர்—பெண்கள். துப்பு—பவளம். தோகையர்—மயில்போலும் சாயலையுடைய மகளிர். விஞ்சைத் தோகையர்—வித்தியாதர மகளிர். ஓகை—உவகை. 48ஆம் செய்யுளாகிய இதுமுதல் 59 வரையுள்ள பாடல்கள் சில சுவடிகளில் இல்லை. சில பிரதிகளில் 'எச்சில் என்னுடல்' என்னும் 57-ஆம் செய்யுள் 46-ஆம் செய்யுளாகவும், 'இப்புறத்து' (48) என்னும் பாடல் முதல் 'அருந்ததி' (55) என்ற பாடல்வரையுள்ளவை முறையே 52 முதல் 59 வரையுள்ள பாடல்களாகவும் அமைந்துள்ளன. (48)

மிகப்பலராய் நெருங்கியவர்களை அரக்க வீரர்கள் அடித்து விலக்க அவர்கள் அரற்றுதல்

10144. அருங்குலக் கற்பினுக் கணியை யண்மினர்
மருங்குபின் முன்செல வழியின் றென்னலாய்
நெருங்கினர் நெருங்குழி நிருத ரோச்சலால்
கருங்கடன் முழக்கெனப் பிறந்த கம்பலை.

அருங்குலக் கற்பினுக்கு அணியை அண்மினர்,
மருங்குபின் முன்செல வழிஇன்று என்னலாய்,
நெருங்கினர் நெருங்குழி நிருதர் ஓச்சலால்,
கருங்கடல் முழக்கு எனப் பிறந்த, கம்பலே.

பொ:— அருமைவாய்ந்த நற்குலத்திற் பிறந்த கற்பினுக்கு அணிகலமாகத்திகழும் பிராட்டியை நெருங்கிச் செல்லும் மகளிர்கள் அவளது இரு மருங்கிலும் முன்னும் பின்னும் செல்ல வழியில்லை என்னும்படி நெருக்கமாகச் சென்றனர். அங்ஙனம் அவர்கள் நெருக்கிய விடத்து அரக்க வீரர்கள் (தம் கையிற் கொண்ட) கோலினை ஓச்சி அதட்டினமையால் கரிய கடலின் முழக்கம் என்னும்படி பேராரவாரம் உண்டாயின.

கு:— கற்பினுக்கு அணி என்றது, சீதையை; 'கண்டனன் கற்பினுக்கணியை' என அனுமன் கூற்றில் வைத்து ஆசிரியர் இப்பெயரை ஆண்டுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும். நிருதர் — அரக்கர். ஓச்சுதல் — அடித்தற்குக் கையினை மேலே உயர்த்தல். 'கடிதோச்சி மெல்லஎறிக' (562) என்பது திருக்குறள். பலதிறமகளிர்கள் எழுப்பிய ஆரவாரங்கள் கடலின் பேராரவாரத்தை யொத்துப் பல திறப்பட்டனவாக ஒலித்தன என்பார் கம்பலே பிறந்த எனப் பன்மைச் சொல்லாற்குறித்தார். பிறந்த — பிறந்தன; அன்சாரியைபெறாத அஃறிணைப் பன்மை வினைமுற்று. கம்பலே — ஆரவாரம். (49)

அரற்றொலியைக் கேட்ட இராமன், அதற்குக் காரணம் யாது என முனிவர்களை வினவியறிதல்

10145. அவ்வழி யிராமனு
மலர்ந்த தாமரைச்
செவ்விவாண் முகங்கொடு
செயிர்த்து நோக்குறு
இவ்வொலி யாவதென்
றியம்ப விற்றெனக்
கவ்வையின் முனிவரர்
கழறி னரரோ.

அவ்வழி, இராமனும் அலர்ந்த தாமரைச்
செவ்விவாள் முகம்கொடு செயிர்த்து நோக்குறு,
'இவ்ஒலி யாவது?' என்று இயம்ப, 'இற்று' என,
கவ்வைஇல் முனிவரர் கழறினர் அரோ.

பொ :— அவ்விடத்து இராமபிரானும் அப்பொழுதலர்ந்த தாமரைமலரின் செவ்விபெற்று ஒளிரும் முகத்தினால் சினந்து நோக்கி, 'இந்தப் பேராரவாரம் எதனால் ஏற்பட்டது?' என்று வினவப் பழியில்லாத முனிவர்களிற் சிறந்தவர்கள் (அதற்குரிய காரணத்தை) இன்னது என்று எடுத்துரைத்தார்கள்.

கு :— இராமனது திருமுகத்தின் இயல்பினை விளக்கும் முறையில் 'அலர்ந்த தாமரைச் செவ்விவாண் முகம்' எனச் சிறப்பித்தார். 'யாரும் செப்பருங்குணத் திராமன் திருமுகச் செவ்வி நோக்கின்...அம்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா' (கம்பர் - அயோத்தியா. கைகேசி சூழ். - 108) என முன்னரும் விளக்கியுள்ளமை காண்க. செயிர்த்து நோக்குதல் சினக்குறிப்புத் தோன்ற உருத்துப் பார்த்தல். இற்று எனாக் கழறினர் என இயையும். இற்று - இன்னது. கவ்வை - பழிச்சொல். முனிவரர்- முனிவர்களில் மேலாயினர். (50)

இராமன் வீடணனைக் கடிந்துரைத்தல்

10146. முனிவரர் வாசகங் கேட்பு றுதமுன்
நனியிதழ் துடித்திட நகைத்து வீடணன்
றனையெழ நோக்கிநீ தகாத செய்தியோ
புனிதநூல் கற்றுணர் புந்தி யோயென்றான்.

முனிவரர் வாசகம் கேட்புறுத முன்
நனி இதழ் துடித்திட நகைத்து, வீடணன்-
தனைஎழ நோக்கி, 'நீ தகாத செய்தியோ,
புனிதநூல் கற்றுஉணர் புந்தியோய்?' என்றான்.

பொ :— முனிவர்களிற் சிறந்தோர் கூறிய மொழியினைக் கேட்பதற்கு முன்னரே (இராமபிரான்தன் வாயின்) உதடுகள் பெரிதும் துடிப்புறச் சிரித்து வீடணனை நிமிர்ந்து பார்த்து, (மனமாசகற்றும்) தூய்மையான நூல்களைக் கற்றுணர்ந்த நல்லறிஞனே! (இத்தகையை) நீ தகுதியற்றனவாகிய செயல்களைச் செய்யக் கடவாயோ?' என்று (வெகுண்டு) கூறினான்.

கு :— தேவமகளிர் முதலாயினரை அரக்க வீரர்கள் கோல் ஓச்சி அதட்டிய செயலுக்குக் காரணமானவர்கள் அரக்கர் வேந்தனாகிய வீடணனும் அவனுடைய அதிகாரிகளுமே யாதல் வேண்டும் என எண்ணிய இராமபிரான், வீடணனை நோக்கி இவ்வாறு வெகுண்டுரைத்தான் என்க. கேட்புறுதமுன் எனவே அவனது வெகுளியின் வேகம் நன்கு புலனாம். இதழ் நனி துடித்திட — உதடுகள் பெரிதும் துடித்தலைப் பொருந்த. உதடுகள் துடிப்புறுதல் வெகுளி பற்றிய மெய்ப்பாடு, ஈண்டு இராமன்பால் தோன்றிய நகை வெகுளிபற்றிய நகையாகும். எழ நோக்குதல் — நிமிர்ந்து பார்த்தல். தகாதன — அறிவு நூல்களைக் கற்றுணர்ந்த பெரியவர்கள் செய்தற் குரியனவல்லாத நீதியற்ற செயல்கள்; என்றது, சீதையும் தன்னையும் காணுதற்கு முந்தும் பெருவேட்கையினால் புடை சூழ்ந்து நெருங்கிய தேவமகளிர் முதலியோரைக் கோலால் ஓச்சுதலும் அதட்டுதலும் முதலிய செயல்களை. (51)

10147. கடுந்திற லமர்க்களங் காணு மாசையால்
நெடுந்திசைத் தேவரு நின்ற யாவரும்
அடைந்தன ருவகையி னணைகின் றோர்களைக்
கடிந்திட யார் சொனார் கருது நூல்வலாய்.

'கடுந்திறல் அமர்க்களம் காணும் ஆசையால்,
நெடுந்திசைத் தேவரும் நின்ற யாவரும்
அடைந்தனர்; உவகையின் அணைகின்றோர்களைக்
கடிந்திட யார்சொனார்? — கருது நூல்வலாய்!

பொ :— ஆராய்ந்துணரத்தக்க அறிவு நூல்களைக் கற்று வல்லவனே! வெம்மையையும் வீரத்தையும் வெளிப்படுத்தும் (முறையில் இராவணன் முதலியோருடன் யாம் போர் செய்த இப்) போக்களத்தைக் காணவேண்டும் என்னும் ஆசையால் நெடிய திசைகளில் உள்ள தேவர்களும் மற்றும் நின்றுள்ளோர் யாவரும் இங்கு அடைந்துள்ளார். (இங்ஙனம்) மகிழ்ச்சியுடன் அடைகின்றவர்களை வெகுண்டு விலக்கும்படி (அரக்க வீரர் களுக்குக்) கட்டளையிட்டார் யாவர்?

கு :— கல்வித்துறையில் வல்லவனாகிய நீ இவ்வாறு நினது ஆட்சியில் மெலியோர் வருந்த மாறான செயல் நிகழ இடந்

தந்தமை தவருகும் என இடித்துரைக்கும் முறையில் மூதுணர்வின் மிக்க வீடணனைக் 'கருதுநூல் வலாய்' என அழைத்தான் இராமன். கடிதல் — வெகுண்டு விலக்குதல். 'இங்கு வந்து நெருங்கியுள்ள தேவர் முதலியவர்களைக் கடிந்து விலக்கும்படி யானும் சொல்லவில்லை; அரக்கர் வேந்தனாகிய நீ சொல்லியிருப்பாய் எனின் அது முறையாகாது; நம்மிருவர் கட்டளையுமின்றி அரக்க வீரர்கள் தாமே இதனைச் செய்ய முற்பட்டிருப்பாராயின் அச்செயல் நினது அதிகாரவரம்பைக் கடந்த பெருங்குற்றத்தின் பாற்படும்' என்பது தோன்ற 'கடந்திட யார்சொனார்' என வீடணனை நோக்கி வினவினான் இராமன். (52)

10148. பரசுடைக் கடவு ணேமிப்
பண்ணவன் பதுமத் தண்ணல்
அரசுடைத் தெரிவை மாரை
யின்றியே யமைவ துண்டோ
கரைசெயற் கரிய தேவ
ரேனையோர் கலந்து காண்பான்
விரசுறின் விலக்கு வாரோ
வேறுளார்க் கென்கொல் வீர.

'பரசுடைக் கடவுள், நேமிப்
பண்ணவன், பதுமத்து அண்ணல்,
அரசுடைத் தெரிவைமாரை இன்றியே
அமைவது உண்டோ?
கரைசெயற்கு அரிய தேவர்,
ஏனையோர், கலந்து காண்பான்
விரசுறின், விலக்குவாரோ? வேறு
உளார்க்கு என்கொல்? வீர!

பொ:—வீரனே! மழுப்படையையுடைய இறைவனும் சக்கரப்படையினையேந்திய திருமாலும் தாமரை மலரில் வீற்றிருக்கும் தலைவனாகிய பிரமனும் தத்தம் பட்டத்தரசியென்னும் உரிமையுடைய தேவியரைத் தம்முடன் கொள்வதன்றித் தனித்து அமைவதுளதோ? (தலைமைக் கடவுளர்களின் நிலையே அதுவாயின்) அவரொழிந்த வேறுள்ள தேவர் முதலியோரைக் குறித்துரைத்

26

தற்கு யாதுளது? (எண்ணியளவிட்டு) எல்லையிட்டுரைத்தற்கு அரிய தேவர்களும் (முனிவர் முதலிய) ஏனையோரும் (தத்தம் தேவிமாருடன்) கூடி (எம்மை)க் காண்பதற்கு வந்துநெருங்கினால் அவர்களைக் கடிந்து விலக்குவார் உளரோ?

கு :— எம்பாற்கொண்ட பேரன்பினால் போர்க்களத்தில் எம்மைக் காணுவதற்கு வந்த தேவர் முதலியோரை அரக்க வீரர்கள் உரப்பி விலக்குதல் முறையன்றென முன்னர்ப் பொதுப்படக்கூறிய இராமன், தம் கணவரைவிட்டுப் பிரியவொண்ணா நிலையினராய் அங்கு வந்து கூடியுள்ள மங்கையர்களைக் கடிந்து துரத்துதல் முறையன்று என இங்குச் சிறப்பு முறையில் எடுத்துரைத்தான். 'வீர' என்னும் விளி, நினது வீரத்தன்மையை வெளிப்படுத்தும் இடம் இதுவன்று என்னும் குறிப்பினதாகும். (53)

*இராமன் சொல்லைக்கேட்டு வீடணன் அஞ்சி நடுங்கி நிற்றல்*

10149. ஆதலா லரக்கர் கோவே
யடுப்பதன் றுனக்கு மின்னே
சாதுவா மாந்தர் தம்மைத்
தடுப்பதென் றருளிச் செங்கண்
வேதநா யகன்று னிற்ப
வெய்துயிர்த் தலக்க ணெய்திக்
கோதிலா மனனு மெய்யுங்
குலைந்தனன் குணங்க டூயோன்.

'ஆதலால், அரக்கர் கோவே!
அடுப்பது அன்றும் உனக்கும், இன்னே
சாதுவாம் மாந்தர் தம்மைத்
தடுப்பது' என்று அருளி, செங்கண்
வேத நாயகன் தான் நிற்ப,
வெய்து உயிர்த்து, அலக்கண் எய்தி,
கோது இலாமனனும் மெய்யும்
குலைந்தனன், குணங்கள் தூயோன்.

பொ :— 'ஆதலால், அரக்கர்வேந்தனே! நற்குண அமைதியுடையராய மக்களை இப்பொழுது தடுப்பது உனக்கு ஏற்புடைய

தன்று' என்று சிவந்த கண்களையுடைய வேதநாயகனுகிய இராமபிரான் அருளிச் செய்து நிற்க, குணங்களால் தூயவனுகிய வீடணன் வெவ்விதாகப் பெருமூச்சுவிட்டு வருந்திக் குற்றமற்ற மனமும் மெய்யும் நடுக்கமுற்றனன்.

கு :— 'அரக்கர்கோவே, சாதுவா மாந்தர் தம்மை இன்னே தடுப்பது உனக்கும் அடுப்பதன்று' என்று அருளி வேதநாயகன் தான் நிற்ப, குணங்கள் தூயோன் அலக்கண் எய்திக் கோதிலா மனனும் மெய்யும் குலைந்தனன் என இயைத்துப் பொருள் கொள்க. சாது என்பது, நற்குணமுள்ளாரைக் குறித்து வழங்கும் பெயர். 'சாதுவராய்ப் போது மின்கள்' (நான்முகன் திருவந்தாதி — 68) எனவரும் அருளிச் செயல் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். 'சாதுகை மாந்தர்' என வழங்கும் பாடத்தினைக் கொண்டு, சாதுகை மாந்தர்—நற்குண அமைதியாகிய ஒழுக்கத் தினையுடைய சான்ருேர் எனப் பொருள் கூறலும் பொருந்தும். வேதநாயகன் என்றது இராமபிரானை. குணங்கள் தூயோன் என்றது, வீடணனை. (54)

போர்க்களத்தையடைந்த சீதை, இராமபிரானது கோலத்தைக்கண்டு அனுமன் செய்த உதவியை நினைந்து பாராட்டுதல்

10150. அருந்ததி யனைய நங்கை
யமர்க்கள மணுகி யாடற்
பருந்தொடு கழுகும் பேயும்
பசிப்பிணி தீரு மாறு
விருந்திடு வில்லின் செல்வன்
விழாவணி விரும்பி நோக்கிக்
கருந்தடங் கண்ணு நெஞ்சுங்
களித்திட வினைய சொன்னுள்.

அருந்ததி அனையநங்கை,
அமர்க்களம் அணுகி, ஆடல்
பருந்தொடு கழுகும் பேயும்
பசிப்பிணி தீருமாறு

விருந்திடு வில்லின் செல்வன்
விழாஅணி விரும்பி நோக்கி,
கருந்தடங் கண்ணும் நெஞ்சும்
களித்திட, இனைய சொன்னாள்.

பொ:— அருந்ததியையொத்த கற்புடை நங்கையாகிய பிராட்டி போர்க்களத்தை நெருங்கி வலிய பருந்துகளுடன் கழுகுகளும் பேய்களும் (தம்) பசி நோய்தீரும்படி (அரக்கர் உடல்களை) விருந்தாக இட்ட வில்லினையேந்திய செல்வனாகிய இராமபிரானது வெற்றிவிழாக் கோலத்தினை விரும்பிப் பார்த்து, கருமையும் அகலமும் வாய்ந்த கண்ணும் மனமும் களிப்பினையுடைய இத்தகைய மொழியினைக் கூறினாள்.

கு:— கற்புடைமகளிர்க்கு எடுத்துக்காட்டாக வசிட்ட முனிவர் மனைவி அருந்ததியைக் கூறுதல் இலக்கியமரபாகும். 'வடமீன் புரையுங்கற்பின் மடவரல்' என்றும், 'சாலியொருமீன் தகையாளை' (சிலப் - மங்கல - ) என்றும் வருவன இம்மரபினை அடியொற்றி யமைந்தனவாகும். கொடியோர்களாகிய அரக்கர்களைப் போரிற் கொன்று குவித்து அவர்தம் உடல்களைப் பருந்தும் கழுகும் பேயும் அருந்திப் பசிதீர அவற்றுக்கு விருந்தாக இடுதற்குக் கருவியாக வில்லினையேந்திய வெற்றித் திருவினையுடையான் இராமபிரான் என்பார், 'ஆடற்பருந்தொடு கழுகும் பேயும் பசிப்பிணி தீருமாறு விருந்திடு வில்லின் செல்வன்' என்றார். வெற்றிச் செல்வனாகிய இராமனது அழகிய போர்க் கோலத்தை விரும்பிக் கண்ணாரக்கண்டும் நெஞ்சார நினைந்தும் பிராட்டியின் கண்களும் மனமும் களிப்புற்றன என்பார், 'விழாவணி விரும்பி நோக்கிக் கருந்தடங்கண்ணும் நெஞ்சும் களித்திட' என்றார். பிராட்டி கூறியவை அடுத்த செய்யுளில் எடுத்துரைக்கப்படும். (55)

10151. சீலமுங் காட்டியென்
★ கணவன் சேவகக்
கோலமுங் காட்டியென்
குலமுங் காட்டியிஞ்

ஞாலமுங் காட்டிய
கவிக்கு நாளருக்
காலமுங் காட்டுங்கொல்
லெனது கற்பென்ருள்.

'சீலமும் காட்டி,
என்கணவன் சேவகக்
கோலமும் காட்டி,
என்குலமும் காட்டி, இஞ்
ஞாலமும் காட்டிய
கவிக்கு நாள்அருக்
காலமும் காட்டுங்கொல்
எனதுகற்பு?' என்ருள்.

பொ:— '(எனது) ஒழுக்கத்தினையும் (என் கணவனுக்குத்) தெரியக்கூறி, என் கணவனது வீரத் திருக்கோலத்தினையும் எனக்குக்காட்டி எனது குலப்பெருமையினையும் (உலகத்தார்க்கு) அறிவுறுத்தி இவ்வுலகத்தையும் (அழிவின்றிக்) காணச்செய்த வானரகுலத் தோன்றலாகிய அனுமனுக்கு நாள்கள் இடையருத நெடிய வாழ்நாளாகிய (சிரஞ்சீவித்) தன்மையினையும் எனது கற்பு (தவருது) உண்டாக்குமன்ருே?' என(ப்பிராட்டி தனக்குள்) கூறினுள்.

கு:— சீலம்—ஒழுக்கம்; ஈண்டுக்கற்பென்னும் திண்மை யினைக் குறித்தது. சேவகக்கோலம்—வீரர்க்குரிய கடமையினை விளக்கும் போர்க்கோலம். குலம் என்றது, ஈண்டு ஆகுபெயராய் குலத்திற்குரிய பண்பாகிய பெருமையினைக் குறித்தது. ஞாலத் தைக் காட்டுதலாவது, தீயோர்களால் இவ்வுலகம் சிதைந்து அழியாதவாறு நிலைபெறச் செய்தல். இராவணனது வஞ்சனை யால் தன் ஆருயிர்நாயகனைப்பிரிந்து அல்லலுற்றபிராட்டி தூர்த்த னுகிய இராவணனைப் போரிற் கொன்ருெழித்த வீரனுகிய தன் நாயகனது கோலத்தைக் கண்டுகளித்து, 'என் சீலத்தினுல் கணவனது சேவகக் கோலத்தினையும் அக்கோலத்தால் என் குலத்தினையும்காட்டி இந்தஞாலத்தினையும் துயரின்றி நிலைபெறச் செய்த நல்லறிவாளனுகிய அனுமனுக்கு என்றும் இறவாதுவாழும் தன்மையினை எனது கற்பின் திறம் விளைத்தல் வேண்டும்' எனத்

தனது நன்றியுணர்வுதோன்றத் தனக்குள்ளே கூறிக்கொண்டாள் என்பதாம். (56)

*பிராட்டி இராமனது திருமேனியைக் காணுதல்*

10152. எச்சிலென் னுடலுயி ரேகிற் றேயினி
நச்சிலை யென்பதோர் நவையி லாளெதிர்
பச்சிலை வண்ணமும் பவள வாயுமாய்க்
கைச்சிலை யேந்திநின் ருனைக் கண்ணுற்ருள்.

'எச்சில், என்உடல், உயிர் ஏகிற்றே; இனி
நச்சு இலை' என்பது ஓர் நவைஇலாள், எதிர்
பச்சிலை வண்ணமும் பவள வாயும் ஆய்க்
கைச்சிலை ஏந்தி நின்ருனைக் கண்ணுற்ருள்.

பொ :— எனது உடம்பு (தூர்த்தனுற் சிறைவைக்கப்பட்டு) தூய்மை இழந்தது; (ஆதலின்) உயிர் நீங்கிய வெற்றுடம்பே யாகும். இனி (இவ்வுடம்பின்கண் எனக்குச் சிறிதும்) விருப்பமில்லை என்று சிந்தித்துணர்பவளாகிய குற்றமற்ற பிராட்டி, தன் எதிரே பச்சிலையின் (நிறம்போலும் திருமேனி) வண்ணத்தினையும் பவளம் போலும் சிவந்த வாயினையும் உடையனுய்க் கையில் வில்லினை ஏந்தி நின்ற இராமபிரானை உற்று நோக்கினுள்.

கு :— நவையிலாள், பச்சிலை வண்ணமும் பவளவாயுமாய்க் கைச்சிலை ஏந்தி நின்ருனைக் கண்ணுற்ருள் என முடியும். தூர்த்தனுகிய இராவணனுல் வலிதிற் கவர்ந்து சிறைவைக்கப் பட்டுத் தன் ஆருயிர்நாயகனுகிய இராமனது பிரிவால் வருத்த முற்ற பிராட்டி, தான் தீயோனது சிறையகத்தே தங்கியிருந்த மையால் தனது உடல் தூய்மையிழந்த உயிர் நீங்கிய வெற்றுடம்பையொத்து அருவருத்து, ஒதுக்கத்தக்க நிலையினை எய்தியதென்றும் அதனுல் அவ்வுடலோடு பொருந்தி வாழ்வதில், சிறிதும் விருப்பமின்றித் தனது வாழ்க்கையை வெறுத்த உள்ளத்தினளாயிருந்தாள் என்றும் விளக்குவார், 'எச்சில் என் உடல், உயிர் ஏகிற்றே இனி நச்சுஇலை என்பது ஓர் நவையிலாள்' என்ருர். ஓர்தல் — சிந்தித்துணர்தல். நவையிலாள் என்பது, குற்றமற்ற கற்புடையாளாகிய பிராட்டியைக் குறித்த பெயர். நவை — குற்றம். எச்சில் — தூய்மையிழந்தது; தீண்டத் தகாதது. நச்சு — விருப்பம். (57)

சீதை விமானத்திலிருந்து இறங்கி, இராமனைத் தொழுது ஏக்கம் நீங்குதல்

10153. மானமீ தரம்பையர் சூழ வந்துளாள்
போனபே ருயிரினைக் கண்ட பொய்யுட
லுனது கவர்வுறுந் தன்மைத் தாமென
ஆனனங் காட்டுற வவனி யெய்தினாள்.

மானமீது அரம்பையர் சூழ வந்துளாள்,
போனபேர் உயிரினைக் கண்ட பொய்உடல்
தான்அது கவர்வுறும் தன்மைத்து ஆம்என
ஆனனம் காட்டுற, அவனி எய்தினாள்.

பொ :— தேவ மங்கையர் (தன்னைப்) புடைசூழ்ந்துவர விமானத்தின்மீது வந்தவளாகிய சீதை, தன்னை விட்டு நீங்கி)ச்சென்ற பெருமைவாய்ந்த (தன்) உயிரின மீளக்கண்ட வெற்றுடம்பானது, தானே அவ்வுயிரைக் கவர்ந்துகொள்ளும் தன்மையதாகும் என்று (தனது) முகம் (தான் உயிர்பெற்ற தன்மையைப்) புலப்படுத்திக் காட்டும்வண்ணம் (விமானத்தினின்றும்) நிலத்தில் இறங்கினாள்.

கு :— இராவணனது வஞ்சனையால் இராமனைப் பிரிந்து துயருற்ற பிராட்டி இராவணன் இறந்தொழியத் தன் ஆருயிர் நாயகனை மீட்டும் கண்ணுற்ற நிலையில் அடைந்த மகிழ்ச்சி நிலையினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்தது இச்செய்யுளாகும். மானம்—விமானம். பொய்யுடல்—(உயிர் நீங்கினமையால்) உள்ளீடற்றதாகிய வெற்றுடம்பு. பொய்மை — உள்ளீடின்மை. உடம்பினை நாடியடைதல் உயிரின் இயல்பாகவும், அதற்குமாறாக உடல்தானே தன்னெதிர்ப்பட்ட உயிரினைப் பற்றிக் கவர்ந்துகொண்டு பொலிவுற்றுவிளங்கும் தன்மையதாயிற்று என்னும்படி, தன் ஆருயிர் நாயகனாகிய இராமனைக் கண்ணுற்ற சீதையின் திருமுகம், தான் உயிர்கொண்டு தளிர்த்த தன்மையினை இனிது புலப்படுத்திக் காட்டியது என்பார், 'போனபேர் உயிரினைக்கண்ட பொய்யுடல் தான் அது கவர்வுறும் தன்மைத்து ஆம் என ஆனனம் காட்டுற' என்றார். ஆனனம் — முகம்; என்றது இராமனைக் கண்ணுற்ற சீதையின் திருமுகத்தினை. அவனி எய்துதலாவது விமானத்தினின்றும் பூமியில் இறங்குதல். (58)

10154. பிறப்பினுந் துணைவனைப் பிறவிப் பேரிடர்
துறப்பினுந் துணைவனைத் தொழுது நானினி
மறப்பினு நன்றினி மாறு வேறுவீழ்ந்
திறப்பினு நன்றென வேக்க நீங்கினாள்.

பிறப்பினும் துணைவனை, பிறவிப் பேர் இடர்
துறப்பினும் துணைவனை, தொழுது, 'நான் இனி
மறப்பினும் நன்று; இனிமாறு வேறுவீழ்ந்து
இறப்பினும் நன்று' என ஏக்கம் நீங்கினாள்.

பொ :— '(இப்பிறப்பினை விட்டு இனி எத்தனைமுறை) பிறந்தாலும் (எனக்கு) உயிர்த் துணைவன் ஆகின்றவனும், பிறவித் தொடர்பாகிய பெருந் துன்பத்தை (அறவே) துறந்தாலும் (பிரியாத்) துணைவனாக உள்ளவனும் ஆகிய பெருமானை நான் (இன்று நேரிற் கண்டு) தொழுததனால் இனி (அம்முதல்வனை) மறந்தாலும் நல்லதே (அவனைக் கூடியிருப்பதற்கு) மாறாக வேறு பட்டு வீழ்ந்து இருந்தாலும் நல்லதே' என்று எண்ணி (ப் பிராட்டி தன்) மனக்கவலை நீங்கினாள்.

கு :— இராமனைப் பிரிந்து இராவணனது வன்சிறையுட்பட்டு மனம் புழுங்கிய பிராட்டி, 'இனி என் ஆருயிர்நாயகனைக் காணப்பெறுவேனோ? அவனைக் காணும் வாய்ப்பினைப் பெறுது வினே இறந்தொழிவேனோ?' என ஏக்கமுற்றிருந்தவள், நீடிய அரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை சூடிய இராமபிரானைக் கண்ணுற்ற அளவிலேயே தன் மனக்கவலை யொழிந்து 'இனி எனக்கு எது வரினும் நன்றே' என மன மகிழ்ந்தாள் என்பதாம். உயிர்கள் வினைத் தொடர்பாகிய பிறவிக் கட்டினுள் அகப்பட்ட காலத்தும், பிறவிப் பாசம் அற்றொழிய வீடு பேற்ற காலத்தும் அவ்வுயிர்களுக்கு அல்லல் நீக்கும் அருந்துணையாகவும் பேரின்பம் நல்கும் பெருந்துணையாகவும் பிரியாது நின்று உதவிபுரிபவன் இறைவன் ஒருவனே என்னும் மெய்ந்நூற்பொருள் தோன்ற 'பிறப்பினுந் துணைவனைப் பிறவிப் பேரிடர் துறப்பினுந் துணைவனை' எனப் பிராட்டி கூற்றில் வைத்து இறையியல்பினை உணர்த்தினார் ஆசிரியர். எவ்வுயிர்க்கும் அருளாளனாகிய இராமனைக் கண்டு தொழப் பெறுதலாகிய நற்பேறு ஒருமுறை கிடைத்த பின்னர் இனி இப்பிறப்பில் அவனை மீண்டும் மறத்த

லாலோ அவனைப்பிரிந்து இறத்தலாலோ எனக்கு எத்தகைய தீமையும் ஏற்படாது என்பாள், 'துணைவனைத் தொழுது, நான் இனி மறப்பினும் நன்று, இனி மாறு வேறு வீழ்ந்து இறப்பினும் நன்று' என ஏக்கம் நீங்கினுள் பிராட்டி என்க. தொழுது என்னும் செய்தெனெச்சம் இங்கும் காரணப் பொருளில் வந்தது. (59)

இராமன் சீதையை அமைய நோக்குதல்

10155. கற்பினுக் கரசினைப் பெண்மைக் காப்பினைப்
பொற்பினுக் கழகினைப் புகழின் வாழ்க்கையைத்
தற்பிரிந் தருள்புரி தருமம் போலியை
அற்பினத் தலைவனு மமைய நோக்கினுன்.

கற்பினுக்கு அரசினை, பெண்மைக் காப்பினை,
பொற்பினுக்கு அழகினை, புகழின் வாழ்க்கையை,
தற்பிரிந்து அருள்புரி தருமம் போலியை,
அற்பின் அத்தலைவனும் அமைய நோக்கினுன்.

பொ :— கற்புக்கு அரசியும் பெண்மைக்குணங்களுக்குப் பாதுகாவலாக உள்ளவளும் அழகினுக்கு அழகாக அமைந்தவளும் புகழ் (எங்கும் பரவி) வாழ்வதற்கு நிலைக்களமாகத் திகழ்பவளும், (தலைவனாகிய) தன்னைப்பிரிந்து (தனித்த நிலையிலும்) அருள்செய்யும் அறத்தினைப் போன்றவளும் ஆகிய பிராட்டியை அத்தலைவனாகிய இராமபிரானும் அன்பினுல் உளம்பொருந்த நோக்கினுன்.

கு :— கற்பென்னும் திண்மை அரசு வீற்றிருத்தற்குரிய நிலையமாகத் திகழ்பவள் என்பார், 'கற்பினுக்கு அரசு' என்றும், நாண முதலிய பெண்மைக் குணங்கட்கெல்லாம் அழிந்து சிதையாதவாறு அவற்றுக்குப் புகலிடமாயமைந்து பாதுகாப்பளிப்பவள் என்பார், 'பெண்மைக்காப்பு' என்றும் அழகினுக்கெல்லாம் அழகினை நல்கும் பேரழகினள் என்பார், 'பொற்பினுக்கு அழகு' என்றும், தான்பிறந்த குலத்துக்கும் புக்க குலத்துக்கும் பொருந்திய புகழனைத்தும் சிதையாது பரவி வாழ்தற்கு உறையுளாய்த் திகழ்பவள் என்பார் 'புகழின் வாழ்க்கை' என்றும், அறத்தின் மூர்த்தியாகிய இராமனைப் பிரிந்த துன்ப நிலையிலும் மன்னுயிர்கள்பால்

அருள் சுரத்தலைத் தன்னியல்பாகவுடைய அறத்தின் உருவாக அமைந்தவள் என்பார் ‘தற்பிரிந்து அருள்புரிதருமம் போலி’ என்றும் சீதையின் பண்பு நலன்களைப் பாராட்டிப் போற்றினார் ஆசிரியர். போலி — போன்றவள் ; இகரம், பெண்பால் விகுதி. அத்தலைவனும் அற்பின் அமைய நோக்கினான் என இயையும். அன்பு என்னும் மென்றொடர்க்குற்றியலுகரம் அற்பு என வன்றொடராயிற்று. நவையிலாள், எதிர்கைச் சிலை ஏந்தி நின்றானைக் கண்ணுற்றதேயன்றி அத்தலைவனும் அமைய நோக்கினான் என வருதலின், தலைவனும் என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. (60)

இராமன், தன்னை வணங்கிய சீதையைச் சினந்து நோக்கிப் பலவாறு கடிந்துரைத்தல்

10156. சுணங்குறு துணைமுலை முன்றிற் றூங்கிய
அணங்குறு நெடுங்கணீ ராறு வார்வுற
வணங்கிய மயிலினைக் கற்பின் வாழ்வினைப்
பணங்கிள ரரவென வெழுந்து பார்ப்புறு.

சுணங்கு உறுதுணை முலை முன்றில் தூங்கிய
அணங்கு உறு நெடுங்கணீர் ஆறு வார்வுற
வணங்கிய மயிலினை, கற்பின் வாழ்வினை,
பணம்கிளர் அரவுஎன எழுந்து, பார்ப்புறு.

பொ :— தேமல் படர்ந்த இணைந்த கொங்கை முற்றத்து இடையறாது வீழும், வருத்தத்தைப் புலப்படுத்தும் நெடிய கண்களின் நீர் ஆறுபோன்று பெருக்கெடுத்துச் சொரிய (த் தன்னை) இறைஞ்சிய மயில்போலுஞ் சாயலையுடையவளும் கற்பு நிலை பெற்று வாழ்தற்குரிய நிலைக்களமாகத் திகழ்பவளும் ஆகிய சீதையைப் படம் விரித்து (ச் சீறி) எழும் பாம்பினைப் போல (இராமன்) வெகுண்டு நோக்குதலுற்று;

கு :— இதுமுதல் எட்டுச் செய்யுட்கள் ஒரு தொடர். சுணங்கு — தேமல்; மேனியிற் படரும் நிறவேறுபாடு. தூங்குதல் — இடையறாது விழுதல். அணங்கு — வருத்தம்; என்றது, இராவணனால் வலிதிற் கவரப்பட்டுத் தன் ஆருயிர் நாயகனாகிய இராமனைப் பிரிந்து சிறையிருந்தமையால் சீதைக்கு உளதாகிய

பெருந்துயரத்தினை. மயில் என்றது உவம ஆகுபெயராய், மயில் போலும் சாயலினையுடைய சீதையை உணர்த்தியது. பணம் கிளர் அரவு — படம் விரித்துச் சீறியெழும் பாம்பு. பணம்—படம். என, உவமவுருபு. பார்ப்புறு என்னும் வினையெச்சம் 68-ஆம் செய்யுளில் உள்ள 'என்றனன்' என்னும் வினை முதல்வினை கொண்டு முடிந்தது. (61)

10157. ஊண்டிற முவந்தனை யொழுக்கம் பாழ்பட
மாண்டிலை முறைதிறம் பரக்கன் மாநகர்
ஆண்டுறைந் தடங்கினை யச்சந் தீர்ந்திவண்
மீண்டதென் னினைவெனை விரும்பு மென்பதோ.

'ஊண் திறம் உவந்தனை ;
ஒழுக்கம் பாழ்பட,
மாண்டிலை ; முறைதிறம்பு
அரக்கன் மாநகர்
ஆண்டு உறைந்து அடங்கினை ;
அச்சம் தீர்ந்து இவண்
மீண்டது என் ? நினைவு, "எனை
விரும்பும்" என்பதோ?'

பொ :— நீதி முறை தவறிய அரக்கனாகிய இராவணனது பெரிய நகரமாகிய இலங்கையிலே நெடுநாள் தங்கி (அவனது காவலில்) அடங்கியிருந்தாய் ; (அங்கு அளிக்கப்பெறும்) உணவு வகைகளை விரும்பியுண்டாய் ; (மகளிர்க்கு இன்றியமையாத) ஒழுக்கம் பாழ்பட்டழியவும் நீ இறந்தொழிந்தாயல்லை. (அத் தகைய நீ) அச்சமின்றி இவ்விடத்திற்குத் திரும்பி வந்தது எது கருதி? 'என்னை (இராமன்) விரும்புவான்' என்பது நின் எண்ணமோ?

கு :— தன்னைப் பிரிந்ததுமுதல் ஊணுறக்கமின்றி வருந்தும் சீதையின் உள்ளத்தியல்பினை அனுமன் வாயிலாக இராமன் நன் கறிந்திருந்தும் இவ்வாறு பிராட்டியை ஏதிலாள்போல் வெகுண்டு இகழ்ந்துரைப்பது, முதல்வனாகிய அவன் தான் மேற்கொண் டுள்ள மையல் மானிட இயல்பிற்கேற்ற பேச்சாக அமைந்திருத் தல் அறியத்தகுவதாகும். ஒழுக்கம் பாழ்பட என்பதனை இடை

நிலை விளக்காகக் கொண்டு, ஒழுக்கம் பாழ்பட அரக்கன் மாநகர் ஆண்டுறைந்த அடங்கினை ; ஒழுக்கம் பாழ்பட, ஊண்திறம் உவந்தனை, மாண்டிலை என முன்னும் பின்னும் இயைத்துரைக்க. நினைவு எனை விரும்பும் என்பதோ என்புழி வினு ஓகாரத்தை 'எனை விரும்பும் என்பது நினைவோ?' எனப் பிரித்துக் கூட்டுக. (62)

10158. உன்னைமீட் பான்பொருட்
டுவரி தூர்த்தொளிர்
மின்னைமீட் டுறுபடை
யரக்கர் வேரறப்
பின்னைமீட் டுறுபகை
கடந்தி லேன்பிழை
என்னைமீட் பான்பொருட்
டிலங்கை யெய்தினேன்.

'உன்னை மீட்பான்பொருட்டு,
உவரி தூர்த்து, ஒளிர்
மின்னை மீட்டுறுபடை
அரக்கர் வேர் அற,
பின்னை மீட்டு, உறுபகை
கடந்திலேன் ; பிழை
என்னை மீட்பான் பொருட்டு,
இலங்கை எய்தினேன்'.

பொ :— உன்னை (ச் சிறையிலினின்றும்) மீட்டு அழைத்துக் கொள்ளுதற் பொருட்டு (மலைகளைக் கொண்டு) கடலைத் தூர்த்து (அணையமைத்து) ஒளிவிட்டு விளங்கும் மின்னலை (ப் புறங் கொடுத்து) மீளச் செய்யும் (பேரொளிமிக்க) படைக்கலங்களை யுடைய அரக்கர்கள் வேரோடு இறந்தொழியப் பின்னரும் மேன் மேற் பொருது மிக்க பகையாகிய இராவணனை அழித்தேனல் லேன்; ('தன் மனையாளை வலிதிற் கவர்ந்தானைப் பொருது வென்றிலன்' என்று உலகத்தார் கூறும்) பழியினின்றும் என்னை மீட்டுக்கொள்ளுதற் பொருட்டே (நான்) இலங்கைக்கு வந்தேன்.

கு :— 'மீட்பான்பொருட்டு' என்புழிப் பொருட்டு என்னும் பொருளுடைய பானீற்று வினையெச்சத்தின் பின் அப்பொருளு

டைய பொருட்டு என்னும் சொல்லும் உடன் வந்தமை இங்கு நோக்கத்தகும். உவரி — கடல். மின்னை மீட்டுறுபடை—மின்னின் ஒளியையும் புறங்கொடுத்து மீளச்செய்யும் ஒளிமிக்க ஆயுதங்கள். உறுபகை — மிக்க பகை; பெரும் பகை. கடத்தல் — வென்றழித்தல். ''யான் கடலை அணைகட்டிக் கடந்து இலங்கையையடைந்து அரக்கர்களை வேரோடழித்து இராவணனைப் போரிற் கொன்றது, சீதையாகிய நின்னைச் சிறைமீட்டு அழைத்துக் கொள்ளுதலை விரும்பியன்று; 'இராமன் தன்மனையாளை மாற்றான் கொளவறிதேயிருந்தான்' என உலகத்தார் கூறும் பழியினின்றும் என்னை மீட்டற் பொருட்டே'' என இராமன் சீதையை நோக்கிக் கூறினான் என்பதாம். (63)

10159. மருந்தினு மினியமன் னுயிரின் வான்றசை
அருந்தினை யேநற வமைய வுண்டியே
இருந்தனை யேயினி தெமக்கு மேற்பன
விருந்துள வோவுரை வெறுமை நீங்கினாய்.

'மருந்தினும் இனிய மன்னுயிரின் வான்தசை
அருந்தினையே; நறவு அமைய உண்டியே;
இருந்தனையே இனிது? எமக்கும் ஏற்பன
விருந்து உளவோ? உரை -வெறுமை நீங்கினாய்!

பொ :— (அணிகலன்களையிழந்த) வெறுமையினின்றும் நீங்கியவளே! அமிழ்தத்தைக்காட்டிலும் இனிய சுவைநிறைந்த மண்ணுயிர்களது உடம்பின் நிறைந்த தசையினை (இனிதாக) அருந்தினையல்லையோ? மதுவை நிறையக் குடித்தனையோ? (கணவனைப் பிரிந்த கவலை சிறிதுமின்றி) இனிதாக இருந்தாயல்லையோ? எமக்கும் ஏற்பனவாகிய விருந்துணவுகள் உள்ளனவோ? சொல்வாயாக.

கு :— 'வெறுமை நீங்கினாய்' என்பது, சீதையை நோக்கிய விளி. வெறுமை — அணிகலன்களின்றி வெறுவிதாகிய நிலை. அந்நிலையினின்றும் நீங்குதலாவது சிறந்த அணிகலன் பல அணிந்த கோலமுடையளாதல். இனி, 'வெம்மை நீங்கினாய்' எனப் பாடங்கொண்டு, 'விருப்பம் நீங்கியவளே' எனவும், கணவனைப்பிரிந்து அயலான் சூழலில் வாழ்ந்தமைபற்றி மனம் வெதும்புதல் இல்லாதவளே எனவும் இராமன் கூறியதாகப் பொருள்

கூறுதலுமுண்டு. மருந்தினும் இனிய வான் தசை, மன்னுயிரின் வான்தசை எனத் தனித்தனி இயையும். விருந்து என்றது, விருந்தினராய் வந்தார்க்கு அன்புடன் இட்டுமகிழ்தற்குரிய சிறப்புடைய உணவுகளைக் குறித்தது. புலாலை விரும்பியுண்ணும் அரக்கரது மனக்கருத்தை ஏறிட்டுக்கொண்டு 'மருந்தினும் இனிய மன்னுயிரின் வான்தசை' என்றான். 'வான்தசை அருந்தினையே? நறவு அமைய உண்டியே? இனிது இருந்தனையே?' எனச் சீதையை நோக்கி இராமன் வினவிய வினாக்கள், இராவணனாற் கவரப்பட்டிருந்த சீதை அரக்கர் சூழலில் அச்செயல்களை மேற்கொண்டிருத்தலும் கூடும் என உலகத்தார் கொள்ளும் ஐயத்தைப் புலப்படுத்தி நின்றன. 'எமக்கும் ஏற்பன விருந்துளவோ' என்றது, கணவனைப் பிரிந்து அயலாரூரில் உயிர் தாங்கியிருந்த சீதையை இகழுங்குறிப்பினது. (64)

10160. கலத்தினிற் பிறந்தமா மணியிற் காந்துறு
நலத்தினிற் பிறந்தன நடந்த நன்மைசால்
குலத்தினிற் பிறந்திலை கோளில் கீடம்போல்
நிலத்தினிற் பிறந்தமை நிரப்ப னுயரோ.

'கலத்தினின் பிறத்த மாமணியின் காந்துறு
நலத்தினின் பிறந்தன நடந்த; நன்மைசால்
குலத்தினில் பிறந்திலை; கோளில் கீடம்போல்
நிலத்தினில் பிறந்தமை நிரப்பினாய் அரோ.

பொ :— அணிகலத்திற் பதிக்கப் பெற்றுத் தோன்றிய பெருமைவாய்ந்த இரத்தினங்களைப் போன்று ஒளியுடன் திகழும் நன்மையொடு தோன்றினவாகிய நற்குண நற்செய்கைகள் (நின்னைவிட்டுச்) சென்றன. (எனவே) நன்மை நிறைந்த உயர்ந்த குலத்திற் பிறந்தாயல்லை. கொள்கையில்லாத புழுவினைப்போன்று மண்ணினுள்ளே பிறந்ததற்கு ஏற்ற தன்மையினையே நிறைவு செய்து விட்டாய்.

கு :— கலம்- (பொன்னினும் மணியினும் முத்தினும் அழகுறச் செய்யப் பெற்ற) அணிகலம். காந்துறுதல்—ஒளி வீசுதல். நடத்தல்-நீங்குதல். நடந்த-நடந்தன; அன்சாரியைபெறாத அகரவீற்றுப்பலவின்பால் வினைமுற்று. கோள்—கொள்கை; நல்லுணர்வு. கீடம் — புழு. நிலத்தினிற் பிறத்தல் — மண்ணினுள்ளேயிருந்து

வெளிப்படுதல். நிரப்புதல் — நிறைவு செய்தல்; உறுதிப் படுத்தல். அரோ, அசை. சனகமன்னன் வேள்வி செய்தற் பொருட்டு நிலத்தினை உழுத நிலையில் மண்ணுள்ளிருந்து உழுபடைச்சாலில் தோன்றியவள் சீதை என்னும் வரலாறு இங்கு நினைக்கத்தக்கது. (65)

10161. பெண்மையும் பெருமையும்
பிறப்புங் கற்பெனும்
திண்மையு மொழுக்கமுந்
தெளிவுஞ் சீர்மையும்'
உண்மையு நீயெனு
மொருத்தி தோன்றலால்
வண்மையின் மன்னவன்
புகழின் மாய்ந்தவால்.

'பெண்மையும் பெருமையும்,
பிறப்பும், கற்புஎனும்
திண்மையும், ஒழுக்கமும்,
தெளிவும், சீர்மையும்,
உண்மையும், நீ எனும்
ஒருத்தி தோன்றலால்
வண்மை இல் மன்னவன்
புகழின், மாய்ந்தவால்.

பொ :— (குலமகளிர்க்குரிய) பெண்மைத் தன்மையும் (தன்னிலையிற்றாழாத) பெருமைக் குணமும், குடிப்பிறப்பும், கற்பென்னுங் கலங்கா நிலைமையும், நல்லொழுக்கமும், (கணவனே தெய்வமெனக்கொள்ளும்) தெளிவும், புகழும், வாய்மையும் இவையாவும் நீ ஒருத்தி (இவ்வுலகிற்) பிறந்ததனல், கொடைத்திறன் இல்லாத மன்னனது புகழ் (அழிந்தொழிதல்) போல அழிந்தொழிந்தன.

கு :— மனையற வாழ்க்கைக்கு மாசுண்டாகும் நிலையில் நீ ஒருத்தி பிறந்ததனல் உலக மகளிர்க்கெல்லாம் பெண்மை முதலிய நற்குணங்கள் சிதையும் இழிநிலையுண்டாயிற்றே என இராமன் சீதையை நோக்கி இகழ்ந்தனன் என்பதாம். 'பெண்மை

யாவது கட்புலனுயதோர் அமைதித் தன்மை ’ என்பர் நச்சினர்க்கினியர். பெருமை—குணங்களாற் பெரியராம் தன்மை. ஈண்டுப் பிறப்பு என்றது உயர்ந்த குடியிற் பிறந்தார்க்குரிய சிறப்பியல் பிணே. ‘ கற்பெனும் திண்மை ’ எனவரும் திருக்குறள் தொடரும் அதற்கு கற்பென்னுங் கலங்கா நிலைமை ’ எனப் பரிமேலழகர் கூறும் உரையும் இங்கு நினைக்கத்தக்கனவாகும். தெளிவு—கணவனே தெய்வமெனத் தெளிந்தொழுகும் தேற்றமுடைமை. சீர்மை—புகழ். உண்மை—மனமொழி மெய்களாற் பொய்யா தொழுகுதல். வண்மை இல் மன்னவன்—ஈகைக்குணமில்லாத அரசன். ‘கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும், உடையானும் வேந்தர்க்கொளி ’ (390) என வரும் திருக்குறளில் வேந்தர்க்கு ஒளி (புகழ்) தருவனவற்றுள் கொடைத்திறன் முதன்மையாகக் குறிக்கப் பெற்றிருத்தல் காண்க. ஈவார்மேல் நிற்கும் தன்மையதாய புகழ், ஈகைக் குணமில்லாத அரசன்கண் நில்லாது அழிதல் போன்று, நீ ஒருத்தி தோன்றலால் பெண்மை முதலியன அழிந்தொழிந்தன என்றுன் என்றவாறு. (66)

10162. அடைப்பரைம் புலன்களை
யொழுக்க மாணியாச்
சடைப்பரம் புனைந்தொளிர்
தகையின் மாதவம்
படைப்பர்வந் திடையொரு
பழிவந் தாலது
துடைப்பர்தம் முயிரொடுங்
குலத்திற் றேகைமார்.

‘அடைப்பர், ஐம்புலன்களை;
ஒழுக்கம் ஆணியாச்
சடைப்பரம் புனைந்து, ஒளிர்
தகையின் மாதவம்
படைப்பர்; வந்து இடை
ஒரு பழிவந்தால், அது
துடைப்பர், தம் உயிரொடும்—
குலத்தின் தோகைமார்.

பொ :— நற்குடியிற்பிறந்த மகளிர்கள் (தம்கணவனைப் பிரிந்துறையும் நிலையேற்பட்டால்) ஐம்புலவுணர்வுகளையும் (தத்தமக்குரிய பொறிகளிற் செல்லாதவாறு) அடக்கி நிறுத்துவர்; நல்லொழுக்கத்தையே அச்சாணியாகக் கொண்டு (தம் கூந்தலை வாரி அழகு செய்து கொள்ளாமல்) சடையாகிய பாரமாக முடித்து, ஒளிவிட்டு விளங்கும் இயல்பினுல் (மனைக்கண் இருந்து செய்யும்) பெருந்தவத்தினை மேற்கொள்வர்; தமது தவ வாழ்க்கையினிடையில் ஒரு பழி வந்து நேர்ந்தால் தம்முயிரோடும் அப்பழியினைப் போக்குவர்.

கு :— குலத்தின் தோகைமார், ஐம்புலன்களை அடைப்பர்; ஒழுக்கம் ஆணியா, சடைப் பரம் புனைந்து, ஒளிர் தகையின் மாதவம் படைப்பர்; இடையொரு பழிவந்தால் தம் உயிரொடும் அது துடைப்பர் என இயைத்துரைக்க. கணவனைப் பிரிந்துறையும் குலமகளிர்க்குரிய ஒழுகலாற்றினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது இச்செய்யுள். அடைத்தல்—செறித்தல்; அடக்குதல். ஆணி — அச்சாணி. இங்குத் தம் வாழ்வுக்குரிய அடிப்படை என்னும் பொருளில் ஆளப் பெற்றது. படைத்தல்—செய்தல்; மேற்கொள்ளுதல். அது என்றது, அப்பழியினை. துடைத்தல் — அறவே போக்குதல். (67)

இச்செய்யுளின் பின் 41, 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10162 (a) அழிபுகழ் செய்திடு மரக்க ராகையால்
பழிபடு மென்பரால் பாரு ளோரெலாம்
விழுமிய தன்றுநீ மீண்ட திவ்விடம்
கழிபடு மென்றனன் கமலக் கண்ணனே.

10162 (b) கண்ணுடை நாயகன் கழிப்ப னென்றபின்
மண்ணிடைத் தோன்றிய மாது சொல்லுவாள்
எண்ணுடை நங்கையர்க் கினிய ளென்றநான்
விண்ணிடை யடைவதே விழுமி தென்றனள்.

10162 (c) பொங்கிய சிந்தையள் பொருமி விம்முவாள்
சங்கைய னென்றசொற் றரிக்கி லாமையால்
மங்கையர் குழுக்களு மண்ணுங் காணவே
அங்கியின் வீழலே யழகி தாமரோ.

10163. யாதியா னியம்புவ
துணர்வை யீடறச்
சேதியா நின்றதுன்
ஞெழுக்கச் செய்தியால்
சாதியா லன்றெனிற்
றக்க தோர்நெறி
போதியா லென்றனன்
புலவர் புந்தியான்

'யாது யான் இயம்புவது? உணர்வை ஈடுஅறச்
சேதியாநின்றது, உன்ஒழுக்கச் செய்தியால்;
சாதியால்; அன்று எனின், தக்கது ஓர்நெறி
போதியால்' என்றனன்—புலவர் புந்தியான்.

பொ:— 'நான் எதைச் சொல்வது? உனது நடைமுறை யாகிய செயல் எனது உள்ளத்துணர்வை வலியற அறுத்துச் சிதைக்கின்றது. (இத்தகைய நீ) இறந்தொழிவாயாக. அங்ஙன மன்றாயின் (என் கண்ணெதிரே நில்லாது நினக்குத்) தகுதியான இடத்திற்குச் செல்வாயாக' என்று (வெகுண்டு) கூறினான், மெய் யுணர்ந்தோர் உள்ளத்தில் வீற்றிருக்கும் இறைவனாகிய இராமன்.

கு:— 'யான் இயம்புவது யாது? உன் ஒழுக்கச் செய்தி உணர்வை ஈடு அறச் சேதியா நின்றது; சாதி; அன்றெனின் தக்கதோர் நெறி போதி' என்றனன், புலவர் புந்தியான் என இயைத்துரைக்க. ஈடு—வலிமை. சாதி, போதி என்பன இகர விற்று ஏவல்ஒருமை. ஆல்—அசை. மெய்யுணர்வுடைய ஞானிகள் உள்ளத்திலே வீற்றிருக்கும் இறைவனாகிய திருமாலே இவ்வாறு இராமனாக அவதரித்தான் என்பார், 'புலவர் புந்தியான்' என்றார். உயிர்க்குயிராய் நின்று என்றும் யாண்டும் நிகழ்வனவற்றை அறியவல்ல முதல்வனாகிய இராமன், இலங்கையிற் சிறையிருந்த கற்பினுக்கணியாகிய சீதையின்ஒழுகலாற்றை இங்ஙனம் ஐயுற்று இகழ்ந்து கூறியது, உண்மையினை யுணரும் வலியில்லாதாராய உலகத்தார் அனைவரும் பிராட்டியின் கற்பின் திறனை உணர்ந்து உய்தல் வேண்டும் என்ற நற்கருத்தினாலேயே என்பது இங்கு உளங்கொளத் தக்கதாகும். (68)

இராமன் கூறிய கடுஞ்சொற்களைக் கேட்டு அங்கு நின்ற முனிவர் முதலியோர் அனைவரும் அரற்றுதல்

10164. முனைவரு மமரரு மற்று முற்றிய
நினைவரு மகளிரு நிருத ரென்றுளார்
எனைவரும் வானரத் தெவரும் வேறுளார்
அனைவரும் வாய்திறந் தரற்றி னாரரோ.

முனைவரும், அமரரும், மற்றும் முற்றிய
நினைவுஅரு மகளிரும், நிருதர்என்று உளார்
எனைவரும், வானரத்து எவரும், வேறுஉளார்
அனைவரும், வாய்திறந்து, அரற்றினர் அரோ.

பொ :— (சீதையைநோக்கி இராமன் கூறிய இக்கடுஞ்சொற்களைக் கேட்டு) முனிவர்களும் தேவர்களும் மற்றும் அங்குச் சூழ்ந்துள்ளவர்களாகிய எண்ணில்லாத மகளிரும் அரக்கர் என்று உள்ளார் எல்லாரும் குரங்கினத்திலுள்ளார் யாவரும் மற்றும் உள்ள வேறினத்தார் எல்லாரும் (மனம் பொருது) வாய்திறந்து கதறினார்கள்.

கு :— முனைவர்—முனிவர். முற்றுதல்—சூழ்தல். நினைவு அரு—எண்ணுதற்கு அரிய. கரடியினத்துச் சாம்பவான் முதலியோரை உளப்படுத்தி 'வேறுளார் அனைவரும்' என்றார். (69)

இராமன் கூறிய கடுஞ்சொற்களைக் கேட்ட சீதையின் துயர்நிலை

10165. கண்ணிணை யுதிரமும் புனலுங் கான்றுக
மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள்
புண்ணினைக் கோலுறுத் தனைய பொம்மலால்
உண்ணினைப் போவிநின் றுயிர்ப்பு வீங்கினாள்.

கண்இணை உதிரமும் புனலும் கான்றுஉக,
மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள்,
புண்ணினைக் கோலுறுத் தனைய பொம்மலால்
உள்நினைப்பு ஓவிநின்று உயிர்ப்பு வீங்கினாள்.

பொ :— (இராமன் கூறிய கடுஞ் சொற்களைக் கேட்கப் பொருத உள்ளத்தினளாய்) இரண்டு கண்களினின்றும் குருதியும் நீரும் வெளிப்பட்டுச் சொரிய (நாணத்தால் தலை குனிந்து) நிலத்தினை நோக்கி நிற்கும் அலர்மேல் மங்கையாகிய சீதை, (துயர் விளைக்கும்) புண்ணினை அம்பினுற் குத்திக் கிளறினுற் போலும் (கடுந்துன்பத்தால்) உள்ளத்தின் நினைவாகிய உணர் வினை யொழிந்து நின்று பெருமூச்சு விட்டாள்.

கு :— தன் தன்மைக்கு அடுக்காத பழிச் சொற்களைத் தன் ஆருயிர் நாயகனுகிய இராமனே அன்பின்றிக் கூறக் கேட்ட சீதையின் கண்களில், வெகுளியின் மிகுதியாற் குருதியும் துயரத்தின் மிகுதியாற் கண்ணீரும் பொங்கி வழிந்தன என்பார் 'கண்ணிணை உதிரமும் புனலும் கான்று உக' என்ருர். உகுதல்—சொரிதல். 'உக' என்னும் செயவெனெச்சம், 'நோக்கிய' என்னும் பெயரெச்சத்து நோக்குதலாகிய வினை கொண்டு முடிந்தது. மலரின் வைகுவாள் என்றது அலர்மேல்மங்கையின் அமிசமாகிய சீதையைக் குறித்தது. 'புண்ணினைக் கோல் உறுத்தனைய பொம்மல்' என்றது, வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற் போலும் பெருந் துயரத்தைச் சுட்டிநின்றது. கோல் — அம்பு. பொம்மல் — மிகுதி ; ஈண்டுத் துயரத்தின் மிகுதியைக் குறித்தது. நினைப்புஓவுதல் — உணர்வழிதல். உயிர்ப்பு வீங்குதல் —பெருமூச்செறிதல். (70)

10166. பருந்தடர் சுரத்திடைப் பருகு நீர்நசை
வருந்தருந் துயரினுன் மாள லுற்றமான்
இருந்தடங் கண்டதி னெய்து ருவகைப்
பெருந்தடை யுற்றெனப் பேதுற் ருளரோ.

பருந்து அடர் சுரத்திடை பருகுநீர் நசை
வருந்து அருந்துயரினுல் மாளலுற்ற மான்,
இருந் தடம்கண்டு, அதின் எய்துரு வகைப்
பெருந்தடை உற்றெனப் பேதுற்ருள் அரோ.

பொ :— பருந்துகள் நிறைந்த பாலைநிலத்திலே பருகுதற்குரிய நீரின்பாற் கொண்ட வேட்கையினுல் வருந்தும் பொறுத்தற்கரிய துயரத்தால் இறக்கும்நிலையை எய்திய மானுனது,

பெரிய நீர்நிலையைக் கண்டு அத் தடாகத்தில் இறங்க வொண்ணுதவாறு பெரியதடையினை அடைந்தாற்போன்று (பிராட்டி) அறிவு கலங்கினுள்.

கு :— வாசத்தடம் போல்வானுகிய இராமனைப் பிரிந்து இலங்கையைஅடைந்து அரக்கர் சூழலாகிய பாலைநிலத்திலே வருந்திய சீதை இராமனது பேரருளாகிய இனியநீரைப் பருகுதற்குப் பெரு வேட்கையுடையளாய் இராமனை எதிர்ப் பட்ட நிலையில் அவனது கடுஞ்சொற்களால் தடைப்பட்டு வருந்தினமைக்கு, பருந்தூர் சுரத்திடை நீர்நசையினுல் வருந்து அருந்துயரினுல் மாளலுற்ற மான், இரும் தடம்கண்டு அதின் எய்துருவகை பெருந்தடையுற்றமை உவமையாகக் குறிக் கப்பட்டது. பேதுறுதல் — அறிவுகலங்கி வருந்துதல். (71)

10167. உற்றுநின் றுலகினை நோக்கி யோடரி
முற்றுறு நெடுங்கணீர் ஆலி மொய்த்துக
இற்றது போலும்யா னிருந்து பெற்றபே
றுற்றதா லின்றவ மென்றென் றோதுவாள்.

உற்றுநின்று, உலகினை நோக்கி,ஓடு அரி
முற்றுறு நெடுங்கண் நீர் ஆலிமொய்த்து உக,
'இற்றதுபோலும், யான் இருந்துபெற்ற பேறு? ;
உற்றதால் இன்றுஅவம்' என்றுஎன்று ஓதுவாள்.

பொ :— (பேதுறவு) அடைந்து நின்று, பரந்து செல்லும் செவ்வரி நிரம்பிய நீண்ட கண்களினின்றும் நீர்த்துளி நிறைந்து சொரிய, உலகினை நோக்கி, 'யான் இவ்வளவு நாட்கள் உயிர் தாங்கியிருந்து பெற்றபேறு இத் தன்மையது போலும்? (என் தவப்பயன்) இன்று வீணுகியது' என்று (பின்வருமாறு இராமனை நோக்கிக்) கூறுவாளாயினுள்.

கு :— யான் இருந்து பெற்றபேறு இற்றது போலும்? இன்று அவம் உற்றது என்று என்று ஓதுவாள் என இயையும். இற் றது — இத்தன்மையது. அவம் உறுதல் — வீணுதல். சீதை கூறுவன பின் வரும் ஐந்து செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (72)

10168. மாருதி வந்தெனைக் கண்டு வள்ளனீ
சாருதி யீண்டெனச் சமையச் சொல்லினன்
யாரினு மேன்மையா னிசைத்த தில்லையோ
சோருமென் னிலையவன் றூது மல்லனோ.

'மாருதி வந்து, எனைக் கண்டு, "வள்ளல்நீ
சாருதி ஈண்டு" எனச் சமையச் சொல்லினன்;
யாரினும் மேன்மையான் இசைத்தது இல்லையோ,
சோரும் என்நிலை? அவன் தூதும் அல்லனோ?

பொ:—வள்ளலே! அனுமன், முன்பு (இலங்கைக்கு) வந்து, நீ (என்னை மீட்டற்பொருட்டு) இவ்விடத்திற்கு எழுந்தருள்வாய் என்று (தேறுதல் மொழிகளை என்னுள்ளம்) பொருந்தச் சொல்லினன். யாவரினும் மேலானவனாகிய அப்பெரியோன் (நின்னைப் பிரிந்து) வருந்தும் என் துன்பநிலையினை உனக்குச் சொல்லியதில்லையோ? அனுமனாகிய அவன் (நீ அனுப்பிய) தூதனும்அல்லனோ?

கு:—'அனுமன் இலங்கையில் அசோகவனத்தை யடைந்து தன்னை நின்னுடைய தூதன் எனத் தெரிவித்து, என்னைப் பிரிந்த நின்னிலையையும், பகைவனை வென்று என்னை மீட்டற்பொருட்டு நீ விரைவில் இங்கு எழுந்தருள்வாய் என்பதனையும் என் மனம் பொருந்தக்கொள்ளும்படி எடுத்துக் கூறியதனால் யான் இதுகாறும் இறவாது உயிர் தரித்திருந்தேன். நினது பேரன்பினை எனக்கு எடுத்துரைத்து ஆறுதலளித்த அனுமன், நின்னைப் பிரிந்து வருந்தும் எனது துயர்நிலையையும் நினக்கு உள்ளவாறு சொல்லியிருத்தல் வேண்டுமே? அனுமன்வாயிலாக என் உண்மை நிலையினை நீ உணரப்பெறாமையால் என்னைக் காணவந்த அனுமன் நின்னால் உண்மையாக அனுப்பப்பெற்ற தூதன் அல்லன் போலும்' எனப் பிராட்டி இராமனை நோக்கி வினவினாள் என்பதாம். இக்கூற்று, 'ஊண்டிறமுவந்தனை......மாண்டிலை' என இராமன் கூறியதற்கு ஏற்ற மறுமொழியாக அமைந்துள்ளமை காணலாம். (73)

10169. எத்தவ மென்னல மென்ன கற்புநான்
இத்தனை காலமு முழந்த வீதெலாம்
பித்தென லாயவம் பிழைத்த தாமன்றே
உத்தம நீமனத் துணர்ந்தி லாமையால்.

‘எத்தவம், என்நலம், என்ன கற்பு,நான்
இத்தனை காலமும் உழந்த ஈது எலாம்
பித்து எனல்ஆய், அவம் பிழைத்ததாம் அன்றே,
உத்தம! நீமனத்து உணர்ந்திலாமையால்.

பொ:— ‘குணங்களால் உயர்ந்தோய்! இவ்வளவு காலமாக யான் முயன்று காத்த எத்துணைச் சிறந்த தவமும் எத்துணைச் சிறந்த நற்குண நற்செய்கைகளும் எத்துணைச் சிறந்த கற்பும் ஆகிய இச்சிறப்பு எல்லாமும் நீ நின்திருவுள்ளத்தில் உணரப் பெருமையால் பித்தர் செயல் என்னும்படி பயனின்றி வறிதே கழிந்தது.

கு:— தவம் என்றது, ஈண்டு இராவணன் ஏவலால் அரக்கியர் தனக்குச் செய்த துன்பங்களை யெல்லாம் பொறுத்து ஊணுறக்கமின்றிச் சீதை தன் உடம்பினை ஒறுத்தலை. நலம்— நற்குண நற்செய்கைகள். கற்பு — கணவனே தெய்வமெனக் கொண்ட தன் உறுதியினின்றும் கலங்காமையாகிய மனத் திண்மை. உத்தம! நான் இத்தனைகாலமும் உழந்த ஈது எலாம், நீ மனத்து உணர்ந்திலாமையால், பித்து எனலாய் அவம் பிழைத்தது என இயையும். பித்து — பித்தர்செயல். அவம் — வீண். பிழைத்தல் — பயன் விளைத்தலின்றிக் கழிதல். (74)

10170. பார்க்கெலாம் பத்தினி பதுமத் தானுக்கும்
பேர்க்கலாஞ் சிந்தைய ளல்லள் பேதையேன்
ஆர்க்கெலாங் கண்ணவ னன்றென் றுலது
தீர்க்கலாந் தகையது தெய்வந் தேறுமோ.

‘பார்க்கு எலாம்பத்தினி;
பதுமத் தானுக்கும்
பேர்க்கலாம் சிந்தையள்
அல்லள், பேதையேன்;
ஆர்க்கு எலாம் கண்ணவன்,
‘அன்று’ என்றுல்,அது
தீர்க்கல் ஆம் தகையது
தெய்வம் தேறுமோ?

பொ :— பேதைமையுடையவளாகிய யான், நிலவுலகத்தா ரெல்லாராலும் கற்புடைப் பெண்ணாக மதிக்கத்தக்கவள்; தாமரைமலரில் தோன்றியவனாகிய பிரமனாலும் மாற்றி வேறுபடுத் தும் மனத்தினள் அல்லள்; உலகத்தார் எல்லார்க்கும் கண்ணாக விளங்கும் இராமபிரான் (எனது கற்பொழுக்கம்) அத்தன்மைய தன்று என்று கூறினால் அக்கருத்தினை மாற்றும் வழியினைத் தெய்வமும் தெளியவல்லதோ?

கு :— 'உலகத்தார் எல்லாராலும் பத்தினி எனக் கொண் டாடத்தக்க பெருமையும் படைத்தற் கடவுளாகிய பிரமனாலும் வேறுபடுத்த வொண்ணாத உள்ளத்துறுதியாகிய திண்மையும் வாய்ந்த எனது கற்பொழுக்கத்தினை உலகத்தாரெல்லார்க்கும் கண்ணாக விளங்கும் ஆருயிர்நாயகனாகிய இராமபிரானே அன் றென்று மறுத்துரைத்தால், என் நாயகனது மனத்தில் தோன் றிய ஐயங்களைப் போக்கி, எனது ஒழுக்கத்தின் வழுவின்மையினை மனங்கொள எடுத்துக் கூறித் தெளிவிக்கும் திறம் தெய்வத்திற் கும் இல்லையே' எனப் பிராட்டி இரங்கினாள் என்பதாம். உலகத்திற் புறத்தே ஞாயிறு திங்கள் தீ முதலிய ஒளிப்பொருள்களாகவும், உயிர்களின் அகத்தே உயிர்க்குயிராகவும் இருந்து எல்லாப் பொருள்களையும் காட்டுதலால் உலகத்தாரெல்லார்க்கும் கண்ணா கத் திகழும் இறைவன் இராமபிரான் என்பதுபட 'ஆர்க்கெலாங் கண்ணவன்' என்றாள். 'கண்ணாவான் என்றும், மண்ணோர் விண்ணோர்க்குத் தண்ணார் வேங்கட, விண்ணோர் வெற்பனே' என்பது திருவாய்மொழி. உலக நிகழ்ச்சிகள் எல்லாவற்றிற்கும் சான்றாக நின்று கண்டு காட்டும் அம்முதல்வனே எனது கற்பொ ழுக்கத்தினைத் தக்கதன்றென்று கூறினால் அவனுள்ளத்திலுள்ள ஐயமகல உண்மையை எடுத்துரைத்துத் தெளிவிக்கும் திறம் வேறு எந்தத் தெய்வத்திற்கும் இல்லை என்பாள், 'ஆர்க்கெலாங் கண்ணவன் அன்று என்றால் அது தீர்க்கலாம் தகையது தெய்வம் தேறுமோ' என்றாள். என்னை என் ஆருயிர்நாயகனாகிய இராமன் ஏற்றுக்கொள்வான் எனநம்பி இதுவரை உயிர் தாங்கி யிருந்தமைக்குப் பின்விளைவதுணராத எனது பேதைமையே காரணம் என்பாள், 'பேதையேன்' என்றாள். (75)

10171. பங்கயத் தொருவனும் விடையின் பாகனும்
சங்குகைத் தாங்கிய தரும மூர்த்தியும்

அங்கையி னெல்லிபோ லணைத்து நோக்கினும்
மங்கையர் மனநிலை யுணர வல்லரோ.

'பங்கயத்து ஒருவனும்,
விடையின் பாகனும்,
சங்குகைத் தாங்கிய
தரும மூர்த்தியும்
அங்கையின் நெல்லிபோல்
அனைத்தும் நோக்கினும்,
மங்கையர் மனநிலை
உணர வல்லரோ?

பொ :— தாமரை மலரில் உள்ள ஒப்பற்றவனுகிய பிரம தேவனும் எருதினை ஊர்தியாகவுடைய சிவபெருமானும் சங்கினைக் கையிலே ஏந்திய அறவுருவினனுகிய திருமாலும் உள்ளங்கை நெல்லிக் கனிபோன்று எல்லாப் பொருள்களையும் (உள்ளவாறு) கண்டுணர வல்லராயினும் பெண்டிரது உள்ளத்தின் (உண்மை) நிலையினை (உள்ளவாறு) உணரும் வன்மையுடையரோ?

கு :— மங்கையர்களது மனத்தின் தூய்மை தூய்மையின்மையாகிய நிலைகளை உள்ளவாறு அறிதல் என்பது, படைத்தளித்தழிக்கும் கடவுளர் மூவர்க்கும் அரிய செயலாயிருக்க என் மனத்தின் கற்பு நிலையினை என்கணவர் உள்ளவாறு அறிந்து கொள்ளாமை வியப்பன்று என்பதாம். அகம்+கை=அங்கை என்ருயிற்று. அங்கை-உள்ளங்கை. உள்ளங்கையிலுள்ள நெல்லிக் கனியின் உள்ளும் புறம்பும் நன்கு புலனுதல் போன்று பொருள்கள் தெளிவாகப் புலப்பட்டுத் தோன்றுதற்கு உள்ளங்கை நெல்லிக் கனியை உவமையாகக் கூறுதல் உலகியலிற்கண்டது. (76)

10172. ஆதலிற் புறத்தினி யாருக் காகவென்
கோதறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன்
சாதலிற் சிறந்ததொன் றில்லை தக்கதே
வேதநின் பணியது விதியு மென்றனள்.

'ஆதலின், புறத்து இனி யாருக்காக என்
கோது அறுதவத்தினைக் கூறிக் காட்டுகேன்?
சாதலின் சிறந்தது ஒன்று இல்லை; தக்கதே,
வேத! நின்பணி; அதுவிதியும்' என்றனள்.

பொ :— ஆதலால் எனது குற்றமற்ற கற்பு நெறியினைப் புறத்தே இனி, யாருக்காகச் சொல்லிக் காட்டக் கடவேன்? (இந்நிலையில் யான்) இறந்தொழிதலைக் காட்டிலும் சிறந்த செயல் வேறொன்றில்லை. அதுவே (என்னாற்) செய்யத் தக்கது. வேதவுருவானவனே! நின் கட்டளையும் அதுவே. ஊழ்வினைப் பயனும் அவ்வாறே உள்ளது’ என்று கூறினாள்.

கு :— இன்னாததாகிய சாதலும் நினது அருள் இல்வழி எனக்கு இனிமையுடையதாயிற்று என்பாள், ‘சாதலிற் சிறந்த தொன்றில்லை’ என்றும், எனது இன்னுயிரைத் துறந்தாயினும் கற்பின் மாட்சியை நிலை நிறுத்துவது எனக்குக் கடமையாயிற்று என்பாள், ‘தக்கதே’ என்றும் கூறினாள். நின்பணி — நினது கட்டளை; என்றது ‘சாதியால்’ என இராமன் பணித்ததனை. வேதவுருவாகிய இறைவனது அமிசமாகிய இராமனை ‘வேத’ என அழைத்தாள். விதி — ஊழ்வினைப்பயன். (77)

*சீதை தனக்குத் தீ அமைக்குமாறு இலக்குவனை வேண்ட, அவன் இராமனைத் தொழுது குறிப்பினால் அவனது இசைவை உணர்தல்*

10173. இளையவன் றனையழைத் திடுதி தீயென
வளையொலி முன்கையாள் வாயிற் கூறினாள்
உளைவுறு மனத்தவ னுலகம் யாவுக்குங்
களைகணைத் தொழவவன் கண்ணிற் கூறினான்.

இளையவன் தனை அழைத்து, ‘இடுதி, தீ’ என,
வளைஒலி முன்கையாள் வாயின் கூறினாள்;
உளைவுறு மனத்தவன், உலகம் யாவுக்கும்
களைகணைத் தொழ, அவன் கண்ணின் கூறினான்.

பொ :— வளையல்கள் ஆரவாரிக்கும் முன் கையினையுடையளாகிய பிராட்டி, (இராமன்) தம்பியாகிய இலக்குவனை அழைத்து, (யான் தீக்குளித்து உயிர் துறத்தற்கெனத்) தீயினை அமைப்பாயாக என வாயினாற் கூறினாள். (அது கேட்டுக்) கலக்கமுறும் நெஞ்சினனாகிய இலக்குவன், உலகவுயிர்கள் எல்லாவற்றுக்கும் பற்றுக்கோடாகத் திகழும் இராமனை வணங்க, அவ்விராமன் தன் கண்ணோக்கத்தின் குறிப்பினால் (அவ்வாறே செய்க எனத் தனது இசைவினைக்) கூறினான்.

கு :-வளையொலி முன் கையாள், இளையவன்தனை அழைத்து 'இடுதி தீ' என வாயிற் கூறினாள் எனவும், உளைவுறு மனத்தவனாகிய இளையவன் உலகம் யாவுக்கும் களைகணைத்தொழ, அவன் கண்ணிற் கூறினான் எனவும் இரு தொடராக இயைத்துரைக்க. வளையொலி முன் கையாள் என்றது சீதையை. இளையவன், உளைவுறு மனத்தவன் என்றது இலக்குவனை. உலகம் யாவுக்கும் களைகண் என்றது, உலக உயிர்கட்கெல்லாம் புகலிடமாகிய இராமபிரானை. 'இடுதி தீ' என்ற பிராட்டியின் சொல்லைக் கேட்ட அளவில் உளைவுறு மனத்தவனாகிய இலக்குவன் அப்பணியைச் செய்தற்கு அஞ்சித் தன் தமையனாகிய இராமனைத் தொழ, இராமன் அவ்வாறே செய்க எனத் தன் கண்ணோக்கினால் குறிப்பாகக் கூறினான் என்பார், 'உளைவுறு மனத்தவன் உலகம் யாவுக்கும் களைகணைத்தொழ, அவன் கண்ணிற் கூறினான்' என்றார். வாயிற் கூறுதல் — சொல்லால் வெளிப்படக் கூறுதல். கண்ணிற் கூறுதல் — கண்ணோக்கத்தாற் குறிப்பாக அறிவுறுத்தல். (78)

*இலக்குவன் தீ அமைக்க, சீதை அதனருகே செல்லுதல்*

10174. ஏங்கிய பொருமலி னிழிக ணீரினன்
வாங்கிய உயிரின னனைய மைந்தனும்
ஆங்கெரி விதிமுறை யமைவித் தானதன்
பாங்குற நடந்தனள் பதுமப் போதினாள்.

ஏங்கிய பொருமலின் இழி கண்ணீரினன்,
வாங்கிய உயிரினன் அனைய மைந்தனும்,
ஆங்கு எரிவிதிமுறை அமைவித்தான்; அதன்
பாங்குற நடந்தனள், பதுமப் போதினாள்.

பொ :— (இராமனது கண்ணோக்கக் குறிப்பினை அறிந்த அளவில்) உயிர் நீங்கியவனையொத்து உணர்விழந்த வீரனாகிய இலக்குவனும், ஏங்கி விம்மி யழுதலாற் சொரியும் கண்ணீரை யுடையவனாய், அவ்விடத்தே முறைப்படி தீயினை வளர்த்தமைத்தான். செந்தாமரை மலரில் வாழும் திருமகளாகிய சீதை அத்தீயின் அருகே பொருந்தச் சென்றாள்.

கு :— பொருமல் — விம்முதல். உயிர் நீங்கிய வெற்றுடம்புடையவனையொத்து இலக்குவன் உணர் விழந்தான் என்பார்,

'வாங்கிய உயிரினன் அனைய மைந்தன்' என்றார். வாங்குதல்— கவர்தல். வாங்கிய உயிரினன் என்றது, 'இலாதவெண்கோவணத்தான்' என்ற தொடர் போன்றமைந்தது. 'தண்மையும் மென்மையும் வாய்ந்த செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் இயல்பினளாகிய பிராட்டி சேர்ந்தாரைக் கொல்லுந் தன்மையதாய்ப் பொங்கியெரியும் தீயினருகே சென்றாள்' என இரங்குவார், 'பாங்குற நடந்தனள் பதுமப்போதினாள்' என்றார். (79)

அப்பொழுது உலகில் எல்லாப் பகுதிகளும்
எல்லாவுயிர்களும் கலக்கமுற்று நடுங்குதல்

10175. தீயிடை யருகுறச் சென்று தேவர்க்கும்
தாய்தனிக் குறுகலுந் தரிக்கி லாமையால்
வாய்திறந் தரற்றின மறைக ணான்கொடும்
ஓய்வினல் லறமுமற் றுயிர்கள் யாவையும்.

தீயிடை, அருகுறச்
சென்று, தேவர்க்கும்
தாய் தனிக்குறுகலும்,
தரிக்கிலாமையால்,
வாய்திறந்து அரற்றின —
மறைகள் நான்கொடும்
ஓய்வு இல் நல் அறமும், மற்று
உயிர்கள் யாவையும்.

பொ:— (மண்ணுலகத்தவர்க்கேயன்றி) விண்ணோர்க்கும் தாயாய் விளங்கும் சீதை (இலக்குவன் வளர்த்த) தீயின் கண்ணே பக்கத்தே பொருந்தச் சென்று தனியளாய் அணுகிய அளவில், (அத்துன்பநிலையைக்) காணப்பொறுமையால் நான்கு வேதங்களுடனே இடையறவு இல்லாத நல்ல அறக்கடவுளும் ஏனைய உயிர்த்தொகுதிகள் யாவும் வாயைத் திறந்து கதறின.

கு:— மறைகள் நான்கு என்றது, அவற்றின் அதிதெய்வமாகிய வேதபுருடனை. அறம் — அறக்கடவுள். எவ்வுயிர்க்குந் தாயாகிய பிராட்டி இவ்வாறு தீயிற் பாய்ந்து தனது கற்பினைப் புலப்படுத்த நேர்ந்த இந்நிகழ்ச்சி, வேதமும் அறக்கடவுளும் அனைத்துயிர்களும் கண்டு பொறுக்கவொண்ணாத பெருந்

துயரினை விளைத்தது என்பதாம். தரிக்கிலாமை — பொறுக்க ஒண்ணுமை. (80)

10176. வலம்வரு மளவையின் மறுகி வான்முதல்
உலகமு முயிர்களு மோல மிட்டன
அலமர லுற்றன வலறி யையவிச்
சலமிது தக்கில தென்னச் சாற்றின.

வலம்வரும் அளவையின் மறுகி, வான்முதல்
உலகமும், உயிர்களும் ஓலமிட்டன;
அலமரல் உற்றன; அலறி, ஐய! இச்
சலம் இது தக்கிலது' என்னச் சாற்றின.

பொ :— (சீதை, தீயிற் புகுதலை விரும்பித்) தீயை வலம் வரும் நிலையில் வானுலக முதலிய எல்லாவுலகங்களும் (அவற்றில் வாழும்) உயிர்களும் தம் நிலை பெயர்ந்து சுழல்வனவாய்க் கலங்கி ஓலமிட்டுக் கதறின. (இராமனை நோக்கி) அரற்றி 'ஐயனே! (பிராட்டியின்மேல் கொண்ட) தணியாக்கோபமாகிய இது (நின்னருளுக்குத்) தகுவதன்று' என்று முறையிட்டன.

கு :— வான்முதல் உலகமும் உயிர்களும், அலமரலுற்றன மறுகி ஓலமிட்டன என இயைத்துப் பொருள் கொள்க. அலமரல் — சுழலுதல். உலகம் அலமரலுற்றன, உயிர்கள் மறுகி ஓலமிட்டன என நிரனிறையாகக் கொள்ளினும் அமையும். 'ஐய! இச்சலம் இது தக்கிலது' என்பது, உயிர்கள் இராமனை நோக்கிக் கூறிய முறையீடு. சலம் — கோபம். (81)

10177. இந்திரன் றேவியே முதல வேழையர்
அந்தர வானினின் றரற்று கின்றவர்
செந்தளிர்க் கைகளாற் சேய ரிப்பெருஞ்
சுந்தரக் கண்களை யெற்றித் துள்ளினர்.

இந்திரன் தேவியே முதல ஏழையர்,
அந்தர வானின் நின்று அரற்றுகின்றவர்,
செந்தளிர்க் கைகளால் சேயரிப் பெருஞ்
சுந்தரக் கண்களை எற்றித் துள்ளினர்.

பொ :— இந்திராணி முதலிய (தேவ) மாதர்கள், ஆகாய வெளியிலே நின்றுகொண்டு கதறுபவர்கள், (சீதை தீப்பாயும் துன்பநிலையைக் காணப்பொருது) சிவந்த தளிர்போலும் கைகளால் செவ்வரி படர்ந்த பெரிய அழகிய கண்களை மோதிக் கொண்டு பதைப்புற்றார்கள்.

கு :— இந்திரன்தேவி—இந்திராணி. அந்தரவான்—ஆகாய வெளியாகிய வானுலகம். சுந்தரம் — அழகு. எற்றுதல் — மோதிப் புடைத்தல். துள்ளுதல் — பதைத்தல் ; 'துள்ளுநர்க் காண்மார்' (4) எனவரும் கலித்தொகையில் இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். (82)

10178. நடுங்கினர் நான்முகன்
முதல நாயகர்
படங்குறைந் ததுபடி
சுமந்த பாம்புவாய்
விடம்பரந் துளதென
வெதும்பிற் றுலுல
கிடந்திரிந் தனசுடர்
கடல்க ளேங்கின.

நடுங்கினர், நான்முகன் முதல நாயகர் ;
படம் குறைந்தது, படிசுமந்த பாம்பு ; வாய்
விடம் பரந்துளது என, வெதும்பிற்றுல் உலகு ;
இடம் திரிந்தன சுடர் ; கடல்கள் ஏங்கின.

பொ :— நான்முகன் முதலாகவுள்ள தலைமைத் தேவர்கள் எல்லோரும் (உள்ளமும் உடம்பும்) நடுங்கினர்கள் ; பூமியைச் சுமந்துள்ள (ஆதிசேடன் என்னும்) பாம்பு படம் சுருங்கி ஒடுங்கியது. அப்பாம்பின் வாயிலுள்ள நஞ்சு எங்கும் பரவியது என்னும்படி உலகம் வெதும்பியது ; (ஞாயிறு திங்கள் முதலிய) கதிர்கள் (தத்தம்நிலையினின்றும்) இடம் பெயர்ந்தன ; கடல்கள் இரங்கியொலித்தன.

கு :— பிராட்டி தீயிற்புகும் நிலையிற் பூமியும் வானமும் கடலும் அடைந்த கலக்க நிலையைப் புலப்படுத்தியவாறு. (83)

'யான் குற்றமுடையேனுயின் தீச்செல்வா என்னைச் சுடுதி' என்று அக்கினியை நோக்கிக் கூறி, இராமனுக்கு வணக்கஞ் செலுத்தி. தீயிற் பாய்தல்

10179. கனத்தினுற் கடந்தபூண்
முலைய கைவளை
மனத்தினுல் வாக்கினுன்
மறுவுற் றேனெனிற்
சினத்தினுற் சுடுதியாற்
றீச்செல் வாவென்ருள்
புனத்துழாய்க் கணவற்கும்
வணக்கம் போக்கினுள்.

கனத்தினுல் கடந்த பூண்
முலைய கைவளை,
மனத்தினுல், வாக்கினுல்,
மறு உற்றேன் எனின்,
சினத்தினுல் சுடுதியால்,
'தீச்செல்வா!' என்ருள்;
புனத்துழாய்க் கணவற்கும்
வணக்கம் போக்கினுள்.

பொ:— நிறையினுல் மிக்குள்ள அணிகலன்களை யணிந்த கொங்கையிணையும் கை வளையல்களையும் உடையவளாகிய பிராட்டி (பொங்கியெரியும் தீயினைநோக்கி,) 'அங்கியஞ் செல்வனே! (யான்) மனத்தாலும் மொழியாலும் (இவற்றின் தொடர்புடைய உடம்பாலும்) குற்றமுடையேன் என்ருல் (என்னை நீ) வெகுளியாற் சுட்டெரிப்பாயாக' என்று கூறிய வளாய், புனத்திலே தோன்றிய திருத்துழாயிணையணிந்த (திருமாலின் அவதாரமாகிய இராமனுகிய) கணவனுக்கும் வணக்கத்தைச் செலுத்தினுள்.

கு:— கனம் — திண்மை; நிறையுடைமை. கடத்தல்—மிகுதல். கைவளை — கைக்கண் வளையலை யுடையாள்; ஏழாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. மனமொழி மெய் என்னும் முக்கரணங்களுள் மனம் வாக்கினைக்

கூறவே இனம் பற்றி மெய்யும் கொள்ளப்படும். மறு — குற்றம். 'யான் உண்மையாகவே மனமொழி மெய்களாற் குற்ற முடையேன் என்பது உண்மையானல், சேர்ந்தாரைக் கொல்லு மியல்புடைய நீ நின்னியல்பினும் மிக்கு என்னை வெகுண்டு எரிப் பாயாக' என்பாள், 'சினத்தினற் சுடுதியால் தீச் செல்வா' என்ருள். தீயிற் பாய்ந்து உயிர்துறக்கும் நிலையிலும் தன் ஆருயிர்க் கணவனையே தெய்வமாக வழிபடும் தன்னியல்பில் வழுவாது நின்ருள் என்பார், 'புனத்துழாய்க் கணவற்கும் வணக்கம் போக்கினுள்' என்ருர். போக்குதல் — செலுத்துதல்; நிறைவேற்றுதல். (84)

சீதையின் கற்புத் தீயினுல், அக்கினி வெந்து தீய்தல்

10180. நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை
ஏய்ந்ததன் கோயிலே யெய்து வாளெனப்
பாய்ந்தனள் பாய்தலும் பாலின் பஞ்செனத்
தீய்ந்ததவ் வெரியவள் கற்பின் றீயினுல்.

நீந்த அரும் புனலிடை நிவந்த தாமரை
ஏய்ந்த தன் கோயிலே எய்துவாள் எனப்
பாய்ந்தனள்; பாய்தலும், பாலின் பஞ்சு எனத்
தீய்ந்தது அவ்எரி, அவள் கற்பின் தீயினுல்.

பொ :— நீந்துதற்கு அரிய (ஆழமான) நீர்நிலையிலே வளர்ந்து ஓங்கிய செந்தாமரை மலராகிய பொருந்திய தனது கோயிலினையே சென்று சேர்பவளைப் போன்று (அத்தீயி னிடத்தே பிராட்டி) விரைந்து பாய்ந்தாள். அங்ஙனம் பாய்ந்த அளவிலே அத்தீயானது, அச் சீதையின் கற்புத்தீயினுல் வெண் ணிறம் வாய்ந்த பஞ்சினையொத்து எரிந்து அழிந்தது.

கு :— நிவத்தல்—உயர்தல். சீதை செந்தாமரை மலரில் வாழும் திருமகளின் அமிசமாதலின், 'தாமரை யேய்ந்த தன் கோயிலே எய்துவாள்' என்ருர். என, உவமவுருபு. சுடர் விட் டெரியும் தீயினிடையே சீதை பாய்ந்தது, குளிர்ந்த நீரிலே வளர்ந்தோங்கிய செந்தாமரை மலராகிய தன்கோயிலைத் திரு மகள் எய்தியதை யொத்துத் தோன்றியது என்பதாம். பூதப் பாண்டியன்தேவி பெருங்கோப் பெண்டு தீப்பாய்பவள், 'அரும் பற, வள்ளிதழவிழ்ந்த தாமரை நள்ளிரும் பொய்கையும் தீயுமோ

ரற்றே' (புறம்-246) எனக் கூறியது இங்கு ஒப்புநோக்கத் தகுவ தாகும். அவ் எரி, அவள் கற்பின் தீயினுல் பாலின் பஞ்செனத் தீய்ந்தது என்க. தீய்தல்—எரிந்து அழிதல். தீயினையும் சுட் டழிக்கும் வன்மையுடையது கற்பின் தீ என்பதாம். (85)

*தீக்கடவுள் சீதையைக் கையில்ஏந்தி, இராமனைநோக்கி அரற்றி எழுதலும், சீதை தீயினுற்சிறிதும் வாட்டமுருது விளங்குதலும்*

10181. அழுந்தின நங்கையை
யங்கை யாற்சுமந்
தெழுந்தன னங்கிவெந்
தெரியு மேனியான்
தொழுந்துணைக் கரத்தினன்
சுருதி ஞானத்தின்
கொழுந்தினைப் பூசலிட்
டரற்றுங் கொள்கையான்.

அழுந்தின நங்கையை
அங்கையால் சுமந்து
எழுந்தனன் — அங்கி, வெந்து
எரியும் மேனியான்,
தொழும் துணைக் கரத்தினன்,
சுருதி ஞானத்தின்
கொழுந்தினைப் பூசலிட்டு
அரற்றும் கொள்கையான்.

பொ :— (பிராட்டியின் கற்புத் தீயினது வெம்மையினுல்) வெந்து அழலும் மேனியை யுடையனுகிய அங்கியங்கடவுள் (தீக்குண்டத்தினுள்ளே விழுந்து) அழுந்தின சீதையைத் தனது அழகிய கைகளாற் சுமந்து கொண்டு (தீக்குண்டத்தினுள் ளிருந்து) எழுந்தான்; வேதங்களால் உணர்த்தப்பெறும் தத்துவ ஞானக்கொழுந்தாகிய இராமபிரானை வணங்கும் இரு கைகளை யுடையனுய் (அபயம் வேண்டிக்) கதறி அரற்றும் தன்மைய னுயினுன்.

கு :— வெந்து எரியும் மேனியான் அங்கி, அழுந்தின நங்கையை அங்கையாற் சுமந்து எழுந்தனன் என்க. சுருதி ஞானத்தின் கொழுந்து என்றது, வேதங்களால் உணர்த்தப் படும் தத்துவ ஞானத்தின் முடி பொருளாகிய இராமபிரானை. (86)

இச்செய்யுளின் பின் 18, 19, 21, 23, 25, 29, 40, 41, 43, 45, 52, 54, 60—63, 71, 74-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10181 (a) அஞ்சின னஞ்சினன் ஐய வஞ்சினன்
பஞ்சிவர் மெல்லடி பதுமத் தாடன்மேல்
விஞ்சிய கோபத்தால் விளையு மீதெலாம்
தஞ்சமோ மறைமுதற் றலைவ வீதென்றான்.

10182. ஊடின சீற்றத்தா லுதித்த வேர்களும்
வாடின வில்லையா லுணர்த்து மாறுண்டோ
பாடிய வண்டொடும் பனித்த தேனொடும்
சூடின மலர்கணீர் தோய்ந்த போன்றவால்.

ஊடின சீற்றத்தால் உதித்த வேர்களும்
வாடின இல்லையால்; உணர்த்துமாறு உண்டோ?
பாடிய வண்டொடும் பனித்த தேனொடும்
சூடின மலர்கள் நீர் தோய்ந்த போன்றவால்.

பொ :— (இராமபிரான்) பிணங்கிக் கூறிய வெகுளிச் சொற்களால் (சீதையின் மேனியில்) உண்டாகிய வேர்வைத் துளிகளும் (தீயினால்) உலர்ந்தனவில்லை. (அவளது கற்பின் சிறப்புக்குறித்து) உணர்த்துமாறு வேறுளதோ? (அவள் கூந்தலிற்) சூடின மலர்கள் (தம்மிடத்தே மொய்த்து) இசை முரலும் வண்டுகளோடும் துளிக்கின்ற தேனோடும் நீரிற்படிந்து எழுந்தன போல் (தீயின்வெம்மை சிறிதும் அணுகாது) குளிர்ந்து காணப் பட்டன.

கு :— கற்பின் செல்வியாகிய சீதையை நோக்கி இராமன் வெகுண்டு கூறிய சொற்கள் அவளது கற்பின் சிறப்பினை உலகத்தார் உள்ளவாறு அறிதல் வேண்டும் என்னும் கருத்துடன் அன்பினாற் கூறியனவே என்பார் 'ஊடின சீற்றத்தால்' என்றார்.

ஊடுதல் — கணவனும் மனைவியுமாகிய இருவர் அன்புகாரண மாகத் தம்முட் பிணங்குதல். சீதை தீயிற் பாய்ந்து எழுந்த போது முன்பு இராமனது வெகுட்சி மொழிகளைக் கேட்டு உளம் புழுங்கிய நிலையில் அவள் மேனியில் தோன்றிய வியர்வைத் துளிகள்கூட உலரவில்லை. அவள் கூந்தலில் அணியப் பெற்றிருந்த மலர்களில் மொய்த்து முரலும் வண்டுகளும் மலரிலுள்ள தேன் துளிகளும் தீயின் வெம்மை சிறிதும் தீண்டப்பெருது குளிர்ந்த நீரிற்படிந்து எழுந்தவை போன்று குளிர்ச்சியுடையன வாய் விளங்கின எனப் பிராட்டியின் கற்பு மாண்பினை ஆசிரியர் புலப்படுத்திய திறம் அறிந்து மகிழத்தகுவதாகும். (87)

அப்பொழுது உலகம் தடுமாற்றம் ஒழிய, யாவரும் மகிழ்தல்

10183. திரிந்தன வுலகமுஞ் செவ்வை நின்றன
பரிந்தவ ருயிரெலாம் பயந்த விர்ந்தன
அருந்ததி முதலிய மகளி ராடுதல்
புரிந்தனர் நாணமும் பொறையு நீங்கினர்.

திரிந்தன உலகமும் செவ்வை நின்றன ;
பரிந்தவர் உயிர் எலாம் பயம் தவிர்ந்தன ;
அருந்ததி முதலிய மகளிர் ஆடுதல்
புரிந்தனர், நாணமும் பொறையும் நீங்கினர்.

பொ :— (சீதை தீப்பாய்தலால் முன்பு) நிலைகுலைந்தன வாகிய உலகங்களும் (அவள் இனிது வெளிப்பட்டபொழுது பிறழ்ச்சி நீங்கித் தத்தம் நிலைகளிற்) செவ்வையுற நின்றன; (பிராட்டியின் துயருக்கு ஆற்ருது) இரங்கியவர்களுடைய உயிர் களெல்லாம் அச்சம் நீங்கின; அருந்ததி முதலிய கற்புடைய நங்கையர், (தம்மனத்திற் கொண்ட துன்பச்) சுமையும் நாணமும் நீங்கியவர்களாய் (மகிழ்ச்சி மீதூர) ஆனந்தக் கூத் தாடினர்கள்.

கு :— திரிதல் — நிலைகுலைந்து சுழலுதல். செவ்வை நிற்றல் — தத்தமக்குரிய நிலைகளிற் பிறழாது நிலைபெறுதல். அருந்ததி முதலிய மகளிர், நாணமும் பொறையும் நீங்கினர் ஆடுதல் புரிந்தனர் என இயையும். கற்பினுக்கணியாகிய சீதை தன் கற்பின் திறத்தினை உலகத்தார் உணரச் செய்து விளங்கினமை

கண்டு தீதிலா வடமீனாகிய அருந்ததி முதலிய கற்புடை மாதர்கள் துயர் தவிர்ந்து ஆனந்தக் கூத்தாடினர் என்பதாம். பொறை — சுமை ; என்றது, கற்பின் செல்வியாகிய சீதைக்குத் தன் ஆருயிர் நாயகனால் இகழ்ந்தொதுக்கப்படும் துயர்நிலை கண்டு தம் உள்ளத்திற் கொண்ட துன்பச் சுமையினை. (88)

இச்செய்யுளின் பின் 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10183 (a) கற்பெனுங் கனல்சுடக் கலங்கிப் பாவகன்
சொற்பொலி துதியினன் தொழுத கையினன்
விற்பொலி கரத்தொரு வேத நாயகா
அற்புத னேயுனக் கபயம்யா னென்றான்.

*அங்கியங் கடவுள் இராமனை நோக்கி முறையிடுதல்*

10184. கனிந்துயர் கற்பெனுங் கடவுட் டீயினால்
நினைந்திலை யென்வலி நீக்கி னாயெனா
அநிந்தனை யங்கிநீ யயர்வி லென்னையும்
முனிந்தனை யாமென முறையிட் டானரோ.

'கனிந்து உயர் கற்பு எனும் கடவுள்—தீயினால்,
நினைந்திலை, என் வலி நீக்கினாய்' எனா,
அநிந்தனை அங்கி, 'நீ அயர்வு இல் என்னையும்
முனிந்தனையாம்' என முறையிட்டான் அரோ.

பொ :— 'நீ (என் எளிமைத் தன்மையைத்) திருவுளத்திற் கொள்ளாயாய் (நின் மனைவியாகிய சீதையின்) முதிர்ந்து ஓங்கிய கற்பென்னும் தெய்வத்தன்மை வாய்ந்த தீயினால் எனது வன்மையை ஒழித்தனை' என்று சொல்லிப் பழிப்பில்லாத தீக்கடவுள் 'நின்பக்கல் மறந்தும் பிழை புரிதல் இல்லாத என்னையும் வெகுண்டனைபோலும்' என (இராமனை நோக்கி) முறையிட்டான்.

கு :— கனிதல் — தழல் மிகுதல். ('என்வலி) நினைந்திலை கனிந்து உயர்கற்பெனும் கடவுள் தீயினால் என்வலி நீக்கினாய்' எனா, அநிந்தனை அங்கி 'அயர்வு இல் என்னையும் முனிந்தனையாம்' என (இராமனை நோக்கி) முறையிட்டான் என்க. அநிந்தனை — நிந்திக்கப்படாமை; அங்கிக்கு அடைமொழி. இனி,

அமலன் என்றாற் போன்று அநிந்தன் என்பதனை இராமனைக் குறித்த பெயராகக்கொண்டு, அங்கி அநிந்தனை முறையிட்டான் என இயைத்துரைப்பினும் அமையும். அநிந்தன் — நிந்தையற்றவன் ; பழியிலான். ஒரு குற்றமும் அறியாத பிராட்டியை வெகுண்டுரைத்து அவளைத் தீயில் விழும்படி செய்தமை பற்றி இராமன் பழியுடையானாயினன் என்று கருதுவார்க்கு, அவன் கொண்ட வெகுளி உலகத்தார் பிராட்டியின் கற்பு நலனைத் தெளிந்துணரும்பொருட்டுத் தோன்றியதேயன்றி அவள்மேல் அன்பின்மையால் தோன்றியதன்று எனக் குறிப்பினால் அறிவுறுத்தும் முறையில் இராமனை 'அநிந்தன்' என்ற பெயரால் குறித்தமை மிகவும் பொருத்த முடையதாகும். (89)

இராமன் 'நீ யார்?' என வினாதல்

10185. இன்னதோர் காலையி லிராமன் யாரைநீ
என்னைநீ யியம்பிய தெரியுட் டோன்றியிப்
புன்மைசா லொருத்தியைச் சுடாது போற்றினாய்
அன்னதார் சொல்லவீ தறைதி யாலென்றான்.

'இன்னது ஓர் காலையில்,
இராமன், 'யாரை நீ?
என்னை நீ இயம்பியது?
எரியுள் தோன்றி, இப்
புன்மைசால் ஒருத்தியைச்
சுடாது போற்றினாய்,
அன்னது ஆர் சொல்ல? ஈது
அறைதியால்' என்றான்.

பொ :— இத்தன்மையதாகிய சமயத்தில் இராமபிரான் (அக்கினி தேவனைநோக்கி) 'நீ யார்? நீ கூறியது என்ன? நெருப்பினுள்ளேயிருந்தும் தோன்றிக் கீழ்மைத் தன்மையுடைய இவ்வொருத்தியைத் தீச்சுடாதபடி காப்பாற்றினாய். இவ்வாறு நீ செய்தது, யார் சொல்லக் கேட்டு? இதற்கு மறுமொழி பகர்வாயாக' என்று கூறினான்.

கு :— இன்னது ஓர்காலை என்றது, இவ்வாறு அக்கினி தேவன் தீப்பாய்ந்த சீதையின் கற்புத் தீயினால் வெதும்பி,

அவளைத் தன் கைகளால் தாங்கி வெளிப்பட்டுத் தன் துயர் நிலையை இராமனுக்கு எடுத்துரைத்து முறையிட்ட பொழுதினை. அன்னது என்றது, தீப்பாய்ந்த சீதையைத் தீயினுள்ளே அழுந் தாதபடி எடுத்துக் காத்த செயலை. 'நீ அவ்வாறு செய்தது யார் சொல்லைக் கேட்டு?' என வினவுவான் 'அன்னது ஆர் சொல' என்றான்: குற்றமற்ற சீதையைப் 'புன்மைசால் ஒருத்தி' என இராமன் இகழ்ந்தது, இறைவனாகிய தன்னிலையிற் கூறிய மெய்ம்மொழியாகாமல் தான் மேற்கொண்டுள்ள மையல் மானுட இயல்பு பற்றிய பொய்ம்மொழியாகும். (90)

அக்கினிதேவன் மறுமொழி

10186. அங்கியா னென்னையிவ்
வன்னை கற்பெனும்
பொங்குவெந் தீச்சுடப்
பொறுக்கி லாமையால்
இங்கணைந் தேனுறு
மியற்கை நோக்கியும்
சங்கியா நிற்றியோ
வெவர்க்குஞ் சான்றுளாய்.

'அங்கி,யான்; என்னை இவ்
அன்னை கற்பு எனும்
பொங்கு வெந்தீச் சுடப்
பொறுக்கிலாமையால்,
இங்கு அணைந்தேன்; உறும்
இயற்கை நோக்கியும்,
சங்கியா நிற்றியோ,
எவர்க்கும் சான்றுளாய்?

பொ:— 'யான் அக்கினிதேவன். என்னை அன்னையாகிய இப்பிராட்டியின் கற்பாகிய பொங்கியெழும் வெவ்விய தீயானது சுட்டெரிக்க (அதனை)ப் பொறுக்க இயலாமையால் இங்கு நின்னை (ப் புகலாக) அடைந்தேன். எல்லோருடைய செயல் களுக்கும் சாட்சியாக உள்ள இறைவனே! இங்கு (நின்னைச் சரணாக) அடைந்த எனது தன்மையினை நேரிற் கண்டும் (இவ் வன்னையின் கற்பொழுக்கத்தினை) ஐயுற்று நிற்கக் கடவாயோ?

கு :— இது முதல் ஐந்து செய்யுட்கள் தன்னை, யார்? என்று வினவிய இராமனை நோக்கி அக்கினிதேவன் கூறும் மறுமொழி களாக அமைந்தன. உலகத்தார் யாவரும் செய்யுஞ் செயல் களுக்கெல்லாம் சாட்சியாக விளங்கும் இறைவனுகிய நீ இவ் வன்னையின் மாசற்ற கற்பின் திறத்தையும் நன்குணரவல்லனு யிருக்க, இவ்வாறு ஐயுற்று நிற்றல் நின் இறைமைத் தன் மைக்குத் தக்கதன்று என இராமனை நோக்கிக் கூறியவாறு. சங்கியா நிற்றல் — ஐயுற்று நிற்றல். 'எவர்க்கும் சான்றுளாய்' எனவரும் இத்தொடரும் 'எவ்வுயிர்க்குஞ் சான்றும் ஒருவனே' எனவரும் பெரியபுராணத் தொடரும் சொற்பொருள் நலங்களால் ஒத்துள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாம். (91)

10187. வேட்பது மங்கையர்
விலங்கி னுரெனின்
கேட்பதும் பல்பொருட்
கையங் கேடற
மீட்பது மென்வயி
னென்னு மெய்ப்பொருள்
வாட்பெருந் தோளினுய்
மறைகள் சொல்லுமால்.

'வேட்பதும், மங்கையர்
விலங்கினர் எனின்
கேட்பதும், பல்பொருட்கு
ஐயம் கேடு அற
மீட்பதும், என்வயின்'
என்னும் மெய்ப்பொருள்—
வாள்-பெருந் தோளினுய்!—
மறைகள் சொல்லுமால்.

பொ :— ஒளிமிக்க பெரிய தோள்களையுடையவனே! குல மகளிரை மணந்துகொள்வதும் (அம்மகளிர்) மனையறத்தினின்றும் விலகினாராயின் (அவர்களது மனவுறுதியைச் சோதித்துத் துணி யும் நிலையில்) உறுதிமொழியைக் கேட்பதும், பல பொருள்களி லுண்டான சந்தேகங்களைப் பிழையில்லாதபடி போக்கிக் கொள் வதும் ஆகிய இவையாவும் (அக்கினியாகிய) என்னை இடமாகக்

கொண்டு நிகழ்வன என்னும் மெய்ம்மைச் செய்தியினை மறை நூல்கள் கூறுகின்றன.

கு :—ஒருவனும் ஒருத்தியும் உலகறியத் திருமணஞ் செய்து கொள்ளுதற்கும், கணவனை விட்டு நீங்கிய மகளிரது கற்பின் தூய்மையைப் புலப்படுத்தற்கும், பல பொருள்கள்பற்றிச் சந்தேகங்கள் தோன்றிய நிலையில் இதுதான் உண்மைப் பொருள் எனத் துணிதற்கும் தீயையே சான்றாகக் கொள்ளும் உலக வழக்கினை மறைநூல்களும் உடன்பட்டுரைக்கின்றன என்றவாறு. பல பொருள்களில் உண்டான ஐயங்களைப்போக்கி உண்மைப் பொருள் இதுவெனத் தெளிதற்குத் தீயைச் சான்றாகக் கொள்ளுதல் உண்டென்பது, மதுரையிற் பாண்டியன் அவையிற் சமணரொடு ஆளுடைய பிள்ளையார் நிகழ்த்திய அனல்வாத நிகழ்ச்சியால் இனிது புலனாகும். (92)

10188. ஐயுறு பொருள்களை யாசின் மாசொரீஇக்
கையுறு நெல்லியங் கனியிற் காட்டுமென்
மெய்யுறு கட்டுரை கேட்டு மீட்டியோ
பொய்யறு மாருதி யுரையும் போற்றலாய்.

'ஐயுறு பொருள்களை ஆசு இல் மாசு ஒரீஇக்
கைஉறு நெல்லிஅம் கனியின் காட்டும் என்
மெய் உறு கட்டுரை கேட்டும், மீட்டியோ?—
பொய் அறு மாருதி உரையும் போற்றலாய்!

பொ :—பொய்ம்மையற்ற அனுமனது மொழியை (மெய்யென)க் கொண்டு (பிராட்டியைப் ஏற்றுப்) போற்றாத நீ, ஐயுறப்பட்ட பொருள்களை நுண்ணிதாக மாசு நீக்கி (அகங்) கையிற் பொருந்திய நெல்லிக்கனிபோன்று விளங்கக் காட்டுந்தன்மையதாகிய எனது மெய்ம்மைவாய்ந்த பொருளுரையைக் கேட்டாயினும் (பிராட்டியைத்) திரும்ப அழைத்துக்கொள்வாயோ?

கு :—உலகத்தார் ஐயுற்ற பொருள்களை ஐயமகற்றி விளங்கக் காட்டுதல் அக்கினிதேவனாகிய எனது இயல்பாதலின் சீதையின் கற்பின்திறன் குறித்து யான் கூறியவை மெய்ம்மொழிகளே என்பான், 'ஐயுறு பொருள்களை ஆசின் மாசுஒரீஇக், கையுறு நெல்லியங்கனியிற் காட்டும் என் மெய்யுறு கட்டுரை' என்றான். ஐயுறு பொருள்கள்—சந்தேகிக்கப்பட்ட பொருள்கள். ஆசு—நுண்மை.

மாசு—ஐயம் திரிபு என்னும் குற்றங்கள். ஓரீஇ—நீக்கி. கையுறு நெல்லியங்கனி — உள்ளங்கை நெல்லிக்கனி. மீட்டல் — திரும்ப அழைத்துக் கொள்ளுதல். பொய்ம்மைமொழி புகன்றறியா மெய்ம்மை யொழுக்கினன் அனுமன் ஆதலின், 'பொய்யறு மாருதி' எனச் சிறப்பித்தான். (93)

10189. தேவரு முனிவருந்
திரிவ நிற்பவும்
மூவகை யுலகமுங்
கண்கண் மோதிநின்
ருவெனல் கேட்கிலே
யறத்தை நீக்கிவே
றேவமென் றொருபொருள்
யாண்டுக் கொண்டியோ.

'தேவரும் முனிவரும்,
திரிவ நிற்பவும்,
மூவகை உலகமும்,
கண்கள் மோதிநின்று,
"ஆ!" எனல் கேட்கிலை;
அறத்தை நீக்கி, வேறு
ஏவம் என்று ஒருபொருள்
யாண்டுக் கொண்டியோ?

பொ :— அமரர்களும் முனிவர்களும் இயங்குவன நிற்பன ஆகிய எல்லாவுயிர்களும் (மேல் கீழ் நடு என்னும்) மூவகையுலகங்களில் உள்ள உயிர்களும் (சீதை தீப்பாய்தலைக்கண்டு உள்ளம் பொருது) தத்தம் கண்களை (க் கையாற்) புடைத்து மோதி நின்று 'ஆ' என்று கதறியழுவதனை (ச் செவிகொடுத்து)க் கேட்கின்றாயல்லை. நீ (இவ்வாறு) அறத்தைக் கைவிட்டு அதற்கு மாறாகப் பாவமாகிய ஒருபொருளை எங்கிருந்து கைக் கொண்டனையோ?

கு :—திரிவ — இயங்கியற் பொருள்கள். நிற்ப—நிலையியற் பொருள்கள். இவற்றை முறையே சரம் அசரம் என வழங்குவர் வட நூலார். ஆ எனல் — ஐயோ என்று கதறி அழுதல். 'ஆ'

என்பது, இரக்கக் குறிப்பு. அறமேயுருவாகிய நீ இங்ஙனம் நின் மனைவியாகிய சீதையின்பால் அருளின்றி அறத்திற்கு மாறாக நடக்கும் பாவச் செயலை எங்கிருந்து கைக்கொண்டனையோ? என்பான், 'அறத்தை நீக்கி வேறு ஏவம் என்று ஒருபொருள் யாண்டுக் கொண்டியோ?' என்றான். ஏவம் — பாவம். (94)

10190. பெய்யுமே மழைபுவி பிளப்ப தன்றியே
செய்யுமே பொறையற நெறியிற் செல்லுமே
உய்யுமே யுலகிவ ளுணர்வு சீறினால்
வையுமேன் மலர்மிசை யயனு மாயுமே.

'பெய்யுமே மழை? புவி
பிளப்பது அன்றியே
செய்யுமே, பொறை? அறம்
நெறியில் செல்லுமே?
உய்யுமே உலகு, இவள்
உணர்வு சீறினால்?
வையுமேல், மலர் மிசை
அயனும் மாயுமே.'

பொ:— (கற்புடைய நங்கையாகிய) இப்பிராட்டி உணர்வு கலங்கிச் சீற்றங்கொள்வாளாயின் மேகம் மழை பொழியுமோ? பூமி பிளந்து சிதைவதன்றி (த் தன்மேலுள்ள எல்லாப் பாரங்களையும்) பொறுத்தலைச் செய்யுமோ? அறமும் செவ்விய நெறியில் நடக்குமோ? உலகம் (அழியாது) நிலைத்திருக்குமோ? (இவள் வெகுண்டு) சபிப்பாளாயின் தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் (படைப்புக் கடவுளாகிய) பிரமனும் இறந்தொழிவான்.

கு:— இவள் உணர்வு சீறினால், மழை பெய்யுமே? புவி பிளப்பதன்றி பொறை செய்யுமே? அறம் நெறியிற் செல்லுமே? உலகு உய்யுமே? என இயைத்துரைக்க. வினா ஏகாரங்கள் நான்கும் எதிர்மறைப் பொருளைத் தந்தன. கற்புடைப்பெண்ணாகிய இச் சீதை வெகுண்டால் உலகில் மேகம் மழையைப் பெய்யாது; பூமி பாரந் தாங்காது பிளந்து சிதையும்; அறம் செந்நெறியில் நடவாது; உலகம் அழியும் என்பதாம். இவள் வையுமேல் மலர்மிசை அயனும் மாயும் என்க. வைதல்—கெட்டொழிக

எனச் சபித்தல். மாய்தல் — இறத்தல். அயனும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. (95)

இச்செய்யுளின் பின் 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10190 (a) இன்னுமென் ஐயகேள் இசைப்பென் மெய்யுனக்
கன்னவை மனக்கொளக் கருது மாகையால்
முன்னேவா னவர்துயர் முடிக்கு றும்பொருட்
டன்னேயென் னகத்தினுள் அருவ மாயினுள்.

10190 (b) யான்புரி மாயையின் சனகி யென்றுணர்ந்
தான்கவர் அரக்கனம் மாயை யென்சுடர்க்
கான்புகக் கரந்ததிக் கமல நாயகி
தான்புரி தவத்துனேத் தழுவ வுற்றுளாள்.

பிராட்டியை இராமன் அருகில் அக்கினிதேவன் கொண்டுவர இராமன் அவளை ஏற்றுக்கொள்ளுதல்

10191. பாடுறு பன்மொழி யிணைய பன்னிநின்
ருடுறு தேவரோ டுலக மார்த்தெழச்
சூடுறு மேனிய வலரி தோகையை
மாடுறக் கொணர்ந்தனன் வள்ளல் கூறுவான்.

பாடுஉறு பல்மொழி
இணைய பன்னி நின்று
ஆடுறு தேவரோடு
உலகம் ஆர்த்து எழ,
சூடு உறும் மேனிஅ(வ்)
அலரி, தோகையை
மாடு உறக் கொணர்ந்தனன் ;
வள்ளல் கூறுவான்.

பொ:-(சீதையின் கற்புத்தீயினுல்) வெதும்புதலுற்ற மேனியை யுடையனுகிய அந்த அக்கினி, (சீதையைக் குறித்து) இத்தகைய பெருமை பொருந்திய பல மொழிகளைப் பலமுறை சொல்லி நின்று (உலகின் தாயாகிய சீதை தீயினுல் துன்பின்றி வெளிப்பட்டாள் என்னும் மகிழ்ச்சியினுல்) கூத்தாடும் தேவர்களோடு

(ஏனைய) உலகத்துயிர்களும் ஆரவாரித்துக் களிப்புடன் தோன்ற மயில்போலும் சாயலையுடைய சீதையை (இராமனது) அருகே கொண்டு வந்து சேர்த்தனன். (அதுகண்டு) அருள்வள்ளலாகிய இராமன் (அக்கினிதேவனை நோக்கிப்) பின்வருமாறு கூறுவானாயினன்.

கு:—சூடுறு மேனிய அலரி, இனைய பாடுறு பன்மொழி பன்னி நின்று, ஆடுறு தேவரோடு உலகம் ஆர்த்து எழ, தோகையை (வள்ளல்) மாடுறக் கொணர்ந்தனன் என இயையும். சூடு உறும் மேனிய — தீயினால் வெதும்புதல் உற்ற உடம்பினையுடைய. அலரி — அக்கினி. அலரி என்பது விரிந்த கதிர்களையுடைய சூரியனையும் விரிந்த சுடர்களையுடைய அக்கினியையும் குறித்து வழங்கும் காரணப்பெயர். பாடு — பெருமை. பன்னுதல் — பல முறை கூறுதல். தோகை — மயில்; என்றது, மயில்போலும் சாயலையுடைய சீதையை. மாடு — பக்கம். (96)

10192. அழிப்பில சான்றுநீ யுலகுக் காதலால்
இழிப்பில சொல்லிநீ யிவளை யாதுமோர்
பழிப்பில ளென்றனை பழியு மின்றினிக்
கழிப்பில ளென்றனன் கருணை யுள்ளத்தான்.

'அழிப்பு இல சான்றுநீ,
உலகுக்கு; ஆதலால்,
இழிப்பு இல சொல்லி,நீ
இவளை, ''யாதும் ஓர்
பழிப்பு இலள்'' என்றனை;
பழியும் இன்று; இனிக்
கழிப்பிலள்' என்றனன்—
கருணை உள்ளத்தான்.

பொ:—(அக்கினி தேவனாகிய) நீ உலக உயிர்கட்கெல்லாம் அழிக்கவொண்ணாத சாட்சியாதலால், இகழ்ந்து ஒதுக்குதல் இல்லாத மெய்ம்மொழிகளைச் சொல்லி (ச்சீதையாகிய) இவளை யாதொரு குற்றமும் இல்லாதவள் என்று உறுதி கூறினாய். (ஆதலால் இனி இவளிடத்தில்) யாதொரு பழியும் இல்லை. இனி, (இவள் என்னால்) நீக்கத்தக்கவள் அல்லள் என்று கூறியருளினான்,

(யாவனெனின்) கருணை நிறைந்த திருவுள்ளத்தை யுடைய வனான இராமபிரான்.

கு :— ' நீ உலகுக்கு அழிப்பில சான்று ஆதலால், இழிப்பில சொல்லி, இவளை ' யாதும் ஓர் பழிப்பு இலள் ' என்றனை ; (ஆதலால் இவளிடத்தில்) பழியும் இன்று ; இனி (என்னுற்) கழிப்பிலள்' எனக் கருணையுள்ளத்தானாகிய இராமபிரான் அக்கினி தேவனை நோக்கிக் கூறிச் சீதையைக் குற்றமற்றவள் என ஏற்றருளினான் என்பதாம். (97)

இச் செய்யுளின் பின் 52-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10192 (a) ஐயன் அம் மொழியினை அருளும் வேலையில்
மையறு மன்னுயிர்த் தொகைகள் வாய்திறந்து
ஒய்யென ஒலித்ததால் உவகை மீக்கொளத்
துய்ய வானவர் துதித் தினைய சொல்லுவார்.

இச் செய்யுளின் பின் 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10192 (b) மிகுத்த மூன்றரைக் கோடியில்
மெய்யரைக் கோடி
உகத்தின் எல்லையும் இராவணன்
ஏவல்செய் துளஎம்
அகத்தின் நோய்அறுத் தருந்துயர்
களைந்தெமக் கழியாச்
சுகத்தை நல்கிய சுருதிநா
யகவெனத் தொழுதார்.

தேவர்கள் வேண்டியவண்ணம் பிரமதேவன் இராமனது உண்மைநிலையை அவனுக்கு உணர்த்துதல்

10193. உணர்த்து வாயுண்மை யொழிவின்று
காலம்வந் துளதால்
புணர்த்து மாயையிற் பொதுவுற
நின்றவை புணரா

இணர்த்து ழாய்த்தொங்க லிராமற்கென்
றிமையவ ரிசைப்பத்
தணப்பி ருமரைச் சதுமுக
னுரைசெயச் சமைந்தான்.

‘உணர்த்துவாய் உண்மை ஒழிவுஇன்று,
காலம் வந்துளதால்,
புணர்த்தும் மாயையில் பொதுவுற
நின்று, அவை புணரா
இணர்த் துழாய்த் தொங்கல் இராமற்கு’ என்று
இமையவர் இசைப்ப,
தணப்புஇல் தாமரைச் சதுமுகன்
உரைசெயச் சமைந்தான்.

பொ :–(‘தானே தனது சங்கற்பத்தால்) உண்டாக்கிய மாயையிலே (ஏனை யுயிர்களோடு ஒப்பப்) பொதுமையுறப் பொருந்தி நின்று (மாயைத் தொடக்கு ஆகிய) அவற்ருல் தொடக்குருத கொத்தாகப் பொருந்திய திருத்துழாய் மாலையையுடைய (திருமாலாகிய) இராமபிரானுக்கு (அவனது) உண்மைநிலையை ஒன்றும் விடாது உணர்த்துவாயாக. அதற்குரிய காலம் (இப்பொழுது) வந்துளது’ என்று தேவர்கள் கூற, (அம்முதல்வனை விட்டு) நீங்குதல் இல்லாத உந்தித் தாமரையிலே தோன்றிய நான்முகன் (இராமபிரானுக்கு அவனது உண்மைநிலையைச்) சொல்லத் தொடங்கினுன்.

கு :— பரம்பொருளாகிய திருமால் தனது வியக்கத்தக்க பேராற்றலாகிய மாயையிலே ஏனைய சீவான்மாக்களைப் போன்று பொதுமையிற் கலந்து நின்று இராமனுகப் பிறந்துள்ளான் எனினும் ஏனையுயிர்களைப்போன்று மாயைத் தொடக்குகள் எவையும் தன்னைப் பற்றுருவண்ணம் அவற்றினின்றும் விலகிய நிலையில் உள்ளான் என்பார், ‘புணர்த்து மாயையிற் பொதுவுற நின்று அவை புணரா, இணர்த்துழாய்த் தொங்கல் இராமற்கு’ என்ருர். ‘இராமற்கு உண்மை ஒழிவின்று உணர்த்துவாய்; காலம் வந்துளது’ என்று இமையவர் இசைப்பச் சதுமுகன் உரைசெயச் சமைந்தான் என்க. தணப்பு இல் தாமரை—திருமாலின் உந்தித் தடத்தினைவிட்டு நீங்குதல் இல்லாத உந்தித்தாமரை. அதன்கண்

தோன்றியவன் பிரமன் என்பார், 'தணப்பில் தாமரைச் சதுமுகன்' என்ருர். சதுமுகன் — நான்கு முகங்களையுடைய பிரமதேவன். அறத்தின் மூர்த்தியாக வந்தவதரித்து இராவணன் முதலிய அரக்கர்களாகிய தீயோர் அனைவரையும் அழித்துச் சிறையிருந்த செல்வியின் கற்புநலன் விளங்கச் செய்த இராமபிரானுக்கு அவனது தொன்மைநிலையினை எடுத்துரைத்தல் தக்கது எனத் தேவர்கள் பிரமதேவனை நோக்கிக் கூற அவனும் அதற்கு இசைந்து அதனைக் கூறத் தொடங்கினன் என்பதாம். (98)

10194. மன்னர் தொல்குலத் தவதரித்
தனையொரு மனிதன்
என்ன வுன்னலை யுன்னைநீ
யிராமகே ளிதனைச்
சொன்ன நான்மறைத் துணிவினிற்
றுணிந்தமெய்த் துணிவு
நின்ன லாதில்லை நின்னில்வே
றுளதிலை நெடியோய்.

'மன்னர் தொல்குலத்து அவதரித்தனை;
ஒரு மனிதன்
என்ன உன்னலை உன்னை, நீ;
இராம! கேள், இதனை;
சொன்ன நான்மறைத் துணிவினில்
துணிந்த மெய்த்துணிவு
நின்அலாது இல்லை; நின்னில் வேறு
உளது இலை—நெடியோய்!

பொ:— இராமபிரானே! (யான் கூறும்) இம் மொழியினைக் கேட்டருள்வாயாக. (திருமாலாகிய) நீ தொன்மைவாய்ந்த அரசர் குலத்தில் அவதரித்துள்ளாய். (அதுபற்றி) நின்னை ஒரு (சாதாரண) மனிதன் என்று (தாழ்வாக) எண்ணுதே. நெடியோனே! (உயர்த்துச்) சொல்லப்பட்ட நான் மறைகளின் தெளிந்த முடிபாகிய உபநிடதங்களில் ஆராய்ந்து துணியப் பெற்ற மெய்ப்பொருள் நீயன்றிப் பிறிதில்லை. நின்னின் வேருக நிலைத்துள்ளது பிறிதொன்றுமில்லை.

கு :— இராம! இதனைக் கேள்: மன்னர் தொல்குலத்து அவதரித்தனை; உன்னை ஒரு மனிதன் என்ன உன்னலை; நெடியோய்! நான்மறைத் துணிவினில் துணிந்த மெய்த்துணிவு நின் அலாது இல்லை ; நின்னின் வேறு உளது இலை என இயையும். துணிந்த மெய்த்துணிவு நின்னலாது இலை என்றது, மறைகளின் முடிவாகிய உபநிடதங்களில் துணியப்பெற்ற மெய்ப்பொருள் நீயே என்றவாறு. நின்னின் வேறு உளது இலை என்றது, பரம் பொருளாகிய நினது வியாபகத்தின் வேருகப் பிறிதொரு பொருளும் இல்லை ; எல்லாம் நின்னுள் அடங்கியனவே என்றவாறு. நான்மறைத் துணிவு—வேதங்களின் முடிந்த முடிபு. துணிதல் — ஆராய்ந்து உறுதி செய்தல். (99

10195. பகுதி யென்றுள தியாதினும்
பழையது பயந்த
விகுதி யால்வந்த விளைவுமற்
றதற்குமே னின்ற
புகுதி யாவர்க்கு மரியவப்
புருடனு நீயிம்
மிகுதி யுன்பெரு மாயையி
னுல்வந்த வீக்கம்.

'பகுதி என்று உளது, யாதினும்
பழையது, பயந்த
விகுதியால் வந்த விளைவு, மற்று
அதற்குமேல் நின்ற
புகுதி, யாவர்க்கும் அரிய அப்
புருடனும், நீ ; இம்
மிகுதி உன்பெரு மாயையினுல்
வந்த விக்கம்.

பொ :— மூலப்பகுதி யென்றுள்ளதாகிய எப்பொருளினும் பழையதாகிய தத்துவமும் (அது) தந்த திரிபினுல் விளைந்த காரியங்களாகிய ஏனைத் தத்துவங்களும் அவ்விளைவுக்கு மேலாய் நின்ற ஞானப் பொருளும் யாவர்க்கும் (பகுத்துணர்தற்கு) அரிய அந்தப் புருடதத்துவமும் (ஆகக் கலந்து உள்ளவன் இறைவனுகிய) நீயே. இவ்வாறு மிக்கு விரிந்து காணப்படும் பிரபஞ்ச

மனைத்தும் உனது பெரிய மாயையாகிய பேராற்றலால் உண்டான பெருக்கமாகும்.

கு :— பகுதி—மூலப்பிரகிருதி. எல்லாத் தத்துவங்களுக்கும் மூலமாகிய இப் பிரகிருதிதத்துவத்திலிருந்து மான் (மகத்) என்ற தத்துவமும் அதனிலிருந்து அகங்காரமும், அதன்கண் மனமும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், அவற்றின்கண் ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும் தோன்றின எனவும் இத் தத்துவங்களுக்கு வேருகப் புருடனுகிய ஆன்மா, தனித்துள்ள தென்றும் இவ்விருபத்தைந்து தத்துவங்களாக விரிந்து பரவியுள்ள பிரபஞ்சம் அனைத்தும் நாராயணனுகிய பரம்பொருளின் வியக்கத்தக்க மாயையால் விளைந்தனவென்றும் வைணவ நூல்கள் கூறும். மூலப்பகுதியாகிய தத்துவத்தினின்றும் பலவாய் வேறுபட்டு விரிந்த மான் முதலிய தத்துவங்கள் விகுதியெனப் பட்டன. புகுதி என்றது இத்தத்துவங்களின் இயல்புகளை உட் புகுந்து அழுந்தியுணரவல்ல நுண்ணுணர்வாகிய ஞானத்தை. புருடனுகிய ஆன்மா மேற்குறித்தவாறு பகுதி விகுதி எனப்பகுத் துணர்தற்குரிய தத்துவ வகையுட்பட்டடங்காது தனித்து நிற்கும் இயல்பினதாதல் பற்றி 'யாவர்க்கும் அரிய அப்புருடன்' என்ருர். மூலப்பகுதியும் அதன் விளைவாகிய ஏனைத் தத்துவங்களும் அவற்றைப் பகுத்தாராய்தற்குரிய மெய்ஞ்ஞானமும் புருடனுகிய ஆன்மாவும் ஆக விளங்கும் பரம்பொருள் இராமனுகிய நீயே என்றும் இப்பிரபஞ்சமனைத்தும் முதல்வனுகிய நினது வியக்கத் தக்க மாயையால் விளைந்த பெருக்கம் என்றும் கூறியவாறு.

'பகுதியின் உட்பொருள் பயந்த தன்னதின்
விகுதியின் மிகுதிக ளெவையும் மேலவர்
வகுதியின் வசத்தன வரவு போக்கது
புகுதியில் லாதவர் புலத்திற் ருகுமோ'

(கம்பர் — இரணிய — 69)

எனப் பிரகலாதன் கூற்ருக அமைந்த செய்யுளும் அதன் உரை விளக்கமும் இங்கு ஒப்பு நோக்கியுணரத் தக்கனவாகும். 'இம்மிகுதி உன் பெருமாயையினுல் வந்த வீக்கம்' என்ற இத் தொடருடன் 'பூதமைந்தும் விலங்கிய விகாரப் பாட்டின் வேறு

பாடுற்ற வீக்கம்' (கம்பர்—சுந்தர—கடவுள் வாழ்த்து) என்ற தொடர் ஒப்பு நோக்கத் தகுவதாகும். (100)

10196. முன்பு பின்பிரு புடையெனுங்
குணிப்பரு முறைமைத்
தன்பெ ருந்தன்மை தான்றெரி
மறைகளின் றலைகள்
மன்பெ ரும்பர மார்த்தமென்
றுரைக்கின்ற மாற்றம்
அன்ப நின்னையல் லால்மற்றிங்
கியாரையு மறையா.

'முன்பு பின்பு இருபுடை எனும்
குணிப்பு அரு முறைமைத்
தன்பெருந் தன்மை தான் தெரி
மறைகளின் தலைகள்,
''மன்பெரும் பரமார்த்தம்'' என்று
உரைக்கின்ற மாற்றம்,
அன்ப! நின்னை அல்லால் மற்று இங்கு
யாரையும் அறையா.

பொ :—அன்புருவாகியவனே! (உலகப்பொருள்களுக்குரியவாக) முன்பு, பின்பு, இரு பக்கங்கள் எனக் குறித்துணர்தற்கு இயலாத தனது பெருந்தன்மையாகிய இறைமைத் தன்மையினைத் தாமே ஆராய்ந்து தெளிந்த வேதசிகைகளாகிய உபநிடதங்கள் 'அழிவின்றி நிலைபெற்ற மேலான பெரும்பொருள்' என்று சொல்கின்ற சொற்கள், (திருமாலாகிய) உன்னையல்லால் இங்குள்ள ஏனைத்தேவர்கள் எவரையும் சொல்லமாட்டா.

கு :—முன்பு, பின்பு, இருபக்கம் என்பன ஓர் எல்லையுட்பட்ட உலகப் பொருள்களுக்குரிய இயல்புகள். இவ்வாறு எல்லையுட்படுத்திக் கூறவொண்ணாத முறைமையினை யுடையது பரம்பொருள் என்பார், 'முன்பு, பின்பு இருபுடை எனும் குணிப்பரு முறைமைத் தன் பெருந் தன்மை' என்றார். தன் என்றது, இறைவனை. இறையியல்பினைத்தாமே ஆராய்ந்து தெளியும் ஆற்றல் வாய்ந்தன வேதசிகைகளாகிய உபநிட

தங்கள் என்பார், 'தன்பெருந்தன்மை தான்தெரிமறைகளின் தலைகள்' என்றார். மறைகளின் தலைகள் — வேதசிகைகள்; என்றது, உபநிடதங்களை. உபநிடதங்களில் 'நிலைபெற்ற பெருமை வாய்ந்த பரம்பொருள்' எனச் சொல்லப்படும் சொற்கள் இராமனாகிய நின்னையே குறிப்பனவன்றி இங்குள்ள ஏனைத்தேவர்களில் எவரையும் குறிப்பன அல்ல' எனப்பிரமன், இராமனைநோக்கி 'நீயே பரம்பொருள்' என்றுவலியுறுத்தினான் என்பதாம். புடை- பக்கம். அறைதல் — சொல்லுதல். (101)

10197. எனக்கு மெண்வகை யொருவற்கு
மிமையவர்க் கிறைவன்
றனக்கும் பல்பெரு முனிவர்க்கு
முயிருடன் றழீஇய
அனைத்தி னுக்குநீ யேபர
மென்பதை யறிந்தார்
வினைத்து வக்குடை வீட்டருந்
தளைநின்று மீள்வார்.

'எனக்கும், எண்வகை ஒருவற்கும்,
இமையவர்க்கு இறைவன் -
தனக்கும், பல்பெரு முனிவர்க்கும்,
உயிருடன் தழீஇய
அனைத்தினுக்கும், நீயே பரம்
என்பதை அறிந்தார்,
வினைத் துவக்குடை வீட்ட அரும்
தளைநின்று மீள்வார்.

பொ :—(பிரமனாகிய) எனக்கும் எண்வகை வடிவமுடைய ஒப்பற்றவனாகிய சிவபெருமானுக்கும் தேவர்தலைவனாகிய இந்திரனுக்கும் பலராகிய பெருமுனிவர்களுக்கும் உயிருடன் பொருந்திய எல்லாப் பொருள்களுக்கும் நீயே முழுமுதற்பொருள் என்னும் மெய்ம்மையினை உணர்ந்தவர்கள், இரு வினைகளாற் பிணித்தலையுடைய (யாவராலும்) விடுவித்தற்கு அரிய பாசப்பிணிப்பினின்றும் மீண்டு முத்தியடைவார்கள்.

கு :—எண்வகை ஒருவன் என்றது, நிலம், நீர், தீ, வளி விசும்பு, ஞாயிறு, திங்கள், ஆன்மா என்னும் எண்வகைப் பொருள்களையும் தனக்குரிய திருமேனியாகக் கொண்ட அட்ட மூர்த்தியாகிய சிவபெருமானை. 'நில நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாயமைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்' (திருத்தோணோக்கம் — 5)எனவரும் திரு வாசகத் தொடர் இங்கு நினைக்கத்தகுவதாகும். பரம்-பரம் பொருள்; முழுமுதற்கடவுள். வினைத்துவக்கு—நல்வினை தீவினை களாகிய இருவினைகளாற் பிணிக்கப்படுதலாகிய கட்டு. வீட்ட அரும்தளை என்புழிப் பெயரெச்சத்து அகரம் தொக்கது. விட்டுதல்-அறுத்துவிடுவித்தல். தளை—பிணிப்பு; கட்டு. மீள்தல், என்றது பிறவிக்கடலினின்றும் மீண்டு முத்தியாகிய கரையினைச் சேர்தலை. (102)

10198. என்னைத் தான்முத லாகிய
வுருவங்க ளெவையு
முன்னைத் தாய்தந்தை யெனும்பெரு
மாயையின் மூழ்கித்
தன்னைத் தானறி யாமையிற்
சலிப்பவச் சலந்தீர்ந்
துன்னைத் தாதையென் றுணர்குவ
முத்திவித் தொழிந்த.

என்னைத்தான் முதலாகிய
உருவங்கள் எவையும்
முன்னைத் தாய் தந்தை எனும் பெரு
மாயையின் மூழ்கி,
தன்னைத் தான் அறியாமையின்
சலிப்ப; அச் சலம் தீர்ந்து,
உன்னைத் தாதை என்று உணர்குவ,
முத்தி வித்து, ஒழிந்த.

பொ :—(பிரமனாகிய) என்னை முதலாகவுடைய உருவங்களைக் கொண்ட உயிர்த்தொகுதிகள்யாவும் (பிறப்பிற்கு) மூலமாகிய தாய் தந்தை யென்னும் பெரிய மாயையில் அழுந்தித்தனது (உயிரின்) உண்மைநிலையினைத் தான்உணராமையால் (பயன்

பெருது பிறவிச் சுழலிற்பட்டு) வருந்தி அலேவனவாம். அத் தகைய பொய்ம்மையினை விட்டு நீங்கினவாய் (இறைவனுகிய) நின்னையே (எவ்வுயிர்க்குந்) தந்தை என்று உணர்வனவாகிய உயிர்கள் வீட்டுலகிற்கு வித்தாவனவாம்.

கு :—என்னைத்தான் என்புழித் தான் என்பது அசை. உரு வங்கள் என்றது, உருவங்களாகிய உடம்பினைப் பெற்ற உயிர்த் தொகுதிகளை. தனது பிறப்பிற்குக்காரணமாய் முற்பட்டுப் பிறந்த தாய் தந்தை என்பார், 'முன்னைத் தாய்தந்தை' என்ருர். சலித்தல் — அலேந்து வருந்துதல். ஒழிந்த அச்சலம் தீர்ந்து உன்னைத் தாதை என்று உணர்குவ முத்திவித்து என முடிக்க. இறைவனே உண்மையான தந்தையாவான் என்று உணரும் மெய்யுணர்வுடைய உயிர்கள் வீட்டுலகத்திற்சென்று தோன்றுதலின் 'முத்திவித்து' எனப்பட்டன.

'உரனென்னுந் தோட்டியான் ஓர்ஐந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து' (24)

எனவரும் திருக்குறளும், 'அந்நிலத்திற்சென்று முளைத்தலின் 'வித்து' என்ருர். ஈண்டுப் பிறந்திறந்து வரும் மகனல்லன் என்பதாம்' எனவரும் பரிமேலழகர் உரைவிளக்கமும் இங்கு நினைக்கத்தக்கனவாகும். (103)

10199. ஐயஞ் சாகிய தத்துவந்
தெரிந்தறிந் தவற்றின்
மெய்யெஞ் சாவகை மேனின்ற
நினக்குமேல் யாதும்
பொய்யெஞ் சாவில தென்னுமீ
தருமறை புகலும்
வையஞ் சான்றினிச் சான்றுக்குச்
சான்றிலே வழக்கால்.

"" ஐ-அஞ்சு ஆகிய தத்துவம்
தெரிந்து அறிந்து, அவற்றின்
மெய் எஞ்சாவகை மேல் நின்ற
நினக்குமேல் யாதும்

பொய் எஞ்சா இலது" என்னும் ஈது
அருமறை புகலும்;
வையம் சான்று; இனி, சான்றுக்குச்
சான்று இல்லை, வழக்கால்.

பொ :—இருபத்தைந்தாகிய தத்துவங்களை ஆராய்ந்தறிந்ததனால், அத்தத்துவங்களின் உண்மைத் தன்மை (தன்னின்) மிக்கு மேலிடாதவாறு (அவையெல்லாவற்றுக்கும்) மேலாய் நின்ற (மெய்ப்பொருளாகிய) உனக்கு மேலே பொய்மையுடையதெதுவும் விஞ்சி நிற்பதில்லை என்னும் இவ்வுண்மையினை அருமையுடைய வேதங்கள் எடுத்துரைக்கின்றன. இதற்கு உலகமும் சாட்சியாக வுள்ளது. இனி (இதனை வலியுறுத்தற்குச்) சாட்சிக்குச் சாட்சி வேண்டுவதில்லை. (இதுவே) வழக்கியல் நெறியாகும்.

கு :—ஐயஞ்சு — இருபத்தைந்து. இருபத்தைந்து தத்துவங்களாவன: நிலம் நீர் தீ வளி விசும்பு என்னும் பூதங்கள் ஐந்தும், அவற்றுக்கு முதலாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், அவற்றின் கூறாகிய மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், தெரிதற்கருவியாக மான், அகங்காரம், மனம் என்பனவும் இவற்றுக்கு முதலாகிய மூலப்பகுதியும், இத்தத்துவங்களைத் தெரிந்துணரவல்ல புருடனாகிய ஆன்மாவும் ஆகும். தெரிதல் — ஆராய்தல். அவற்றின் மெய் — தத்துவங்களாகிய அவற்றது உண்மை இருப்பு. எஞ்சுதல் — மிகுந்து மேற்படுதல். இருபத்தைந்து தத்துவங்களாகிய இவற்றின் தன்மை தனக்கு எய்துதலின்றி இவற்றுக்கெல்லாம் மேற்பட்டு விளங்குவோன் திருமாலாகிய நீயே என்பான், 'ஐயஞ்சாகிய தத்துவம் தெரிந்தறிந்தவற்றின் மெய்யெஞ்சாவகை மேல் நின்ற நினக்கு' என்றான். நினக்குமேல் பொய் யாதும் எஞ்சா இலது என்னும் ஈது அருமறைபுகலும் என்க. பொய்யென்றது விரிந்தும் அடங்கியும் மாறுமியல்பினவாகிய உலகப்பொருள்களை. எஞ்சா— எஞ்சி. வையம் சான்றாதலாவது, காணப்படும் உலகம் தனது இயக்கத்திற்குக் காரணமாய்த் தனக்குமேலுள்ள பரம்பொருளின் உண்மையினைக் கருதலளவையால் உணர்ந்து வேதமொழியாகிய ஆகமவளவைக்குச் சான்றுபகர்தல். இறைவனாகிய எனது

மெய்ம்மைத் தன்மையை யுணர்தற்கு அருமறைகளும் உலகமும் சான்ருய் விளங்கும் இந்நிலையில் வேறு சான்றெதுவும் வேண்டுவ தில்லை ; இதுவே வழக்கியல் நெறியாம் என்பான், 'ஈது அரு மறைபுகலும் ; வையம் சான்று ; இனி, சான்றுக்குச் சான்று இலை, வழக்கால்' என்ருன்.

'சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகை தெரிவான்கட்டே யுலகு' (27) என்னும் திருக்குறட்

பொருளை உளங்கொண்டு, 'ஐயஞ்சாகியதத்துவம் தெரிந்து' என்ருர்.

''பாழெனக் காலெனப் பாகென வொன்றென
இரண்டென மூன்றென நான்கென ஐந்தென
ஆறென ஏழென எட்டெனத் தொண்டென
நால்வகை யூழியெண்ணவிற்றுஞ் சிறப்பினை''
(பரிபாடல் 3,77–80)

எனவரும் பரிபாடற் பகுதியும், ''என்றது, பூதங்கள் ஐந்தும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், மனமுதலிய அந்தக்கரணங்கள் மூன்றும் மூலப்பகுதியும் புருடனும் எனப்பட்ட தத்துவம் இருபத்தைந்தா னுலும் எக்காலத்தும் ஆராயப்படும் பெருமையுடையை'' என வரும் அதன் உரைவிளக்கமும்,

''பொங்கைம் புலனும் பொறியைந்தும்
கன்மேந்திரியம் ஐம்பூதம்
இங்கிவ் வுயிரேய் பிரகிருதி
மானுங்காரமனங்களே'' (திருவாய்மொழி 10-8-11)

எனவரும் அருளிச் செயலும் இங்கு ஒப்புநோக்கத்தக்கன. அறிந்து—அறிந்ததனுல்; செய் தென்னும் வாய்பாட்டு வினை யெச்சம் காரணப்பொருளில் வந்தது ; உண்டு பசிதீர்ந்தான் என்ருற்போன்று அறிந்து புகலும் எனமுடியும். (104)

10200. அளவை யாலளந் தாமன்றென்
றறிவுறு மமைதி
உளவை யாவையு முனக்கில்லை
யுபநிடத் துறுநின்

களவை யாய்ந்துறத் தெளிந்தில
தாயினுங் கண்ணால்
துளவை யாய்முடி யாயுளை
நீயெனத் துணியும்.

'அளவையால் அளந்து, "ஆம்", "அன்று" என்று
அறிவுறும் அமைதி
உ(ள்)ளவை யாவையும் உனக்கு இல்லை;
உபநிடத்து உறும் நின்
களவை ஆய்ந்து உறத் தெளிந்திலது
ஆயினும், கண்ணால்,
துளவை ஆய் முடியாய்! "உளை
நீ" எனத் துணியும்.

பொ:—திருத்துழாயணிந்த திருமுடியை யுடையவனே! பிரமாணங்களால் ஆராய்ந்து ஆம் என்றும் அன்று என்றும் அறியும் அமைப்பு உள்ளனவாகிய அடையாளங்கள் எவையும் (இறைவனாகிய) உனக்கு இல்லை. (உலகவுயிர்த்தொகுதி) உபநிடதங்களிற் பொருந்திய நினது களவினை (உள்ளவாறு) ஆராய்ந்து பொருந்தத் தெளியும் ஆற்றலில்லாததாயினும் (நினது அருட்) கண்ணின் துணைகொண்டு நீ உள்ளாய் என்று துணிந்து கூறும்.

கு:—இறைவன் உளன் என்பதற்கு வையம் சான்றாதலை விளக்கும் முறையில் அமைந்தது இச்செய்யுள். அளவை என்பன பொருள்களின் உண்மையினை நிச்சயித்தற்குத்துணையாகிய பிரமாணங்கள். அவையாவன காட்சியளவை, கருதலளவை, உரையளவை என்பன. இத்தகைய பிரமாணங்களின் துணைகொண்டு உண்டு இல்லை எனத் துணிந்துரைத்தற்குரிய அடையாளங்கள் பரம்பொருளுக்கு இல்லை என்பான், 'அளவையால் அளந்து ஆம் அன்று என்று அறிவுறும் அமைதி உள்ளவை யாவையும் உனக்கு இல்லை' என்றான். வையம், உபநிடத்துறும் நின்களவை ஆய்ந்து உறத்தெளிந்திலது ஆயினும் கண்ணால் நீ உளை எனத்துணியும் எனமுடிக்க. மேற்செய்யுளிலுள்ள 'வையம்' என்பது எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது. வையம் என்றது உலக உயிர்த்தொகுதியினை கண் என்றது, இறைவனது திருவருளாகிய ஞானக்கண்

ணிலே. 'நின் அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே' (6-95-3) எனவும் 'அவனருளே கண்ணாகக்காணினல் லால், இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறை வன் என்றெழுதிக் காட்டொணாதே' (6-97-10) எனவும் வரும் அருள்மொழிகள் இங்கு உளங்கொளத்தக்கனவாம். (105)

10201. கரண மென்றுள வுன்னைவந்
தறிவுகா ணாமே
அரண மல்லவர்க் கிவைகடந்
தறிவரி தாக
மரணந் தோற்றமென் றிவற்றிடை
மயங்குப வவர்க்குன்,
சரண மல்லதோர் சரணில்லை
யன்னவை தவிர்ப்பான்.

'கரணம் என்று உள உன்னை வந்து
அறிவு காணாமே,
அரணம் அல்லவர்க்கு இவை கடந்து
அறிவு அரிது ஆக,
மரணம் தோற்றம் என்று இவற்றிடை
மயங்குப; அவர்க்கு உன்
சரணம் அல்லது ஓர் சரண் இல்லை,
அன்னவை தவிர்ப்பான்.

பொ :—(இறைவனாகிய நின்னைக்) காவலாகக் கொள்ளுதலை யுடையரல்லாதார்க்கு நின்னை அணுகி அறிவினாற் கண்டுணரா வொண்ணாதவாறு (மனம் பொறி முதலிய) கருவிகள் என்பன (தடையாக) உள்ளன. (அன்னோர்) இக்கருவிகளை வென்று (நின்னை) அறிய இயலாதவாறு இறத்தலும் பிறத்தலும் ஆகிய இவற்றில் அகப்பட்டு மயங்கி உழல்வர். (அத்தகையோர்க்கு) அத்துன்பங்களை நீக்குதற்கு உனது திருவடியையன்றி வேறொரு புகலிடமில்லை.

கு :—அரணம் அல்லவர்க்கு உன்னை வந்து அறிவுகாணாமே கரணம் என்று உள ; இவை கடந்து அறிவரிவதாக மரணம் தோற்றம் என்று இவற்றிடை மயங்குப ; அவர்க்கு அன்னவை

தவிர்ப்பான் உன் சரணம் அல்லது வேறு ஓர் சரண் இல்லை என இயைத்துப் பொருள் கொள்க. அரணம் அல்லவர்—(இறைவனாகிய நின்னைக்) காவலாகக் கொள்ளுதலையுடையரல்லாதார்; என்றது தெய்வம் உண்டென்று தெளிந்து அன்பினால் வழிபடாதவர்களை. அரணம் — காவல். இவை என்றது மனம் முதலிய கருவிகளை. கடத்தல் — வெல்லுதல். அன்னவை என்றது மரணம் தோற்றம் என்னும் அத்துன்பங்களை. தவிர்ப்பான்—நீக்குதற்கு: பானீற்று வினையெச்சம். சரணம் — திருவடி. சரண்—புகலிடம். 'உன் சரணமல்லதோர் சரணில்லை' என்னும் இத்தொடர், 'தருதுயரம் தடாயேலுன் சரணல்லாற் சரணில்லை' (பெருமாள் திருமொழி-5.1) என வரும் அருளிச் செயலை அடியொற்றியமைந்திருத்தல் அறியத்தகுவதாகும். (106)

10202. தோற்ற மென்பதொன் றுனக்கில்லை
நின்கணே தோற்றும்
ஆற்றல் சால்முதற் பகுதிமற்
றதனுளாம் பண்பால்
காற்றை முன்னுடைப் பூதங்க
ளவைசென்று கடைக்கால்
வீற்று வீற்றுற்று வீவுறு
நீயென்றும் விளியாய்.

'தோற்றம் என்பது ஒன்று உனக்கு இல்லை;
நின்கணே தோற்றும்,
ஆற்றல்சால் முதற்பகுதி; மற்று
அதனுள் ஆம், பண்பால்
காற்றை முன்னுடைப் பூதங்கள்;
அவை சென்று, கடைக்கால்,
வீற்று வீற்று உற்று வீவுறும்;
நீ என்றும் விளியாய்.

பொ:—(இறைவனாகிய) உனக்கு (ஒன்றிலிருந்து) தோன்றுதல் என்பதாகிய (பிறப்பு) நிலை இல்லை. ஆற்றல் மிக்க மூலப் பகுதியானது நின்கண்ணே தோன்றும்; (ஊறு முதலிய) பண்புகளுடன் வளிமுதலிய ஐம்பெரும் பூதங்கள் அம்மூலப் பகுதியுளிருந்து தோன்றுவனவாகும். அவை யாவும் ஊழி முடிவில்

வேறு வேருகப் பிரிந்து அழிவன ; (முதல்வனுகிய) நீ எக்காலத்தும் அழியமாட்டாய்.

கு :—தன்னிடத்திருந்து வெளிப்பட்ட மூலப்பகுதியும் அதிலிருந்து தோன்றிய ஏனைத்தத்துவங்களுமாகிய பிரபஞ்சம் முழுவதும் அழிந்தொழியவும் தான் மட்டும் தோன்றக் கேடுகளின்றி என்றுமுள்ளவன் இறைவன் என்றவாறு. அதனுள் பண்பால் காற்றை முன்னுடைப் பூதங்கள் ஆம் என்க. பண்பு — ஊறு ஓசை முதலிய பண்புகள். ஆலுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. ஐம்பெரும் பூதங்களில் முதலில் வைத்தெண்ணத் தகுவது ஆகாயம் ஆயினும் தனக்குரிய உறுதற் பண்பினுல் மற்றைப் பூதங்களைச் சலித்துத் திரட்டும் ஆற்றல் வாய்ந்தது காற்ருதலின் காற்றை முன்னுடைப்பூதங்கள் என அதனை முதற்கண் கூறினுர். தோற்றம்—பிறப்பு. முதற்பகுதி — மூலப் பிரகிருதி. கடைக்கால் — (ஊழிமுடிவாகிய) இறுதிக்காலம். வீதல் — அழிதல். விளித்தல் — இறத்தல். (107)

10203. மின்னைக் காட்டுதல் போல்வந்து
விளியுமிவ் வுலகந்
தன்னைக் காட்டவுந் தருமத்தை
நாட்டவுந் தனியே
என்னைக் காட்டுதி யிறுதியுங்
காட்டுதி யெனக்கு
முன்னைக் காட்டலை யொளிக்கின்று
மிலைமறை யுரையால்.

'மின்னைக் காட்டுதல்போல் வந்து
விளியும் இவ் உலகம்—
தன்னைக் காட்டவும், தருமத்தை
நாட்டவும், தனியே
என்னைக் காட்டுதி; இறுதியும்
காட்டுதி; எனக்கும்
உன்னைக் காட்டலை; ஒளிக்கின்றும்
இலை, மறை உரையால்.

பொ :—(விரைந்து தோன்றிமறையுந்தன்மையினையுடைய) மின்னலை (மேகம்) தோற்றுவித்தாற் போன்று அழியும் தன்மையதாகிய இவ்வுலகினைப் படைத்தற்கும் அறத்தை நிலை நிறுத்தற்கும் தனியே (முதற்கண்) என்னைப் படைத்தாய். (படைக்கப்பட்ட உலகத்திற்கு) அழிவையும் உண்டாக்குகின்றாய். (நின்னிற்பிரியா நிலையேனாகிய) எனக்கும் நினது உண்மைநிலை முழுவதனையும் காட்டுகின்றாயல்லை. (நின்வாய்மொழியாகிய) வேத வாக்கியங்களால் (நின்னியல்பினை யான் ஒரு சிறிது உணரப் பெறுதலால், நின்னை முற்றிலும்) மறைக்கின்றாயுமல்லை.

கு :—கட்புலனாகி விரைந்து மறைதற்கு மின்னல் உவமை. காட்டுதல் — உண்டாக்குதல். நாட்டுதல் — நிலைபெறச் செய்தல். இறுதி — அழிவு; இச்சொல் ஆகுபெயராய் இறுதியைச் செய்யும் சங்காரக் கடவுளை யுணர்த்தியதெனக்கொண்டு, இறுதி யுங்காட்டுதி' என்பதற்கு, அழித்தற் கடவுளாகிய சிவனையும் உண்டாக்குகின்றாய் எனப்பொருள் கூறுதலும் உண்டு. எனக்கும் என்புழி உம்மை உயர்வுசிறப்பு. மறையுரையால் ஒளிக்கின்றுமிலை என இயையும். நினது வாய்மொழியாகிய வேதங்களை இடைவிடாது ஓதுதலால் நின்னியல்புகள் சில புலனாதலின் நின்னை ஒருவாறு காணுந்தன்மையேனாயினேன் என்பான், 'மறை யுரையால் ஒளிக்கின்றுமிலை' என்றான். (108)

10204. என்னு ருக்கொடிவ் வுலகினை
யீனுதி யிடையே
உன்னு ருக்கொடு புகுந்துநின்
றோம்புதி யுமைகோன்
றன்னு ருக்கொடு துடைத்திமற்
றிதுதனி யருக்கன்
முன்னு ருக்கொடு பகற்செயுந்
தரத்தது முதலோய்.

'என் உருக் கொடு இவ் உலகினை
ஈனுதி; இடையே
உன் உருக் கொடு புகுந்துநின்று
ஓம்புதி; உமைகோன்

தன் உருக்கொடு துடைத்தி; மற்று
இது, தனி அருக்கன்
முன் உருக் கொடு பகல் செயும்
தரத்தது — முதலோய்!

பொ :—முழுமுதற் பொருளாக விளங்குபவனே! (பிரமனாகிய) எனது உருவத்தை மேற்கொண்டு இவ்வுலகத்தைப் படைக்கின்றாய்; (திருமாலாகிய) நினது உருவத்தைக் கொண்டு இடையே புகுந்துநின்று (உலகத்தைக்) காத்தருள்கின்றாய்; பார்வதி நாயகனாகிய சிவனது உருவத்தை மேற்கொண்டு (உலகினை) அழிக்கின்றாய்; (நின்செயல் வகையாகிய) இது, கதிரவன் (யாவராலும்) கருதத்தகும் தனது ஒளியுருவினைக்கொண்டு பகற்பொழுதினைச் செய்கின்ற தன்மையினை ஒத்தது.

கு :—முதலோய்! உலகினை ஈனுதி, ஓம்புதி, துடைத்தி; இது, அருக்கன் பகல்செயும் தரத்தது எனமுடிக்க. பிரமன் கூற்றுதலின் 'என்னுரு' என்றது படைத்தற்கடவுளாகிய அவனது வடிவத்தினை. இடை என்றது, உலகம் தோன்றுதலும் அழிதலும் ஆகிய அவ்விரண்டிற்கும் இடைப்பட்டுள்ள காலத்தை. உன் என்றது, இராமனாகிய திருமாலை. உமைகோன்—பார்வதி நாயகன்; சிவன். ஈனுதல் - படைத்தல். ஓம்புதல் - காத்தல். துடைத்தல் - அழித்தல். முழுமுதற்பொருள் ஒன்றே பிரமனாய் நின்று படைத்தலையும் திருமாலாய் நின்று காத்தலையும் சிவனாய் நின்று அழித்தலையும் செய்யும் இச்செயல் முறையானது, கதிரவன் ஒருவனே தனது எழுச்சியாற் காலைப்பொழுதைத் தோற்றுவித்து, இயங்கி உச்சியை அடைதலால் நண்பகலை நிலைநிறுத்தி, மறைதலால் மாலையாகிய பகலிறுதியைச் செய்தலை ஒக்கும் என்பதாம். மற்று — அசை. இது என்றது, இறைவன்செய்யும் முத்தொழில் திறத்தை. அருக்கன் — சூரியன். முன் உரு — கருதத்தக்க (ஒளி) வடிவு. (109)

10205. திருக்கு வான்மலி செல்வத்துச்
செருக்குவேந் திறத்துத்
தருக்கு மாய்வுறத் தானவ
ரரக்கர்வெஞ் சமரில்

இரிக்க மாழ்கிநொந் துணைப்புகல்
யாம்புக வியையாக்
கருக்கு ளாய்வந்து தோற்றுதி
யீங்கிது கடனே.

'திருக் குவால்மலி செல்வத்துச்
செருக்குவேம் திறத்துத்
தருக்கு மாய்வுற, தானவர்
அரக்கர் வெஞ் சமரில்
இரிக்க, மாழ்கி நொந்து, உணைப் புகல்
யாம்புக, இயையாக்
கருக்குளாய் வந்து தோற்றுதி;
ஈங்கு இது கடனே?

பொ :—திருத்தகவினதாகிய பொருட்குவியலாக நிறைந்த பெருஞ்செல்வ வாழ்விலே செருக்குறும் தேவர்களாகிய எங்களிடமுள்ள அகங்காரம் கெட்டொழியும்படி, அசுரர்களும் அரக்கர்களும் வெவ்விய போரிலே (எம்மை எதிர்த்துத்தாக்கித்) துரத்துதலால் யாங்கள் (மனம்) வருந்தி (உடல்) நொந்து (திருமாலாகிய) உன்னைச் சரணடைய (க் கொடியோராகிய அவர்களை யழித்து எம்மைப் பாதுகாத்தற் பொருட்டு, உனக்கு)த் தகுதியில்லாத பிறவிகளிலே வந்து இங்கு அவதரிக்கின்றாய். இது (இறைவனாகிய உனக்கு நீங்காத) கடமையாய் விட்டதோ?

கு :—திரு—திருத்தகவினதாகிய சிறந்த பொருள். குவால்—குவியல். செல்வத்துச் செருக்குதலாவது, பெருஞ் செல்வ வாழ்வில் திளைக்கும் மகிழ்ச்சி காரணமாக இறைவனை மறந்து தம்மையே உயர்ந்தாராக மதித்தல். தேவர்களாகிய யாங்கள் நின்னருளாற் பெற்ற பெருஞ்செல்வங்களை நுகர்ந்து மகிழும் நிலையில் அச்செல்வங்களையருளிய இறைவனாகிய நின்னைமறந்து செருக்குற்றபொழுது அசுரர்களும் அரக்கர்களும் தோன்றி எம்மைப் போரில் தாக்கித்துரத்த அவர்களை எதிர்த்து நிற்றலாற்றாதயாம் திருமாலாகிய நின்னைச் சரண்புகுந்தேமாக, முதல்வனாகிய நீ தீயோரை ஒறுத்து நல்லோரைப் பாதுகாத்தற் பொருட்டு நின் இறைமைத் தன்மைக்கியையாத மீன், ஆமை, பன்றி முதலிய பல்வேறு பிறப்புக்களிலே வந்து அவதரிக்

கின்ருய். இவ்வாறு எம்பொருட்டு நினக்குத் தகுதியில்லாத பல பிறவிகளிலும் அவதரித்து நின் அடியார்களாகிய எங்களைப் பாதுகாத்தருள்வது நினக்குத் தவிர்க்க ஒண்ணுத கடமையாய் அமைந்ததே என்பான், 'இயையாக்கருக்குளாய் வந்து தோற்றுதி ஈங்கிது கடனே' என்ருன். கருக்குள் ஆய்வருதலாவது, அவ்வப் பிறவியிற் பிறக்குங்கால் சிறிதும் வேறுபாடு தோன்ருதபடி அதற்குரிய குணஞ்செயல்களில் ஊன்றி நிற்கும் தன்மையுடன் பிறத்தல். இரித்தல் — துரித்தல். (110

இச்செய்யுள் பழைய சுவடிகள் சிலவற்றில் இல்லை.

10206. ஓங்கா ரப்பொரு டேருவோர்
தாமுன்னை யுணர்வோர்
ஓங்கா ரப்பொரு ளென்றுணர்ந்
திருவினை யுகுப்போர்
ஓங்கா ரப்பொரு ளாமன்றென்
றூழிகண் டாலும்
ஓங்கா ரப்பொரு ளேபொரு
ளென்கிலா வுரவோர்.

'ஓங்காரப் பொருள் தேருவோர்தாம்
உன்னை உணர்வோர்;
ஓங்காரப் பொருள் என்று உணர்ந்து
இருவினை உகுப்போர்;
"ஓங்காரப் பொருள் ஆம்", "அன்று" என்று,
ஊழி கண்டாலும்
ஓங்காரப் பொருளே பொருள்
என்கிலா உரவோர்.

பொ :—ஓங்காரமாகிய பிரணவத்தின் பொருளை ஆராய்பவர்களே பரம்பொருளாகிய உன்னை உணர்ந்தோராவார். (அவர்கள்) பிரணவத்தின் உட்பொருள் நீயே எனத்தெளிந்து இருவினைகளை ஒழிப்பார்கள். பிரணவத்தின் உட்பொருளே பரம்பொருள் என்று உணரமாட்டாத (உலகியல்) அறிஞர்கள் ஊழிக்காலத்தைக் கண்டு (நெடுங்காலம்) வாழ்ந்திருந்தாலும் பிரணவப் பொருளாகிய உன்னை உண்மைப் பொருளாம் என்றும் அன்றென்றும் ஐயமறத்தெளிந்து (இருவினைகளை நீக்கமாட்டாதவராவர்).

கு :—ஓங்காரப் பொருள் தேருவோர் ஓங்காரப்பொருள் என்று உணர்ந்து இருவினை உகுப்போர் எனவே, ஓங்காரப்பொருளே பொருள் என்கிலா உரவோர், ஓங்காரப்பொருள் ஆம் அன்று என்று (உணர்ந்து இருவினை உகுக்கார்) எனவேண்டுஞ் சொற்கள் இசையெச்சத்தால் வருவித்துரைக்கப்பட்டன. ''இருவினையுகுப்போர் என்று கூறினதற்கு ஏற்ப, 'இருவினையுகுக்கார்' என்பது பின்னே வருவித்துரைக்கப்பட்டது. இந்த எதிர்நிலைச் சொல்லெச்சம் அவாய்நிலையின் பாற்படும்'' என்பர் வை. மு. கோ. ஓம் என்பது பிரணவமந்திரம். அது அ உ ம் எனப் பிரிந்து அகரப்பொருளாகிய இறைவனுக்கு மகரப்பொருளாகிய ஆன்மா அடிமை என்ற பொருளைத்தரும் என்பர் வைணவ அறிஞர்கள். ஈண்டு உரவோர் என்றது, மெய்ப்பொருளையுணரும் உணர்வின்றி உலகியலறிவு மட்டும் உடையவர்களை. வீடு பேற்றை விரும்பினோர் இன்றியமையாது உணர்தற்குரிய உயிரியல்பும், இறைவனியல்பும், உயிர் இறைவனை அடைதற்குத் தடையாகவுள்ள பாசத்தியல்பும், அத்தடைகளை வெல்லுதற்குரிய நெறிமுறையும், அந்நெறியில் ஒழுகிப் பெறுதற்குரிய பேறும் ஆகிய ஐந்தினையும் உணர்த்துவது ஓம் என்னும் பிரணவமாதலின், அதனை அறிபவர்களே இருவினைகளை நீக்கும் வன்மையுடையோர் ; அதனை உணராதார் பல்லூழிக்காலங்கள் இவ்வுலகில் வாழ்ந்தாலும் மெய்ப்பொருளையுணர்ந்து இருவினைகளைப் போக்கும் வன்மை பெருமையால் இவ்வுலகில் இறந்தும் பிறந்தும் இடர்ப்பட்டுழல்வர் என்பதாம். (111)

இச்செய்யுளின் பின் 23, 26, 43, 66-ஆம் பிரதிகளில் பின் வரும் மிகைப்பாடல் காணப்படுகிறது :—

10206 (a) அந்த நுண்பொருட் கிசையவச் சுதனையம் புயத்தோன்
சிந்தை தன்னினெத் திறந்தனில் வாக்கினிற் செவியின்
முந்து நாசியி லண்டத்தி னுபிமுண்டகத்தில்
எந்தை யேயெழு காலெனைப் பெற்றனை யன்றே.

10207. இனைய தாதலி னென்னையும்
யாரையு மீன்றிம்
மனையின் மாட்சியை வளர்த்தவெம்
மோயினை வாளா

முனிய லென்றுரை முடித்தனன்
முந்துநீர் முளைத்த
சினையின் பந்தமும் பகுதிக
ளனைத்தையுஞ் செய்தோன்.

'இனையது ஆதலின், என்னையும்
யாரையும்ஈன்று, இம்
மனையின் மாட்சியை வளர்த்த எம்
மோயினை வாளா
முனியல்' என்றுஉரை முடித்தனன்—
முந்துநீர் முளைத்த
சினையின் பந்தமும் பகுதிகள்
அனைத்தையும் செய்தோன்.

பொ :—('இறைவனாகிய நினது இயல்பு யாவராலும் அறிய வொண்ணாத) இத்தன்மையதாதலின், (படைத்தற் கடவுளான) என்னையும் (ஏனையுலகங்களிலுள்ளார்) யாவரையும் பெற்று இத் தகைய மனை வாழ்க்கையின் மாண்பினை வளர்த்த எம்முடைய தாயாகிய சீதையை வீணே வெகுளாதே' என்று (தான் கூற வேண்டியதனைக்) கூறி முடித்தான்; (அவன் யாவனெனின்) முற்பட்ட (கடல்) நீராகிய பெருவெள்ளத்திலே தோன்றிய அண்டப்பரப்பினையும் (அதனுள்ளே [உடம்பு முதலிய) பகுதிகள் அனைத்தையும் உண்டாக்கியவனான பிரமதேவன்.

கு :—எம்மோய் — எம்முடைய தாய்; என்றது எவ்வுயிர்க் கும் தாயாகிய சீதையை. மோய் — தாய். வாளா — வீணே; காரணமின்றி. முனியல் — வெகுளாதே. முந்துநீர் — கடல்; உலகில் நிலந்தோன்றுதற்கு முன்னே தோன்றிய தொன்மை யுடைமை பற்றி முந்து நீர் எனப்பட்டது. சினையின்பந்தம் அண்டப்பரப்பு. பகுதிகள் — உடம்பு முதலிய கூறுகள். செய் தல் — உண்டாக்குதல். (112)

### சிவபெருமான் இராமனுக்கு உண்மையை உணர்த்துதல்

10208. என்னு மாத்திரத் தேறமர்
கடவுளு மிசைத்தான்
உன்னை நீயொன்று முணர்ந்திலை
போலுமா லுரவோய்
முன்னை யாதியா மூர்த்திநீ
மூவகை யுலகின்
அன்னை சீதையா மாதுநின்
மார்பின்வந் தமைந்தாள்.

என்னும் மாத்திரத்து, ஏறு அமர்
கடவுளும் இசைத்தான்:
'உன்னை நீ ஒன்றும் உணர்ந்திலை
போலுமால், உரவோய்!
முன்னை ஆதி ஆம் மூர்த்திநீ;
மூவகை உலகின்
அன்னை சீதை ஆம் மாது, நின்
மார்பின் வந்து அமைந்தாள்.

பொ :—என்று (பிரமன்) கூறி முடித்த அளவில் இடபவாகனத்தில் அமர்ந்தருளிய இறைவனாகிய சிவபெருமானும் (பின்வருமாறு) கூறினான்: அறிவு வலிமையுடையவனே! நீ நின் இயல்பினைச் சிறிதும் அறிந்திலை போலும். நீ பழமைக்கும் பழையோனாகவுள்ள முழுமுதற் கடவுளாவாய்; (எவ்வுயிர்க்கும்) தாயாகிய சீதை (திருமாலாகிய) நினது திருமார்பில் வந்து பொருந்தியுள்ள திருமகளே.

கு :—அறிவுருவினனாகிய நீ மேற்கொண்டுள்ள அவதார நிலையாகிய மானிட வியல்புக்கு ஏற்ப ஒன்றும் அறியாதவன்போல் நடந்து கொள்கின்றாய் என்பான், 'உரவோய்! உன்னை நீ ஒன்றும் உணர்ந்திலை போலும்?' என்றான். ஒன்றும் — சிறிதும். ஆல், அசை. முன்னை—பழமை. ஆதி—முன்னுள்ளது. முன்னை ஆதி ஆம் மூர்த்தி என்றது, பழமைக்கும் பழையோனாக (அநாதியாக) வுள்ள முதற் கடவுள் என்றவாறு. (113)

10209. துறக்குந் தன்மைய ளல்லளாற்
றொல்லையெவ் வுலகும்
பிறக்கும் பொன்வயிற் றன்னையிப்
பெய்வளை பிழைக்கின்
இறக்கும் பல்லுயி ரிராமனீ
யிவடிறத் திகழ்ச்சி
மறக்குந் தன்மைய தென்றனன்
வரதர்க்கும் வரதன்.

'துறக்கும் தன்மையள் அல்லளால்,
தொல்லை எவ்உலகும்
பிறக்கும் பொன்வயிற்று அன்னை; இப்
பெய்வளை பிழைக்கின்,
இறக்கும் பல்உயிர்; இராமன் நீ
இவள்திறத்து இகழ்ச்சி
மறக்கும் தன்மையது' என்றனன்,
வரதர்க்கும் வரதன்.

பொ:—('எல்லோர்க்கும்) இறைவனே! தொன்மை வாய்ந்த எல்லாவுலகங்களும் தோன்றும் இடமாகிய அழகிய வயிற்றிணையுடைய தாயாகிய சீதை (நின்னால் வெறுத்து) விலக்குதற்குரிய தீயொழுக்க முடையளல்லள். செறித்த வளையல்களையுடையாளாகிய இவள் துயருற்று வருந்தினால் எல்லாவுயிர்களும் இறந்தொழியும். (ஆதலால்) நீ இவளிடத்துக்கொண்ட அவமதிப்பு மறந்து கைவிடத்தக்கது' என்று கூறினான், வரந்தருங் கடவுளர்க்கெல்லாம் வரந்தந்தருள்வோனாகிய சிவபெருமான்.

கு:—காத்தற் கடவுளாகிய நினக்குரிய தேவியாய் உலகவுயிர்களைக் காக்குந் தாயாகிய இவளுக்குத் தீங்கு நேரின் உயிர்கள் யாவும் காப்பாற்றுவாரின்றி இறந்தொழியும் என்பான், 'இப் பெய்வளை பிழைக்கின் இறக்கும் பல்லுயிர்' என்றான். பெய்வளை — செறித்த வளையலையுடையாள்; அன்மொழித் தொகை. பிழைக்கின் — துயருற்று வருந்தினால். 'பிழையுயிரெய்தின்' (சிலப் — காட்சி 101) என்ற தொடர்க்கு, 'உயிர்கள் யாதானுமொன்றால் வருந்தின்' என அரும்பதவுரையாசிரியர் எழுதிய வுரை இங்கு நோக்கத் தகுவதாகும். மாசற்ற கற்பின் தெய்வ

மாகிய இந் நங்கையின்பால் நீ கொண்டுள்ள அவமதிப்பு பிறர்க்கு வெளிப்படாது நின்னெஞ்சில் இருப்பினும் அது உலகவுயிர்களுக்குப் பெருந்தீங்கு விளைப்பதாம் என்பான், 'இவள் திறத்து இகழ்ச்சி மறக்குந் தன்மையது' என்றனன். (114)

*இராமனைத் தெருட்டுமாறு துறக்கத்திலுள்ள தயரதனுக்குச் சிவபெருமான் பணித்தல்*

10210. பின்னு நோக்கினன் பெருந்தகைப்
புதல்வனைப் பிரிந்த
இன்ன லாலுயிர் துறந்திருந்
துறக்கத்து ளிருந்த
மன்ன வற்சென்று கண்டுநின்
மைந்தனைத் தெருட்டி
முன்னை வன்றுயர் நீக்குதி
மொய்ம்பினோ யென்றான்.

பின்னும் நோக்கினன், பெருந்தகைப்
புதல்வனைப் பிரிந்த
இன்னலால் உயிர் துறந்து, இருந்
துறக்கத்துள் இருந்த
மன்னவற் சென்று கண்டு, நின்
மைந்தனைத் தெருட்டி
முன்னை வன்துயர் நீக்குதி
மொய்ம்பினோய் என்றான்.

பொ :—(சிவபெருமான்) மேலும் (செய்யவேண்டுவதனை மனத்தால்) ஆராய்ந்தவனாகி, பெருமைக்குண முடைய (தன்) மைந்தனாய இராமனைப் பிரிந்த துயரத்தால் (தன்) உயிரைத் துறந்து பெருமை வாய்ந்த துறக்கமாகிய வைகுந்தத்தில் தங்கியிருந்த மன்னனாகிய தசரதனைச் சென்று கண்டு, 'வலிமையுடையோனே! நின்மகனாகிய இராமனை மனம் அமைதிகொள்ளும்படி தெளிவுரைபகர்ந்து, முன்பு (அவனைப் பிரிந்தமையால் நின் மனத்தில்) உள்ள பெருந்துயரத்தைப் போக்குவாயாக' எனக் கூறினான்.

கு :— பின்னும் — மேலும். நோக்குதல் என்றது மனத்தால் ஆராய்ந்து பார்த்தலை ; இது நோக்கு அல் நோக்கம் எனப்படும். புதல்வனைப் பிரிந்த இன்னலாவது, கைகேயியின் வரத்தினால் இராமன் காட்டுக்குச் சென்றபொழுது அவனது பிரிவாற்றாமை யாலுளதாய பெருந்துயரம். இருந்துறக்கம் — பெருமைவாய்ந்த மேலுலகம்; வைகுந்தம். மன்னன் என்றது தசரதனை. இராம னது பிரிவாற்றாமையால் உயிர் துறந்த தசரதமன்னனை இந்திரன் முதலிய தேவர்கள் விமானத்தில் ஏற்றிக்கொண்டு பிரமலோகத் திற்கு மேலுள்ள திருமாலுலகிற் சேர்த்தனர் என்ற செய்தி,

'இந்திரன் முதல்வ ராய கடவுளர் யாரு மண்டிச்
சந்திர னனைய தாங்கோர் மானத்தின் தலையில் தாங்கி
வந்தன னெந்தை தந்தை யெனமனங் களித்து வள்ளல்
உந்தியா னுலகி னும்பர் மீள்கிலாவுலகத் துய்த்தார்.

என அயோத்தியா காண்டத்தில் கூறப்பட்டது. சிவபெருமான் திருமாலுலகத்தில் இனிதிருந்த தசரதமன்னனைக் கண்டு, 'நின் மைந்தனாகிய இராமனிடம் சென்று அவன் மனம் அமைதியுறத் தக்க தெளிவுரை பகர்ந்து, அவனது பிரிவினால் நெடுநாட்களாக நின் மனத்திற் கொண்டிருந்த பெருந்துயரத்தைப் போக்கு வாயாக' எனக் கூறியருளினான் என்பதாம். (115)

இச்செய்யுளின் பின் 9, 18, 19, 21, 23, 25, 29, 40, 41, 43, 45, 52, 54, 60, 61, 66, 71, 74-ஆம் பிரதிகளில் பின் வரும் மிகைப் பாடல் காணப்படுகிறது :—

10210 (a) என்ற வாசக மேறமர் கடவுளு ரியம்ப
மன்றல் தங்கிய மலரவன் வாசவற் கூவித்
துன்று தாரினாய் சுரருடன் துருவினை தொடரச்
சென்று மற்றவற் றருகென வணங்கினன் சென்றான்.

*தயரதன் பூதலத்திடைப் புகுதலும், இராமன் அவனை வணங்குதலும்*

10211. ஆதி யான்பணி யருள்பெற்ற
வரசருக் கரசன்
காதன் மைந்தனைக் காணிய
வுவந்ததோர் கருத்தால்

பூத லத்திடைப் புக்கனன்
புகுதலும் பொருவில்
வேத வேத்தனு மவன்மலர்த்
தாண்மிசை வீழ்ந்தான்.

ஆதியான் பணிஅருள் பெற்ற
அரசருக்கு அரசன்
காதல் மைந்தனைக் காணிய
உவந்தது ஓர் கருத்தால்,
பூதலத்திடைப் புக்கனன்;
புகுதலும், பொரு இல்
வேதவேத்தனும் அவன் மலர்த்
தாள்மிசை வீழ்ந்தான்.

பொ:—முதற்கடவுளாகிய சிவபெருமான் அருளிய கட்டளையினைப் பெற்ற வேந்தர் வேந்தனாகிய தசரதன் (தனது) அன்பிற்குரிய மகனாகிய இராமபிரானைக் காண வேண்டி மகிழ்ந்தெழுகின்ற மனத்துடன் நிலவுலகத்தின்கண்ணே வந்தான். அங்ஙனம் வந்த அளவில் ஒப்பற்ற மறைகளால் அறியத்தக்கவனாகிய இராமபிரானும் (தன் தந்தையாகிய) அத் தசரதனுடைய தாமரைமலர்போலும் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

கு:—எல்லார்க்கும் முன்னே தோன்றிய தொன்மையுடையோன் சிவபெருமான் என்பார் ஆதியான் என்றார். அரசருக்கு அரசன்—இராசராசன்; என்றது சக்கரவர்த்தியாகிய தசரதனை. காதல் மைந்தன் என்றது அவனது பேரன்புக்குரிய மகனாகிய இராமபிரானை. வேதங்களால் அறியத்தக்க முதல்வனாகிய திருமாலின் அமிசமாதல் பற்றி இராமனை வேத வேத்தன் எனக் குறித்தார். வேத்தன் என்பது வேத்யன் என்னும் வடசொல்லின் திரிபு. வேத வேத்தியன்—வேதங்களால் அறியத்தக்கவன். (116)

*தயரதன் இராமனை இடர்நீங்க எடுத்துத் தழுவி மகிழ்ந்துரைத்தல்*

10212. வீழ்ந்த மைந்தனை யெடுத்துத்தன்
விலங்கலா கத்தின்
ஆழ்ந்த முந்திடத் தழுவித்தன்
கண்ணினீ ராட்டி

வாழ்ந்த சிந்தையின் மனங்களுங்
களிப்புற மன்னன்
போழ்ந்த துன்பங்கள் புறப்பட
நின்றிவை புகன்ருன்.

வீழ்ந்த மைந்தனை எடுத்து, தன்
விலங்கல் ஆகத்தின்
ஆழ்ந்து அழுந்திடத் தழுவி, தன்
கண்ணின் நீர் ஆட்டி,
வாழ்ந்த சிந்தையின் மனங்களும்
களிப்புற, மன்னன்
போழ்ந்த துன்பங்கள் புறப்பட,
நின்று இவை புகன்ருன்.

பொ :—(தசரத) மன்னன் (தன்னடிகளில்) வீழ்ந்து வணங்கிய புதல்வனுகிய இராமனை (க் கைகளால்) எடுத்துத் தனது மலைபோலும் மார்பிலே நன்ருக அழுந்துமாறு (இறுகத்) தழுவிக் கொண்டு தன் கண்ணினின்று வழியும் நீரினல் (அவனை) நீராட்டி, 'நல்வாழ்வு பெற்றோம்' என்ற எண்ணத்துடன் மன முதலிய அகக்கருவிகள் களிப்புமிக, (மைந்தனைப் பிரிந்த பிரிவு காரணமாகத் தன் மனத்தினுள்ளேயிருந்து) பிளந்தாற் போன்று வருத்துவனவாகிய துன்பங்கள் (மனத்தைவிட்டுப்) புறத்தே நீங்க (இராமனை நோக்கி) நின்று (பின்வரும்) இம் மொழிகளைக் கூறுவானுயினன்.

கு :—விலங்கல்—மலை. ஆகம் — மார்பு. கண்ணின் நீர்—மைந்தனைக் காணப் பெற்ரேம் என்ற மகிழ்ச்சியால் தசரதன் கண்களில் ததும்பி வழிந்த உவகைக் கண்ணீர். மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கும் அடங்க மனங்கள் எனப் பன்மையாற் குறித்தார். பின்வரும் மூன்று செய்யுட்கள் தசரதன் கூற்ருக அமைந்தன. (117)

10213. அன்று கேகயன் மகள்கொண்ட
வரமெனு மயில்வேல்
இன்று காறுமென் னிதயத்தி
னிடைநின்ற தென்னைக்

கொன்று நீங்கல திப்பொழு
தகன்றதுன் குலப்பூண்
மன்ற லாகமாங் காந்தமா
மணியின்று வாங்க.

'அன்று கேகயன் மகள் கொண்ட
வரம்எனும் அயில்வேல்
இன்றுகாறும் என் இதயத்தினிடை
நின்றது, என்னைக்
கொன்றும் நீங்கலது, இப்பொழுது
அகன்றது,உன் குலப்பூண்
மன்றல்ஆகம் ஆம் காந்த மா
மணி இன்று வாங்க.

பொ:—(உனக்கு முடிசூட்ட உறுதிசெய்த) அந்நாளில் கேகய மன்னன் மகளாகிய கைகேயி (என்பால்) வலிதிற்கொண்ட வரம் என்னும் கூரிய வேற்படையானது (அன்று முதல்) இன்று வரையிலும் என் னெஞ்சத்தினுள்ளே (துளைத்துக் கொண்டு) நின்றது; என்னுயிரைப் போக்கிய பின்னரும் (என்னெஞ்சினை விட்டு) நீங்காத அவ்வேற் படையானது இன்று (யான் உன்னைத் தழுவிக் கொண்ட) இப்பொழுது உனது நலஞ்சிறந்த அணிகளையணிந்த மணம்பொருந்திய மார்பென்னும் பெரிய காந்தமணியானது வலித்திழுத்தலால் (என்னெஞ்சினை விட்டு) அகன்றொழிந்தது.

கு:—கைகேயி என்னிடம் பெற்றவரமாகிய அது, உண்மையால் நோக்கும்போது என்னெஞ்சைப் பிளக்கும் கூரிய வேற்படையேயாம் என்பான், 'வரமெனும் அயில்வேல்' என்றான். வரம் என்னும் உண்மையினைமறுத்து வேலெனப் பிறிதொன்றாகக் கூறுதலின் இது அவநுதி என்னும் அணியின் பாற்படும். இரும்பினாலியன்ற வேலாயின் கொன்றபின்னர் உயிர்நீங்குதலின் நெஞ்சத்தைவிட்டு நீங்கிவிடும்; வரமாகிய இவ்வேலோ என்னைக் கொன்றபின்பும் நெஞ்சைவிட்டு நீங்காது துன்புறுத்தியது என்பான், 'கொன்றும் நீங்கலது' என ஏனைவேலினோடு இதனிடையமைந்த வேற்றுமையினை எடுத்துரைத்தான். இங்ஙனம் என்னெஞ்சத்தினுள்ளே நீங்காது வருத்திய வரமெனும் வேற்படை,

யான் இன்று உன்னைத் தழுவிய இப்பொழுது உன்மார்பெனும் காந்தமணியினால் வலித்திழுக்கப்பட்டுப் புறத்தே சென்றொழிந்தது என்பான், 'இன்று உன் குலப்பூண் மன்றல் ஆகமாம் காந்த மாமணி வாங்க இப்பொழுது அகன்றது' என்றான். இரும்பினை வலித்திழுக்கும் ஆற்றலுடையது காந்தமணியாதலின் இராமனது மார்பினைக் காந்தமணியாகவும் தசரதன் நெஞ்சத்திற் பதிந்து வருத்திய வரத்தினை வேற்படையாகவும் உருவகித்தார். வாங்குதல் — வலித்து இழுத்தல். (118)

10214. மைந்த ரைப்பெற்று வானுயர்
தோற்றத்து மலர்ந்தார்
சுந்த ரப்பெருந் தோளினா
யென்றுணைத் தாளிற்
பைந்து கள்களு மொக்கில
ராமெனப் படைத்தாய்
உய்ந்த வர்க்கருந் துறக்கமும்
புகழும்பெற் றுயர்ந்தேன்.

'மைந்தரைப் பெற்று வான்உயர்
தோற்றத்து மலர்ந்தார்,
சுந்தரப் பெருந் தோளினாய்!
என்துணைத் தாளின்
பைந் துகள்களும் ஒக்கிலராம்
எனப் படைத்தாய்;
உய்ந்தவர்க்கு அருந் துறக்கமும்
புகழும்பெற்று உயர்ந்தேன்.

பொ:— 'அழகிய பெரிய தோள்களை யுடையவனே! (பிறரும்) புதல்வர்களைப் பெற்றமையால் வானுற வுயர்ந்த பெரும் புகழுடன் மனமகிழ்ச்சியால் சிறந்து விளங்கினவர்கள், (தசரதனாகிய) என் இரு கால்களிற் படிந்த தூசிகளுக்கும் ஒப்பாக மாட்டார்கள் என (உலகத்தார்) கருதும்படி (திருமாலாகிய நீ எனக்கு மகனாகத் தோன்றிப்) பெருமையை உண்டாக்கினாய். (வினைத் தொடக்கிலிருந்து தப்பி) உய்ந்தவர்களுக்கும் (கிடைத்தற்கு) அரிய வீட்டுலகத்தையும் புகழையும் பெற்றுச் சிறப்பினால் உயர்ந்தேன்.

கு :— 'திருமாலாகிய நீ எனக்கு மைந்தனாக வந்து அவதரித்தமையால் உலகத்து அறிவறிந்த நல்ல புதல்வர்களைப் பெற்றுயர்ந்தார் யாவர்க்கும் கிடைக்காத பெருமையினையும் முற்றத் துறந்த முனிவர்களாலும் எய்துதற்கரிய வீட்டுலகத்தையும் எளிதிற் பெற்றுயர்ந்தேன்' எனத் தசரதன் தன் மைந்தனாகிய இராமபிரானைப் புகழ்ந்து பாராட்டி மகிழ்ந்தான் என்பதாம். வானுயர் தோற்றம் — நிலத்தின் எல்லையைக் கடந்து வானுற உயர்ந்த புகழ்த்தோற்றம். மலர்தல் — மனம் மகிழ்ச்சியால் விரிவடைதல். (119)

10215. பண்டு நான்றொழுந் தேவரும்
முனிவரும் பாராய்
கண்டு கண்டெனைக் கைத்தலங்
குவிக்கின்ற காட்சி
புண்ட ரீகத்துப் புராதனன்
றன்னொடும் பொருந்தி
அண்ட மூலத்தொ ராசனத்
திருத்தினை யழக.

'பண்டு நான் தொழும் தேவரும்
முனிவரும் பாராய்,
கண்டு கண்டு எனைக் கைத்தலம்
குவிக்கின்ற காட்சி;
புண்டரீகத்துப் புராதனன்
தன்னொடும் பொருந்தி
அண்ட மூலத்து ஓர் ஆசனத்து
இருத்தினை, அழக!'

பொ :— அழகின் உருவாகத் திகழ்பவனே! முன்பு (யான் நிலவுலகில் அரசனாக இருந்தபொழுது) என்னால் வணங்கப் பெற்ற தேவர்களும் முனிவர்களும் (இப்பொழுது) என்னைப் பல முறையும் கண்டு கண்டு கைகுவித்து வணங்குங் காட்சியைக் காண்பாயாக. (நின் உந்தித்) தாமரையில் தோன்றிய பழையோனாகிய பிரமதேவனுடன் ஒப்ப அண்டகோளத்தின் மேல் ஓர் ஆசனத்தில் ஒக்க இருக்கச் செய்தனை.

கு:—'எல்வாம் வல்ல இறைவனாகிய நீ எனக்குப் புதல்வனாக வந்து அவதரித்ததனால், யான்முன்பு அயோத்தியரசனாக இருந்த காலத்தில் என்னால் கைகுவித்து வணங்கப் பெற்ற பெருமை வாய்ந்த தேவர் முனிவர் அனைவரும் இப்பொழுது என்னைக் கைகுவித்துத் தொழும் பெருமையினைப் பெற்றுள்ளேன்' எனத்தசரதன் இராமபிரானை மைந்தனாகப் பெற்றமையால் தான் அடைந்த பெருஞ்சிறப்பினை இராமபிரான் முன்னிலையில் எடுத்துரைத்து மகிழ்ந்தான் என்பதாம். 'தொழப்படுந் தேவர் தம்மால் தொழுவிக்கும் தம் தொண்டரையே' (4-112-5) எனவரும் அப்பரருள்மொழி இச்செய்யுட் பொருளுடன் ஒப்பு நோக்கியுணர்தற்குரியதாகும். (120)

*தயரதன் சீதையை யணுகித் தன்னை வணங்கிய*
*சீதைக்குத் தேறுதலுரை பகர்தல்*

10216. என்று மைந்தனை யெடுத்தெடுத்
திறுகுறத் தழுவிக்
குன்று போன்றுள தோளினான்
சீதையைக் குறுகத்
தன்று ணைக்கழல் வணங்கலுங்
கருணையாற் றழுவி
நின்று மற்றிவை நிகழ்த்தினா
னிகழ்த்தரும் புகழோன்.

என்று மைந்தனை எடுத்துஎடுத்து,
இறுகுறத் தழுவி,
குன்று போன்றுஉள தோளினான்,
சீதையைக் குறுக,
தன் துணைக்கழல் வணங்கலும்,
கருணையால் தழுவி
நின்று, மற்றுஇவை நிகழ்த்தினான்,
நிகழ்த்த அரும்புகழோன்.

பொ:—என்று சொல்லி, மலையினையொத்த தோளினையுடையவனான தசரதன் தன் புதல்வனாகிய இராமனைப் பலமுறை

எடுத்து (தன் மார்போடு) இறுகத்தழுவிப் பின்பு (தன் மருகியாகிய) சீதையை அணுகிய அளவில் (அவள்) தன்னுடைய இரண்டு பாதங்களையும் வணங்க, எடுத்துக் கூறுதற்கரிய புகழை யுடையவனாகிய தசரதன் (அவளைத்தன்) கருணையால் ஏந்தி எடுத்து (ப் பின் வரும்) இம்மொழிகளைக் கூறுவானாயினான்.

கு :—குன்றுபோன்றுள தோளினான், நிகழ்த்தரும் புகழோன் என்றது தசரதனை. குறுகுதல்—அணுகுதல். அடுத்துவரும் மூன்று செய்யுட்கள் தசரதன் கூற்றாக அமைந்தன. (121)

10217. நங்கை மற்றுநின் கற்பினை
யுலகுக்கு நாட்ட
அங்கி புக்கிடென் றுணர்த்திய
வதுமனத் தடையேல்
சங்கை யுற்றவர் பெறுவது
முண்டது சரதம்
கங்கை நாடுடைக் கணவனை
முனிவுறக் கருதேல்.

"நங்கை! மற்றுநின் கற்பினை
உலகுக்கு நாட்ட
அங்கி புக்கிடு" என்று உணர்த்திய
அது மனத்து அடையேல்;
சங்கை உற்றவர் பெறுவதும்
உண்டு, அதுசரதம்;
கங்கை நாடுடைக் கணவனை
முனிவுறக் கருதேல்.

பொ :—நங்கையே! நினது கற்பின் பெருமையை உலகத்தார்க்கு நிலைநிறுத்தற்பொருட்டுத் தீயிற் புகுவாயாக என்று (இராமன் உன்னை நோக்கிக்) கூறிய அம்மொழியினை (நின்னைக் குறித்த அவமதிப்புரையாக) நின்மனத்திற் கொள்ளாதே. (ஒன்றைப் பற்றி) ஐயமுற்றவர்கள் (அந்தச் சந்தேகம் தீர்தற் பொருட்டுத் தீயினைச் சான்றாக வைத்துச்) சத்தியஞ் செய்யச் செய்து அவ்வுறுதியினால் தெளிவுபெறுதலும் உண்டு. (அது பற்றி நின்னைத் தீயிற்புகப்பணித்த) கங்கையாறு வளஞ்சுரக்கும்

(கோசல) நாட்டினையுடையவனாகிய நின் கணவனை வெகுளக் கருதாதே.

கு :—'நின் கணவன் உன்னைத் தீயிற்புகச் செய்தது, நினது கற்பின் மாட்சியை உலகத்தாரனைவரும் ஐயுறவுக் கிடனின்றித் தெளிந்து கொள்ளுதற்பொருட்டன்றி நின்னை ஐயுற்று இகழுங் கருத்தினாலன்று. உலகத்தார் எவரேனும் நின்கற்பில் ஐயங் கொண்டிருப்பார் உளராயின் அவர்கள் தாம்கொண்ட ஐயத் தினைப் போக்கி நினது கற்பின் மேன்மையை உள்ளவாறு உணரப்பெறுதல் வேண்டும் என்ற நல்ல நோக்கத்தினாலேயே நின்னைத் தீயிற்புகுமாறு பணித்தனன் ஆதலால் அதுபற்றி நின் கணவன்மேற் சீற்றங் கொள்ளக் கருதாதே' எனத் தசரதன் சீதையைநோக்கி ஆறுதல்மொழி பகர்ந்தான் என்க. சங்கை யுற்றவர் சரதம் அது பெறுவதும் உண்டு என இயையும். சங்கை —சந்தேகம். சரதம்—சத்தியம். கங்கைநாடு என்றது கங்கை யாறு பாய்ந்து வளஞ்சுரக்கும் கோசல நாட்டினை. (122)

10218. பொன்னைத் தீயிடைப் பெய்தலப்
பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது
மனக்கொள றகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக்
கரசியென் றுலகில்
பின்னைக் காட்டுவ தரியதென்
றெண்ணியிப் பெரியோன்.

'"பொன்னைத் தீயிடைப் பெய்தல்
அப்பொன்னுடைத் தூய்மை—
தன்னைக் காட்டுதற்கு" என்பது
மனக்கொளல் தகுதி;
உன்னைக் காட்டினன், 'கற்பினுக்குஅரசி'
என்று, "உலகில்
பின்னைக் காட்டுவது அரியது"என்று
எண்ணி இப்பெரியோன்.

பொ :—(ஒளிமிக்க) பொன்னினை நெருப்பிலிட்டுக் காய்ச்சுதல் அப்பொன்னினது மாசற்ற தூய்மையினைக் காட்டுதற்கேயாகும் என்ற இத்தன்மையினை நின்மனத்திற்கொள்ளுதல் ஏற்புடையதாகும். பெருங்குணங்களையுடையவனாகிய இவ்விராமன் உலகத்தில் (இச்சமயந்தவறினால்) பின்னொரு காலத்து (கற்பின் திறத்தை உலகத்தார்க்கு) ஐயமறத் தெரிவித்தல் அரியதாகும் என்று எண்ணி உன்னை (இப்பொழுது தீயிற்புகச் செய்து) கற்பினுக்கு அரசி என்று (தேவர் முதலிய யாவரும் கண்டு தெளியப்) புலப்படச் செய்தான்.

கு :—இப்பெரியோன், உலகிற் பின்னைக் காட்டுவது அரியது என்று எண்ணி, உன்னை (த் தீப்புகச்செய்து) கற்பினுக்கரசி என்று காட்டினன். பொன்னைத் தீயிடைப் பெய்வது அப்பொன்னுடைத் தூய்மை தன்னைக் காட்டுதற்கு என்பது, இராமன் செய்த செயலின் நோக்கத்தினை விளக்குதற்குரிய எடுத்துக் காட்டாக அமைந்தது. (123)

10219. பெண்பி றந்தவ ரருந்ததி
யேமுதற் பெருமைப்
பண்பி றந்தவர்க் கருங்கல
மாகிய பாவாய்!
மண்பி றந்தக முனக்குநீ
வானின்றும் வந்தாய்
எண்பி றந்தநின் குணங்களுக்
கினியிழுக் கிலையால்.

‘பெண் பிறந்தவர், அருந்ததியே
முதல் பெருமைப்
பண்பு இறந்தவர்க்கு அருங்கலம்
ஆகிய பாவாய்!
மண் பிறந்தகம் உனக்கு; நீ
வான் நின்றும் வந்தாய்;
எண்பு இறந்த நின் குணங்களுக்கு
இனி இழுக்கு இலையால்.

பொ :—(பெருந்தக்க) பெண்ணாகப் பிறந்தவர்களுள் அருந்ததி முதலான பெருமைக் குணங்களால் மிக்கவர்க்கு அரிய அணிகலனாகத் திகழும் பாவைபோல்வாளே! உனக்குப் பிறந்தகமோ (ஏனையோர்க்குப் போலன்றிப்) பூமியேயாகும். நீ (பரமபதமாகிய) வானகத்திலிருந்து (மண்ணகத்தே) வந்து தோன்றினாய். (இவ்வானுலகும் மண்ணுலகும் மதிக்கும்படி விளங்கும்) நின்னுடைய எண்ணிறந்த குணங்களுக்கு இனி யாதொரு குற்றமும் இல்லை.

கு :—பெண் பிறந்தவர் என்றது, பெண்டிர்க்குரிய இன்றியமையாத கற்பென்னுந்திண்மையுடையராய்ப் பிறந்தமகளிரை. கற்புடைய நங்கையர்க்கு எடுத்துக் காட்டாகத் திகழ்பவள் அருந்ததி என்னும் உலக வழக்குப்பற்றி 'அருந்ததியே முதற் பெருமைப் பண்பிறந்தவர்' எனக்குறித்தான். பண்பு இறந்தவர்—குணங்களால் மிக்கோர். இறத்தல்—மிகுதல். 'இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்' (கலித்-9) என்புழி இச்சொல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காண்க. அருங்கலம்—அரிய தொழிற்றிறம் வாய்ந்த அணிகலன். பாவைபோல்வாளாகிய சீதையைப் பாவாய் என விளித்தான். 'உனக்குப் பிறந்தகம் மண்; நீ வானின்றும் வந்தாய்' என, ஏனைமகளிர்போற் கருவுற்றுப் பிறவாத பிராட்டியின் அருமையில் எளிய அழகினை வியந்துரைத்தான். கணவனது கருத்தின் வழித்தீயிற் பாய்ந்து நினது கற்பின் மாட்சியை உலகத்தார் உணரச்செய்தனையாதலின் நின் எண்ணிறந்த பண்புகளுக்கு இனியாதொரு குற்றமும் இல்லை என்பான், 'எண்பு இறந்த நின் குணங்களுக்கு இனி இழுக்கில்லை' என்றான். எண்பு — எண்ணுதல். இறத்தல் — கடத்தல். (124

இச்செய்யுளின்பின் 41, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது :—

10219 (a) எனக்கு மெண்வகை முனிவர்க்கு மிமையவருலகந்
தனக்கு மற்றிவள் தாயென மனக்கொளத் தகுதி
மனத்தின் யாவர்க்கு மறுவறுத்திடுமிவண் மலராள்
புனத்து ழாய்முடிப் புரவல னீநின்ற புகழோய்.

இச்செய்யுள் 9, 18, 19, 21, 25, 29, 41, 52, 54, 60—63, 74 என்னும் எண்ணுள்ள சுவடிகளில் 'கண்ணினீர்' என்னும் முதற் குறிப்புடைய 126-ஆம் பாடலின் பின் உளது.

## தயரதன் இலக்குவனைத் தழுவிப் பாராட்டுதல்

10220. என்னச் சொல்லியவ் வேந்திழை
திருமனத் தியாதும்
உன்னச் செய்வதோர் முனிவின்மை
மனங்கொளா வுவந்தான்
பின்னைச் செம்மலவ் விளவலை
யுள்ளன்பு பிணிப்பத்
தன்னைத் தானெனத் தழுவினன்
கண்கணீர் ததும்ப.

என்னச் சொல்லி, அவ் ஏந்திழை
திருமனத்து யாதும்
உன்னச் செய்வது ஓர்முனிவுஇன்மை
மனம்கொளா உவந்தான்;
பின்னைச் செம்மல் அவ்இளவலை,
உள்அன்பு பிணிப்ப,
தன்னைத்தான் எனத் தழுவினன்,
கண்கள் நீர்ததும்ப.

பொ:—என்று கூறித் தலைமைச் சிறப்புடையோனாகிய தசரதன் ஏந்திய அணிகலன்களையுடையாளாகிய அச்சீதையின் திருத்தகவினதாகிய உள்ளத்திலே சிறிதும் நினைக்கச் செய்வதோர் வெறுப்பில்லாமையை (த்தன்) மனத்திற்கொண்டு மகிழ்ந்தான்; பின்பு அவ் இளையோனாகிய இலக்குவனைத் தன் உள்ளத்துள் நிறைந்த அன்பு பிணிப்பத் தன்கண்களினின்றும் உவகை நீர்ததும்பத் தன்னையே தான் தழுவிக்கொண்டான் என்னும்படி (ஈருடம்பு ஒருடம்பெனத் தோன்றுமாறு இறுகத்) தழுவிக்கொண்டான்.

கு:—செம்மல், சொல்லி, முனிவின்மை மனங்கொளா, உவந்தான் எனவும், இளவலை உள்ளன்பு பிணிப்ப, கண்ணினீர் ததும்ப, தன்னைத் தான் எனத் தழுவினன் எனவும் இரு தொடராக இயைக்க. செம்மல் — தலைமைச் சிறப்புடையோன்; என்றது, தசரதனை. ஏந்திழை என்றது சீதையை. உன்னச் செய்தல் — நினைந்து வருந்தச் செய்தல். மனங்கொளா—மனத்

திற்கொண்டு. பிணிப்ப, ததும்ப, என என்னும் செயவென்னெச்சங்கள் தழுவினன் என்னும் வினைகொண்டு முடிந்தன. (125)

10221. கண்ணி னீர்ப்பெருந் தாரைமற்
றவன்சடைக் கற்றை
மண்ணி னீத்தமொத் திழிதரத்
தழீஇநின்று மைந்த
எண்ணி னீக்கரும் பிறவியு
மென்னெஞ்சி னிறந்த
புண்ணு நீக்கினை நுமையனைத்
தொடர்ந்துடன் போந்தாய்.

கண்ணின்நீர்ப் பெருந்தாரை மற்று
அவன் சடைக் கற்றை
மண்ணின் நீத்தம் ஒத்து இழிதர,
தழீஇநின்று, 'மைந்த!
எண் இல் நீக்க அரும்பிறவியும்
என்நெஞ்சின் இறந்த
புண்ணும் நீக்கினை, நுமையனைத்
தொடர்ந்து உடன் போந்தாய்'.

பொ :—(தசரதன், தன்) கண்கள் சொரியும் நீர்ப்பெருக்கானது, அவ்இலக்குவனது சடைத் தொகுதியினின்றும் மண்ணிலே பெருவெள்ளம்போல்பாய (அவனை)த் தழுவிநின்று, 'மகனே! நீ உன் தமையனை விடாது தொடர்ந்து உடன்போந்தாய். (ஆதலால்) எண்ணில்லாத நீக்குதற்கு அரிய (உன்) பிறப்பினையும் (நின் தந்தையாகிய) என்னுள்ளத்தில் மிகுந்துள்ள (துன்பமாகிய) புண்ணினையும் (ஒருசேர) நீக்கினை.

கு:—தசரதன் தன் இளையமைந்தன் இலக்குவனை அன்புடன் தழுவி நின்றநிலையில் அவன் கண்களின் நீர், இலக்குவனது சடைக் கற்றையை நனைத்து அச்சடையினின்றும் நிலத்திலே பெருவெள்ளம்போல் பாய்ந்தோடியது என்றவாறு. எண் இல் பிறவி, நீக்க அரும்பிறவி எனத் தனித்தனி இயையும். நுமையன்—நின் அண்ணன்; என்றது இலக்குவனுக்குத் தமைய

ளுகிய இராமனை. 'நுமையனைத் தொடர்ந்து நீ உடன்போந்த மையால் (நின்) பிறவியும் என்னெஞ்சிற் புண்ணும் நீக்கினை' என இலக்குவனைத் தசரதன் நெஞ்ச நெக்குருகிப் பாராட்டினுன் என்பதாம். (126)

10222. புரந்த ரன்பெரும் பகைஞனைப்
போர்வென்ற வுன்றன்
பரந்து யர்ந்ததோ ளாற்றலே
தேவரும் பலரும்
நிரந்த ரம்புகல் கின்றது
நீயிந்த வுலகின்
அரந்தை வெம்பகை துடைத்தற
நிறுத்தினை யைய.

'புரந்தரன் பெரும் பகைஞனைப்
போர்வென்ற உன்தன்
பரந்து உயர்ந்த தோள் ஆற்றலே
தேவரும் பலரும்
நிரந்தரம் புகல்கின்றது;
நீஇந்த உலகின்
அரந்தை வெம்பகை துடைத்து, அறம்
நிறுத்தினை—ஐய!

பொ:—ஐயனே! இந்திரனுக்குப் பெரும்பகைவனுகிய இந்திரசித்து என்பானைப் போரிலே (பொருது) வெற்றிகொண்ட உனது விரிந்து உயர்ந்த தோள்வன்மையே தேவர்களும் (ஏனைய) பலரும் எப்பொழுதும் புகழ்ந்து பாராட்டுவதாகும். நீ இவ்வுலகத்திற்குத்துன்பத்தை யுண்டாக்கும் கொடிய (அரக்கராகிய) பகையைப்போக்கி அறத்தை நிலைபெறச் செய்தாய்.

கு:—புரந்தனன்—இந்திரன். பெரும்பகைஞன் இந்திரசித்து. நிரந்தரம்—எப்பொழுதும். புகலுதல்—புகழ்ந்து பாராட்டுதல். அரந்தை—துன்பம். துடைத்தல்— அறவே போக்குதல். (127)

**பின்னர் இராமனை நோக்கி 'யான் உனக்குத் தருவதாகிய ஒரு வரத்தினைக் கேள்' எனத் தயரதன் வற்புறுத்த கைகேயியையும் பரதனையும் ஏற்றுக்கொள்ளுமாறு இராமன் வேண்டுதல்**

10223. என்று பின்னரு மிராமனை
யானுனக் கீவ
தொன்று கூறுதி யுயர்குணத்
தோயென வுனையான்
சென்று வானிடைக் கண்டிடர்
தீர்வெனென் றிருந்தேன்
இன்று காணப்பெற் றேனினிப்
பெறுவதென் னென்றான்.

என்று, பின்னரும், இராமனை,
'யான் உனக்கு ஈவது
ஒன்று கூறுதி, உயர்குணத்தோய்!'
என, 'உனை யான்
சென்று வானிடைக்கண்டு, இடர்
தீர்வென் என்று இருந்தேன்;
இன்று காணப்பெற்றேன்; இனிப்
பெறுவது என்?' என்றான்.

பொ:—என்று கூறி (த் தசரதன்) மீண்டும் இராமனை (நோக்கி) 'உயர்குணங்களையுடையோனே! யான் உனக்குத் தரத்தக்கதொரு வரத்தைக் கேட்பாயாக' என்று சொல்ல, (அதுகேட்ட இராமன்) 'யான் (தந்தையாகிய) உன்னை வானுலகத்திற்சென்று கண்டு வணங்கி (எனது) துயரத்தைப் போக்குவேன் என்று நினைத்திருந்தேன். (இப்பொழுது நீயே என்பால் வந்தமையால்) இன்று (உன்னைக்) கண்டு வணங்கும் பேறுபெற்றேன். (இப்பேற்றினும் சிறந்ததாக) இனி (யான்) பெறுதற்குரியது யாதுளது?' எனக் கூறினான்.

கு:—'யான் உனக்கு ஈவது ஒன்று கூறுதி' எனக்கூறிய தசரதனுக்கு, 'தந்தையாகிய நின்னைக்கண்டு வணங்கி என்

மனத்துயரைப் போக்கினேன். நின்னைக் காணப்பெறுதலாகிய இதனினும் சிறந்ததாக யான் வேண்டிப் பெறுதற்குரிய பேறு வேறு யாதுளது?' என இராமன் மறுமொழி கூறினன் என்க. இடர் என்றது, மைந்தனாகிய தன்னைப் பிரிந்த ஆற்றொணாத் துயரத்தால் தன் தந்தை தசரதன் இறந்துபட அவனது பெரும் பிரிவினால் இராமனுற்ற பெருந்துயரினை. (128)

10224. ஆயி னும்முனக் கமைந்ததொன்
றுரையென வழகன்
தீய ளென்றுநீ துறந்தவென்
றெய்வமு மகனும்
தாயுந் தம்பியு மாம்வரந்
தருகெனத் தாழ்ந்தான்
வாய்தி றந்தெழுந் தார்த்தன
வுயிரெலாம் வழுத்தி.

'ஆயினும், உனக்குஅமைந்தது ஒன்று
உரை'என, அழகன்,
'தீயள் என்று நீ துறந்த என்
தெய்வமும் மகனும்,
தாயும் தம்பியும்ஆம் வரம்
தருக' எனத் தாழ்ந்தான்;
வாய் திறந்து எழுந்து ஆர்த்தன
உயிரெலாம் வழுத்தி.

பொ :— 'ஆனாலும், உனக்குப் பொருந்தியதொரு வரத்தை (நீ) கேட்பாயாக' என (த் தசரதன்) கூற, (அது கேட்ட) அழகனாகிய இராமன், 'தீயவள் என்று நீ விலக்கிய என் தெய்வமாகிய கைகேயியும் (அவள்) மைந்தன் பரதனும் (எனக்கு முறையே) தாயும் தம்பியும்ஆகும் வரத்தினைத் தந்தருள்வாயாக' என்று கூறி இறைஞ்சினன். (அந் நிலையில் இராமனது அருங் குணத்தினைக்கண்டு உலகில் உள்ள) உயிர்களெல்லாம் கிளர்ந் தெழுந்து (இராமனைத்) துதித்து வாய்திறந்து ஆரவாரித்தன.

கு :— நீ என்பால் விரும்பி வேண்டுதற்கென ஒன்றும் இல்லையாயினும் எனது விருப்பத்தின் வண்ணம் உனக்குப் பொருந்திய

தொன்றைக் கேட்பாயாக என்பான், 'ஆயினும் உனக்கு அமைந்தது ஒன்று உரை' என்ருன். அழகன் என்றது, அந்தரில் அழகனாகிய இராமனை. கைகேயி தன்னிடம் பெற்றுள்ள இரு வரங்களால் இளையோனாகிய தன் மகன் பரதன் நாடாளவும் மூத்த மைந்தனாகிய இராமன் வனம்புகவும் இரக்கமின்றி வற்புறுத்திய நிலையில் தன் ஆருயிர் மைந்தன் இராமனைப் பிரிந்து ஆற்ருெணு நிலையினனாகிய தசரதன் கைகேயியைத் தன்மனைவியல்லள் எனவும் அவள் பெற்ற மைந்தன் பரதனைத் தன் மகனல்லன் எனவும் வெறுத்து விலக்கிய செய்தி,

'இன்னே பலவும் பகர்வான் இரங்கா.தாளை நோக்கிச்
சொன்னேன் இன்றே யிவளென் தாரமல்லள் துறந்தேன்
மன்னே யாவான் வரும்பப் பரதன் றனையும் மகனென்
றுன்னேன் முனிவா அவனும் ஆகானுரிமைக் கென்ருன்.'

என்ற அயோத்தியாகாண்டச் செய்யுளால் அறியப்படும். இவ்வாறு தன் தந்தை தசரதனுல் வெறுத்து விலக்கப்பட்ட கைகேயியைத் தன் அன்புக்குரிய அன்னையாகவும் அவள் பெற்ற மைந்தன் பங்கமில் பெருங் குணத்துப் பரதனைத் தன் அன்புடைத் தம்பியாகவும் போற்றி மகிழ்தற்குரிய உறவுரிமையினைத் தந்தை தசரதன்பால் வேண்டிப் பெற விரும்பிய இராமன், 'தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும் தாயும் தம்பியும் ஆம் வரம் தருக' எனத் தன் தந்தையை இரந்து வேண்டிக்கொண்டான் என்பதாம். கைகேயியையும் அவள் மைந்தன் பரதனையும் தன் தந்தை தசரதன் இவர் எனக்கு உறவல்லர் என வெறுத்து விலக்கிய நிலையில், அவ்விருவருடன் தந்தைக்கும் தனக்கும் உள்ள உறவுமுறையினைச் சுட்டிக் கூறுதல் முறையன்று எனக் கருதிய இராமன், தன் தந்தையை நோக்கி, 'நீ தீயள் என்று துறந்த என் தெய்வமும் மகனும், தாயும் தம்பியும் ஆம் வரம் தருக' என வேண்டியதாகக் கம்பர் அமைத்த கவித்திறம் வியந்து பாராட்டி மகிழத் தக்கதாகும். (129)

தயரதன் மறுமொழி

10225. வரத கேளெனத் தயரத
னுரைசெய்வான் மறுவில்
பரத னன்னது பெறுகதான்
முடியினைப் பறித்திவ்

விரத வேடமற் றுதவிய
பாவிமேல் விளிவு
சரத நீங்கல தாமென்ருன்
றழீஇயகை தளர.

'வரதகேள்!' எனத் தயரதன்
உரை செய்வான்; 'மறுஇல்
பரதன் அன்னது பெறுக! தான்
முடியிணைப் பறித்து இவ்
விரத வேடம் மற்று உதவிய
பாவிமேல் விளிவு
சரதம் நீங்கலதாம்' என்ருன்,
தழீஇய கைதளர.

பொ:—('வேண்டுவார்வேண்டும்) வரங்களைத் தருபவனே! யான் கூறுவதனைக் கேட்பாயாக' என்று தசரதன் (இராமனை நோக்கிப் பின் வருமாறு) கூறுவான்: 'குற்றமற்ற பரதன் (எனக்குமகனும்) அவ் வுறவினைப்பெறுவானுக. (உனக்குச் சூட்டுதற்கு உரிய) முடியினை (ச் சூட்ட வொண்ணுது தடுத்துப்) பறித்து (நினக்கு ஒவ்வாத) இத்தவவேடத்தைத் தந்த பாவி யாகிய கைகேயியின் மீது (யான் கொண்டுள்ள) கோபம் நீங்காதென்பது உறுதி' என்று (இராமனைத்) தழுவிய தன்கைகள் நெகிழ்ந்து தளரக் கூறினுன்.

கு:—'வரந்தரும் வள்ளலாகிய நீ என்பால் வேண்டிய வரத்தினுள், குற்றமற்ற பரதனை மகனுகக்கொண்டு அவனை உனக்குத் தம்பியாக அளித்தலாகிய அ.நற்குமட்டும் இசைகின் றேன். நாட்டின் வேந்தனுக முடிபுனைதற்கு அமைந்த உனக்குரிய முடியினைப் பறித்து நினக்கு ஒவ்வாத இத்தவ வேடத்தைத் தந்த கொடியோளாகிய கைகேயியை என்மனைவி யாக ஏற்று உன்தாயாக அளித்தற்கு என்மனம் இசையாதென் பது உறுதி' என்று தசரதன் இராமன்கேட்ட வரத்தில் ஒன்றிற்கு இசைந்து மற்ருென்றிற்குத் தான் இசையாமையைப் புலப் படுத்தினுன் என்பதாம். தான்பாவியென வெறுத்து விலக்கிய கைகேயியை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று தன்மைந்தன்

இராமன் வேண்டியதற்கு உள்ளம் இசையாமையால் இராமனைத் தழுவியிருந்த தசரதன் கைகள் தளர்ந்து நழுவின என்க. (130)

கைகேயியின்மேல் தயரதன் கொண்ட தணியாக் கோபம் இராமனது உரையால் நீங்குதல்

10226. ஊன்பி ழைக்கிலா வுயிர்நெடி
தளிக்குநீ ளரசை
வான்பி ழைக்கிது முதலென
தாள்வுற மதித்து
யான்பி ழைத்ததல் லாலென்னை
யீன்றவெம் பிராட்டி
தான்பி ழைத்ததுண் டோவென்று
னவன்சலந் தவிர்ந்தான்.

'ஊன் பிழைக்கிலா உயிர்நெடிது
அளிக்கும்நீள் அரசை
வான்பிழைக்கு இதுமுதல் எனாது,
ஆள்வுற மதித்து
யான் பிழைத்தது அல்லால்,என்னை
ஈன்ற எம்பிராட்டி—
தான்பிழைத்தது உண்டோ?' என்றான்;
அவன் சலம் தவிர்ந்தான்.

பொ:— அது கேட்ட இராமன், உடம்பினைவிட்டு நீங்க கில்லாத உயிர்களை நெடுங்காலம் புரத்தற்குரிய நெடிய அரசுரிமையை 'இது பெருங்குற்றங்களுக்குக் காரணமாவது' என்று கருதாது ஏற்று ஆளுதற்கு மதித்து யான் தவறு செய்ததல்லது, என்னைப் பெற்று வளர்த்த எம்பெருமாட்டியாகிய கைகேயிதான் தவறு செய்தது உண்டோ?' என வினவினான். (அது கேட்ட) அந்தத் தசரதன் வெகுளி நீங்கினான்.

கு:—ஊன் — உடம்பு. 'பிழைக்ககில்லா' எனற்பாலது பிழைக்கிலா என நின்றது; தரிக்ககில்லேன் எனற்பாலது 'தரிக்கிலேன்' (திருவாசகம் - திருச்சதகம் - 61) என வந்தமை காண்க. பிழைத்தல் — நீங்குதல்; உய்தல் எனினும் ஆம்.

சூரியகுலத்து வேந்தர்க்குரியதாகப் பன்னெடுங்காலம் நிலை பெற்றுவரும் அரசுரிமை என்பான் 'நீளரசு' என்றான். மன்னுயிர்களைத் தன்னுயிர்போற் புரத்தலில் வல்ல மன்னர் மன்னனாகிய நீயிருக்கவும், விளைவறியாத இளையோனாகிய யான் இவ்வரசுரிமையை ஏற்றுக் கொண்டதே பெருங்குற்றமாம் என்பான், 'இது வான்பிழைக்கு முதல் ஏனது ஆள்வுறமதித்து யான் பிழைத்தது' என்றான். 'பின் குற்ற மன்னும் பயக்கும் அரசென்றல் பேணேன் முன் கொற்றமன்னவன் முடிகொள் கெனக் கொள்ள மூண்டது, என் குற்றமன்றே' (அயோத்தியா-நகர்நீங்கு 132) என இராமன் இலக்குவனை நோக்கி முன்னர்க் கூறியுள்ளமை இங்கு நினைக்கத்தகுவதாகும். இது — இவ்வரச பதவி. வான்பிழை—பெருங்குற்றம். முதல்—காரணம். பெற்ற தாயாகிய கோசலை கையில் வளராது சிற்றன்னையாகிய கைகேயி கையில் வளர்ந்தவன் இராமனாதலின், தன்னை அன்பினால் வளர்த்த கைகேயியின்பால் தனக்குள்ள பேரன்பும் பெருமதிப்பும் தோன்ற 'எனையீன்ற எம் பிராட்டி' என்றான். தன் அன்புக் குரிய மைந்தனாகிய யான் சுமக்க விருந்த அரச பதவியாகிய பெருஞ்சுமையை நீக்கிப் புண்ணியத்துறைகளாடித் தீயோரை ஒறுத்து நல்லோரைக் காக்கும் இவ்வாய்ப்பினை அருளிய எம் அன்னையின் செயல் குற்றமுடையதன்று என்பான் 'என்னை யீன்ற எம்பிராட்டி தான் பிழைத்ததுண்டோ?' என்றான். இராமன் கூறிய இம்மொழியைக்கேட்ட அளவில் இராமாவதாரத்தின் மெய்ம்மையையுணர்ந்த தசரதன் தான் கைகேயியின்பாற் கொண்ட வெகுளியை விட்டொழித்தான் என்பார், 'அவன் சலம் தவிர்ந்தான்' என்றார். அவன் என்றது, தசரதனை. சலம் — வெகுளி. (131)

10227. எவ்வ ரங்களுங் கடந்தவ
னப்பொரு ளிசைப்பத்
தெவ்வ ரம்பறு கானிடைச்
செலுத்தினாட் கீந்த
அவ்வ ரங்களு மிரண்டவை
யாற்றினாற் கீந்த
இவ்வ ரங்களு மிரண்டென்றார்
தேவரு மிரங்கி.

எவ் வரங்களும் கடந்தவன்
அப்பொருள் இசைப்ப,
'தெவ்வரம்பு அறு கானிடைச்
செலுத்தினட்கு ஈந்த
அவ் வரங்களும் இரண்டு ; அவை
ஆற்றினற்கு ஈந்த
இவ் வரங்களும் இரண்டு' என்ருர்,
தேவரும் இரங்கி.

பொ :—எத்தகைய வரங்களின் பயனையும் கடந்த முழுமுதற் கடவுளாகிய இராமபிரான் அத்தகைய பொருள் மொழியைச் சொல்ல (க் கேட்ட) தேவர்களும் (இராமன்பால்) பரிவுடையராய், 'எல்லையற்ற பகைவர்களையுடைய காட்டிலே (இராமனைச்) செல்லப்பணித்தவளாகிய கைகேயிக்குத் (தசரதன்) தந்த வரங்களும் இரண்டு ; அவற்றைப் பின்பற்றி யொழுகினவனுகிய இராமபிரானுக்குத் (தசரதன்) தந்த இந்த வரங்களும் இரண்டு' என்று கூறினர்கள்.

கு :—எவ்வரங்களையுங் கடத்தலாவது, கடவுளர் முதலியோர்பாற் பெறும் எத்தகைய வரங்களாயினும் அவற்றின் பயன்களாகிய நலந்தீங்குகள் எவையும் தன்னைப் பற்ருதவாறு வினையின் நீங்கி அப்பாற்பட்டு விளங்குதல். கடந்தவன் என்றது திருமாலின் அமிசமாகிய இராமனை. அப்பொருள் என்றது, கைகேயியைக் குற்றமற்றவளென ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் என்னும் வரம். வரம்பறுதெவ்வினையுடையகான் என விரியும். தெவ்—பகை. கான்—காடு. செலுத்தினள்—கைகேயி. அவை ஆற்றினன், அவ்வரங்களின்படி ஒழுகியவனுன இராமன். 'தான் பெற்ற அரசுரிமையைத் தம்பி பரதனுக்குத் தந்து இராமன் காட்டிற்குச் செல்லுமாறு செய்தற்குக் கைகேயி தசரதனிடம் இரண்டு வரங்களைக் கேட்டுப் பெற்ருற் போலவே அவளது ஏவலை நிறைவேற்றிய இராமனும் அவளைத் தன் தாயாகவும் அவள் மைந்தன் பரதனைத் தன் தம்பியாகவும் உறவுரிமை கொள்ளுதற்குத் தசரதனிடம் இருவரங்களைக் கேட்டுப் பெறுதல் இன்றியமையாததாயிற்று' எனத் தேவர்கள் இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யும் இராமனது சால்புடைமையினையும் அன்பின் பெருமையையும் நினைந்து நெஞ்சம் நெக்குருகினர்கள் என்பதாம். (132)

### வரமிரண்டையும் அளித்த தயரதன் விமானத்திலேறித் துறக்கத்தை யடைதல்

10228. வரமி ரண்டளித் தழகனை
யிளவலை மலர்மேல்
விரவு பொன்னினை மண்ணிடை
நிறுத்திவிண் ணிடையே
உரவு மானமீ தேகின
னும்பரு முலகும்
பரவு மெய்யினுக் குயிரளித்
துறுபுகழ் படைத்தோன்.

வரம்இரண்டு அளித்து, அழகனை,
இளவலை, மலர்மேல்
விரவு பொன்னினை, மண்ணிடை
நிறுத்தி, விண்ணிடையே
உரவு மானம்மீது ஏகினன்—
உம்பரும் உலகும்
பரவும் மெய்யினுக்கு உயிர்அளித்து,
உறுபுகழ் படைத்தோன்.

பொ :—வானோராகிய தேவர்களும் மற்றையுலகத்தார்களும் சிறப்பித்துரைக்கும் வாய்மையை நிலை நிறுத்தற் பொருட்டுத் தன் உயிரைக் கொடுத்து, மிக்க புகழை ஈட்டியவனாகிய தசரதன் (இராமனுக்கு அந்த) வரங்கள் இரண்டினையும் தந்து, அழகனாகிய இராமனையும் (அவன்) தம்பி இலக்குவனையும் தாமரை மலரிற் பொருந்திய (திருமகளாகிய) சீதையையும் மண்ணுலகில் வாழும்வண்ணம் நிறுத்தி வலிமை வாய்ந்த விமானத்தின் மீதேறி விண்ணுலகினை அடைந்தான்.

கு :— உம்பரும் உலகும் பரவும் மெய்யினுக்கு உயிர் அளித்து உறுபுகழ் படைத்தோன் என்றது, வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளலாகிய தசரதனை. உறுபுகழ் படைத்தோன், அளித்து, நிறுத்தி, மானமீது விண்ணிடையே ஏகினன் எனமுடிக்க. உரவு — வலிமை. மானம் — விமானம். (133)

தேவர்கள் இராமனை நோக்கி 'வீர நீ வேண்டும் வரம் கேள்' என 'போரில் மாண்ட குரங்குகள் உயிர் பெற்றெழுமாறும் குரங்குகள் செல்லும் வனம் முதலிய இடங்களிற் காய் கனிகள் மிகுமாறும் அருள்புரிக' என இராமன் வேண்டுதல்

10229. கோட்டு வார்சிலைக் குரிசிலை
யமரர்தங் குழாங்கள்
மீட்டு நோக்குரு வீரநீ
வேண்டுவ வரங்கள்
கேட்டி யாலென வரக்கர்கள்
கிளர்பெருஞ் செருவில்
வீட்ட மாண்டுள குரங்கெலா
மெழுகென விளம்பி.

கோட்டு வார்சிலைக் குரிசிலை
அமரர்தம் குழாங்கள்
மீட்டும் நோக்குரு, 'வீர! நீ
வேண்டுவ வரங்கள்
கேட்டியால்' என, 'அரக்கர்கள்
கிளர்பெருஞ் செருவில்
வீட்ட, மாண்டுள குரங்கு எலாம்
எழுக!' என விளம்பி,

பொ.—வளைக்கின்ற நெடியவில்லினையுடைய ஆடவரிற் சிறந்தோனான இராமனைத் தேவர் கூட்டத்தார் மீண்டும் நோக்கி 'வீரனே! நீ விரும்பிய வரங்களை (எம்மிடத்துக்) கேட்பாயாக' எனக் கூற (அது கேட்ட இராமன்) 'சொல்லுதற்கரிய கடும் போரிலே அரக்கர்கள் அழிக்க இறந்துபோன குரங்குகள் யாவும் (உயிர்பெற்று) எழுவனவாகுக' என்றொரு வரத்தினைவேண்டி,

கு:—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். விளம்பி என்னும் வினையெச்சம் அடுத்த செய்யுளில் வரும் என்றான் என்னும் வினைகொண்டு முடியும். கோட்டுதல் — வளைத்தல். குரிசில் என்றது இராமனை. வீட்டுதல் — அழித்தல். (134)

10230. பின்னு மோர்வரம் வானரப்
பெருங்கடல் பெயர்ந்து
மன்னு பல்வன மால்வரைக்
குலங்கள்மற் றின்ன
துன்னி டங்கள்காய் கனிகிழங்
கோடுதேன் றுற்ற
இன்னு ணீருள வாகென
விளம்பிடு கென்றான்.

பின்னும் ஓர் வரம், 'வானரப்
பெருங்கடல் பெயர்ந்து
மன்னு பல் வனம், மால்வரைக்
குலங்கள், மற்று இன்ன
துன் இடங்கள், காய் கனி
கிழங்கோடு தேன் துற்ற,
இன் உண் நீர் உளவாக! என
விளம்பிடுக' என்றான்.

பொ :—பெரிய கடல்போலும் குரங்குகள் இடம் பெயர்ந்து நிலைபெறுதற்குரிய பல காடுகளும் பெரிய மலைத் தொகுதிகளும் இவைபோன்று (குரங்குகள்) நெருங்கியுள்ள பல்வேறிடங்களும் (அக்குரங்குகளுக்கு உணவாகிய) காய் கனி கிழங்கு தேன் நெருங்கியுள்ளனவாகவும் இனியதாய்ப் பருகுதற்குரிய நீர் உள்ளனவாகவும் ஆகுக என மற்றும் ஒருவரம் (தருவதாகக்) கூறுதல் வேண்டும் என்று கூறினன்.

கு :—துன்னிடங்கள் காய் கனி கிழங்கு தேன் துற்ற இன் உண் நீர் உளவாக எனப் பின்னும் ஓர் வரம் விளம்பிடுக என்றான் என இயைத்துரைக்க. துறுதல் — நெருங்குதல். (135)

தேவர்கள் அருளிய வரத்தால், போரில் மாண்ட குரங்குகள் யாவும் உயிர் பெற்றெழுந்து இராமனை வணங்குதல்

10231. வரந்த ரும்முதன் மழுவலான்
முனிவரர் வானோர்
புரந்த ராதிமற் றேனையோர்
தனித்தனி புகழ்ந்தாங்

கரந்தை வெம்பிறப் பறுக்குநா
யகநின தருளால்
குரங்கி னம்பெறு கென்றன
ருள்ளமுங் குளிர்ப்பார்.

வரம் தரும் முதல் மழுவலான்,
முனிவரர், வானோர்,
புரந்தராதி, மற்று ஏனையோர்,
தனித்தனி புகழ்ந்து ஆங்கு
'அரந்தை வெம்பிறப்பு அறுக்கும்
நாயக! நினது அருளால்
குரங்கு இனம் பெறுக!' என்றனர்,
உள்ளமும் குளிர்ப்பார்.

பொ:—வரத்தினையருளும் முதல்வனாகிய பிரமதேவனும் மழுப்படையினையுடைய உருத்திர மூர்த்தியும் சிறந்த முனிவர்களும் தேவர்களும் இந்திரன் முதலிய ஏனையோரும் அவ்விடத்தே (இராமபிரானைத்) தனித்தனியே (பாராட்டிப்) புகழ்ந்து உள்ளங் குளிரப் பெற்றவர்களாய், 'துன்பத்திற்கு நிலைக்களமாகிய கொடிய பிறவிநோயை வேரறுக்கும் முதல்வனே! நினது திருவருளால் குரங்கினங்கள் (உயிரும் உணவும் பெறுதலாகிய அவ்விருவரங்களையும்) பெறுவனவாகுக' எனக் கூறினார்கள்.

கு:—படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களுள் முதற்றொழிலாகிய படைப்பினைச் செய்தல் பற்றிப் பிரமனை 'வரந்தரும் முதல்' எனக்குறித்தார். முனிவரர் — தேவ இருடிகள். புரந்தராதி — இந்திரன் முதலியோர். அரந்தை — துன்பம். 'யாவர்க்கும் இறைவனாகிய நீ எங்களை நோக்கி இவ்வரங்களைக் கேட்டனை. இவ்வரங்களை யாங்கள் எங்கள் வன்மையாலன்றி நின் அருளின் துணை கொண்டே அளிக்கின்றோம்' என்பார், 'நினது அருளால் குரங்கினம் பெறுக' என்றனர். (136)

10232. முந்தை நாண்முதற் கடைமுறை
யளவையு முடிந்த
அந்த வானர மடங்கலு
மெழுந்துட னார்த்துச்

சிந்தை யோடுகண் களிப்புறச்
செருவெலா நினையா
வந்து தாமரைக் கண்ணனை
வணங்கின மகிழ்ந்து.

முந்தைநாள் முதல் கடைமுறை
அளவையும் முடிந்த
அந்த வானரம் அடங்கலும்
எழுந்து,உடன் ஆர்த்து,
சிந்தையோடு கண்களிப்புற,
செரு எலாம் நினையா,
வந்து தாமரைக் கண்ணனை
வணங்கின, மகிழ்ந்து

பொ:—(இராமன் அரக்கரொடு போர் தொடங்கிய) முதல் நாள் முதல் (இராவணனைக் கொன்று போக்கிய) இறுதி நாள் வரையிலும் (அரக்கர்களால்) இறந்துபட்ட அந்தக் குரங்குகள் யாவும் ஒருசேர உயிர் பெற்றெழுந்து (முன்பு நடந்த) போர் நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் நினைந்து ஆரவாரித்துச் சிந்தையும் கண்களும் களிப்பு மிக்குத் தோன்ற, செந்தாமரை மலர் போலும் (அழகிய) கண்களை யுடையனாகிய இராமபிரானை நெருங்கி வந்து மகிழ்ந்து வணங்கின.

கு:—முந்தைநாள் என்றது, இராமபிரான் சேனைகள் இராவணன் சேனைகளோடு போர் தொடங்கிய முதல் நாளினை. கடைமுறை என்றது, இராமபிரான் இராவணனைக் கொன்றழித்த இறுதி நாளினை. முடிந்த அந்த வானரம்—இறந்துபட்ட அந்தக் குரங்குகள். அடங்கலும் — முழுவதும். வானரம் அடங்கலும், உடன் எழுந்து, செருவெலாம் நினையா ஆர்த்து, சிந்தையோடு கண்களிப்புறவந்து தாமரைக் கண்ணனை மகிழ்ந்து வணங்கின என முடிக்க. (137)

10233. கும்ப கன்னனோ டிந்திர
சித்துவெங் குலப்போர்
வெம்பு வெஞ்சினத் திராவணன்
முதலிய வீரர்

அம்பின் மாண்டுள வானர
மங்குவந் தார்ப்ப
உம்பர் யாவரு மிராமனைப்
பார்த்திவை யுரைத்தார்.

கும்ப கன்னனோடு இந்திரசித்து,
வெங்குலப் போர்
வெம்பு வெஞ்சினத்து இராவணன்
முதலிய வீரர்
அம்பின் மாண்டுள வானரம்
அங்கு வந்து ஆர்ப்ப,
உம்பர் யாவரும் இராமனைப்
பார்த்து,இவை உரைத்தார்.

பொ :— கும்பகருணனும் இந்திரசித்தும் வெவ்விய சிறந்த போரிற் கொதித்தெழுகின்ற கடுஞ்சினத்தினை யுடைய இராவணனும் முதலிய இராக்கத வீரர்கள் (எய்த) அம்புகளால் இறந்தொழிந்த குரங்குகள் (யாவும்) அங்கு (த் திரண்டு) வந்து மகிழ்ச்சி ஆரவாரஞ் செய்ய, (அப்பொழுது) தேவர்கள் யாவரும் இராமனை நோக்கி (ப் பின்வரும்) இம்மொழிகளைக் கூறுவாராயினர்.

கு :—கும்பகன்னனோடு என்புழி ஓடு எண்ணுதற் பொருளில் வந்தது. உம்பர் — தேவர். தேவர் கூறுவன அடுத்துவரும் மூன்று செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (138)

'பதினான்கு ஆண்டுகள் முடிந்தன ; நீ பரதனிடம் இன்று சென்று சேர்க' என்று தேவர்கள் இராமனுக்கு உணர்த்தி நீங்குதல்

10234. இடையு வாவினிற் சுவேலம்வந்
திறுத்தெயி லிலங்கைப்
புடைய வாவுறச் சேனையை
வளைப்புறப் போக்கிப்

படைய வாவுறு மரக்கர்தங்
குலமுற்றும் படுத்துக்
கடையு வாவினி லிராவணன்
றன்னையுங் கட்டு.

'இடை உவாவினில் சுவேலம் வந்து
இறுத்து, எயில் இலங்கைப்
புடை அவாவுறச் சேனையை
வளைப்பு உறப் போக்கி,
படை அவாவுறும் அரக்கர்தம்
குலம் முற்றும் படுத்து,
கடை உவாவினில் இராவணன்
தன்னையும் கட்டு,

பொ:—(தேய்பிறை நாட்களாகிய) பிற்பக்கத்தின் இடையில் (அட்டமியில்) சுவேல மலையில் வந்து தங்கி மதில்கள் சூழ்ந்த இலங்கையின் சுற்றுப்புறத்தே விரும்பி முற்றுகை செய்யும்படி வானர சேனைகளைச் செலுத்தி, படைக்கலங்களை மேன்மேற் செலுத்துவதிற் பெருவிருப்பமுடைய அரக்கர்குலம் முழுவதையும் கொன்றொழித்து (ப்பிற்பக்கத்தின்) கடைசி நாளில் (அமாவாசையன்று) இராவணனையும் வேருடன் களைந்து,

கு:—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். நிறைநாள் என்னும் பொருளுடைய உவா என்னும் சொல் மதிநிறைவாகிய பூரணை நாளையும் இருள்நிறைவாகிய அமாவாசையையும் குறித்து வழங்குவது. அச்சொல் பதினைந்து நாள்கொண்ட ஒரு பக்கம் என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றுளது. இச்செய்யுளில் இடை உவா என்றது தேய்பிறைப் பக்கத்தின் நடுவேயமைந்த எட்டாம் நாளாகிய அட்டமிதிதியை. கடை உவா என்றது தேய்பிறைப் பக்கத்தின் கடைநாளாகிய அமாவாசையை. இறுத்தல்—தங்குதல். படைக்கலங்கள் பலவற்றை மேன்மேற் செலுத்துவதிற் பெருவிருப்பமுடைய அரக்கர் என்பார், படை அவாவுறும் அரக்கர் என்றார். கட்டல் — வேருடன் களைதல். கட்டு என்னும் வினையெச்சம் அடுத்த செய்யுளில் உள்ள மடித்த என்னும் பெயரெச்சத்து மடித்தலாகிய வினையைக்கொண்டு முடியும். (139

10235. வஞ்ச ரில்லையிவ் வண்டத்தி
னெனும்படி மடித்த
கஞ்ச நாண்மலர்க் கையினு
யன்னைசொற் கடவா
தஞ்சொ டஞ்சுநான் கென்றெனு
மாண்டுபோய் முடிந்த
பஞ்ச மிப்பெயர் படைத்துள
திதியின்று பயந்த.

"வஞ்சர் இல்லை இவ் அண்டத்தின்"
எனும்படி மடித்த
கஞ்ச நாள்மலர்க் கையினய்!
அன்னைசொல் கடவாது
அஞ்சொடு அஞ்சு நான்கு என்றுஎனும்
ஆண்டு போய் முடிந்த
பஞ்சமிப் பெயர் படைத்துள
திதி இன்று பயந்த.

பொ :—அண்டப் பகுதியாகிய இவ்வுலகத்தின் கண்ணே வஞ்சகராகிய கொடியோர் யாரும் (இனி) இல்லையென்று சொல்லும்படி கொன்றெழித்த அன்றலர்ந்த செந்தாமரைமலர்போலும் (சிவந்த) கைகளையுடையவனே! (நீ நின்) தாயாகிய கைகேயியின் சொல்லைக் கடவாது (நாடு துறந்து வனம் புக்க நிலையில்) அஞ்சும் அஞ்சும் நான்கும் எனக்கூட்டி யெண்ணத்தக்க பதினன்கு ஆண்டுகளும் சென்று நிரம்பிய பஞ்சமி என்னும் பெயர் கொண்ட திதியினை இந்த நாள் தோற்றுவித்தது.

கு :—கஞ்சம்—தாமரை. அஞ்சொடு அஞ்சு நான்கு—5+5+4 = பதினன்கு. முடிதல்—நிரம்புதல். முடிந்த திதி, பஞ்சமிப் பெயர் படைத்துள திதி எனத்தனித்தனி இயையும். இன்று—இந்த நாள். இன்று, பஞ்சமிப் பெயர்படைத்துள திதியைப் பயந்தது என்க. பயந்தது, பயந்த எனக்கடைக் குறைந்தது. பயத்தல்—தோற்றுவித்தல். இராமன் பங்குனித்திங்கள் தேய்பிறைப் பக்கத்து அட்டமியின் மாலைப் பொழுதில் இலங்கை

யினை அடுத்துள்ள சுவேலமலைமேல் வானரசேனையுடன் ஏறி, அன்றிரவே வானரசேனைகளைக் கொண்டு இலங்கையை முற்றுகையிடச் செய்து, மறுநாள் (நவமி) பகற்பொழுதில் அரக்கருடன் போர்செய்யத் தொடங்கி, ஆறுநாட்களில் கும்பகருணன் இந்திரசித்து முதலிய அரக்கர் பலரையும் கொன்றெழித்து மூலப்பெரும் படையையும் வெற்றிகொண்டு, ஏழாம்நாள் (அமாவாசையன்று) இராவணனுடன் மீண்டும் போர்தொடங்கி அன்றிரவின் பிற்பொழுதிலே இராவணனைக் கொன்று போரை முடித்தனன் என வான்மிகத்தையடியொற்றியெழுந்த இராமாயண சாரசங்கிரகம் என்னும் வடநூல் கூறும். பஞ்சமிப் பெயர்படைத்துள திதி இன்று என்றது, பஞ்சமிப் பெயர் படைத்துள திதியை இன்று பயந்தது என்றதனால், அன்றைய தினம் முற்பகுதியில் சதுர்த்தி திதி இருந்து பிற்பகுதியில் பஞ்சமிதிதி வந்தது எனக் கொள்ளவேண்டியுளது. ''அமாவாசையில் இராவண சங்காரம் ஆனபின்பு, மறுநாள் பிரதமையில் இராவணனது தகனக்கிரியையும், துவிதியையில் வீடணனுக்கு முடிசூட்டு விழாவும் நிகழ்த்தி, திருதியையில் சீதையின் கற்புநலத்தினைச் சோதித்து அறிந்த இராமன், சதுர்த்தியில் வானரசேனையுடன் புட்பக விமானத்தில் ஏறிப் புறப்பட்டு அன்றிரவிற் கிட்கிந்தை சேர்ந்து அங்குள்ள வானர மகளிரை அழைத்துக்கொண்டு பஞ்சமி திதியில் பரத்துவாசர் ஆச்சிரமத்தையடைந்தான் என்றும், அன்றைய தினம் பதினான்காண்டுகள் முடிவுறுதலால் தனது வருகையைப் பரதனுக்குத்தெரிவிக்கும்படி அனுமனைத் தூது அனுப்பினன் என்றும் இராமாயண சாரசங்கிரகம் என்னும் வடநூல் கூறும் செய்திகள் இங்கு நினைக்கத்தக்கனவாகும். (140)

10236. இன்று சென்றுநீ பரதனை
யெய்தலை யென்னிற்
பொன்று மாலவன் எரியிடை
யன்னது போக்க
வென்றி வீரநீ போதியா
லென்பது விளம்பா
நின்ற தேவர்க ணீங்கினு
ரிராகவ னினைந்தான்.

'இன்று சென்று, நீ பரதனை
எய்தலை என்னின்,
பொன்றுமால் அவன் எரியிடை ;
அன்னது போக்க,
வென்றிவீர ! நீ போதியால்'
என்பது விளம்பா,
நின்ற தேவர்கள் நீங்கினர் ;
இராகவன் நினைந்தான்.

பொ :—''வெற்றித்திறம் வாய்ந்த வீரனே ! நீ இன்றைக்குப் புறப்பட்டுச் சென்று (நின் தம்பி) பரதனை அடைந்திலையாயின் அவன் ('நீ குறித்த நாளில் வாராதொழியின் தீயிற் பாய்ந்து இறந்தொழிவேன்' என முன்னர்ச் சொன்ன உறுதி மொழிப்படி) தீயிற் பாய்ந்து இறந்தொழிவான் ; அவ்வாறு (அவன்) உயிர் துறத்தலைத் தடுத்தற்கு நீ (இப்பொழுதே) போவாயாக'' என் பதனைச் சொல்லி (அங்கு இராமன் எதிரே) நின்ற தேவர்கள் (அவ்விடத்தைவிட்டு) நீங்கி (த் தம் இருப்பிடத்திற்கு) ச் சென்றூர்கள். இராமன் (விரைவிற் சென்று பரதனை யடையும் உபாயத்தினைச்) சிந்திப்பானாயினன்.

கு :—'நீ இன்று சென்று பரதனை எய்தலை என்னில் அவன் பொன்றும்' என இயைக்க. ஆல், அசை. அவன் என்றது அப்பரதனை. 'யான் உனை இரந்தனன். என் ஆணையால் அர சாள்க' என இராமன் பணித்த வண்ணம் பதினான்காண்டுகள் அரசாள்வதற்கிசைந்த பரதன், தன் தமையனை நோக்கி, 'ஐயனே! நீ பதினான்கு ஆண்டுகள் முடிந்த எல்லையில் அயோத்தியை யடைந்து நினது அரச பதவியினை ஏற்றுக்கொள் ளாயாயின், யான் உடனே தீயிற் பாய்ந்து உயிர்துறப்பேன்' எனத்தன்னுறுதியைப் புலப்படுத்தினன் என்பது,

'ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ
நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலங்
கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரிச்
சாமிது சரத நின்னாணை சாற்றினேன்'
(அயோத்தியா — திருவடிசூட்டு — 133)

எனவரும் செய்யுளால் அறியப்படும். (141)

'இன்றே யான் பரதனைச் சென்றடைதற்குரிய விமானம் உண்டோ? என இராமன் வினவ, 'உண்டு' எனக் கூறி வீடணன் வணங்குதல்

10237. ஆண்டு பத்தொடு நாலுமின்
றோடறு மாயின்
மாண்ட தாமினி யென்குலம்
பரதனே மாயின்
ஈண்டு போகவோ ரூர்தியுண்
டோவென வின்றே
தூண்டு மானமுண் டென்றடல்
வீடணன் றொழுதான்.

'ஆண்டு பத்தொடு நாலும்
இன்றோடு அறும் ஆயின்
மாண்டதாம் இனி என் குலம்,
பரதனே மாயின்;
ஈண்டு போக ஓர் ஊர்தி உண்டோ?'
என, 'இன்றே
தூண்டு மானம் உண்டு'என்று,அடல்
வீடணன் தொழுதான்.

பொ:—'பதினான்காண்டுகளும் இன்றோடு முடிவடையுமானால் (யான் குறித்த காலத்தில் வரவில்லையென்ற காரணத்தால் பரதன் உயிர்துறப்பான். என் ஆருயிர்த் தம்பியாகிய) பரதனே இறந்தொழிந்தால் இனி எனது குலம் அடியோடு அழிந்ததேயாகும். (எனவே) இப்பொழுதே சென்று சேரத்தக்கதொரு வாகனம் உள்ளதோ?' என (இராமன் வீடணனை நோக்கி) வினவ, (அது கேட்ட) வலிமைமிக்க வீடணன் 'இன்றைக்கே (சென்று சேரும்படி) விரைவிற் செலுத்துதற்குரிய விமானம் (இங்கு) உள்ளது' என்று வணங்கிக் கூறினான்.

கு:—ஆண்டுபத்தொடுநாலு—பதினாலாண்டுகள். அறுதல்—முடிவடைதல். தன்குலத்தில் பரதன் ஒருவன் இறக்க நேரிட்டால் அதுகாரணமாகத் தன்குலத்தாரனைவரும் இறந்தொழிதல்

திண்ணம் என்பான், 'பரதனே மாயின் இனி என்குலம் மாண்ட தாம்' என்ருன். பரதனே என்புழி ஏகாரம் அவனது சிறப் புணர்த்தி நின்றது. அடல் வீடணன் 'இன்றே தூண்டும் மானம் உண்டு' என்று தொழுதான் என இயைத்துரைக்க. அடல் — வலிமை. தூண்டுதல் — விரையச் செலுத்தல். மானம் — விமானம். (142)

இச்செய்யுளின் பின் 31-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10237 (a) மங்க லாநிதி வடதிசை வானவன் விமானம்
துங்க மார்கவி யெழுபது வெள்ளமுஞ் சூழ்ந்தால்
எங்கு ளாரெனு மிடமுள திதன்மிசை யேறிப்
பொங்கு மாநகர் புகுதியிப் பொழுதினில் என்ருன்.

41, 45, 52-ஆம் பிரதிகளில், 'வங்க நீண்டு வடதிசை வானவன் விமானம்' என இதன் முதலடி பாடம் வேறுபட்டுளது.

23, 26, 43, 66-ஆம் பிரதிகளில் 'ஆண்டுபத்தொடு' (142) என்னும் இச்செய்யுளையடுத்து வசந்தன் உயிர்வரு படலம் என்ற தலைப்பில் முதற் செய்யுளாகப் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது :—

10237 (b) கொண்டு வாவெனக் கூறினன்
கொணர்ந்தன னுடனே
தொண்டு செய்திடும் வீடணன்
தொல்லுயி ரனைத்தும்
அண்ட கோடிக ளேறினு
மொருபுடை யமைத்து
விண்ட லத்தினி லிமைக்குமுன்
செல்வதோர் விமானம்.

*வீடணன், புட்பக விமானத்தின் தன்மையைக் கூறி 'இவ்விமானத்திற் செல்வாய்' என, இராமன் அவ்விமானத்தைக் கொணருமாறு பணித்தல்*

10238. வாங்கி ஞனிரு நிதியொடு
தனதனில் வள்ளால்
ஓங்கு மால்வெள்ள மெழுபஃ
தேறினு மொல்கா

தீங்கு ளாரெலா மிவருவ
திவரினீ யினிது
பூங்கு லாநகர் புகுதியிஞ்
ஞான்றெனப் புகன்ருன்.

'வாங்கினுன் இருநிதியொடு
தனதனில், வள்ளால்!
ஓங்குமால், வெள்ளம் எழுபஃது
ஏறினும் ஒல்காது;
ஈங்கு உளார் எலாம் இவருவது;
இவரின் நீ இனிது
பூங்குலா நகர் புகுதி இஞ்ஞான்று'
எனப் புகன்ருன்.

பொ:—(மீண்டும் வீடணன் இராமனைநோக்கி) 'வரையாது வழங்கும் வள்ளலே! (இராவணன்) தனபதியாகிய குபேரனிட மிருந்து பெரிய செல்வத்துடன் (இவ்விமானத்தையும்) கவர்ந்து கொண்டான். (இவ்விமானம்) எழுபது வெள்ளம் பெருஞ்சேனை கள் ஏறியமர்ந்தாலும் தளராது உயர்ந்து செல்ல வல்லது. நீ (இவ்விமானத்தின்மிது) ஏறியமர்ந்தாயாயின் அழகு விளங்கு கின்ற அயோத்தி நகரத்தை இன்றே இனிது சென்றடைவாய்' எனக் கூறினுன்.

கு:—தனதனில் இருநிதியொடு வாங்கினுன் என இயையும். தனதன் — குபேரன். இல்லுருபு நீக்கப் பொருளில் வந்தது. (இவ்விமானம்) வெள்ளம் எழுபது ஏறினும் ஒல்காது ஓங்கும் என்க. ஓங்கும் என்னும் பயனிலைக்கு முன் பாட்டிலுள்ள மானம் என்பது எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது. குபேரன் பிர மனைநோக்கித் தவம்புரிந்து நினைத்த இடங்களுக்கு விரைந்து செல்லவல்ல புட்பகம் என்னும் விமானத்தைப் பெற்றனன். இராவணன் குபேரனை வென்று புட்பகத்தை வலிதிற் கவர்ந்து கொண்டான். (143)

இச்செய்யுள் 1, 2, 9, 19, 25 என்னும் பழைய சுவடிகள் சிலவற்றில் இல்லாமையால் இதனை மிகைச் செய்யுளெனக் கொள்ள வேண்டியுளது.

இச்செய்யுளின் பின் 29, 41, 44, 45, 52–ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் காணப்படுகிறது :—

10238 (a) என்று தேரிணே வீடணன் எய்திய தென்ருன்
நன்று தானென நாயக னேறின னவரோ
டன்று தானிளங் கோவொடு மக்கவி வெள்ளம்
ஒன்று தானென வொருதிசை யிருந்தது மொக்கும்.

இச்செய்யுளின்பின் 41, 45–ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் 'இயமப் படலம்' என்ற தலைப்பில் உள்ளன :—

10238 (b) ஏறினன் விமானந்தன்னி லிராமனு
மிளைய கோவும்
மாறிலாச் சனகியோடு வளநக
ரிலங்கை வேந்தும்
கூறிய வனுமன் சாம்பன்
குமரன் வெங் கவிவந்தேற
மாறிலோர் நிலத்து நின்ருர்
வயந்தனுர் கொத்திலுள்ளார்.

10238 (c) மாறதாய் வெள்ளஞ் சேனை
மானத்தின் வராமை நோக்கி
ஏறுநீர் தேரி லென்னக்
கருணன்வந் தெதிர்ந்த போது
சீறிய நுமரிலெங்கோன் ருக்கிட
அரக்கன் சீறி
நீறெழப் பிசைந்தே யிட்டா
னெற்றியி லென்னச் சொன்னர்.

10238 (d) என்ற வாசகங் கேட்டலும்
வானர ரிரங்கி
நின்ற போதினி லிராகவன்
றேரினின் றிழிந்தான்
பொன்று மாவரக் காரணம்
என்னெனப் புழுங்காத்
துன்று தார்ப்புயத் திலக்குவ
பொறியெனச் சொன்னுன்.

10238 (e) வரிசிலை யிராம னேலை
மறம்புரி மறலி காண்க
எரிகொளு மிலங்கைப் போரி
லின்னுயிர் துறந்து போந்த
குரிசிலை வயந்தன் றன்னைத்
தேடியே கொணர்க வன்றேல்
உரியதன் பதமும் வாழ்வு
மொழிப்பனென் றெழுதி விட்டான்.

10238 (f) அக்கணத் தருகு நின்ற
வனுமன் கைத் திருமுகத்தைத்
தக்கவ னிட்ட வாங்கித்
தன்றலை மிசையிற் சூடி
இக்கணம் வருவன் வாழி
யிராம வென்றிருதோள் கொட்டி
மிக்கமா மடங்கல் போல
விண்ணிடை விசைத்துப் பாய்ந்தான்.

10238 (g) மண்டிப் புக்கனன் மறலிதன் பெரும்பத நரகில்
தண்டிப் புண்டறுப் புண்டெரிப் புண்டவர் தம்மைக்
கண்டு மாருதி கண்புதைத் தரியரி யென்ன
மிண்டி யேறினர் நரகிடை வீழ்ந்தவ ரெல்லாம்.

10238 (h) துளங்கி யந்தகன் வந்தடி தொழுதலுந் தோலா
வளங்கொள் மாருதி வசந்தனைக் காட்டென வவனும்
உளங்க லங்கியுன் றுயக னடியரிங் குறுர்கள்
விளங்கு கீர்த்தியாய் தேடுவிண் ணவர்புரத் தென்றான்.

10238 (i) சொன்ன கூற்றுவன் றன்னைத்தன்
வாலிடைத் துவக்கிப்
பொன்னின் கற்பகப் பதியிடைக்
கொண்டுபோய்ப் புகலும்
முன்னை வந்துகண் டிந்திரன்
முனிவெனே வென்ன
மன்ன வேகுவன் வயந்தனைக்
காட்டுதி யென்றான்.

63-ஆம் பிரதியில் உள்ள பாடல்.

[10238 (j) இன்ன பான்மையா லேகலு மிமையவ ரேங்கிச்
சின்ன மாயுடைந் தோடிடச் சென்றன னனுமன்
முன்னின் வந்துகண் டிந் திரன்முனி வென்னுவென்னு
மன்னனே யெவன் காட்டுதி வசந்தனை யென்முன்.]

10238 (k) வல்ல ரக்கரை மடித்தெமை யெடுத்தமா ருதியே
இல்லை யிங்கய னுலகிடை யறிதியென் றிசைப்பச்
சொல்லு மங்கவன் றன்னையும் வாலிடைத் துவக்கிப்
பல்லுயிர்த்திறம் படைத்தவ னுலகிடைப் பாய்ந்தான்.

10238 (l) சிந்தை தூயவன் செலவுளந்
துளங்குநான் முகனும்
வந்த காரிய மேதென
வயந்தனைப் பார்த்துச்
சுந்த ரத்தடந் தோள்வில்லி
நின்றன னவன்முன்
உந்த னீள்பதத் துளானெனிற்
காட்டென வுணர்த்தும்.

10238 (m) என்னு டைப்பெரும் பதத்தின்மே
லாகிய வெந்தை
தன்னு டைப்பெருஞ் சோதியிற்
கீழதாய்த் தழைத்த
மின்னு நீரொளி விண்டுவின்
பதத்துளான் விறலோய்
அன்ன வன்றனைக் கொணருதி
யாங்கணைந் தென்முன்.

10238 (n) என்று நான்முகன் சொல்லவு
மியமனிந் திரனை
ஒன்ற வால்கொடு துவக்கின
னெருகுதி கொண்டான்
மின்றி கழ்ந்தொளி விளங்கிடும்
விண்டுவின் பதத்திற்
சென்று கண்டுகொண் டிழிந்தனன்
றிசைமுகன் பதியில்.

10238 (o) மலரின் மேலயன் வசந்தற்கு
முன்னுரு வழங்கக்
குலவு வாசவன் யமனைவிட்
டிருநிலங் குறுகி
அலகில் வீரன்ற னடியிணை
யவனெடும் வணங்கிச்
சலமுந் தீர்த்தனன் படையையும்
ஏற்றினன் றேர்மேல்.

வேறுசில பிரதிகளில் 'வாங்கினான்' என்ற 143-ஆம் செய்யுளை யடுத்துப் பின்வருஞ் செய்யுட்கள் காணப்படுகின்றன :—

10238 (p) 'என்று தேரிணை ... ... ... ... ... ... ஒக்கும் [10238(a)]

10238 (q) ஏறினா னிராமன் றேர்மே
லெழின்மலர் மாதினோடும்
ஏறினா னிளைய கோவு
மிராக்கதர் வேந்தனோடும்
ஏறினா னனுமன் சாம்ப
னிடபனே முதலோரேற
மாறினார் நிலத்து நின்றார்
வசந்தகோத் திரத்தினுள்ளார்.

10238 (r) ஏறின னிளைய கோவு
மிரவிசேய் சாம்ப னீலன்
ஏறினன் வாலிமைந்த
னென்றனர் பலரு மேறச்
சீறிய கும்ப கன்னன்
சினத்திடைச் சிதைந்து பட்டோன்
மாறிலா வசந்தன் சேனை
நின்றது பாரின் மண்மேல்.

இச்செய்யுளின் பின் 52, 63-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது :—

10238 (s) வண்ட லம்புதார் அமலனும் தம்பியும் மயிலும்
கண்டு கைதொழு வானரக் கடலும், மற்றியாரும்
எண்தவாத பொன் மானமீ திருந்திடும் இயற்கை
அண்டர் நாதனும் வானமும் அமரரும் ஆமால்.

10238 (t) பாரி னின்றதங் கொடுவெள்ளப் படைவரத் தம்மை
வாருந் தேரின்மே லெனக்கும்ப கர்ணன்வந் தேன்ற
போரி லெம்படைத் தலைவனோ போன்றின னவ்வை
நீறு நேர்பிசைந் திட்டன னெற்றியி லென்றார்.

10238 (u) ஆழி வெள்ளமோ ரெழுபது
மனுமனே முதலாம்
ஏழு மூன்றுமாம் பெரும்படைத்
தலைவரை யிராமன்
சூழ நோக்கினன் சுக்கீரி
பன்றனைப் பாரா
வாழி மாப்படை யனைத்தும்வந்
தனகொலோ வென்றான்.

10238 (v) இரவி கான் முனை யிறங்கிவந்
திராமனை யிறைஞ்சி
சுருதி யாயொரு பொருள் உள
சொல்லுவ தொடர்ந்து
வருவ தானவிச் சேனையில்
வசந்தனென் றுரைக்கும்
ஒருவன் வந்திலன் கண்டரு
ளுதியென வுரைத்தான்.

10238 (w) கசிந்த ஞானங்கள் கலங்கலில்
கழற்கும்ப கருணன்
இசைந்த போரின்வந் தெய்தலு
மிவன்றனை யெடுத்துத்
தசைந்த தோல்மயி ரெலும்பிவை
தமைத் தெரியாமல்
பிசைந்து மோந்துடற் பூசினன்
பெருநுதற் கணிந்தே.

10238 (x) இசைந்த சீராம னேலை யிலங்கையிற் பூசறன்னில்
வசந்தனைக் கண்டதில்லை மதித்தவா றழகிதம்மா
வசந்தனைக் கொண்டு தானும் வருவனே வாரானாகில்
நமன்குலங் களைவனென்றான் நானைவா வென்றவீரன்.

10238 (y) வரிசிலையிராமனேலை ... ... விட்டான். [12038 (e)]

10238 (z) அக்கணத்து ... ... ... ... பாய்ந்தான். [ ,, (f)]

10238 (aa) மண்டி ... ... ... ... ... ... ... ... எல்லாம். [ ,, (g)]

10238 (ab) துளங்கி ... ... ... ... ... புரத்தென்ருன். [ ,, (h)]

10238 (ac) செல்வனே யின்னங் கேளா
யான் றெரிபாசக் கையால்
அல்லெனு மரக்கர் தம்மை
வம்மினென் றழைத்து மெள்ள
நல்லிருட் பரவை மேனி
நாரணன் றமரைக் கண்டால்
செல்லவே போமினென்று
விடுக்குவன் செவியிற் செப்பி.

10238 (ad) சொன்ன... ... ... ... ... ... என்ருன். [10238 (i)]

10238 (ae) வல்லரக்கரை ... ... ... ... ... பாய்ந்தான். [ ,, (k)]

10238 (af) சிந்தை ... ... ... ... ... ... ... உணர்த்தும். [ ,, (l)]

10238 (ag) என்னுடை ... ... ... ... ... ... என்ருன். [ ,, (m)]

10238 (ah) என்று ... ... ... ... ... ... ... ... பதியில். [ ,, (n)]

10238 (ai) மலரின் ... ... ... ... ... ... ... தேர்மேல். [ ,, (o)]

10239. இயக்கர் வேந்தனுக் கருமறைக்
கிழவனன் றீந்த
துயக்கி லாதவர் மனமெனத்
தூயது சுரர்கள்
வியக்க வான்செலும் புட்பக
விமானமுண் டென்றே
மயக்கி லான்சொலக் கொணருதி
வல்லையி னென்ருன்.

'இயக்கர் வேந்தனுக்கு அருமறைக்
கிழவன் அன்று ஈந்த,
துயக்கு இலாதவர் மனம்எனத்
தூயது, சுரர்கள்

வியக்க வான்செலும் புட்பக
விமானம்உண்டு’ என்றே
மயக்கு இலான் சொல, ‘கொணருதி
வல்லையின்’ என்றான்.

பொ:— இயக்கர்க்கு அரசனாகிய குபேரனுக்கு (அவன் தவஞ் செய்த) அந்நாளில் அரிய வேதங்களுக்கு உரியவனாகிய பிரம தேவன் கொடுத்ததும், ஆசையற்ற பெரியோர்களின் மனம் போன்று தூய்மையுடையதும், தேவர்களும் அதிசயிக்க வானத்தே விரைந்து செல்லவல்லதும் ஆகிய புட்பக விமானம் (இங்கு) உள்ளது என்று மனமயக்கமில்லாதவனாகிய வீடணன் கூற (க் கேட்ட இராமன்) ‘நீ அதனை விரைவிற் கொணர்வாயாக’ எனப் பணித்தான்.

கு:— இயக்கர் வேந்தன்—யக்ஷர்களுக்கு மன்னனான குபேரன். அருமறைக்கிழவன்—பிரமன். குபேரன் பிரமனை நோக்கித் தவம்புரிய அவனது தவத்திற்கு உவந்த பிரமன் புட்பகம் என்ற விமானத்தைக் குபேரனுக்குஅளித்தான் என்பதும், அவ்விமானம் தூயதாய் விரிந்த இடப்பரப்பினையுடையதாய் வானவரும் அதிசயிக்க ஆகாயத்தே விரைந்து செல்லும் ஆற்றலுடையதாய் விளங்கியதென்பதும் கூறியவாறு. துயக்கு—ஆசை. (144)

*வீடணன் புட்பகவிமானத்தை விரைந்து கொணர்தல்*

10240. அண்ட கோடிக ளனந்தமொத்
தாயிர மருக்கர்
விண்ட தாமென விசும்பிடைத்
திசையெலாம் விளங்கக்
கண்டை யாயிர கோடிக
ளொலிப்புறக் கலுலக்
கொண்ட ணைந்தன ைெனடியினி
லரக்கர்தங் கோமான்.

அண்ட கோடிகள் அனந்தம் ஒத்து,
ஆயிரம் அருக்கர்
விண்டது ஆம் என விசும்பிடைத்
திசை எலாம் விளங்க,

கண்டை ஆயிர கோடிகள்
ஒலிப்புறக் கஞலக்
கொண்டு அணைந்தனன் நொடியினில்,
அரக்கர்தம் கோமான்.

பொ :—பலகோடியாகிய அண்டங்கள் யாவும் ஒன்ருகத் திரண்டாற்போன்று (மிகப் பெரியதாயு)ம் ஆயிரம் சூரியர்கள் (ஒரே சமயத்தில்) வெளிப்பட்டாற்போன்று (தன் பேரொளியால்) எல்லாத் திசைகளும் விளக்கமுறவும் (தன்பாற் கட்டப்பெற்றுள்ள) பலகோடிக் கணக்கினவாகிய மணிகள் நெருங்கி ஒலிக்கவும் அரக்கர் வேந்தனுகிய வீடணன் (அவ்விமானத்தைக்) கணப்பொழுதிற் கொண்டுவந்தடைந்தான்.

கு :—கண்டை—மணி. கஞலுதல்—நெருங்குதல். அரக்கர் தம் கோமான், விளங்க, கஞல, நொடியினின்கொண்டு அணைந்தனன் என முடிக்க. (145)

புட்பகவிமானம் வரத், தேவர்கள் பூமழை சொரிதல்

10241. அனைய புட்பக விமானம்வந்
தவனியை யணுக
இனிய சிந்தனை யிராகவ
னுவகையோ டினிநம்
வினைய முற்றிய தென்றுகொண்
டேறினன் விண்ணோர்
புனைம லர்சொரிந் தார்த்தன
ராசிகள் புகன்றே.

அனைய புட்பகவிமானம் வந்து
அவனியை அணுக,
இனிய சிந்தனை இராகவன்
உவகையோடு, ‘இனிநம்
வினையம் முற்றியது’ என்று கொண்டு
ஏறினன்; விண்ணோர்
புனைமலர் சொரிந்து ஆர்த்தனர்,
ஆசிகள் புகன்றே.

பொ :— அத்தகைய புட்பக விமானம் (வான்வழியாக வந்து) பூமியை அடைய (எவ்வுயிர்க்கும்) இனிமையைத் தரும் (நல்ல) எண்ணங்களை யுடையோனாகிய இராமபிரான், 'இப்பொழுது நமது காரியம் நிறைவேறியது' என்று (மனத்துட்) கொண்டு மகிழ்ச்சியுடன் (அவ்விமானத்தில்) ஏறினான். (அப்பொழுது) தேவர்கள் வாழ்த்துக் கூறி அழகிய மலர்களைச் சொரிந்து ஆர வாரித்தனர்.

கு :—புஷ்பகம் என்பது, நினைத்த இடத்தினை நினைத்தவள வில் அடைய வல்லது என்ற காரணத்தால் வந்த காரணப் பெயர். இனிய சிந்தனை என்றது, தீமையைப் போக்கி யாவர்க் கும் நலம் செய்ய வேண்டும் எனக்கருதும் நல்லெண்ணத்தினை. இராகவன் — ரகுகுலத்திற் பிறந்தவன்; இராமன். நம் வினையம் என்றது இராமன் பரதனைக்கண்டு அவனது மனக்கவலையைப் போக்குதலாகிய செயலை. தேற்றம் பற்றி 'முற்றியது' என இறந்தகாலத்தாற் கூறினான். முற்றுதல் — முற்றுப்பெறுதல், நிறைவேறுதல். (146)

இச்செய்யுளின் பின் வசந்தன் உயிர் வருபடலம் என்ற தலைப்பில் 31-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப்பாடல்கள் வேறு சில பிரதிகளிலும் அச்சுப் புத்தகங்களிலும் 'வாங்கினா னிருநிதி யொடு' (143) என்னும் பாடலுக்குப் பின்னும் 'சொன்ன வாச கம்' (158) என்ற பாடலுக்குப் பின்னும் காணப்படுதலால் அவற்றை அச்செய்யுளுரையின் கீழ்க்காண்க.

*புட்பகத்தில் இராமனுடன் சீதையும் இலக்குவனும் அமர்தல்*

10242. வணங்கு நுண்ணிடைத் திரிசடை
வணங்கவான் கற்பிற்
கிணங்க ரின்மையா னோக்கியோ
ரிடரின்றி யிலங்கைக்
கணங்கு தானென விருத்தியென்
றையன்மா டணைந்தாள்
மணங்கொள் வேலிளங் கோளரி
மானமீப் படர்ந்தான்.

வணங்கு நுண் இடைத் திரிசடை
வணங்க, வான் கற்பிற்கு
இணங்கர் இன்மையாள் நோக்கி, 'ஓர்
இடர் இன்றி இலங்கைக்கு
அணங்கு தான் என இருத்தி' என்று,
ஐயன்மாடு அணைந்தாள்;
மணம்கொள் வேல் இளங்கோளரி
மானம் மீப்படர்ந்தான்.

பொ:—சிறந்த பெருங்கற்புக்கு ஒப்பாரில்லாதவளாகிய சீதை, தளர்ந்து வளைகின்ற நுண்ணிய இடையினையுடைய திரிசடையென்பாள் (தன்னை) வணங்க (அவளை) நோக்கி, 'நீ இலங்கை நகரத்தில் ஒப்பற்ற தெய்வப்பெண் என்னும்படி துன்பமின்றி (இன்புற்று) வாழ்ந்திருப்பாயாக' என (அவளுக்கு வாழ்த்து)க் கூறி (விமானத்தில்) இராமன் அருகே சென்று சேர்ந்தாள். (புலால்) நாற்றத்தினைக் கொண்ட வேற்படையையுடைய வலிய இளஞ்சிங்கம் போல்வானாகிய இலக்குவனும் (அவ்) விமானத்தின்மேல் ஏறினான்.

கு:—வணங்குதல்—தளர்ந்து வளைதல். வான்கற்பு—சிறந்த பெருங்கற்பு. இணங்கர் இன்மையாள்—ஒப்பு இல்லாதவள்; என்றது சீதையை. இணங்கர் இன்மையாள், திரிசடைவணங்க, 'இலங்கைக்கு அணங்குதான் என இருத்தி' என ஐயன்மாட்டு அணைந்தாள் என்க. ஐயன் என்றது இராமனை. இளங்கோளரி என்றது இலக்குவனை. (147)

இச்செய்யுளின் பின் 41, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது:—

10242(a) மைய லின்றியே யிலங்கைமா நகர்காத்து மாதே
செய்ய ளாகிய திருவெனப் பொலிந்தினி திருத்தி
கைக ளான்மிகப் புல்கியே கண்கணீர் ததும்பப்
பொய்யி லாமனத் திரிசடை விடையெனப் போனாள்.

### விமானத்தில் அமர்ந்த இராமன் வீடணன் சுக்கிரீவன் முதலியோரை நோக்கிக் கூறுதல்

10243. அண்ட முண்டவன் மணியணி
யுதரமொத் தனிலன்
சண்ட வேகமுங் குறைதர
நினைவெனுந் தகைத்தாய்
விண்ட லந்திகழ் விமானமாம்
புட்பக மிதன்மேல்
கொண்ட கொண்டறன் றுணைவரைப்
பார்த்திவை குணித்தான்.

அண்டம் உண்டவன் மணிஅணி
உதரம் ஒத்து, அனிலன்
சண்ட வேகமும் குறைதர,
நினைவு எனுந் தகைத்தாய்,
விண்தலம் திகழ் விமானமாம்
புட்பகம் இதன்மேல்
கொண்ட கொண்டல்,தன் துணைவரைப்
பார்த்து, இவை குணித்தான்:

பொ :—(ஊழிமுடிவில்) அண்டங்களை யெல்லாம் உட்கொண்டு அடக்கிய திருமாலின் அழகிய வயிற்றினையொத்து, காற்றினது கடுமையான வேகமும் (இதற்குக்) குறைந்தது என்னும்படி (வேகத்திற்கு) மனத்தினை உவமை கூறத்தக்க தன்மையினையுடையதாய் விண்ணின் கண்ணே விளங்குகின்ற விமானமாகிய இந்தப் புட்பகத்தின்மீது ஏறிய கருமுகில் போல்வானாகிய இராமன் (வீடணன் முதலிய தன்) நண்பர்களை நோக்கி (ப் பின் வருமாறு) இம்மொழிகளை ஆய்ந்து கூறுவானாயினன்.

கு :—அண்டம் உண்டவன் என்றது, உலகினையுண்டு வயிற்றிலடக்கியவனான திருமாலை. உதரம்—வயிறு. அனிலன்—காற்று. சண்டவேகம்—மிக்கவேகம். நினைவு என்றது மனத்தின் வேகத்தினை. கொண்டல்—மேகம்; உவம ஆகுபெயராய் இராமனை யுணர்த்தியது. ஒரே சமயத்திற் பல்லாயிரவரையும்

தன்னுட்கொள்ளும் பரப்பினதாதல் பற்றித் திருமாலின் வயிறும், நினைந்த மாத்திரத்தே குறித்த இடத்தையடையும் விரைவு பற்றி மனமும் புட்பகத்திற்கு உவமையாயின. (148)

10244. வீட ணன்றனை யன்புற
நோக்குரு விமலன்
தோட ணிந்ததார் மவுலியாய்
சொல்வதொன் றுளதுன்
மாட ணிந்தவர்க் கின்பமே
வழங்கிநீ ளரசி
ஞட ணிந்தவர் புகழ்ந்திட
வீற்றிரு நலத்தால்.

வீடணன் தனை அன்புற
நோக்குரு, விமலன்,
'தோடு அணிந்த தார் மவுலியாய்!
சொல்வது ஒன்று உளது உன்
மாடு அணிந்தவர்க்கு இன்பமே
வழங்கி, நீள் அரசின்,
நாடு அணிந்தவர் புகழ்ந்திட,
வீற்றிரு நலத்தால்.

பொ:—தூயோனாகிய இராமன், வீடணனை அன்புடன் நோக்கி, 'மலரிதழ்களால் தொடுக்கப்பெற்ற மாலையையணிந்த திருமுடியை யுடையவனே! (யான்) உனக்குச் சொல்ல வேண்டுவதொரு வார்த்தையுளது. உன் பக்கத்தே அடுத்துள்ளவர்களுக்கு இனிய நன்மைகளையே செய்து நாட்டிலுள்ளார் யாவரும் பாராட்டிப் புகழ நலம் பெற்று நெடிய இவ் அரசாட்சியில் பிறர்க்கில்லாத பெருஞ் சிறப்புடன் (இனிது) இருப்பாயாக.

கு:—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். விமலன் என்றது இராமனை. விமலன், வீடணன் தனை நோக்குரு, 'நீளரசின் வீற்றிரு இலங்கை மாநகருள் இனி நீ போதியால்' எனப் புகன்றனன் என அடுத்த செய்யுளில் வரும் வினை கொண்டு முடிக்க. (149)

10245. நீதி யாறெனத் தெரிவுறு
நிலைமைபெற் றுடையாய்
ஆதி நான்மறைக் கிழவனின்
குலமென வமைந்தாய்
ஏதி லார்தொழு மிலங்கைமா
நகரினு ளினிநீ
போதி யாலெனப் புகன்றன
னுன்மறை புகன்றான்.

'நீதிஆறு எனத் தெரிவுறு
நிலைமைபெற்று உடையாய்!
ஆதி நான்மறைக் கிழவன் நின்
குலம் என அமைந்தாய்!
ஏதிலார் தொழும் இலங்கைமா
நகரினுள் இனி நீ
போதியால்' எனப் புகன்றனன்—
நான்மறை புகன்றான்.

பொ :— 'நீதிநெறி (இதுதான்) என்று (உன்குணஞ்செயல்களை நோக்கி உலகத்தார்) தெளிந்துகொள்ளுதற்கேற்ற நிலை பெற்ற ஒழுக்கத்தையுடையவனே! இனி நீ பகைவர்கள் வணங்கும் (அரண்வலி படைத்த) பெரிய இலங்கை நகரத்தினுட் செல்வாயாக' எனக் கூறினன், நான்கு வேதங்களையும் வெளியிட்டருளிய திருமாலின் அமிசமான இராமபிரான்.

கு :—நின்னுடைய குணஞ் செயல்களைக் கண்டுணர்ந்த தேவர்கள் நினது ஒழுகலாறே நீதி நெறியாகும் என ஐயமறத் தெளிந்துணரும்படி நின் ஒழுகலாறு நீதி நெறியின் வரம்பாகத் திகழ்கின்றது என்பான், 'நீதியாறெனத் தெளிவுறு நிலைமை பெற்றுடையாய்' என இராமன் வீடணனைச் சிறப்பித்தான். பிரமன் மகன் புலத்தியன்; புலத்தியன் மகன் விச்சிரவசு; அவன்மகன் வீடணன் ஆதலின், 'ஆதி நான்மறைக்கிழவன் நின்குலம் என அமைந்தாய்' என அழைத்தான். பிரமனது குலத்திற் பிறந்தவன் நீ என்னுது நின்குலத்திற்கு முதல்வன் பிரமன் என நின்னையே மிகுத்துக்கூறும் மேன்மையுடையாய் நீ என்றவாறு. ஏதிலார்—பகைவர். நான்மறை புகன்றான் என்

றது மறைந்த வேதங்களை மீண்டும் வெளிப்படுத்தியருளின திரு மாலின் தோற்றமாகிய இராமபிரானை. (150)

10246. சுக்கி ரீவநின் றோளுடை
வன்மையாற் றசந்தொ
கக்கி ரீவனைத் தடிந்துவெம்
படையினு லசைத்த
மிக்க வானரச் சேனையி
னிளைப்பற மீண்டூர்ப்
புக்கு வாழ்கெனப் புகன்றனன்
ஈறிலாப் புகழோன்.

'சுக்கிரீவ! நின் தோளுடை
வன்மையால் தசம்தொகு
அக்கிரீவனைத் தடிந்து; வெம்
படையினுல் அசைத்த
மிக்க வானரச்சேனையின்
இளைப்பு அற, மீண்டு, ஊர்ப்
புக்கு வாழ்க'எனப் புகன்றனன்—
ஈறு இலாப் புகழோன்.

பொ :— முடிவில்லாத புகழையுடையனுகிய இராமபிரான் (சுக்கிரிவனைப் பார்த்து) 'சுக்கிரீவனே! நின்னுடைய தோளின் வலிமையால் பத்தாகக் கூடிய அக் கழுத்தினையுடைய இராவணனைக் கொன்றேன். (பகைவருடைய) கொடிய படைக்கலங்களால் தளர்ச்சியுற்ற மிகுதியான வானரசேனைகளுடன் இளைப்பு நீங்க மீண்டும் நினது நகரத்துட்புக்கு வாழ்வாயாக' என்று கூறினுன்.

கு :—ஈறிலாப் புகழோன் — முடிவில்லாத புகழையுடையவன்; என்றது இராமபிரானை. ஈறிலாப்புகழோன் புகன்றனன் எனமுடியும். 'சுக்கிரீவ! ......... புக்கு வாழ்க' என்பது இராமன் கூற்று. தசம் தொகு — பத்தாகக் கூடிய. அக்கிரீவன் — அக் கழுத்தினையுடையவன்; என்றது இராவணனை. கிரீவம் — கழுத்து. தடிந்து — தடிந்தேன்; தன்மையொருமைக்குரிய துவ்விகுதி இறந்தகாலம் உணர்த்தியது. (151)

10247. வாலி சேயினைச் சாம்பனைப்
பனசனை வயப்போர்
நீல ஞாதியா நெடும்படைத்
தலைவரை நெடிய
காலின் வேலையைத் தாவிமீண்
டருளிய கருணை
போலும் வீரனை நோக்கிமற்
றிம்மொழி புகன்றான்.

வாலி சேயினை, சாம்பனை,
பனசனை, வயப் போர்
நீலன் ஆதியாம் நெடும் படைத்
தலைவரை, நெடிய
காலின் வேலையைத் தாவி
மீண்டருளிய கருணை
போலும் வீரனை, நோக்கி, மற்று
இம்மொழி புகன்றான்.

பொ :—(பின்னும் இராமபிரான்) வாலியின் மைந்தனான அங்கதனையும் சாம்பவானையும் பனசனையும் வலிய போர்த்திறன் வாய்ந்த நீலன் முதலிய பெரிய படைத்தலைவர்களையும் நீண்ட கால்களாலே கடலைத்தாண்டி (இலங்கையை யடைந்து சீதையைக்கண்டு தேற்றி) மீண்டு வந்தருளிய கருணையே ஒருவடிவெடுத்தாற் போலும் பெரு வீரனாகிய அனுமனையும் பார்த்து (மீண்டு நும்மூர்புக்குவாழ்க என்னும்) இம்மொழியைக் கூறினான்.

கு :—கடல்நடுவே அயலாரூரிற் சிறையின் கண் வருந்தி உயிர்துறக்கும் நிலையிலிருந்த பிராட்டியைத் தேற்றிய பேரருளும் கொடியோர்களாகிய அரக்கர்களைக் கொன்று மீண்ட பெரு வீரமும் ஒருங்குடைய கருணைமறவன் அனுமனாதலின் 'வேலையை நெடிய காலின் தாவி மீண்டருளிய கருணைபோலும் வீரன்' எனச் சிறப்பித்தார். வேலை — கடல். (152)

இராமனைப் பிரிந்துறைதலாற்றாத அவர்கள் இராமன் கூற்றிற்கு உடன்படாமல் அயோத்தியில் இராமன் திருமுடி சூடுதலைக் காணுதற்குத் தொடர்ந்து உடன் வருதல் வேண்டும் என வேண்டுதல்

10248. ஐய னிம்மொழி புகன்றிடத்
துணுக்கமோ டவர்கள்
மெய்யு மாவியுங் குலைதர
விழிகணீர் ததும்பச்
செய்ய தாமரைத் தாளிணை
முடியுறச் சேர்த்தி
உய்கி லோமுனை நீங்கினென்
றினையன வுரைத்தார்.

ஐயன் இம் மொழி புகன்றிட,
துணுக்கமோடு அவர்கள்,
மெய்யும் ஆவியும் குலைதர,
விழிகள் நீர் ததும்ப,
செய்ய தாமரைத் தாள் இணை
முடி உறச் சேர்த்தி,
'உய்கிலோம், உனை நீங்கின்' என்று
இனையன உரைத்தார்.

பொ:—தலைவனான இராமபிரான் இவ்வார்த்தையைக் கூற (விடணன் முதலானோராகிய) அவர்கள் அச்சத்துடன் உடம்பும் உயிரும் நடுக்கமுறக் கண்களில் நீர் துளும்ப (இராமனுடைய) செந்தாமரை மலர்போலும் இரண்டு திருவடிகளிலும் தம்முடைய தலை பொருந்தும்படி வணங்கி '(யாங்கள்) உன்னைப் பிரிந்தால் பிழைத்திருக்கமாட்டோம்' என்று கூறி (மேலும்) இம்மொழிகளைக் கூறினார்கள்.

கு:—ஐயன் என்றது, தலைமைப் பண்புடையனாகிய இராமபிரானை. அவர்கள் என்றது, வீடணன் முதலாயினோரை. குலைதல்—நடுக்கமுறுதல். 'உனை நீங்கின் உய்கிலோம்' என்றது இராமபிரானை நோக்கி அவர்கள் கூறிய சொல். இனையன—

(பின் வரும்) இம்மொழிகள். இவை அடுத்த செய்யுளில் விரித்துரைக்கப்படும். (153)

10249. பார மாமதி லயோத்தியி
னெய்திநின் பைம்பொன்
ஆர மாமுடிக் கோலமுஞ்
செவ்வியு மழகும்
சோர்வி லாதியாங் காண்குறு
மளவையுந் தொடர்ந்து
பேர வேயரு ளென்றன
ருள்ளன்பு பிணிப்பார்.

'பார மா மதில் அயோத்தியின்
எய்தி, நின் பைம்பொன்
ஆரமா முடிக் கோலமும்
செவ்வியும் அழகும்,
சோர்வு இலாது, யாம் காண்குறும்
அளவையும் தொடர்ந்து
பேரவே அருள்' என்றனர்—
உள் அன்பு பிணிப்பார்.

பொ :—(இராமனிடத்து) உள்ளத்தில் (நிறைந்த) அன்பினாற் பிணிக்கப்பட்டவர்களாகிய வீடணன் முதலானோர் (இராமனை நோக்கி) 'மிகப்பெரிய மதிலாற் சூழப்பெற்ற அயோத்திநகரத்தையடைந்து, நினது பசிய பொன்னாலாகிய முத்துக்கள் பதிக்கப்பெற்ற முடியினைச் சூடும் கோலத்தினையும் அக்காலத்து (நிகழும்) சிறப்பினையும் பொலிவினையும் தளர்ச்சியின்றி யாங்கள் கண்டு களிக்குமளவும் யாங்கள் (உன்னைப்) பிரியாது தொடர்ந்துசென்று (மீண்டும் எம்மூர்) திரும்புதற்கு அருள் செய்வாயாக' என வேண்டினார்கள்.

கு :—உள்ளன்பு பிணிப்பார், என்றனர் என முடிக்க. ஆரம்—முத்து ; மாலை எனப் பொருள் கூறினும் பொருந்தும். பேர்தல் — மீண்டு செல்லுதல். (154)

இராமன் அதற்கு இசைய, யாவரும் மகிழ்தல்

10250. அன்பி னுலவர் மொழிந்தவா
சகங்களு மவர்கள்
துன்ப மெய்திய நடுக்கமு
நோக்கிநீர் துளங்கல்
முன்பு நானினைந் திருந்ததப்
பரிசுநும் முயற்சி
பின்பு காணுமா றுரைத்ததென்
றுரைத்தனன் பெரியோன்.

அன்பினுல் அவர் மொழிந்த
வாசகங்களும், அவர்கள்
துன்பம் எய்திய நடுக்கமும்
நோக்கி, 'நீர் துளங்கல்;
முன்பு நான் நினைந்திருந்தது
அப்பரிசு; நும்முயற்சி
பின்பு காணுமாறு உரைத்தது' என்று
உரைத்தனன்—பெரியோன்.

பொ:—பெரியோனுகிய இராமன் (வீடணன் முதலிய) அவர்கள் (தன்பால் வைத்த) அன்பின் மிகுதியாற் கூறிய மொழிகளையும் (தன்னைப் பிரிந்துறைதல் ஆற்ருத) துன்பத்தினுல் அவர்கள் அடைந்த நடுக்கத்தையும் எண்ணி (அவர்களை)ப் பார்த்து, 'நீங்கள் கலக்கமடையாதீர்கள். நான் முன்பு எண்ணியிருந்தது (நீங்கள் கூறிய) அத்தன்மையதே. (எனினும்) யான் (நும்மூர்க்குச் செல்லுமின் எனப்) பின்பு கூறியது நும்முடைய (உள்ளக் கருத்தின் வழிப்பட்ட) முயற்சியினை அறிவதற்காகவே' என்று கூறினுன்.

கு:—பெரியோன், நோக்கி, 'நீர் துளங்கல்; நான் முன்பு நினைந்திருந்தது அப்பரிசு, பின்பு உரைத்தது நும் முயற்சி காணுமாறு' என்று உரைத்தனன் என இயைத்துரைக்க. பெரியோன் — இராமபிரான். அப்பரிசு என்றது, அயோத்தியில்

நிகழவிருக்கும் முடிசூட்டு விழாவை உடனிருந்து கண்டு மகிழும் நிலையில் வீடணன் முதலியோரை உடனழைத்துச் செல்லுதலை. (155)

10251. ஐயன் வாசகங் கேட்டலு
மரிகுலத் தரசும்
மொய்கொள் சேனையு மிலங்கையர்
வேந்தனு முதலோர்
வைய மாளுடை நாயகன்
மலர்ச்சரண் வணங்கி
மெய்யி னேடருந் துறக்கமுற்
ருரென வியந்தார்.

ஐயன் வாசகம் கேட்டலும்
அரிகுலத்து அரசும்,
மொய் கொள் சேனையும், இலங்கையர்
வேந்தனும் முதலோர்,
வையம் ஆளுடை நாயகன்
மலர்ச்சரண் வணங்கி,
மெய்யினேடு அருந் துறக்கம் உற்ருர்
என வியந்தார்.

பொ :—இராமபிரானது வார்த்தையைக் கேட்டவுடனே வானரகுலவேந்தனுகிய சுக்கிரீவனும் நெருங்கிச் சூழ்தலைக் கொண்ட வானரசேனைகளும் இலங்கையர் மன்னனுகிய வீடணனும் முதலியோர் உலகத்தை ஆளுதலையுடைய தலைவனுகிய இராமபிரானது தாமரை மலர் போலுந் திருவடிகளை வணங்கி (த் தம்) உடம்புடனே கிட்டுதற்கரிய துறக்க வுலகத்தையடைந் தவர் போல (தமது பேற்றினை) வியந்து மகிழ்ந்தார்கள்.

கு :—ஐயன், வையம் ஆளுடை நாயகன் என்றது இராம பிரானை. மண்ணுலகில் வாழ்பவர்கள் துறக்க மெனப்படும் விண்ணுலகு புக வேண்டுமாயின் தாம் பெற்றுள்ள மக்களுடம்பை நீங்கி வேறு நல்லதோர் உடம்பினைப் பெற்றுச் செல்லுதல் வேண்டும். அவ்வாறு உடம்புமாறிச் செல்லும் நிலை அவர்கள் தாம் விரும்பிய நுகர்ச்சியை விரைந்து பெறுதற்குச் சிறிது தடையாய் நிற்றல்

இயல்பு. இவ்வாறன்றித் தாம் இங்குப் பெற்றுள்ள உடம்புட னேயே விண்ணுலகு புகும் வாய்ப்பினைப் பெற்றவர்கள் தடை சிறிதுமின்றி விரும்பிய நுகர்ச்சியை விரைந்து பெறுமாறு போன்று இராமனது சொற்கேட்ட அளவில் வீடணன் முதலி யோர் தாம் இருந்த அந்நிலையிலேயே தாம் விரும்பியது எய்தப் பெறும் பேற்றினை எய்தி வியந்து மகிழ்ந்தார்கள் என்பார் 'மெய் யினோடு அருந்துறக்கம் உற்றார் என வியந்தார்' என்றார். மெய் — உடம்பு. தாம் இவ்வுலகிற்பெற்றுள்ள உடம்பினைத் துறவாதிருந்தே விண்ணுலக இன்பங்களை நுகருந்திறம் தவப் பெருஞ் செல்வர்க்கு எளிதிற் கைவரப்பெறும் என்பது,

'தவஞ்செய்மாக்கள் தம்முடம்பு இடா அது
அதன் பயம் எய்திய அளவைமான' (91, 92) எனவரும் பொருநராற்றுப் படைத் தொடரால் இனிது புலனும். (156)

சுக்கிரீவன் முதலிய எல்லோரையும் விமானத்தில் ஏறுமாறு இராமன் கூற, யாவரும் புட்பகத்தில் ஏறுதல்

10252. அனைய தாகிய சேனையோ
டரசனை யனிலன்
தனய னாதியாம் படைப்பெருந்
தலைவர்க டம்மை
வனையும் வார்கழ லிலங்கையர்
மன்னனை வந்திங்
கினிதி னேறுமின் விமானமென்
றிராகவ னிசைத்தான்.

அனையது ஆகிய சேனையோடு
அரசனை, அனிலன்
தனயன் ஆதியாம் படைப்பெருந்
தலைவர்கள் தம்மை,
வனையும் வார் கழல் இலங்கையர்
மன்னனை, 'வந்து இங்கு
இனிதின் ஏறுமின், விமானம்' என்று
இராகவன் இசைத்தான்.

பொ :— அத்தன்மையதாய் வியப்புற்று மகிழ்ந்த (வானர) சேனையுடனே (அதன்) மன்னனாகிய சுக்கிரீவனையும் வாயுவின் மைந்தனாகிய அனுமன் முதலிய பெரிய சேனைத் தலைவர்களையும் கட்டிய நீண்ட வீரக்கழலினையுடைய இலங்கையர் வேந்தனாகிய வீடணனையும் (நோக்கி) '(நீங்கள் எல்லீரும்) இங்கே வந்த (இவ்) விமானத்தில் இனிதாக ஏறி அமர்வீராக' என்று இராம பிரான் பணித்தருளினான்.

கு :— அணையதாதல் — மெய்யினோடு துறக்கமடைந்தவர்களைப் போன்று வேறிடத்திற் சென்று பெறும் பேற்றினை இருக்குமிடத்தே எளிதின் எய்தப் பெற்று மகிழ்தல். அனிலன் தனயன்— காற்றின் மைந்தன் ; அனுமன். (157)

10253. சொன்ன வாசகம் பிற்படச்
சூரியன் மகனும்
மன்னு வீரரு மெழுபது
வெள்ளவா னரரும்
கன்னி மாமதி லிலங்கைமன்
னெடுகடற் படையும்
துன்னி னார்நெடும் புட்பக
மிசையொரு சூழல்.

சொன்ன வாசகம் பிற்பட,
சூரியன் மகனும்,
மன்னு வீரரும், எழுபது
வெள்ள வானரரும்,
கன்னி மாமதில் இலங்கை
மன்னெடு கடற்படையும்,
துன்னினார், நெடும் புட்பக
மிசை ஒருசூழல்.

பொ :—(இராமன்) கூறிய அச்சொல் பின்னாக (அது செவியிற் புகுதற்கு முன்னமே) சூரிய குமாரனாகிய சுக்கிரீவனும் அங்குள்ள நிலைபெற்ற படைத்தலைவர்களும் எழுபது வெள்ளம் வானரர்களும் அழியாத பெரிய மதிலாற் சூழப்பெற்ற இலங்கைக்கு

அரசனாகிய வீடணனும் (அவனது) கடல் போன்ற (அரக்கர்) சேனையும் நெடிய புட்பக விமானத்தின் மேல் ஒரு பக்கத்தே பொருந்தித் தங்கினார்கள்.

கு :—'வந்து இங்கு இனிதின் ஏறுமின்' என்று இராமன் பணித்தருளிய சொல் தமது செவிபிற் புகுதற்கு முன்னரேயே சுக்கிரீவன் முதலியோர் புட்பக விமானத்தில் முற்பட்டு விரைந்து ஏறினார்கள் என்பதாம். அவர்கள் எல்லோரும் புட்பக விமானத்தின் ஒரு பக்கத்தே துன்னினார்கள் எனவே, நெடிய அவ் விமானத்தின் இடப்பரப்பு இனிது புலனாதல் காணலாம். (158)

இச்செய்யுளின் பின் 9, 18, 21, 25, 26, 29, 31, 40, 54, 60, 61, 63, 66, 71, 74-ஆம் பிரதிகளில் இயமப்படலம் என்ற தலைப்பிலும் 'வசந்தன் உயிர் வருபடலம்' என்ற தலைப்பிலும் பின்வரும் மிகைப்பாடல்கள் கானப்படுகின்றன. இவை பிரதிகள்தோறும் குறைந்தும் கூடியும் முறை பிறழ்ந்தும் காணப்படுதலாலும் கதைத்தொடர்புக்கு இடையே மற்றொன்று விரித்தலாகக் காணப்படுதலாலும் பின் வந்தோரால் பாடிச்சேர்க்கப்பட்டனவாகத் தோன்றுதலால் 40, 41, 45, 52-ஆம் எண்ணுள்ள பிரதிகளில் உள்ளவாறு இங்கும் மிகைப் பாடல்களாகக் காட்டப் பெறுகின்றன.

10253 (a) [ஏறினன் ... ... ... ... ... ... மண்மேல். 10238 (r)]

10253 (b) [ஆழி ... ... ... ... ... ... ... ... என்றான். 10238 (u)]

10253 (c) என்ற காலையி லெழுந்தவ
னியற்கையை நோக்கி
நன்று நாயக னறிவொடு
நினைவென நயந்தான்
சென்று சேனையை நாடினன்
திரிந்துவந் தெய்தி
வென்றி வீரரில் வசந்தனைக்
கண்டிலா வெறுத்தான்.

10253 (d) [இரவி ... ... ... ... ... உரைத்தான். [10238 (v)]

10253 (e) என்னுங்காலை யிராமனும்
யமபடர் யாரும்
மன்னுந் தொல்புர நோக்கியே
மணிநகை முறுவல்
உன்னி னன்றியான் தேவருக்
குதவிசெய் தென்னுப்
பொன்னின் வார்சிலை யெடுத்தனன்
பொறுத்தனன் பொரவே.

10253 (f) எண்டி சாமுக மிரிந்துக
யமபுரங் குலைய
அண்ட கோளகை யடுக்கழிந்
துலைவுற வழியாப்
புண்ட ரீகத்துப் புராதனன்
முதலிய புலவோர்
தொண்டை வாயுலர்ந் தலமரத்
தொடுவினு ணெறிந்தான்.

10253 (g) பாக வான்பிறை யாமெனப்
பலர்நின்று துதிப்ப
வாகை கொண்டவெஞ் சிலையினை
வளைவுற வாங்கி
மேக சாலங்கள் குலைவுற
வெயிற்கதிர் மாட்சி
சோக மெய்திமெய் துளங்கிடச்
சுடுசரந் துரந்தான்.

10253 (h) வல்லை மாதிர மறைந்திட வானவர் மயங்க
எல்லை காண்குரு யாவரு மிரியவி லேக
வில்லை வாங்கிய கரமவை விதிர்விதிர்ப் பெய்தத்
தொல்லை நான்மறை துளங்கிடச் சுடுசரந் துரந்தான்.

10223 (i) வன்பு லங்கிளர் நிருதரை வருக்கமோ டறுக்க
மின்பு லங்கொளு முருமென வீக்கிய வில்லைத்
தன்பொ லங்கையிற் ருக்கியே தொடுத்தவச் சரங்கள்
தென்பு லங்களை நிறைத்தது தேவர்கள் இரிய.

10253 (j) தரும ராசனும் காலனும் யமபடர் தாமும்
உருமு வீழ்ந்தெனச் சரம்வந்து வீழ்ந்ததை யுணர்ந்தும்
மரும தாரையிற் பட்டதோர் வடிக்கணை வாங்கி
நிருமி யாவிது விராகவன் சரமென நினைந்தார்.

10253 (k) கெட்ட தின்றினித் தென்புலங் கேடுவந் தெய்திப்
பட்ட னம்மினிப் பிழைப்பில மென்பதோர் பயத்தால்
முட்ட வெய்திய முயற்சியோ டியாவரு மொய்ப்பச்
சிட்டர் தந்தனித் தேவனை வணங்கினர் சென்றார்.

10253 (l) சிறந்தநின் கருணை யல்லாற் செய்தவம்
பிறிதி லார்மேற்
புறந்தரு முனிவு சாலப் போதுமோ
புத்தேள் நின்னை
மறந்திருந் துய்வ துண்டோ மலர்மிசை
யயனைத் தந்த
அறந்தரு சிந்தை ஐய அபயநின்
னபய மென்றார்.

10253 (m) ஐய னேயெமை யாளுடை
யண்டர் நாயகனே
மெய்ய னேயெனச் சரணின்வந்தி
யாவரும் வீழ்ந்தார்
பொய்யி னோர்செய்த பிழைபொறுத்
தருளெனப் போர்மூண்
டெய்ய நேரிலாச் சிலையினை
மடக்கின னிராமன்.

10253 (n) வந்த டைந்துனக் கபயமென்
றடியினில் வணங்கி
எந்த னிப்பிழை பொறுத்தியென்
றியம்பின ரிதனால்
உந்தன் மேற்சலந் தவிர்ந்தனன்
யூகநாய கன்றான்
தந்த சேனையில் வசந்தன்
வந்திலன்தரு கென்றான்

இச் செய்யுளுக்குப் பதிலாக பின்வருமாறு ஒரு பாடல் அமைந்துளது :—

10253 (o) தன்றனிச் சரண் வணங்கலு
மிராகவன் சாற்றும்
என்ற னிப்பிழை பொறுத்தியென்
றியம்பின யதனுல்
உன்றன் மேற்சலந் தவிர்ந்தனம்
யூபநாய கன்ருன்
தந்த சேனையின் வசந்தன்
வந்திலன்றரு கென்ருன்.

‘ வந்தடைந்து ’ என்ற செய்யுளின் முன் 63-ஆம் பிரதியில் உள்ள பாடல்:—

10253(o-1) என்றனன் என்றலொடு மெரியெழ
விழித்து நக்கான்
வென்றியின் வாலினுலே விசைத்துட
னிறுக்கி வீக்கிக்
குன்றெனத் தோளினுனும் மீண்டவன்
றன்னைக் கொண்டு
மன்றலந் தெரியன்மாலை இராமன்முன்
மருங்கு விட்டான்.

10253 (p) அண்ண லாரியன் றருதியென்
றருளலு மவர்போய்
விண்ணெ லாம்புகுந் தோடியே
வசந்தனை விரைவிற்
கண்ணி னுடிநல் லுயிரினைக்
காண்கிலா திருந்தார்
திண்ணன் யாக்கையெங் கேயெனச்
சாம்புவன் செப்பும்.

10253 (q) [கசிந்த ... ... ... பெறுநுதற் கணிந்தே [10238 (w) ]

10253 (r) [வரிசிலை ... ... ... ... ... ... விட்டான் [ ,, (e) ]

10253 (s) [அக்கணத்து ... ... ... ... பாயும் வேலை [ ,, (f) ]

10253 (t) அன்ன தேயென அவனுயிர்க்
　　கமரர்தம் பதிக்கே
முன்ன தோருடல் கொண்டிவண்
　　தருகென மொழியச்
சொன்ன வாய்மைகேட் டனுமனும்
　　துணைவனைப் பாராப்
பொன்னின் பாதுகம் பணிந்தனன்
　　விடையெனப் போனுன்.

10253 (u) [மண்டிப் ………………… எல்லாம் [10238 (g) ]

10253 (v) [துளங்கி … ………… … … என்ருன் [ ,, (h) ]

10253 (w) [செல்வனே ………………… செப்பி [ ,, (ac) ]

10253 (x) [சொன்ன … … … … … … என்ருன். [ 10238 (i) ]

10253 (y) [வல்ல ரக்கரை … … … பாய்ந்தான். [ ,, (k) ]

10253 (z) [சிந்தை … … … … … உணர்த்தும். [ ,, (l) ]

10253 (aa) [என்னுடைப் … … … … … என்ருன். [ ,, (m) ]

10253 (ab) [என்று … … … … … … … பதியில். [ ,, (n) ]

10253 (ac) [மலரின் … … … … … … தேர்மேல். [ ,, (o) ]

இச்செய்யுளின்பின் 41, 52ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10253 (ad) அன்ன தாதலின் அமரர்அந் நகரிடை யாங்கண்
முன்ன தோருடல் நாடியே கொணர்ந்திட முந்தச்
சொன்ன வாயுவைத் தரிசிக்க வசந்தனும் தோன்றிப்
பொன்னின் பாதுகம் புனைந்தனன் தருமனும் போனுன்.

41ஆம் அச்சுப் புத்தகத்தில் வேருெரு பிரதியிலுளதெனக் குறிக்கப்பட்ட பாடல் :-

10253 (ae) அன்ன காலையிற் புட்பக விமானமாங் கடைய
முன்னி ராகவன் சானகி யிலக்குவன் முதலா
மன்னு வானர மெழுபது வெள்ளமும் வரையா
உன்னி யேறலு முச்சியிற் சொருகு பூப் போன்ற.

10254. பத்து நாலென வடுக்கிய
வுலகங்கள் பலவின்
மெத்தி யோனிக ளேறினும்
வெளியிட மிகுமால்
முத்த ரானவ ரிதனிலை
மொழிகுவ தல்லால்
இத்த ராதலத் தியம்புதற்
குரியவர் யாரே.

பத்து நால்என அடுக்கிய
உலகங்கள் பலவின்
மெத்து யோனிகள் ஏறினும்
வெளியிடம் மிகுமால்;
முத்தர் ஆனவர் இதன்நிலை
மொழிகுவது அல்லால்,
இத் தராதலத்து இயம்புதற்கு
உரியவர் யாரே?

பொ :—பதினான்காக (ஒன்றன்மேல் ஒன்று) அடுக்கப்பெற்ற உலகங்கள் பலவற்றிலும் நிறைந்துள்ள பல்வேறுடம்பினையுடைய உயிர்த்தொகுதிகள் (ஒருங்கே) ஏறியமர்ந்தாலும் (இவ் விமானத்தில்) வெறுமையான இடப்பரப்புமிக்குக் காணப்பெறும்· இவ்விமானத்தின் தன்மையைப் பாசத்தளையினின்றும் விடுபட்ட ஞானிகள் (உணர்ந்து) சொல்லக் கூடுமேயல்லால் இந்நில வுலகத்திற் சொல்லுதற் குரியவர்கள் வேறு யாருளர்? (ஒருவரு மில்லை.)

கு :—புட்பகம் என்னும் இவ்விமானத்தின் இயல்பினை உள்ள வாறுணர்ந்துரைத்தல் என்பது பாசப் பிணிப்பினின்றும் நீங்கிய மெய்யுணர்வுடைய ஞானிகளால் இயல்வதன்றி இவ்வுலகில் வாழும் ஏனையோரால் இயலாது என்று பரந்திடங் கொடுக்கும் இடப்பரப்புடைய அவ்விமானத்தின் சிறப்பினை ஆசிரியர் வியந்து கூறியவாறு. (159)

இச்செய்யுளின் பின் 52-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10254 (a) என்ற புட்பக விமானத்தின் ஏறினர் எவரும்
'நன்றுதான்' என நாயகன் ஏறினன் திருவோடு
அன்றுதான் இளங்கோவொடும் அக்கவி வெள்ளம்
ஒன்றுதான் என ஒருதிசை யிருந்ததும் ஒக்கும்.

10254 (b) ஆயகண் டமலன் உள்ளம்
மகிழ்ந்தனன் அனுமன் தன்பால்
நேய மூண்டதுதான் நிற்க
நெடியவன் சரணம் சூடி
மேயினன் தமர்களோடு வசந்தனும்
விண் மீதாகப்
போயின திராமன் சொல்லின்
புட்பக விமானமம்மா.

புட்பக விமானத்தில் இராமன் விளங்கிய காட்சி

10255. எழுபது வெள்ளத் தோரு
மிரவிகான் முளையு மெண்ணின்
வழுவிலா விலங்கை வேந்தும்
வான்பெரும் படையுஞ் சூழத்
தழுவுசீ ரிளைய கோவுஞ்
சனகன்மா மயிலும் போற்ற
விழுமிய குணத்து வீரன்
விளங்கினன் விமானத் தும்பர்.

எழுபது வெள்ளத் தோரும்,
இரவி கான் முளையும், எண்ணின்
வழு இலா இலங்கை வேந்தும்,
வான் பெரும் படையும் சூழ,
தழுவுசீர் இளைய கோவும்,
சனகன்மா மயிலும் போற்ற,
விழுமிய குணத்து வீரன்
விளங்கினன், விமானத்து உம்பர்.

பொ :— எழுபது வெள்ளம் வானர வீரர்களும் சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவனும் மனத்தின்கண் மாசில்லாத இலங்கை மன்னனாகிய வீடணனும் (அவனுடைய) மிகப் பெரிய சேனை களும் சூழ்ந்து நிற்க, பொருந்தி நிறைந்த புகழையுடைய இளையபெருமாளாகிய இலக்குவனும் சனகன் பெற்ற மயில் போல்வாளாகிய சீதையும் (இருபக்கம் பணிந்து) போற்றச் சிறந்த நற்குணங்களையுடைய வீரனாகிய இராமபிரான் (புட்பக) விமானத்தில் (பொலிவுற்று) விளங்கினான்.

கு :— விழுமிய குணத்து வீரன், சூழ, போற்ற, விமானத்து உம்பர் விளங்கினன் என இயையும். நெஞ்சத்துக் காமமே நிறைந்த இலங்கை வேந்தாகிய இராவணனோடு அவன் தம்பி வீடணனுக்குள்ள வேற்றுமை இனிது விளங்க 'எண்ணின் வழுவிலா இலங்கை வேந்து' என அடை புணர்த்தோதினர் ஆசிரியர். எண் — மனம். வழு — குற்றம். (160)

இச் செய்யுளின் பின் 71–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10255 (a) இங்கி வனுயிர்க் கினியமுன்
போலுரு விலயப்
பங்க யற்குரைத் தேகொணருதி
யெனப் பணிப்ப
அங்க வன்புகுந் தவ்வுருக்
கொணர்ந்தன னீய்ந்து
புங்க வன்றனைத் தொழுதனன்
விடையெனப் போனான்.

10255 (b) அந்த வேலையில் வசந்தனு
மெழுந்தன னமரர்
சிந்தை மெச்சியே சிந்தினர்
பூமழை தெளித்தார்
தந்த பூண்மகிழ் வார்புற்ப
மானதிற்ற விரா
தெந்தை ராமனு மியாவரு
மேறின ரிருந்தார்.

10256. அண்டமே போன்ற தையன்
புட்பக மண்டத் தும்பர்
எண்டருங் குணங்க ளின்றி
முதலிடை யீறின் ருகிப்
பண்டைநான் மறைக்கு மெட்டாப்
பரஞ்சுடர் பொலிவ தேபோல்
புண்டரீ கக்கண் வென்றிப்
புரவலன் பொலிந்தான் மன்னே.

அண்டமே போன்றது ஐயன்
புட்பகம்; அண்டத்து உம்பர்
எண்தரும் குணங்கள் இன்றி,
முதல் இடை ஈறு இன்று ஆகி,
பண்டை நான்மறைக்கும் எட்டாப்
பரஞ்சுடர் பொலிவதே போல்,
புண்டரீகக் கண்வென்றிப்
புரவலன் பொலிந்தான் மன்னே.

பொ :— இராமபிரான் ஏறியமர்ந்த புட்பகவிமானம் அண்டப் பரப்பினை ஒத்துத் தோன்றியது. அவ்வண்டப் பரப்பின் மேலதாகிய பரமபதத்தில் எண்ணியளவிட்டுரைத்தற்குரிய குணங்கள் இன்றி (கடல்போன்றுஎல்லையற்று நற்குணங்களையுடையதாய்)த் தோற்றம் நிலை இறுதி என்பனவின்றித் தொன்மை வாய்ந்த நான்கு வேதங்களாலும் அணுகுதற்கு எட்டாத பேரொளிப் பிழம்பாகிய பரம்பொருள் விளங்குதல் போன்று, செந்தாமரைபோலும் கண்களையுடைய வெற்றிவேந்தனாகிய இராமபிரான் (அவ் விமானத்தின் மேல்) பொலிந்து தோன்றினான்.

கு :— ஐயன்—இராமன். புட்பக விமானத்திற்கு அண்டப் பரப்பும், அதன்மேல் ஏறியமர்ந்த இராமபிரானுக்கு அண்டத்தின் மேல் பரமபதத்தில் எழுந்தருளிய பரஞ்சுடராகிய இறைவனும் உவமை. இது தற்குறிப்பேற்ற உவமை. இறைவன் எண்ணியளவிட்டுரைக்க ஒண்ணாது கடல்போற் பரந்த குணங்களையுடையவன் என்பார். 'எண்தருங் குணங்கள் இன்றி' என்றார். 'அவர் நற்குணக் கடல்' என முன்னர் கூறியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும். (161)

இராமன் கட்டளையினுல் யாவரும் மனித வடிவங்கொள்ளுதல்

10257. தேனுடை யலங்கன் மோலிச்
செங்கதிர்ச் செல்வன் சேயும்
மீனுடை யகழி வேலை
யிலங்கையர் வேந்தும் வெற்றித்
தானையும் பிறரு மற்றைப்
படைப்பெருந் தலைவர் தாமும்
மானுட வடிவங் கொண்டார்
வள்ளறன் வாய்மை தன்னுல்.

தேன்உடை அலங்கல் மோலிச்
செங்கதிர்ச் செல்வன் சேயும்,
மீன்உடை அகழி வேலை
இலங்கையர் வேந்தும், வெற்றித்
தானையும், பிறரும், மற்றைப்
படைப்பெருந் தலைவர் தாமும்
மானுட வடிவங் கொண்டார்,
வள்ளல்தன் வாய்மைதன்னுல்.

பொ :—தேனைத் தன்னகத்தே கொண்ட மலர் மாலையைச் சூடிய முடியினையுடைய செங்கதிர்ச் செல்வன் புதல்வனுகிய சுக்கிரீவனும், மீனைத் தன்னகத்தே கொண்ட கடலை அகழியாக வுடைய இலங்கைக்கு வேந்தனுகிய வீடணனும், வெற்றித்திறம் வாய்ந்த (வானர) சேனைகளும் (அரக்கர் முதலிய) பிறரும், மற்றைய பெரும்படைத் தலைவர்களும் வள்ளலாகிய இராம பிரானது வாய்மொழிப்படி (தத்தம் பழைய வுருவம்மாற) மனித வுருவினை மேற்கொண்டார்கள்.

கு :—தேவர்களே வானரர்களாகத் தோன்றியவர்களாதலின் வேண்டுருவங்கொள்ள வல்லவராகிய அவ் வானரர்களும் அத் தகைய ஆற்றல் வாய்ந்த அரக்கர் முதலிய பிறரும் அயோத்தி மக்கள் கண்டு அஞ்சாதவண்ணம் இராமனது வாய்மொழியின் படி மனிதவுருவினை மேற்கொண்டனர் என்பதாம். (162)

விமானம் வடதிசை நோக்கிச் செல்கையில் இராமன் வழியிலுள்ள காட்சிகளைச் சீதைக்குக் காட்டிச் சொல்லுதல்

10258. குடதிசை மறைந்து பின்னர்க்
குணதிசை யுதயஞ் செய்வான்
வடதிசை யயன முன்னி
வருவதே கடுப்ப மானம்
தடையொரு சிறிதின் ருகித்
தாவிவான் படரும் வேலை
படையமை விழியாட் கைய
னிவையிவை பகர லுற்ருன்.

குடதிசை மறைந்து, பின்னர்க்
குணதிசை உதயம் செய்வான்,
வடதிசை அயனம் முன்னி
வருவதே கடுப்ப, மானம்,
தடை ஒருசிறிது இன்ருகித்
தாவி வான்படரும் வேலை,
படை அமை விழியாட்கு, ஐயன்
இவை இவை பகரல் உற்ருன்:

பொ :—(மாலைப்பொழுதிலே) மேலைத்திசையிலே மறைந்து, பின்பு (காலைப்பொழுதிலே) கீழைத்திசையிலே எழுந்து தோன்றும் இயல்பினனுன கதிரவன், (தன் வழியை மாற்றித் தென்திசையினின்றும்) வடதிசை (நோக்கிச் செல்லும்) வழியிலே வருவதனை ஒப்ப, (புட்பக) விமானமானது, ஒருசிறிதும் தடையின்றி மேலுயர்ந்து ஆகாய வழியிலே செல்லும் பொழுது நாயகனுகிய இராமன், (தன்பக்கத்தேயுள்ள) வேற்படைபோலும் கண்களையுடையளாகிய சீதைக்கு (ப்பின்வரும்) இம்மொழிகளைக் கூறத்தொடங்கினுன்.

கு :— குடதிசை — மேற்குத்திசை. குணதிசை — கிழக்குத் திசை. உதயஞ் செய்தல் — எழுந்து தோன்றுதல். வடதிசை அயனம் — (தென்றிசையிலிருந்து) வடக்கே செல்லும் வழி. கடுத்தல் — ஒத்தல். மானம் — (புட்பகம் என்னும்) விமானம்.

மேற்குதிசையில் மறைந்து கிழக்குத்திசையில் எழுந்து தோன்றும் இயல்புடைய சூரியன், தனது வழியை மாற்றித் தென்றிசையிலிருந்து வடதிசை நோக்கிச் செல்வது போன்று, ஒளிமிக்க புட்பக விமானம் தென்னிலங்கையினின்றும் புறப்பட்டு வடதிசையை நோக்கி வான்வழியாகச் சென்றது என்பதாம். படை அமைவிழியாள் — வேற்படை போலும் விழியிணையுடையாள்; என்றது சீதையை. ஐயன் — இராமன். இராமன் கூறுவன பின் வருஞ் செய்யுட்களில் விரித்துரைக்கப்படும். (163)

இச் செய்யுளின்பின் 9, 18, 19, 21, 23, 25, 26, 29, 31, 40, 41, 43, 44, 45, 52, 54, 60, 61, 62, 63, 66, 74–ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன :—

10258 (a) வென்றி வீடணன்கொணர்ந்த புட்பக
விமானந் தன்மேல்
ஒன்றுநற் சீதையோடு மும்பரும்
பிறருங் காண
வென்றுயர் சேனையோடு மிராமனும்
விரைவி னெய்தித்
தென்றிசை யிலங்கையாதி தேவிக்குத்
தெரியக் காட்டும்

45-ஆம் பிரதியில் உள்ள பாடல்.

10258 (b) வென்றிசேர் கவியின் வெள்ளக்
கடன்முகந் தெழுந்து விண்மேல்
சென்றது விமானஞ் செல்லத்
திசையொடு தேச மாதி
யென்றவை யனைத்தும் தோன்ற
விராமனும் இனிதுதேறித்
தென்றிசை யிலங்கையின் சீர்சீதைக்குத்
தெரிக்க லுற்றான்.

10258 (c) மன்னுபொற் கொடிக ளாட
மாடமாளிகையி னுங்குத்
துன்னுபைம் பொழில்கள் சுற்றத்
தோரணந் துவன்றிவானோர்

பொன்னக ரொக்குமென்று புகழ்தலிற்
புலவ ராலும்
பன்னரு மிலங்கை மூதூர்
பவளவாய் மயிலே பாராய்.

10258 (d) வெதிரெதி ரஞ்சுமென்ரேள் வெண்ணகைக்
கனிவாய் வல்லி
எதிர்பொர வந்த விண்ணே
ரிறைவனைச் சிறையில்வைத்த
அதிர்கழ லரக்கன்தானை யஞ்சலி
லாது செல்லக்
கதிர்மதி விலங்கி யேகுங்
கடிமதின் மூன்றுங் காணாய்.

10258 (e) வென்றிவேற் கருங்கண் மானே
யென்னெடு மிகலி வெய்ய
வன்றிற லரக்கனேற்ற வடதிசை
வாயி னேக்காய்
கன்றிய வரக்கன் சேனைக்காவலன்
றன்னை நீலன்
கொன்றுயிர் கூற்றுக் கீந்த
குணதிசை வாயினேக்காய்

10258 (f) மறத்திறல் வாலிமைந்தன் வச்சிரத்
தெயிற்ரேன் றன்னைச்
செறுத்துயர் செகுத்து நின்ற
தென்றிசை வாயினேக்காய்
அறத்தினுக் கலக்கண் செய்யு
மகம்பன்ற னுடலையாவி
வெறுத்தெதி ரனும னின்ற
மேற்றிசை வாயினேக்காய்

10258 (g) மருங்கடர் களபக் கொங்கை
மதிநுதல் மிதிலை வல்லி
கருங்கட னிகர்ப்பவான வகழியோர்
மூன்றுங் காணாய்

இருங்கட முகத்த யானை
யிவுளிதேர் காலாள்துஞ்சிப்
பொருங்கடர் நிறத்தார் வீய்ந்த
போர்க்களந் தன்னைப் பாராய்.

10258 (h) கொடிமதி லிலங்கை வேந்தன்
கோபுரத் தும்பர் தோன்ற
அடுதிறற் பரிதிமைந்த னவனிலை
குலையத் தாக்கிச்
சுடர்முடி பறித்த வந்நா
ளன்னவன் றெல்லை வெம்போர்ப்
படியினை நோக்கிநின்ற சுவேதமால்
வரையைப் பாராய்

இதன் பின் 23, 29, 43, 44–ல் உள்ள இரு பாடல்கள் :—

10258 (i) என்றவட் குறைத்துத் தானவ்
வேந்திழை தம்பி சேனை
ஒன்றிய வெல்லா மோங்கு
மோதப் பாற்கடலிற் றேன்றிப்
பொன்றிணி விமானஞ் செல்கென்
றருடலும் புரிவிஞேடு
சென்றது வடாது திக்கை
நோக்கியத் தெய்வ மானம்.

10258 (j) நடந்ததேர் வடபால் நோக்கி
நளிர்செறி நரலை மீதே
கிடந்தபே ரணையைக் கண்டி
தேதெனச் சீதை கேட்ப
மடந்தையை நோக்கி வானேர்
வரத்தினுல் வந்த வள்ளல்
கடந்ததேர் வடபாலாழிக் கரையிடை
நிறுவிச் சொல்வான்.

10258 (k) பூக்கமழ் குழலினய்நின் பொருட்டியான்
புகலா நின்றேன்
மேக்குயர் தச்சன் மைந்த
னளனிவன் விலங்க லாலன்

ருக்கிய விதனை வெய்ய
பாதக மனைத்தும் வந்து
நோக்கிய பொழுதே நூறுஞ்
சேதுவை நீயு நோக்காய்.

10259. இலங்கையை வலஞ்செய் தேக
வெனநினைந் திடுமுன் மானம்
வலங்கிளர் கீழை வாயில்
வரப்பிர கத்த னீலன்
நலங்கிளர் கையின் மாண்ட
திவணென நமன்றன் வாயில்
கலந்திட வீங்குக் கண்டாய்
சுபாரிசற் கட்ட தென்றான்.

இலங்கையை வலஞ் செய்து ஏக
என நினைந்திடுமுன், மானம்
வலம் கிளர் கீழைவாயில்
வர, 'பிரகத்தன், நீலன்
நலம் கிளர் கையின் மாண்டது
இவண்' என, நமன்தன் வாயில்
கலந்திட, 'ஈங்குக் கண்டாய்
சுபாரிசற் கட்டது' என்றான்.

பொ:—இலங்கை நகரத்தை வலஞ்செய்து செல்லுதல் வேண்டும் என (இராமபிரான் தன் மனத்தில்) நினைத்தற்கு முன்னமே (அவ்) விமானம் வலமாக எழுந்து கிழக்கு வாயிலில் வந்தபொழுது பிரகத்தன் என்னும் அரக்கன் நீலன் என்னும் வானர வீரனது அழகுமிக்க கையினால் இறந்தொழிந்தது இந்த இடம்தான் என்று (சீதையை நோக்கிக்) கூற, (பின்பு அவ்விமானம்) இயமனுக்குரிய தென்திசை (யினைநோக்கி யமைந்த) வாயிலிற் சேர்ந்திட, 'சுபாரிசன் என்னும் அரக்கனைக் கொன்றது இவ்விடத்திலேதான்' என்று (இராமன் சீதைக்குக்) கூறினான்.

கு:—வலஞ் செய்தேக வேண்டும் என ஒருசொல் வருவித் துரைக்க. கீழைவாயில் என்றது, இலங்கை நகரத்தின் கிழக்

குக் கோபுர வாயிலை. நமன்றன் வாயில்என்றது, இயமனுக்குரிய தென்திசையினை நோக்கியமைந்த இலங்கையின் தெற்குக் கோபுரவாயிலை. கட்டல் — களைதல்; கொன்றொழித்தல்.

(164)

10260. குடதிசை வாயில் வேகக்
குன்றரிந் தவனை வென்ற
விடநிகர் மேக நாத
னிளவலால் வீழ்ந்த தென்முன்
வடதிசை வாயின் மேலவ்
விராவணன் மவுலி பத்தும்
உடலமு மிழந்த திங்கென்
றுணர்த்திவே றுரைக்க லுற்றான்.

'குடதிசை வாயில், வேகக்
குன்று அரிந்தவனை வென்ற
விடம்நிகர் மேகநாதன் இளவலால்
வீழ்ந்தது; என்முன்
வடதிசை வாயில்மேல் அவ்
இராவணன் மவுலி பத்தும்
உடலமும் இழந்தது இங்கு' என்று
உணர்த்தி, வேறு உரைக்கலுற்றான்:

பொ:—மேற்குத்திசையிலுள்ள கோபுரவாயிலில், விரைந்து (பறந்து) செல்லும் மலைகளின் சிறகுகளை அரிந்தவனாகிய இந்திரனை வெற்றிகொண்ட ஆலகால நஞ்சினையொத்த கொடிய இந்திரசித்து (என்) தம்பி இலக்குவனால் இறந்து வீழ்ந்தது என்று (இராமன் சீதைக்குச்) சொல்லுதற்கு முன்னமே (இலங்கையின்) வடதிசை வாயிலில் (விமானம்) வந்துசேர, இராவணன் (தன்) தலைகள் பத்தினையும் உடம்பினையும் (என் கை அம்புகளால்) இழந்து இறந்து வீழ்ந்தது இவ்விடத்தில் தான் என்று (இராமன் சீதைக்கு) அறிவித்து மேலும் வேறு கூறத் தொடங்கினான்.

கு:—குன்றரிந்தவன் — மலைகளின் சிறகுகளையரிந்த இந்திரன். மேகநாதன் — இராவணனுக்கு மண்டோதரி வயிற்றிற்

பிறந்த மைந்தன்; இவன் இந்திரனை வென்றமையால் இந்திரசித்து என அழைக்கப்பெற்ருன். இலங்கையின் வடதிசையிலமைந்த பாடி வீட்டிலிருந்த இராமபிரான் முதலியோரை ஏற்றிக்கொண்டு எழுந்த புட்பகவிமானம், 'இலங்கையை வலஞ்செய்து ஏக வேண்டும்' என இராமபிரான் எண்ணிய வண்ணமே அந் நகரத்தை வலமாகச் சுற்றி வந்தபொழுது, இலங்கையின் நான்கு திசைகளிலும் நிகழ்ந்த போர்களில் பிரகத்தன், சுபாரிசன், மேகநாதன், இராவணன் ஆகியோர் இறந்து வீழ்ந்த இடங்களை இராமன் விமானத்திலிருந்த வண்ணமே சீதைக்குக் காட்டினுன் என்பதாம். (165)

இச்செய்யுள்

'குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்புகாட்டித் தென்திசை யிலங்கை நோக்கிக்
கடல்நிறக் கடவுளெந்தை யரவணைத்துயிலுமா கண்டு
உடலெனக்கு ருகுமாலோ என்செய்கே னுலகத்தீரே'

(திருமாலை — 16)

எனவரும் அருளிச் செயலின் சொல்லினை அடியொற்றியமைந் துள்ளமை அறியத்தகுவதாகும்.

சேதுவைக் காட்டி அதன் சிறப்பினை எடுத்துரைத்தல்

10261. நன்னுத னின்னை நீங்கி
நாள்பல கழிந்த பின்றை
மன்னவ னிரவி மைந்தன்
வான்றுணை யாக நட்ட
பின்னைமா ருதிவந் துன்னைப்
பேதறுத் துனது பெற்றி
சொன்னபின் வான ரேசர்
தொகுத்ததிச் சேது கண்டாய்.

நன்னுதல் நின்னை நீங்கி
நாள் பல கழிந்த பின்றை,
மன்னவன் இரவி மைந்தன்
வான் துணை ஆக நட்ட

பின்னே, மாருதி வந்து உன்னைப்
பேதுஅறுத்து, உனது பெற்றி
சொன்னபின், வானரேசர்
தொகுத்தது இச்சேது கண்டாய்.

பொ :— அழகிய நெற்றியையுடையவளே! (யான்) நின்னை விட்டுப் பிரிந்து பல நாட்கள் கழிந்த பின்னர் (குரங்குகளின்) வேந்தனும் சூரியன் புதல்வனும் ஆகிய சுக்கிரீவனைப் பெருந் துணைவனாக நட்புக்கொண்ட பின்பு (அவனது ஏவலால்) அனுமன் (இலங்கையில் நீ சிறையிருந்த அசோகவனத்தில்) வந்து, (எனது நிலையை உனக்கு அறிவித்து உனது) கலக்கத்தைப் போக்கி (மீண்டு என்பால் வந்து) உனது நிலையினை அறிவித்த பின்னர் (இராவணனைக் கொன்று உன்னைச் சிறைமீட்டற் பொருட்டு) வானரப் படைத்தலைவர் (கடலிடையே) கட்டியது சேது என்னும் இந்த அணையாகும். (இதனைக்) காண்பாயாக.

கு :— இரவி மைந்தன்—சூரியன் புதல்வன்; சுக்கிரீவன். வான்துணை—பெருந்துணை. நட்டல்—நண்பு செய்தல். சேது—அணை. (166)

10262. மற்றிதன் றூய்மை யெண்ணின்
மலரயன் றனக்கு மெட்டா
பொற்றொடித் தெரிவை யானென்
புகலுகேன் கேட்டி யன்பால்
பெற்றதாய் தந்தை யோடு
தேசிகற் பிழைத்துச் சூழ்ந்த
சுற்றமுங் கெடுத்து ளோரு
மெதிர்தரிற் சுரர்க ளாவார்.

மற்று இதன் தூய்மை எண்ணின்
மலர்அயன் தனக்கும் எட்டா;
பொற்றொடித் தெரிவை! யான் என்
புகலுகேன்? கேட்டி அன்பால்;
பெற்ற தாய் தந்தையோடு
தேசிகன் பிழைத்துச் சூழ்ந்த
சுற்றமும் கெடுத்துளோரும்
எதிர்தரின், சுரர்கள் ஆவார்.

பொ:—பொன்னால்இயன்ற வளையல்களையுடைய பெண்ணே! (சேது என்னும்) இந்த அணையின் தூய்மையினை ஆராய்ந்து கூறப் புகுங்கால் (இதன் இயல்புகள்) தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனுக்கும் புலப்படாதனவாகும். (அவ்வாறாகவும் மனிதனாகிய) யான் (இதன் பெருமையினை) எவ்வாறு சொல்லவல்லேன்? (ஆயினும் யான் கூறுவதனைக்) கேட்பாயாக. அன்பினால் பெற்று வளர்த்த தாய்தந்தையர்க்கும் ஆசிரியனுக்கும் தீங்கு செய்து (தன்னைச் சார்ந்த) சுற்றத்தாரையும் கெடுத்து வாழ்கின்ற மிகக் கொடிய பாவிகளும் (இச் சேதுவை) எதிர்ப்பட்டுக் காண்பாராயின் (தம் பாவம் நீங்கித்) தேவர்களாவார்கள்.

கு:— இங்குத் தூய்மை என்றது, தன்னைச் சார்ந்தாரின் பாவங்களைப் போக்கி மனமொழிமெய்களால் தூயவராகச் செய்யும் தன்மையினை. தேசிகன்—ஆசிரியன். தேசிகனை என இரண்டாம் வேற்றுமையுருபு விரித்துரைக்க. சுரர்கள்—தேவர்கள்.

(167)

10263. இந்திரற் கஞ்சி மேனா
ளிருங்கடல் புக்கு நீங்காக்
கந்தர சயிலந் தன்னைக்
கண்டவர் வினைக டீர்க்கும்
கந்தமா தனமென் றோதுங்
கிரியிவண் கிடப்ப கண்டாய்
பைந்தொடி யடைத்த சேதுப்
பாவன மாய தென்றான்.

'இந்திரற்கு அஞ்சி, மேல்நாள்,
இருங்கடல் புக்கு, நீங்காக்
கந்தர சயிலம், தன்னைக்
கண்டவர் வினைகள் தீர்க்கும்
கந்தமாதனம் என்று ஓதும்
கிரி இவண் கிடப்ப கண்டாய்;
பைந்தொடி! அடைத்த சேது
பாவனம் ஆயது' என்றான்.

பொ :— பசும்பொன்னால் இயன்ற வளையலையணிந்தவளே! முற்காலத்தில் இந்திரனுக்குப் பயந்து பெரிய கடலினுள்ளே புகுந்து வெளிப்படாத குகைகளுடன் பொருந்திய மலைகளுள், தன்னை (வழிபட்டு)க் கண்டவர்களுடைய தீவினைகளைப் போக்க வல்ல கந்தமாதனம் எனப் பெயர் கூறப்படும் மலை இக்கடலில் நிலைபெற்றிருப்பதைக் காண்பாயாக. (அம்மலை கொண்டு) அடைக்கப்பெற்ற சேது என்னும் அணை மிகவும் தூய்மையுடைய தாகும் என(ச் சீதையை நோக்கி)க் கூறினான் (இராமபிரான்).

கு :— இந்திரன் வச்சிரப் படையினால் மலைகளின் சிறகினை அரிந்த காலத்தில் அஞ்சிக் கடலினுள்ளே மறைந்த மலைகளில் தன்னைத் தரிசித்தோர்க்குப் பாவத்தைப் போக்கி நலஞ் செய்ய வல்ல கந்தமாதனம் எனப்பெயரியமலை இக்கடலினிடையே நிலை பெற்றுள்ளது. அத் தூய மலையினைத் தொடர்ந்து அமைந்திருத் தலால் சேது என்னும் இந்த அணை மிகவும் தூய்மையை நல்குவ தாகும் என இராமபிரான் சீதைக்கு எடுத்துரைத்தான் என்ப தாம். (168)

10264. கங்கையோ டியமுனை கோதா
விரியொடு களிந்தை சூழ்ந்த
பொங்குநீர் நதிகள் யாவும்
படிந்தலாற் புன்மை போகா
சங்கெறி தரங்க வேலை
தட்டவிச் சேது வென்னும்
இங்கிதி னெதிர்ந்தோர் புன்மை
யாவையு நீங்கு மன்றே.

கங்கையோடு, யமுனை, கோதாவிரியொடு
களிந்தை சூழ்ந்த
பொங்குநீர் நதிகள் யாவும்,
படிந்து அலால், புன்மை போகா;
சங்குஎறி தரங்க வேலை
தட்டஇச் சேது என்னும்
இங்கு இதின் எதிர்ந்தோர் புன்மை
யாவையும் நீங்கும் அன்றே.

பொ :—கங்கை, யமுனை, கோதாவிரி, காளிந்தி முதலாகச் சூழ்ந்து செல்லும் மிக்க நீரையுடைய (புண்ணிய) ஆறுகள் எல்லாவற்றிலும் (மக்கள்) மூழ்கினலல்லது (அவருடைய உள்ளத்தின்) மாசுகள் தீரமாட்டா. சங்குகளை வீசுகின்ற அலைகளையுடைய கடலிலே தடுத்துக் கட்டப்பெற்ற இந்தச் சேது என்னும் இவ்விடத்தேயுள்ள (புண்ணிய) தீர்த்தத்தில் எதிர்ப்பட்டுக் கண்டவர்களுடைய தீவினைகள் யாவும் தாமே தவிர்வனவாகும்.

கு :—புன்மை — அசுத்தம்; ஈண்டு உள்ளத்தின் மாசுகளை யுணர்த்தியது. கங்கை முதலிய புண்ணிய நதிகளில் மூழ்கினலன்றித் தீரமாட்டாத மனமாசுகளாகிய தீவினைகள் யாவும் இச் சேதுவினைக் கண்ட அளவிலேயே தீரும் என்பதாம். (169)

10265. ஆவினைக் குரவ ரோடு
மருமறை முனிவர் தம்மைப்
பாவையர் குழுவை யின்சொற்
பாலரைப் பயந்து தம்மின்
மேவின வவரைச் செற்றோர்
விரிகடற் சேது வந்து
தோய்வரே லவர்கள் கண்டாய்
சுரர்தொழுஞ் சுரர்க ளாவார்.

ஆவினைக் குரவரோடும்
அரு மறை முனிவர் தம்மைப்
பாவையர் குழுவை இன் சொல்
பாலரைப் பயந்து தம்மின்
மேவின அவரைச் செற்றோர்,
விரிகடல் சேது வந்து
தோய்வரேல், அவர்கள் கண்டாய்
சுரர் தொழும் சுரர்கள் ஆவார்.

பொ :—பசுவினையும் (ஐம்பெருங்) குரவர்களையும், (ஓதுதற்கு) அரிய வேதங்களையுணர்ந்த முனிவர்களையும், மகளிர் குழுவினையும், இனிய (மழலைச்) சொல்லினையுடைய (பாலுண்ணும்) குழந்தைகளையும், அஞ்சித் தம்மை அடைக்கலமாகவந்து சார்ந்தவர்களையும் கொன்ற கொடியோரும் பரந்த கடலிடையே

யமைந்த சேது என்னும் இதனைக்கண்டு (இத்துறையில்) மூழ்குவ ராயின் அன்னோர் தேவர்கள் தொழும் பெருமை வாய்ந்த தேவர் களாவர்.

கு :—ஆ — பசு. குரவர்—(ஐவகை) ஆசிரியர்கள். அரசன், உவாத்தியாயன், தாய், தந்தை, தமையன் என்னும் இவர்கள் ஐம்பெருங்குரவர் எனப் போற்றப் பெறுபவராவர். பயந்து தம் மின் மேவின அவர் — அஞ்சித் தம்மிடத்தே வந்து அடைக்கல மடைந்தவர்கள். செற்றல் — கொல்லுதல். தோய்தல் — நீரில் மூழ்குதல். ஆவினைக் கொல்லுதல் முதலிய இத்தகைய தீ வினைகளை அறியாமையாற் செய்தவர்கள் தமது பாவத்தினைப் போக்க எண்ணித் தீர்த்த யாத்திரை முதலிய பிராயச் சித்தங் களை நாடுதல் உண்டென்பது,

'ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்,
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உள'' (புறம் — 34)

எனவரும் புறப்பாடலால் உணரப்படும். சுரர் — தேவர். சுரர் தொழும் தேவராதலாவது தம்மால் வணங்கப்படும் பெருமை வாய்ந்த தேவர்களே தம்மைத் தேவரெனக்கொண்டு வணங்கும் பெருமையினைத் தாம் உடையராதல். 'தொழப்படும் தேவர் தம்மால் தொழுவிக்கும் தம் தொண்டரையே' (4—112—5) என வரும் அப்பரருள் மொழி இங்கு ஒப்ப நோக்கத்தகுவதாகும் (170)

10266. மரக்கல மியங்க வேண்டி
வரிசிலைக் குதையாற் கீறித்
தருக்கிய விடத்துப் பஞ்ச
பாதக ரேனுஞ் சாரிற்
பெருக்கிய வேழு மூன்று
பிறவியும் பிணிக ணீங்கி
நெருக்கிய வமரர்க் கெல்லா
நீணிதி யாவ ரன்றே.

மரக்கலம் இயங்க வேண்டி
வரி சிலைக் குதையால் கீறித்
தருக்கிய இடத்து, பஞ்ச
பாதக ரேனுஞ் சாரின்,
பெருக்கிய ஏழு மூன்று
பிறவியும் பிணிகள் நீங்கி
நெருக்கிய அமரர்க்கு எல்லாம்
நீள் நிதி ஆவர் அன்றே.

பொ :— மரக்கலங்கள் (கடலில் தடையின்றிச்) செல்ல வேண்டிக் கட்டமைந்த வில்லின் நுனியினுற் கீறி, (யான், இவ் வணையினைச் சிறிது) உடைத்துச் சிதைத்த இவ்விடத்தில் ஐம் பெரும் பாதகங்களைச் செய்த கொடியோர்களாயினும் வந்து சார்ந்தால் அவர்கள், ஏழும் மூன்றும் (ஆகப்) பெருக்கிய இருபத் தொரு பிறவிகளிலும் நோயினின்றும் நீங்கிக் கூட்டமாயுள்ள தேவர்களுக்கெல்லாம் பெருஞ் செல்வமெனப் பாராட்டப்பெறுஞ் சிறப்பினையுடையராவர்.

கு :— இராமபிரான் புட்பகவிமானத்தின் மீது அமர்ந்து வான் வழியாகச் செல்லும்பொழுது கீழேயுள்ள கடலில் மரக்கலங்கள் தடையின்றிச் செல்ல வேண்டித் தனது வில்லின் நுனியினுல் சேது அணையைக் கீறிச் சிறிது உடைத்து வழி செய்த இடமே தனுக்கோடி என்ற பெயருடையதாயிற்று என்பர். 'மரக்கல மியங்க வேண்டி வரிசிலை குதையாற் கீறித் தருக்கிய இடம்' என் றது தனுக்கோடியினை. தருக்குதல்—இடித்தல்; உடைத்துச் சிதைத்தல். பஞ்சபாதகர்—களவு, கள், காமம், பொய், கொலை என்னும் ஐம்பெருங் குற்றங்களைச் செய்த கொடியோர். நெருக் குதல்—கூட்டமாய்ச் செறிதல். (171)

10267. நெற்றியி னழலுஞ் செங்க
ணீறணி கடவு ணீடு
கற்றையஞ் சடையின் மேவுங்
கங்கையுஞ் சேது வாகப்
பெற்றில மென்று கொண்டு
பெருந்தவம் புரிகின் றுளால்
மற்றிதன் றூய்மை யெவ்வா
றுரைப்பது மலர்க்கண் வந்தாய்.

'நெற்றியின் அழலும் செங்கண்
நீறு அணி கடவுள் நீடு
கற்றை அம் சடையின் மேவும்
கங்கையும், ''சேது ஆகப்
பெற்றிலம்'' என்று கொண்டு
பெருந் தவம் புரிகின்றாளால்;
மற்று இதன் தூய்மை எவ்வாறு
உரைப்பது? மலர்க்கண் வந்தாய்!'

பொ:— தாமரைமலர் ஆசனத்தினின்றும் போந்த திருமகள் போல்பவளே! நெற்றியினிடத்தே சுடர்விட்டெரியும் சிவந்த கண்ணினையுடைய நீறணிந்த இறைவனாகிய சிவபெருமானது நீண்ட தொகுதியாகிய சடைப்பரப்பிற் பொருந்தியுள்ள கங்கையாகிய நங்கையும் '(யாம்) சேதுத்துறையாகும் பேற்றினைப் பெற்றோமில்லை' என (மனத்திற்) கொண்டு (இறைவனது செஞ்சடைக் காட்டிற்) பெரிய தவத்தினைச் செய்கின்றாள் என்றால் இச் சேதுவின் தூய்மையினை நாம் எவ்வாறு எடுத்துரைத்தல் இயலும்?

கு:— தூய்மை நல்கும் தெய்வ நதியாகிய கங்கையும் தவஞ் செய்து பெறுதற்குரிய தூய்மை நிறைந்த தீர்த்தமாகத் திகழ்வது இச் சேது தீர்த்தம் என்பதாம். (172)

இச் செய்யுளின் பின் 18, 19, 21, 23, 25, 26, 29, 31, 40, 41, 45, 52, 60, 61, 62, 63, 66, 71, 74 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் காணப்படுகின்றன:—

10267 (1) ஆங்கது காட்டக் கண்ட
வாயிழை கமல மன்ன
பூங்கழற் புயல்போன் மேனிப்
புனிதவென் பொருட்டாற் செய்த
ஈங்கிதற் கேற்ற நீயே
வியம்பென விமானத் தின்று
பாங்குற நிறுவி நின்றிங்
கிவையிவை பகர லுற்றான்.

10267 (2) அந்தணர் தம்மைக் கொன்றோ
ரருந்தவர்க் கிடுக்கண் செய்தோர்
செந்தழல் வேள்வி செற்றோர்
தீமனை யிடுவோர் தம்பால்
வந்திரந் தவற்கொன் றீயா
வைக்கும்வன் னெஞ்சர் பெற்ற
தந்தையைத் தாயைப் பேணாத்
தறுகணர் பசுவைச் செற்றோர்.

,, (3) குருக்களை யிகழ்வோர் கொண்ட
குலமக ளொழியத் தங்கள்
செருக்கினாற் கணிகை மாரைச்
சேர்பவ ருயிர்கொல் தீம்பர்
இருக்குட னமருந் தெய்வ
மிகழ்பவ ரூன்கள் தின்று
பெருக்கிய வுடலர் பொய்ம்மை
பிதற்றுவோர் பீடை செய்வோர்.

,, (4) வெய்யவ னுச்சி சேர
மிகவழி நடந்து போவோர்
மையறு முன்னோன் றன்னை
வலிசெயுந் தம்பி மார்கள்
கையுள முதல்கள் தம்மைக்
கரந்துதம் பிக்கொன் றீயார்
துய்யன சொற்கள் சொல்வோர்
சோம்பரைச் சுளித்துக் கொல்வோர்.

,, (5) ஊரது முனிய வாழ்வோ
ருண்ணும்போ துண்ண வந்தோர்க்
கார்வமோ டளியா தில்ல
மடைப்பவ ரமணே சென்று
நீரினு ளிழிவோர் பாவ
நெறிகளில் முயல்வோர் சான்றோர்
தாரம தணைவோர் மூத்தோர்
தமையிக ழறிவி லாதோர்.

10267 (6) பின்னைவா தருவ னென்று
பேசித்தட் டுவிக்கும் பேதை
கன்னியைக் கலக்கும் புல்லோர்
காதலாற் கள்ளுண் மாந்தர்
துன்னிய கலைவல் லோரைச்
சுளிந்துரைத் திகழ்வோர் சுற்றம்
இன்னலுற் றிடத்தாம் வாழ்வோர்
எளியரை யின்னல் செய்வோர்.

,, (7) ஆண்டவன் படவுந் தாங்க
ளாருயிர் கொண்டு மீண்டோர்
நாண்டுறந் துழல்வோர் நட்பா
னவரைவஞ் சிப்போர் நன்மை
வேண்டிடா திகழ்ந்து தீமை
செய்பவர் விருந்தை நீப்போர்
பூண்டுமேல் வந்த பேதை
யடைக்கலம் போக்கி வாழ்வோர்.

,, (8) கயிற்றிலாக் கண்டத் தாரை
காதலித் தணைவோர் தங்கள்
வயிற்றிடை கருவைத் தாமே
வதைப்பவர் மாற்றார் தம்மைச்
செயிர்க்குவ தன்றிச் சேர்ந்த
மாந்தரி னுயிரைச் செற்றோர்
மயிர்க்குரு ளொழியப் பெற்றம்
வெளவுவோர் வாய்மை யில்லோர்.

'ஊரதுமுனிய' என்ற பாடலின்பின் 54, 63-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10267 (9) தன்னையே நாடி வந்தோர்
தாம்பசித் திருக்க விற்பேர்
இன்னமு தருந்தி வந்தே
இனியவை உரைத்து மீள
பின்னைநம் வருகை போக
பெரியதோர் கரும முண்டென்
றன்னவர் தம்மைப் போக்கும்
அறிவிலோர் அறத்தை நீத்தோர்.

10267 (10) கண்டிலா தொன்று கண்டோ
மென்றுகைக் கூலி கொள்வோர்
மண்டலா திபர்முன் சென்று
வாழ்குடிக் கழிவு செய்வோர்
மிண்டுகள் சபையில் சொல்வோர்
மென்மையால் ஒருவன் சோற்றை
உண்டிருந் தவர்கள் தம்பா
லிகழ்ச்சியை யுரைக்குந் தீயோர்.

,, (11) குளக்கரை மீது நின்ற
கொழுநிழல் மரத்தைக் கொல்வோர்
துளக்கிலாக் குருக்கள் சொன்ன
தொன்மறை பிறர்க்குச் சொல்வோர்
அளப்பன சுருக்கி வைப்போர்
அல்லவை வாரங் கொள்வோர்
விணக்குந்தீ விணயி னுண்போர்
வேட்கையாற் கள்ளு விற்போர்.

,, (12) கொண்டவன் தன்ஊைப் பேணுக்
குலமகள் கோயி லுள்ளே
பெண்டிரைச் சேர்வோர் தங்கள்
பிதிர்க்கஊ யிகழும் பேதை
உண்டலே தரும மென்போ
ருடைப்பொரு ளுலோப ருரைத்
தெண்டமே யிடுவோர் மன்று
பறித்துண்ணுந் தறுகண் ணுளர்.

,, (13) தேவதா னங்கள் மாற்றித்
தேவர்கள் தனங்கள் வௌவும்
பாவகா ரியர்கள் நெஞ்சிற்
பரிவிலா தவர்கள் வந்து
காவென வபய மென்று
கழலடைந் தோரை விட்டோர்
பூவைமார் தம்மைக் கொல்லும்
புல்லர்பொய்ச் சான்று போவோர்.

10267 (14) முறையது மயக்கி வாழ்வோர்
மூங்கையந் தகர்க்குத் தீயோர்
மறையவர் நிலங்கள் தன்னை
வன்மையால் வாங்கு மாந்தர்
கறைபடு மகளிர் கொங்கை
கலப்பவர் காட்டில் வாழும்
பறவைகள் மிருகம் பற்றிப்
பஞ்சரத் தடைக்கும் பாவர்.

,, (15) கார்க்கன வரைசேர் கானில்
கடுங்குழி கல்லுங் கட்டர்
நீர்க்கரை யதனி லோட்டி
நெடுங்கலை முயல்மான் கொல்வோர்
ஊர்க்கெழு கூவல் வீழ்ந்த
வுயிர்ப்பசு வெடாது போவோர்
வார்கெழு தனமின் னுரை
வழியில்விட் டேகு மாக்கள்.

,, (16) வழியடித் துண்போர் கேட்டால்
வழிசொல்லா தவர்கள் வைப்பைப்
பொழியிருள் களவு காண்போர்
பொய்சொல்லிப் பண்டம் விற்போர்
அழிவிலா வாய்மை கொன்றோ
ரடைந்தபே ரொழுக்கம் விட்டாங்
கிழிவுகள் செய்வோ ரென்று
மேற்றவர்க் கில்லை யென்போர்.

,, (17) ஆதியா மூவர்க் கந்நா
ளருமறை யறைந்த வந்த
நீதியாம் புராணன் தன்னை
யிகழ்பவர் நிரயக் கேளார்
பாதியில் விட்டு வைப்போர்
படித்தவர் பிரியப் படுத்தார்
போதமி லாதார் மற்றச்
சமயம்பொல் லாத தென்பார்.

10267 (18) என்றிவர் முதலா மற்றும்
எழுநர கடையும் பாவம்
ஒன்றினர் நன்றி தன்னை
மறந்தவ ரொழிய வுள்ளோர்
துன்றிய வினைக ளெல்லாஞ்
சுடர்கண்ட விருளே போலத்
தென்றிசை வந்து சேதுத்
தரிசிக்கத் தீரு மென்றான்.

,, (19) ஆங்கதுகேட் டருந்ததியே
யனையாளு மவதியுடன்
தீங்கனுகுஞ் செய்ந்நன்றி
மறந்திடுந்தீ மனத்தோர்கள்
தாங்கரும் பாவங்களையு
மெனக்காகத் தவிர்கவென
நீங்கிடுக வதுவுமென்று
னிலமடந்தை பொறைதீர்த்தான்.

,, (20) பாரெழுவி வாழ்வோர்கள்
பஞ்சமாபா தகமுதலாச்
சீரெழுவு திருவணையைத்
தெரிசிக்கத் தீர்கவெனக்
காரெழுவு திருமேனிக்
கண்ணனிணைப் பின்படியே
ஈரெழுவர் நால்வரெனு
மிருடிகளு மெழுதினரால்.

52–ஆம் பிரதியில் :—

10267 (21) பார்மேவு மாந்தர்கள்செய்
பஞ்சமா பாதகமும்
சீர்மேவுந் திருவணையைத்
தெரிசிக்கத் தீர்கவென
கார் மேவுந் திருமேனிக்
காகுத்தன் கட்டுரைத்து
வார்மேவும் முலைச்சனகி
மாதோடும் வழிக்கொண்டான்.

10267 (22) என்பன பலவு மந்த
வேந்திழைக்கிருந்து கூறித்
தன்பெருஞ் சேனை யோடுந்
தம்பியுமரக்கர் கோவும்
பொன்பொரு விமானந் தன்மேற்
போகின்ற போது மிக்க
இன்புடை யிராமன் வேலைக்
கிப்புறந் திழிந்தென் செய்வான்.

52-ஆம் பிரதியில் :—

10267 (23) முன்பெல அரக்கன் தன்னை
முனிகொலை தொடரக் கண்டாங்
கன்பினு லரிபால் தோன்றும்
அரணையர்ச் சித்தா லன்றி
துன்பமே தொடரும் பொல்லாச்
சூழ்கொலை தொலையா தென்றுங்
கின்புறு மிராமன் வேலைக்
கிப்புறத் திழிந்து நின்றுன்.

,, (24) திருவணை யுயர்பதஞ் செப்பி மீண்டபின்
அருகணை திருமகட் காங்கு மற்றுள
தருவணை திரள்புயச் சனக வல்லிக்காங்
கருவரை முகில்நிற வண்ணன் காட்டுவான்.

இச்செய்யுள் இரண்டு பிரதிகளில்தான் காணப்பட்டது. அவற்றுள் ஒரு பிரதியில் இச்செய்யுளின் இறுதியில், 'திருவணைச் சிறப்பு முற்றும்' என்ற தொடரும் அதனையடுத்துப் 'பூசைப்படலம்' என்னும் தலைப்பின்வரும் செய்யுட்களும் காணப்படுகின்றன :—

23, 43-ஆம் பிரதிகளில் கீழ்வரும் பாடல் உள்ளது :—

10267 (25) எல்லை யார்கட லிலங்கையின் மனிதர்வந் தெய்தின்
அல்ல லாகுமவ் வீடணன் தனக்கெனு மன்பால்
கல்லி னுற்படை வானரங் கட்டிய கரையை
வில்லி னுலட லிராகவ னழித்தனன் விரைந்தே.

10267 (26) கப்பையெனுங் கன்னியையுங்
கந்தனுர் தாதையையும்
அப்பொழுது திருவணைக்குக்
காவலரா யங்கிருத்திச்
செப்பரிய சிலையாலே
திருவணையை வாய்கீறி
ஒப்பரியா டன்னுடனே
யுயர்சேனைக் கடலுடனே.

,, (27) வேந்தர் வேந்தனும் வேலையின் கரையினில் வரவே
வாய்ந்த சாய்கையும் வந்தது வானவர் வணங்க
ஏந்து தோள்புயத் திராமனு மிலக்குவன் ருனும்
வாய்ந்த சீதையு மானமும் வானர வேந்தும்.

45, 52-ஆம் பிரதிகளில் :—

,, (28) பாய்ந்து வேலையின் கரையிடப் பரமனங் குறவே
சாய்ந்த சாய்கையும் வந்தணு காதயல் கிடக்க
ஏந்து திண்புயத் திராமனும் இளையவன் ருனும்
வாய்ந்த சீதையும் சேனையும் மற்றுளபேரும்.

,, (29) நின்ற போதினில் நிகரிலா வகத்தியன் முதலோர்
குன்று போற்புயத் திராகவன் றனைவந்து குறுக
நன்று நின்வர வென்னவே நாதனும் வணங்கி
வென்றி வேந்தனும் வேதியர் தம்மொடு வியந்து.

,, (30) சேது வின்கரை சேர்ந்தவத் திறல்புயத் திராமன்
ஏது வித்தல மெனக்குறு முனிவனைக் கேட்ப
வாதராசனும் வாசுகி தானுமுன் மலைந்த
போது வந்ததிப் பொன்னக ரென்றவன் புகன்ருன்.

,, (31) ஏத மற்றவித் தலத்தியல் பிணையென (க்) கியம்பென்
ருதி யான்குறு முனிவனைக் கேட்டலு மன்னுள்
வாத ராயனும் வாசுகி யுந்தனி மலைந்த
போது வந்ததிப் பொன்னக ரென்றவன் புகன்ருன்.

,, (32) புகன்ற வன்றனைப் பூங்குழ லிராகவன் சாய்கை
அகன்ற காரணங் குறுமுனி யுரைசெய வவனும்
பகர்ந்த தேவரும் பாற்கடற் பள்ளியான் பரமன்
புகுந்த திவ்வழிப் பூவில்வந் தவனுமற் றியாரும்.

10267 (33) இருப்ப தித்தல மாகையா லிராவணன் சாய்கை
அருத்தியின்றியே யகன்றதென் றருள்முனி யறையப்
பெருத்த தோளுடை யண்ணலும் பிரியம்வந் தெய்திக்
கருத்து மற்றினி யுரையெனக் குறுமுனி கழறு ம.

,, (34) இந்த மாநகர் தன்னிலே யிறைவனை யருச்சித்
துந்தன் மாநக ரெய்தினுற் சாய்கைபோ முரவோய்
அந்த நீதியே செய்துமென் றனுமனை யழைத்திட்
டெந்த னுதனை யிமைப்பினிற் கொடுவர வென்ருன்.

,, (35) அந்த வேலை முனிவ னளிதெருள்
இந்த மாநிலத் தியாவரு மின்புறக்
கந்த மேவிய கங்கையி லோர்சிலை
தந்து காணென மாருதி தாவினுன்.

,, (36) போதி யென்றவற் போக்கிய விராமனு மிந்த
மாது சீதையு மைந்தனு மிலக்குவன் ருனும்
தீது தீரவே தீர்த்தங்கள் யாவையு மாடி
ஆதி நாதனு மிருந்தன னமரர்கள் வியப்ப.

,, (37) ஆன போதினி லையன் மனத்துளே
தானி னைந்தது தானு ரறிகுவார்
ஞான மோர்வடி வாகிய நாரணன்
மோன மாகி யிருந்தன(ன்) மூவரான்.

,, (38) காலஞ் சென்ற தெனக்கரு திக்கையால்
கோல மான மணலினைக் கூட்டியே
ஆல முண்ட தேவிவ ராமென
ஞால முண்டவர் தம்மன நாட்டவே.

,, (39) முகுத்த மானதென முனிவனு மொழிதலு மிராமன்
மிகுத்த தோரிடத் தெய்தியே வெண்மணல் கூப்பி
அகத்தி னிற்புறம் பூசித்தே யடிமல ரிறைஞ்சிச்
செகுத்த தோளுடைத் தம்பியுஞ் சீதையுந் தானும்.

,, (40) ஒத்த பூசனை செய்யவு மமைதியி னுள்ள
சித்தி மேவிய ஞானமுந் தொடர்விடா திருந்தோன்
அத்தன் பாதக மானவை யழிதர வியற்றிச்
சித்தம் வாழ்தர நின்றனன் தேவர்க டுதிப்ப.

10257 (41) நின்ற போதினி னிறங்களும் படலமுங் கொண்டு
வென்றி சேர்புய மாருதி விரைவினில் வந்து
நன்று செய்தனை யெனப்போய் நாதனைப் பிடுங்கி
வென்றி வாலற்று மேதினி வீழ்ந்தனன் வீரன்.

இதற்குப் பிரதியாக 26ஆம் பிரதியில் :—

10267 (42) அந்த வெல்லையி லனுமனுங் காசியி லணுகிச்
சிந்த னைக்குரித் தாஞ்சிவ லிங்கமுங் கொடுவந்
திந்த லிங்கமே தென்றனன் வாலினு லிறுக்கி
வெந்தி றத்தினிற் பிடுங்கினன் வாலற்று விழ்ந்தான்

,, (43) விழுந்த வன்றனை வெந்திற லிராகவ னேக்கி
அழுந்து சிந்தையா யறிவிலா ததனையென் செய்தாய்
பொழிந்து மாமல ரிட்டுநீ யருச்சியென் றுரைப்ப
எழுந்து போயவ னிறைவனை யருச்சனை செய்தான்.

இதன்பின் 71ஆம் பிரதியில் :—

10267 (44) தேவர் தச்சனை யுழைத்துநீ திரைகடல் நடுவண்
மேவு கற்கொடு விண்ணவர் விருப்புற மேலாம்
தேவர் போற்றுநந் தேவனுக் காலயஞ் சிறக்கப்
பூவில் வந்தவன் சொன்முறை செய்கெனப் புகன்றான்

'நின்றபோதினில்' — 'இந்தப் பாடல்காணும் இடத்தில் இதற்குப் பிரதியாகப் பின்வரும் ஐந்து பாடல்கள் ஒரு பிரதியில் உள்ளன' என்பது 52-ஆம் பிரதியின் குறிப்பு.

,, (45) ஆய வேலையில் கங்கையின் அருஞ்சிலை வாங்கி
தூய வார்கழல் அனுமனும் தோன்றினன் தோன்று
சீய மாய்மலி அண்ணல்முன் திருச்சிலை வைத்து
நேய மோடிரு தாள்பணிந் தங்கவன் நின்றான்.

,, (46) நின்ற காலையில் அமலனங் கனுமனை நோக்கி
ஒன்ற லாதபல் முகமனங் குரைத்துநம் பூசை
சென்ற தாதலின் திருச்சிலை தாழ்த்ததிப் புளினக்
குன்றி னுல்சிவன் தன்னுருக் குறித்தனன் கோடி.

,, (47) என்னும் வாய்மையங் கிராகவ
னியம்பிட இறைஞ்சி
முன்னி மாருதி மொழிந்தனன்
மூவுல குடையோய்

இன்னும் யான்தருங் கங்கையின்
சிலையிடைப் பிழையா
தன்ன தானத்தின் அமைப்பெனே
ரிமைப்பிடை யெனவே.

10267 (48) எனவிராம னியம்பலு மானவன்
முனம் புகுந்து தொழுதுமுக் கண்ணனை
மன வலித்தடங் கொண்டுதன் வாலினால்
புனை யராவெனச் சுற்றிமுன் போயினை.

,, (49) ஈர்த்தனன் வாலி னாலே இராகவன்
பூசை கொள்ளும்
கூத்தனை அனந்தன் வாழுங் குவலய
மளவுங் கூடி
வார்த்தபே ருருவங் கொள்ள
வால்விசைத் தனும னந்த
மூர்த்தியென் றுணரான் நெஞ்சம்
மூச்சறத் தளர்ந்து வீழ்ந்தான்.

,, (50) மனுபர னனுமன்தன்னை வரவழைத்தீசன் வன்மை
தனையுரைத் திடைநீ தந்தநாதனை நடுவேநாட்டி
முனமதை யேத்திப்பின்இம் மூர்த்தியை ஏத்தும்என்ன
அனைவரும் அமரர்தாமும் அம்முறை ஏத்திநின்றார்.

,, (51) கனமி குந்தருள் கங்கைச் சிவன்றனைச்
சனகி தன்னோ டிராமனுந் தாழ்ந்துதான்
மனமு கந்திங்கண் மாருதி வீழ்ந்தடம்
அனும குண்ட மெனப்பெய ராகென.

,, (52) அவ்வி டத்தனு மான்றந்த கங்கைமேல்
வவ்வி டப்பரும் வந்திடு வான்சிலை
அவ்வி டத்தினி லியாவரு மேத்தெனத்
தெவ்வ டக்குஞ் சிலையவன் செப்பினன்.

,, (53) எந்த னாத னிவனென் றிறைமகன்
தந்த நாமஞ் சராசரஞ் சார்ந்தபோ
திந்தி ரன்பிர மாமுத லெய்தினர்
வந்து வானவர் யாவரும் வாழ்த்தினர்.

10267 (54) இத்த லத்தினில் யாருமங் கோர்சிலை
வைத்து மாமனத் துள்ளே வழுத்துவார்
நத்து லாயகை நாரண னுன்முகன்
பித்தன் மூவரு மேத்தப் பெறுகெனு.

,, (55) என்றி ராகவன் ஈசன் பெருமையின்
நன்றி தன்னை நவில வடங்குமோ
சென்று சென்று செயசெய போற்றியென்
றன்றி ராச குமார (னை)ற குவான்.

,, (56) பூச னைத்தொழில் முடிந்தபின் பூங்கழ லிராமன்
தேவத் தச்சனை யழைத்துநீ திரைகடற் கிடந்த
காவல் மாமலை கொணர்ந்துநீ கண்ணுதற் கோயில்
பூவில் வந்தவன் சொல்வழிச் சமையெனப் புகன்ருன்.

,, (57) நந்தி யம்பதி யிறைவனை நாதனு மழைத்தே
இந்த மாமலை யிருமென யாவையு நல்கி
விந்தை தங்கிய தோளினீர் வேந்தனைப் பூசித்
திந்த மாநக ரிருமென விராமனு மகன்ருன்.

52ஆம் பிரதியில் :—

10267 (58) போன காலையில் பூங்கழ லிராகவன் பின்னே
சேனை தான்வரத் தேவர்கள் யாவரும் வணங்கி
மேனி லத்தவர் சென்றிட விடைகொடுத் தருளித்
தானுஞ் சீதையுந் தம்பியுஞ் சேதுவைச் சார்ந்தார்.

,, (59) தேரேறி மானுகஞ் சென்னிமிசைச் சென்றேறக்
காரேறு கண்ணபிரான் காவலவன் கமழ்துளபத்
தாரேறு தடந்தோளான் தனிவயிரக் குனிசிலைக்கைப்
போரேறு பொலிவுடனே வடதிசையிற் போயினனுல்

பூசைப்படலம் முற்றும். இனி மீட்சிப்படலம் :-

,, (60) முனிவர் தம்மொழி தோன்றலான்
மொழிமறை முறையாற்
குனித ருஞ்சிலை யரக்கரைக்
கொன்றவக் கொடுமை

துனிவ ரும்படி யகன்றிடக்
கடற்கரைச் சுருதிக்
கனியெ டுஞ்சிவ லிங்கமாங்
கடவுளைக் கண்டான்.

10267 (61) சேர்ந்து சேதுவின் தென்கரை
கடந்துவந் தெய்திக்
கூந்தன் மானமே லிருந்தவன்
வடதிசை குறுகிப்
போந்து வானரப் புதுமையுஞ்
சனகிக்குப் புகன்று
தீர்ந்த சேதுவின் கரையையும்
காட்டினன் றிறலோன்.

45, 52, 54ஆம் பிரதிகளில் :—

10267 (62) வரைய லுற்றனன் மலர்க்கரத்
திருந்தவன் சிலையால்
திரையி லுற்றிட மரக்கலத்
தொகுதிகள் செல்ல
விரைவி லுற்றிடும் விமானத்தின்
மீதினி லிருந்தே
உரைசெய் துற்றனன் சனகிக்குப்
பின்னுமங் குரவோன்.

,, (63) நின்னை மீட்பதே நினைந்துசின் னெறியெலா நீந்தி
என்னை யீட்டிய திறத்தினிற் றிருவுட னிருப்பக்
கொன்ன வேற்படை யரக்கரைக் குறைத்த விச்சேனை
மன்ன னுற்பெற்ற வழியிது வென்றியு மதனுல்.

,, (64) ஒத்த பூசனை ... ... ... ... ... மகிழ்ந்தார். (10267 (40)

'வழியடித்துண்போர்' என்ற பாடலின் பின் 29, 44–ஆம் பிரதிகளில் :—

10267 (65) தாபரம் பறித்தொன்று தாபித் தோர்தனிப்
பூபரந் தாங்குவோர் தம்மைப் புன்கணுன்
மாபர வமைச்சராய்க் கொன்ற வஞ்சகர்
நூபுரக் கணிகைய ராசை நுங்கினேர்.

23, 29, 44-ஆம் பிரதிகளில் :—

10267 (66) உயர்ந்தவக் குலத்துக்கு மாசை யுற்றுளோர்
நயந்தநன் மறையவர் மகளிர் நச்சினோர்
பயந்தவென் னிட்டவர் கொன்ற பாவகர்
கயந்தனிற் சிறுவரைத் தள்ளுங் கள்ளரும்.

,, (67) பூப்பகுந் திடாமலே முடித்த புல்லரும்
காப்பயின் மரந்தனைத் தறித்த கையரும்
மூப்புடை யவர்களை யிகழ்ந்த மூர்க்கரும்
நாப்புடை பெயர்ந்துரை யாடு நன்கிலோர்.

,, (68) அக்கர முதலினோர் தமைவென் றூர்களும்
சுக்கிர னமைதியிற் சோபனஞ் செய்வோர்
சக்கரர் கைத்தலத்தானம் வாங்கினோர்
உக்கிரங் குரவனோ டுரைத்த வோர்விலோர்

23, 29–ஆம் பிரதிகளில் :—

10267 (69) ஆலய மழிதர வெண்ணு வோரறச்
சாலைக டுமித்தவர் தம்முன் பேணிலோர்
காலையிற் கடவுளைத் தொழாத கன்மனர்
மாலையின் மனைவியைக் கொடுத்த மாண்பிலோர்.

23, 29, 44-ஆம் பிரதிகளில் :—

,, (70) தேவர்த முடைமையைச் சிந்திப் போர்தமிழ்
நாவலருடைமையை நச்சினோர் நறைப்
பூவலர் பொய்கையை யுடைத்த பூரியோர்
பாவகா ரியற்கித மான பாதகர்

,, (71) மெலியவ னுதவிய விஞ்சை தள்ளினோர்
வலியினால் வல்லபங் காட்டு மாண்பிலோர்
ஒலிபடு வேதத்தைப் பழித்த உன்மத்தர்
புலிவனத் தாருயிர் போக்கும் புன்கணோர்.

'ஆதியா மூவர்க்' என்ற பாடலின் பின் 26ல் :

,, (72) நிழல்தனை மிதிப்போர் கோயில்
நித்தனைக் கவர்வோர் மால்முன்
அழலெழ வுரைப்போர் அன்பர்க்
கன்பிலா தவர்கள் தங்கள்

குழலினை விரிப்போர் உள்ளே
　　கூருகிர் மயிர்கள் ... ... ... ... ...
மழலையம் மொழியார் பாடல்
　　ஆடலை மாற்று வோர்கள்.

26, 66–ஆம் பிரதிகளில் :—

10267 (73) நித்திரை கொள்வோர் கோயில்
　　நிலைவிளக் கவிப்போர் ஈசன்
பத்தியி னடைந்தோர் தம்மைப்
　　பரிசித்துத் தொடாதே யென்போர்
தத்துவ மறிந்து வாழும்
　　தவத்தரை யிகழ்வோர் தானத்
துத்தமர் தம்மைப் போற்று
　　துலைத்தழித் தொறுக்கு நீசர்

26–ஆம் பிரதியில் :—

10267 (74) மூடியே செல்வோர் கோயில்
　　முறைசெய்வோர் தம்மை வைவோர்
நாடியே பிறகு காட்டி நடப்பவர்
　　கிடப்போர் கோயில்
ஓடியே வலஞ்செய் வோர்கள்
　　ஒருகையாற் றெழுது போவார்
கூடிவா கனங்கள் ஏறிக்
　　கோயிலுட் புகுது வோர்கள்.

,, (75) தீண்டின மென்று கொண்டு
　　தீர்த்தங்க ளாடு நீசர்
பூண்டிறந் துழலும் வாயுப்
　　போக்கினேர் கோயி லுள்ளே
வேண்டியே தீர்த்த மாடி
　　விதியொடுஞ் சென்றி டாதோர்
ஈண்டியே யெச்சி லிட்டோர்
　　எழில்கொள் வாய்த் தம்பர் போட்டோர்.

10267 (76) குடிகளைக் கெடுப்போ ரூரில்
கோட்சொல்லித் திரிவோர் நாட்டில்
அடியறிந் தவாவை நீக்கி
யாறிலொன் றிறைகொள் ளாதோர்
படிகளை யீய்ந்து மீண்டு
பறிப்பவர் பாரி லுள்ள
மிடியரை யறிந்து நோக்கி
விருப்பினோ டீய்ந்தி டாதோர்.

(77) இருளிடை யையம திடாம லுண்பவர்
மருளருக் கின்னல்செய் திட்ட மாண்பிலோர்
தெருளர்பாற் பொய்சொலிச் சேதஞ் செய்தவர்
பொருடரத் துணைவந்து கொன்ற புல்லியோர்

,, (78) சிறியகன் றேயப்பாற் கறந்து சிந்தினோர்
அறுபிணஞ் சுடாமலே யிகழ்ந்த வன்பினோர்
குறுவிலை யெளியவ ருணவு கொண்டவர்
பெறுமகந் தனையிகழ்ந் திட்ட பேதையோர்.

,, (79) காழியர் மஞ்சிகர் கைத்து வவ்வினோர்
வாழியற் கழிவுகொண் மனத்து வஞ்சகர்
தாழிய தண்ணநீர்த் தானந் தள்ளினோர்
பிழியர் தமக்கரும் பிழைகள் செய்துளோர்.

,, (80) ஆதிமுன் னீவது விலக்கி னோரெளி
ஊதிய பூவினைக் கடவுட் குய்த்துளோர்
ஏதிதன் கையில்வா விசைந்த தன்மனை
மாதினைப் பிறர்கொள வோடும் வஞ்சரும்.

,, (81) வலையொடு கண்ணியும் வளைந்த தூண்டிலாற்
கொலைசெயல் நேயமாய்க் கொண்ட கோளரும்
மலைபுனல் நதியொடு மகன்ற செய்யுளும்
பலபடச் சலமலம் விடுத்த பாவரும்.

,, (82) மாக்குவி யதிர்ந்திட நடப்பர் மாமணிக்
கோக்குவி பிறர்கொள மீட்கில் கொற்றவர்
நாக்குவி தாச்சொலி யெளிய நல்கினோர்
போக்குவி தாத்தபோ தனர்கட் கிட்டினோர்.

10267 (83) தாயிரங் கிடமக விற்குந் தாழ்விஞேர்
நோயிரங் கினர்பொசிப் பிகந்த நொய்யவர்
ஆயிரந் திடப்புறக் களித்திட் டேதில்பொன்
மாயிரும் புவியிடை வாழுங் கீழரும்.

,, (84) புலேயரை விரும்பியா வளித்த புல்லரும்
இலேவிலே வாணிகர்க் கெருது விற்பரும்
விலேமக ளாற்குல மகளே வீட்டிஞேர்
நிலேயழிந் திடநிணேந் திட்ட நெஞ்சரும்.

23, 29, 43, 44–ஆம் பிரதிகளில் 'தேரேறி' என்ற பாடலுக்குப்பின் பரத்துவாசர் ஆச்சிரமப் படலத்தின் தொடக்கத்தில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10267 (85) வாருதிக் கரையி னின்று வடதிசை
போக வுன்னி
வீரருள் வீர ராமன் வீடணன்
றன்ணே நோக்கி
ஏருறு பரதற் காண யாவரு
மெய்திப் போமிப்
பாருறு மிலங்கை காக்க வமைச்சரைப்
பணித்தி யென்ருன்.

,, (86) ஆரிய னுரைத்த மாற்ற
மரக்கர்கோன் றலேமேற் கொண்டு
சூரிய நிணேவ ரான வமைச்சரைக்
குறித்து நோக்கி
நீரியல் வாரி சூழ்ந்த
விலங்கைநீர் காமினென்று
வீரிய சேனேயோடும் வேந்தணேச்
சூழ்ந்து சென்ருன்.

,, (87) காருறு மேனி யானும் கமலமா
மயிலன் ஞளும்
ஏருறு மிளேய கோவு மிலங்கையர்
வேந்து மேழு

தாருறு புரவி யோன்றன் றனயனுந்
தானை சூழப்
பேருறு விமான மேறி வடதிசைப்
பெயர்ந்து சென்றான்.

10267 (88) இடமுடை விமான மேறி
யிமையவ ரினிமை கூற
வடதிசை வழியை நோக்கிச்
செல்வுழி மான சீலன்
படவர வல்குல் வேய்த்தோட்
பாவையை நோக்கி முன்னாட்
கடல்கடந் தேக வந்த வாறெலாங்
காட்டிச் சொன்னான்.

26, 66-ஆம் பிரதிகளில் 'கார்க்கன வரை' என்ற செய்யு ளின் பின்:—

10267 (89) அறங்கெட முயன்றவ னருளி னெஞ்சினேன்
பிறங்கடை நின்றவன் பிறர்தற் சீறியோன்
மறங்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்
துறந்தமா தவர்க்கருந் துயரஞ் சூழ்ந்துளோன்.

,, (90) குரவலர் குழலியை வாளிற் கொன்றவன்
புரவல னொருபொருள் புவியில் வவ்வினேன்
விரவலர் வெந்நிடை விழிக்க மீண்டுளோன்
இரவல ரிருநிதி யெறிந்து வவ்வினேன்.

,, (91) தாளிணை யடைந்தவர் தம்மைத் தற்கொரு
கோளுற லஞ்சியே கொடுத்த பேதையும்
நாளினு மறங்கரந் தவனு நண்ணிய
மீளருந் தவத்தினைத் துறந்த வீணரும்.

,, (92) கன்றுயி ரோய்ந்திடக் கறந்து பாலுண்டோர்
மன்றிடைப் பிறர்பொருள் மறைத்து வவ்வினோர்
துன்றிய வறிஞரைச் சுழிக்கச் சொல்லினோர்
வென்றிகள் தன்னையே புகழ்ந்து மேவுவோர்.

வருணன் சரணமடைந்த இடத்தை இராமன்
சீதைக்குக் காட்டுதல்

10268. தெவ்வடு சிலைக்கை வீரன்
சேதுவின் பெருமை யாவும்
வெவ்விடம் பொருது நீண்டு
மிளிர்தருங் கருங்கட் செவ்வாய்
நொவ்விடை மயில னுட்கு
நுவன்றுபின் வருண னோனு
திவ்விடை வந்து கண்டாய்
சரணென வியம்பிற் றென்றான்.

தெவ் அடு சிலைக் கை வீரன்
சேதுவின் பெருமை யாவும்
வெவ் விடம் பொருது நீண்டு
மிளிர்தரும் கருங் கண் செவ்வாய்,
நொவ் இடை, மயில் அனுட்கு
நுவன்று,பின் வருணன் நோனுது,
இவ் இடை வந்து கண்டாய்,
"சரண்"என இயம்பிற்று என்றான்.

பொ:—பகைவர்களைக் கொன்ற (கோதண்டம் என்னும்) வில்லினைக் கையிலேந்திய வீரனாகிய இராமபிரான், கொடிய நஞ்சுடன் பொருது நீண்டு ஒளியுடன் விளங்கும் கரிய கண்களை யும் சிவந்த வாயையும் (நுண்ணியதாய்த் தளர்ந்து) வருந்தும் இடையினையும் உடைய மயில்போலும் சாயலாள் ஆகிய சீதைக் குச் சேதுவின் பெருமை முழுவதனையும் கூறிப் பின்பு 'வருணன் (எனது அனலம்பினைப்) பொருது (என்பால்) வந்து 'சரண்' என்று கூறி அடைக்கலம் புக்கது இவ்விடம்' என (ச் சுட்டி) க் காட்டினான்.

கு:—இவ்விடை — இவ்விடம்; என்றது இராமன் கடலில் ஏவிய அனலம்பின் வெம்மைக்கு ஆற்றாத வருணன் இராமனைச் சரணடைந்த இடத்தை. அஃது இக்காலத்தில் இராமேச் சுரத்தை யடுத்துள்ள தருப்பசயனம், (திருப்புல்லணை) திருப்புல் லாணி எனவழங்கும் இடமாகும். கண்டாய் — அசை. (173

இச்செய்யுளின் பின் 41, 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன :—

10268 (1) தேய்ந்த மாமதி போலுஞ் சிலைநுதல்
ஆய்ந்த மாமணி யாழியை யன்றுதான்
வாய்ந்த வானர வாரணம் மாருதி
பாய்ந்த வெற்பு மயேந்திரம் பார்த்தியால்.

,, (2) மாருதி நின்னை நாடி
வருபவன் ஏறிப் பாயப்
பாரிடைக் குளித்து நின்ற பவளமால்
மலையைப் பாராய்
போரிடைப் பொலன்கொள் பொன்ருர்ப்
புரவிகள் போக்கிற் றென்ன
நீரிடைத் தரங்கம் ஓங்கும்
நெறிகட லதனை நோக்காய்.

பொதியமலை, திருமாலிருஞ்சோலை, திருவேங்கடமலை முதலியவற்றைச் சீதைக்குக் காட்டுதல்

10269. இதுதமிழ் முனிவன் வைகு
மியறரு குன்ற முன்னு
றுதுவளர் மணிமா லோங்க
லுப்புறத் துயர்ந்து தோன்றும்
அதுதிக ழனந்த வெற்பென்
றருடர வனுமன் றோன்றிற்
றெதுவென வணங்கை நோக்கி
யிற்றென விராமன் சொன்னான்.

'இது, தமிழ் முனிவன் வைகும்
இயல்தரு குன்றம்; முன்நாறு
உது, வளர் மணிமால் ஓங்கல்,
உப்புறத்து உயர்ந்து தோன்றும்
அது, திகழ் அனந்தவெற்பு' என்று
அருள்தர, 'அனுமன் தோன்றிற்று
எது?' என, அணங்கை நோக்கி,
இற்று என இராமன் சொன்னான்.

பொ :—('அண்மையில் தோன்றும்) இது, தமிழ் முனிவராகிய அகத்திய முனிவர் எழுந்தருளிய பெருமைவாய்ந்த (பொதிய) மலையாகும். முன்னே தோன்றுவதாகிய உது, திருமால் எழுந் தருளிய மணிகள் பொருந்திய திருமாலிருஞ் சோலை மலையாகும். அப்பால் (சேய்மையில்) உயர்ந்து தோன்றும் அது, விளங்கு கின்ற திருவேங்கடமலையாகும்' என்று இராமபிரான் அருளிச் செய்ய, (அப்பொழுது சீதை) 'அனுமன் வந்து தோன்றியது எது?' எனவினவ, இராமன் சீதையை நோக்கி (இரலைக் குன்றத்தைச் சுட்டிக்காட்டி) 'இதுதான்' எனக் கூறினான்.

கு :—இது, அண்மைச் சுட்டு. உது, நடுவிடச் சுட்டு. அது, சேய்மைச் சுட்டு. தமிழ் முனிவன் — தமிழ்வளர்த்த அகத்திய முனிவர். அவர் எழுந்தருளியுள்ள மலை பொதியமலை. மால் ஓங்கல் — திருமாலிருஞ் சோலைமலை. உப்புறம் — அப்பால் உள்ள இடம். அனந்த வெற்பு — திருவேங்கடமலை; பரமபத நாதன் பணித்தவண்ணம் ஆதிசேடன் மலையுருக்கொண்டு விளங்குதல் பற்றி இது அனந்த வெற்பு எனும் பெயருடையதாயிற்று. அனந் தன் — ஆதிசேடன். தன்துயர் தவிர்த்துத் தன்னை ஆருயிர் நாயகன்பால் சேர்த்த அனுமனது பேருதவியை எண்ணிய சீதை, தன் நாயகனாகிய இராமன் அனுமனை முதன்முதற் கண்ட இடம் எது என அறியும் விருப்பினளாய் 'அனுமன் தோன்றிற்று எது' என வினவினாள். வான்வழியே புட்பக விமானத்திற் செல்லும் இராமன் பொதியமலை, திருமாலிருஞ்சோலை, திருவேங் கடமலை, இரலைக்குன்றம் என்பவற்றைச் சீதைக்குக் காட்டிச் சென்றான் என்பதாம். (174)

சுக்கிரீவனது நகரைக் காட்டுதல்

10270. வாலியென் றளவி லாற்றல்
வன்மையான் மகர நீர்சூழ்
வேலியைக் கடக்க வாவும்
விறலுடை யவனை வீட்டி
நூலியற் றரும நீதி
நுனித்தறங் குணித்த மேலோர்
போலியற் றபனன் மைந்த
னுறைதரு புரமீ தென்றான்.

'வாலி என்று அளவு இல் ஆற்றல்
வன்மையான், மகரநீர் சூழ்
வேலியைக் கடக்க வாவும்
விறல் உடையவனை வீட்டி,
நூல் இயல் தரும நீதி
நுனித்து அறங்குனித்த மேலோர் —
போல் இயல் தபனன் மைந்தன்
உறைதரு புரம் ஈது' என்றான்.

பொ :—'அளவில்லாத பேராற்றலாகிய வன்மை படைத்தவனும், மகரமீன் உலவும் நீர் நிறைந்த வேலியாகிய கடல்களைத் தாண்டும்படி தாவிப்பாயும் தறுகண்மையுடையவனும் ஆகிய வாலி என்னும் பெயருடையவனைக் கொன்றுபோக்கி, நூல்களிற் கூறியுள்ள அறநெறிகளை நுண்ணிதின் ஆராய்ந்துணர்ந்த பெருமக்களைப் போன்ற தன்மையினையுடைய சூரியன்புதல்வனாகிய சுக்கிரீவன் (அரசுபுரிந்து) வாழும் நகரமாகிய கிட்கிந்தை இது தான்' என்று (இராமன், சீதைக்குக்) கூறினான்.

கு :— மகரநீர் சூழ்வேலி என்றது, நிலவுலகத்தினைச் சூழ வேலி போன்றமைந்த கடலினை. தபனன்—சூரியன். அவன் மைந்தன் என்றது சுக்கிரீவனை. வானர குலத்தவனாயினும் மனு குல வேந்தரையொப்ப அறநெறி வழுவாது அரசுபுரியும் இயல்பினன் சுக்கிரீவன் என்பது புலப்பட, 'நூலியற் றருமநீதி நுனித் தறங் குனித்த மேலோர் போல் இயல் தபனன் மைந்தன்' என்றான். (175)

இச் செய்யுளின்பின் 41, 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல் உள்ளது :—

10270 (1) ஆரியன் அனையகூற அடியிணை யிறைஞ்சி யைய
வேரியங் கமலை செப்பும் விரிந்தகிட் கிந்தை யுள்ளார்
சீரிய வயோத்தி சேரத் திருவுளஞ் செய்தி யென்னக்
கார்நிற வண்ணல் மானங் காசினி குறுக வென்றான்.

## வானரமகளிரையும் உடனழைத்துச் செல்லவேண்டும் எனச் சீதை கூறுதல்

10271. கிட்கிந்தை யிதுவே லைய
கேட்டியா லெனது பெண்மை
மட்குந்தா னாய வெள்ள
மகளிரின் ருகி வானோர்
உட்கும்போர்ச் சேனை சூழ
வொருத்தியே யயோத்தி யெய்தின்
கட்கொந்தார் குழலி னாரை
யேற்றுதல் கடன்மைத் தென்றாள்.

'கிட்கிந்தை இதுவேல், ஐய!
கேட்டியால்: எனது பெண்மை
மட்கும்தான், ஆய வெள்ள
மகளிர் இன்று ஆகி, வானோர்
உட்கும் போர்ச் சேனை சூழ
ஒருத்தியே அயோத்தி எய்தின்;
கள் கொந்து ஆர் குழலினாரை
ஏற்றுதல் கடன்மைத்து' என்றாள்.

பொ:—(அதுகேட்ட பிராட்டி, இராமனை நோக்கி) 'ஐயனே! (எதிரே தோன்றும்) இந்நகரம் கிட்கிந்தை என்பதாயின் (யான் கூறுவதனைக்) கேட்டருள்வாயாக. தோழியர் கூட்டமாகிய மகளிர் துணையின்றித் தேவர்களும் துணுக்குற்று அஞ்சும் போர்த்தொழிலில் வல்ல சேனைவீரர்கள் சூழ்ந்துவர யான் ஒருத்தியாய் அயோத்தி நகரத்தை அடைவேனாயின் எனது பெண்மைத்தன்மை பொலிவழிந்து சிதையும். (ஆகவே) தேன்நிறைந்த பூங்கொத்துக்களையணிந்த கூந்தலையுடையாராகிய (இந்நகரத்திலுள்ள வானர) மகளிரை (எனக்குத் துணையாக இவ்விமானத்தில்) ஏற்றிக் கொண்டு செல்லுதல் முறைமையுடையதாகும்' எனக் கூறினாள்.

கு:—ஆய வெள்ள மகளிர் இன்றாகி, வானோர் உட்கும் போர்ச்சேனை சூழ யான் ஒருத்தியே அயோத்தி எய்தின் எனது பண்மை மட்கும் என இயையும். மட்குதல் — பொலிவழிந்து

சிதைதல். தான் — அசை. கள் கொந்து — தேன் நிறைந்த பூங்கொத்து. சுக்கிரீவன் இருந்து ஆட்சி புரிதற்குரிய கிட்கிந்தை நகரம் இதுதான் என இராமபிரான் காட்டக் கண்ட பிராட்டி, அந்நகரத்தில் வாழும் வானர மகளிர்பால் தான் கொண்டுள்ள பேரருள் காரணமாக, அயோத்திக்குச் செல்லுங் கால் தான் ஒருத்தியாகத் தனித்துச் செல்லுதல் தன் பெண்மைக்கு அழகன்றுதலால் வானர மகளிரைத் தனக்குத் துணையாகவிமானத்தில் ஏற்றிக் கொள்ளும்படி இராமபிரானை இரந்து வேண்டினுள் என்பதாம். (176)

இச்செய்யுளின் பின் 41, 45, 52–ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10271 (1) என்றவன் சேயை நோக்கி யிசைந்தகிட்
கிந்தை யுள்ளார்
நன்றுநம் பதியைக் காண
நாயக வழைத்தி யென்னச்
சென்றவன் சாம்பன் றன்னைத்
திசையெட்டுந் திரியச் சாற்றி
இன்றுநம் சுற்ற மெல்லா மியல்புட
னழைத்தி யென்றுன்.

,, (2) என்றபோ தெழுந்து சான்ப னிசைந்தகிட்
கிந்தை யுள்ளார்க்கு
ஒன்றெுழி யாத வண்ண மோதினு
னேதக் கேட்ட
ஒன்றிய கடல்க ளேழு முற்றுட
னுவாவுற் றென்ன
மன்றலங் குழலி ஞர்கள்
துவன்றினர் மகிழ்ச்சி கூட.

வானரமகளிரைக் கொணரும்படி இராமன் பணிக்கச் சுக்கிரீவன் சொற்படி அனுமன் அவர்களைக் கொணர்தல்

10272. அம்மொழி யிரவி மைந்தற்
கண்ணரு னுரைப்ப வன்னுன்
மெய்ம்மைசே ரனுமன் றன்னை
நோக்கிநீ விரைவின் வீர

மைம்மலி குழலி ஞரை
மரபினுற் கொணர்தி யென்னச்
செம்மைசே ருள்ளத் தண்ணல்
கொணர்ந்தனன் சென்று மன்னே.

அம்மொழி இரவி மைந்தற்கு
அண்ணல்தான் உரைப்ப, அன்னுன்
மெய்ம்மை சேர் அனுமன் தன்னை
நோக்கி, 'நீ விரைவின், வீர!
மைம்மலி குழலினுரை
மரபினுற் கொணர்தி' என்ன,
செம்மை சேர் உள்ளத்து அண்ணல்,
கொணர்ந்தனன், சென்று மன்னே.

பொ :— (சீதை கூறிய) அம்மொழியினைச் சூரியன் புதல்வனுகிய சுக்கிரீவனுக்கு இராமன் எடுத்துக்கூற, அந்தச்சுக்கிரீவன் மெய்ம்மைக் குணமுடைய அனுமனைப் பார்த்து, 'வீரனே! நீ விரைந்து கருமைநிறம்செறிந்த கூந்தலையுடையராகிய (வானர) மகளிரை முறைப்படி அழைத்து வருவாயாக' என்று சொல்ல, அறஞ்சேர்ந்த நெஞ்சத்தினையுடைய பெரியோனுகிய அனுமன் (விமானத்தை விட்டிறங்கிக் கிட்கிந்தைத்குச்) சென்று (அம் மகளிரை) அழைத்து வந்தான்.

கு :— அம்மொழி என்றது, 'கட் கொந்தார் குழலினுரை ஏற்றுதல் கடன்மைத்து' எனச் சீதை கூறிய வார்த்தையினை. இரவிமைந்தன்—சுக்கிரீவன். அண்ணல்—இராமன். வானர மகளிர் மானுட மகளிரே போல வேறுபாடின்றித் தோன்ற அவர்களுக்குரிய வரிசைமுறை வழாது அழைத்து வருக என்பான் 'மைம்மலி குழலினுரை மரபினுற் கொணர்தி' என்ருன். மன மயக்கம் இன்றி மகளிரை மரபின் அழைத்து வருதற்குரிய அறஞ்சேர்ந்த தூய நெஞ்சத்தான் அனுமன் என்பார் 'செம்மை சேருள்ளத் தண்ணல்' எனச் சிறப்பித்தார். (177)

வானரமகளிர் சுக்கிரீவனையும் இராமனையும் சீதையையும் வணங்குதல்

10273. வரிசையின் வழாமை நோக்கி
மாருதி மாதர் வெள்ளங்

கரைசெய லரிய வண்ணங்
கொணர்ந்தனன் கணத்தின் முன்னம்
விரைசெறி குழலி ஞர்தம்
வேந்தனே வணங்கிப் பெண்மைக்
கரசியை யைய ஞேடு
மடியிணை தொழுது நின்ருர்.

வரிசையின் வழாமை நோக்கி,
மாருதி, மாதர் வெள்ளம்
கரை செயல் அரிய வண்ணம்
கொணர்ந்தனன், கணத்தின் முன்னம் ;
விரை செறி குழலினர், தம்
வேந்தனே வணங்கி, பெண்மைக்கு
அரசியை ஐயஞேடும்
அடி இணை தொழுது நின்ருர்.

பொ :—வாயுவின் மைந்தனுகிய அனுமன், (மகளிர்க்குரிய) சிறப்பு முறையில் வழுவாதவாறு நோக்கி (வானர) மகளிர்க் கூட்டத்தினை எண்ணியளவிட்டு வரம்பு செய்ய வொண்ணுதபடி நொடிப் பொழுதிற்குள் அழைத்துவந்தனன். (அங்ஙனம் வந்த) மணஞ்செறிந்த கூந்தலையுடையராகிய (வானர) மகளிர் தம் வேந்தனுகிய சுக்கிரீவனை வணங்கிப் பெண்மைக் குணங்களுக்கு அரசியாகிய சீதையையும் அவள் கணவன் இராமபிரானையும் இரண்டு திருவடிகளிலும் வீழ்ந்து வணங்கி நின்ருர்கள்.

கு :— மாருதி, நோக்கி, மாதர் வெள்ளம் கரைசெயல் அரிய வண்ணம் கணத்தின் முன்னம் கொணர்ந்தனன் எனவும், விரை செறிகுழலினர் தம் வேந்தனைவணங்கி, பெண்மைக்கு அரசியை ஐயனோடும் அடியிணை தொழுது நின்ருர் எனவும் இரு தொடராக இயையும். கரை செயலாவது இத்துணையர் என எண்ணி அள விட்டு வரம்பு செய்தல். விரைசெறி குழலினர் என்றது வானர மகளிரை. அவர்தம் வேந்தனுவான் சுக்கிரீவன். பெண்மைக் கரசி—சீதை. ஐயன்—இராமன். (178)

இச்செய்யுளின்பின் 41, 45, 52 ஆம் எண்ணுள்ள பிரதிகளில் பின் வரும் மிகைப்பாடல்கள் உள்ளன :—

10273 (1) சந்திர மானந் தன்மேற்
றாரகை சூழ்ந்த தென்ன
இந்திரன் மகனுர் தாரத்
தாரையும் ருமையும் கூடி
வந்தனர் வந்து மொய்த்தார்
வானர மடந்தை மார்கள்
இந்திரை கொழுநன் றன்ணை
யேத்தின ரிறைஞ்சி நின்ருர்.

10273 (2) நின்றவா ரிதியை முன்பு
நெருப்பெழக் கடைந்த போதங்
கொன்றல பலவு மாங்கே
யுற்பவித் தவற்றி னுள்ளே
தன்னுடன் பிறந்த முத்து
மாலையைத் தரையிற் ரேன்றி
மின்னென நின்ற சீதைக்
களித்தனள் விரைவிற் ருரை.

10273 (3) தாரையைச் சீதை புல்கித்
தாமரைக் கண்ண னம்பாற்
பாரைவிட் டகன்ருன் வாலி
பாருளோர்க் கவதி யுண்டோ
சீரிது மலரோன் செய்கை
தெரியுமோ தெரியா தன்றே
யாரிது தெரிய கிற்பார்
காலத்தி னளவை யம்மா.

10273 (4) என்றிடத் தாரை நிற்க
எரிகதிர்க் கடக மொன்று
மின்றிரிந் தணைய கொள்கை
மேலைநாள் விரிஞ்சன் ஈந்த
தன்றது விரவி பெற்று
நாயகற் கீந்த தன்று
சென்றடி யிணையி லிட்டே
யிறைஞ்சியே ருமையு நின்ருள்.

10273 (5) நின்றவள் தன்னை நங்கை
யங்கையாற் றழுவி நின்று
வன்றுணை மங்கை மாரு
மைந்தரு மங்குச் சூழத்
தன்றிருக் கைக ளாலே
தழுவின ளென்னக் கண்ணுல்
ஒன்றல பலவுங் கூற
வுணர்ந்துள முவகை யுற்றே.

விமானம் மீண்டும் எழுந்து செல்லுதல்

10274. மங்கல முதலா யுள்ள
மரபினிற் கலன்கள் யாவும்
அங்கவர் கொணர்ந்து பெண்மைக்
கரசியைத் தொழுது சூழ
நங்கையு முவந்து வேறோர்
நவையிலை யினிமற் றென்றுள்
பொங்கிய விமானந் தானும்
மனமென வெழுந்து போன.

மங்கலம் முதலாய் உள்ள
மரபினின் கலன்கள் யாவும்
அங்கு அவர் கொணர்ந்து, பெண்மைக்கு
அரசியைத் தொழுதுசூழ,
நங்கையும் உவந்து, 'வேறுஓர்
நவை இலை இனி மற்று' என்றுள்;
பொங்கிய விமானம் தானும்
மனம்என எழுந்து போன.

பொ :— (அப்பொழுது) அங்கு வந்த அவ் வானர மகளிர் (எண்வகை) மங்கலங்கள் முதலாகவுள்ள அணிகலப் பொருள்கள் எல்லாவற்றையும் முறைப்படி கொணர்ந்து பெண்மைக்கு அரசியாகிய பிராட்டியைவணங்கிச் சூழ்ந்திருக்கச் சீதையும் மகிழ்ந்து 'இனியாதொரு குறையும் இல்லை' என்று கூறினுள். (ஒளி)மிக்க (புட்பக) விமானமும் (விசும்பின்மீது) எழுந்து மனத்தின் வேகம் என விரைந்து சென்றது.

கு :— மங்கலம்—எண்வகை மங்கலப் பொருள்கள்; சாமரை, விளக்கு, பொற்குடம், இணைக்கயல், கண்ணாடி, அங்குசம், கொடி, முரசம் என்பன. அங்கவர், மங்கல முதலாயுள்ள கலன்கள் யாவும் மரபினிற்கொணர்ந்து என இயையும். நங்கை—சீதை. ஆயமும் காவலும் ஆக மகளிர் ஒருவரும் தனக்குத் துணையாக அமையவில்லை என்ற தன் மனக்குறை நீங்க அன்புடைய வானர மகளிர் பலர் மங்கலப் பொருள்களுடன் தன்னைச் சூழ்ந்திருத்தலைக் கண்ட சீதை 'இனி வேறோர் நவையிலை' என்று மன மகிழ்ச்சியுற்றாள். நவை — குறை. போனது எனற் பாலது 'போன' எனக் கடைக்குறைந்து நின்றது; செய்யுள்விகாரம். விமானந்தானும் எழுந்து போன என்றமையால் அது சிறிது நேரம் கிட்கிந்தையில் இறங்கியிருந்தமை புலனும்.

இச்செய்யுளுக்குப் பதிலாக 66-ஆம் பிரதியில்,

10274 (1) நின்றுவா னரங்கள் தங்கள்
நேரிழை யாரை யெல்லாம்
மின்றிகழ் விமானத் தேற்றி
விரிகடற் சேனை யெல்லாம்
துன்றிய மனிதர் மேனி
துளங்கிட வளித்து வீரன்
பொன்றிகழ் விமானந் தன்மேற்
பொலிவுட னெழுந்து போனான்.

என்ற பாடல் உளது.

இதன்பின் 23, 43-ஆம் பிரதிகளில்,

,, (2) குன்றுபோ லிரவி சேய்தன்
கோதையர் முதலா யுள்ளோர்
வன்றிறல் வான ரேசர்
மாதரார் மற்று ளோர்கள்
ஒன்றொழி யாம லேற
வொப்பிலா விமானந் தன்மேல்
நன்றென விராமன் பின்னும்
நாயகிக் கினிய காட்டும்.

என்ற பாடலும்,

71–ஆம் பிரதியில்,

10274 (3) மனமும் வாயும் பின்செல
முன்செலு மான மாங்கே
பனிதரும் விசும்பிற் செல்லு
மேல்வையிற் பரிவோ டய்யன்
குனிசிலை புருவச் செவ்வாய்க்
குயின்மொழி மயிலைப் பாரா
நனிதிக முன்பா லின்னங்
கேளென நவில லுற்றான்.

என்ற பாடலும் மிகையாகக் காணப்படுகின்றன.

9, 18, 19, 21, 23, 26, 29, 40, 41, 44, 52, 54, 60, 61, 62, 66, 71–ஆம் எண்ணுள்ள பிரதிகளிற் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன :—

,, (4) கடிகமழ் குழலி னாளே
கார்காலம் யாங்கள் வைகும்
வடிவுடைச் சிகர மோங்கு
மாலிய வானை நோக்காய்
அடுதிறற் பருதி மைந்தன்
கிட்கிந்தை யழகு பாராய்
வடிவுலா மலையே முன்ன
மராமர மேழு நோக்காய்.

,, (5) கனிவளர் பவளச் செவ்வாய்க்
கருங்குழல் நின்னைக் காணாத்
துனிவளர் துன்ப நீங்கத்
தோழமை நாங்கள் கொண்ட
பனிவளர் இருளை மாற்றும்
பருதிதன் புதல்வ னோடு
நனிவளர் நட்பு நாங்கள்
நயந்தவிந் நாக நோக்காய்.

,, (6) மாழையொண் கண்ணா யுன்னைப்
பிரிந்துநான் வருந்து நாளில்
தாழ்விலாத் துயர நீங்கத்
தாமரை யுந்தி யான்கை

ஆழிமா லாற்ற லானை யனுமனை
யரக்க ரஞ்சும்
பாழியான் றன்னைக் கண்ட பம்பையா
றதனைப் பாராய்.

10274 (7) பொய்வித்தி வஞ்சங் காத்துப் புலைவினைத்
தறத்தைத் தின்றூர்
கைவித்துஞ் சரத்தி னுனங் கடற்பெரும்
படையை யெல்லாம்
நைவிக்க விரவி னுற்கால் மருந்துக்கு
நடந்து நம்மை
உய்வித்த வீரன் றன்னைக் கண்டிட
மிதுகண் டாயே.

,, (8) சவரிய திருக்கை தானுங் கவந்தனைத்
தடிந்த கானும்
அமர்செய வெழுந்த வாற்றற்
கரனுயி ரழிந்த பாரும்
சமைவுறு சுகுட்டன் மைந்தன் சரபங்கன்
முதலோர் காதற்
கமைவுறு முனிவர் தங்கள் இடங்களுங்
கருதி நோக்காய்.

44-ஆம் பிரதியில்,

10274 (9) பம்பைத் திருமா னதியிதுகாண்
பயிலுந் தபோதச் சபரியெனும்
கொம்பைக் கண்ட திவ்விடத்தும்
கூறுங் கவந்த னென்பானை
வெம்பத் துணித்த போதிலவன்
மெய்வா சகங்கள் பலபேசி
உம்பர்க் கரிய பதம்பெற்ற
விடங்கா ணிவட மொண்ணுதலே.

,, (10) தானே தனக்கு நிகரான சடாயு
மரிக்கத் தசக்கிரீவன்
ஊனே சிந்த வுயிர்நிலைகெட் டுயர்போர்
செய்த திவ்விடங்காண்

மானே யான வுருக்கொண்டு வருமா
ரீசன் றனைவதைத்துத்
தேனே யனையா யுனைத்தேடித் திரிந்த
கான மிதுகண்டாய்.

71–ஆம் பிரதியில்,

10274 (11) எந்தை யாகிய சடாயுநீ அழுதல்கேட் டிரங்கி
வந்தி ராவணன் உடன்சில மாற்றங்கள் வழங்கித்
தந்த மாற்றலால் பொருதவன் வாளினுற் றடிய
நொந்து வீழ்ந்துயிர் பொன்றிய விடமது நோக்காய்.

,, (12) என்ன வேயுரைத் தேந்திழா
யாங்கது ... ...
பொன்னின் நுண்மணல் கொழிக்குங்
கோதா விரிபுடையிற்
றுன்னு குன்றினும் தொல்லைநா
ளிருந்துபின் பிரிந்த
பன்ன சாலைய திருந்த
தவிடமது பாராய்.

10274 (13) காரே பயிலுங் கடாக்களிற்றுக்
கரதூ டணனுர் படையோடும்
சேரப் பொருமுன் சூர்ப்பணகை
செவிமூக் கரிந்த விடமிதுகாண்
வாரைப் பொருத தடங்கொங்கை
மயிலே தெண்ட காரணியத்
தீரத் தவமா முனிவருட
னிருந்த விடங்கா ணிதுவென்றுன்.

,, (14) அருமா தவத்தோர்க் காரியன்றுன்
படைத்தா னளித்த திவ்விடத்துத்
திருமா தவஞ்செய் சரபங்கன்
செந்தீப் புகுந்த திவ்விடத்துப்
பொருமா றனுகும் விராதனுடல்
பொடிந்து போன திவ்விடத்துக்
கருமா முகிலே யனகுழலாய்
காணுய் கண்கள் களிப்புறவே.

10274 (15) விரைகம ழோதி மாதே
விராதன்வந் தெதிர்த்துப் போர்செய்
நிரைதவ முருவி யோங்கு
நெடுவரை யதனை நோக்காய்
சரதநா னரசு வேண்டேன்
தடமுடி புனைநீ யென்று
பரதன்வந் தழுது வேண்டும்
பருவரை யதனைப் பாராய்.

,, (16) வளைபயில் தளிர்க்கை மாதே
வருபுனல் பெருகக் கண்டு
துளைபயில் வேயின் தெப்பம்
இயற்றியாம் துயர மின்றி
விளைதரு புனலை நோக்கி
வியந்துட னிருப்ப வெல்போர்
இளையவன் றனியே நீந்தும்
யமுனையா றிதனைப் பாராய்.

44-ஆம் பிரதியில்,

,, (17) மருவே கமழுங் குழல்வல்லி
மகரக் குழைதோய் வாணெடுங்கட்
டிருவே நம்மைச் சீர்ப்பரதன்
சேருஞ் சித்திர கூடமும்காண்
வருவே னென்று பேசியநாள்
எண்ணி வழிபார்த் திருக்குமறைக்
குருவே யன்ன பரத்துவாசக்
குலமா முனிவன் மனைகாண்டி.

,, (18) பயனுறு தவத்தின் மிக்க
பரத்துவ னிருக்கை பாராய்
கயல்பொருங் கங்கை யாறும்
குகனுறை நகருங் காணாய்
அயன்முத லமரர் போற்ற
வனந்தன்மே லாதி மூர்த்தி
துயிலு மாலரங்க மன்ன
வயோத்தியைத் தொழுது நோக்காய்.

10274 (19) என்றுரைத் திளவ லோடு
சனகியும் இரவி சேயும்
வென்றிவீ டணனும் சேனை
வெள்ளமும் விளங்கித் தோன்ற
பொன்றிகழ் புட்ப கத்தேர்
பூதலத் திழிய வேவி
இன்றுணைப் பரத்து வாச
னிடவகை யிழிந்தா னன்றே.

,, (20) என்று மன்னனும் பலபல
புதுமைக ளியாவும்
மன்ற லங்குழற் சனகிக்குக்
காட்டினன் மகிழ்ந்து
குன்று துன்றிய நெறிபயில்
குடதிசைச் செவ்வே
சென்று கங்கையின் திருநதித்
தென்கரை சேர்ந்தான்.

,, (21) ஆர்த்து விண்ணவ ராடினர் ஆடகத் தேரும்
பேர்த்த போதினில் நிலமிசை யணுகுறப் பெரியோர்க்
கார்த்த மாகிய வனங்களும் வரைகளுங் கடந்து
தீர்த்த மாகிய கங்கையின் றென்கரை யிறுத்தார்.

இப்பாடலுக்கு பிரதியாக

,,(21-1) மான மானமீப் போனது வடதிசை வருவ
தான காலையி லறிவனு மாயிழை யறியச்
சேனை யோர்திறல் சேதுவின் பெருமையுஞ் செப்பத்
தான மாகிய தீர்த்தமாந் திருநதி சார்ந்தார்.

என்ற பாடல் காணப்படுவதாக 41–ஆம் பிரதியிற் குறிக்கப் பட்டுள்ளது.

29–ஆம் பிரதியில்,

,, (22) உண்ணி லகலாத் துயரெய்தி யுன்னைப்
பெரியோ னெனுங்குகனுக்
கெண்ணுந் தகைய விரேழா மாண்டில்
வருவே மெனவிசைத்த

வண்ணங் கரியா னுலகளிக்க மலரோ
னுலகில் வளர்ந்துருவ
நண்ணுங் கழலால் முன்னழித்தான் நன்னீர்க்
கங்கை நதிசேர்ந்தான்.

10274 (23) பாக மங்கையோ டமர்ந்தவன் பயில்வுறு கங்கை
ஆகு மீதென அறநெறி வழுவுரு வலங்கல்
மேக வண்ணனும் துணைவரும் வியந்துட னுடித்
தாகம் நீங்கினர் அவ்விடைத் தேவரும் சார்ந்தார்.

44, 52–ஆம் பிரதிகளில் உள்ளன :—

,, (24) வந்த மாமுனி வோர்களை வணங்குமுன் அவர்கள்
எந்தை நீயின்றிங் கிருந்துள வருத்தமும் நீக்கி
செந்து நாளையத் திருநக ரடைகெனச் செப்பி
உந்து சித்திர கூடத்துள் யாரும்வந் துற்றார்.

,, (25) இறுத்த தேரினை யிருடிக
ளெவரும்வந் துற்றார்
வெறித்து மாய்முடி வேய்ந்தமெய்ப்
பொருளைவந் துற்றுப்
பொறுத்த தம்முயிர் பெற்றன
ரெனவகம் பொங்கத்
திறத்தி ராமனைத் திருமுனி
யவனும்வந் துற்றான்.

63–ஆம் பிரதியில்:—

,, (26) அடைந்த மாமுனித் தலைவரை
யருச்சனை செய்து
மிடைந்த சேனையம் பெருங்கடல்
சூழ்தர மேனாட்
கடைந்து பாற்கடற் கண்டுயி
னீங்கினா னவர்கள்
படிந்து போற்றிட விருந்தெனப்
பரிவுட னிருந்தான்.

66-ஆம் பிரதியில் உள்ளது :—

10274 (27) நன்று தானென நாயகன் நயந்தருள் செய்வான்
குன்று சேர்புயப் பரதனைக் குருவினைக் காண
வின்று நன்னக ரெய்தில னேலெரி வீழ்வார்
என்று கூறலு முனிவர்க ளிசைந்திடும் வேலை.

9-ஆம் பிரதியில் உள்ளது :—

,, (28) அன்று மாமுனிக் கணங்களை
வணங்கலு மவரும்
இன்று மிங்கினி திருந்தெங்கள்
வருத்தமும் போக்கிச்
சென்று நாளையத் திருநகர்
அடையெனச் செறுத்து
குன்று சித்திர கூடத்து
[ளியாவ]ருங் குவிந்தார்.

,, (29) பரத்துவன் வருதலும் பார்த்தி ராமனும்
கரத்துணை குவித்தனன் இளைய காளையோ
டெரித்திற முனியுமா சிகளி யம்பிட
விருப்பொடு மிடவகை யினிதின் மேயினான்.

,, (30) தகுமருந் தவங்க ளீட்டித்
தசமுகத் தரக்கன் பெற்ற
யுகமரைக் கோடி காறும்
ஏவல்செய் துழலுந் தேவர்
சுகமுறச் சிலைக்கை கொண்ட
தொல்மறை யமல யார்க்கும்
இகபர மிரண்டுங் காக்கும்
இறைவனீ யன்றி யுண்டோ

66-ஆம் பிரதியில்,

,, (31) அடைந்த காலையி லருமறைக்
கடவுளெம் மானும்
மிடைந்த சேனையம் பெருங்கடல்
சூழ்தர மேனாட்

கடைந்த பாற்கடல் கண்டுயில்
நீங்கிவா னவர்கள்
படிந்து போற்றிட விருந்தெனப்
பரிவுட னிருந்தான்.

10274 (32) இருந்தபோ திராமன் றன்னை
யிருடியும் நோக்கி யெந்தாய்
பெருந்திற லிலங்கை தன்னை
யெங்ஙனம் பெரியோய் நீயே
வருந்தினை குரங்கு கொண்டு
மாயவல் லரக்கர் தம்மைத்
திருந்திய போரில் வென்று
மீண்டவா செப்பு கென்றான்.

,, (33) இராகவன் முனியை நோக்கி
யிலங்குசீ ரனும னோடு
பராவும்வீ டணனும் நீசர்
படையினைக் கோற லாலே
குராவருங் குழலி தன்னை
மீட்டியான் கொற்றங் கொண்டு
விராவியே மீண்ட தென்று
மீளவும் விளம்ப லுற்றான்.

,, (34) தந்திர முற்று மெல்லாந்
தரைப்பட மறுப்படாமல்
அந்தர முற்ற காலத்
தருமருந் தனுமன் றந்தான்
மந்திர வித்தே யெம்பி
வரிசிலை வளைத்த போதில்
இந்திர சித்தும் பட்டா
னிலங்கையு மழிந்த தன்றே.

,, (35) முந்தி வந்தெழு தொல்வரங்களு
மூரிவேலை யிலங்கையும்
இந்தி ரன்றனை வென்ற மைந்தனு
மெண்ணில்கோடி யரக்கரும்

பந்து போலரன் வெற்பெடுத்த
பணைப்பு யங்களுமோலியோ
ரைந்தொ டைந்து மரன்கைவாளுமோ
ரம்பினுக்கிரை யாக்கினன்.

23, 43–ஆம் பிரதியில் 'பரத்துவன்' என்பதன் பின்,

10274 (36) படர்ந்தநல் வேள்வி பேணும்
பரத்துவ சன்று னின்றெம்
மிடந்தனி லமுது செய்தாங்
கெழுந்தரு ளிறைவா வென்ன
உடன்படக் கடிகை யொன்றி
லுத்தம குணத்தி னோர்க்குந்
திடம்படு திறலி னோர்க்கும்
சேனைக்கும் விருந்து செய்தான்

### கோதாவரியையும் சீதையைப் பிரிந்த இடத்தையும் இராமன் சீதைக்குக் காட்டுதல்

10275. போதா விசும்பிற் றிகழ்புட்பகம்
போத லோடும்
சூதார்முலைத் தோகையை நோக்கிமுன்
றோன்று சூழல்
கோதா விரிமற் றதன்மாடுயர்
குன்று நின்னைப்
பேதாய் பிரிவித் துயர்பீழை
பிணித்த தென்றான்.

போதா விசும்பில் திகழ் புட்பகம்
போதலோடும்,
சூது ஆர் முலைத்தோகையை நொக்கி, 'முன்
தோன்று சூழல்
கோதாவிரி; மற்று அதன் மாடு உயர்
குன்று நின்னைப்
பேதாய்! பிரிவித்து உயர் பீழை
பிணித்தது' எனறான்.

பொ :—(கீழிருந்து மேலே எழுந்து) போந்து விளங்குகின்ற புட்பக விமானம் வானத்திற்செல்லும் அளவில் (இராமன்) சூதாடு கருவியையொத்த கொங்கையையுடைய சீதையை நோக்கி, 'பெண்ணே! நமக்குமுன்னே தோன்றுகின்ற சூழல் கோதாவிரியாருகும். அதன்பக்கத்தே உயர்ந்து தோன்றும் குன்றினிடம்தான் (யான்) நின்னைப் பிரியுமாறு செய்து பெருந் துன்பத்திற்கு உள்ளாக்கியது' எனக் கூறினன்.

கு :—திகழ் புட்பகம், போதா, விசும்பிற் போதலோடும் என இயைக்க. சூது என்றது சூதாட்டத்திற்குரிய கருவியினை. தோகை — மயில்போலும் சாயலையுடையாள் ; சீதை. மாடு — பக்கம். உயர்பிழை—பெருந்துன்பம். பிணித்தல் — கட்டுதல்; உட்படுத்தல். (180)

*தண்டகவனம், சித்திரகூடபருவதம், பரத்துவாசர் ஆச்சிரமம் ஆகியவற்றைச் சீதைக்குக் காட்டுதல்*

10276. சிரத்து வாசவண் டலம்பிடு
தெரிவைகே ளிதுநீ
டரத்து வாசவர் வேள்வியர்
தண்டக மதுதான்
வரத்து வாசவன் வணங்குறு
சித்திர கூடம்
பரத்து வாசன துறைவிட
மிதுவெனப் பகர்ந்தான்.

'சிரத்து வாச வண்டு அலம்பிடு
தெரிவை! கேள் : இதுநீள்
தரத்து உவாசவர், வேள்வியர்
தண்டகம் ; அது தான்
வரத்து வாசவன் வணங்குறு
சித்திர கூடம் ;
பரத்துவாசனது உறைவிடம்
இது' எனப் பகர்ந்தான்.

பொ :—'நறுமணத்தால் வண்டுகள் முரலும் கூந்தலையுடைய பெண்ணே! கேட்பாயாக. இதோ தோன்றுவது, தொன்று

தொட்டுவரும் பெருமையையுடைய உபாசகராகிய விரதியரும் வேள்விபுரியும் அந்தணர்களும் தங்கியிருக்கும் தண்டக வன மாகும். அதோ தோன்றுவது, மேன்மையினையுடைய தேவேந் திரனும் வணங்கத்தக்க (சிறப்பினையுடைய) சித்திரகூட மலையா கும். இது, பரத்துவாச முனிவரது ஆச்சிரமமாகும்' என (இரா மன், சீதைக்கு)க் கூறினன்.

கு:—சிரம் — தலை; கூந்தல் என்னும் பொருளில் ஆளப்பெற் றது. அலம்புதல் — ஒலித்தல். நீள் தரம் — தொன்றுதொட்டு வரும் பெருமை. உவாசவர் — உபாசகர்; மனத்தைப் பொறி வழிபோகாது தடுத்து இறைவன்பாற் செலுத்தும் உபாசனை யுடைய விரதிகள். வேள்வியர்—யாகம் செய்யும் வேதியர்கள். தண்டகம் — தண்ட காரணியம் என்னும் காடு. சூரிய குலத்தில் மனுவேந்தன் மைந்தன் இட்சுவாகுவின் மக்கள் நூற்றுவருள் ஒரு வனுன தண்டன் என்பான் விந்தமலைக்கும் சைவலமலைக்கும் இடையேயுள்ள நிலப்பரப்பை மதுமந்தம் என்னும் தலைநகரி லிருந்து ஆட்சி புரியுங்கால் தன் புரோகிதர் சுக்கிராசாரியின் மகள் அரஜை என்பவளைக் காமுற்று வலிதிற்கற்பழித்தனன் என்றும், அதனையுணர்ந்து வெகுண்ட சுக்கிராசாரியார் 'ஏழுநாட் களில் அவ்வேந்தனும் சேனைகளும் சுற்றத்தாரும் அழிந்தொழிக; அவனது நாடு மண்மழையாற் பாழாகுக' எனச் சபித்தனர் என் றும், அதனுல் அந்நாடு மண்மழையாற் பாழ்பட்டு மக்கள் வாழ் தற்குத் தகுதியற்றதாய்த் தண்டகாரணியம் எனப் பெரிய காடா யிற்று என்றும், பின்பு முனிவர் முதலாயினேர் அவ்வனத்தில் தங்கித் தவம்புரிவாராயினர் என்றும் ஒருகதை வழங்குகிறது. வரம்—மேன்மை. விசித்திரமாகிய (அழகிய) சிகரங்களையுடைய மலையாதலால் சித்திர கூடம் எனப் பெயர் பெற்றது. பரத்வாஜன் என்னும் வடசொல், மக்களைக் காப்பாற்றுபவன் என்னும் பொரு ளில் அமைந்த காரணப் பெயர் என்பர். (181)

பரத்துவாச முனிவர் இராமனை எதிர்கொள்ளுதல்

10277. மின்னை நோக்கிய வீரனீ
தியம்பிடும் வேலை
தன்னை நேரிலா முனிவர
னுணர்ந்துதன் னகத்தின்

என்னை யாளுடை நாயக
னெய்தின னென்னுத்
துன்னு மாதவர் சூழ்தர
வெதிர்கொள்வான் ருெடர்ந்தான்.

மின்னை நோக்கி, அவ்வீரன் ஈது
இயம்பிடும் வேலை
தன்னை நேர் இலா முனிவரன்
உணர்ந்து, தன் அகத்தின்,
'என்னை ஆளுடை நாயகன்
எய்தினன்' என்னு,
துன்னு மாதவர் சூழ்தர,
எதிர் கொள்வான், தொடர்ந்தான்.

பொ :—மின்னற் கொடிபோல்வாளாகிய சீதையை நோக்கி வீரத்திற் சிறந்தவனுகிய இராமன் இம்மொழியினைக் கூறும் பொழுது, தன்னையொப்பாரில்லாத முனிவர் பெருமானுகிய பரத்துவாசன் (இராமபிரானது வருகையைத்) தன்மனத்தகத்தே (ஞானத்தால்) உணர்ந்து, 'என்னை அடிமையாகவுடைய இறைவன் (இங்கு) எழுந்தருளினுன்' என்று, நெருங்கிய பெருந் தவ முனிவர் சூழ்ந்துவர (இராமபிரானை) எதிர்கொண்டழைக்கச் சென்றனன்.

கு :—மின் — மின்னற்கொடிபோல்வாள்; உவம ஆகுபெயராய்ச் சீதையை உணர்த்தியது. தன்னை நேரிலா முனிவரன், பரத்துவாச முனிவன். 'என்னை ஆளுடை நாயகன்' என்றது உயிர்க்குயிராய் விளங்கும் இறைவனது அமிசமாகிய இராமபிரானை. (182)

இராமன் பரத்துவாச முனிவரைக் காணுதல்

10278. ஆத பத்திரங் குண்டிகை
யொருகையி னணைத்துப்
போத முற்றிய தண்டொரு
கையினிற் பொலிய

மாத வப்பய னுருவுகொண்
டெதிர்வரு மாபோல்
நீதி வித்தக னடந்தமை
நோக்கின னெடியோன்

ஆதபத்திரம், குண்டிகை,
ஒரு கையின் அணைத்து,
போதம் முற்றிய தண்டு ஒரு
கையினில் பொலிய,
மா தவப்பயன் உருவு கொண்டு
எதிர் வருமாபோல்,
நீதி வித்தகன் நடந்தமை
நோக்கினன், நெடியோன்.

பொ:—குடையையும் கமண்டலத்தையும் ஒரு கையாற் பிடித்துக்கொண்டு, மற்றொருகையிலே தத்துவஞானம் நிரம்பியதற்கு அடையாளமாகிய தண்டம் பொலிவுற்று விளங்கப் பெருந்தவத்தின் பயன் ஓர் உருவங்கொண்டு வருவது போன்று நீதி நெறியையுடைய அறிவனாகிய பரத்துவாசன் (தன்னை நோக்கி) வருவதனை நெடியோனாகிய இராமபிரான் (விமானத்திலிருந்து உற்று) நோக்கினான்.

கு:—நூல், கரகம், முக்கோல், மணை என்பன அந்தணர்களுக்கு உரியன என்பது தொல்காப்பிய மரபியற் சூத்திரத்தால் அறியப்படும். செந்தண்மையுடைய அந்தணர்களாகிய முனிவர் பெருமக்கள் குடை, நன்னீர்க்கரகம், முக்கோல் என்பவற்றைக் கையில் ஏந்தி வருவர் என்பது,

'எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை அந்தணீர்'
(கலித்தொகை—9)

எனவரும் பாலைக்கலியால் இனிது விளங்கும். ஆதபத்திரம்— வெயிலினின்றும் காப்பது; குடை. போதம் — ஞானம். முற்றுதல் — நிரம்புதல். உலகினைப் படைத்துக் காத்து அழிக்கும்

பரம்பொருள் ஒன்றே எனத் துணியும் மெய்யுணர்வின் நிறைவு இனிது புலனாக ஏந்திய ஏகதண்டம் என்பார், 'போதம் முற்றிய தண்டு' எனச் சிறப்பித்தார். 'உரைசான்ற முக்கோலும்' என வரும் கலித்தொகைத் தொடருக்கு, 'அரி அயன் அரன் என்னும் மூவரும் ஒருவர் என்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த முக்கோலையும்' என நச்சினார்க்கினியர் எழுதிய உரை விளக்கம் இங்கு ஒப்பு நோக்கியுணரத் தகுவதாகும். கலித்தொகையிற் குறிக்கப் பெற்றோர் முக்கோற் பகவர். பரத்துவாசர் ஏகதண்ட மெனப்படும் ஒரே தண்டினையேந்தியவர் என்பது இங்குக் குறிக்கத்தகும் வேறுபாடாகும். (183)

*பரத்துவாசர் ஆச்சிரமத்தில் புட்பக விமானம்*
*இறங்குமாறு இராமன் நினைதல்*

10279. எட்ப கத்தினை யளவையுங்
கருணையோ டிசைந்த
நட்ப கத்திலா வரக்கரை
நருக்கிமா மேரு
விட்ப கத்துறை கோளரி
யெனப்பொலி வீரன்
புட்ப கத்தினை வதிகென
நினைந்தனன் புவியில்.

எண்பக, தினை அளவையும்
கருணையோடு இசைந்த
நட்பு அகத்து இலா அரக்கரை
நருக்கி, மா மேரு
விட்பு அகத்து உறை கோள் அரி
எனப் பொலி வீரன்
புட்பகத்தினை வதிகென
நினைந்தனன், புவியில்.

பொ :— அருளொடு தொடர்ந்த நண்பு என்னும் பண்பு தினையளவும் மனத்தகத்தேயில்லாத (கொடியோராகிய) அரக்கர்களை (அவர்தம்) நெஞ்சம் பிளக்கக் கொன்று, பெரிய மேரு மலையின் குகையினுள்ளே வாழும் வலிய ஆண்சிங்கத்தினையொத்து விளங்

கும் (பெரு) வீரனான இராமபிரான் (தான் அமர்ந்துள்ள) புட்பக விமானத்தினைப் 'பூமியில் இறங்குக' என (த்தன் திருவுள்ளத்தில்) நினைத்தான்.

கு:— அன்பு என அரும்பி, ஆர்வமாக மலர்ந்து, நண்பு எனக் காய்த்து, அருள் எனக் கனியுந் தன்மையதாய், அருளொடு தொடர்புடைய ஈரமுடைமையாகிய பண்பு தம்முள்ளத்தே சிறிதும் இல்லாதவர் அரக்கர் என்பார், 'கருணையோடிசைந்த நட்பு தினையளவையும் அகத்து இலா அரக்கர்' என்றார். 'இரக்கமென்றொரு பொருள் இலாத நெஞ்சினர், அரக்கர்' என முன்னர்க் கூறியுள்ளமையும் இங்கு நினைக்கத்தகுவதாகும். அரக்கரை நருக்கி, கோளரி எனப்பொலி வீரன், புட்பகத்தினைப் 'புவியில் வதிக' என நினைந்தனன் என முடிக்க. எண்+பக = எட்பக என ணகரம் டகரமாகத் திரிந்தது. எண்—நெஞ்சம். பகுதல்—பிளத்தல். நருக்குதல்—கொல்லுதல். விட்பு—(மலையிலுள்ள) பிளப்பு; ஈண்டு இச்சொல் குகை என்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது. (184)

இச்செய்யுளின் பின் 41, 45, 52–ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் உள்ளன:—

10279 (1) 'என்று மன்னனும் ... ... ... சேர்ந்தான்' 10274(20)

,, (2) 'ஆர்த்து விண்ணவர் ... ... சேர்ந்தான்' ,, (21)

,, (3) 'பாக மங்கையோடு ... ... ... ... சார்ந்தார்' ,, (23)

இராமன் விரைந்து எதிர்சென்று பரத்துவாச முனிவரை வணங்குதல்

10280. உன்னு மாத்திரத் துலகினை
யெடுத்தும்ப ரோங்கும்
பொன்னி னுடுவந் திழிந்தெனப்
புட்பகந் தாழ
என்னை யாளுடை நாயகன்
வல்லையி னெதிர்போய்ப்
பன்னு மாமறைத் தபோதனன்
றுண்மிசைப் பணிந்தான்.

உன்னும் மாத்திரத்து, உலகினை
எடுத்து உம்பர் ஓங்கும்
பொன்னின் நாடு வந்து இழிந்தெனப்
புட்பகம் தாழ,
என்னை ஆளுடை நாயகன்,
வல்லையின் எதிர் போய்,
பன்னு மாமறைத் தபோதனன்
தாள்மிசைப் பணிந்தான்.

பொ :— (இவ்வாறு இராமபிரான்) நினைத்த அளவிலே, உலகிலுள்ள மக்களையெல்லாம் (தன்கண்) எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் உயர்ந்து செல்லுகின்ற விண்ணுலகமானது, பூமியில் வந்து இறங்கினாற்போன்று, புட்பக விமானமானது தாழ்ந்து (தரையில்) இறங்கியதாக, என்னை அடிமையாகவுடைய இறைவனாகிய இராமபிரான், விரைந்து எதிர்சென்று, ஓதத்தகும் பெருமைவாய்ந்த வேதங்களை நன்குணர்ந்த தவப்பெருஞ்செல்வனாகிய பரத்துவாச முனிவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

கு :— பொன்மயமான புட்பக விமானம் அளவில்லாத சேனை வீரர்களுடன் இராமன் முதலியோரைச் சுமந்துகொண்டு விண்ணில் உயர்ந்து சென்று மண்ணிடத்தே வந்திறங்கிய காட்சி, பொன்னுலகமாகிய தேவருலகம் பூமியிலுள்ள மக்கட் கூட்டத்தாரையெடுத்துக்கொண்டு மேற்சென்று மீண்டும் பூமியில் வந்திறங்கினாற்போலும் தோற்றமுடையதாயிற்று என்பார், 'உலகினை எடுத்து உம்பர் ஓங்கும் பொன்னின்நாடு, வந்து இழிந்தெனப் புட்பகம் தாழ' என்றார். இழிதல், தாழ்தல்—இறங்குதல். 'என்னை ஆளுடை நாயகன்' என்றது ஆசிரியர் தன் கூற்றாகக் கூறியது. தபோதனன்—தவமாகிய பெருஞ்செல்வத்தையுடையான்; என்றது தவப்பெருஞ் செல்வராகிய பரத்துவாச முனிவரை. திருமாலின் அவதாரமாகிய இராமபிரான், தன் தெய்வத் தன்மையினைக் கருதாது பரத்துவாச முனிவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கியது, உலக மக்கள் உயர்ந்தோரைப் பணிந்தொழுகுதல் வேண்டும் என்னும் நல்லொழுக்கநெறியைப் பாதுகாக்கும் குறிப்பினதாகும். (185)

## பரத்துவாச முனிவர் நல்வாழ்த்துடன் இராமனைத் தழுவி உவகைக்கண்ணீர் சொரிதல்

10281. அடியின் வீழ்தலு மெடுத்துநல்
லாசியோ டணைத்து
முடியை மோயின னின்றுழி
முளரியங் கண்ணன்
சடில நீடுக ளொழிதரத்
தனதுகண் ணருவி
நெடிய காதலங் கலசம
தாட்டின னெடியோன்.

அடியின் வீழ்தலும், எடுத்து நல்
ஆசியோடு அணைத்து
முடியை மோயினன் நின்றுழி,
முளரி அம் கண்ணன்
சடில நீள் துகள் ஒழிதர,
தனது கண் அருவி
நெடிய காதல் அம் கலசம் அது
ஆட்டினன், நெடியோன்.

பொ :—(இராமபிரான்) தன்னுடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கிய உடனே, நீண்ட பெருந்தவத்தினையுடையனாகிய பரத்துவாச முனிவன், (அவனைத் தன் இரு கைகளாலும் தூக்கி) எடுத்து நல்வாழ்த்துடனே (இறுகத்) தழுவி உச்சிமோந்து நிற்கும் நிலையில், தாமரை மலர்போலும் (சிவந்த) கண்களை யுடையனாகிய இராமபிரானது சடைக்கற்றையிற் படிந்துள்ள மிக்க புழுதிகள் நீங்கும்படி தன்கண்களினின்று சொரியும் கண்ணீரருவியாகிய மிக்க பேரன்பென்னும் குடநீரால் தீர்த்தம் ஆட்டினான்.

கு :—(இராமன்) அடியின் வீழ்தலும், நெடியோன் (இராமனை) எடுத்து அணைத்து, முடியின் மோயினன் நின்றுழி, முளரியங்கண்ணன் சடிலம் நீள் துகள் ஒழிதர, தனது கண்ணருவி நெடிய காதல் அம்கலசநீர் ஆட்டினன் என இயைத்துரைக்க.

நெடியோன் — பரத்துவாச முனிவன். முளரியங்கண்ணன் — இராமபிரான். சடிலம் — சடை. நீள்துகள் — மிக்கபுழுதி. கண்ணருவியாகிய காதல்அம்கலசம் என்க. கலசம் — குடநீர். ஆட்டுதல் — திருமஞ்சனஞ் செய்வித்தல். (186)

*சீதையும் இலக்குவனும் முனிவரை வணங்க, அவர் பரிவால் உளம் மகிழ்தல்*

10282. கருகும் வார்குழற் சனகியோ
டிளவல்கை தொழுதே
அருகு சார்தர வருந்தவ
ஞசிகள் வழங்கி
உருகு காதலி ஞெழுகுகண்
ணீரின னுவகை
பருகு மாரமிழ் தொத்துளங்
களித்தனன் பரிவால்.

கருகும் வார்குழல் சனகியோடு
இளவல் கைதொழுதே,
அருகு சார்தர, அருந்தவன்
ஆசிகள் வழங்கி,
உருகு காதலின் ஒழுகு
கண்ணீரினன், உவகை
பருகும் ஆர் அமிழ்து ஒத்து, உளம்
களித்தனன், பரிவால்.

பொ :— கறுத்த நீண்டகூந்தலையுடைய சீதையும் (இராமன்) தம்பியாகிய இலக்குவனும் கைகளால் தொழுது (தனது) அருகே நிற்க அரிய தவத்தினையுடைய அம்முனிவன் (அவ்விருவருக்கும்) வாழ்த்துக் கூறி, (உள்ளம்) நெகிழ்ந்துருகுதற்குக் காரணமாகிய பேரன்பினாற் பெருகிச் சொரியும் (ஆனந்தக்) கண்ணீரையுடையவனாய், மகிழ்ச்சியுடன்பருகத்தக்க (தேவர்க்குரிய) அமிழ்தத்தை உண்டாற்போன்று (அவர்கள்பால் வைத்த) அன்பினால் உள்ளம் பூரித்தான்.

கு :—சனகி—சனகன் மகள்; சீதை. இளவல்—தம்பி; இலக்குவன். அருந்தவன்—செய்தற்கரிய பெருந்தவத்தினையுடைய பரத்துவாச முனிவன். அருந்தவன், சனகியோடு இளவல் கை தொழுது அருகு சார்தர, (அவர்கட்கு) ஆசிகள் வழங்கி, காதலின் ஒழுகு கண்ணீரினன், உவகை பருகும் ஆரமிழ்து ஒத்துப் பரிவால் உளம் களித்தனன் என முடிக்க. (187)

இச்செய்யுளின் பின் 31–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்உள்ளது :—

10282 (1) [தகு மருந் தவங்கள் .........உண்டோ' 10274 (30) ]

63 ஆம் பிரதியில் :—

,, (2) வந்த மாமுனி வரன்றனை வணங்கலு மவனும்
எந்தை நீயின்றிங் கிருந்துள வருத்தமும் போக்கி
சிந்தை யன்புசெய் திருநகர் நானீ சேர்கென்
றந்த மில்பரத் துவன் சொல வன்னதற் கிசைந்தான்.

*சுக்கிரீவன் வீடணன் முதலியோர் முனிவரை வணங்க முனிவர் அவர்களுக்கு வாழ்த்துரைத்து இராமபிரானைச் சீதையுடன் ஆச்சிரமத்தினுள்ளே அழைத்துச் செல்லுதல்*

10283. வான ரேசனும் வீடணக்
குரிசிலு மற்றை
ஏனை வீரருந் தொழுந்தொறு
மாசிக ளியம்பி
ஞான நாதனைத் திருவொடு
நன்மனை கொணர்ந்தான்
ஆன மாதவர் குழாத்தொடு
மருமறை புகன்றே.

வானரேசனும், வீடணக்
குரிசிலும், மற்றை
ஏனை வீரரும், தொழும்தொறும்
ஆசிகள் இயம்பி,

ஞான நாதனைத் திருவொடு
நன்மனை கொணர்ந்தான்,
ஆன மாதவர் குழாத்தொடும்
அருமறை புகன்றே.

பொ :—(அருந்தவ முனிவனாகிய பரத்துவாசன்) வானரகுல வேந்தனாகிய சுக்கிரீவனும், வீடணனாகிய (அரக்கர்குலத்) தலைவனும் மற்றுமுள்ள ஏனைய வீரர்களும் (தன்னை) வணங்குந் தோறும் (ஒவ்வொருவருக்குந் தனித்தனியே) வாழ்த்துரைகளைக் கூறி (ப் பின்பு தன்னை)ச் சார்ந்தவரான பெருந்தவமுனிவர் கூட்டத்துடன் அரிய வேதங்களை ஓதிக்கொண்டு, தத்துவஞானத்தால் அறிதற்குரிய தலைவனாகிய இராமபிரானைத் திருமகளின் அமிசமாகிய சீதையுடன் (தனது) நன்மை நிறைந்த மனையாகிய தவச் சாலையினுள்ளே அழைத்துச் சென்றான்.

கு :— மேற்செய்யுளில் உள்ள அருந்தவன் என்பது இங்கு எழுவாயாக வருவித்துரைக்கப்பட்டது. அருந்தவன், ஆசிகள் வழங்கி மாதவர் குழாத்துடன் அருமறை புகன்று ஞானநாதனைத் திருவொடும் நன்மனை கொணர்ந்தான் என முடிக்க. ஞான நாதன் என்றது அருள் ஞானத்தால் உணர்தற்குரிய தலைவனாகிய இராமபிரானை. திரு என்றது திருமகளின் அமிசமாகிய சீதையை. (188)

பரத்து வாசமுனிவர் இராமனை அருச்சித்து அன்போடு உபசரித்து அவனது சிறப்பினை எடுத்துரைத்தல்

10284. பன்ன சாலையுட் புகுந்துநீ
டருச்சனை பலவும்
சொன்ன நீதியிற் புரிந்துபின்
சூரியன் மருமான்
றன்னை நோக்கினன் பன்முறை
கண்கணீர் ததும்பப்
பின்னொர் வாசக முரைத்தனன்
றபோதரிற் பெரியோன்.

பன்ன சாலையுள் புகுந்து, நீடு
அருச்சனை பலவும்
சொன்ன நீதியின் புரிந்து, பின்
சூரியன் புதல்வன் —
தன்னை நோக்கினன், பல் முறை
கண்கள் நீர் ததும்ப,
பின் ஓர் வாசகம் உரைத்தனன்,
தபோதரின் பெரியோன்.

பொ :—தவச் செல்வரிற் சிறந்தோனாகிய பரத்துவாசமுனிவன், தழையினால் வேயப்பெற்ற குடிலினுள்ளே (இராமபிரானை அழைத்துச்) சென்று (அம்முதல்வனுக்குச்) சிறந்த உபசாரங்களாகிய வழிபாடுகள் பலவற்றையும் (நூல்களிற்) சொன்ன முறைப்படி செய்து, பின்பு சூரியகுலத்தின் வழித்தோன்றலாகிய அவ்விராமனை (ஆனந்த)க் கண்ணீர் ததும்பப் பலமுறை நோக்கியவனாய்ப் பின்னர் ஒரு வார்த்தையினைக் கூறுவானாயினன்.

கு :—தபோதரிற் பெரியோன், பன்னசாலையுட் புகுந்து, அருச்சனை பலவும் புரிந்து, பின் சூரியன் மருமான் தன்னைக் கண்கள் நீர்ததும்பப் பலமுறை நோக்கினன், பின் ஓர்வாசகம் உரைத்தனன் என முடிக்க. தபோதரிற் பெரியோன் — தவச் செல்வர்களிற் சிறந்தோனாகிய பரத்துவாசமுனிவன். தபோதனர் எனற்பாலது தபோதர் எனக்குறைந்து நின்றது, செய்யுள் விகாரம். பன்னசாலை — பர்ணசாலை; தழைகளால் வேயப் பெற்ற குடில். பர்ணம் — தழை. சூரியன்மருமான் என்றது இராமபிரானை. மருமான் — வழித் தோன்றல். (189)

10285. முனிவர் வானவர் மூவுல
கத்துளோர் யாரும்
துனியு ழந்திடத் துயர்தரு
கொடுமனத் தொழிலோர்
நனிம டிந்திட வலகைக
ணடக நடிப்பக்
குனியும் வார்சிலைக் குரிசிலே
யென்னினிக் குணிப்பாம்.

'முனிவர் வானவர் மூவுலகத்து
உளோர் யாரும்
துனி உழந்திடத் துயர்தரு
கொடுமனத் தொழிலோர்
நனி மடிந்திட, அலகைகள்
நாடகம் நடிப்ப,
குனியும் வார் சிலைக் குரிசிலே!
என், இனிக் குணிப்பாம்?

பொ :—முனிவர்களும் தேவர்களும் மூவகையுலகங்களில் வாழ்வார் யாவரும் அஞ்சி வருந்துமாறு துன்பங்களைச் செய்த கொடிய மனத்தையும் கொடுந்தொழிலையும் உடைய அரக்கர்கள் மிகுதியாக இறந்து படவும் (போர்க்களத்தில் அவர்தம் உடம்பினைத்தின்று) பேய்கள் கூத்தாடவும் வளைந்த நெடிய வில்லினை ஏந்திய வீரனே! (எங்கள் எண்ணத்தினை இனிது நிறைவேற்றிய நினது பெருமையினைக் குறித்து யாங்கள்) இனி எதனைச் சொல்வோம்?

கு :—கொடுமனத்தோர், கொடுந்தொழிலோர் எனக் கொடுமையை ஈரிடத்தும் கூட்டுக. மடிந்திட, நடிப்ப, குனியும்வார் சிலை என இயையும். வார்சிலை—நெடிய (கோதண்டம் என்னும்) வில். குனிதல் — வளைதல்; வளைவுடையதாய் அம்பினைச் சொரிதல். இனி என் குணிப்பாம் — இனி எதனை எண்ணிக் கூறுவோம்; எண்ணிக் கூறுதற்கு ஒன்றையும் அறிந்திலோம் என்றவாறு. குணித்தல் — எண்ணியுரைத்தல். (190)

10286. விராதனுங் கரனு மானும்
★ விறல்கெழு கவந்தன் ருனும்
மராமர மேழும் வாலி
மார்பமு மகர நீரும்
இராவண னுரமுங் கும்ப
கருணன தேற்றந் தானும்
அராவரும் பகழி யொன்ரு
லழித்துல களித்தா யைய.

'விராதனும், கரனும், மானும்,
விறல் கெழு கவந்தன் தானும்,
மராமரம் ஏழும், வாலி
மார்பமும், மகர நீரும்,
இராவணன் உரமும்,
கும்பகருணனது ஏற்றம் தானும்,
அராவு அரும் பகழி ஒன்றால்
அழித்து, உலகு அளித்தாய் — ஐய!'

பொ:—ஐயனே! விராதனையும் கரனையும் மானாகிய மாரீசனையும் வலிமை மிக்க கவந்தனையும் ஏழு மராமரங்களையும் வாலியின் மார்பினையும், மகரமீன்களையுடைய கடலையும் கும்பகருணனது பெருவன்மையினையும் இராவணனது திண்ணிய மார்பினையும் அராவிக் கூர்மையாக்கப்பட்ட அரிய அம்பு ஒன்றினால் அழித்து உலகனைத்தையும் காத்தருளினாய்.

கு:—ஐய என்றது, பரத்துவாச முனிவர் இராமனை நோக்கி அழைத்த விளி. கும்பகருணனது ஏற்றந்தானும் இராவணன் உரமும் எனக்காலமுறை பற்றி மாற்றுக. (191)

இச்செய்யுளின் பின் 18, 40, 60, 61-ஆம் பிரதிகளில் பின் வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

10286 (1) இந்த வாசக மியம்பினன்
பின்னரு மிசைப்பான்
எந்தை நீயின்றிங் கிருந்துள
வருத்தமும் போக்கிச்
சிந்தை யன்புசெய் திருநகர்
நாளைசேர் கென்று
அந்த மில்பரத் துவன்சொல
வவனிடத் தடைந்தான்.

,, (2) அடைந்த மாமுனித் தலைவனை
யருச்சனை செய்து
மிடைந்த சேனையம் பெருங்கடல்
சூழ்தர மேனாட்

கடைந்த பாற்கடல் கண்துயில்
நீங்கிவா னவர்கள்
படிந்து போற்றிட விருந்தெனப்
பரிவுட னிருந்தான்.

10286 (3) இருந்தபோ திராமன் ... ... செப்புலுற்ருன் [10274 (32)]

,, (4) இராகவ னவனைநோக்கி ... பகரலுற்ருன் [10274 (33)]

23, 29, 43, 44–ஆம் பிரதிகளில்:—

10286 (5) செங்கதிர்ச் செல்வன் ருனுஞ்
சேனையின் தலைவர் தாமும்
அங்கதக் குரிசி ருனு
மெனைவிடா தருகு நின்று
பொங்கழற் சினத்தால் வந்து
பொருதிற லரக்கர் மாளச்
செங்களத் தார்த்தா ரன்றிச்
செருச்செய வேண்டிற் றுண்டோ?

,, (6) நீடிய குறித்த வெள்ள
மெழுபது நின்று நின்று
சாடினர் தருக்க ளாலுஞ்
சைலங்க ளாலுந் தாக்கி
ஆடியல் பரித்தேர்த் தானை
யமர்க்களத் தரக்கர் செய்யும்
நீடிய வஞ்ச மெல்லாம்
வீடண னின்று சாற்றும்.

,, (7) உட்டெளி வில்லான் மைந்த
னுரகபா சத்தி னலே
கட்டினன் படையை யெல்லாங்
கழற்றினன் கருடன் வந்து
முட்டவெம் படையை யெல்லாம்
முளரியான் படையி னலே
பட்டிடும் படியே யெய்தான்
இராவணன் பயந்த காளே.

23, 43-ஆம் பிரதிகளில் :—

10286 (8) வள்ளலி துரைப்பக் கேட்ட
முறைமுறை யின்ப மாரு
முள்ளமு முடலுங் கண்ணு
மொன்றுபோ லுவந்து நிற்ப
வள்ளிய முனியை நோக்கி
மலரடி வணங்கி நின்று
தெள்ளிய வறிவ னுன
விலக்குவன் செப்ப லுற்ருன்.

,, (9) படையையிங் குரைப்ப தென்னே
பரமனுங் கமலக் கண்ணின்
கடைசிவந் தருள வோதக்
கடறிடர் பட்ட தன்றி
யடையல ரரக் கரான
வனந்தமாத் தானை யெல்லாம்
தொடையொரு பகழி யாலே
துணித்தன னிறையு மென்ருன்.

,, (10) முந்த (முந்தி) ... ஆபதே (ஆக்கினுன்) [10274(35)]

9, 19, 21, 25, 29, 62, 74-ஆம் பிரதிகளில் :—

,, (11) தந்திர ... ... ... ... ... ... ... ... அன்றே [10274(34)]

,, (12) கறங்கு கால்புகா கதிரவ
னொளிபுகா கனலி
மறம்பு காதெனின் வானவர்
புகாரென்கை வம்போ
திறம்பு காலங்கள் யாவையுஞ்
சிதையினுஞ் சிதையா
அறம்பு காமையா லழிந்ததப்
பதியென வறைந்தான்.

,, (13) மறக்கண்வெஞ் சினத்தின் வெய்ய
வஞ்சக வரக்கர் யாரும்
இறக்கயற் றிறந்த தெல்லா
மெம்பிதன் வீட்டி லெந்தாய்

பிறப்புமே லுளதோ சூழ்ந்த
பெருந்திசை பேரிற் பேரா
துறக்கமோ யாது பெற்று
றறிந்தருள் சுருதி நூலோய்.

18-ஆம் பிரதியில் :—

10286 (14) மோகமிலனுய்த் துயில்துறந்தான்
மொழியக்கேட்ட முனிவிரும்பிப்
பூகபலமும் வெள்ளிலையும்
போதக்கொணர்ந்து படைத்தளித்து
மேகமனையான் றனைத்தழுவி
விமலமுனிவன் விடைகொடுப்ப
மாகனகப்பேர் விமானமிசை
வடபாற்றிசையின் வழிக்கொண்டான்.

41, 45, 52–ஆம்பிரதிகளில் :—

,, (15) என்ற வாசக மிருந்தவன்
கேட்டிக லிராமன்
தன்று ணைப்பெருந் தம்பியைத்
தழுவிநீ தக்கோய்
வென்று மீண்டிலை யாயினவ்
விண்ணவர் முனிவர்
பொன்று மாறன்றி யாருயிர்
புரப்பதொன் றுளதோ.

,, (16) மாத வன்சொன்ன வாய்மையை
மனங்கொண்டு மறையோன்
பாத முந்துற வணங்கிமா
முனிவனைப் பாரா
ஏதும் யான்செய்த தில்லையவ்
விலங்கைமேல் வெகுண்டு
வேத நாயகன் புருவத்தை
நெரித்தனன் விளிந்தார்.

,, (17) அன்றி யும்பிறி துள்ளதொன்
றுரைசெய்வெ னதுவத்
துன்று தார்புனை மாருதி
பெரும்புயத் துணையால்

வென்றி கொண்டனம் யாங்கள்மேல்
விளம்புவ தெவனோ
என்றி யம்பின னிருடிக்கு
மிளவலு மியைந்தே.

10286 (18) அனும னென்பவன் வாண்முக
நோக்கின னவனும்
புனித மாதவன் றனைத்தொழாப்
புண்ணியப் பொருளாம்
தனுவ லங்கொண்ட தாமரைக்
கண்ணவன் தனயன்
எனும தென்கொலே யாவர்க்குந்
தந்தைநீ யென்றான்.

,, (19) அங்க வன்சொல வனுமனு
முரைசெய்வான் வருணப்
பங்க யந்தனிற் சீதையாம்
பராபரை யாட்டி
சங்க ரன்னயன் றன்னையுந்
தரணியீ ரேழும்
தங்கு பொன்வயிற் றன்னதன்
தன்மையை நிகழ்த்தும்.

,, (20) இராக வன்பெருங் குலத்தையும்
இப்பெருஞ் செல்வத்
தராத லம்புகழ் சனகன்றன்
மரபையும் தந்தென்
பராப ரத்தினைப் பங்கயத்
தமுதெனப் பணித்தாள்
புராத னர்க்கர சேயென
மாருதி புகன்றான்.

,, (21) அன்ன வாசகம் கேட்டலு
மந்தணர் கோவும்
என்ன வாசகம் சீதைக்கின்
றியம்புவ தியாமென்

றுன்னி வாசக முரைத்தில
னுள்ளன்பு குளிர
அன்னை வாசவன் திருவினைத்
தந்ததென் றறைந்தான்.

10286 (22) பண்கு லாவிய சுக்கிரீ
வன்றனைப் பாராக்
கண்கு லாமனங் களித்தவன்
கழல்பிசைப் பணிந்து
மண்கு லாம்புகழ் வீடணன்
நீலனே முதலாம்
எண்கின் வேந்தனு மழித்தன
ரிலங்கையை யென்றான்.

,, (21) என்றவ னியம்பக் கேட்டங்
கிருந்தமா தவனு மிந்த
வென்றியஞ் சேனைக் கெல்லாம்
விருந்தொடு சயன மெய்தக்
குன்றுபோல் வருக வென்று
கூறலு மிமையோர் நாட்டுள்
ஒன்றிய வரம்பை மாத
ரமுதெடுத் தொருங்கு வந்தார்.

45-ஆம் பிரதியில் :—

,, (22) அன்றவர் தம்மை நோக்கி
யந்தமா தவனு மிந்த
வென்றியந் தானைக் கெல்லாம்
விருந்தொடு சயன மற்றும்
குன்றினி லருளு மென்னக்
கூறலும் வான நாட்டுள்
ஒன்றிய வரம்பை மாத
ரமுதெடுத் தொருங்கு வந்தார்.

இப்பாடல், 52-ஆம் பிரதியில் 'அருந்தவனைய' (10296) என்பதன் பின் மிகையாக உள்ளது :—

10286 (23) பான நெய்யொடு நானமுஞ்
சாந்தமும் பலவும்
ஏனை வானர மகளிர்க
ளேந்திவந் திழிந்தார்

தான மெய்ப்படைத் தம்முடைப்
போகத்து எழுந்த
ஆன கற்பினு ளுடனெழுந்
திராமனு மறைவான்.

10286 (24) முனிவன் வாண்முக நோக்கிமெய்
முழுதுணர் முனியே
அனும னுண்டகை யளித்தபே
ருதவியின் றெம்மால்
நினைய வும்முரை நிரப்பவு
மரிதினி நீதிப்
புனித வுண்டியெம் முடனெனப்
புரவலன் புகன்றான்.

,, (25) என்ற வாசகங் கேட்டலு
மிருந்தவத் தெவரும்
நன்று நாயகன் கருணையென்
றுவகையி னவிலத்
துன்று தாரவன் பாதுகந்
தொழுதருந் தொல்லோய்
ஒன்று கேளன வுவகையின்
மாருதி யுரைக்கும்.

,, (26) செய்த மாதவ முடைமையி
னினக்கன்பு சிறந்து
பொய்யில் சாதனம் பூண்டனன்
புண்டரீ கக்கண்
ஐய நின்பெருங் கருணைதா
னடியனேற் கமையும்
உய்யு மாறிதின் வேறுள
தோவென்று மொழிந்தான்.

,, (27) திருந்து மாதவன் செய்ததோர்
பூசனை செயவாண்
டிருந்த போதுதன் திருவுளத்
திராகவ னினைந்தான்

பொருந்து மாமுடி புனைகெனப்
பொருந்துரூன் போத
வருந்து தம்பிக்கு வருதும்யாம்
என்றதோர் வார்த்தை.

‘இன்று எம் விருந்தாக இங்குத்தங்குக’ எனப்பரத்துவாச
முனிவர் இராமனை வேண்டுதல்

10287. சித்திர கூடந் தீர்ந்து
தென்றிசைத் தீமை தீர்த்திட்
டித்திசை யடைந்தெம் மில்லி
னிறுத்தமை யிறுதி யாக
வித்தக மறந்தி லேன்யான்
விருந்தினை யாகி யெம்மோ
டித்தின மிருத்தி யென்றான்
மறைகளி னிறுதி கண்டான்.

‘சித்திர கூடம் தீர்ந்து,
தென்திசைத் தீமை தீர்த்திட்டு
இத்திசை அடைந்து எம் இல்லின்
இறுத்தமை இறுதி ஆக
வித்தக! மறந்திலேன் யான்
விருந்தினை ஆகி, எம்மோடு
இத்தினம் இருத்தி’ என்றான்—
மறைகளின் இறுதி கண்டான்.

பொ:—வியக்கத்தக்க தன்மையையுடையவனே! (நீ முன்பு) சித்திரகூட மலையை விட்டு நீங்கி (த் தண்டகவனத்தை நோக்கி)ச் சென்றது முதல் தெற்குத் திசையில் (விராதன் முதல் இராவணன் ஈறாகக் கொடியோர்களால்) உண்டான தீமைகளைப் போக்கி (மீண்டும்) இவ்வடதிசையை அடைந்து எமது ஆச்சிரமத்தில் தங்கினதுவரை நிகழ்ந்த செய்திகளை (த் தத்துவ ஞானத்தால்) உணர்ந்த யான் மறந்திலேன். (நீ) விருந்தாளியாகி இன்றைய தினம் எங்களோடு இருப்பாயாக’ என்று (இராமபிரானை) வேண்டினான், வேதங்களின் முடிபொருளைக் கண்டுணர்ந்தவனாகிய பரத்துவாச முனிவன்.

கு :—தீர்தல் — விட்டு நீங்குதல். தென் திசைத்தீமை — தெற்குத் திசையில் அரக்கர்களால் உண்டாகிய தீங்குகள். வித்தகன் — வியக்கத்தக்க தன்மையையுடையவன்; 'பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்' (1-3-1) எனவரும் திருவாய்மொழியில் இச்சொல் இப்பொருளில் ஆளப் பட்டிருத்தல் அறிக. மறைகளின் இறுதி — வேதங்களின் முடிபொருள். (192)

'பரதன் இயல்பினை இப்பொழுதே சொல்கின்றேன்' என முனிவர் இராமனிடம் பரதன் தன்மையை எடுத்துரைத்தல்

10288. கரதல மதனி னீடு
கார்முகம் வளைய வாங்கிச்
சரதவா னவர்க டுன்பந்
தணித்துல கங்க டாங்கும்
மரகத மேனிச் செங்கண்
வள்ளலே வழுவா நீதிப்
பரதன தியல்பு மின்றே
பணிக்குவன் கேட்டி யென்றான்.

'கரதலம் அதனின் நீடு
கார்முகம் வளைய வாங்கி,
சரத வானவர்கள் துன்பம்
தணித்து உலகங்கள் தாங்கும்
மரகத மேனிச் செங்கண்
வள்ளலே! வழுவா நீதிப்
பரதனது இயல்பும் இன்றே
பணிக்குவன் கேட்டி' என்றான்.

பொ :—(பரத்துவாசன் மீண்டும் இராமனைப் பார்த்துக்) 'கையின் கண்ணேயுள்ள நீண்ட வில்லினை வளையும்படி செய்து மெய்ம்மையையுடைய தேவர்களது துன்பத்தைத் தீர்த்து (ப் பொய்ம்மையுடைய அரக்கர்களை அழித்து) உலகங்களைக் காப்பாற்றிய மரகதமணியினைப் போலும் நிறம் பொருந்திய திருமேனியையும் சிவந்த கண்களையும் உடைய வள்ளலே! தவறாத

நீதியையுடைய (நின்தம்பி) பரதனது தன்மையையும் இப்பொழுதே சொல்வேன் கேட்பாயாக' எனக் கூறினுன்.

கு :—கரதலம் — கையிடம். கார்முகம் — வில். வாங்குதல்—வளைத்தல். இன்றே—இப்பொழுதே. பணித்தல்—சொல்லுதல்; 'மண்டலமே பணியாய்தமியேற் கொருவாசகமே' என்ற திருக்கோவைபார்ப் பாடலில் பணித்தல் இப்பொருளிற் பயின்றுள்ளமை காண்க. (193)

10289. வியர்த்த மேனியன் விழிபொழி
மழையன்மூ வினையைச்
செயிர்த்த சிந்தையன் றெருமர
லுழந்துழந் தழிவான்
அயர்த்து நோக்கினுந் தென்றிசை
யன்றிவே றறியான்
பயத்த துன்பமே யுருவுகொண்
டென்னலாம் படியான்.

வியர்த்த மேனியன், விழிபொழி
மழையன், மூவினையைச்
செயிர்த்த சிந்தையன், தெருமரல்
உழந்து உழந்து அழிவான்,
அயர்த்து நோக்கினும் தென் திசை
அன்றி வேறு அறியான்,
பயத்த துன்பமே உருவுகொண்
டென்னலாம் படியான்.

பொ :— (பரதனுகிய அவன்) வேர்க்கின்ற உடம்பினையுடையான்; கண்களினின்று பொழிகின்ற நீர்ப்பெருக்கை யுடையான்; முதிர்ந்த பழவினையை முனிந்து வெறுத்த உள்ளத்தான்; மனச்சுழற்சியாகிய கலக்கத்தில் அழுந்தியழுந்தி வருந்துவான்; (தன்துயரை) மறந்து மற்ருென்றை நோக்கினுலும் (நீ சென்றுள்ள) தென் திசையை யன்றி வேருென்றையும் பார்த்தறியான்; அச்சத்துடன்கூடிய துயரமே ஓர் உருவு கொண்டது என்று சொல்லும்படியான தன்மையையுடையான்.

கு :— இதுவும் அடுத்த செய்யுளும் பரதனது இயல்பினை விரித்துரைப்பன. மூவினை—மூத்தவினை—முதிர்ந்து பயன்தருவ தாகிய ஊழ்வினை. இனி மூவினை என்பதற்கு, சஞ்சிதம், பிரா ரத்தம், ஆகாமியம் என்னும் மூவகைக் கன்மங்கள் எனப் பொருள் கூறினும் அமையும். செயிர்த்தல்—முனிதல். தெருமரல் —மனச்சுழற்சி; மனக்கலக்கம். தன்தமையனாகிய நினது வர வினையே எதிர்பார்த்துத் தவம்புரியும் பரதன், தன் மனத்துயரத் தினை ஒரோவழி மறந்து புறத்தே நோக்கினாலும் நீ சென்றுள்ள தென்றிசையை நோக்குவதன்றி வேறு எத்திசையையும் பார்ப் பதில்லை என்பார், 'அயர்த்து நோக்கினும் தென்றிசை யன்றி வேறு அறியான்' என்றார். பயத்த துன்பம்—வனம்புக்க இராம பிரானுக்குப்பகைவர் முதலியோரால் என்ன துன்பம்நேர்ந்ததோ என்னும் அச்சத்துடன் கூடிய துன்பம். (194)

10290. இந்தி யங்களைந் திருங்கனி
காய்நுகர்ந் திவுளிப்
பந்தி வந்தபுற் பாயலான்
பழம்பதி புகாது
நந்தி யம்பதி யிருந்தனன்
பரதனின் னாமம்
அந்தி யும்பக லதனினு
மறப்பில னாகி.

'இந்தியம் களைந்து, இருங் கனி
காய் நுகர்ந்து, இவுளிப்
பந்தி வந்த புல் பாயலான்,
பழம் பதி புகாது,
நந்தியம் பதி இருந்தனன்,
பரதன், நின் நாமம்
அந்தியும் பகல் அதனினும்
மறப்பு இலன் ஆகி'.

பொ :— பரதன், ஐம்பொறிகளையும் (தத்தமக்குரிய புலன் களில் செல்லாமல்) தடுத்து, கரிய கனி, காய் முதலியவற்றையே (உணவாக) உண்டு, குதிரைத்திரள் மேய்தற்கு ஏற்ற புல்லையே பாயலாகக் கொண்டவனாய் நினது திருப்பெயரையே இரவும்

பகலும் மறவாது ஓதுபவனுகித் (தம்முன்னோர் அரசு வீற்றிருந்த) தொன்மை வாய்ந்த (அயோத்தி) நகரத்தினுள்ளே புகாமல் (அதன் அயலிலுள்ள) நந்திக் கிராமத்திலே தங்கியிருக்கின்ருன்.

கு :— பரதன், இந்தியம்களைந்து, கனி காய் நுகர்ந்து புற்பாயலான், நின்நாமம் அந்தியும் பகலதனினும் மறப்பிலனுகி, பழம்பதிபுகாது நந்தியம்பதி இருந்தனன் என்க. இந்தியம்–இந்திரியம் என்னும் வடசொல்லின் சிதைவு. இந்திரியம்—பொறிகள். களைதல்—தத்தமக்குரிய புலன்களிற் செல்லவொட்டாது தடுத்து நிறுத்துதல். இவுளிப்பந்தி—குதிரைத்திரள். பழம்பதி—தொன்னகரமாகிய அயோத்தி. நந்தியம்பதி—நந்திக் கிராமம். (195)

இச்செய்யுளின் பின் 52-ஆம் பிரதியில் உள்ள மிகைப் பாடல் :—

10290 (1) முனிவ னின்மொழி கூறலு முதுமறைப் பெருமாள்
தனைநி னைந்துளம் வருந்திய தம்பிபா லயரும்
மனநெ கிழ்ந்திரு கண்கணீர் வாரவங் கமலன்
நினைவின் முந்துறு மாருதிக் கினையன நிகழ்த்தும்.

*பரத்துவாச முனிவர் இராமனைப் பாராட்டிக்கூற,*
*இராமன் முனிவரைப் போற்றுதல்*

10291. என்றுரைத் தரக்கர் வேந்த
னிருபதென் றுரைக்கு நீலக்
குன்றுரைத் தனைய தோளுங்
குலவரைக் குவடு மேய்க்கும்
என்றுரைத் தனைய மௌலித்
தலைபத்து மிறுத்த வீர
நின்றனைப் பிரிந்த துண்டே
யானென நிகழ்த்தி னுனல்.

என்று உரைத்து, 'அரக்கர் வேந்தன்
இருபது என்று உரைக்கும் நீலக்
குன்று உரைத்தனைய தோளும்,
குலவரைக் குவடும் ஏய்க்கும்

என்று உரைத்தனைய மௌலித்
தலை பத்தும் இறுத்த வீர!
நின்தனைப் பிரிந்தது உண்டே
யான்?' என நிகழ்த்தினான்.

பொ:—என்று கூறி, 'அரக்கர் வேந்தனான இராவணனுடைய இருபதென்று சொல்லப்பட்ட நீல நிறக்குன்றுகளை உவமையாகக் கூறினால் ஒக்கும் தோள்களையும், குலமலைகளின் சிகரங்களையும் ஒக்கும் - ஞாயிற்றை உவமை கூறினால் ஒக்கும் முடியினை யணிந்த பத்துத் தலைகளையும் அறுத்தொழித்த வீரனே! யான் நின்னை (எப்பொழுதேனும்) பிரிந்ததுண்டோ?' என அன்புமொழி புகன்றான் (பரத்துவாச முனிவன்).

கு:—நீலமேனியனாகிய இராவணனுடைய இருபது தோள்களுக்கு நீலக் குன்றுகளும், அவனுடைய பத்துத் தலைகளுக்குக் குலமலைகளும், அத்தலைகளில் அணியப்பெற்ற மணிமுடிகளுக்கு மலைமுகட்டில் தோன்றும் ஞாயிறும் உவமை. இருபதென்றுரைக்கும் தோள், நீலக்குன்றுரைத்தனைய தோள் எனத் தனித்தனி இயையும். குலவரைக்குவடும் ஏய்க்கும் தலைபத்தும் என இயைக்க. என்று உரைத்தனைய மௌலி என்பது தலைக்கு அடைமொழியாய் இடையே வந்தது. 'ஞாயிற்றை உவமை கூறினால் ஒக்கும் முடி' என்பது இத்தொடரின் பொருளாகும். என்று—சூரியன். இராவணனுடைய தலைகளுக்கு மலைகளையும் அத்தலைகளில் அணியப்பெற்றுள்ள கிரீடத்திற்கு ஞாயிற்றையும் உவமை கூறுவதனை ஆசிரியர் மரபாகக் கொண்டுள்ளார் என்பது,

'குழவி ஞாயிறு குன்றிவர்ந்தனையன குருமணி நெடுமோலி
இழைகளோடு நின்றிளவெயில் எறித்திட'
(சுந்தர—ஊர்தேடு—207)

எனவும்,

'சகரநீர்வேலை தழுவியகதிரிற் றலைதொறுந்
தலைதொறுந் தயங்கும்
வகைய பன்மகுடம்
இளவெயில் எறிப்ப' (சுந்தர—காட்சிப்—78)

எனவும் வரும் தொடர்களால் இனிது விளங்கும். யான் எப்பொழுதும் இடைவிடாது நின்னையே தியானித்துக் கொண்டிருத்

தலால் நின்னைப் பிரியா நிலையிலுள்ளேன் என்பான், 'யான் நின்றனைப் பிரிந்ததுண்டே?' எனவினவினன். (196)

பரத்துவாசர் இராமனை நோக்கி 'நீ விரும்பிய வரத்தைத் தருவேன்' எனக்கூற, இராமன், வானரங்கள் சென்ற விடமெல்லாம் வளம்பெற்று வாழும் வரத்தினை வேண்டிப்பெறுதல்

10292. மின்னையே யுழையி னானும்
விரைமலர்த் தவிசி னானும்
நின்னையே புகழ்தற் கொத்த
நீதிமா தவத்தின் மிக்கோய்
உன்னையே வணங்கி யுன்ற
னருள்சுமந் துயர்ந்தேன் மற்றிங்
கென்னையே பொருவு மைந்தர்
யானலா தில்லை யென்றான்.

'மின்னை ஏய் உழையினானும்
விரை மலர்த் தவிசினானும்
நின்னையே புகழ்தற்கு ஒத்த
நீதி மாதவத்தின் மிக்கோய்!
உன்னையே வணங்கி உன்தன்
அருள் சுமந்து உயர்ந்தேன்; மற்று இங்கு
என்னையே பொருவும் மைந்தர்
யான் அலாது இல்லை' என்றான்.

பொ :— மின்னற்கொடி போல்வாளாகிய உமாதேவியைப் பொருந்தக்கொண்ட (இடப்) பாகத்தினையுடையவனாகிய சிவ பெருமானும், மணம் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருப்பவனாகிய பிரமதேவனும் (ஏனைய தவச் செல்வர்களினும்) நின்னையே (உயர்த்தப்) புகழ்தற் கேற்ற பெருமையையுடைய பெருந்தவத்திற் சிறந்தவனே! (யான்) உன்னையே (வழிபடு தெய்வமெனக் கொண்டு) வணங்கி உனது திருவருளை நிரம்பப்பெற்று உயர்வடைந்தேன்; (ஆதலால், தன்னிகரின்றி) என்னையே யொத்த மைந்தன் யானன்றிப் பிறரில்லை' என்று (இராமன், பரத்துவாச முனிவனை நோக்கிக்) கூறினான்.

கு :— மின் என்றது உவமை யாகுபெயராய், மின்னல் போல் வாளாகிய உமாதேவியை யுணர்த்தியது. ஏய்தல்—பொருந்தக் கொள்ளுதல். உழை—பக்கம். 'மின்னேயே ருழையினுன்' என்ற பாடத்தைக் கொண்டு, 'மின்னலைப்போல விளங்குகிற மானை இடக்கையிற் கொண்டவன்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. (197)

10293. அவ்வுரை புகலக் கேட்ட
வறிவனு மருளி னேக்கி
வெவ்வரம் பொருத வேலோய்
விளம்புகேன் கேட்டி வேண்டிற்
றெவ்வர மெனினுந் தந்தே
னியம்புதி யெனலு மையன்
கவ்வையின் ருகி வென்றிக்
கவிக்குலம் பெற்று வாழ்க.

அவ் உரை புகலக் கேட்ட
அறிவனும், அருளின் நோக்கி,
'வெவ் அரம் பொருத வேலோய்!
விளம்புகேன் கேட்டி வேண்டிற்று
எவ் வரம் எனினும் தந்தேன்
இயம்புதி' எனலும், ஐயன்,
'கவ்வை இன்ருகி வென்றி
கவிக்குலம் பெற்று வாழ்க'.

பொ :— (இராமபிரான்) அவ்வார்த்தையினைக் கூறக்கேட்ட முனிவனுகிய பரத்துவாசனும், (அவனை) அருளுடன் பார்த்து, 'வெவ்விய அரத்தினுல் அராவிக் கூர்மை செய்யப்பட்ட வேற் படையை யுடையவனே! (யான் ஒன்று) கூறுவேன், கேட்பா யாக. (நீ) விரும்பியது எந்த வரமாயினும் (அதனை இப்பொழுதே) தந்தேன். (நீ வேண்டியதைச்) சொல்வாயாக' என்று கூறிய அளவில், தலைமைக் குணமுடையனுகிய இராமபிரான், 'வெற்றி யினைக் கொண்ட குரங்கின் கூட்டம் துன்பம் (சிறிதும்) இல்லாத தாகி (வேண்டியவற்றை)ப்பெற்று வாழ்க. (198)

10294. அரியினஞ் சென்ற சென்ற
வடவிக ளனைத்தும் வானம்
சொரிதரு பருவம் போன்று
கிழங்கொடு கனிகாய் துன்றி
விரிபுனல் செழுந்தேன் மிக்கு
விளங்கென விளம்பு கென்றான்
புரியுமா தவனு மஃதே
யாகெனப் புகன்றிட் டானால்.

'அரி இனம் சென்ற சென்ற
அடவிகள் அனைத்தும், வானம்
சொரிதரு பருவம் போன்று,
கிழங்கொடு கனிகாய் துன்றி,
விரிபுனல் செழுந்தேன் மிக்கு
விளங்க என விளம்புக' என்றான்;
புரியும் மாதவனும், 'அஃதே
ஆக' எனப் புகன்றிட்டானால்.

பொ :—'' 'குரங்கின் குலம் சென்ற சென்ற காடுகள் யாவும் மழை பொழியும் பருவ காலத்தினை யொத்து (ச்செழித்து) இனிய கிழங்குகளுடன் கனிகளும் காய்களும் நிறையப்பெற்று விரிந்து பரவிய (நல்ல) நீரும் செழுந்தேனும் மிக்கு விளங்குக' என்று வரந்தருவாயாக'' என வேண்டினான். விரும்பிச் செய்யும் பெருந் தவத்தினையுடையவனாகிய பரத்துவாச முனிவனும் 'அப்படியே ஆகுக' எனக் கூறியருளினான்.

கு :— இவ்விரு செய்யுட்களும் ஒரு தொடராய் அமைந்தன. அறிவன்—முனிவன். கவ்வை—துன்பம். அரியினம்—குரங்கின் இனம். அடவி—காடு. வானம் சொரிதரு பருவம் போலுதலாவது, மழை பொழிதற்குரிய கார்ப்பருவத்தைப் போன்று வேனில் முதலிய ஏனைய பருவங்களிலும் வளமுடையனவாய்ச் செழித்திருத்தல். இராமபிரான், 'நினக்கு வேண்டும் வரத்தினைக் கேட்பாயாக' என முன்பு தேவர்கள் கூறிய நிலையிலும், பரத்துவாச முனிவன் கூறிய இப்பொழுதும் தனக்குப் போரில் உதவிபுரிந்த வானரங்களின் நன்மை யொன்றினையே உளங்கொண்டு வரம்

வேண்டினமை, செய்ந்நன்றி மறவாமை என்னும் நல்லறத்தில் அம்முதல்வன் கொண்டுள்ள பேரார்வத்தை இனிது புலப்படுத்தல் அறியத்தகுவதாகும். (199)

### பரத்துவாச முனிவர், அங்கு வந்தோர் அனைவர்க்கும் விருந்தளித்தல்

10295. அருந்தவ னைய நின்னோ
டனிகவெஞ் சேனைக் கெல்லாம்
விருந்தினி தமைப்பெ னென்னு
விளங்குமுத் தீயி னுப்பண்
புரிந்தொரா குதியை யீந்து
புறப்படு மளவிற் போகம்
திருந்திய வான நாடு
சேரவந் திறுத்த தன்றே.

அருந்தவன், 'ஐய! நின்னோடு
அனிகவெஞ் சேனைக்கு எல்லாம்
விருந்து இனிது அமைப்பென்' என்று,
விளங்கும் முத் தீயின் நாப்பண்
புரிந்து ஓர் ஆகுதியை ஈந்து
புறப்படும் அளவில், போகம்
திருந்திய வான நாடு
சேர வந்து இறுத்தது அன்றே.

பொ:– அரிய தவத்தைச் செய்தவனான பரத்துவாசமுனிவன், (இராமபிரானை நோக்கி) 'ஐயனே! நினக்கும் நின்னுடன் வந்த அணிவகுப்பினையுடைய விரும்பத்தக்க எல்லாச் சேனைகளுக்கும் இனிதாகிய விருந்தினை அமைப்பேன்' என்று சொல்லி, (வேள்விக்குண்டத்தில்) விளங்கும் முத்தீயின் நடுவே (தெய்வத்தை நினைந்து) ஓர் ஆகுதியைச் செய்து வெளிவரும் போது, நுகர் பொருள்களால் தூய்மையையுடைய தேவருலகம் அங்கு அணுகியதாய் வந்து தங்கியது.

கு:— பரத்துவாச முனிவர் இராமபிரான் முதலியோர்க்கும் உடன்வந்துள்ள எல்லாச் சேனைகளுக்கும் விருந்துசெய்ய

எண்ணி வேள்வித்தீயில் ஓர் ஆகுதி செய்தவுடனே தெய்வத்தினருளால் தேவருலகிலுள்ள தூய நுகர்ச்சிப் பொருள்கள் யாவும் முனிவரது ஆச்சிரமத்தில் ஒருங்கே வந்து நிறைந்தன என்பதாம். முத்தீ என்றது ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி என்னும் மூவகைத் தீயினை. போகம் திருந்துதலாவது—நுகர்ச்சிக்குரிய பொருள்கள் தூயனவாதல். வானநாடு என்பது ஆகுபெயராய் அங்குள்ள நுகர் பொருள்களைக் குறித்தது. இறுத்தல்—தங்குதல். (200)

அப்பொழுது இராமன் அனுமனை நோக்கி
ஒன்று கூறத் தொடங்குதல்

10296. அரைசரே யாதி யாக
அடியவ ரந்த மாகக்
கரைசெய லரிய போகந்
துய்க்குமா கண்டி ராமற்
கரைசியல் வழாமை நோக்கி
யறுசுவை யமைக்கும் வேலை
விரைசெறி கமலக் கண்ண
னனுமனை விளித்துச் சொன்னான்.

அரைசரே ஆதி ஆக,
அடியவர் அந்தம் ஆக,
கரை செயல் அரிய போகம்
துய்க்குமா கண்டு, இராமற்கு
அரைசியல் வழாமை நோக்கி
அறுசுவை அமைக்கும் வேலை,
விரை செறி கமலக் கண்ணன்,
அனுமனை விளித்துச் சொன்னான்.

பொ:—(சிறப்புடைய) அரசர் முதலாக (ஏவல் புரியும்) அடியோர் ஈறாக (இராமபிரானுடன் வந்தோர்) யாவரும் அளவிட்டு உரைத்தற்கரிய (பெருமை வாய்ந்த) நுகர்ச்சிகளை நுகரும்படி செய்து இராமபிரானுக்கு அரசுக்குரிய சிறப்பு முறையாகிய தகுதி குறையாதவாறு (பரத்துவாச முனிவர்) அறுசுவையுடைய

(சிறந்த) உணவுகளை அமைக்கும் போது, மணம் செறிந்த தாமரை மலர் போலும் (சிவந்த) கண்களையுடையனுகிய இராம பிரான், அனுமனை அழைத்துப் பின் வருமாறு கூறுவானுயினன்.

கு :— அரசரே என்புழி ஏகாரம் அவர்தம் சிறப்புணர்த்தி நின்றது. அரசர் என்றது, வானர குலவேந்தன் சுக்கிரீவன், அரக்கர் வேந்தன் வீடணன் ஆகியோரை. கரைசெயல் அரிய—அளவிடுதற்கு இயலாத. போகம்—நுகர் பொருள். துய்க்குமா கண்டு—நுகருமாறு. செய்து காண்டல்—செய்தல். அரசியல்—அரசர்க்குரிய சிறப்பு முறையாகிய தகுதி. அறுசுவை என்றது அறுவகைச் சுவையினையுடைய உணவுகளை. (201)

இச்செய்யுளின் பின் 63–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10296 (1) என்றலும் பரத்து வாச
னியன்றநல் லடக ருந்தி
யொன்றிய பூசைச் சேடம்
வாங்கியே யுணர்வு கொண்டான்
தன்றவப் பயன்ரு னென்று
தலையுங்கை யவராம் செய்ய
நின்றது மகிழ்ந்து நோக்கி
நெடுத்தவ னிலையைக் கூறும்.

,, (2) வருந்தித் தான்றர வந்த வமுதையு
மருந்து மென்று வமரருக் கூட்டினுய்
விருந்து நல்லட குண்டு விரும்பினுய்
திருந்தி னுர்வயிற் செய்வன தேயுமோ.

,, (3) என்று கூற விராமனும் நன்றெனுக்
குன்று போலுந் தவத்துயர் கொள்கையாய்
இன்று தீயெனத் திருவினை யின்பயன்
இன்றோர் மாற்றம் உளதென் றியம்புவான்.

,, (4) முனிவன் வாண்முக நோக்கிமெய்
முழுதுணர் முனியே
அனும னென்பவ னளித்தபே
ருதவியின் றெம்மால்

நிணைய வும்முறை நிணைப்பவு
மரிதினி நீதி
புனித வுண்டியெம் முடனென
இராகவன் புகன்ருன்.

10266 (5) என்ற வாசகங் கேட்டந்த விருந்தவன் முதலோர்
நன்று நன்றுநின் கருணையென் றியாவரும் நவிலத்
துன்று தாரவன் பாதுகந் தலைக்கொண்டு தோன்றல்
ஒன்று கூறுவன் கேளெனா மாருதி யுரைக்கும்.

,, (6) செய்த மாதவ முடைமையின் நினக்கன்பு சேர்ந்து
பொய்யில் சாதனன் பூண்டனன் புண்டரீ கத்தின்
ஐய நின்னரு ளுண்டெனில் பின்றிடும் சேடம்
உய்யு மாறெனக் கருளுதியென் றிடவுத வினனுல்.

10297. இன்று நாம்பதி யேகுமுன்
★ மாருதி யீண்டச்
சென்று தீதின்மை செப்பியத்
தீமையும் விலக்கி
நின்ற காலையின் வருதுமென்
றேயின னெடியோன்
நன்றெ ஞவவன் மோதிரங்
கைக்கொடு நடந்தான்.

'இன்று நாம்பதி ஏகுமுன்
மாருதி! ஈண்டச்
சென்று தீது இன்மை செப்பி,
அத் தீமையும் விலக்கி
நின்ற காலையின் வருதும்' என்று
ஏயினன், நெடியோன்;
'நன்று' என, அவன் மோதிரம்
கைக்கொடு நடந்தான்.

பொ :— மாருதி, நாம் நமது அயோத்தி நகருக்குச் செல்லு முன், இன்று (நீ) விரைந்து சென்று, (பரதனுக்கு) நம்பால் தீது இல்லாமையைச் சொல்லி அங்கு நிகழும் தீமையும் நிகழா

வண்ணம் விலக்கி நீ நின்றபோது யாம் வருவேம் என்று இராமன் ஏவினுன்; (மாருதி) 'நன்று' என்று உடன்பட்டவனுய் அவ்விராமனுடைய மோதிரத்தைப் பெற்றுக்கொண்டு (அயோத்தி நோக்கி) நடந்தான்.

கு:— பரத்துவாசர் குடிலில் தங்கும் கடப்பாடு உள்ளமையால் இராமன் தனக்கு முன் அனுமனை ஏவித் தன்வரவினைப் பரதனுக்கு அறிவிக்கச் செய்தான் என்க. அன்ருேடு பதினுன்கு ஆண்டு முடிதலின் பரதன் முன் கூறிய வண்ணம் இராமனை வரக்காணுமையின் தீப்புகுதல் திண்ணம் என்ற எண்ணத்தால் 'அத்தீமையும் விலக்கி' என்ருன். தீமை என்றது, பரதன் தீப்புகும் தீமையை. நெடியோன் என்றது இராமனை. அனுமனைப் பரதன் முன்னறியாதவன் ஆகலின் தன் பெயர் எழுதிய மோதிரத்தை இராமன் அனுமன் கையில் அடையாளமாகக் கொடுத்தனுப்பினுன் என்க. ''இன்று சென்று நீ பரதனை யெய்திலை யென்னில், பொன்று மாலவன் எரியிடை யன்னது போக்க, வென்றி வீரநீபோதியால்'' (10236) எனத்தேவர்கள் வேண்டிக் கொண்டமையும் இங்கு நினைக. (202)

அனுமன் விரைந்து வான்வழிச் செல்லுதல்

10298. தந்தை வேகமுந் தனதுநா
யகன்தனிச் சிலையின்
முந்து சாயகக் கடுமையும்
பிற்பட முடுகிச்
சிந்தை பின்வரச் செல்பவன்
குகற்குமச் சேயோன்
வந்த வாசகங் கூறிமேல்
வான்வழிப் போனுன்.

தந்தை வேகமும், தனது
நாயகன் தனிச்சிலையின்
முந்து சாயகக் கடுமையும்,
பிற்பட முடுகி,

சிந்தை பின்வரச் செல்பவன்,
குகற்கும் அச்சேயோன்
வந்த வாசகம் கூறி, மேல்
வான்வழிப் போனான்.

பொ.— வாயுதேவனாகிய தந்தையின் வேகமும் தனது நாயகனாகிய இராமனது ஒப்பற்ற வில்லில் முற்பட்டுச் செல்கின்ற அம்பின் வேகமும் பிற்பட்டுத்தாழுமாறு விரைந்து தன் சிந்தையும் பிந்தும்படி முந்திச்செல்கின்ற அனுமன் (வழியில்) குகனுக்கும் 'சேய்மையில் சென்ற அந்த இராமன் வந்தான்' என்ற சொல்லைச் சொல்லிவிட்டுப் பின் வான்வழியே சென்றான்.

கு:— குகன் என்ற வேட்டுவ மன்னன் கங்கைக் கரையில் இராமனுக்கு நண்பன் ஆனான் என்ற செய்தியை முன் கேட்டறிந்துள்ள அனுமன் அக்குகனுக்கும் 'இராமன் வந்தான்' என்ற செய்தியைச் சொல்லிச் சென்றான் என்றவாறு. பரதனைப் போலவே இராமன் வருகையில் ஆர்வங்கொண்டவன் குகன் ஆதலின் விண்வழிச் செல்லும் அனுமன் குகனுக்காக இறங்கிச் சொல்லிவிட்டுப் பின் விண்வழிச் செல்வானானான் என்க. காற்றுத்தேவன் வேகத்தில் சிறந்தவன் ஆதலின் அவன்வேகத்தையும் இராமன்அம்பு மிக்க விரைவுடையதாகலின் அதன் வேகத்தையும் சொல்லி அவ்விரண்டு வேகமும் பிற்படுமாறு அனுமன் பரதனைக்காக்க விரைந்து சென்றான் என்றவாறு. இங்ஙனம் கூறியும் அமைதிபெறாத கவிஞர், அனுமன் தனது மனத்தின் வேகத்தினும் வேகமிக்கவனாகப் போனான் என்ற கருத்தால் 'சிந்தைபின் வரச் செல்பவன்' என்று புகழ்கின்றார். அருவாக உள்ள மனத்தினும் உருவாக உள்ள அனுமன் விரைகின்றான் என அவன் வேகத்தின் கடுமையைப் புலப்படுத்தியுள்ளார். (203)

47–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது:—

10298 (1) மாருதி விடைகொண் டேக
வரதனு மறையோன் பாதம்
ஆருளோடு நீட
வணங்கின னவனு மாசி

சீரிது கூறிச் சேறி
யென்றலும் மானஞ் சேர்ந்து
போரியல் தானை யோடும்
பொருக்கென வெழுந்து போனன்.

இங்குச் சில சுவடிகளில் காணப்படும் குகனைப்பற்றிக் கூறும் செய்யுட்கள் வருமாறு :—

4–ஆம் பிரதியில்,

10298 (2) உண்ணி லகலாத் துயரெய்தி
யுன்னைப் பிரியே னெனுங்குகனுக்
கென்னுந் தகைய வீரேழா
மாண்டில் வருவே மெனவிசைத்த
வண்ணங் கரியான் உலகளித்த
மலரோன் உலகில் வளர்ந்துருவ
நண்ணுங் கழலால் முன்னளித்தான்
நன்னீர்க் கங்கை நதிசேர்ந்தான்.

10298 (3) மானேர் விழியா ளுடனே வனமுன்
போனு னொருநாள் வருநா ளிலதோ
தேனே யமுதே தெளிவே தெளிவின்
ஊனே யுயிரே யுலகா ளுடையாய்.

,, (4) அம்பவளச் செவ்வா யணிகடகச் சேவகனை
வம்பவிழுஞ் சோலை கோசலநா டுடையவள்ளல்
எம்பெருமா னென்னை யிழிகுலத்து நாயேனைத்
தம்பியென வுரைத்த தாசரதி தோன்றுனே.

,, (5) வாழி மலைத்திண்டோள் சனகன்றன் மாமயிலை
ஏழுலக மாளு மிறைவன் மருமகளைத்
தாழ்வில் பெருங்குணத்தாள் தானுன் கொழுந்திநீ
தோழனென வுரைத்த தோன்றலார் தோன்றுரோ.

,, (6) துங்க விற்கரத் தோழனுர் சொன்ன நாள்
இங்கு வந்திலர் யானிறப் பேனென
மங்கை மாரும் படையும் வன்சுற்றமும்
அங்கு நீர்க்கங்கை யம்பியி லேற்றினன்.

வேறு

10298 (7) வேத நாதனும் வில்லியும் விரைமலர்த் திருவும்
ஏது செய்யினு மென்னுயிர் முடிப்பனென் றெண்ணி
ஓத நீரிடை யோடம துடைத்துயிர் விடுவான்
காத லாருடன் கங்கையி னடுவுறச் சென்றான்.

வேறு

,, (8) கண்ணுந் தோளும் வலந்துடிக் குங்கரை
வண்ணப் புள்ளும் வலியும் வலத்திலே
எண்ணுங் காலையி லேயெழில் மாருதி
அண்ணல் வந்தனன் என்றுரை யாடினன்.

,, (9) உள்ள வான்கிளை யேற்றி யுயர்குகன்
வெள்ளக் கங்கையி னுக்கி விரைந்தவண்
உள்ளு நெற்றி யுடைப்பள விற்புகும்
வள்ள லார்விடு மாருதி தோன்றினன்.

,, (10) ஓங்கு வாலினை யோட்டியவ் வோடங்கள்
தீங்கு ருவகைச் சுற்றிக் குறுகி நீர்
ஆங்கு நின்றங் கவைவலித் தானவை
தீங்கி லாவகை தென்கரை சேர்ந்தவால்.

வேறு

,, (11) கையார் வெஞ்சிலைக் கருணா
கரற்குக் காதலுடைத் தோழ
மையார் சிருங்க வேரபுர
முடையாய் மிகுகோ சலைகளிறு
மையார் நிறத்தான் வந்தொழிந்தான்
மிதிலை வல்லி யவளுடனே
ஐயா வந்தான் தம்பியொடு
மடியே முய்ய வந்தானே.

வேறு

,, (12) ஆருனை யுரையென வனுமன் கூறுவான்
சீரிய வாயுவின் தோன்றல் சீரியோய்
சூருடை யிராமற்குத் தூத னென்றுளது
ஏருடைத் தலையின்மே லெழுதப் பட்டுளேன்.

10298 (13) பரதனைத் தீயையும் விலக்கிப் பாருடை
வரதனை யிராமனை மாறிக் காண்பது
சரதமே யினியிறை தாழ்க்கொ ணாதெனக்
கரதலத் தாழியுங் காட்டிப் போயினான்.

71-ஆம் சுவடியில் கீழ்வரும் மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன :—

,, (14) நீறு கங்கையங் கரையிடை யிருந்தனன் மேன்மேல்
ஆறு போலநீர் ஓடுறுங் கண்ணின னகத்தில்
ஓறு மன்பினு னிராகவன் வருவன் என்றுரைத்தாய்
கூறு மெல்லையில் வந்தில னெனத்துயர் கொள்வான்.

,, (15) வேட னாகிய வென்னையோர் துணையென விரும்பு
மாடல் வெந்திற லிராகவன் வந்தில னாகில்
ஓட மேறியக் கங்கையில் வீழ்வனென் றுரைத்தம்
மாட ணைந்தனன் கண்டனன் மாருதி வலியான்.

,, (16) என்ன காரியம் நினைந்தனை
யிராகவ னின்பால்
சொன்ன நாட்டவ ருதுனைக்
கண்டிது சொல்ல
வென்னை யேவினன் பரத்துவ
னிடத்திலாங் கிருந்தான்
அன்ன வனிடம் செல்கென்றான்
அனுமனும் அவனும்.

### கவிக்கூற்று

10299. இன்றி சைக்கிட மாய விராகவன்
தென்றி சைக்கரு மச்செயல் செப்பினும்
அன்றி சைக்கு மரிய வயோத்தியில்
நின்றி சைத்துள தன்மை நிகழ்த்துவாம்.

இன்று இசைக்கு இடமாய இராகவன்
தென் திசைக் கருமச் செயல் செப்பினும்;
அன்று இசைக்கும் அரிய அயோத்தியில்
நின்று இசைத்துள தன்மை நிகழ்த்துவாம்.

பொ :— புகழுக்கு இடமாக விளங்கும் இராமன் தென்திசையில் சென்று செய்த செய்திகளை இப்போது சொன்னோம்; (இனி,) பகைவரும் புகழ்கின்ற, நெருங்கற்கு அரிய, அயோத்தியில் அவன் இருந்து நடத்திய தன்மைகளைச் சொல்வோமாக.

கு :—இன்று செப்பினும் என இயையும். அன்று—பகைமை; இசைத்தல் — புகழ்பாடுதல்; பகைவரும் புகழும் அயோத்தி; பகைவர் நெருங்குதற்கு அரிய அயோத்தி என்க. போர் இல்லாதது என்று பொருள்படும் 'அயோத்தி' என்ற வட சொல்லின் பொருளை விளக்கியவாறு. பகைவர்கள், அயோத்தி நகரத்தின் அழகையும் செல்வத்தையும் வீரத்தையுங் கண்டு புகழ்வார்களே அன்றி உள்ளே புகார் என்பார் 'அன்று, இசைக்கும், அரிய அயோத்தி' என்றார். அன்று என்னும் பண்பு இங்கு ஆகு பெயராய்ப் பகைவராகிய பண்பியை யுணர்த்தியது. நந்திக் கிராமம் அயோத்தியின் ஒரு பகுதியே யாதலின் அப்பெயராற் கூறினர். இச்செய்யுளோடு சில ஏடுகளில் மீட்சிப்படலம் முற்றுப் பெறுகிறது. சில சுவடிகளில் பரத்துவாசர் ஆசிரமப் படலம் முற்றுப்பெறுகிறது. (204)

### நந்தியம்பதியில் பரதன் 10300–10304

10300. நந்தி யம்பதி யின்றலை நாடொறும்
சந்தி யின்றி நிரந்தரந் தம்முனர்
பந்தி யங்கழற் பாத மருச்சியா
இந்தி யங்களை வென்றிருந் தானரோ.

நந்தியம் பதியின் தலை, நாள் தொறும்
சந்தி இன்றி நிரந்தரம், தம் முனர்
பந்தி அம் கழல் பாதம் அருச்சியா,
இந்தியங்களை வென்றிருந்தான் அரோ.

பொ :—நந்திக் கிராமத்தில் நாள் தோறும் இடையீடு இல்லாமல் எப்போதும் தம் அண்ணனாகிய இராமனது வரிசையாக அணிந்த அழகிய வீரக்கழலையுடைய திருவடிகளை அருச்சனை செய்துகொண்டு ஐம்பொறிகளையும் தத்தம் புலன்கள்மேல் செல்ல வொட்டாது அடக்கி வென்று அமர்ந்திருந்தான் (பரதன்).

கு :—சந்தி — இடையீடு. நிரத்தரம் — எப்போதும். எதிர் மறையானும் உடன்பாட்டானும் வற்புறுத்த வேண்டிச் சந்தி யின்றி எனவும் நிரந்தரம் எனவும் இருமுறை கூறியவாறு. தம் முனோர் என்றது இராமனை பந்தி — வரிசை ; கழலுக்கு அடை. வரிசையான கழல் என்க. இராமனது திருவடி நிலைகளை அருச் சிக்கும் புண்ணியச் செயலே இந்தியங்களை வெல்லும் ஆற்றலைப் பரதனுக்குக் கொடுத்தது என்ற கருத்தும் தோன்றுமாறு 'அருச் சியா இந்தியங்களை வென்றிருந்தான்' என்றார். இந்தியம்: மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஐம்பொறிகள். அவற்றை வெல்லுதலாவது அவை, சுவை, யொளி, யூறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புலன்கள்மேல் செல்லாமல் உள்ளத்தை ஒருவழிப் படுத்தி நிற்றல். அருச்சியா, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அருச்சியா இருந்தான் என இயையும். (205)

10301. துன்பு ருக்கவுஞ் சுற்றி யுருக்கொணு
என்பு ருக்குந் தகைமையி னீட்டத்தான்
முன்பு ருக்கொண் டொருவழி முற்றுரு
அன்பு ருக்கொண்ட தாமென லாகுவான்.

துன்பு உருக்கவும், சுற்றி உருக்கொணு
என்பு உருக்கும் தகைமையின் ஈட்டத்தான்,
முன்பு உருக்கொண்டு ஒருவழி முற்றுரு
அன்பு உருக்கொண்டது ஆம் எனல் ஆகுவான்.

பொ :—(இராமன் பிரிவாகிய) துன்பம் சூழ்ந்து உருக்குத லால், உருக்க இயலாத என்பையும் உருக்குகின்ற தன்மையில் வலிமை பெற்றவனாகிய பரதன், முன்பு ஓரிடத்திலும் ஒருகாலத் திலும் வடிவம்கொண்டு நிரம்பாத அன்பு என்னும் பண்பு ஒருவடி வம் கொண்டதாகும் என்று சொல்லலாம்படி இருப்பான்.

கு :—துன்பு சுற்றி உருக்க உருக்கொணு என்பும் உருக்கும் தகைமையின் ஈட்டத்தான் எனப் பிரித்துக் கூட்டுக. உருக்கவும் என்புழி உம்மையைப் பிரித்து 'என்பும்' எனக் கூட்டுக. என் பின் இயல்பு புலப்பட 'உருக்கொணு என்பும்' என்றார். உருக் கொணு என்பையும் உருக்குந் தன்மையில் பரதன் வலிமை பெற்ற வன் என்றதால், இராமனது பிரிவுத்துயரால் என்பும் உருகப் பெற்றிருந்தான் என்பது புலப்படுத்தியவாறு. இறைவனடியை இடைவிடாது நினைவார்க்கு அவனருளால் என்பும் உருகும்

என்பதை: ''என் என்பெலாம் உருக்கி எளிமையாய் ஆண்ட ஈசனே'' என்ற மணிவாசகர் திருவாக்காலும் அறியலாம். ஈட்டம் — வலிமை. ''ஈட்ட மொ டொருகணை யேவி'' (கந்தபு— தாரக—146) என்புழியும் இச்சொல் இப்பொருள் பட்டிருத்தல் காணலாம். உண்மை மட்டும் உணர்த்திப் பிழம்புணர்த்தப் படாதது அன்பு ஆகலின் 'முன்புருக் கொண்டொருவழி முற்றுரு அன்பு' எனச் சிறப்பித்தார். வடிவம் இல்லாத அன்பு வடிவு கொண்டது என்னும்படி பரதன் அன்புமிக்கிருந்தான் என்றவாறு. ''குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும்போல இதுகாண் அன்பு என்று தந்து காட்டலாகாது'' என்ற இறையனுர்களவியலுரைத் தொடர் இங்கு நினைவு கூர்தற்குரியது. ''அன்பென்ப தொன்றன் றன்மை அமரரும் அறிந்தது அன்ருல்'' (மருத்துமலைப் — 4) என முன் வந்துள்ளதும் நினையலாம். வழி என்பது காலம் இடம் என்ற இருபொருளையும் இங்கு உணர்த்தி நின்றது. (206)

10302. நினைக்க வுந்தடங் கண்ணிணை நீர்வர
இனத்த தண்டலை நாட்டிருந் தேயுமக்
கனத்த கந்தமுங் காயுங் கனிகளும்
வனத்த வல்ல வருந்தலில் வாழ்க்கையான்.

நினைக்கவும் தடங்கண் இணை நீர்வர
இனத்த தண்டலை நாட்டிருந்தேயும் அக்
கனத்த கந்தமும் காயும் கனிகளும்
வனத்த அல்ல அருந்தல்இல் வாழ்க்கையான்.

பொ:—(இராமன் வனத்தில் அருந்தும் உணவைப்பற்றி) நினைத்த அளவில் தன் பெரிய இருகண்களிலும் நீர் பெருகுதலால், தன் சுற்றத்தாராகிய இனத்தைக்கொண்டுள்ளதும் குளிர்ந்த சோலைகளால் சூழப்பட்டதும் ஆகிய நாட்டில் இருந்தும், அந்த இராமன் அருந்துகின்ற கனமான கிழங்குகளும், காய்களும், கனிகளும் ஆகிய வனத்தின்கண் கிடைப்பனவாகிய உணவு அல்லாதவற்றை (பிறமெல்லிய சுவைக்கினிய உணவை) அருந்துதல் இல்லாத வாழ்க்கையுடையவன்.

கு :—நினைத்தற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. அரசர்க்கு அரசனுப் அரியணையிலிருந்து அரச போகத்தைத் துய்த்தற்குரிய இராமன் உற்றுரை யில்லாத — ஊர் இல்லாத — குளிர்ந்த சோலைகள் இல்லாத—கடிய காட்டில் திரிந்து கிழங்கும் காயும் கனியும் உண்டு வாழ்கின்ருனே என நினைத்த அளவில் அன்புருவாய பரதன் கண்களில் துன்பக் கண்ணீர் பெருகா நிற்கும் என்பதும், அத்தகு துன்பமுடைய பரதன், சுற்றத்தாரோடு கூடியிருந்தும் சுற்றம் இல்லாதவனுகவும் குளிர்ந்த சோலை சூழ்ந்த நாட்டில் இருந்தும் வெவ்விய காட்டில் இருப்பவனுகவும் பாவனை செய்து கொண்டு, அக்காட்டில் வாழும் இராமன் அருந்துகின்ற கிழங்கும் காயும் கனியுமே அருந்துவதல்லது நாட்டில் எளிதில் கிடைக்கும் சுவைக்கினியதாகிய அடிசிலை அருந்தாத விரத வாழ்க்கையை மேற் கொண்டிருந்தான் என்பதும் புலப்படுத்தியவாறு. இனத்த நாடு, தண்டலை நாடு எனத் தனித்தனி இயையும். 'இனத்த' என்புழி அகரவிகுதி உடைமைப் பொருளதாகிய பெயரெச்ச விகுதி; 'காலகுருகு' என்புழிப் போல. வேண்டிய உணவு ஈண்டப் பெறுதற்குரிய தகுதியுடைமை புலப்படுத்தி நின்ற 'இனத்த தண்டலை' என்ற அடைகள், காட்டில் அவை இன்மையையும் புலப்படுத்தி நின்றன. நாட்டிருந்தேயும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. கனத்த கந்தம் என்றது, நெருப்பில் பக்குவப்படுத்தாமையால் மென்மைத் தன்மையின்றிக் கனமாக இருக்கின்ற கிழங்கு என்றவாறு. அக் கனத்த கந்தமும் என்புழிச் சுட்டு இராமனுக்கு உணவாகும் அக் கிழங்கும் காயும் கனிகளும் எனப் பொருள்பட்டு உவமப் பொருளதாயது. வனத்த, வினையாலணையும் பெயர். (207)

10303. நோக்கிற் றென்றிசை யல்லது நோக்குரன்
ஏக்குற் றேக்குற் றிரவி குலத்துளான்
வாக்கிற் பொய்யான் வரும்வரு மென்றுயிர்
போக்கிப் போக்கி யுழக்கும் பொருமலான்.

நோக்கின் தென்திசை
அல்லது நோக்குரன்;
ஏக்குற்று ஏக்குற்று, 'இரவி
குலத்து உளான்

வாக்கில் பொய்யான்;
வரும், வரும்' என்று உயிர்
போக்கிப் போக்கி,
உழக்கும் பொருமலான்;

பொ :—கண்களால் நோக்குவதாயின், இராமன் வருதற்குரிய தென்திசையை நோக்குவதன்றிப் பிறிதொன்றையும் நோக்காதவனாய் ஏங்கி ஏங்கி, 'சூரியகுலத்துத் தோன்றிய இராமன் தான் சொன்ன சொல்லில் தவறமாட்டான்; (முன் சொன்ன வண்ணமே) வருவான், வருவான்' என்று எண்ணி நெட்டுயிர்ப்பு விட்டுவிட்டு வருந்தும் துன்பத்தை யுடையவன்.

கு :—இராமன் அயோத்திக்குத் தென்திசையிலுள்ள வனத்திற்கே சென்றுளான் ஆதலின் அவன் வருந்திசையாகிய தென் திசையையே பரதன் நோக்குவானானான். ''சுருதி நாயகன் வரும்வரும் என்பதோர் துணிவால் கருதி மாதிர மனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்'' (காட்சிப்-9) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். ஏக்குறல்—விரும்பியதைப் பெருமையால் மனம் வாடுதல். சூரியன் வாய்மைக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவன் ஆதலின் அவன் வழிவந்த அரசர்கள் வாய்மை தவறார் என்ற கருத்தால் 'இரவி குலத்துளான் வாக்கிற் பொய்யான்' என்று துணிவானானான். உயிர் என்றது, உயிர்ப்பினை. வருத்த மிகும்போது நெடு மூச்சு விடுதல் இயல்பாதல் காணலாம். தந்தையின் சொற்படி வனத்தில் பதினான்காண்டு கழித்து வந்து அரசு ஏற்பதாக முன்பு இராமன் கூறிச் சென்றானாகலின் அச்சொல் தவறாமல் வருவான் என்பது பரதன் எண்ணம். (208)

10304. உண்ணு நீர்க்கு
முயிர்க்கு முயிரவன்
எண்ணுங் கீர்த்தி
யிராமன் றிருமுடி
மண்ணு நீர்க்கு
வரம்புகண் டாலன்றிக்
கண்ணி னீர்க்கொர்
கரையெங்கும் காண்கிலான்.

உண்ணும் நீர்க்கும் உயிர்க்கும் உயிரவன்,
எண்ணும் கீர்த்தி இராமன், திருமுடி
மண்ணும் நீர்க்கு வரம்பு கண்டால் அன்றி
கண்ணின் நீர்க்குஓர் கரை எங்கும் காண்கிலான்.

பொ:—எல்லா உயிர்களும் உண்ணுதற்குரிய நீர்க்கும், எல்லா உயிர்கட்கும் உயிர்போன்றவனுய் எல்லாராலும் மதிக்கத் தக்க கீர்த்தியினையுடைய இராமனது திருமுடிமேல் மஞ்சனமாட்டும் நீரின் முடிவைக் கண்டபின் அன்றித் தன்கண்ணீர்க்கு முடிவு எவ்விடத்தும் காணப் பெருதவன்.

கு:—இராமன் திருமுடி சூடினுலன்றிப் பரதன் துன்பம் நீங்காது என்பது கருத்து. நீர்க்குரிய அதிதெய்வம் திருமாலே யாதலின் நீர்க்கும் உயிரவன் என்றும், உயிர்தொறும் அந்தர்யாமியாய் அவன் கலந்திருத்தல் பற்றி 'உயிர்க்கும் உயிரவன்' என்றும் கூறினர். ''கற்றவர் கற்றிலாதவரும் உண்ணு நீரினும் உயிரினும் அவனையே உவப்பார்'' (அயோத்தி - மந்திரப்–39) என்று வசிட்ட முனிவர் முன்பு கூறியதும் இக்கருத்தினுலேயே யாம். திருமுடி மண்ணுநீர் என்றது, திருமுடி சூட்டத் திருமஞ்சன மாட்டும் நீரினை. ''எண்ணும் நீர் நான்மறையோர் எரி முன் நின்மேற்சொரிய மண்ணும் நீராய் வந்த புனலை'' (நகர் நீங்கு–55) என்றதும் இங்கு நினைக்கத் தகும். நீர்க்கு என்பது உருபு மயக்கம். நீரின் வரம்பு என்க. பரதன் கண்ணீர் நிற்பதற்கு இராமன் திருமுடி புனைதலன்றிப் பிறிதொரு வழியும் இல்லை என்பார் 'கண்ணினீர்க்குக் கரை எங்குங் காண்கிலான்' என்ருர். நீர் என்றதற்கேற்பக் கரை கூறினர்; கரை என்பது இங்கு முடிவு என்னும் பொருளில் வந்தது. (209)

பரதன் இராமன் வருநாளை நினைத்தல்

10305. அனைய னாய பரத னலங்கலிற்
புனையுந் தம்முனர் பாதுகைப் பூசனை
நினையுங் காலை நினைத்தன னமரோ
மனையின் வந்தவ னெய்த மதித்தநாள்.

அனையன் ஆய பரதன், அலங்கலின்
புனையும் தம்முனர் பாதுகைப் பூசனை

நினையும் காலை, நினைத்தனனும் அரோ
மனையின் வந்து அவன் எய்த மதித்தநாள்.

பொ :—அத்தகைய தன்மைகளை உடையவனாகிய பரதன், மலர்மாலைகளால் புனைதற்குரிய தம் அண்ணனுடைய பாதுகைக்குச் செய்யும் பூசனையை நினைவுகூர்ந்தபொழுது அவ்விராகவன் அரண்மனைக்கு வரக் கருதிய நாளைப் பற்றிச் சிந்தித்தான்.

கு :—10300ஆம் செய்யுளிலிருந்து கூறிய தன்மைகளையெல்லாம்சுட்ட 'அனையனாய பரதன்' என்றார். பூவைக்கொண்டு செய்யப்படுவது பூசனை என்பது புலப்பட 'அலங்கலிற்புனையும் ...... பூசனை' என்றார். நாள்தோறும் இராமனுடைய பாதுகைக்குப் பூசனை செய்வதைப் பரதன் சிறந்த கடமையாகக் கொண்டுளான் என்பது இதனால் புலனாம். மதித்தல்—கருதுதல். மதித்த நாள் நினைத்தனன் என இயையும். மனை என்றது அரண்மனையை. (210)

*இராமன் வரவேண்டிய நாள் இன்றுதான் என்று சோதிடர் பரதனுக்குக் கூறுதல்*

10306. யாண்டு வந்திங் கிறுக்குமென் றெண்ணினான்
மாண்ட சோதிட வாய்மைப் புலவரை
ஈண்டுக் கூய்த்தரு கென்னவந் தெய்தினார்
ஆண்ட கைக்கின் றவதியென் றாரரோ.

யாண்டு வந்து இங்கு
இறுக்கும் என்று எண்ணினான்,
'மாண்ட சோதிட
வாய்மைப் புலவரை
ஈண்டுக் கூய்த்தரு கென்ன,
வந்து எய்தினார்,
'ஆண்தகைக்கு இன்று
அவதி' என்றார் அரோ.

பொ :—(இராமன்) எப்பொழுது இங்குவந்து சேர்வான் என்று எண்ணிய பரதன் (ஏவலாளரை நோக்கி) 'மாட்சிமையுடைய சோதிடக்கலை வல்ல உண்மைப் புலவரை இங்கு அழைத்து

வருக’ என்று கட்டளையிட, (அக்கட்டளையை அறிந்து அங்கு) வந்தடைந்த சோதிடப் புலவர், (பரதன் வினாவிற்கு விடையாக) ‘ஆண்தன்மை வாய்ந்த இராமனுக்கு இன்றுதான் (பதினான்கு ஆண்டு முடியும்) எல்லையாகிய நாள்’ என்று கூறினார்கள்.

கு:—யாண்டு என்பது காலப் பொருள் உணர்த்தியது. இறுத்தல் இங்குச் சேர்தலை உணர்த்தியது. மாண்ட—மாட்சிமைப்பட்ட. சோதிடக்கலைக்கு அடை. புலவர்க்கு அடையாக்கலும் ஆம். எண்ணினான் வினையாலணையும் பெயர் எய்தினார் ஆகிய சோதிடர் என வினையாலணையும் பெயராக்குக. அவதி—எல்லை. (211)

குறித்த நாளில் இராமன் வாராமைக்கு வருந்திச் சிந்தித்தல் 10307–10311

10307. என்ற போதத் திராமன் வனத்திடைச்
சென்ற போதத்த தவ்வுரை செல்வத்தை
வென்ற போதத்த வீரனும் வீழ்ந்தனன்
கொன்ற போதத் துயிர்ப்புக் குறைந்துளான்.

என்ற போதத்து, இராமன் வனத்திடைச்
சென்ற போதத்தது அவ் உரை, செல்வத்தை
வென்ற போதத்த வீரனும் வீழ்ந்தனன்,
கொன்ற போதத்து உயிர்ப்புக் குறைந்துளான்.

பொ:—என்று சோதிடர்கள் கூறியபோது, அரசசெல்வத்தை விரும்பாது வென்ற ஞானத்தையுடைய வீரனாகிய பரதனும், இராமன் வனத்திடையே சென்றபோது (தனக்குக் கூறியதாகிய) அந்தச் சொல் தன்மனத்தில் தோன்றி மிகவும் வருந்திய போது உயிர்ப்புக் குறைந்து தரையில் வீழ்ந்தனன்.

கு:—தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத் தீவினை யென்ன நீத்த உண்மைஞானமுடையவன் பரதன் ஆகலின் ‘செல்வத்தை வென்ற போதத்த வீரனும்’ என அவனைக் குறித்தார். பரதனை வீரன் என்றது, ஞானத்தால் வந்த வீரமுடைமைபற்றி. இராமன் வனத்திடைச் சென்ற போதத்தது அவ்வுரை கொன்ற போதத்து உயிர்ப்புக் குறைந்துளானாய் வீழ்ந்

தனன் என இயையும். ''ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலங் கோமுறை புரிகிலை யென் னிற் கூரெரி சாமிது சரதம் நின்னுணை சாற்றினேன்'' (திருவடி சூட்டு–134) என்று பரதன் கூறியபோது இராமன் 'அன்னதாக' என உடன்பட்டுக் கூறியதையே 'இராமன் வனத்திடைச் சென்ற போதத்தது அவ்வுரை' என்றார். கொல்லுதல் இங்கு வருந்து தலை யுணர்த்தியது. 'சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்பு போற் சொல்லப் பயன்படுங் கீழ்' (குறள்–1078) என்புழியும் இச் சொல் இப்பொருள்படுதல் காணலாம். அவ்வுரையின் வண்ணம் அவன் வாராமையின் பரதன் வருந்தினன் என்பதே கருத்து. குறைந்துளானாய் வீழ்ந்துளான் என முற்றெச்சமாக்கி முடிக்க. (212)

10308. மீட்டெ ழுந்து விரிந்த செந்தாமரைக்
காட்டை வென்றெழு கண்கலு ழிப்புனல்
ஓட்ட வுள்ளம் வுயிரினை யூசனின்
ருட்ட வும்மவ லத்தழிந் தானரோ.

மீட்டு எழுந்து, விரிந்த செந்தாமரைக்
காட்டை வென்று எழுகண் கலுழிப்புனல்
ஓட்ட, உள்ளம் உயிரினை ஊசல் நின்று
ஆட்டவும், அவலத்து அழிந்தானரோ.

பொ :—(மூர்ச்சித்துத் தரையில் விழுந்த பரதன்) மீண்டும் எழுந்து, விரிந்த செந்தாமரை மலரின் தொகுதியை வென்று உயர்ந்த கண்கள் கலங்கிய நீரைச் சொரியவும், உள்ளம் (இரு பாற்பட்டுநின்று) உயிரினை ஊசல்போல (ஒருநிலையில் நில்லாத படி) ஆட்டவும் துன்பத்தால் நிலை கலங்கினன்.

கு :—எழுந்து அழிந்தான் எனஇயையும். ஆட்டவும் என்புழி யுள்ள உம்மை ஓட்டவும் என்புழியும் இயையும். பரதன் இராமனை நிகர்த்தவனாதலின் அவன் கண்களையும் 'விரிந்த செந்தாமரைக் காட்டை வென்றெழு கண்' எனப் புகழ்வாராயி னர். 'இராமன் இனிவாரான்' என்று உள்ளம் எண்ணும்போது உயிர் ஒடுங்குதலும், 'வருவான்' என்று எண்ணும்போது கிளர் தலும் உடையதாய் உள்ளத்தின் வழி உயிர் திரிவது நினைந்து

'உள்ளம் உயிரினை ஊசல் நின்று ஆட்டவும்' என்றார். ஊசல் ஒருநிலையில் நில்லாது முன்னும் பின்னும் சென்று வருதல்போல உயிரும் ஒடுங்கியும் கிளர்ந்தும் நிலைவேறுபடுதலின் அதற்கு ஊசல் உவமையாயிற்று. ஆட்டுதற்கு வினைமுதல் உள்ளம்; ஆடுதற்கு வினைமுதல் உயிர். அவலம் — துன்பம். (213)

10309. எனக்கி யம்பிய நாளுமெ னின்னலும்
தனைப்ப யந்தவள் துன்பமுந் தாங்கியவ்
வனத்து வைகல்செய் யான்வந் தடுத்ததோர்
வினைக்கொ டும்பகை யுண்டென விம்மினான்.

'எனக்கு இயம்பிய நாளும் என் இன்னலும்,
தனைப் பயந்தவள் துன்பமும், தாங்கி, அவ்
வனத்து வைகல் செய்யான்; வந்து அடுத்தது ஓர்
வினைக் கொடும்பகை உண்டு' என விம்மினான்.

பொ:—'எனக்கு இராமன் வருவதாகச் சொன்ன நாளையும் (அவன் பிரிவால் உளதாகிய) என் துன்பத்தையும் தன்னைப் பெற்ற கோசலை படும் துன்பத்தையும் மனத்துக் கொண்டு அந்தக் கொடிய வனத்தில் தங்கமாட்டான்; (அவனை வரவொட்டாது) இடையே வந்து அடுத்ததொரு வினையாலாய கொடிய பகை உண்டு' என்று தேம்பியழுவானானான் பரதன்.

கு:—தாங்குதல்—மனத்துட்கொள்ளுதல். தான் சொன்ன ஈரேழாண்டு எல்லையையும் அவன் பிரிவால் உளதாய என் இன்னலையும் தாயின் துன்பத்தையும் இராமன் மறப்பவன் அல்லன்; இம்மூன்றையும் மனத்துட்கொண்ட அவ் இராமன் தங்குதற் கேலாத கொடிய வனத்தில் தங்கும் இயல்பினன் அல்லன்; எனவே அவன் கூறிய நாளில் வராமைக்குக் காரணம் இடையில் அடுத்த கொடும்பகை உண்மையே எனத்தெளிந்து அது நினைந்து பரதன் விம்முவானானான் என்க. பரதன் இங்கு எண்ணியபடியே இராமனுக்கு இராவணனது கொடியபகை இடையே வந்து அடுத்திருந்ததும் நினைக. இதனால் பரதனது சித்தனையின் சிறப்புப் புலனாதல் காண்க. அவ்வனம் என்றசுட்டு நெஞ்சறி சுட்டாய் அதன் கொடுமை புலப்படுத்தி நின்றது. விம்முதல்—தேம்பியழுதல். (214)

10310. மூவ கைத்திரு மூர்த்திய ராயினும்
பூவ கத்தில் விசும்பிற் புறத்தினில்
ஏவர் கிற்ப ரெதிர்நிற்க வென்னுடைச்
சேவ கற்கென வையமுந் தேறினன்.

மூவகைத் திருமூர்த்தியர் ஆயினும்,
பூவகத்தில், விசும்பில், புறத்தினில்,
ஏவர்கிற்பர் எதிர்நிற்க, என்னுடைச்
சேவகற்கு? என ஐயமும் தேறினன்.

பொ :—என்னுடைய அண்ணனாகிய வீரனுக்கு எதிர்நின்று போர்செய்ய, அயன், அரி, அரன் என்ற சிறந்த மும்மூர்த்திய ராயினும், பூவுலகத்திலும் விண்ணுலகத்திலும், இவற்றிற்குப் புறம்பான பாதலத்திலும் (உள்ளவர்களாயினும்) எவர் வலிமை யுடையவர்? எவரும் இலர், என முன்பு கொண்ட ஐயமும் தெளியப்பெற்றவனானான்.

கு :—என்னுடைச் சேவகற்கு எதிர்நிற்க ஏவர் கிற்பர்? என இயையும். எவரும் எதிர்நின்று போர்செய்து வெல்ல முடியாத படி பேராற்றல் படைத்தவன் இராமன் என்றவாறு. 'கில்' ஆற்றல் உணர்த்தும் இடைச்சொல்; அச்சொல்லின் அடியாகக் 'கிற்பர்' என்ற குறிப்பு வினைமுற்றுத் தோன்றிற்று. ''வருக வென்று பணித்தனை வானுளோர்க் கொருவனே கிற்றிலேன் கிற் பன் உண்ணவே'' (திருவாசகம்–45) என்புழி எதிர்மறையிலும் உடன்பாட்டிலும் இச்சொல் பயின்றிருத்தல் காணலாம். 'எதிர் நிற்க ஏவர் கிற்பர்' என்றது, எவரும் எதிர்நின்று போர்செய்து வெற்றிபெற வலியவரல்லர் என்ற கருத்தினதாகும். முன் நினைத்த வண்ணம் இடையே கொடும்பகை வந்து அடுத்த தாயினும் அப்பகையால் நலிவுறும் மெலியன் அல்லன் இராமன் என்ற உணர்வு, பகையால் இராமன் வரவு தடைபட்டதோ என்ற முன்னைய ஐயத்தைப் போக்கப் பரதன் தெளிவுற்றான் என்க. சேவகன்—வீரன். உரிமை அன்பால் 'என்னுடைச் சேவகன்' என்றான். தேறுதல்—தெளிதல். (215)

10311. என்னை யின்னு மரசிய லிச்சையன்
அன்ன னாகி னவனது கொள்கவென்

றுன்னி ளுன்கொ லுறுவது நோக்கினுன்
இன்ன தேநல னென்றிருந் தானரோ.

'என்னை, "இன்னும் அரசியல் இச்சையன்
அன்னன் ஆகின், அவன் அது கொள்க" என்று
உன்னினுன்கொல், உறுவது நோக்கினுன் ?
இன்னதேநலன்' என்று இருந்தானரோ.

கு :—(பதினுன்கு ஆண்டு கழிந்தபின்) தான் மேற்கொள்ளத் தக்க செயலைச் சிந்தித்தவனுன இராமன், என்னைப் பற்றி, 'அப்பரதன் இன்னும் அரசியலில் இச்சையுடையவன் ஆனுல், அவன் அவ்வரசை இனிமேலும் கைக்கொண்டு ஆள்வானுக' என்று எண்ணினவனுய்க் காட்டில் வாழும் இவ்வாழ்வே நல னுடையது என்று அக்காட்டில் இருந்து விட்டானே ?

கு :—என்றிருந்தான் கொலோ எனப் பின் கூட்டுக. உன் னினுன், முற்றெச்சம் ; உன்னினுனுய் இருந்தான் கொலோ என்க. உறுவது நோக்கினுன், வினைப்பெயர்; இராமனை உணர்த்தியது. இன்னது என்றது காடுபதியாக வாழ்கின்ற வாழ்க்கையை. அன்னன் இன்னும் அரசியல் இச்சையன் ஆகின் என இயையும். மேல் பகைவரால் தடுக்கப்பட்டானே என்ற ஐயத்தை அவ்விராமனது பேராற்றல் நினைந்து களைந்த பரதன், மேலும் ஓர் ஐயத்தை வருவித்துக் கொள்கின்ருன் என்க. பதி னுன்கு ஆண்டுகள் ஆண்ட பரதனுக்கு அந்த அரசில் ஆசை யிருக்கும் என்று இராமன் எண்ணியிருக்கலாம் போலும் என்ற ஐயமே அது. (216)

பரதன் உயிர் துறக்க எண்ணுதல்.

10312. அனைத்து மங்கொன்று மாயினு மாகுக
வனத்தி ருக்கவிவ் வையம் புகுதுக
நினைத்தி ருந்து நெடுந்துயர் மூழ்கிலேன்
மனத்து மாசென் னுயிரொடும் வாங்குவேன்.

'அனைத்தும் அங்கு ஒன்றும் ஆயினும் ஆகுக ;
வனத்து இருக்க: இவ் வையம் புகுதுக

நினைத்திருந்து நெடுந்துயர் மூழ்கிலேன்;
மனத்து மாசு என் உயிரொடும் வாங்குவேன்.

பொ :—(இராமன் குறித்த இந்நாளில் வாராமைக்கு) யான் நினைத்த அனைத்தும் காரணம் ஆயினும் ஆகுக: அல்லது அவற்றுள் ஏதோ ஒன்று காரணம் ஆயினும் ஆகுக; அவ்விராமன் காட்டிலேயே யிருக்கட்டும்; அல்லது இந்நாட்டிற்குத் தான் இனி வரட்டும்; யான் இதுபற்றியே நினைத்திருந்து நெடிய துயரக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்க மாட்டேன்; என்மனத்தில் உள்ள துன்பத்தினை என் உயிரோடு வாங்கி விடுகின்றேன்.

கு :– இதுகாறும் இராமன் வாராமைக்குரிய காரணங்களாகப் பரதன் எண்ணிய அனைத்துமோ அல்லது அவற்றுள் ஒன்றோ உண்மைக் காரணம் ஆயினும் ஆகுக; இனி, அதுபற்றி நினைந்து வருந்திப் பயனில்லை என்றவாறு. வையம் என்றது கோசல நாட்டை. குறிப்பிட்ட காலம் கடந்து இராமன் இந்நாட்டில் புகுந்தாலும் புகலாமே என்று பொறுத்திருக்கப் போவதில்லை என்பது கருத்து. மாசு என்றது இங்குத் துன்பத்தினை. உயிர் இருக்கும் வரையில் இத்துன்பம் நீங்காது ஆதலின் 'மனத்து மாசென் உயிரொடும் வாங்குவேன்' என்றான். மூழ்குதலாகிய வினை கூறப்பட்டமையின் துயர் என்பது துயர்க்கடல் என்ற குறிப்பால் கூறியதே என்பது புலனும். இது குறிப்புருவகம். (217)

சத்துருக்கனை அழைத்தல்

10313. என்னப் பன்னி
யிளவலை யென்னுழைத்
துன்னச் சொல்லுதி
ரென்றலுந் தூதர்போய்
உன்னைக் கூயின
னும்மு னெனுமுனம்
முன்னர்ச் சென்றனன்
மூவர்க்கும் பின்னுளான்.

என்னப் பன்னி, 'இளவலை என் உழைத்
துன்னச் சொல்லுதிர்' என்னலும், தூதர்போய்,

'உன்னைக் கூயினன், உம்முன்' எனா முனம்,
முன்னர்ச் சென்றனன், மூவர்க்கும் பின் உளான்.

பொ :—(பரதன்) எனப் பலவகையாகச் சொல்லிவிட்டு, (தூதரை நோக்கி) 'என் தம்பி சத்துருக்கனை என்னிடம் வரச் சொல்லுங்கள்' என்று கூறிய அளவில், தூதர் அவ்வாறே சென்று (சத்துருக்கனை அணுகி) 'உம் அண்ணன் உன்னை அழைத்தான்' என்று சொல்லிய அளவில் (இராமன் இலக்குவன் பரதன் என்ற) மூவர்க்கும் பின் பிறந்தவனாகிய சத்துருக்கன், பரதன் முன் சென்று சேர்ந்தான்.

கு :—சொன்னவுடன் சத்துருக்கன் புறப்பட்ட விரைவு புலப்படுத்த வேண்டி 'எனாமுனம்' என்றார். என்று சொல்லி முடித்தற்கு முன்னமே புறப்பட்டான் என்றவாறு முரண் தொடை அமையப் பின்னுளான் முன்னர்ச் சென்றனன் என்றார். (218)

வந்த சத்துருக்கனிடம் பரதன் வரம் வேண்டுதல்

10314. தொழுது நின்றதன் தம்பியைத் தோய்கணீர்
எழுது மார்பகத் திறுகத் தழுவினான்
அழுது வேண்டுவ துண்டைய வவ்வரம்
பழுதில் வாய்மையி னாய்த்தரற் பாற்றென்றான்,

தொழுது நின்ற தன்
தம்பியைத் தோய்கணீர்
எழுது மார்பகத்து
இறுகத் தழுவினான்
அழுது, 'வேண்டுவது உண்டு
ஐய! அவ்வரம்,
பழுதுஇல் வாய்மையினாய்!
தாற்பாற்று' என்றான்.

பொ :—(பரதன்) தன்னைத் தொழுது நின்றதன் தம்பியைத் தோய்ந்த கண்ணீரால் எழுதப்பட்டுள்ள தன் மார்பில் இறுகத் தழுவினவனாய் அழுது கொண்டே 'ஐய! குற்றமற்ற வாய்மை

யிணை யுடையவனே! யான் வேண்டுவதொரு வரம் உண்டு; அவ்வரம் நீ தரும் தன்மையது' என்றான்.

கு:—எப்போதும் பெருகி வழிகின்ற கண்ணீரால் சுவடு பட்டுக் கிடந்த மார்பினைத் 'தோய்கணீர் எழுது மார்பகம்' என்றார். எழுதினாற்போலக் கண்ணீர் வரிகளையுடைய மார்பு என்பது கருத்து. இதனால் பரதனுடைய இராமனைப் பிரிந்து ஆற்றாத நிலைமையை விளக்கியவாறு. வரம் கொடுத்துப் பின் பிறழாதவன் என்ற கருத்துப் புலப்பட 'பழுதில் வாய்மையினாய்' என்று விளித்தான். கொடுக்கத் தகாத வரம் அன்று என்பான், 'தரற்பாற்று' என்றான். (219)

10315. என்ன தாகுங்கொ லவ்வர மென்றியேல்
சொன்ன நாளி லிராகவன் றோன்றிலன்
மின்னு தீயிடை யானினி வீடுவென்
மன்ன னாதியென் சொல்லை மறுதென்றான்.

'"என்னது ஆகும் கொல், அவ்வரம்?" என்றியேல்,
சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்;
மின்னு தீயிடை யான் இனி வீடுவென்;
மன்னன் ஆதி; என் சொல்லை மறுது' என்றான்.

பொ:—அவ்வரம் எதுவோ என்று கேட்பாயாயின் (சொல்கின்றேன்;) இராமன் தான் சொன்ன (பதினான்கு ஆண்டு முடிந்த) நாளில் இங்குவரவில்லை; ஆதலின், யான் இனி மின்னுகின்ற தீயில் விழுந்து உயிர்விடுவேன்; என்சொல்லை மறுக்காமல் நீ அரசன் ஆவாயாக' என்று விளம்பினான்.

கு.—பரதன் கேட்கும் வரம் எத்தகையதோ? என்று சிந்தனையில் ஆழ்ந்திருந்த சத்துருக்கனது மெய்ப்பாட்டையுணர்ந்த பரதன், அவ்விளவலின் கேள்வியையும் தானே வினவிப் பதில் கூறுகின்றான். தாயுரை கொண்டுதாதை உதவிய தரணியைத்தான் மறுத்தது போலத் தன்னிளவலும் மறுப்பான் என்பதை யுளங்கொண்டே 'என் சொல்லைமறுது மன்னன்ஆதி' என்றான் என்க. தனக்குப்பின் வையகம் மன்னனையின்றி மறுகுமே என்ற இரக்க வுணர்ச்சியால் தன் தம்பியை அரசேற்குமாறு வேண்டுவானானான் பரதன் என்க. (220)

கேட்ட சத்துருக்கன் வருந்திச் சொல்லுதல் 10316—10319.

10316. கேட்ட தோன்றல் கிளர்தடக் கைகளால்
தோட்ட தன்செவி பொத்தித் துணுக்குரு
ஊட்டு நஞ்சமுண் டானொத் துயங்கினன்
நாட்ட மும்மன முந்நடுங் காநின்ருன்.

கேட்ட தோன்றல் கிளர்தடக் கைகளால்
தோட்ட தன் செவி பொத்தி, துணுக்குரு,
ஊட்டு நஞ்சம் உண்டான் ஒத்து உயங்கினன்;
நாட்டமும் மனமும் நடுங்கா நின்ருன்.

பொ:—(பரதன் சொன்னதைக்) கேட்ட சத்துருக்கன் விளக்கமுடைய பெரிய கைகளால் துளையுடைய தன்செவிகளை மூடிக்கொண்டு திடுக்கிட்டு பிறரால் ஊட்டப்பட்ட நஞ்சினை உண்டவன் போன்று வருந்தினவனுய்க் கண்ணும் மனமும் நடுங்கா நின்ருன்.

கு:—கேட்கத் தகாதவற்றைக் கேட்க நேர்ந்தமையால் சத்துருக்கன் செவிகளைக் கைகளால் மூடிக்கொண்டான் என்க. கேள்வியால் தோட்கப்பட்ட செவியாதலின் 'தோட்ட தன் செவி' எனச் சிறப்பித்தார். ப்ரதனது சொல்லைக் கேட்ட வருத்தத்தின் மிகுதி புலப்படுத்த 'நஞ்சமுண்டானொத்து உயங்கினன்' என்ருர். பரதன் சொல் சத்துருக்கனுக்கு நஞ்சுபோன்று இருந்தது என்றவாறு. நாட்டம் — கண். (221)

10317. விழுந்து மேக்குயர் விம்மலன் வெய்துயிர்த்
தெழுந்து நானுனக் கென்ன பிழைத்துளேன்
அழுந்து துன்பத்தி னுயென்ற ரற்றினன்
கொழுந்து விட்டு நிமிர்கின்ற கோபத்தான்.

விழுந்து, மேக்கு உயர்
விம்மலன், வெய்து உயிர்த்து,
எழுந்து, 'நான் உனக்கு
என்ன பிழைத்துளேன்?

அழுந்து துன்பத்தினுய்!'
என்று அரற்றினுன்
கொழுந்து விட்டு
நிமிர்கின்ற கோபத்தான்.

பொ :—(கண்ணும் மனமும் நடுங்கிய சத்துருக்கன் தரையில் சோர்ந்து) விழுந்து மேலெழுகின்ற விம்முதலையுடையனுய் வெப்பமாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு எழுந்து, கொழுந்து விட்டு எரிகின்ற கோபத்தையுடையவனுய், (பரதனை நோக்கி) ''துன்ப வெள்ளத்தில் அழுந்தியிருக்கும் அண்ணு! நான் உனக்கு என்ன பிழை செய்தேன்'' என்று அரற்றினுன்.

கு :—தனக்கு ஏலாத அரசை ஏற்குமாறு சொன்ன பரதன் சொல்லைக் கேட்டு மேலும் மேலும் சத்துருக்கனுக்குக் கோபம் பொங்கியது என்பார், 'கொழுந்து விட்டு நிமிர்கின்ற கோபத்தான்' என்ருர். செய்யத்தகாத செயலைச் செய்யச் சொல்லும் தண்டனை பிழை செய்தார்க்கே கொடுக்கத்தக்கது, 'அத்தண்டனையை எனக்குக் கொடுக்க யான் செய்த பிழையென்னை?' என்பது சத்துருக்கன் வினு. துன்பத்தில் அழுந்தியிருத்தலால் பரதன் இவ்வாறு கூறினுன்போலும் என்ற கருத்துப் புலப்பட 'அழுந்து துன்பத்தினுய்' என்ற வினு அமைந்துள்ளமை காணலாம். (222)

10318. கானுள நிலமகளைக் கைவிட்டுப்
★ போனுனைக் காத்துப் பின்பு
போனுனு மொருதம்பி போனவன்தான்
வருமவதி போயிற் றென்னு
ஆனுத எரிபுகவென் றமைவானு
மொருதம்பி யயலே நாணுது
யானுமிவ் வரசாள்வெ னென்னேயிவ்
வரசாட்சி யினிதே யம்மா.

கான்ஆள நிலமகளைக் கைவிட்டுப்
போனுனைக் காத்துப் பின்பு
போனுனும் ஒருதம்பி; ''போனவன்தான்
வரும் அவதி போயிற்று'' என்னு

ஆனாத எரிபுக என்றுஅமைவானும்
ஒருதம்பி; அயலே நாணாது,
யானும் இவ் அரசு ஆள்வென்?
என்னே, இவ் அரசாட்சி! இனிதேஅம்மா.

பொ :—தான் ஆளவேண்டிய இராச்சியத்தைக் கைவிட்டுக் காட்டையாளச் சென்ற இராமனைப் பாதுகாத்துக் கொண்டு அவன் பின்பு போனவனும் ஒரு தம்பி; காட்டுக்குப் போனவன் தான் வரும் கால எல்லை கடந்து விட்டது என்று (வருந்தி) குறையாத தீயில் விழவேண்டும் என்று அமைபவனும் ஒருதம்பி; (இவர்களுடன் பிறந்த ஒரு தம்பியாகிய) யான், இவர்கட்குப் பக்கத்தே இருந்தும் நாணமில்லாமல் இந்த அரசு ஆள்வேனும்! என்னே வியப்பு! இந்த அரசாட்சி (உடன் பிறப்பைவிட) இனியதோ?

கு :—இலக்குவனும் பரதனும் இராமனுக்குத் தம்பியர் என்ற உரிமை அன்பினை அவனோடு காட்டுக்குப் போனதாலும், அவ் விராமன் வரும் கால எல்லை கடந்தது என்று எரிபுக அமைந்ததாலும் காட்டி நிற்க, அவர்களுடன் பிறந்த யான் மட்டும் எவ்வகையிலும் உடன் பிறப்பின் அன்பைக் காட்டாமல் நாணமில்லாமல் அரசாள்வது தகுமோ? இவ்வரசாட்சி உடன் பிறப்பினும் இனியதோ? என்று சத்துருக்கன் வெறுத்துக் கூறிய வாறு. 'முன்னைத் தம்பியர் இருவர்க்கும் இருந்த அன்பு பின்னைத் தம்பியாகிய எனக்கு மட்டும் இல்லாது போகாது' என்பது சத் துருக்கன் குறிப்பு. யானும் என்புழி உள்ள 'ஆம்' பிரிக்கப்பட்டு 'யான் அரசாள்வேனும்' எனப்பின் கூட்டப்பட்டது. இனிதே என்ற வினா, இனிதன்று என்ற எதிர்மறைப் பொருளை யுணர்த்தி நின்றது. அம்மா வியப்பிடைச்சொல். (223)

10319. மன்னிற்பின் வளநகரம் புக்கிருந்து
வாழ்ந்தானே பரத னென்னும்
சொன்னிற்கு மென்றஞ்சிப் புறத்திருந்து
மருந்தவமே தொடங்கி னாயே
என்னிற்பி னிவனுளனா மென்றேபின்
னடிமையுனக் கிருந்த தேனும்
உன்னிற்பின் னிருந்ததுவு மொருகுடைக்கீ
ழிருந்ததுவு மொக்கு மென்றான்.

''"மன்னின்பின் வளநகரம் புக்கிருந்து
வாழ்ந்தானே, பரதன் என்னும்
சொல்நிற்கும்" என்று அஞ்சி, புறத்து இருந்தும்
அருந்தவமே தொடங்கினுயே!
"என்னின்பின் இவன் உளனும்" என்றே பின்
அடிமையுனக்கு இருந்த தேனும்
உன்னின்பின் இருந்ததுவும் ஒருகுடைக்கீழ்
இருந்ததுவும் ஒக்கும் என்ருன்.

பொ :—இராமன் காட்டிற்குச் சென்றபின்பு, (அயோத்தியில் வாழ்ந்தால்) 'வளமிக்க அயோத்தி நகரத்தில் புகுந்து மகிழ்ச்சியோடிருந்து வாழ்ந்தானே பரதன்' என்று உலகவர் கூறும் பழிச்சொல் நிற்கும் என்று அஞ்சி, அந்நகர்க்குப் புறத்தே நந்திக் கிராமத்திலிருந்தும் (அரசவேடந் தாங்காது தவவேடம் தாங்கி) அரிய தவஞ்செய்துகொண்டிருந்தாயே! அத்தகைய நீ 'எனக்குப்பின் இந்தச் சத்துருக்கன் உளனுவன்' என்று நின் பின் பிறந்த அடிமையாகிய என் திறத்து உனக்குக் கருத்து இருந்ததேனும், உனக்குப்பின் யான் உயிருடன் இருப்பதும்கூட ஒற்றைவெண் கொற்றக் குடைக்கீழ் அரசாட்சி செய்ததோ டொக்கும் என்று கூறினுன்.

கு :— மன்னனுதற்குரிய இராமன் காட்டிற்குச் சென்றதையே பொருது அவனுக்குரிய அயோத்தியில் தங்காது புறத்தே நந்திக்கிராமத்தில் தங்கியிருந்ததோடு அரசவேடம் தாங்காது தவவேடம் தாங்கி அருந்தவம் செய்யத் தொடங்கிய நீ, நினக்குப் பின் பிறந்த யான், நின் இறப்பிற்குப்பின் உயிரோடு வாழ்வேன் என்றும், அதற்குமேல் அரசும் ஆள்வேன் என்றும் எண்ணுதல் தகுமோ? என்ற கருத்துமுன் இரண்டடிகளால் புலப்படவைத்த நயம் காண்க. இவ்வுலகம் மன்னனையின்றி மறுகுறுமே என்ற அருள் நோக்கத்தால் நினக்குப்பின் என்னை அரசனுக்க வேண்டும் என்ற கருத்து உனக்கு இருந்தாலும் நினக்குப்பின் யான் உயிர் வாழேன். வழிவழிவந்த அரசமரபு அழியாதிருக்கவேண்டியேனும் உயிரோடு இருத்தல் கூடாதோ எனின், உனக்குப்பின் உயிர்வாழ்வதும் அரசாள்வதோடு ஒக்கும் ஆதலின், எதற்காகவும் யான் உயிர் வாழ மாட்டேன் என்பான்,

'உன்னிற்பின் இருந்ததுவும் ஒருகுடைகீழ் இருந்ததுவும் ஒக்கும்' என்று கூறினன். உயிர்வாழவே விரும்பாத சத்துருக்கன் அரசாள விரும்பாமை சொல்லவேண்டுமோ என்க. பரதன் தீப்புகுவது அண்ணனைப் பிரிந்து வாழவிரும்பாமையே என்றால் அந்த நிலை சத்துருக்கனுக்கும் ஏற்புடையதுதானே! பரதனுக்குப்பின் சத்துருக்கன் உயிர்வாழ்தல் தகுமோ? தகாது என்பதைச் சத்துருக்கன் விளக்கியவாறு. (224)

### பரதன் சத்துருக்கனுக்கு அமைதி கூறி எரிவளர்க்கக் கட்டளையிடுதல்

10320. முத்துருக்கொண் டமைந்தனைய முழுவெள்ளிக்
கொழுநிறத்து முளரிச் செங்கண்
சத்துருக்க னஃதுரைப்ப வவனிங்குத்
தாழ்க்கின்ற தன்மை யானிங்
கொத்திருக்க லாலன்றே யுலந்ததற்பி
னிவ்வுலகை யுலைய வொட்டான்
அத்திருக்குங் கெடுமுடனே புகுந்தாளு
மரசெரிபோ யமைக்க வென்றான்.

முத்து உருக் கொண்டு அமைந்தனைய முழுவெள்ளிக்
கொழுநிறத்து, முளரிச் செங்கண்,
சத்துருக்கன் அஃது உரைப்ப, அவன் இங்குத்
தாழ்க்கின்ற தன்மை, யான் இங்கு
ஒத்திருக்கலால் அன்றே? உலந்ததன் பின்
இவ்உலகை உலைய ஒட்டான்;
அத்திருக்கும் கெடும்; உடனே புகுந்து ஆளும்
அரசு; எரிபோய் அமைக்க' என்றான்

பொ :—முத்தே உருவுகொண்டு அமைந்தாற் போன்றவனும் சிறந்த வெள்ளியின் செழுமையான நிறத்தை பெற்றவனும், தாமரை மலர் போன்ற சிவந்த கண்களை யுடையவனுமான சத்துருக்கன் அவ்வாறு சொல்ல, (பரதன்) 'அந்த இராமன் இங்கு வராமல் தாழ்ப்பது, யான் இங்கு அவன் கருத்திற்கு ஒத்து அரசாண்டு கொண்டிருத்தலால் அன்றோ? யான் இறந்த பிறகு இந்த உலகை (ஆள்வோரில்லாது) வருந்துமாறு விடமாட்டான்;

அவன் இங்கு வாராத மாறுபாடும் நீங்கும்; யான் இறந்த உடனே அயோத்தியில் புகுந்து அரசாள்வான் ஆதலால், நீ போய் எரிவளர்ப்பாயாக' என்று கூறினன்.

கு.—சத்துருக்கன் நிறம் வெள்ளையாதலின் முத்தும் வெள்ளியும் அவனுக்கு உவமையாயின. முத்துருக்கொண்ட மைந்தனைய சத்துருக்கன்; முழுவெள்ளிக் கொழுநிறத்துச் சத்துருக்கன்; முளரிச் செங்கட் சத்துருக்கன் எனத்தனித்தனி இயையும். 'முத்துருக் கொண்டமைந்தனைய' என்பது தற்குறிப்பேற்றம். அவன் என்றது இராமனை; பண்டறிசுட்டு. இராமன் நாடு புகாது காடுபதியாக வாழ்வது பரதன் அரசாள இருக்கின்றனே என்ற எண்ணத்தாலாதலின் அவ்வெண்ணம் மறைய யான் இறத்தலே தக்கது' என்பது பரதன் கூறும் அமைதி. இராமன் விரைந்து வரச்செய்யும் நோக்கத்தால் பரதன் தீப்புகுகின்றான் ஆதலின் அவனோடு சத்துருக்கன் இறத்தல் பொருந்துவதன்று என்று புலப்படுத்தியவாறு. ''முத்துருக் கொண்டு செம்முளரி யலர்ந்தா லொத்திருக்கும் எழிலுடைய இவ்வொளியால், எத்திருக்கும் கெடும் என்பதை யெண்ணுச் சத்துருக்கன்னெனச் சாற்றினர் நாமம்'' என்ற பாலகாண்டச் செய்யுளை முதலடி நினைப்பித்தல் காணலாம். அத்திருக்கும் என்பதை நெஞ்சறி சுட்டாக்கிப் 'பரதன் அரசாள விருப்பமுள்ளவன்' என்ற அக்குற்றமும் கெடும், எனப் பொருள் கூறலும் ஆம். திருக்கு—மாறுபாடு; குற்றம். (225)

இச்செய்தி யறிந்து கோசலை பரதனை விலக்க விரைந்து வருதல்

10321. அப்பொழுதி னிவ்வுரை சென் றயோத்தியினி
லிசைத்தலுமே யரியை யீன்ற
ஒப்பெழுத வொண்ணுத கற்புடையாள்
வயிறுபுடைத் தலமந் தேங்கி
இப்பொழுதே யுலகிறக்கும் யாக்கையினை
முடிந்தொழிந்தான் மகனே யென்னு
வெப்பெழுதி னுலன்ன மெலிவுடையாள்
கடிதோடி விலக்க வந்தாள்.

அப்பொழுதின் இவ்வுரை சென்று, அயோத்தியினில்
இசைத்தலுமே, அரியை ஈன்ற
ஒப்பு எழுத ஒண்ணுத கற்புடையாள்,
வயிறு புடைத்து, அலமந்து ஏங்கி
'இப்பொழுதே உலகு இறக்கும், யாக்கையினை
முடித்து ஒழிந்தால், மகனே!' என்னு,
வெப்பு எழுதினுலன்ன மெலிவுடையாள்
கடிது ஓடி, விலக்க வந்தாள்.

பொ :—அந்தக் கணத்தில் இங்குப்பரதன் கூறிய வார்த்தை சென்று அயோத்தி நகரத்தில் சொல்லப்பட்டவுடனே, திருமாலின் அமிசமான இராமனைப் பெற்றவளும் ஒப்புக்கூற வியலாத கற்புடையவளுமாகிய கோசலை, வயிற்றில் அடித்துக்கொண்டு, வருந்தி அழுதுகொண்டு, 'மகனே! நீ உடம்பினை முடித்து ஒழிவாயாயின், இப்பொழுதே உலகத்துள்ள உயிர்கள் எல்லாம் இறக்கும்' என்று அரற்றிக்கொண்டு, வெப்பத்தைக்கொண்டு எழுதி வைத்தாலொத்த மெலிவுடையவளாய் விரைந்து (பரதனை) விலக்க ஓடிவந்தாள்.

கு :—அரி—திருமால்; இங்கு இராமனை உணர்த்தியது. அலமந்து—வருந்தி. 'மகனே! யாக்கையினை முடித்தொழிந்தால் இப்பொழுதே உலகு இறக்கும்' என இயையும். இதனுல் கோசலைக்குப் பரதன் மேலுள்ள அன்பும் நன்மதிப்பும் புலனும். பரதன் எரிபுகக் போகின்முன் என்ற சொல்லைக் கேட்டு வருந்திய கோசலையின் உடம்பில் வெம்மையும் மெலிவும் தோன்றினமை புலப்பட 'வெப்பெழுதினுலன்ன மெலிவுடையாள்' எனக் கூறினர். அயோத்தி அரண்மனையிலிருந்து நந்திக் கிராமத்திற்குக் கடிதோடி வந்தாள் என்க. கற்புடையாள் வயிறு புடைத்து அலமந்து ஏங்கி, என்னு, மெலிவுடையாளாய், விலக்கக் கடிதோடி வந்தாள் என இயையும். மெலிவுடையாளாய் வந்தாள் என முற்றெச்சமாக்கி முடிக்க. ஈன்ற என்ற பெயரெச்சம் கற்புடையாள் என்ற குறிப்புவினைப் பெயரைக் கொண்டு முடந்தது. (226)

## கோசலை பரதனை அடைதல்

10322. மந்திரியர் தந்திரியர் வளநகரத் தவர்
மறையோர் மற்றுஞ் சுற்றச்
சுந்தரிய ரெனைப்பலருங் கைதலையிற்
பெய்திரங்கித் தொடர்ந்து செல்ல
இந்திரனே முதலாய விமையவரு
முனிவரரு மிறைஞ்சி யேத்த
அந்தரமங் கையர் வணங்க வழுதரற்றிப்
பரதனைவந் தடைந்தா ளன்றே.

மந்திரியர், தந்திரியர், வளநகரத்தவர்,
மறையோர், மற்றும் சுற்றச்
சுந்தரியர் எனைப்பலரும் கைதலையில்
பெய்து இரங்கித் தொடர்ந்து செல்ல,
இந்திரனே முதலாய இமையவரும்
முனிவரரும் இறைஞ்சி ஏத்த,
அந்தர மங்கையர் வணங்க, அழுது அரற்றி,
பரதனை வந்து அடைந்தாள் அன்றே.

பொ :—மந்திரிகளும், சேனைத்தலைவர்களும், வளமார்ந்த நகரமக்களும், வேதியரும் சுற்றத்தவராகிய சுந்தர மகளிரும் முதலிய மற்றும் பலரும் கைகளைத் தலையில் வைத்துக்கொண்டு அழுதுகொண்டு தன்னைத் தொடர்ந்துவர, இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் வணங்கித் துதிக்க, வானுலக மாதர்கள் வணங்காநிற்க, அழுது புலம்பிக்கொண்டு கோசலை பரதனை வந்து அடைந்தாள்.

கு :—தந்திரியர் — சேனைத்தலைவர். சுற்றமாகிய சுந்தரியர் என்க. இனி, மந்திரியர் முதலியோர் சுற்ற, சுந்தரியர் பலரும் கைதலையிற்பெய்து இரங்கித் தொடர்ந்து செல்ல என இரண்டு தொடராக அறுத்துப் பொருள் கூறலும் ஆம். இராமனைப்பெற்ற பெருமையளாதலை நினைந்து இந்திரன் முதலிய இமையவரும் அந்தர மங்கையரும் வணங்குவராயினர். 'சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற கோசலையை' (அயோத்தி-குகப்-64) என

முன் கூறியிருத்தலும் நினைக. மற்றும் எனைப்பலரும் என இயையும். (227)

## எரிபுகும் பரதனைக் கோசலை பற்றிக் கொள்ளுதல்

10323. விரியமைத்த நெடு வேணி புறத்தசைந்து
வீழ்ந்தொசிய மேனி தள்ள
எரியமைக்கு மயானத்தை யெய்துகின்ற
காதலனை யிடையே வந்து
சொரிவமைப்ப தரிதாய மழைக்கண்ணு
டொடருதலுந் துணுக்க மெய்தாப்
பரிவமைந்த திருமனத்தா னடிதொழுதா
னவள்புகுந்து பற்றிக் கொண்டாள்.

விரிஅமைத்த நெடு வேணி புறத்து அசைந்து
வீழ்ந்து அசைய மேனி தள்ள,
எரியமைக்கும் மயானத்தை எய்துகின்ற
காதலனை இடையே வந்து,
சொரிவு அமைப்பது அரிது ஆய மழைக் கண்ணுள்
தொடருதலும், துணுக்கம் எய்தா,
பரிவு அமைந்த திருமனத்தான் அடிதொழுதான்;
அவள்புகுந்து பற்றிக் கொண்டாள்.

பொ:—விரித்தல் பொருந்திய நீண்ட சடை பின்புறத்தில் அவிழ்ந்து வீழ்ந்து புரளவும், உடம்பு தளர்ச்சியால் தள்ளாடவும் (சத்துருக்கனுல்) எரியமைக்கப்படும் மயானத்தை அடைகின்ற பரதனுகிய மகனை, சொரிதலைத் தடுத்தற்கு அரிதாய மழை போன்ற கண்ணையுடையளான கோசலை, இடையில் வந்து தொடர்தலும் திடுக்கிட்டு இரக்கமமைந்த சிறந்த மனத்தை யுடைய பரதன், அக்கோசலையின் திருவடிகளைத் தொழுதானுக, அவள் பரதனை (நெருப்பில் விழாதபடி நடுவே) புகுந்து பற்றிக் கொண்டாள்.

கு:—பரதனும் இராமனைப் போலவே தவவேடந் தாங்கி நந்திக் கிராமத்தில் தவங்கிடக்கின்றவன் ஆகலின் அவனுக்கும் சடைமுடியுண்டு. தீப்புகப் பரதன் செல்லும் வேகத்தில் அந்தச்

சடைமுடி அவிழ்ந்து பின்புறத்தில் வீழ்ந்து புரள்கின்றது என்க. பதினான்காண்டும் தவங்கிடந்தமையால் பரதன்மேனி இளைப்பால் தள்ளாடியது. பெருமழை சொரியுங்கால் அதைத் தடுத்தற்கு இயலாதவாறுபோலவே கோசலையின் கண்ணும் தடுத்தற்கரிய நிலையில் நீரைச் சொரிந்துகொண்டே இருந்தது என்பார், 'சொரியமைப் பதரிதாய மழைக் கண்ணாள்' என்றார். பரிவு—இரக்கம். தன் கருத்தை நிறைவேற்ற முடியாதநிலை யுண்டாகுமோ என்ற கருத்தால் பரதன் கோசலையைக் கண்டு துணுக்கம் எய்தினான் என்க. (228)

கோசலை பரதன் தீயில் வீழ்தலைத் தடுத்துக் கூறுதல்
10324—10330

10324. மன்னி ழைத்தது மைந்த னிழைத்தது
முன்னி ழைத்த விதியின் முயற்சியால்
பின்னி ழைத்தது மெண்ணிலப் பெற்றியால்
என்னி ழைத்தனை யென்மக னேயென்றாள்.

'மன் இழைத்ததும், மைந்தன் இழைத்ததும்,
முன் இழைத்த விதியின் முயற்சியால்;
பின் இழைத்ததும் எண்ணில்அப்பெற்றியால்;
என் இழைத்தனை, என்மகனே?' என்றாள்.

பொ :—'அரசன் (தயரதன் இராமன் பிரிவாற்றாது) இறந்ததும், இராமன் காடு புகுந்ததும் முன்செய்த விதியின் செயலாகும்; பின்பு, (குறித்த காலத்தில்) வாராதிருத்தலும், சிந்திக்குமிடத்து அத்தன்மையதேயாகும்; என் மகனே! நீ யாது செய்யத்தலைப்பட்டாய்?' என்று தடுத்துக் கூறினாள்.

கு :—இராமன் காடுபுகுந்ததை விதியின் விளைவு என்று எண்ணி அமைந்துள்ள நீ, அவன் குறித்தகாலத்தில் வாராததையும் அவ்விதியின் விளைவே எனக்கருதி அமைதியுடன் இராமல், இத்தகைய தகாத செயலைச் செய்யலாகுமோ? என்பாள் 'என்னிழைத்தனை என்மகனே' என்று கூறினாள். இராமனைக் குறிப்பிடுகையில் 'மைந்தன்' எனப்பொதுவகையில் கூறிப் பரதனைக் குறிப்பிடுகையில் 'என் மகனே' என உரிமை பாராட்டிக் கூறியுள்ளது கோசலை பரதனிடம் கொண்டுள்ள

பேரன்பினைக் காட்டும். இழைத்தல் — செய்தல். இராமன் காடுபுக நேர்ந்தது விதியின் விளைவு என்பதை ''மைந்த, விதியின் பிழை; நீ யிதற்கென்னை வெகுண்டது'' (நகர் நீங்கு—130) என இராமனே இலக்குவனை நோக்கிக் கூறியுள்ளமையால், உணரலாம். மன்னிழைத்ததும் விதியின் முயற்சியே என்பதை ''பொன்னூர் வலயத்தோளான்கானே புகுதல் தவிரான், என்னுருயிரோ வகலா தொழியா திது கோசலைகேள், முன்னொருமா முனிவன் மொழியும் சாபமுளது என்று அந்நாளுற்ற தெல்லாம் அவளுக்கரசன் அறைவான்'' (நகர் நீங்கு—72) என்றமையால் அறியலாம். தயரதன் இராமன் பிரிவால் உயிர் துறந்தது முனிவன் கொடுத்த சாபத்தால் ஆனமையின் அது விதியின் முயற்சியே யாதல் தெளிவு. விதியின் விளைவால் நிகழ்ந்ததைப் பொருட்படுத்தி உலகுக்குயிராகிய பரதன் தன்னுயிர் நீத்தல் பொருந்தாது என்பது கோசலையின் உட்கோள். (229)

10325. நீயி தெண்ணினை யேனெடு நாடெரி
பாயு மன்னருஞ் சேனையும் பாயுமால்
தாய ரெம்மள வன்று தனியறம்
தீயின் வீழு முலகுந் திரியுமால்.

'நீ இது எண்ணினையேல், நெடு நாடு எரி
பாயும்; மன் அருஞ் சேனையும் பாயுமால்;
தாயர் எம் அளவு அன்று; தனி அறம்
தீயின் வீழும்; உலகும் திரியுமால்.

பொ:—நீ இது (தீப்பாய்தலைச்) செய்ய எண்ணினையானால் பெரிய கோசலநாடு முழுமையும் எரியில் பாய்ந்து அழியும்; நிலைபெற்ற, வெலற்கரிய சேனையும் எரியில் பாய்ந்தழியும்; தீப்பாய்தல், தாயராகிய எம்மளவில் நிற்பதன்று; ஒப்பற்ற அறத்தெய்வமும் தீயில் வீழும்; உலகமும் மேல்கீழாய்த் திரியும்.

கு:—இது என்றது, எரிபாய்தலை; அதனைக் கோசலை தன் வாயால் கூறவும் கூசினளாய் 'இது, என்றுமட்டும் சுட்டிக் கூறினாள். நாடு என்றது இடவாகுபெயராய்க் கோசல நாட்டு மக்களையுணர்த்தியது. மன் அருஞ் சேனை என்றது, என்றும் நிலையாக வளர்ச்சிபெற்றிருப்பதும், பகைவரால் வெல்லுதற்கரியதாக இருப்பதுமாகிய சேனையை. இனி, மன் என்பதற்கு

இராமன் எனப் பொருள்கொண்டு இராமனுக்குரிய அரிய சேனை எனக் கூறலும் ஆம். இராமனுக்குரிய சேனை மாய்தலை விரும்பாமல் தீப்பாய்தலை நிறுத்துவான் பரதன் என்ற கருத்தால் இங்ஙனம் கூறினள் எனலாம். ''தாயர் எம்மளவன்று; தனியறம் தீயின் வீமும்'' என்றமையால் தாயர் மூவரும் தீயில் மாய்தல் தப்பாது என்பது புலப்படுத்தியவாறு. அறம் என்றது தரும தேவதையை. தாயர்தம் அழிவை எண்ணித் தீப்பாய்தலை நிறுத்தானாயினும் அறநெறி செல்லும் பரதன், அறக்கடவுள் தீயில் மாய்தலை அறியின் தன் வன்செயலை நிறுத்துவான் என்று கருதிய கோசலை இங்ஙனம் கூறினாள். 'எனைத்துள மறையவை யியம்பற்பாலன புனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே'' (திருவடி சூட்டுப்-45) எனப் பரதனது அறவழிச் செலவை இராமனே புகழ்ந்திருத்தல் இங்கு நினையலாம். வருஞ்செய்யுளில் கோசலை கூறுவதும் காணலாம். (230)

10326. தரும நீதியின் றற்பய னாவதுன்
கரும மேயன்றிக் கண்டிலங் கண்களால்
அருமை யொன்று முணர்ந்திலை யையநின்
பெருமை யூழி திரியினும் பேருமோ.

'தரும நீதியின் தன் பயன் ஆவதுஉன்
கருமமே அன்றிக் கண்டிலம், கண்களால்;
அருமை ஒன்றும் உணர்ந்திலை; ஐய! நின்
பெருமை, ஊழி திரியினும், பேருமோ?

பொ:—ஐய! தருமமான நீதியின் பயனாக விளங்குவது உன் செயலே அல்லது, உன் செயலுக்கு வேறான தருமநெறி இருப்பதையும் கண்களால் கண்டிலம்; நின் அருமையைச் சிறிதும் நீ உணர்ந்து கொள்ளவில்லை; நின் பெருமை ஊழி திரியும் காலத்தும் அழியாது; (விளங்கிக் கொண்டிருக்கும்.)

கு:—மேல், 'தனியறம் தீயின் விழும்' என்று கூறிய கோசலை அது வீழ்தற்குரிய காரணத்தைச் செய்யுளால் விளக்கியவாறு. பரதன் எது செய்கின்றானோ அது தரும நீதியாக அமைவதன்றி, அவன் செயலுக்கு வேறான செயல் எதையும் அறநூல்கள் கூறக் காணேம்' என்ற கோசலையின் சொல்லும் ''எனைத்துளமறயவை யியம்பற்பாலன, பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே''

என்ற இராமன் சொல்லும் ஒரு கருத்தினவே யாதல் காணலாம். பரதனது ஒழுகலாறு அறநூல்களில் கூறியவற்றில் சிறிதும் வேறுபடாது அமைந்திருத்தலின் பரதனது ஒழுகலாற்றையே அறநூல்கள் கூறின என்றும் கூற இடமுண்டு எனப் புகழ்ந்த வாறு. ''நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீண் மறைகள் உன்செய்கை யன்னவைதான் சொன்ன வொழுக்கினவோ'' (கவந்தப் — 49) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இங்ஙனம் அறக்கடவுளோடு ஒற்றுமையுற்று நடக்கும் பரதன் தீப்புகும் போது அவ் அறக்கடவுளும் தீயில் பாய்தல் உறுதி என்பதை இதனுல் கோசலை புலப் படுத்தியவாறு. இறைவன் ''தன் பெருமை தானறியாத் தன்மையன்'' (திருவாசகம் — திருச் சாழல் — 19) என்று புகழப்படுதல் போலவே பரதனும் இங்குக் கோசலையால் ''அருமையொன்று முணர்ந்திலை ஐய'' எனப் புகழப்பட்டிருத்தல் காணலாம். ஏனையோர் பெருமை ஊழிக் கடையில் உலகம் அழியும் வரையில் இருப்பது; பரதன் புகழ் ஊழியால் உலகம் திரிந்தழியினும் பெயராது, அடுத்து அடுத்து வரும் ஊழிகளிலும் உயிர்களால் பேசப்படுவது எண்பாள், 'நின் பெருமை ஊழி திரியினும் பேருமோ?' என்ருள். (231)

10327. எண்ணில் கோடி யிராமர்க ளென்னினும்
அண்ண னின்னரு ளுக்கரு காவரோ
புண்ணி யம்மெனு நின்னுயிர் போயினுல்
மண்ணும் வானு முயிர்களும் வாழுமோ.

'எண் இல் கோடி இராமர்கள் என்னினும்,
அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ?
புண்ணியம் எனும் நின் உயிர் போயினுல்,
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?

பொ:—பெருமையிற் சிறந்தோனே! (இராமன் ஒருவனே அன்றி) எண்ணிக்கை யில்லாத பலகோடி இராமர்கள் தோன்றி வருவாராயினும், அவர்கள் நினது அருளுக்கு அருகே நிற்கும் தகுதியுடையராவரோ? (ஆகார்:) புண்ணியத்தின் வடிவம் என்று புகழத்தக்க நின் உயிர் நீங்குமாஞல் (பின்பு) மண்ணுலக மும் வானுலகமும் அவற்றில் உள்ள உயிர்களும் வாழுமோ? (வாழா.)

கு :—மண்ணும் வானும் வாழாமை கூறவே பாதலமும் அதில் வாழும் உயிர்களும் வாழாமை இனம் பற்றிக் கொள்ளப்படும். பரதனுடைய சிறப்பியல்புகள் புலப்படாத நிலையிலேயே, கோசலை, இராமனைநோக்கி ''மும்மையின் நிறைகுணத்தவன் நின்னினும் நல்லனால்'' (நகர்நீங்கு - 4) என்று கூறியுள்ளமையும், இராமன் காடுபுகுந்தபின் அவனைக் கொணர்ந்து மகுடஞ்சூட்ட எண்ணிய பரதனது சிறப்பியல்பு கண்ட குகன், ''தாயுரை கொண்டு தாதையுதவிய தரணி தன்னைத் தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் தோக்கிப் போயினை யென்றபோது புகழினோய் தன்மைகண்டால்? ஆயிரமிராமர் நின்கேழ் ஆவரோ தெரியினம்மா'' (குகப் — 35) என்று புகழ்ந்துள்ளது, இங்கு நினைபத்தகும். தாயுரை கொண்டுதாதை யுதவிய தரணி தன்னை இராமனுக்கு உரியதாக்க முயன்ற நிலையினும், அவ்வாறு கொடுத்த நாட்டைப் பதினான்காண்டு கழித்துப் பெற்றுக் கொள்வதாகச் சொல்லிச் சென்ற இராமன் அக்காலம் கழிந்தபின்னும் வாராமை கண்டு தன்னுயிரையே விடமுயலும் நிலை, மிகப் பெருமையுடைய தாகலின் 'ஆயிரம் இராமர் என்னினும் நின்னருளுக்கருகாவரோ' என்னாது, 'எண்ணில் கோடி இராமர்கள் என்னினும் அண்ணல் நின்னருளுக்கருகாவரோ?' என்றாள். இராமன்பொருட்டுப் பொருளாசை யறுதலைக் காட்டிலும் உயிர் வாழ்வில் ஆசையறுதல் மிக்க அருமையுடைத்தாதல் இங்கு நினையலாம். புண்ணியத்திற்கும் பரதனுக்கும் உள்ள ஒற்றுமை கருதிப் 'புண்ணியம் மெனும் நின்னுயிர்' என்று சிறப்பித்தவாறு. பரதனுயிர் போயினால் மூவுலகமும் அழியும் என்பது கூறிப் பரதனுடைய உயிர் மூவுலகத்திற்கும் ஆதாரமானதென்பதைப் புலப்படுத்தியவாறு. (232)

10328. இன்று வந்தில னேயெனி னாளையே
ஒன்றும் வந்துனை யுன்னி யுரைத்தசொல்
பின்று மென்றுண ரேற்பிழைத் தானெனின்
பொன்றுந் தன்மை புகுந்தது போயென்றாள்.

'இன்று வந்திலனே
எனின், நாளையே
ஒன்றும் வந்து, உனை ;
உன்னி, உரைத்த சொல்

பின்றும் என்று உணரேல் ;
பிழைத்தான் எனின்,
பொன்றும் தன்மை புகுந்தது
போய்' என்ருள்.

பொ :—'இராமன் இன்று வந்திலனே எனினும் நாளைக்கு வந்து உன்னை அடைவான் : ('பதினான்கு ஆண்டு கழித்து வருவேன்' என்று) சிந்தித்துச் சொன்னசொல் தவறிவிடுவான் என்று நீ நினையாதே ; அவ்வாறு நாளைக்கும் வரத்தவறினுன் என்ருல், அவனுக்கு இறக்கும் தன்மை சென்று புகுந்தது' (என்று கொள்க) என்ருள்.

கு :—இராமன் சொன்ன சொல் தவருதவன் என்பதை வற்புறுத்தி, இன்று வாராளுயினும் நாளை காண்குவம் என்று கூறிப் பரதன் எரிபுகுதலைத் தடுக்கின்ற கோசலை, நாளையும் வராது தவறுவான் ஆனல் என்செய்வது? என்ற வினவிற்கு விடை பகர்வாள்போல, நாளைக்கும் வரத்தவறினுல் அவன்பால் இறப்பு சென்று சேர்ந்தது என்று முடிவுசெய்து கொள்ளலாம் என அவ்விராமனது வாய்மையே பேசும் இயல்பைப் புலப்படுத்தியவாறு. இதனுல், இராமன் உயருள்ள வரையில் வாய்மை வழுவான் என்ற உறுதி பெறப்படுதல் காணலாம். இவ்வாறே பரதனும், 'இரவிகுலத்துளான் வாக்கிற் பொய்யான் வரும் வரும்' (208) என்று நினைந்து வருந்தினமை முன் கூறப்பட்டிருத்தல் காணலாம். (233)

10329. ஒருவன் மாண்டன னென்றுகொண் டூழிவாழ்
பெருநி லத்துப் பெறலரு மின்னுயிர்க்
கருவு மாண்டறக் காணுதி யோகலைத்
தரும நீயல தில்லனுந் தன்மையாய்.

'ஒருவன் மாண்டனன் என்று கொண்டு ஊழுவாழ்
பெருநிலத்துப் பெறல் அரும் இன் உயிர்க்
கருவும் மாண்டு அறக் காணுதியோ ? — கலைத்
தருமம் நீ அலது இல் எனும் தன்மையாய் !

பொ :—நூல்களில் கூறப்படும் தருமம் நீ அல்லது வேறு இல்லை என்று கூறத்தக்க பண்புகள் நிறைந்தவனே ! இராமன்

ஒருவன் இறந்தனன் என்று நினைத்துக் கொண்டு (அந்த ஒரு யிர்க்காக) ஊழிக்காலம் வரை நிலைபெற்று வாழ்தற்குரிய இப் பெரிய நிலவுலகத்தில் வாழ்கின்ற பெறுதற்கு அரிய இனிய உயிர் களின் கருவும் மாண்டு ஒழியுமாறு செய்கின்ருயோ?

கு:—பரதன், இராமன் பொருட்டுத் தீப்புகுந்தால், பரதன் பொருட்டு இவ்வுலகோர் அனைவரும் மாண்டொழிவர் என்பது கூறிப் பரதனைக் கோசலை விலக்கியவாறு. 'மாண்டனன் என்று கொண்டு' என்றமையால் இராமன் இறவான்; அவனை இறந்தவ னுகப் பரதனே எண்ணிக்கொண்டு எரிபாய எண்ணுகின்ருன் என்பது பெறப்படும். இப்பேருலகத்து உயிர்கள் வாழையடி வாழையாக ஊழிக்காலம் வரையில் வாழத்தக்கன என்பதும் அவ்வியல்பு சிதைய அவையெல்லாம் ஒரேநாளில் மாண்டொழி யும் பாவத்தை அறத்தின் வடிவாக இருக்கின்ற நீ செய்தல் தகாது என்பதும் விளக்கியவாறு. இறுதியடி கருத்துடையடை கொளியணி. (234)

10330. இறக்கை யுஞ்சில ரேகலு மோகத்தால்
பிறக்கை யுங்கட னென்றுபின் பாசத்தை
மறக்கை காண்மக னேவலி யாவதும்
துறக்கை தானு மென்ருண்மனந் தூய்மையாள்.

' "இறக்கையும், சிலர் ஏகலும், மோகத்தால்
பிறக்கையும், கடன்" என்று, பின் பாசத்தை
மறக்கைகாண், மகனே! வலி ஆவதும்,
துறக்கை தானும், என்ருள்—மனம் தூய்மையாள்.

பொ:— தூய்மையான மனமுடைய கோசலை (பரதனை நோக்கி) மகனே! சிலர் இறந்து படுதலும், பின்பு விண்ணுலகம் செல்லுதலும், பின்பு ஆசை நீங்காமையால் பூமியில் பிறத்தலும் எங்கும் எப்பொழுதும் நிகழும் முறைமை என்று உணர்ந்து, பின்பு அவர்மேல் உள்ள பாசத்தை மறத்தலே ஒருவர்க்கு வலி மையும் துறவும் ஆம் என்று கூறினுள்.

கு:—உடலைவிட்டு நீங்கிய உயிர் முன்பு விண்ணுலகம் புகுந்து பின்பு இவ்வுலகில் பிறக்கும் என்பதை: "துறக்கப்படாத வுடலைத் துறந்து வெந்தூதுவரோடு, இறப்பன் இறந்தால் இரு

விசும்பு ஏறுவான் ஏறிவந்து பிறப்பன்'' (தேவாரம் 4-113-8) எனத் திருநாவுக்கரசர் கூறியுள்ளமையால் அறியலாம். இறத்தலும் ஏகலும் பிறத்தலும் கடன் என்பதை யுணரின் அவர் மேல் வைத்த பாசத்தால் இறந்தவர்க்கு இரங்குதலும் அவர்க்காக இறத்தலும் நிகழா என்றவாறு. பிறப்பிற்குக் காரணம் அவா ஆதல் தோன்ற 'மோகத்தால் பிறக்கையும்' என்றார். மோகம்—அவா. இறத்தலும் பிறத்தலும் இயல்பு என்பதை உணர்ந்து இறந்த உயிர்மேல் வைத்த பாசத்தை மறத்தலே ஒருவர்க்கு மன வலிமையும் துறவும் ஆம் என்ற சொல்லால் பரதன், மன வலிமையும் துறவுள்ளமும் உடையவன் என்பதைப் புலப்படுத்த வேணும், இராமன்மேல் வைத்த பாசத்தை மறப்பான்; எரிபுகுதலைத் துறப்பான் என்பது கோசலையின் எண்ணமாகும். காண் முன்னிலையசை. மறக்கை காண் வலியாவது துறக்கைதானும் ஆம் என முடிக்குஞ்சொல் வருவிக்க. இவ்வாறு சொல்லும் கோசலை தானும் அந்நெறியே பாசத்தை மறந்த தூய மனத்தினளே; பிறர்க்குரைத்துத் தானில்லாப் பேதையன்று; என்பது புலப்படுத்தவே, 'என்றாள் மனந்தூய்மையாள்' என்று சிறப்பித்தார். (235)

### *கோசலையின் சொல்லைப் பரதன் மறுத்துரைத்தல்*
### *10331 — 10333*

10331. மைந்த னென்னை மறுத்துரைத் தானெனல்
எந்தை மெய்ம்மையு மிக்குலச் செம்மையும்
நைந்து போக வுயிர்நிலை நச்சிலேன்
முந்து செய்த சபத முடிப்பனால்.

"''மைந்தன் என்னை மறுத்து உரைத்தான்'' எனல்;
எந்தை மெய்ம்மையும், இக்குலச் செம்மையும்,
நைந்து போக, உயிர்நிலை நச்சிலேன்;
முந்து செய்த சபதம் முடிப்பனால்.

பொ :—(பரதன் கோசலையை நோக்கி) ''என் மகன் என் சொல்லைக் கேளாது மறுத்துச் சொன்னான்'' என்று சொல்லலாகாது; என் தந்தை மேற்கொண்ட மெய்ம்மையும், இந்தச் சூரிய குலத்தின் நேர்மையும் அழிந்துபோக, யான் உயிர் வாழ்

தலை விரும்ப மாட்டேன்; முன்பு (இராமனிடம்) சொன்ன சபதத்தை முடிப்பேன்.

கு:— எனல் என்பது அல் விகுதிபெற்ற எதிர்மறை வியங்கோள். ''பயனில பாராட்டுவானை மகனெனல்'' (குறள்–196) என்புழிப்போல. எந்தை என்றது தயரதனை. ''வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்''(வாலி வதைப்–84) எனத் தயரதன் வாலியால் புகழப் பட்டிருத்தல் இங்கு நினையலாம். வாய்மைக்காக உயிர்துறந்த தயரதன் போல, யானும் வாய்மையைக் காக்க உயிர்துறத்தலே தக்கது; அது செய்திலனேல் என் தந்தையின் வாய்மை தவறாமையும் இச் சூரிய குலத்தின் செம்மையும் இழுக்குறும் என்றவாறு. முந்து செய்த சபதம் என்றது, ''ஏழிரண் டாண்டில் ஐயநீ, நாம நீர் நெடுநகர் நண்ணி நானிலம், கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரிச் சாம் இது சரதம்'' (திருவடி தொழுத–134) என்று பரதன் இராமனை நோக்கிக் கூறியதை. 'இக்குலச் செம்மை' யென்று குறிப்பிட்டது, மூத்தவனிருக்க இளையவன் அரசாளாத செம்மைத் தன்மையை. (236)

10332. யானு மெய்யினுக் கின்னுயி ரீந்துபோய்
வானு ளெய்திய மன்னவன் மைந்தனால்
கானு ளெய்திய காகுத்தற் கேகடன்
ஏனை யோர்க்கி திழுக்கில் வழக்கன்றோ.

'யானும், மெய்யினுக்கு இன் உயிர் ஈந்துபோய்,
வானுள் எய்திய மன்னவன் மைந்தனால்;
கானுள் எய்திய காகுத்தற்கே கடன்?
ஏனையோர்க்கு இது இழுக்கு இல் வழக்கு அன்றோ?

பொ:—யானும், வாய்மைக்காகத் தன் இனிய உயிரைக் கொடுத்துச் சென்று விண்ணுலகத்தில் சேர்ந்த தயரத மன்னவனுடைய மகனே யாவன்; (மேற்கொண்ட விரதத்தை நிறைவேற்றுதலாகிய) இது, காட்டிற்குச் சென்ற இராமனுக்கு மட்டுமோ கடமை? மற்றவர்கட்குக் குற்றமற்ற முறை அன்றோ?

கு:—தயரதன் மைந்தன் இராமன் மட்டுமல்லன், யானும், மெய்யினுக்கு இன்னுயிர் கொடுத்து வீட்டுலகம்புக்க தயரதன்

மைந்தனே! மேற்கொண்ட விரதத்தை நிறை வேற்றுதல் இராமனுக்கு மட்டும் உரிய கடமையன்று; ஏனையோர்க்கும் அது குற்றமற்ற முறைமையே யாகும் என்றவாறு, 'இராமன் காட்டுக்குப் போதலைத் தடுக்க இயலாத தாங்கள், முன்கூறிய முறைப்படி எரிபுகும் என்னைமட்டும் தடுத்தல் தகுமோ?' என்பது பரதன் கருத்து. காகுத்தன் — கருத்தன் மரபில் தோன்றிய இராமன். (237)

10333. தாய்சொற் கேட்டலுந் தந்தைசொற் கேட்டலும்
பாசத் தன்பினைப் பற்றற நீக்கலும்
ஈசற் கேகடன் யானஃ திழைக்கிலேன்
மாசற் றேனிது காட்டுவென் மாண்டென்றான்.

தாய் சொல் கேட்டலும்,
தந்தைசொல் கேட்டலும்,
பாசத்து அன்பினைப்
பற்று அற நீக்கலும்,
ஈசற்கே கடன்;
யான் அஃது இழைக்கிலேன்:
மாசு அற்றேன் இது,
காட்டுவென், மாண்டு என்றான்.

பொ:—தாயின் சொல்லைக் கேட்டு நடத்தலும், தந்தையின் சொல்லைக் கேட்டு நடத்தலும், இரத்த பாசத்தினாலாய அன்பினைச் சிறிதும் பற்று அற நீக்கிவிடுதலும் தலைவனாகிய இராமனுக்கே கடனாகும்; யான் அத்தகைய அரிய செயலைச் செய்திலேன், (இராமனுக்குரிய நாடாளும் ஆசையாகிய) 'மாசு இல்லாதேன்' என்ற இதனை யான் எரிபுகுந்து மாண்டு புலப்படுத்துவேன் என்று கூறினான்.

கு:—பரதன், 'மூத்தவற் குரித்து அரசு' என்ற மனுவின் மரபை நிலை நிறுத்த வேண்டித் தாயின் சொல்லையும் தந்தையின் சொல்லையும் கேளாத நிலைக்கு உரியவனானதோடு, அண்ணன் என்ற பாசத்தை அறுத்துக் கொள்ள இயலாதவனாய்க் காடு சென்று இராமனைக் கொணரவியலாத நிலைக்கும் ஆளானான்; இராமனோ தாய் சொல்லையும் தந்தை சொல்லையும் கேட்டு நடக்கும் கடப்பாட்டை மேற்கொண்டதனால் மற்றைத் தாயின்

பாசத்தையும் தம்பியரின் பாசத்தையும் நீக்கிக் காடு புகுந்தான். இராமன் மேற்கொண்ட பெற்ரோர் சொல்லைப் பேணுதலாகிய நற்செயலைச் செய்ய இயலாத யான் இராமனுக்குரிய நாட்டை ஆளும் ஆசை இல்லாதவன் என்ற இதையேனும் எரிபுகுந்து இறந்து காட்டுவேன் என்று பரதன் தன் விரதத்தை விளக்கிய வாறு. இராமனும் பரதனும் வெவ்வேறு வகையான விரதங்களை மேற்கொண்டவர்களாதலின் ஒருவர் செய்ததை மற்ருெருவர் செய்ய இயலாமை இயல்பாதல் தெளியலாம். மாசு அற்றேனு கிய இதனை மாண்டு காட்டுவென் என்க. (238)

பரதன் தீயினை நெருங்கி அதற்குப் பூசனை
புரியும்போது அனுமன் வந்து தடுத்தல்

10334. என்று தீயினை யெய்தி யிரைத்தெழுந்
தொன்று பூச லிடுமுல கோருடன்
நின்று பூசனை செய்கின்ற நேசற்குக்
குன்று போனெடு மாருதி கூடினன்.

என்று தீயினை எய்தி, இரைத்து எழுந்து
ஒன்று பூசலிடும் உலகோருடன்
நின்று பூசனை செய்கின்ற நேசற்கு,
குன்று போல் நெடு மாருதி கூடினன்.

பொ :—என்று சொல்லிவிட்டு நெருப்பினை நெருங்கி, (தான் தீயில் வீழ்தலை நினைந்து) கூக்குரலிட்டுக்கொண்டு, நெருங்கிய பேராரவாரம் செய்கின்ற நாட்டு மக்களுடன் தீயின் எதிரில் நின்று, அந்நெருப்புருவாய இறைவனுக்குப் பூசனை புரிகின்ற அன்புவடிவினனுகிய பரதனிடம் குன்றுபோன்ற நெடிய தோற்றத்தையுடைய அனுமன் வந்து சேர்ந்தான்.

கு :—கோசலை போலவே நாட்டுமக்கள் அனைவரும் பரதனைத் தீயில் விழாது தடுக்கும் நோக்கமுடையவராதலின், அவர்கள் பரதனுடன் சூழ்ந்து நின்று துன்ப ஆரவாரம் செய்யலாயினர் என்க. இரைத்தல்—கூக்குரலிடுதல்: பெருமூச்சுவிடுதலும் ஆம். பூசல் — பேராரவாரம். நெருப்பாக நிற்பவனும் இறைவனே ஆத லின் அந்நெருப்பிற்கும் பரதன் பூசனை செய்யலானுன். நேசன்

என்றது அன்புருவாய பரதனை. நேசற்கு என்பது உருபு மயக்கம்; 'கிளையரினுணற் கிழங்கு மணற்கீன்ற முளை' என்புழிப்போல. நேசனிடம் என்க. மாருதியின் உருவம் இத்தகையதென விளக்க 'குன்றுபோல் நெடு மாருதி' என்றார். (239)

## அனுமன் இராமனது வருகை யுரைத்து அத்தீயை அழித்தல்

10335. அய்யன் வந்தன னாரியன் வந்தனன்
மெய்யின் மெய்யன்ன நின்னுயிர் வீடினல்
உய்யு மேயவ னென்றுரைத் துட்புகாக்
கய்யி னலெரி யைக்கரி யாக்கினன்.

அய்யன் வந்தனன்; ஆரியன் வந்தனன்;
மெய்யின் மெய் அன்ன நின் உயிர் வீடினல்,
உய்யுமே, அவன்? என்று உரைத்து, உள்புகா
கய்யினல் எரியைக் கரி ஆக்கினன்.

பொ :—(அனுமன் பரதனை நோக்கி) தலைவனாகிய இராமன் வந்தான்; சிறப்புமிக்கவன் வந்தான்; வாய்மையின் வடிவம் போன்ற நினது உயிர் நீங்குமானல், அந்த இராமன் உயிர் உயந்திருப்பானே? என்று சொல்லிக்கொண்டு கூட்டத்துள் நுழைந்து தன்கையினல் நெருப்பைப் பிசைந்து அவித்து கரியாக்கி விட்டான்.

கு :—அய்யன், ஆரியன் என்ற சொற்கள் இராமனைக் குறித்து நின்றன. மெய் இரண்டினுள் முன்னது வாய்மையையும் பின்னது உடம்பையும் உணர்த்தியது. இனி, மெய்யினுள் சிறந்த மெய்போன்றவனாகிய நின் எனப்பொருள் கூறலும் ஆம். பரதன் பதினன்காண்டிற்கு முன் இராமனிடம் சொல்லிய சொல் தவருமல் எரிபுகற்கு அமைந்த அருமை நினைந்து 'மெய்யின் மெய்யன்ன நின்னுயிர்' என அனுமன் புகழலானன். அவன் என்றது நெஞ்சறி சுட்டாய் இராமனை உணர்த்தியது. எரியைக் கரியாக்குதலாவது எரியைக் கையால் பிசைந்து அவித்தல். செந்நிறமுடைய நெருப்பு அவிந்தபின் கரியாதல் இயல்பு. பரதனைத் தீயில் புகாமல் தடுத்தலைக் காட்டிலும் அத்தீயினையே அவித்து விடுதல் அனுமனுக்கு எளிய செயலாகத் தோன்றியது ஆகலின்.

அதனைச் செய்தான் என்க. பரதன் இறந்தால் இராமனும் உயிர் வாழான் எனக்கூறி, பரதனிடம் இராமன் கொண்டுள்ள அன்பின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. அய்யன் வந்துவிட்டான் ஆதலின், பரதன் தீப்புக்குத் தன் சொல் தவறுமையைக் காக்க வேண்டிய நிலை இனி இல்லை என்பது புலப்படுத்தி முதலடி நிற்றல் காணலாம். (240)

அநுமன் பரதனுக்குக் கூறுவது 10336–10333

10336. ஆக்கி மற்றவ ளுய்மலர்த் தாள்களைத்
தாக்கத் தன்றலை தாழ்த்து வணங்கிக்கை
வாக்கிற் கூடப் புதைத்தொரு மாற்றநீ
தூக்கிக் கொள்ளத் தகுமெனச் சொல்லினன்.

ஆக்கி, மற்று அவன் ஆய்மலர்த் தாள்களைத்
தாக்கத் தன்தலை தாழ்த்து வணங்கி, கை
வாக்கின் கூடப் புதைத்து, 'ஒருமாற்றம் நீ
தூக்கிக் கொள்ளத் தகும்' எனச் சொல்லினன்.

பொ :—அனுமன், அவ்வாறு எரியைக் கரியாக்கி விட்டு அப் பரதனது அழகிய மலர்போன்ற பாதங்களைத் தொடுமாறு தன் தலையைத் தாழ்த்தி வணங்கிவிட்டுக் கை, வாயில் பொருந்தப் பொத்திக்கொண்டு, (யான் இப்போது சொல்லும்) 'ஒரு சொல் (உண்டு; அது,) நீ கேட்கத்தக்கது' என்று சொல்லத் தொடங்கினன்.

கு :—ஆக்கி என்பது மேலைச் செய்யுளில் கூறியதை அனுவதித்தவாறு. தான் வணங்கும் தெய்வத்தின் தம்பி என்னும் பெருமை கருதிப் பரதனது பாதங்களில் தன்தலை படுமாறு அனுமன் வணங்கி வாய்புதைத்துச் சொல்லத் தொடங்குகின்றுன். வாக்கு என்றது இங்கு வாயை உணர்த்தியது. தூக்கிக்கொள்ளுதல் என்பது கேட்டல் என்னும் பொருளது. பெரியோர்முன் பேசும் முறைமை இதனல் புலனும். (241)

10337. இன்ன நாழிகை யெண்ணைந் துளதைய
உன்னை முன்னம்வந் தெய்த வுரைத்த நாள்
இன்ன தில்லை யெனினடி நாயினேன்
முன்னம் வீழ்ந்திவ் வெரியின் முடிவெனல்.

'இன்னம் நாழிகை எண் — ஐந்து உளது, ஐய!
உன்னை முன்னம் வந்து எய்த உரைத்த நாள்;
இன்னது இல்லை எனின், அடிநாயினேன்
முன்னம் வீழ்ந்து, இவ் எரியில் முடிவெனால்.

பொ :—'ஐயனே! (இராமன்) உன்னை வந்து சேர்தற்கு எல்லையாகச் சொன்ன நாள்முடிய இன்னும் நாற்பது நாழிகைப் பொழுது உளது; யான் சொன்ன இது உண்மை இல்லையென்றால் நாய் போன்றவனாகிய அடியேன் (நினக்கு) முன்னம் இந்த எரியில் வீழ்ந்து இறப்பேன்,

கு :—உரைத்த நாள் முடிய என ஒருசொல் சொல்லெச்சமாக வருவிக்க. நாழிகை எண்ணைத்து என்றது நாற்பது நாழிகைப் பொழுதினை. எண்ணுதற்குரிய நாழிகை ஐந்து எனவும், எட்டும் ஐந்தும் ஆகிய பதின் மூன்று நாழிகை எனவும் பொருள் கொள்ள லாம். தான் சொல்வது பொய்யன்று என்பதை நிறுவ அனுமன் இவ்வாறு சூளுரைத்தவாறு. (242)

10338. ஒன்று தானுள துன்னடி யேன்சொலால்
நின்று தாழ்த்தருள் நேமிச் சுடர்குணக்
குன்று தோன்றள வும்மிது குன்றுமேல்
பொன்று நீயிவ் வனலினில் பொய்யிலாய்.

ஒன்றுதான் உளது; உன் அடியேன் சொலால்
நின்று தாழ்த்தருள், நேமிச் சுடர் குணக்
குன்று தோன்றளவும்; இது குன்று மேல்,
பொன்று நீயிவ், வனலினில் — பொய்யிலாய்.

பொ :—பொய்யில்லாதவனே! (யான் கூறவேண்டுவது) ஒன்றுதான் உள்ளது; உன் அடியேனாகிய என் சொல்லால், வட்டவடிவமான சூரியன் கீழ்த்திசையில் உள்ள உதய மலையில் தோன்றும் அளவுவரை (காலைவரை) எரியில் விழாது நின்று பொறுத்தருள்வாயாக! இக்கால எல்லை தவறிவிடுமாயின் நீ இந்த நெருப்பில் வீழ்ந்து இறப்பாயாக!

கு :—பரதன் எரியில் வீழத்துணிந்த நாளின் இரவு வரையில் தன் சொல்லை நம்பி எரியில் வீழ்ந்திறவாது தாழ்க்குமாறு அனு

மன் வேண்டியவாறு. நேமிச்சுடர் என்றது, சக்கரம் போன்ற வட்டவடிவுடைய சூரியனை. குணக்குன்று என்றது உதய மலையை. நாள் என்றது பகலும் இரவும் சேர்ந்ததே யாகலின், இரவுப் பொழுது வரையில் இராமன் வருவதாகச் சொன்ன நாளின் எல்லை இருப்பதாக நிறுவிய, அனுமன் அவ் இரவின் எல்லை வரையில் இராமன் வாராதிருந்தால் பரதன் எரிபுக்கு இறக்கலாம் என்றது, இராமன் வரத்தவறமாட்டான் என்ற உறுதியைப் புலப்படுத்த வேண்டியேயாம். குன்றுதல் என்றது இங்குத் தவறுதலை உணர்த்தியது. (243)

சில சுவடிகளில் கீழ்வரும் மிகைப்பாடல் காணப்படுகிறது :—

10338 (1) பரத்துவன் வருதலும் பரிந்தி ராமனும்
கரத்துணை குவித்தன னிணைய காளையோ
டெரித்திர முனியுமா சிகளி யம்பிட
விருப்பொடு மிடவகை யினிது மேயினான்.

பரத்துவாசர் ஆசிரமத்தில் தங்கநேர்ந்தமை கூறுதல்

10339. எங்க ணாயகற் கின்னமு தீகுவான்
பங்க யத்துப் பரத்துவன் வேண்டலால்
அங்கு வைகின னல்லது தாழ்க்குமோ
இங்க ணல்லதொன் றின்னமுங் கேட்டியால்.

'எங்கள் நாயகற்கு இன் அமுது ஈகுவான்,
பங்கயத்துப் பரத்துவன் வேண்டலால்,
அங்கு வைகினன் அல்லது, தாழ்க்குமோ?
இங்கண், நல்லது ஒன்று இன்னமும் கேட்டியால்.

பொ :—எங்கள் நாயகனாகிய இராமனுக்கு இனிய உணவைக் கொடுக்க விரும்பித் தாமரைமலர்மாலை யணிந்த பரத்துவாச முனிவன் வேண்டிக்கொண்டமையால் அங்குத் தங்கினானே யன்றிக் காலம் தாழ்த்துவானோ? இவ்விடத்து இன்னமும் நல்லதாகிய ஒன்றைக் கேட்பாயாக.

கு :—பரத்துவாச முனிவன் அந்தணன் ஆகலின் தாமரை மலர்மாலை அவனுக்குரியதாகக் கூறினார். முனிவன் வேண்டுகோளை மறுக்க அஞ்சித் தாழ்த்தானே யன்றித் தானே காலம்

தாழ்த்துவானல்லன் என்றவாறு. நல்லது ஒன்று என்றது இராமன் அடையாளமாகக் கொடுத்தனுப்பியுள்ள மோதிரத்தை என்பது வரும் செய்யுளால் புலனும். (244)

அனுமன் அடையாள மோதிரத்தைக் காட்டுதல்

10340. அண்டர் நாத னருளி னளித்துள
துண்டொர் பேரடை யாள முனக்கது
கொண்டு வந்தனென் கோதறு சிந்தையாய்
கண்டு கொண்டருள் வாயெனக் காட்டினன்.

'அண்டர் நாதன் அருளின் அளித்துளது
உண்டு ஓர் பேர் அடையாளம்; உனக்கு அது
கொண்டு வந்தனென்; கோதறு சிந்தையாய்!
கண்டு கொண்டருள்வாய்' எனக் காட்டினன்.

பொ :—தேவர் தலைவனான இராமன் அருளினால் அளித்திருக்கின்ற ஒப்பற்ற பெருமையுடைய அடையாளம் என்னிடம் உளது; உனக்காக அதைக் கொண்டுவந்தேன்; குற்ற மற்ற சிந்தையுடையவனே! கண்டு கொண்டருள்வாயாக என அதைக் காட்டினன்.

கு :—இராமனை அண்டர்நாதன் என்றது அவன் தெய்வ நிலையை நினைந்து கூறியது. பேரடையாளம் உண்டு என்க. பேரடையாளம் என்பதற்கு அவன் பெயர் எழுதப்பட்டுள்ள அடையாளம் எனவும் பொருள் கூறலாம். 'கண்டுகொள்' என்பதனையே 'கண்டு கொண்டருள்வாய்' எனப் பெரியோர் பால்பேசும் மரபு புலப்படக் கூறியவாறு. ''கண்டுகொள் என்று காட்டிய சேயமாமலர்ச் சேவடிக்கண்'' (திருவாசகம்–581) என்பது காணலாம். நின்னுள்ளத்தில் ஐயம் என்ற கோது இருப்பதாக எண்ணி அதைப்போக்க வேண்டிக் கொணரவில்லை என்பான், 'கோதறு சிந்தையாய்' என்று விளித்தான். (245)

மோதிரங்கண்ட மக்கள் நிலை 10341, 10342

10341. காட்டிய மோதிரங் கண்ணிற் காண்டலும்
ஊட்டிய வல்விட முற்று முற்றுவார்க்
கூட்டிய நன்மருந் தொத்த தாமரோ
ஈட்டிய வுலகுக்கு மினிய வேந்தற்கும்,

காட்டிய மோதிரம் கண்ணில் காண்டலும்,
ஊட்டிய வல்விடம் உற்று முற்றுவார்க்கு
ஊட்டிய நல் மருந்து ஒத்ததாம் அரோ,
ஈட்டிய உலகுக்கும் இளைய வேந்தற்கும்.

பொ :—அனுமன் காட்டிய மோதிரத்தைக் கண்ணில் கண்ட அளவில் அங்குத் திரண்டிருந்த நாட்டு மக்களுக்கும் (இராமனுக்கு) இளவரசனாகிய பரதனுக்கும், உண்பிக்கப்பட்ட கொடிய நஞ்சு தலைக்கேறி இறக்கும் நிலையில் உள்ளவர்க்கு ஊட்டப்பட்ட நல்ல மருந்தை ஒத்ததாயிற்று.

கு :—இராமன் வாராமையால் இறக்கும் நிலையில் இருந்த பரதனையும் நாட்டு மக்களையும் உய்யுமாறு செய்த மோதிரத்திற்கு 'வல்விடமுற்று முற்றுவார்க்கு ஊட்டிய நன்மருந்து' பொருந்திய உவமையாதல் காணலாம். முற்றுவார் என்றது இறக்கும் நிலையினரை. இராமனது மோதிரத்தைக் கண்டதும் பரதனும் நாட்டு மக்களும் இராமன் வந்து விடுவான் என்ற நம்பிக்கையால் எரிபுகும் எண்ணத்தை விடுத்தனர் என்பது கருத்து. நஞ்சைப் போக்கி உயிர்கொடுக்கும் நன்மை மிக்கதாகலின் 'நன்மருந்து' எனச் சிறப்பித்தவாறு ஈண்டிய என்பது எதுகை நோக்கி ஈட்டிய எனவலித்தல் விகாரம் பெற்றது. பதினான்கு ஆண்டுகளாகக் கோசல நாட்டைத் தவவேடத்தோடு நந்திக் கிராமத்திலிருந்து ஆட்சி செய்த பரதனுக்கு இராமன் வந்து அரசேற்கப் போகும் இந்நிலையில் 'இளைய வேந்தன்' எனப் பட்டம் கொடுத்து மகிழ்கின்றார் புலவர். (246)

10342. அழுகின்ற வாயெலா மார்த்தெ ழுந்தன
விழுகின்ற கண்ணெலாம் வெள்ள மாறின
உழுகின்ற தலையெலா முயர்ந்தெ ழுந்தன
தொழுகின்ற கையெலாங் காலின் றோன்றலை.

அழுகின்ற வாய் எலாம் ஆர்த்து எழுந்தன
விழுகின்ற கண் எலாம் வெள்ளம் மாறின ;
உழுகின்ற தலை எலாம் உயர்ந்து எழுந்தன ;
தொழுகின்ற, கை எலாம், காலின் தோன்றலை.

பொ :—(இராமனது மோதிரத்தைக் கண்டமையால், முன்) அழுதுகொண்டிருந்த மக்கள்தம் வாய்கள் எல்லாம், (இப்போது மகிழ்ச்சியால்) ஆரவாரித்து எழுந்தன ; தாரைதாரையாக நீர் விழ்ந்துகொண்டிருந்த கண்கள் எல்லாம் இப்போது அக்கண்ணீர் வெள்ளம் ஒழிந்து களித்தன ; நிலத்தை உழுவது போன்று துன்பத்தால் தரையில் முட்டிக்கொண்டுருந்த தலைகள் எல்லாம் இப்போது நிமிர்ந்து எழுந்தன ; அவர்கள் கைகள் எல்லாம் காற்றுக் கடவுளின் மகனாகிய அனுமனைத் தொழுகின்றனவாயின.

கு :—இராமனது மோதிரங் கண்டபின் மக்கள் பழைய துன்பங்களை விடுத்து மகிழ்ந்தமை விளக்கியவாறு. தொழுகின்ற என்பது, அன் பெருத அகரவிற்று முற்றுச்சொல். கால்—வாயு தேவன். இத்துணை மகிழ்ச்சியையும் கொடுத்தவன் அனுமனே ஆதல் நினைந்து அவனை எல்லோரும் கைகூப்பித் தொழலாயினர் என்பது கருத்து. (247)

*மோதிரம் வாங்கிய பரதன் மகிழ்ச்சி 10343 — 10348*

10343\. மோதிரம் வாங்கித்தன் முகத்தின் மேலணைத்
தாதரம் பெறுவதற் காக்கை யோவென
ஓதினர் நாணுற வோங்கி னன்றொழும்
தூதனை முறைமுறை தொழுது துள்ளுவான்.

மோதிரம் வாங்கி, தன்முகத்தின்மேல் அணைத்து,
'ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோ ?' என
ஓதினர் நாண் உற, ஓங்கினன் — தொழும்
தூதனை முறை முறை தொழுது துள்ளுவான்.

பொ :—தன்னைத் தொழுகின்ற தூதனாகிய அனுமனைப் பன்முறை தொழுது மகிழ்ச்சியால் துள்ளுகின்றவனாகிய பரதன், அனுமனிடத்திலிருந்த மோதிரத்தை வாங்கித் தன் முகத்தின் மேல் வைத்து அணைத்துக் கொண்டு 'தேறுதல் பெறுதற்குரிய உடம்பா இது ?' என்று முன்சொன்னவர் நாணும்படி உடம்பு பூரிக்கப் பெற்றான்.

கு :—இராமனது மோதிரத்தை முகத்தில் வைத்து அணைத்த அளவில் பதினான்காண்டுகளாக வாடிய பரதனது உடம்பு பூரித்

தது என்றவாறு. இனி, எந்த உணவினாலும் பரதனுடைய உடம்பு தேறாது என்று அவ்வுடம்பின் இளைப்பைக்கண்டு சொன்னவர்கள், மோதிரத்தை அணைத்த பின்பு பரதனுடம்பு பூரித்த நிலையைக் காண்பார்களாயின் நாணுவார்கள் என்று கூறி அப்பூரிப்பின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. ஆதரம் பெறுதல்—தேறுதலைப் பெறுதல். இராமனது மோதிரத்தைக் கொணர்ந்தவன் என்ற பெருமை நினைந்து தூதனையும் தொழுவானாயினான் பரதன். துள்ளுதற்குக் காரணம் பதினான்காண்டு கழித்து இராமன் வருவானோ என்று ஐயுற்றிருந்த நிலை நீங்கி, வந்துவிட்டான் என்று தெளிந்த மகிழ்ச்சியே யாகும். ஆக்கை—உடம்பு. ஓகாரம் எதிர்மறைப் பொருளது. (248)

10344. ஆதிவெந் துயரலா லருந்த லின்மையால்
ஊதுறப் பறப்பதா யுலர்ந்த யாக்கைபோய்
ஏதில னொருவன்கொ லென்ன லாயது
மாதிரம் வளர்ந்தன வயிரத் தோள்களே.

ஆதி வெந்துயர் அலால், அருந்தல் இன்மையால்,
ஊதுறப் பறப்பதாய் உலர்ந்த யாக்கை போய்,
'ஏதிலன் ஒருவன்கொல்' என்னல் ஆயது;
மாதிரம் வளர்ந்தன வயிரத் தோள்களே.

பொ:—இராமனைப் பிரிந்தநாள் முதல் கொடிய துயரை அனுபவித்தலல்லது, உணவு அருந்துதல் இல்லாமையால், (வாயினால்) ஊதினாலும் பறக்கக்கூடியதாய் உலர்ந்த உடம்பு மாறி, அயலவன் ஒருவனோ என்று கண்டவர் கருதுமாறு பருத்தது; அவனுடைய வயிரம் போன்ற வன்மையுடைய தோள்கள் மலை போல வளர்ந்தன.

கு:—மேல் 'ஆதரம் பெறுவதற் காக்கையோ?' என்றதனை இங்கு விளக்கியவாறு. ஒருவர் வாயினால் ஊதும் காற்றுக்கும் ஆற்றாது பறக்கும் உடம்பு என்றது அவ்வுடம்பின் மெலிவு மிகுதியைப் புலப்படுத்தியவாறு. போதல் இங்கு மாற்றத்தையுணர்த்தியது. ஏதிலன்—அயலான்; பரதனல்லாத பிறனொருவனோ எனக் கண்டோர்ஐயுறுமாறு அவன் உடம்பு வளர்ச்சியுற்றது என்றவாறு. மாதிரம்—மலை. ''மழை தொழிலுதவி மாதிரங்

கொழுக்க'' (மதுரைக்காஞ்சி-10 உரை) என்றது காணலாம். அருந்தல் இன்மையாலுலர்ந்த யாக்கை என்க. (249)

10345. அழுநகு மனுமனை
யாழிக் கைகளால்
தொழுமெழுந் துள்ளும்வெங்
களிது ளக்கலால்
விழுமழிந் தேங்கும்போய்
வீங்கும் வேர்க்குமக்
குழுவொடுங் குனிக்குந்தன்
றடக்கை கொட்டுமால்.

அழும்; நகும்; அனுமனை
ஆழிக் கைகளால்
தொழும்; எழும்; துள்ளும்; வெங்
களி துளக்கலால்,
விழும் அழிந்து; ஏங்கும்; போய்
வீங்கும்; வேர்க்கும்; அக்
குழுவொடும் குனிக்கும்; தன்
தடக்கை கொட்டுமால்.

பொ:—மோதிரத்தைக் கண்டதனால் உளதாய மிக்க களிப்பு ஆட்டுதலால், அழுவான்; உடனே சிரிப்பான்; மோதிரம் பெற்ற கையினால் அனுமனைத் தொழுவான்; பின் எழுவான்; துள்ளு வான்; தரையில் வீழ்வான்; மனம் அழிந்து வருந்துவான்; அந் நிலைமாறி உடம்பு பூரிப்பபான்; வியர்ப்பான்; அங்குள்ள கூட்டத் தோடு நடிப்பான்; தன் பெரிய கைகளைக் கொண்டே தாளம் கொட்டுவான்.

கு:—பெருமகிழ்ச்சியும் கள்ளைப்போன்று உற்றாரை ஆட்டும் இயல்பினது ஆதல் இதனாலுணர்த்தியவாறு. 'களிதுளக்க லால்' என்பது இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் இயைந்து நின்று பொருளுணர்த்தியது. வீங்குதல் என்றது உடம்பு பூரித்தலை. குனித்தல்—நட்டமாடுதல். காலை வளைத்து ஆடும் இயல்பு புலப்பட நடினத்தைக் குனித்தல் என்ற சொல்லால் குறித்தார். நட்டமாடுங்கால் தாளம் கொட்டு

தற்குப் பிறர் அங்கு இன்மையால் பரதன் தானே தன்கைகளால் தாளம் கொட்டலானான் என்க. (250)

10346. ஆடுமி னாடுமி னென்னு மையன்பால்
ஓடுமி னோடுமி னென்னு மோங்கிசை
பாடுமின் பாடுமி னென்னும் பாவிகாள்
சூடுமின் சூடுமின் றூதன் றாளெனும்.

'ஆடுமின், ஆடுமின்!' என்னும்; 'ஐயன்பால்
ஓடுமின், ஓடுமின்!' என்னும்; 'ஓங்கு இசை
பாடுமின், பாடுமின்!' என்னும்; பாவிகாள்!
'சூடுமின், சூடுமின், தூதன் தாள்!' எனும்.

பொ :—(பரதன் தன்னைச் சூழ்ந்துள்ளாரை நோக்கி) 'ஆடுங்கள், ஆடுங்கள்!' என்பான்; (இராமனை எதிர் கொள்ள) 'ஓடுங்கள் ஓடுங்கள்!' என்பான்; (அவனைப்பற்றி), 'உயர்ந்த இசைப் பாடலைப் பாடுங்கள் பாடுங்கள்' என்பான்; 'ஏ பாவி களே! தூதனுடைய பாதங்களைத் தலையில் சூடிக்கொள்ளுங் கள், சூடிக்கொள்ளுங்கள்!' என்பான்.

கு :—தான் மகிழ்ச்சியால் செய்வதைத் தன்னைச் சார்ந்தாரும் செய்யுமாறு பரதன் தூண்டினான் என்க. ஐயன் என்று இராமனை. தன்னைச்சூழ்ந்துள்ள நாட்டுமக்களை அன்பினால் 'பாவிகாள்' என விளித்தான் பரதன். ''என் செயப்பாவிகாள் இங்கிருப்ப தங் கிருப்ப முன்னே, வன்சிறைக் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப் போன'' (கலிங்கத்துப் பரணி-304) என்பது இங்கு ஒப்புநோக் கத்தகும். தூதன் தாள்களை முன்னமே சூடிக்கொள்ளாத பாவத்தைச் செய்துள்ளமை நினைந்து அவர்களைப் 'பாவிகாள்' என்று விளித்தான் எனலும் ஆம். தாளை மலர் என்னும் கருத் தால் சூடுதற்குரியதாகக் கூறினர். இங்குச் சூடுதல் என்பது அவன் பாதங்களை வணங்குதலையே யுணர்த்தியது. என்னும் என்ற செய்யும் என் முற்று உயர்திணைஆண் பாலை உணர்த்தியது. இதனை 'நிகழூஉ நின்ற பலர்வரை கிளவி' என்பர் தொல் காப்பியர். (251)

10347. வஞ்சனை யியற்றிய மாயக் கைகையார்
துஞ்சுவ ரினியெனத் தோளைக் கொட்டுமால்
குஞ்சித வடிகண்மண் டலங்கள் கூடுற
அஞ்சனக் குன்றினின் ருடும் பாடுமால்.

'வஞ்சனை இயற்றிய மாயக் கைகையார்
துஞ்சுவர், இனி' எனத் தோளைக் கொட்டுமால்;
குஞ்சித அடிகள் மண்டலங்கள் கூடுற
அஞ்சனக் குன்றின் நின்று ஆடும், பாடுமால்.

பொ :—'(இராமன் வனம்புக) வஞ்சனையைச் செய்த மாயத் தன்மையுடைய கைகேயி இனி, மனம்பொருது மாய்வாள்' என்று கூறிக்கொண்டு தன் தோள்களைக் கொட்டுவான்; மடித்த பாதங்களின் சுவடுபட்டுத் தரையில் பலவட்டங்கள் தோன்றுமாறு அஞ்சன மலைபோல நின்று ஆடுவான்; அவ்வாடலுக்கு ஏற்பப் பாடுவான்.

கு :—'கைகையார்' என்று பலர்பாலால் கூறியது இகழ்ச்சிக் குறிப்புத் தோற்றுதற்கு என்க. கைகேயி தன் கருத்து நிறைவேருமையால் இராமன் முடிசூடுதலைப் பொருது இறப்பாள் என்பது பரதன் கருத்து. பரதன், தான் கருதிய வண்ணம் இராமன் வந்தது தனக்குப் பெரிய வெற்றியாகும் என்ற மகிழ்ச்சியால் தோளைக் கொட்டுவானுனன். மண்டலம் என்றது வட்ட வடிவம்; பரதன் அடிபெயர்த்து ஆடும்பொழுது அவனடிபட்ட இடங்களில் பல வட்ட வடிவமான சுவடுகள் தோன்றின என்பார் 'மண்டலங்கள் கூடுற' என்ருர். கூடுதல் — பொருந்துதல்; தோன்றுதல். (252)

10348. வேதியர் தமைத்தொழும் வேந்த ரைத்தொழும்
தாதியர் தமைத்தொழுந் தன்னைத் தான்ருெழும்
ஏதுமொன் றுணர்குரு திருக்கு நிற்குமால்
காதலென் றதுவுமோர் கள்ளிற் ருேற்றிற்றே,

வேதியர்தமைத் தொழும்;
வேந்தரைத் தொழும்;
தாதியர் தமைத் தொழும்;
தன்னைத் தான் தொழும்;

ஏதும் ஒன்று உணர்குறுது
இருக்கும் ; நிற்குமால் ; —
காதல் என்றதுவும் ஓர்
கள்ளில் தோற்றிற்றே.

பொ :—வேதம் வல்ல அந்தணர்களைத் தொழுவான் ; (தன்னை வணங்குதற்குரிய) அரசரைத் தொழுவான் ; தன் வீட்டில் வாழும் தாதியர்களைத் தொழுவான் ; தன்னைத்தானே தொழுவான் ; பின்பு ஏதொன்றும் உணராமல் உட்காருவான் ; பிறகு நிற்பான் ; அன்பு என்பதுவும் ஒருவகையான கள்ளில் தோன்றியதுதானே ?

கு :—அரசர் அந்தணரைத் தொழுதல் மரபு ஆகலின், பரதன் வேதியரைத் தொழுதது முறையான செயலேயாகும். ''இறைஞ்சுக பெரும நின் சென்னி சிறந்த. நான்மறை முனிவர் ஏந்துகை யெதிரே'' (புறநா–6) எனக் காரிகிழார் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நோக்கிக் கூறியுள்ளமை காணலாம். ஏனைய தொழுகைகள் மூன்றும் மகிழ்ச்சிப் பெருக்கால் செய்வதறியாது செய்தனவேயாகும். இதை நினைந்தே ''காதலென்றதுவுமோர் கள்ளில் தோற்றிற்றே'' என்று வினவுவாராயினர். காதல் என்றது இராமன்பால் பரதன் கொண்டிருக்கும் பேரன்பினை. காதல்மிக்க பரதன் செயல் கள்ளையருந்தியவர் செயலோடு ஒத்திருத்தலின் இங்ஙனம் வினவி, அப்பேரன்பின் இயல்பைப் புலப்படுத்தியவாறு. தனக்குக் கீழ்ப்பட்ட வேந்தர்களையும் தன்னை வணங்குதற்குரிய தாதியரையும் பரதன் வணங்கியது, அவர்களும் இராமன் வருகைக்காகத் தத்தமக்கேற்ற அறங்களைச் செய்து எதிர்நோக்கியிருந்தமை நினைந்து. தான் பதினான்காண்டுகாறும் செய்த தவம் பயனளித்தது என்ற மகிழ்ச்சியால் தன்னையும் பரதன் தொழுவானானான் என்க. ''என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே, மின்னு வார்சடை வேத விழுப்பொருள், செந்நெலார் வயற் சேறையுட் செந்நெறி, மன்னுசோதி நம்பால் வந்து வைகவே'' (தேவாரம்–5–77–2) எனத் தம்நெஞ்சையே திருநாவுக்கரசர் பாராட்டியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகும். (253)

*பரதன் அனுமனைப் பாராட்டி 'நீயார்?' என வினவுதல்*
*10349, 10350*

10349. அத்திறத் தாண்டகை யனுமன் றன்னைநீ
எத்திறத் தாயெமக் கியம்பி யீதியால்
முத்திறத் தவருளே யொருவன் மூர்த்தியை
ஒத்திருந் தாயென வுணர்கின் றேனென்றான்.

அத்திறத்து ஆண்தகை, அனுமன் தன்னை, 'நீ
எத்திறத்தாய்? எமக்கு இயம்பி ஈதியால்!
முத்திறத்தவருளே ஒருவன் மூர்த்தியை
ஒத்திருந்தாய் என உணர்கின்றேன்' என்றான்.

பொ :—(அன்பின் மிகுதியால்) அந்தத் தன்மைகளையுடைய ஆண்தன்மைவாய்ந்த பரதன், அனுமனை (நோக்கி) நீ எத் தன்மையுடையாய்? எமக்கு அறியச் சொல்லுக! மும்மூர்த்தி களுள் ஒரு மூர்த்தியை ஒத்திருக்கின்றாய் என்று உணர்கின்றேன்' என்று கூறினான்.

கு :—'எத்திறத்தாய்' என்றது 'யார்' என்னும் பொருளது. அனுமனை 'யார்' என்று வினவிவிட்டுத் தன்கருத்தில் அனு மனைப்பற்றித் தோன்றியதைப் பரதன் கூறியவாறு. இயம்பி யீதி என்புழி 'ஈதி' என்றது, துணைவினை. ஆல் - அசைநிலை. ஒரு வன் மூர்த்தியை என்பதை மூர்த்தி ஒருவனை என மாற்றுக. அனுமன் மும்மூர்த்தியருள் ஒரு மூர்த்திபோலத் தோன்றுகின்றான் என்பது பரதன் கருத்து. இனி, மூர்த்தி என்பதற்கு வடிவம் எனப் பொருள்கொண்டு ஒருவன் வடிவை ஒத்திருக்கின்றாய் எனக் கூறலும் ஆம். (254)

10350. மறையவர் வடிவுகொண்
டணுக வந்தனை
இறைவரி லொருவனென்
றெண்ணு கின்றனென்
துறையெனக் கியாதெனச்
சொல்லு சொல்லென்றான்

அறைகழ லனுமனு
மறியக் கூறுவான்.

மறையவர் வடிவு கொண்டு
அணுக வந்தனை;
இறைவரில் ஒருவன் என்று
எண்ணுகின்றனென்;
"துறை எனக்கு யாது எனச்
சொல்லு, சொல்!" என்றான்;
அறை கழல் அனுமனும்
அறியக் கூறுவான்.

பொ :—வேதம் உணர்ந்த அந்தணர் வேடம்பூண்டு என்பால் நெருங்கி வந்திருக்கின்றாய்; உன்னை முத்தேவரில் ஒருவன் என்று எண்ணுகின்றேன்; நின் வரலாறு எது என்று சொல்லுக, சொல்லுக! என்று பரதன் வற்புறுத்தினானாக, ஒலிக்கின்ற வீரக் கழலினை அணிந்த அனுமனும் தன்வரலாற்றைப் பரதன் அறியக் கூறுவானானான்.

கு :—'வடிவுகொண்டு' எனவே, இயல்பானவடிவு இவனுக்கு வேறு என்பதைப் பரதன் உய்த்துணர்ந்தான் என்பது புலப்படும். பரதன் மாய்வதற்காக வளர்த்திருந்த தீயைக் கையினால் கரியாக்கிய துணிவான செயலால் 'இவன் அந்தணனாக இருக்க இயலாது' எனப் பரதன் தெளிந்தான்போலும். இராமன் அனுமனைக் கண்டபோதும், விரிஞ்சனோ விடைவலானோ என அவன் அறிவுத்திறம் நினைந்து வினவியுள்ளது இங்கு நினையலாம். மேலைச் செய்யுளில் கூறிய 'முத்திறத் தவருளே ஒருவன் மூர்த்தியை ஒத்திருந்தாய்' என்பதையே இச் செய்யுளிலும் "இறை வரில் ஒருவனென்று எண்ணுகின்றனென்" என அனுவாதமாகக் கூறியதாகக் கொள்க. துறை என்றது, இங்கு ஒழுங்குபட்ட வரலாற்றினை. (255)

அனுமன் தன் வரலாற்றைக் கூறுதல் 10351, 10352

10351. காற்றினுக் கரசன்பாற்
கவிக்கு லத்தினுள்

நோற்றுளாள் வயிற்றின்வந்
துதித்து நும்முனாற்
கேற்றிலா வடித்தொழி
லேவ லாளனேன்
மாற்றினெ னுருவொரு
குரங்கு மன்னயான்.

காற்றினுக்கு அரசன்பால்
கவிக் குலத்தினுள்
நோற்றுளாள் வயிற்றின் வந்து
உதித்து, நும்முனாற்கு
ஏற்றிலா அடித்தொழில்
ஏவலாளனேன் ;
மாற்றினென் உரு, ஒரு
குரங்கு, மன்ன ! யான்.

பொ :—அரசனே ! யான் ஒரு குரங்கு ; காற்றுக்கு அதி தேவதையான வாயுதேவன் மூலமாக, வானர குலத்தில் மகப் பேற்றுக்காகத் தவஞ் செய்து கொண்டிருந்த அஞ்சனையின் வயிற்றில் வந்து பிறந்து, நும் அண்ணனுக்கு ஏற்புடையதல் லாத சிறிய அடிமைத் தொழில் செய்யும் ஏவலாளனேன், (அந்தணர் வடிவமாக) உருமாற்றி வந்தேன்.

கு :—நோற்றுளாள் என்றது அஞ்சனா தேவியை. சுமேரு மலையில் அரசாண்டு கொண்டிருந்த கேசரி என்னும் வானரத் தலைவனது மனைவியான அஞ்சனை திருவேங்கட மலையில் உள்ள திருமாலை நோக்கி நெடுநாள் தவஞ் செய்தாளாக, அத்தவத்தின் பயனாக அனுமன் அவள் வயிற்றில் பிறந்தனன் என்ற வரலாற்றை உள்ளடக்கி 'நோற்றுளாள் வயிற்றில் வந்துதித்து' என்றான். 'நும்முன்னவன் பெருமைக்கேற்றவாறன்றி அவன் தகுதிக்கு ஏலாத சிறிய அடிமைத்தொழில் செய்பவன்' எனத் தன்னை அனுமன் தாழ்வுபடுத்திக் கொண்டு கூறியவாறு. மன்ன! யான் ஒரு குரங்கு; நோற்றுளாள் வயிற்றின் வந்துதித்து நும்முனாற்கு ஏவலாளனேன் ; உருமாற்றினென் ; என இயையும். அனுமனது பிறப்பு வரலாற்றைக் காட்டிலும் இராமனோடு அவனுக்குள்ள தொடர்பு யாது என்பதே பரதன் அறிய அவா

வுவது ஆதலின் 'நும்முறைக்கு அடித்தொழில் ஏவலாளனேன்' என்பதைத் தெளிவாக்கியவாறு. பரதன் உய்த்துணர்வு உண்மையே என்பான் போல 'மாற்றினென் உரு' என்ருன் அனுமன். (256)

அனுமன் தன் பெருவடிவைக் காட்டுதல்

10352. அடித்தொழி ஞயினே னருப்ப யாக்கையைக்
கடித்தடந் தாமரைக் கண்ணி ஞேக்கெனுப்
பிடித்தபொய் யுருவினைப் பெயர்த்து நீக்கிஞன்
முடித்தலம் வானவர் நோக்கின் முந்துவான்.

'அடித்தொழில் நாயினேன் அருப்ப யாக்கையைக்
கடித்தடந் தாமரைக் கண்ணின் நோக்கு' என,
பிடித்த பொய் உருவினைப் பெயர்த்து நீக்கினன்,
முடித்தலம் வானவர் நோக்கின் முந்துவான்.

பொ:— 'அடிமைத்தொழில் செய்கின்ற, நாய்போன்று கடைப்பட்ட எனது சிறுமையுள்ள குரங்கு உடம்பை (நினது) மணமிக்க பெரிய தாமரை மலர்போன்ற கண்ணினுல் நோக்குவாயாக' என்று கூறிக்கொண்டு, தான் முன் மேற்கொண்ட பொய்யான அந்தணர் வேடத்தை மாற்றி நீக்கினவனுய்த் தனது தலையிடம் விண்ணுலகத்திலுள்ள தேவர்களின் நோக்கத்திற்கும் அப்பாற்பட முற்பட்டுச் செல்ல வளர்வானுனன்.

கு:—அருப்பம் — சிறியது. அனுமன் தன்னுருவம் சிறிய குரங்கின் உருவமாதல் நினைந்து அடக்கம் தோன்ற 'அருப்ப யாக்கை' என்று கூறிக்கொண்டான். கடி—வாசனை. பொய்யுரு என்றது, அந்தணர் வேடத்தை. வானத்தில் உள்ள வானவரின் நோக்கிற்கும் எட்டாதவாறு உயர்ந்து வளர்வானுனன் என்பார், 'முடித்தலம் வானவர் நோக்கின் முந்துவான்' என்ருர். இன், எல்லைப் பொருளது. முந்துதல் — மேற்பட்டு வளர்தல். தேவர்கள் தம் பார்வையின் எல்லைக்கும் மேற்பட்டு வளர்வானுனன் என்க. பரதனது பெருமை புலப்படுத்தவேண்டி 'கடித்தடந் தாமரைக் கண்ணிஞேக்கு' என்று கூறினன். (257)

அனுமனது பெருவடிவு கண்டோர் அதிசயமும் அச்சமும் அடைதல்.

10353. வெஞ்சிலை யிருவரும் விரிஞ்சன் மைந்தனும்
எஞ்சலி லதிசய மிதுவென் றெண்ணினர்
துஞ்சில தாயினுஞ் சேனை துண்ணென
அஞ்சின தஞ்சனை சிறுவ னாக்கையால்.

வெஞ்சிலை இருவரும், விரிஞ்சன் மைந்தனும்
'எஞ்சல் இல் அதிசயம் இது' என்று எண்ணினர்;
துஞ்சிலது ஆயினும், சேனை துண்ணென
அஞ்சினது, அஞ்சனை சிறுவன் ஆக்கையால்.

பொ:—அஞ்சனையின் புதல்வனான அனுமனது பெரிய உடம்பைக் கண்டமையால், கொடிய வில்லையேந்தியுள்ள பரத சத்துருக்கரும், பிரமன் புதல்வனாகிய வசிட்டனும் இவ்வடிவம் குறைவிலாத அதிசயமுடையது என்று எண்ணினார்கள்; பரதனுடைய சேனை, அச்சங்கொண்டு இறக்கவில்லையாயினும், திடுக்கிட்டு அஞ்சியது.

கு:—அறிவின் மிக்க பரதன் முதலிய மூவரும் அனுமன் பெருவடிவு கண்டு அச்சங் கொண்டிலர்; அதிசயங் கொண்டனர்; வலிமை மிக்க சேனை அனுமன் வடிவு கண்ட அச்சத்தால் இறந்துபட்டிலது; திடுக்கிட்டு அஞ்சியதோடமைந்தது; அந்த அச்சம் இறப்போடு ஒத்த துன்பம் தந்தது என்பது புலப்படுத்த 'துஞ்சில தாயினும்' என்றார். ஆக்கையைக் கண்டமையால், இது அதிசயமென்று எண்ணினர்; சேனை துண்ணென அஞ்சினது என இயையும். (258)

பரதன் அனுமனது பெருவடிவைச் சுருக்கிக் கொள்ள வேண்டுதல்

10354. ஈங்குநின் றியாமுனக் கிசைத்த மாற்றமத்
தூங்கிருங் குண்டலச் செவியின் சூழ்வர
ஓங்கல வாதலி னுலப்பில் யாக்கையை
வாங்குதி விரைந்தென மன்னன் வேண்டினன்.

'ஈங்கு நின்று யாம் உனக்கு இசைத்த மாற்றம் அத்
தூங்கு இருங் குண்டலச் செவியின் சூழ்வர

ஓங்கல ஆதலின் உலப்பு இல் யாக்கையை
வாங்குதி, விரைந்து' என, மன்னன் வேண்டினன்.

பொ:—'இவ்விடத்தில் (தரையில்) நின்றுகொண்டு யாம் சொல்லும் சொற்கள், அங்கு (வானத்தில்) உள்ள, தொங்குகின்ற பெரிய குண்டலம் அணிந்த நின் செவிகளில் பொருந்துமாறு உயர்ந்துசெல்லமாட்டா ஆதலால், முடிவில்லாத உயரமுடைய நின் பேருருவை விரைந்து உள்ளடக்கிக் கொள்க' என்று பரதனாகிய மன்னன் (அனுமனை) வேண்டிக்கொண்டான்.

கு:—ஈங்கு என்றது, தரையையும் அச்செவியின் என்ற அகரம் விண்ணினையும் சுட்டி நின்றன. உலப்பு — முடிவு. அனுமனது உடம்பின் உயர்விற்கு முடிவு தோன்றவில்லை ஆதலின் 'உலப்பில் யாக்கை' என அதனைச் சுட்டினன். வாங்குதல் என்பது, இங்குத் தன்னுள் அடக்கிக் கொள்ளுதலை யுணர்த்தியது. ''வான்தோய் நிவப்பின் தான் வந்தெய்தி, அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன் மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி'' (திருமுருகாற்றுப் - 288 - 290) என்புழி முருகன் தன் தெய்வப் பேருருவை யுள்ளடக்கிக்கொண்டு அன்பர்கட்குப் பழைய இளைய கோலத்தைக் காட்டும் இயல்பைக் கூறியிருத்தல் இங்கு ஒப்பு நோக்கத்தகும். அனுமனது பேருருவம் காதில் குண்டலமணிந்ததாக இருத்தல் இயல்பாதலின் 'தூங்கிருங் குண்டலச் செவியின்' என்றான். ''கண்டிலனுலக மூன்றுங் காலினால் கடந்துகொண்ட, புண்டரிகக் கணழிப் புரவலன் பொலங் கொள்சோதிக் குண்டல வதனம்'' (கிட்கிந்தா–அனுமப் – 35) என முன்னும் கூறப்பட்டிருத்தல் காணலாம். அனுமனது பேருருவைக் கண்ட சீதை ''கஞ்சமும் புரைவன கழலுங் கண்டிலாள்............அஞ்சின னிவ்வுரு வடங்குவாய்'' (உருக்காட்டு-106) என இவ்வாறே முன்பு வேண்டினமையும் நினைக. (259)

*அனுமனுக்குப் பரதன் பரிசு கொடுத்தல் 10355, 10356*

10355. சுருக்கிய வுருவனைத் தொழுது முன்னின்ற
அருக்கன்மா ணாக்கனுக் கைய னன்பினால்
பொருக்கென நிதியமும் புனைபொற் பூண்களின்
வருக்கமும் வரம்பில நனிவ ழங்கினான்.

சுருக்கிய வுருவனுத் தொழுது, முன் நின்ற
அருக்கன் மாணுக்கனுக்கு ஐயன்ன் அபினுல்
பொருக்கென நிதியமும், புனை பொன் பூண்களின்
வருக்கமும், வரம்புஇல நனி வழங்கினுன்.

பொ :—(தன் வேண்டுகோளின்படி) சுருக்கிக் கொண்ட உருவத்தையுடையவனுகத் தன்னைத் தொழுதுகொண்டு முன்னிலையில் நின்ற சூரியன் மாணுக்கனுகிய அனுமனுக்குப் பரதன், அன்பினுல், பொருளையும், பூண்பதற்குரிய பொன் அணிகலன்களின் வகைகளையும், அளவில்லாமல் மிகுதியாக விரைந்து கொடுத்தான்.

கு :—அனுமன் சூரியன்பால் நவ வியாகரணங்களையும் ஒரு நாளில் கற்றுக்கொண்டான் என்னும் வரலாற்றினையுளங் கொண்டு அருக்கன் மாணுக்கன் என அவனைக்குறித்தவாறு. பொருக்கென என்பது விரைவுக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். பொருக்கென வழங்கினுன் என்க. ஐயன் என்றது இங்குப் பரதனை. இராமன் வரவைத் தெரிவித்தமைக்காக அனுமனுக்குப்பரதன் பரிசில் வழங்கினுன் என்க. (260)

10356. கோவொடு தூசுநற் குலம ணிக்குலம்
மாவொடு கரிக்குலம் வாவு தேரினம்
தாவுநீ ருடுத்தநற் றரணி தன்னுடன்
ஏவருஞ் சிலைவலான் யாவு நல்கினுன்.

கோவொடு தூசு, நல் குல மணிக்குலம்,
மாவொடு கரிக்குலம், வாவு தேர் இனம்,
தாவு நீர் உடுத்த நல் தரணி தன்னுடன்,
ஏவரும் சிலை வலான், யாவும் நல்கினுன்.

பொ :—அம்பு தொடுத்தற்குரிய வில்லில் வல்லவனுகிய பரதன், பசுக்களையும் ஆடைகளையும் நல்ல சிறந்த மணிகளின் குவியல்களையும், குதிரைகளையும், யானைக் கூட்டங்களையும், வாவிச் செல்கின்ற தேரின் கூட்டத்தையும் (பள்ளம் நோக்கித்) தாவிச் செல்லும் நீர் நிலையை யடுத்துள்ள நல்ல மருதநிலங்களையும் மற்றுமுள்ள யாவற்றையும் அனுமனுக்குக் கொடுத்தான்.

கு :—நீர் நணித்தான நிலமே பெரும்பயன் தரும் ஆகலின் 'தாவு நீருடுத்த நல் தரணி' என்ருர். தரணி என்றது இங்கு

நிலத்தை. இனி, நாடு என்று கோடலும் ஒன்று. கோ — பசு. மா என்னும் பல பொருள் ஒரு சொல் இங்குக் கரி தேர் என்றவற்ரேடு சார்த்திக் கூறியுள்ளமையால் குதிரை என்னும் ஒரு பொருளை யுணர்த்தியது. இச்செய்யுள் முதலாக 10416 வரையுள்ள செய்யுட்கள் சில ஏடுகளில் இல்லை. (261)

இச்செய்யுளின் பின் சில ஏடுகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன :—

10356 (1) நின்றவ னிவ்வயி னெடிய வன்றனைச்
சென்றிறைப் பொழுதினிற் கொணர்வன் சென்றெனப்
பொன்றிணிப் பொலங்கழல் வணங்கிப் போயினன்
வன்றிறல் மாருதி வளர்ந்த கீர்த்தியான்.

வேறு.

,, (2) ஆய காலையி லையனைக் கொண்டுதன்
தூய காலி னுறைவிடந் துன்னினன்
மேய சேனைக் கமைப்பன் விருந்தெனத்
தீயி னுகுதி செங்கையி னேக்கினன்.

,, (3) இன்றருள் புரிந்தி ராமன்
என்னிடத் தெண்ணி லாத
வென்றியஞ் சேனை யோடும்
விருந்தமு துகந்தான் மெய்ம்மை
ஒன்றிட வருக வென்றங் குரைத்தலு
மும்பர் நாட்டு
நன்றிசேர் மங்கை மார்க
ளமுதுடன் நண்ண வந்தார்.

வேறு

,, (4) பான நெய்யொடு நானமுஞ் சாந்தமும் பலவும்
ஆன வெள்ளிலை யோடடைக் காய்கருப் பூரம்
தேன ளாவிய முக்கனி காயொடு தேன்பால்
வான நாட்டர மங்கையர் மகிழ்ந்துகொண் டிழிந்தார்.

வேறு

,, (5) கங்கைதரு கழலாற்கு
மிளவலுக்குங் காரிகைக்கும்
துங்கமுடி வீடணற்கும்
சுக்கிரீவப் பெருமாற்கும்

தங்குபெருஞ் சேனைக்கும்
தனித்தனியே பொற்கலக்கால்
அங்கடைவின் மண்டலமிட்
டணிவிளங்க நிறைத்தனரால்.

10356 (6) வெள்ளைநறும் போனகமும்
மிகுபருப்பும் பொரிக்கறியும்
தள்ளரிய முக்கனியுஞ்
சருக்கரையு நறுநெய்யும்
எள்ளரிய பலவிதத்துக்
கறியமுது மிமையவர்தம்
வள்ளல்முத லனைவோர்க்கும்
வரிசைமுறை படைத்தனரால்.

,, (7) நீருலவி நீர்குடித்து
நினைத்திருந்தா குதிபண்ணிக்
காருலவு மேனியனுங்
காரிகையு மிளங்கோவும்
தேரிரவி திருமகனுந்
தென்னிலங்கைப் பெருமானும்
போரினுயர் சேனையுடன்
போனகம்பற் றினர்பொலிவால்.

இச்செய்யுளின் பின் 328 முதல் 331 வரையுள்ள இப்படலப் பாடல்கள் சில ஏடுகளில் காணப்படுகின்றன.

வேறு

10356 (8) இரவி காதலன் இலங்கையர் கோனிவ ருதவி
அரசி னுசைய தென்னலா மனுமனே யென்பால்
விரவு காதலின் நீ செய்த வுதவிக்கு வேறு
தருவ தொன்றிலை யுடனுனுந் தரமது வல்லால்.

,, (9) முனிவன் வாண்முக நோக்கியே
முழுதுணர் முனியே
அனும னென்பவ னளித்தபே
ருதவியின் றெம்மால்

நிணைய வுமுரைப் பவும
ரிதது நிலையா
புனித வுண்டியெம் முடனென
விராகவன் புகன்ருன்.

10356 (10) என்ற வாசகங் கேட்டந்த
விருந்தவன் முதலோர்
நன்று நன்றுநின் கருணையென்
றியாவரும் நவில
துன்று தாரவன் பாதுகந்
தொழுதினித் தோன்றல்
ஒன்று கூறுவ கேளென
மாருதி யுரைக்கும்.

,, (11) செய்யும் மாதவ முடைமையி
னினக்கன்பு சிறந்து
பொய்யில் சாதனம்
பூண்டனன் புண்டரீ கத்தின்
ஐயன் நின்பொரு ளுந்தியென்
றிணையடி யமையும்
உய்யுமா றெனக் காணையென்
றடிதொழ உவந்தான்.

,, (12) வெம்புபோ ரரக்கன் மைந்தன்
விட்டவத் திரத்தாற் பட்ட
வெம்பியு மியாரு முய்ய
விரவிடை மருந்து தந்தாய்
பைம்பொனூர் மௌலி சூடப்
பரதனை யின்று காத்தாய்
உம்பரா தரிக்க நின்றுய்
உடனுண்ண வருதி யென்ருன்.

,, (13) அழகன தருளிச் செய்ய
வழகனு மஞ்சி யஞ்சித்
தொழுதுவாய் புதைத்து நின்று
தூயவ னமுது செய்யும்

பொழுதினில் இரவி முன்னம்
புணரியிற் றேன்றக் கண்டு
பழமெனப் பாய்ந்த தென்ன
பரிகலம் பற்றிப் பாய்ந்தான்.

இச்செய்யுளின்பின் சில ஏடுகளில் இப்படலத்து முன்வந்துள்ள 10286 — 25, 10286 — 26, 10286 — 27 என்ற மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன.

10356 (14) கொற்ற வன்னுட னுண்ணுமோ கோதின்மா தவனே
வெற்றி வீரனே யெனவஞ்சி நின்றனன் விமலன்
மற்றப் போனக மொருகைவாய் வைத்தபின் வாராப்
பற்றி யப்பொழு தனுமனும் பரிகலம் பரித்தான்.

,, (15) பரிக லத்தமு தேந்தியே பந்திகள் தோறும்
இரவி காதலற் கங்கதற் கிலங்கையர் வேந்தற்
குரிய வீரர்கட் களித்துத்தா னவர்களோ பாதி
வரிசை யாலுண்ண மாமுனி விருந்து முண்டனரால்.

,, (16) பரிகலத் தொவ்வோர் பிடி கொடு பந்திக டோறும்
இரவி புத்திரற் கிலங்கையர் வேந்துக்கு முதவி
உரிய நற்றம ரனைவர்க்கு முதவிபின் னவனும்
வரிசையிற் கொண்டு மாமுனி விருந்து முண்டனனல்.

இப் பாடல் 52-ல் சிறிது வேறுபாட்டுடன் காணப்படுகிறது.

,, (17) அன்ன காலையிற் போனக
மமரர்பொற் கலத்தே
முன்னம் போற்படைத் துத்திரு
முன்பு வைத்தனரால்
உன்னும் பேருல கனைத்து
முண்டும் பசி தீரா
மன்னன் மாமுனி விருந்து
முண் டகமகிழ்ந் தனனல்.

,, (18) பான நல்லமு துடன்கருப் பூரமும் பலவும்
ஏனை வானவர் மகளிர்க ளேந்திமுன் னிற்பத்
தான மெய்ப்படைத் தம்முடைப் போகத்துட் டந்த
ஆன கற்பக நாட்டமிழ் தென்பது மயின்றுன்.

10356 (19) அண்ணல் மாமுனி யருளிய
போனக மளக்கர்
வண்ணனே முதல் வானரக்
கடலெலாம் வாய்ப்பெய்
துண்ணும் வாசகங் கேட்டிமை
யோர்முனி வோரும்
மண்ணு நாகரும் யாவரு
மருந்துயர் மறந்தார்.

,, (20) மான வேந்தரும் வள்ளலும்
மலர்க்கரம் விளக்கி
ஆன வெள்ளிலை யோடடைக்
காயமு தருந்தி
ஞான மாமுனி பெருமையைப்
புகழ்ந்துநா யகனும்
பானல் வேல்விழி யாளொடும்
படையொடு மிருந்து.

வேறு.

,, (21) ஆரிரு ளகலும் காலை
யமலனு மறையோன் பாதம்
ஆர்வமோ டெழுந்து சென்று
வணங்கலு மவனு மாசி
சீரிது கூறிச் சேறி
யென்றலுந் தேர்மேற் கொண்டு
சீரிய தானை யோடுஞ்
சிறப்பொடு மகிழ்ந்து சென்ருன்.

வேறு

,, (22) விருந்து முண்டுமா முனிவனை
விடைகொண்டு தேர்மேல்
அருந்த திக்கற்பி னுளொடும்
படையொடு மமைந்தான்
வருந்து கோசல நாடுட
னயோத்தியும் வாழப்
பரிந்தி ராமனு மேகினன்
பரதனைக் காண்பான்.

இச்செய்யுளின் பின் சில ஏடுகளில் இப்படலத்தின் 305-ஆம் செய்யுள் எழுதப்பட்டுள்ளது.

சில பிரதிகளில் இச்செய்யுளின்பின்,

10356 (23) இருந்தவவ் விராமன் றன்னை
யிருடிக ளெவரும் வந்து
பெருந்திற லிலங்கை தன்னை
யெங்ஙனம் பெரியோய் நீயே
வருந்தினை குரங்கு கொண்டு
மாயவல் லரக்கர் தம்மை
திருந்திய போரில் வென்று
மீண்டது செப்பு கென்றான்.

என்ற செய்யுள் காணப்படுகின்றது.

சிலசுவடிகளில் இச்செய்யுளின்பின்,

10356 (24) பற்றிய தவத்தினுள்ள பருவநல்
லமுதத் தோடு
முற்ற வெம்பசித்தான் தீர
வுணவுகொண் டனும னிற்பக்
கொற்றவன் பரதன் றன்பால்
கூடுதி யின்னமென்ன
மற்ற மாருதியுஞ் சென்றான்
மனமகிழ் பரதன் றன்பால்.

என்ற செய்யுள் உளது.

*இராமனை எதிர்கொள்ள நகர மக்களைப் புறப்படச் செய்யுமாறு பரதன் சத்துருக்கனிடம் சொல்லுதல்*

10357. இளவலை யண்ணலுக் கெதிர்கொள் கென்றுநம்
வளமதி லயோத்தியில் வாழு மக்களைக்
கிளையொடு மேகெனக் கிளத்தி யெங்கணும்
அளையொலி முரசின மறைவிப் பாயென்றான்.

இளவலை, ' "அண்ணலுக்கு
எதிர் கொள்க" என்று, நம்
வளமதில் அயோத்தியில்
வாழும் மக்களை,

"கிளையொடும் ஏகு" எனக்
கிளத்தி, எங்கணும்
அளை ஒலி முரசு இனம்
அறைவிப்பாய்' என்றான்.

பொ :—(பரதன் தன்) தம்பி சத்துருக்கனை (நோக்கி) நமது மதிலால் சூழப்பட்டுள்ள அயோத்தியில் வாழும் மக்களுக்கு, 'பெருமையுடைய இராமனை எதிர்கொள்ளவேண்டி, உறவினரோடும் எதிர்செல்க' என்றும் சொல்லி எவ்விடத்தும் சென்று கலக்கின்ற பேரோசையையுடைய முரசின் வகைகளை (வள்ளுவரைக்கொண்டு) அடிப்பிப்பாயாக' என்று கூறினான்.

கு :—மதில்வளை அயோத்தி என்க. முரசத்தின் பேரொலி பலவிடங்களிலும் கலந்து ஒலிக்கும் இயல்பினது ஆகலின் 'அளை ஒலி முரசு' என்றார். அளைதல் — கலத்தல். 'அறைவி' என்பது ஏவன்மேல் ஏவல். கிளை — உறவினர். (262)

*நகரை அணிசெய்கென மக்களுக்குச் செப்புமாறு சத்துருக்கனுக்குப் பரதன் கூறுதல் 10358, 10359*

10358. தோரண நட்டுமேற் றுகில்பொ திந்துநற்
பூரணப் பொற்குடம் பொலிய வைத்துநீள்
வாரண மிவுளிதேர் வரிசை தான்வழாச்
சீரணி யணிகெனச் செப்பு வாயென்றான்.

'"தோரணம் நட்டு, மேல்துகில் பொதிந்து, நல்
பூரணப் பொற்குடம் பொலிய வைத்து, நீள்
வாரணம் இவுளி தேர் வரிசைதான் வழாச்
சீர்அணி அணிக!" எனச் செப்புவாய்' என்றான்.

பொ :—"தோரண கம்பங்களைத் தெருக்களில் நட்டு அக் கம்பங்களுக்குமேல் சீலைகளை மூடிச்சுற்றி, நல்ல நீர்நிறைந்த பொன் குடங்களைப் பொலிவுண்டாக வைத்து, உயர்ந்த யானை, குதிரை, தேர் என்பவற்றை அவற்றிற்குரிய முறைமை தவறாமல் சிறந்த அலங்காரங்களைச் செய்க, என்று சொல்லுவாயாக" என்றும் (தம்பியை நோக்கிக்) கூறினான்.

கு :—நட்டு என்ற வினையால் தோரணகம்பம் என்பது பெறப் பட்டது. கம்பங்களுக்கு வண்ணத்துணிகளால் உறையமைக் கச் செய்தவாறு. வாரணம் என்ற பல பொருளொருசொல் இவுளிதேர் என்பவற்றைச் சார்த்திக் கூறப்பட்டதால் யானை என்ற ஒரு பொருளுக்கு உரியதாயிற்று. (263)

10359. பரத்துவ னுறைவிடத் தளவும் பைம்பொனீள்
சிரத்தொகை மதிற்புறத் திறுதி சேர்தர
வரத்தகு தரளமென் பந்தர் வைத்துவான்
புரத்தையும் புதுக்குமா புகறி போயென்ருன்.

‘பரத்துவன் உறைவிடத்து
அளவும், பைம்பொன் நீள்
சிரத்தொகை மதில் புறத்து
இறுதி சேர்தர,
வரத்தகு தரள மென்
பந்தர் வைத்து, வான்
புரத்தையும் புதுக்குமா
புகறி, போய்’ என்ருன்.

பொ :—‘பரத்துவாச முனிவர் ஆசிரமம் வரையில் பசுமை யான பொன்னலியன்ற நீண்ட சிகரங்களையுடைய நம் மதிற் புறத்தில் வந்து முடியுமாறு சிறப்பு மிக்க முத்துக்களாலாய மெல்லிய பந்தல் அமைத்து, சிறந்த நம் அயோத்தி நகரத்தையும் புதுக் கோலம் செய்யுமாறு சென்று சொல்லுக’ என்று சத்துருக்கனிடம் கூறினன்.

கு :—அயோத்தியின் மதிலிலிருந்து பரத்துவாசர் ஆசிரமம் வரையில் முத்துப் பந்தல் அமைக்குமாறும் அயோத்தி நகரைக் கோலம் செய்து புதுக்குமாறும் நாட்டு மக்களுக்குத் தெரிவிக்குமாறு பரதன் கூறினன் என்க. வான் புரம் என்றது சிறந்த அயோத்தியை. புதுக்குமாறு என்பதில் ஈறு கெட்டது. புகல்தி என்பது புகறி எனவாயிற்று. (264)

சத்துருக்கன் பரதனது கட்டளையைச் சுமந்திரனுக்கு அறிவித்தல்

10360. என்றலு மவனடி யிறைஞ்சி யேகியக்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினன்

நன்றுணர் கேள்விய னவையில் செய்கையன்
தன்றுணைச் சுமந்திரற் கறியச் சாற்றினான்.

என்றலும் அவனடி
இறைஞ்சி ஏகி, அக்
குன்று உறழ் வரிசிலைக்
குவவுத் தோளினான்,
நன்று உணர் கேள்வியன்,
நவை இல் செய்கையன்,
தன் துணைச் சுமந்திரற்கு
அறியச் சாற்றினான்.

பொ :—என்று பரதன் கூறிய அளவில், அந்தக் குன்று போன்ற, கட்டமைந்த வில்லேந்திய, திரண்ட தோளிணையுடைய சத்துருக்கன், அந்தப் பரதன் திருவடிகளை வணங்கிச் சென்று, நன்கு கேட்டறிந்த நூற்கேள்விகளையுடையவனும் குற்றமற்ற செய்கையுடையவனும் தனக்குத்தானே ஒப்பானவனும் ஆகிய சுமந்திரனுக்கு (அப்பரதன் கட்டளையை)த் தெரியச் சொன்னான்.

கு :—குன்றுறழ் தோளினான் என இயையும். குன்றினை வரிசிலைக்கு உவமையாக்கலும் ஒன்று. சுமந்திரன், கற்பவை கற்று அவற்றிற்குத்தக நிற்பதில் நிகரற்றவன் என்பார், தன் துணைச் சுமந்திரன் என்றார். பரதன் தன்னிடம் கூறியதைச் சத்துருக்கன் சுமந்திரனிடம் கூறினான்; கட்டளையை நிறைவேற்றற்குரியவன் அவனாகலின் என்க. (265)

சுமந்திரன் வள்ளுவர்க்குக் கட்டளையிடுதல்

10361. அவ்வுரை கேட்டலு மறிவின் வேலையான்
கவ்வையி லன்பினிற் களிக்குஞ் சிந்தையான்
வெவ்வெயில் புரைமணி வீதி யெங்கணும்
எவ்வமின் றறைபறை யெற்று கென்றிட.

அவ்வுரை கேட்டலும், அறிவின் வேலையான்,
கவ்வை இல் அன்பினில் களிக்கும் சிந்தையான்,

'வெவ் வெயில் புரைமணி வீதி எங்கணும்
எவ்வம் இன்று அறை பறை எற்றுக' என்றிட.

பொ :—(சத்துருக்கன் சொன்ன) அச்சொல்லைக்கேட்ட அளவில் அறிவின்கடல் போன்றவனாகிய சுமந்திரன், ஆரவாரம் இல்லாத, அன்பினால் களிக்கின்ற, சிந்தையையுடையவனாய், 'வெப்பமிக்க சூரியனைப்போன்று ஒளிவீசும் மணிகள் பதித்துள்ள தெருக்களில் எல்லாம் துன்பம் இன்றி அடித்தற்குரிய முரசினை அடிப்பீராக' என (வள்ளுவரை நோக்கி)ச் சொல்ல.

கு :—சுமந்திரனுடைய பரந்த அறிவைப்புலப்படுத்த 'அறிவின் வேலையான்' என்று இல்பொருளுவமை கூறியவாறு. கவ்வை—ஆரவாரம். கவ்வையில் சிந்தையான், களிக்குஞ் சிந்தையான் எனத் தனித்தனி இயையும். ஓங்கி அறைய வேண்டாது மெல்லென அறைந்த அளவில் பேரொலி யுண்டாக்கும் முரசம் என்பார், 'எவ்வமின்று அறைபறை' என்றார். எவ்வம்—துன்பம். எற்றுதல்—குணில்கொண்டு அடித்தல். (266)

வள்ளுவன் முரசறைதல்

10362. வானையுந் திசையையுங் கடந்த வான்புகழ்க்
கோனையின் றெதிர்கொள்வான் கோல மாநகர்த்
தானையு மரசரு மெழுக தானென
யானையில் வள்ளுவர் முரச மெற்றினார்.

'வானையும் திசையையும் கடந்த வான்புகழ்க்
கோனை இன்று எதிர்கொள்வான், கோல மாநகர்த்
தானையும் அரசரும் எழுகதான்' என,
யானையில் வள்ளுவர் முரசம் எற்றினார்.

பொ :—வள்ளுவர், — 'வானுலகத்தையும் திசைகளையும் கடந்து பரவிய சிறந்த புகழையுடைய அரசனாகிய இராமனை இன்று எதிர்கொள்வதற்கு, அழகிய பெரிய அயோத்தி நகரில் உள்ள சேனையும், அரசர்களும் புறப்படுவார்களாக' என்று, கூறிக் கொண்டு யானையிலிருந்து முரசறைந்தார்கள்.

கு :—மண்ணுலகம் முழுமையும் பரவியதோடன்றி விண்ணுலகிலும் திசைகளிலும் சென்று பரவிய புகழையுடையவன்

இராமன் என்றது, தேவர்கட்கு இடுக்கண் செய்தவனும் திசை யானைகளின் மருப் பொசித்தவனும் ஆகிய இராவணனைக் கொன் றமையால் என்க. இப்போது தேவர்களும் திசையானைகளும் இராவணனால் பட்ட துன்பங்கள் நீங்கப்பெற்று இராமன் புக ழையே பேசுவார்கள் ஆதலின், இராமன் புகழ் வானையும் திசையையும் கடந்த வான்புகழாதல் தெளியலாம். (267)

முரசொலி கேட்ட நகர மக்கள் ஆரவாரித்துக் கொண்டு புறப்படுதல்

10363. முரைசொலி கேட்டலு முழங்கு மாநகர்
அரைசரு மாந்தரு மந்த ணாளரும்
கரைசெய லரியதோ ருவகை கைதரத்
திரைசெறி கடலென வெழுந்து சென்றதால்.

முரைசொலி கேட்டலும், முழங்கு மாநகர்
அரைசரும் மாந்தரும் அந்தணாளரும்,
கரை செயல் அரியதோர் உவகை கைதர,
திரை செறி கடல் என எழுந்து சென்றதால்.

பொ :—வள்ளுவர் அறைந்த முரசத்தின் ஒலியைக் கேட்ட அளவில் மகிழ்ச்சியால் ஆரவாரிக்கின்ற, அரசரும் குடிமக்களும் அந்தணாளரும் நிறைந்த பெரிய அயோத்தி நகரம், எல்லை வகுக்க முடியாத மகிழ்ச்சி கைதந்து எழுப்ப, அலைகள் நெருங் கிய கடலைப்போல, ஆரவாரித்து எழுந்து சென்றது.

கு :—நால்வகை வருணத்துள் அரசரும் அந்தணாளரும் கூறப்பட்டமையால் இடையில் உள்ள 'மாந்தரும்' என்பது வணிகமாந்தரையும் வேளாண் மாந்தரையும் குறித்ததாகக் கொள்ளலாம். அரசரும் மாந்தரும் அந்தணாளரும் நிறைந்த மாநகர் எழுந்து சென்றது என ஒரு சொல் வருவித்து முடிக்க. மாநகர் இடவாகு பெயராய் நகரமாந்தரை யுணர்த்தியது. தரை யில் அமர்ந்துள்ள ஒருவரை, மற்றொருவர் கைதந்து எழுப்பி நடத்திச் செல்லுதல்போல, இராமனைக் கண்டு அழைத்துவரும் பேறு வாய்த்தமையால் உண்டான மகிழ்ச்சி, நகர மாந்தரைக் கைதந்து எழுப்பி அழைத்துச் செல்வதுபோலிருந்தது என்னும் கருத்துப் புலப்பட 'உவகை கைதர' என்றார். நகரமாந்தர்

மகிழ்ச்சியாலுந்தப்பட்டுச் சென்றுர் என்க. மிகுதிக்கும் ஆரவாரத்திற்கும் உவமையாக வேண்டித் திரைசெறி கடலைக் கூறினர். (268)

அம்முரசொலியின் சிறப்பு

10364. அனகனை யெதிர்கொள்கென் றறைந்தபேரிநற்
கனகநல் கூர்ந்தவர் கைப்பட் டென்னவும்
சனகன தூர்க்கென முன்னஞ் சாற்றிய
வணைகடிப் பேரியு மொத்த வாமரோ.

'அனகனை எதிர்கொள்க' என்று,
அறைந்த பேரி, நல்
கனகம் நல்கூர்ந்தவர்
கைப்பட் டென்னவும்,
சனகனது ஊர்க்கு என
முன்னம் சாற்றிய
வணைகடிப் பேரியும்,
ஒத்த ஆம் அரோ.

பொ :—'குற்றமற்றவனுகிய இராமனை எதிர்கொள்க' என்று கூறி அடித்த முரசத்தின் ஒலி, சிறந்த பொன்முடிப்பு வறியவர் கையில் அகப்பட்ட அதனையும், 'சனகனது மிதிலைக்கு எழுக' என்று முன்னம் (சீதையின் திருமணம் நடந்த ஞான்று) அடித்த, அலங்கரிக்கப்பெற்ற கடிமண முரசொலியையும் ஒத்திருந்தது; (அந்நகர மார்ந்தர்க்கு).

கு :—அனகன்—குற்றமற்றவன். பதினுன்காண்டுகளாகக் காணப்பெருது வருந்தும் நகரமாந்தர், அம்முரசொலி கேட்டு இராமனை மீண்டும் காணப்போகின்ருேம் என்று மகிழும் மகிழ்ச்சி, பொருள் இல்லாத வறியவர்க்குப் பெரும் பொருள் கிடைத்தால் வரும் மகிழ்ச்சி போன்றது என்பார், நற்கனகம் நல்கூர்ந்தவர் கைப் பட்டென்னவும் ஒத்த என்ருர். மிதிலையில் இராமன் சீதையை மணக்கும் ஞான்று அயோத்தியில் உள்ளார்க்கு முரசு அறைந்து 'அனைவரும் மிதிலைக்கு எழுக' என்று சொன்னதைப் பாலகாண்டத்துள் காணலாம். இராமனை வரவேற்கும் மகிழ்ச்சி அவன் திருமணம்காணும் மகிழ்ச்சி போன்றது எனச் சிறப்பித்தவாறு. கடிப்பேரி—மணமுரசு. (269)

அறுபதினுயிரம் அக்குரோணி சேனையும் நகரமாந்தரும்
இராமனை வரவேற்க மகிழ்ச்சியோடு போதல்

10365. அறுபதி னுயிர மக்கு ரோணியென்
றிறுதிசெய் சேனையு மேனை வேந்தரும்
செறிநகர் மாந்தருந் தெரிவை மார்களும்
உறுபொரு ளெதிர்ந்தென வுவந்து போயினர்.

அறுபதினுயிரம் அக்குரோணி என்று
இறுதி செய் சேனையும், ஏனை வேந்தரும்
செறிநகர் மாந்தரும், தெரிவை மார்களும்,
உறுபொருள் எதிர்ந்தென, உவந்து போயினர்.

பொ :—அறுபதினுயிரம் அக்குரோணி என்று வரையறை செய்யப்பட்ட சேனையும், மற்றைய மன்னர்களும், நெருங்கிய நகர மாந்தர்களும் மகளிரும், (நெடுங்காலமாகத் தேடிக்கொண்டிருந்த) பெரும்பொருளை எதிர்ப்பட்டாற்போல, மகிழ்ந்து (இராமனை வரவேற்கச்) சென்றனர்.

கு :—தயரதனுக்கு அமைச்சரும் மனைவியரும் ஆயுளாண்டும் அறுபதினுயிரம் என்ற வரையறை பெற்றிருந்ததுபோல அவனுடைய சேனையும் அறுபதினுயிரம் அக்குரோணி என்று எல்லைக் குட்பட்டிருந்தது என்க. தெரிவை என்பது மகளிரின் பருவத்தைக் குறித்ததன்று; பெண்டிர் என்ற பொதுப்பொருளை யுணர்த்தியது. (270)

இச்செய்யுளின் பின் 74—ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10365 (1) மன்னர் யாவரும் வந்தடி யேற்றலும்
மின்னற் கின்றி யெயின்கொ விராகவன்
சொன்னம் பின்ன கலங்கரி தூசுபார்
அன்ன வன்னவற் கீய்ந்தொன் றறைகுவான்.

,, (2) சூரி யன்றரு தோன்றலை வாவெனு,
வேரி யந்தொடை தூதர் வினவலும்
பாரி லோரிட மின்றெனப் பண்ணைகொண்,
டாரி யன்பத மங்கை யிறைஞ்சினர்.

10365 (3) வந்தோ ராண்டுள நீரினை மன்னவன்,
சிந்தை கூரச் சிறந்தே விடைகொடாத்
தந்தந் தேசந் தமக்கவர் போனபின்,
இந்தி ரன்னென வெங்கோ னிருந்தனன்.

,, (4) அந்த சூரியன் மாமகன் வாண்முகன்,
எந்தை நோக்கிநீ யிங்கிரு வென்றபின்
நந்து லாவுகை நாரணன் னன்குடை,
சிந்தை யாரக் கொடுத்தனன் செப்புவான்.

,, (5) பொன்னினு மணிபினும் புனைந்த வாரமும்,
பன்னிய பணிவகை பாதி யாயதும்,
சென்னியி னணிந்தன சேரச் சேர்த்திய,
தன்னவை யெழுதின தணிகள் தன்னுடன்.

,, (6) மிக்க பட்டு வகையுடன் வெண்மைசேர்,
தக்க தூசுடன் சாற்றும் வரிசைகள்
கைக்கு கந்தன யாவையும் காகுத்தன்,
நக்கு நக்கு நலம்பெற நல்குவான்.

,, (7) தேரு மாவுங் களிறுஞ் சிவிகையும்,
ஊரும் நாடு முடன்குடை சாமரை
சீரி தான விதானம் கொடிமுதல்,
ஆரி யன்மிக வீந்துபி னன்பினுல்.

,, (8) வாலி மாமகன் றன்னை வரவழைத்,
தால முண்டவ னீய்ந்த மரந்தமர்க்
கேல வீய்ந்த திவ் வேழுலகும் பெறும்,
கோல வார மிதுவெனக் கூறினுன்.

,, (9) தந்தை முன்பு தனக்குச் சமைத்தது,
விந்தி ரன்பிர மாதியர்க் கில்லது
பந்தி பந்தி நவமணி பற்றிய,
வந்த பல்கல னியாவையும் வாங்கியே.

,, (10) கோடி யென்று கொடுத்தனன் பட்டணி,
ஆடல் மாத்திரள் ஆனையின் பொன்மணி
பாடல் மாதர் பல்லிய பண்புடை,
நாட சாலையு நல்கின னல்கிப்பின்.

10365 (11) சாம்பவன்றனை நோக்கிக் கணக்கிலாத்,
தூசு மாவும் கரிகளும் சொல்லிய
தேச மெங்கு மதிகச் சிறப்புடன்,
நேசமேவிய சிந்தையி னேர்ந்தபின்.

,, (12) நீலனுக்கு ... ... ... ... ... ...
... ... ... ... ... ராகவன் கோவைசால்
ஞால முற்றும் பேருணவாற்றின
மாலை தன்னுடன் மற்றும் ... ... ...

இச் செய்யுள் விடைகொடுத்த படலம் 27க்குப் பின் 63–ஆம் பிரதியில்,

[நீலனுக்கு நிறைந்தரு ... ... ... ... ... தண்ணினுற்
கோலமான விராகவன் கோவை சால்
ஞாலமுற்றும் பேருடன் ... ... ... ... றிண்
மாலை தன்னுடன் மற்றும் வழகிங்யே].

என்று சிதைந்து காணப்படுகிறது.

(இந்தப் பன்னிரண்டு செய்யுட்களும் விடைகொடுத்த படலத்தில் இருக்கத்தக்கவை; இங்குத் தவறுதலாக எழுதப்பட்டுள்ளன என்பதை இப்பாடல்களே தெரிவிக்கின்றன.)

[மற்றுள ... ... ஈந்தான். விடை கொடு படலம் 20 – b]
[குகனையு ... ... ... கலங்களோடும். ,, 30 – b]
[வாசியும் ... ... ... ... வல்லான். ,, 30 - c]
[அரக்கர் ... ... ... ... வில்லான். ,, 28 - a]

,, (13) அனுமனை நோக்கி யையன்
அன்பினு லருளிச் செய்வான்
மனுமுத லாக வந்த
மாயையுங் கீழ வற்றுய்ச்
சினமுத லாய செங்க
ணரக்கரைச் செற்ற வென்கைத்
தனுவெனு மினைய வாழ்வே
கேளென வொன்று சாற்றும்.

10365 (14) ஆரேனு மாரொருவர்க் குதவிசெய்தா
லவ்வுதவி தனக்குடனே செய்யாராகில்
நேரேதா னவன்குடிக்குத் தீங்குவேண்டி
நினைப்பதுதா னல்லவென் னெறிமென்கூந்தல்
வாரேறு பூண்முலையாள் சனகிக்காக
மாருதியே நீரெனக்கு வருந்திச்செய்த
சீரேறும் நேருதவிக் குதவிசெய்யச்
சிந்தியா திருக்குமென்றன் சிந்தைதானே.

தாயர் மூவரும் சிவிகையிற் செல்லப் பரதன்
அனுமனது கையைப் பற்றிச் செல்லுதல்

10366. அன்னையர் மூவரு மமரர் போற்றிடப்
பொன்னியல் சிவிகையி னெழுந்து போயபின்
தன்னிகர் முனிவனுந் தமருஞ் சூழ்தர
மன்னவன் மாருதி மலர்க்கை பற்றுரு.

அன்னையர் மூவரும், அமரர் போற்றிட,
பொன் இயல் சிவிகையின் எழுந்து போய பின்
தன் நிகர் முனிவனும் தமருஞ் சூழ்தர
மன்னவன் மாருதி மலர்க்கை பற்றுரு.

பொ:—தாயர் மூவரும் தேவர்கள் போற்றப் பொன்னுல் இயன்ற பல்லக்கில் புறப்பட்டுச் சென்றபின், தனக்குத்தானே நிகரான வசிட்ட முனிவனும் சுற்றத்தாரும் சூழப் பரதன் அனுமனது மலர்போன்ற கையைப் பற்றிக்கொண்டு.

கு:—தேவர் போற்றத்தக்க பெருமை இராமனை யீன்ற கோசலைக்கே யுரியதாயினும் ஏனையிருவர்க்கும் அதனை உரியதாக்கி இங்குக் கூறியுள்ளார். ''சுற்றத்தார் தேவரொடுஞ் தொழ நின்ற கோசலையை'' (அயோத்தி-குகப்-64) என்றது காண்க. பெண்டிர் செல்லுதற்கேற்றது சிவிகையே என்பதை, ''இழிந்த தாயர் சிவிகையின் ஏக'' (குகப்–71) என்றதாலும் அறியலாம். இராமன் பெருமைபெற மூவரும் காரணராயினர் என்ற கருத்தால் ''அன்னையர் மூவரும் அமரர் போற்றிட'' என்று இங்குக் கூறினர் போலும். முனிவன் என்றது, இங்கு

வசிட்டனை. 'பற்றுரு' என்ற எச்சம் வருஞ் செய்யுளில் 'போயினுன்' என்ற வினையைக் கொண்டு முடியும்; குளகம். (271)

பரதன் இராமனது பாதுகைகளையே மகுடமாகச் சூடிக்கொண்டு செல்லுதல்

10367. திருவடி யிரண்டுமே செம்பொன் மௌலியா
இருபுறஞ் சாமரை யிரட்ட வேழ்கடல்
வெருவரு முழக்கென வேத மார்த்தெழப்
பொருவரு வெண்குடை நிழற்றப் போயினுன்.

திருவடி இரண்டுமே செம்பொன் மௌலியா,
இருபுறம் சாமரை இரட்ட, ஏழ்கடல்
வெருவரும் முழக்கு என வேதம் ஆர்த்து எழ,
பொருஅரு வெண்குடை நிழற்றப் போயினுன்.

பொ:—இராமனது திருவடி நிலைகள் இரண்டுமே செம்பொன்னாலியன்ற மகுடமாகச் சூடிக்கொண்டு, இருபக்கத்தும் வெண்சாமரை வீசா நிற்க, ஏழுகடலின் அஞ்சத்தக்க முழக்கம் என்னும்படி வேதஒலி ஆரவாரித்து எழாநிற்க, ஒப்பற்ற வெண்குடை நிழல் செய்யப் பரதன் போயினுன்.

கு:—இராமனது திருவடி நிலையையே பரதன் மகுடமாகச் சூடிக்கொண்டமை, ''அடித்தல மிரண்டையும் அழுத கண்ணினுன், முடித்தல மிவையென முறையிற் சூடினுன்''. (திருவடி சூட்டு–137) என முன்னும் கூறப்பட்டுள்ளமை நினையலாம். வேதியர் பலர்கூடி ஓதிய வேதஒலி எழுகடலின் ஒலிபோன்று மிக்கிருந்தது என்க. வேற்றிடத்திற்கு மன்னவன் புறப்படும் போது வேத மந்திரங்களை வேதியர் உரத்துச் சொல்லுதல் ''ஊறு கொண்ட முரசுமிழ் ஓதையை, வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி'' (பள்ளிபடைப்–17) என்பது இங்கு நினையத் தகும். (272)

சூரியன் மறைதல்

10368. எல்லவன் மறைந்தன
னென்னை யாளுடை
வில்லியை யெதிர்கொளப்
பரதன்மீச் செல்வான்

அல்லியங் கமலமே
யணைய தாள்களில்
கல்லதர் சுடுந்தன
கதிரி னென்னவே.

எல்லவன் மறைந்தனன் — என்னை ஆளுடை
வில்லியை எதிர்கொள, பரதன் மீச்செல்வான்,
அல்லி அம் கமலமே அணைய தாள்களில்
கல் அதர் சுடும் தன கதிரின் என்னவே.

பொ :—என்னை யடிமையாக உடைய வில் வீரனுகிய இராமனை எதிர் கொள்ளும்பொருட்டுப் பரதன், தரைமீது நடந்து செல்கின்ருன். அகவிதழ்களையுடைய அழகிய தாமரை மலர் போன்ற அவன் பாதங்களில் தன் கிரணங்களின் வெப்பத்தால் கற்கள் நிறைந்த வழி சுடுமே என்று (அது சுடாதிருக்கும் பொருட்டு) சூரியன் மறைந்தான்.

கு :—எல்லவன் என்றது சூரியனை. என்னை யாளுடை வில்லி என்றது கவிக் கூற்று. சூரியன் மறைதலாகிய இயல் பான நிகழ்ச்சியைப் பரதன் தாள்களில் கல்லதர் சுடுமே என்ற எண்ணத்தால் சூரியன் மறைந்ததாகக் கூறியது தற்குறிப்பேற்ற அணியாகும். அதர்—வழி. கதிரின் என்புழி இன் ஏதுப் பொரு ளது. தன்னுடைய கிரணங்களின் வெம்மையால் கல்லதர் சுடும்; அது சுடாதிருக்கும்பொருட்டுச் சூரியன் மறைந்தான் என்க. (273)

இராமன் காட்டில் தங்கிச் செய்த செயல்களைப் பற்றிக் கூறுமாறு அனுமனைப் பரதன் வேண்டுதல்

10369. அவ்வழி மாருதி யங்கை பற்றிய
செவ்வழி யுள்ளத்தான் றிருவி ளுயகன்
வெவ்வழி யுறைந்தவச் செயலெ லாம்விரித்
திவ்வழி யெமக்குநீ யியம்பு வாயென்ருன்.

அவ்வழி மாருதி அம்கை பற்றிய
செவ்வழி உள்ளத்தான், ‘திருவின் நாயகன்
வெவ்வழி உறைந்த அச்செயல் எலாம் விரித்து
இவ்வழி எமக்கு நீ இயம்புவாய்’ என்ருன்.

பொ :—அந்த வழியில் அனுமனது அழகிய கையைக் பற்றிய செம்மைநெறி செல்லும் உள்ளத்தையுடையவனுகிய பரதன் திருவினுயகனுகிய இராமன், கொடிய காட்டில் தங்கிச் செய்த அந்தச் செயல்களை எல்லாம் விரித்து இவ்விடத்தில் நீ எமக்குச் சொல்வாயாக என்று வேண்டினுன்.

கு :—செவ்வழியுள்ளத்தான் என்றது பரதனை ; வஞ்சனை யறியாதவன் என்பது கருத்து. திருவினுயகன் என்றது, 'இராமன்' என்னும் பொருளது. வெவ்வழி என்றது கொடிய காட்டினை. காட்டில் தங்கியிருந்தபோது செய்த செயலை என்பார், 'வெவ்வழி யுறைந்தவச் செயலெலாம்' என்ருர். (274)

### அனுமன் இராமனது செயல்களைச் சொல்லுதல்
### 10370 — 10397

10370. என்றலு மாருதி தொழுதிங் கெம்பிரான்
மன்றலந் தொடையினு யயோத்தி மாநகர்
நின்றது மணவினை நிரப்பி மீண்டுகான்
சென்றது நாயினேன் செப்பல் வேண்டுமோ.

என்றலும், மாருதி தொழுது, 'இங்கு எம்பிரான்,
மன்றல் அம் தொடையினுய்! அயோத்தி மாநகர்
நின்றதும், மணவினை நிரப்பி மீண்டு கான்
சென்றதும், நாயினேன் செப்பல் வேண்டுமோ?

பொ :—என்று பரதன் வினவிய அளவில், அனுமன் அவனைத் தொழுது, 'மணம்நிரம்பிய அழகிய மாலையை யணிந்தவனே! எம் தலைவனுகிய இராமன் இங்கு அயோத்தியில் தங்கியிருந்ததும் (மிதிலைக்குச் சென்று) திருமணத்தை நிறைவேற்றித் திரும்பிவந்து பின்பு காட்டிற்குச் சென்றதும் நாய்போன்ற எளியேன் சொல்ல வேண்டுமோ? (அந்நிகழ்ச்சிகள் நேரில் நின்னுல் அறியப்பட்டன வாகலின் வேண்டாவன்றே என்றவாறு.)

கு :—அனுமன், இராம காதையை முதலிலிருந்தே சொல்ல விருப்பமுடையவனுயினும், பரதனுக்குத் தெரிந்த செய்திகளாகிய பால காண்டநிகழ்ச்சிகளையும் அயோத்தியா காண்டத்து நிகழ்ச்சிகளையும் மீண்டும் கூறுதல் சுவைபயவாது என்ற கருத்

நால் 'நாயினேன் செப்பல் வேண்டுமோ' என்று வினவினன். 'மணவினை நிரப்பி மீண்டு' என்றவரையில் பாலகாண்டத்து நிகழ்ச்சி யாதலும், கான் சென்றது என்றது, அயோத்தியா காண்டத்து நிகழ்ச்சியாதலும், இவை பரதனல் முன்னரே யறியப்பட்டனவாதலும் அறிக. (275)

10371. சித்திர கூடத்தைத் தீர்ந்த பின்சிரம்
பத்துடை யவனுடன் விளைத்த பண்பெலாம்
இத்தலை யடைந்ததே யிறுதி யாமென
வித்தகத் தூதனும் விரிக்குஞ் சிந்தையான்.

சித்திர கூடத்தைத் தீர்ந்த பின் சிரம்
பத்துடையவனுடன் விளைத்த பண்பெலாம்
இத்தலை அடைந்ததே இறுதியாம் என
வித்தகத் தூதனும் விரிக்குஞ் சிந்தையான்.

பொ :—சித்திர கூடமலையை விட்டு நீங்கிய பின்பு பத்துத் தலைகளையுடைய இராவணனோடு விளைத்த செயல்களை யெல்லாம் இவ்விடத்திற்கு வந்து சேர்ந்தது இறுதியாகத் திறமை மிக்க தூதுவனாகிய அனுமனும் விரித்துக் கூறும் சிந்தையன் ஆனான்.

கு :—சித்திரகூடமலையில் இராமன் இருந்தது வரையில் நிகழ்ந்த செயல்களைப் பரதன் அறிவான் ஆகலின் அதைவிட்டு நீங்கியபின் நிகழ்ந்ததைச் சொல்ல அனுமன் உளங்கொண்டான் என்க. சிந்தையான் ஆயினன் என ஆக்கச்சொல் வருவிக்க. (276)

விராதன் வதை

10372. குன்றுறழ் வரிசிலைக் குரிசி லெம்பிரான்
தென்றிசைச் சித்திர கூடந் தீர்ந்தபின்
வன்றிறல் விராதனை மடித்து மாதவர்
துன்றிய தண்டக வனத்துட் டுன்னினன்.

'குன்று உறழ் வரிசிலைக் குரிசில் எம்பிரான்
தென்றிசைச் சித்திர கூடம் தீர்ந்தபின்,
வன்திறல் விராதனை மடித்து, மாதவர்
துன்றிய தண்டக வனத்துள் துன்னினன்.

பொ :—மலைபோன்ற தோற்றத்தையுடைய கட்டமைந்த வில்லை யேந்திய வீரனாகிய எம் தலைவன் (இராமன்) தென்திசையில் உள்ள சித்திர கூடமலையை விட்டு நீங்கிய பின்பு வன்மையும் திறமையுமுடைய விராதன் என்ற பெயரையுடைய அரக்கனை வதைத்துவிட்டு, பெரிய தவமுனிவர்கள் நெருங்கியுள்ள தண்டக வனத்தை அடைந்தான்.

கு :—அயோத்திக்குத் தென்திசையில் சித்திர கூடம் இருத்தல் பற்றித் 'தென்திசைச் சித்திர கூடம்' என்று அடை கொடுத்தார். குரிசிலாகிய எம்பிரான், தீர்ந்தபின் விராதனை மடித்துத் தண்டகவனத்துள் துன்னினான் என இயையும். (277)

தண்டக வனத்துத் தங்குதல்

10373. ஆங்குறை தபோதன ரரக்கர்க் காற்றலே
நீங்கினந் தவத்துறை நீதி யோயெனத்
தீங்குசெய் தவர்களைச் செகுத்த றிண்ணநீர்
வாங்குமின் மனத்துயர் வாய்மை யாலென்றான்.

'ஆங்கு உறை தபோதனர்,
"அரக்கர்க்கு ஆற்றலேம்,
நீங்கினம் தவத்துறை,
நீதியோய்!" என,
தீங்கு செய்தவர்களைச்
செகுத்தல் திண்ணம்; நீர்
வாங்குமின் மனத்துயர்,
வாய்மையால்' என்றான்.

பொ :—அத் தண்டக வனத்தில் இருக்கும் தவமுனிவர்கள், (இராமனை நோக்கி) "நீதியையுடையவனே! நாங்கள். இராவணன் முதலிய அரக்கர்கள் செய்யும் துன்பத்திற்கு ஆற்றாமல் தவநெறியில்நின்று நீங்கிவிட்டோம்" என முறையிட, (இராமன்) 'உமக்குத் தீங்கு செய்தவர்களை யான் அழித்தல் உறுதியாகும்; என் வார்த்தையால் நீங்கள் நும் மனத்துயரை விடுங்கள்" என்று கூறினான்.

கு:— நீ நீதியையுடையவன் ஆதலின், அரக்கர் செய்யும் நீதியில்லாத செயலைத் தடுக்கவேண்டும் என்ற கருத்துப் பொருந்த இராமனை 'நீதியோய்' என முனிவர் விளித்தனர் என்க. வாய்மையால் நீர் மனத்துயர் வாங்குமின் என இயைய யும். வாய்மையால் என்றது வாய்மையான என் சொல்லால் என்றவாறு. செகுத்தல்—அழித்தல். (278)

### அகத்திய முனிவர் வரவேற்பு

10374, ஆறுநா லாண்டவண் வைகி யப்புறத்
தீறிலா முனிவர ரேய வாணையால்
மாறிலாத் தமிழ்முனி வனத்தை நண்ணினன்
ஊறிலா முனிவர னுவந்து முன்வர.

'ஆறு நால் ஆண்டு அவண் வைகி, அப்புறத்து
ஈறு இலா முனிவரர் ஏய ஆணையால்
மாறு இலாத் தமிழ்முனி வனத்தை நண்ணினன்
ஊறு இலா முனிவரன் உவந்து முன் வர.

பொ:—பத்து ஆண்டுகள் அந்தத் தண்டக வனத்தில் தங்கி யிருந்து, பின்பு முடிவு இல்லாத ஆயுளையுடைய முனிவர்கள் ஏவிய கட்டளையின் வண்ணம், ஒப்பு இலாத தமிழ் முனிவனாகிய அகத்திய முனிவன் தங்கியுள்ள வனத்தை - அந்த ஊறுபாடு இல்லாத முனிவன் மகிழ்ந்து முன் எதிர்கொண்டுவர அடைந் தான்.

கு:—ஆறுநால் ஆண்டு என்றது ஆறும் நாலும் சேர்ந்த பத்தாண்டுகளை; உம்மைத்தொகை. மாறு—ஒப்பு. தமிழ் முனி என்றது அகத்திய முனிவனை. அவன் வனத்தை, அம் முனி வன் உவந்து முன்வர நண்ணினன் என இயையும். முன் வர என்றது எதிர்கொள்ள என்னும் கருத்தினது. ஊறு—குறை. ஏய என்பது ஏவிய என்பதன் தொகுத்தல் விகாரம். (279)

### அகத்தியன் வில் முதலியன கொடுத்தல்

10375. குடங்கையில் வாரிதி யனைத்துங் கொண்டவன்
தடங்கணான் றனையெதிர் தழுவிச் சாபமும்

கடுங்கணைப் புட்டிலும் கவசந் தானுமற்
றிடம்படு சுரிகையுஞ் சேர வீந்தனன்.

குடங்கையில் வாரிதி அனைத்தும் கொண்டவன்
தடங்கணுன் தனை எதிர் தழுவி, சாபமும்
கடுங்கணைப் புட்டிலும், கவசம் தானும், மற்று
இடம்படு சுரிகையும், சேர ஈந்தனன்.

பொ :—உள்ளங்கையில் கடல்நீர் முழுமையையும் முகந்து கொண்டவனுகிய அகத்திய முனிவன், பெரிய கண்களையுடைய இராமனை எதிர்கொண்டு அழைத்து, வில்லும், கடுமையான அம்புகளையுடைய அம்பருத்தூணியும், கவசமும், பெருமை பொருந்திய வாளும் சேரக் கொடுத்தான்.

கு :—குடங்கை—உள்ளங்கை. கடல்நீர் முழுவதையும் தன் உள்ளங்கையில் கொண்டவன் என்றதால் அகத்தியனது தவத்தின் பெருமையைப் புலப்படுத்தியவாறு. தடங்கணுன் என்றது இராமனை. இடம்—பெருமை. சுரிகை என்றது வாளினை. சேர என்பதற்கு இராமன்பால் பொருந்துமாறு எனவும் பொருள் கூறலாம். (280)

சடாயுவைக் கண்டு பஞ்சவடி யடைதல்

10376. அப்புறத் தெருவையி னரசைக் கண்ணுருத்
துப்புறச் சிவந்தவாய்த் தோகை தன்னுடன்
மெய்ப்புகழ்த் தம்பியும் வீரன் ருனும்போய்
மைப்பொழி றுறுபஞ்ச் வடியின் வைகினுர்.

அப்புறத்து எருவையின் அரசைக் கண்ணுரு,
துப்பு உறச் சிவந்த வாய்த் தோகை தன்னுடன்
மெய்ப்புகழ்த் தம்பியும் வீரன் தானும் போய்,
மைப் பொழில் துறு பஞ்சவடியின் வைகினுர்.

பொ :—(அகத்திய முனிவன் வனத்திற்கு) அப்புறத்தில் கழுகின் வேந்தனுகிய சடாயுவைக் கண்டு (உறவு கொண்டு) பவழம் போன்று மிகச் சிவந்த வாயினையுடைய மயில்போன்ற சீதையோடு உண்மையான புகழையுடைய இலக்குவனும் வீர

மிக்க இராமனும் சென்று கரிய சோலைகள் நெருங்கியுள்ள பஞ்ச வடியில் தங்கினார்கள்.

கு :—அகத்திய முனிவன்பால் வில் முதலியன பெற்றுச் சென்று அம்முனிவன் வனத்திற்கு அப்புறத்தில் சடாயுவைக் கண்டு நட்புக்கொண்டு பின்பு பஞ்சவடி என்னும் இடத்தை அடைந்தார்கள் என்றவாறு. எருவையின் அரசு என்றது கழுகின் வேந்தனாகிய சடாயுவை. உரு என்றது செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். துப்பு—பவழம். தோகை என்றது, இருமடியாகு பெயராய்த் தோகையையுடைய மயில் போன்ற சாயலாளாகிய சீதையை யுணர்த்தியது. இராவணனால் கவரப் படுதற்கேற்ற இயல்புடையாள் சீதை என்பது புலப்படுத்த 'துப் புறச் சிவந்தவாய்த் தோகை' என்று அவளைச் சிறப்பித்தார். அண்ணனை அகலாது அவன் துன்பங்களைத் துடைத்துத் துணையாக நின்ற பெருமையன் இலக்குவன் ஆதலின் 'மெய்ப்புகழ்த் தம்பி' எனப்பட்டான். மைப்பொழில் — கரிய சோலை; இனி, மேகங்கள் தவழும்சோலை எனலும் ஆம். துறுதல்—நெருங்குதல். ஐந்து ஆலமரங்கள் நெருங்கியுள்ள இடமே பஞ்சவடி எனப் பெயர்பெற்றது என்க. (281)

## சூர்ப்பணகை மூக்கறுபடலம்

10377. பல்பக லிறந்த பின்றைப்
★ பாதக வரக்கி தோன்றி
மெல்கிய விடையி னாளை
வெகுண்டுழி யிளைய வீரன்
அல்கிய திருவைத் தேற்றி
யவளுடைச் செவியு மூக்கும்
மல்கிய முலையுங் கொய்தான்
மறித்தவள் கரற்குச் சொன்னாள்.

பல்பகல் இறந்த பின்றை,
பாதக அரக்கி தோன்றி,
மெல்கிய இடையினாளை
வெகுண்டுழி, இளைய வீரன்

அல்கிய திருவைத் தேற்றி,
அவளுடைச் செவியும் மூக்கும்
மல்கிய முலையும் கொய்தான் ;
மறித்து, அவள் கரற்குச் சொன்னுள்.

பொ :—பஞ்சவடியில் பலநாள் கடந்த பின்பு (சூர்ப்பணகை என்ற பெயரையுடைய) பாதகியாகிய அரக்கி அங்குவந்து தோன்றி, மெல்லிய இடையையுடைய சீதையை (க் கொண்டு செல்ல வேண்டி) வெகுண்டபோது, (அங்குக் காவல் புரிந்து கொண்டிருந்த) இளைய வீரனுகிய இலக்குவன், உளம் மெலிந்த சீதையைத் தேற்றிவிட்டு, அந்த சூர்ப்பணகையின் செவியையும் மூக்கையும் வளர்ந்த முலையையும் கொய்துவிட்டான் ; அச்செயலைச் சூர்ப்பணகை மீண்டு சென்று கரன் என்பவனுக்குச் சொன்னுள்.

கு :—அல்குதல்—உள்ளம் மெலிதல். மல்குதல்—வளர்தல். அரக்கி என்றது சூர்ப்பணகையை. (282)

கரதூடணர் வதை

10378. கரனொடு திரிசி ராவுங்
கடிய தூடணனுங் காந்தி
எரியுமூன் றனலே யொப்பா
ரெழுந்துவெஞ் சேனை யோடும்
விரவின ரையன் செங்கை
வில்லினை நோக்கு முன்போர்
எரிதவழ் பஞ்சி னுக்கார்
அரக்கியு மிலங்கை புக்காள்.

'கரனொடு திரிசிராவும்,
கடிய தூடணனும், காந்தி
எரியும் மூன்று அனலே ஒப்பார்,
எழுந்து, வெஞ்சேனை யோடும்
விரவினர் ; ஐயன் செங்கை
வில்லினை நோக்கு முன்பு ஓர்
எரிதவழ் பஞ்சின் உக்கார் ;
அரக்கியும் இலங்கை புக்காள்.

பொ :— கரனும், திரிசிராவும் கடுமையான தூடணனும் (சூர்ப்பணகையின் சொல்லைக் கேட்டு) காந்தி எரிகின்ற மூன்று அனலை ஒப்பவராய்க் கோபங்கொண்டு எழுந்து கொடிய தம் சேனையோடும் அங்குவந்தனர், இராமன் தன் வில்லினை நோக்கும் முன்பு ஒரு நெருப்பில் தவழ்கின்ற பஞ்சுபோல் அழிந்தார்கள்; சூர்ப்பணகையும் இலங்கை சென்று புகுந்தாள்.

கு :— காந்தி என்பதற்குக் கோபித்து என்று பொருள் கொண்டு கரன் முதலோர் செயலாக்கலும் ஆம். மூவரும் மூன்று நெருப்புப் போலக் காணப்பட்டனர் சினத்தீயினுல் என்க. ஆகவனீயம், தென்திசையங்கி காருகபத்தியம் என்னும் மூன்றனலை இங்கு உவமை கூறுதற்கு இயைபின்மை தெளியலாம். கரன் முதலோர் இராமனுல் இறந்த விரைவு புலப்படவேண்டி, வில்லினை நோக்கு முன்பு என்றும், எஞ்சாது அழிந்தமை புலப்படுத்தவேண்டி, 'ஓர் எரி தவழ் பஞ்சின் உக்கார்' என்றும் கூறினுர். (283)

### இராவணன் சீதையைக் கவர்தல்

10379. இருபது தடக்கை யான்மாட்
டிசைத்தலு மெழுந்து பொங்கி
ஒருபது திசையு முட்க வஞ்சக
வுழையொன் றேவித்
தருபதஞ் சமைந்த முக்கோற்
றுபதர் வடிவங் கொண்டு
திருவினை நிலத்தொ டேந்தித்
தென்றிசை யிலங்கை புக்கான்.

'இருபது தடக்கையான்மாட்டு
இசைத்தலும் எழுந்து, பொங்கி,
ஒருபது திசையும் உட்க, வஞ்சக
உழை ஒன்று ஏவி,
தருபதம் சமைந்த முக்கோல்
தாபத வடிவங் கொண்டு
திருவினை நிலத்தொடு ஏந்தி,
தென்திசை இலங்கை புக்கான்.

பொ ::— இலங்கையில் இருபது பெரிய கைகளையுடைய இராவணன் இடத்தில் (சூர்ப்பணகை தனக்கு நேர்ந்த தீங்கையும் சீதையின் அழகையும்) சொன்னவுடனே அவன் பத்துத் திசையிலுள்ளோரும் அஞ்சுமாறு கோபம் மிக்கு எழுந்து மாய மான் ஒன்றை அனுப்பி (இராம இலக்குவரைப் பிரித்து) மூவரும் ஒருவர் என்ற கருத்தைத் தரும் சொற்பொருள் அமைந்த முக்கோல் ஏந்திய தவமுனிவரின் வேடம் பூண்டு, திருமகளின் அம்சமான சீதையைத் தரையோடு பெயர்த்து ஏந்திக்கொண்டு, தென்திசையில் உள்ள இலங்கையுள் புகுந்தான்.

கு :— உட்கப் பொங்கி என இயையும். நேர்த்திசை நான்கும் கோணத்திசை நான்கும் மேலும் கீழும் ஆகிய இரண்டும் பத்துத்திசைகள் எனப்படும். முக்கோல், திரி தண்டம் எனப்படும். தாபதர்க்கு முக்கோல் அடையாளமாகும். ''உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும் நெறிப்படச் சுவலசைஇ' (கலித் - 9) எனவருதல் காண்க. ''அரி அயன் அரன் என்னும் மூவரும் ஒருவரென்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த முக்கோலையும்'' என நச்சினார்க்கினியர் பொருள் வரைந்திருத்தல் இங்கு நினைக்கத்தகும். 'தருபதஞ் சமைந்த' என்ற அடையும் 'உரைசான்ற' என்ற அடையும் ஒருபொருள் நுதலியதே. மூவரும் ஒருவரே என்ற கருத்தைத் தரும் சொற்பொருள் அமைந்த முக்கோல் என்க. (284)

இறக்கும் நிலையிலுள்ள சடாயுவை இராமன் காண்டல்

10380. போகின்ற காலை யேற்ற
சடாயுவைப் பொருது வீட்டி
வேகின்ற வுள்ளத் தானை
வெஞ்சிறை யதனின் வைத்தான்
ஏகின்ற வஞ்ச மான்மா
ரீசற்கொன் றிளவ லோடு
பாகின்ற சீர்த்தி யண்ண
றந்தையைப் பரிவிற் கண்டான்.

'போகின்ற காலை, ஏற்ற
சடாயுவைப் பொருது வீட்டி,

வேகின்ற உள்ளத்தாளை
வெஞ்சிறை அதனில் வைத்தான்;
ஏகின்ற வஞ்ச மான்மாரீன் —
கொன்று, இளவலோடு
பாகின்ற சீர்த்தி அண்ணல்
தந்தையைப் பரிவின் கண்டான்.

பொ :— (இராவணன் சீதையை எடுத்துக் கொண்டு) போகின்ற போது, எதிர்த்த சடாயுவைப் போர் செய்து வீழ்த்தி விட்டு அது கண்டு பொருது வேகின்ற உள்ளமுடைய சீதையைக் கொடிய சிறையில் வைத்தான்; (இங்கு) வஞ்சித்துச் செல்கின்ற மாயமானாகிய மாரீசனைக் கொன்றுவிட்டு, இளவலாகிய இலக்குவனோடு, பரவுகின்ற புகழினையுடைய இராமன், தன் தந்தை முறையினனாகிய சடாயுவை (தன் பொருட்டுப் பொருது வீழ்ந்துள்ள நிலையில்) இரக்கத்தோடு கண்டான்.

கு :— பாகின்ற-பரவுகின்ற. தந்தை என்றது தன் தந்தையின் நண்பனான சடாயுவை. (285)

கவந்தனை வதைத்துச் சவரிபூசனையைக் கொள்ளுதல்

10381. அன்னவன் றனக்கு வேண்டு
மருங்கடன் முறையி னூற்றி
நன்னுத றன்னைத் தேடித்
தென்றிசை நடக்கு மையன்
மன்னிய கவந்தன் றன்னை
யுயிரொடு சாப மாற்றித்
தன்னையே மறப்பி லாத
சவரி பூசனையுங் கொண்டான்.

'அன்னவன் தனக்கு வேண்டும்
அருங்கடன் முறையின் ஆற்றி,
நன்னுதல் தன்னைத் தேடித்
தென்திசை நடக்கும் ஐயன்,

மன்னிய கவந்தன் தன்னை
　　உயிரொடு சாபம் மாற்றி,
தன்னையே மறப்பிலாத
　　சவரி பூசனையும் கொண்டான்.

பொ :— அச்சடாயுவுக்குச் செய்யவேண்டிய அரிய இறுதிக் கடனை முறையாகச் செய்துவிட்டு, நல்ல நெற்றியையுடைய சீதையைத் தேடிக்கொண்டு தென்திசை நோக்கிச் செல்லும் இராமன், தனக்குப் பகையாக நிலைபெற்றிருந்த கவந்தன்தன் உயிரையும் சாபத்தையும் போக்கிவிட்டுத் தன்னையே மறவாது போற்றிக்கொண்டிருக்கும் சவரியின் பூசனையையும் ஏற்றுக் கொண்டான்.

கு :— இராம இலக்குவரை விழுங்க இருந்தான் கவந்தனே ஆகலின், தனக்குப் பகையாகத் தங்கியிருந்தவன் என்ற கருத்தால் 'மன்னிய கவந்தன் தன்னை' என்றார். சவரி இராமனது வருகையை எதிர்நோக்கியிருந்தவளாதலின் 'தன்னையே மறப்பிலாத சவரி' எனச் சிறப்பித்தார். (286)

வாலிவதை

10382. ஆங்கவ டனது சொல்லா
　　லருக்கன்மா மகனை யண்மிப்
பாங்குற நட்டு வாலி
　　பருவரல் கெடுப்பே னென்னு
ஓங்கிய மரமும் வாலி
　　யுரமு மூடுருவ வெய்திட்
டாங்கவன் றனக்குச் செல்வ
　　மரசொடு மருளி னீந்தான்.

'ஆங்கு அவள் தனது சொல்லால்,
　　அருக்கன்மா மகனை அண்மிப்
பாங்குற நட்டு, ''வாலி
　　பருவரல் கெடுப்பேன்'' என்னு,

ஓங்கிய மரமும் வாலி
உரமும் ஊடுருவ எய்திட்டு,
ஆங்கு அவன் தனக்குச் செல்வம்
அரசொடும் அருளின் ஈந்தான்.

பொ:— அவ்விடத்து அந்தச் சவரி சொல்லிய சொல்லின் துணைகொண்டு சூரியன் மகனாகிய சுக்கிரீவனை அடைந்து, சிறப்புற நண்பு பூண்டு, 'வாலியால் உளதாகும் துன்பத்தைக் கெடுப்பேன்' என்று உறுதிமொழி கூறி, உயர்ந்து வளர்ந்த ஏழு மரா மரங்களும் வாலியின் மார்பும் ஊடுருவிச் செல்லுமாறு அம்பினை எய்து அழித்து அந்தச் சுக்கிரீவனுக்கு (வாலியின்) அரசோடு செல்வத்தையும் அருளால் கொடுத்தான்.

கு:— சபரி சொல்லிய நெறியிற் சென்று இராமன் சுக்கிரீவனைக் கண்டான் என்றவாறு. நட்டு-நண்புகொண்டு. பருவரல்-துன்பம். ஏழு மரா மரங்களைத் துளைத்த அம்பினாலே பின்பு வாலியின் மார்பையும் துளைத்தமையால் 'ஓங்கிய மரமும் வாலி உரமும் ஊடுருவ எய்தி' என்று ஒரு காலத்து நிகழ்ந்தது போலக் கூறினர். வாலியைக் கொன்று பெற்ற அரசை இராமன் தானே மேற்கொள்ளாமல் அருளினால் சுக்கிரீவனுக்குக் கொடுத்தான் என அவன் அருளின் சிறப்பைப் புலப்படுத்தியவாறு. (287)

மாரிக்காலத்திற்குப் பின் சுக்கிரீவன் சேனையோடு
இராமனை அடைதல்

10383. காலமா மாரி நீங்கக்
கவயனோ டிடபன் காந்து
நீலன்மா மயிந்தன் சாம்பன்
சதவலி பனச னீடு
வாலிமா மைந்த னென்றிவ்
வானரத் தலைவ ரோடு
கூலவான் சேனை சூழ
வடைந்தன னெங்கள் கோமான்.

'கால மா மாரி நீங்க,
கவயனோடு இடபன், காந்து

நீலன், மாமயிந்தன், சாம்பன்,
சதவலி, பனசன், நீடு
வாலி மாமைந்தன், என்றிவ்
வானரத் தலைவரோடு
கூல வான் சேனை சூழ
அடைந்தனன் எங்கள் கோமான்.

பொ :— பெரிய மாரிக்காலம் நீங்கிய அளவில் கவயன், இடபன், கோபிக்கின்ற நீலன் சிறந்த மயிந்தன், சாம்பன், சதவலி, பனகன், பெரிய வாலியின் இறந்த மகனாகிய அங்கதன் என்ற இந்த வானரத்தலைவர்களோடு கூடிய குரங்குச் சேனை சூழ எங்கள் தலைவனாகிய சுக்கிரீவன் இராமனை அடைந்தான்.

கு :— கூல வான்சேனை என்றது, வாலையுடைய பெரிய குரங்குச் சேனையை. கூலம் — வால்; குரங்கு. (288)

சுக்கிரீவன் வானர சேனைக்குக் கட்டளையிடுதல்

10384. எழுபது வெள்ளத் துற்ற
குரங்கின மெழுந்து பொங்கி
அழுவநீர் வேலை யென்ன
வடைந்துழி யருக்கன் மைந்தன்
தழுவிய திசைக டோறுந்
தனித்தனி யிரண்டு வெள்ளம்
பொழுதிறை தடாது மீளப்
போக்கினன் றிருவை நாடி.

'எழுபது வெள்ளத்து உற்ற
குரங்கினம் எழுந்து பொங்கி,
அழுவநீர் வேலை என்ன
அடைந்துழி, அருக்கன் மைந்தன்
தழுவிய திசைகள் தோறும்
தனித்தனி இரண்டு வெள்ளம்
பொழுதுஇறை தடாது மீளப்
போக்கினன் திருவை நாடி.

பொ :— எழுபது வெள்ளம் என்ற அளவைப் பொருந்திய வானரக்கூட்டம் எழுந்து பொங்கிப் பரவிய நீரையுடைய கடலைப் போலத் தன்னை அடைந்தபோது, சூரியன் மைந்தனுகிய சுக்கிரீவன்-இவ்வுலகில் பொருந்திய எல்லாத் திசைகளிலும் தனித் தனியே இரண்டு வெள்ளம் சேனை சீதையைத் தேடி, (ஒரு மாதம் என்ற) காலவரையைச் சிறிதும் தவருமல் திரும்பி வருமாறு சொல்லி அனுப்பினுன்.

கு :—எழுபது வெள்ளச் சேனையின் பரப்புத்தோன்ற 'அழுவ நீர் வேலை என்ன' எனக் கடலை உவமை கூறினர். 'தனித்தனி இரண்டு வெள்ளம் திருவைநாடிப் பொழுதிறை தடாது மீளப் போக்கினன்' என இயையும். பொழுது என்றது ஒரு திங்கள் என்ற காலத்தை. இறை-சிறிது. (289)

*சீதையைக்கண்டு சொன்னதும் வானரப்படை*
*தென்கடற் கரையில்வந்து தங்குதல்*

10385. தென்றிசை யிரண்டு வெள்ளஞ்
சேனையும் வாலி சேயும்
வன்றிறல் சாம்ப னோடு
வாவின ரேவ நாயேன்
குன்றிடை யிலங்கை புக்குத்
திருவினைக் குறித்து மீண்ட
பின்றைவந் தளக்கர் வேலைப்
பெரும்படை யிறுத்த தன்றே.

தென்திசை இரண்டு வெள்ளம்
சேனையும் வாலி சேயும்
வன்திறல் சாம்பனேடு
வாவினர் ஏவ, நாயேன்
குன்றிடை இலங்கை புக்குத்
திருவினைக் குறித்து மீண்ட
பின்றை வந்து, அளக்கர் வேலைப்
பெரும்படை இறுத்தது அன்றே.

பொ :— இரண்டு வெள்ளம் வானர சேனையோடு தென் திசையில் வாவிச் சென்றவராகிய வாலியின் மகன் – அங்கதனும், வலிமையும் திறமையு முடைய சாம்பவனும் என்னை ஏவினமை யால் நாய்போன்ற எளியேனாகிய யான், திரிகூடமலைமேல் உள்ள இலங்கை நகரத்தில் புகுத்து, சீதையை அடையாளங் கண்டு மீண்ட பிறகு, தென்கடற்கரையில் வானரப் பெரும் படை வந்து தங்கியது.

கு :— குன்று என்றது திரிகூட மலையை. திருவினைக் குறித்து என்றது, சீதையைப் பற்றி இராமன் கூறிய அடை யாளங்களைக் கொண்டு அறிந்து என்னும் பொருளது. அளக்கர்— கடல். வேலை — கரை. அளக்கர் வேலைப் பெரும்படை வந்து இறுத்தது என இயையும். இறுத்தல் - தங்குதல். (290)

10386. அறிவினுக் கறிவு போல்வான்
வீடண னலங்கற் றோளான்
செறிபுயத் தரக்கன் றம்பி
திருவினை விடுதி யன்றேல்
இறுதியுற் றனநின் வாழ்நா
ளென்றுநின் றுரைப்பச் சீறிக்
கறுவுறப் பெயர்ந்து போந்து
கருணையான் சரணம் பூண்டான்.

'அறிவினுக்கு அறிவு போல்வான்
வீடணன், அலங்கல் தோளான்,
செறிபுயத்து அரக்கன் தம்பி,
"திருவினை விடுதி; அன்றேல்,
இறுதி உற்றன நின் வாழ்நாள்"
என்றுநின்று உரைப்பச் சீறிக்
கறுவுற, பெயர்ந்து போந்து,
கருணையான் சரணம் பூண்டான்.

பொ :—அறிவினுக்கு அறிவு போல்பவனும் மாலை அணிந்த தோளையுடையவனும், நெருங்கிய புயங்களையுடைய இராவ ணன் தம்பியுமாகிய வீடணன், (இராவணனை நோக்கி)

'சீதையை விட்டுவிடுக! அன்றேல் நின் வாழ்நாட்கள் இறுதியுற்றன' என்று உறுதியாக நின்று சொல்ல, இராவணன் கோபித்து வீடணன்மேல் வயிரங்கொள்ள, (வீடணன், இராவணனிடத்திருந்து) நீங்கி வந்து கருணையுள்ள இராமன் திருவடிகளைச் சரணடைந்தான்.

கு:—வீடணனது பேரறிவு புலப்பட 'அறிவினுக்கு அறிவு போல்வான்' எனச் சிறப்பித்தவாறு-பேரறிவினன் என்றவாறு. செறிபுயத்தரக்கன் என்றது, இருபது புயங்களையுடைய இராவணனை. கறுவுறல்-வயிரங் கொள்ளுதல்;-காழ்ப்புக் கொள்ளுதல். பகைவனைச் சார்ந்தவன் என்று எண்ணாது அடைக்கலம் தந்தமை நினைந்து இராமனைக் 'கருணையான்' என்றார். சரணம் பூணுதலாவது இராமன் திருவடிகளைப் புகலிடமாகப் பற்றுதல்.

(291)

வருணன் அடைக்கலம்

10387. ஆங்கவற் கவய நல்கி
யரசொடு முடியு மீந்து
பாங்கினால் வருணன் றன்னை
யழைத்திடப் பரிவி லாமை
தாங்கினன் சிறிது போது
தாமரை நயனஞ் சேப்ப
ஓங்குநீ ரேழு மன்னா
னுடலமும் வெந்த வன்றே.

'ஆங்குஅவற்கு அவயம் நல்கி,
அரசொடு முடியும் ஈந்து,
பாங்கினால் வருணன் தன்னை
அழைத்திட, பரிவு இலாமை
தாங்கினன் சிறிது போது,
தாமரை நயனம் சேப்ப,
ஓங்குநீர் ஏழும் அன்னான்
உடலமும் வெந்த அன்றே.

பொ :—அப்போதே அவ்வீடணனுக்கு அபயம் கொடுத்து, இலங்கை யரசுரிமையோடு அவ்வுரிமைக்கு அடையாளமான முடியும் கொடுத்து, சிறப்பான செபத்திஞல் வருணனை அழைக்கவும், அவன் அன்பிலாமையால் சிறிது போது வரத்தாழ்த்தாஞக, (இராமன் அது கண்டு பொருது) செந்தாமரை மலர் போன்ற தன் கண் சிவந்து கோபித்து அங்கியங்கணை தொடுக்க, மிக்க நீரையுடைய கடலேழும் அவ்வருணனது உடலமும் வெந்தன.

கு :—பாங்கு என்றது சிறப்புடைய வழிபாடாகிய வருண செபத்தினை. பரிவு-அன்பு ; இரக்கம். புல்லணையில் கிடந்து இராமன் அழைக்கவும் வருணன் அன்பில்லாமையால் காலந் தாழ்த்தினன் என்றவாறு. தாங்குதல், இங்குக் காலம் தாழ்த்தலை யுணர்த்தியது; இனி வரவை நிறுத்தினன் எனப் பொருள் கூறலும் ஆம். பரிவிலாமையால் என மூன்றன் உருபு விரிக்க. நயனம் சேத்தல் என்ற காரணம் அங்கியங்கணை தொடுத்தலாகிய காரியத்தை யுணர்த்தியது; இது காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசார வழக்கு. நீர் என்றது ஆகுபெயராய்க் கடலை உணர்த்தியது. (292)

சேது கட்டி இலங்கை புகுதல்

10388. மற்றவ னவய மென்ன
மலர்ச்சர ணடைந்த வேலை
வெற்றிவா னரர்கள் பொங்கி
வெற்பினுல் வேலை தட்டல்
முற்றுற நன்கி யற்றி
மொய்யொளி யிலங்கை புக்குப்
பற்றினர் சுற்றி யார்த்தார்
வானவர் பயங்க டீர்ந்தார்.

'மற்று அவன் அவயம் என்ன
மலர்ச்சரண் அடைந்த வேலை
வெற்றி வானரர்கள் பொங்கி,
வெற்பினுல் வேலை தட்டல்

முற்றுற நன்கு இயற்றி,
மொய்ஒளி இலங்கை புக்கு,
பற்றினர் சுற்றி ஆர்த்தார்,
வானவர் பயங்கள் தீர்ந்தார்.

பொ :— அவ்வருணன் பின்பு அபயம் என்று சொல்லிக் கொண்டு இராமனுடைய தாமரை மலர்போன்ற திருவடிகளை அடைந்தபோது, வெற்றியையுடைய வானரர்கள் உள்ளக் கிளர்ச்சி பெற்று, மலைகளினால் கடலைத் தடுத்து அணைகட்டுதலை முற்றுப்பெற நன்கு செய்து, நெருங்கிய ஒளியையுடைய இலங்கை நகர்க்குள் புகுந்து முற்றுகையிட்டு ஆரவாரித்தனர். அதுகண்ட தேவர்கள் 'இனி, அரக்கர் மாள்வர்' என்ற துணிவுடையவராய் முன்பு இருந்த அச்சம் நீங்கப் பெற்றனர்.

கு :— வேலை தட்டல் என்றது, கடலை மலைகளால் தடுத்து அணை செய்தலை உணர்த்தியது. இலங்கை நகரின் மாடங்கள் பொன்னினும் மணியினும் இயன்றவையாதலின் 'மொய்யொளி இலங்கை எனச் சிறப்பித்தார். சுற்றிப் பற்றினர் என்க; என்றது முற்றுகை யிடுதலை. (293)

இராவண வதம்

10389. மலையினை யெடுத்த தோளும்
மதமலை திளைத்த மார்பும்
தலையொரு பத்துஞ் சிந்தித்
தம்பிதன் றோளுந் தாளும்
கொலைத்தொழி லரக்க ராயோர்
குலத்தொடுந் தலத்து வீழச்
சிலையினை வளைவித் தையன்
தேவர்க ளிடுக்கண் டீர்ந்தான்.

'மலையினை எடுத்த தோளும்,
மதமலை திளைத்த மார்பும்,
தலை ஒருபத்தும் சிந்தி,
தம்பிதன் தோளும் தாளும்

கொலைத் தொழில் அரக்கராயோர்
குலத்தொடும் தலத்து வீழ
சிலையினை வளைவித்து, ஐயன்
தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்.

பொ :—இராமன் வில்லை வளைத்து, வெள்ளிமலையை யள்ளியெடுத்த இராவணனது தோள்களும், திசை யானைகளின் கொம்புகள் பதிந்த மார்பும், தலை பத்தும், தம்பி கும்பகருணனுடைய தோளும் கால்களும் கொலையையே தொழிலாகக் கொண்ட அரக்கர்களின் கூட்டத்தோடு தரையில் விழுமாறு அழித்துத் தேவர்களின் துன்பத்தைத் தீர்த்தான்.

கு :—வில்லை வளைத்தலாகிய வினையைக் கூறவே அம்பு தொடுத்தலாகிய வினையும் இனம்பற்றிக் கொள்ளப்படும்; சோறுண்டான் என்ற வழிக் கறியுண்டான் என்பதும் கொள்ளப் படுதல் போல. அரக்கராயோர் குலத்தொடு தோளும், மார்பும், தலையொரு பத்தும், தலத்து வீழச்சிந்தி இடுக்கண் தீர்த்தான் என இயையும். குலம் — கூட்டம். (294)

இந்திரசித்து வதை

10390. இலக்குவன் பகழி யொன்று
லிந்திர சித்தென் றோதும்
விலக்கரு வலத்தி னானு
மிளைஞருங் கிளையும் வீழ்ந்தார்
அலக்கணுண் டுழலுந் தேவ
ரலர்மழை தூவி யார்த்தன்
றுலக்குநர் குழுக்க டோறு
முடற்குறை யாடல் கண்டார்.

‘இலக்குவன் பகழி ஒன்றால்
இந்திரசித்து என்று ஓதும்
விலக்கரு வலத்தினானும்
இளைஞரும் கிளையும் வீழ்ந்தார்
அலக்கண் உண்டு உழலும் தேவர்
அலர்மழை தூவி ஆர்த்து, அன்று

உலக்குநர் குழுக்கள் தோறும்
உடற்குறை ஆடல் கண்டார்.

பொ :— இலக்குவன் விட்ட அம்பு ஒன்றினால் இந்திர சித்து என்று சொல்லப்படுகின்ற, யாராலும் விலக்குதற்கு அரிய வலிமையுடையவனும் அவன் தம்பிமாரும் உறவினரும் இறந்து விழ்ந்தார்கள்; இதுகாறும் அவ்வரக்கரால் துன்பமுற்று வருந்தும் தேவர்கள், (அவ்வரக்கரின் விழ்ச்சி கண்டு மகிழ்ந்து) மலர்மாரி சொரிந்து ஆரவாரித்து அன்று, இறந்தவர்களின் கூட்டந் தோறும் கவந்தங்கள் ஆடுவதையும் கண்டு களித்தார்கள்.

கு :— இந்திரசித்து வதை இராவண வதைக்கு முன்பு நிகழ்ந்ததாயினும் இராமன் செயல்களைச் சொல்லி முடித்துவிட்டு இலக்குவன் செயலைச் சொல்லும் நோக்கத்தால் பின்னர்க் கூறினார். உலக்குநர்— இறப்பவர். உடற்குரை—கவந்தம்.

(295)

மாண்ட அரக்கர்க்கு வீடணனை இறுதிக்கடன்
செய்யச் செய்தல்

10391. தேவரு முனிவர் தாமுஞ்
சித்தருந் தெரிவை மாரும்
மூவகை யுலகு ளோரும்
முறைமுறை தொழுது மொய்ப்பப்
பூவைபோ னிறத்தி னனும்
வீடணப் புலவர் கோமாற்
கியாவையு மியம்பி மாண்டோர்க்
கியற்றுதி கடன்க ளென்றான்.

'தேவரும் முனிவர் தாமும்,
சித்தரும் தெரிவை மாரும்
மூவகை உலகுளோரும்,
முறைமுறை தொழுது மொய்ப்ப,
பூவைபோல் நிறத்தினனும்,
வீடணப் புலவர் கோமாற்கு
இயாவையும் இயம்பி, ''மாண்டோர்க்கு
இயற்றுதி கடன்கள்'' என்றான்.

பொ :—தேவர்களும் முனிவர்களும் சித்தரும், அவர்கள் மனைவிமார்களும் மூவகை உலகத்தவரும் முறை முறையே வணங்கி நெருங்கக், காயாம்பூப் போன்ற நிறத்தையுடைய இராமனும், வீடணனாகிய அறிவிற் சிறந்தோனுக்கு எல்லா வற்றையும் சொல்லி 'இறந்த அரக்கர்க்கு இறுதிக்கடன்கள் செய்க' என்று பணித்தான்.

கு :—இராமன் நல்லோரைக் காக்க அல்லோரை அழித்த வீரச்செயலை நினைந்து மூவுலகத்தவரும் இராமனைத் தொழுது மொய்த்தார்கள் என்க. மூவுலகத்தோரில் தேவரும் முனிவரும் முதலாயோர் அடங்குவரேனும் சிறப்புப்பற்றிப் பிரித்து வேறு கூறியவாறு. பூவை-காயாம்பூ. வீடணன் 'அறிவினுக்கு அறிவு போல்வான்' என்று முன் கூறியதற்கேற்ப இங்கு 'வீடணப் புலவர் கோமான்' எனச் சிறப்பிக்கப்பெற்றான். (296)

இச்செய்யுளின் பின் 41, 45 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் கீழ்வரும் மிகைச் செய்யுள் காணப்படுகின்றது:—

10391 (1) ஏடிண ரலங்கன் மார்பத்
திராவணன் முதலோர்க் கெல்லாம்
வீடணன் கடன்கள் செய்து
மீண்டன னவனுக் கின்னே
சூடுக மௌலி யென்னச்
சுந்தர விராமன் றம்பி
மாடணை துணைவ ரோடு
மகுடமே புனைந்து விட்டான்.

இராமன் சீதையைச் சினந்துபின் தணிதல்

10392. நான்முகன் விடையை யூரும்
நாரியோர் பாகத் தண்ணல்
மான்முகன் முதலா யுள்ள
வானவர் தொழுது போற்ற
ஊன்முகங் கெழுவு வேலா
யும்பர்நா யகியைச் சீறித்
தேன்முக மலருந் தாரா
னரிசொலச் சீற்றந் தீர்ந்தான்.

'நான்முகன், விடையை யூரும்
நாரிஓர் பாகத்து அண்ணல்
மான்முகன் முதலாய் உள்ள
வானவர் தொழுது போற்ற
ஊன்முகம் கெழுவு வேலாய்!
உம்பர் நாயகியைச் சீறி
தேன்முகம் மலரும் தாரான்
அரிசொலச் சீற்றம் தீர்ந்தான்.

பொ :— பகைவர்தம் உடம்பின் தசை பொருந்திய வேற் படையை யுடைய பரதனே! தேனைத் தன்னிடத்தே கொண்டு மலரும் மாலையை யணிந்த இராமன், நான்கு முகங்களையுடைய பிரமனும் எருதினை யூர்ந்து செல்லும் தன்மையையுடைய பெண்ணொரு பாகத்தண்ணலாகிய சிவபிரானும், மானின் முக முடைய மயனும், முதலாகவுள்ள தேவர்கள் தன்னைத் தொழுது போற்றுநிற்க, தேவர்கட்கெல்லாம் நாயகியாகிய சீதையை (அரக்கர்தம் இல்லில் இருந்தமைக்காகக்) கோபித்து, அங்கியங் கடவுள் நேர் வந்து அந்தச் சீதை தன் கற்பின் உறுதியைச் சொல்ல, அந்தக் கோபம் தணிந்தான்.

கு :— தேவர்கள் முன்னிலையில் இராமன், சீதை இலங்கை யில் பகைவனது இருப்பிடத்தில் இருந்தமையால் அவள் கற்பில் ஐயங்கொண்டு கோபித்தானாக, அது பொருத சீதை நெருப்பில் வீழ, அவள் கற்பின் வெம்மைத் தன்னையும் வெதுப்பியதை யறிந்த அங்கியங்கடவுள், சீதையின் மாசற்ற கற்பினை விளக்கினு னாக இராமன் சினம் தணிந்தான் என்றவாறு. மான் முகன் என்றது மயனை. உம்பர் நாயகி என்றது, சீதையை; முன்னைத் தெய்வ நிலை நினைந்து கூறியது. அரி—அங்கியங் கடவுள். பகைவர் மார்பில் நுழைந்து நுழைந்து உயிர்குடித்துப் பழகிய வேல் ஆதலின் 'ஊன் முகங்கெழுவு வேல்' என்றார். இதனால் பரதனுடைய பகைவெல்லும்தகையை யுணர்த்தியவாறு. (297)

### தயரதன் வருகையும் வரமருளுதலும்

10393. மெய்யினுக் குயிரை யீந்த
வேந்தர்கோன் விமானத் தெய்த

அய்யனு மிளைய கோவு
மன்னமு மடியில் வீழக்
கய்யினுற் பொருந்தப் புல்லிக்
கண்ணினீர்க் கலச மாட்டிச்
செய்வர மருளு கென்றுன்
றிருவினு யகனுங் கொண்டான்.

'மெய்யினுக்கு உயிரை ஈந்த
வேந்தர்கோன் விமானத்து எய்த,
அய்யனும் இளைய கோவும்
அன்னமும் அடியில் வீழ,
கய்யினுல் பொருந்தப் புல்லி,
கண்ணின் நீர்க்கலசம் ஆட்டி,
''செய்வரம் அருளுக'' என்றுன்;
திருவின் நாயகனும் கொண்டான்'

பொ :—உண்மையைக் காப்பாற்ற உயிரைக் கொடுத்த தயரதச்சக்கரவர்த்தி விமானத்தில் வர, இராமனும் இலக்குவனும் அன்னம் போன்றமென்னடையுடைய சீதையும் அவனடியில் வீழ்ந்து வணங்க, தயரதன் அவர்களைத் தன் கையினுல் பொருந்த அணைத்துக் கண்ணீரால் திருமஞ்சனமாட்டிவிட்டு, 'யான் கொடுக்கத்தக்க வரம் ஒன்றைக் கொண்டருள்க' என்று கூற, திருவின்நாயகனுகிய இராமனும் அவ்வரத்தைக் கொண்டான்.

கு :—விண்ணுலகடைந்த தயரதன் தன் மக்களையும் மருமகளையும் நேரில் காணும் பேறுபெற்றமை நினைந்து மனமுருகிக் கண்ணீர்ப் பெருக்கினுனுக, அக்கண்ணீரால் இராமன் முதலியோர் உடம்பு நனைந்தது என்னும் கருத்துப் புலப்பட, 'கண்ணினீர்க் கலசமாட்டி' என்றுர். கலச நீரால் திருமஞ்சனம் செய்தல் போலத் தயரதன் கண்ணீரால் அவர்கட்குத் திருமஞ்சனம் செய்தான் என்றவாறு. செய்வரம் என்றது, தயரதன் கொடுக்கத்தக்க வரம் என்றவாறு 'அருளுக' என்றது கேட்டருள்க என்னும் பொருளது. இராமன் அவ்வரத்தைக் கொண்டமை வருஞ் செய்யுளால் விளக்குகின்றுர். ''யானுனக்கீவது ஒன்று

கூறுதி'' (128) எனத் தயரதன் வேண்டினமை முன் சொல்லப் பட்டுளது காண்க. (298)

வரங்கொடுத்துத் தயரதனும் அமரரும் செல்லுதல்

10394. என்னைநன் கருணை தன்னு
லீன்றெடுத் தினிது பேணும்
அன்னையு மகனு முன்போ
லாகென வருளி னீந்து
மன்னவன் போய பின்றை
வானரம் வாழ்வு கூரப்
பொன்னெடு நாட்டி லுள்ளார்
வரம்பல வழங்கிப் போனர்.

"என்னை 'நன் கருணை தன்னால் ஈன்று
எடுத்து, இனிது பேணும்
அன்னையும் மகனும் முன்போல்
ஆக'' என அருளின் ஈந்து,
மன்னவன் போய பின்றை,
வானரம் வாழ்வு கூர,
பொன்நெடு நாட்டில் உள்ளார்
வரம்பல வழங்கிப் போனர்.

பொ :—'நல்ல கருணையினுல் என்னைப் பெற்று வளர்த்து இனிமையாகப் பாதுகாக்கின்ற கைகேயியும் பரதனும் முன் போலவே எனக்கு அன்னையாகவும் தம்பியாகவும் ஆவார்களாக' என இராமன் வேண்ட அருளினுல் அவ்வரத்தைக் கொடுத்து விட்டுத் தயரத மன்னன் போன பின்பு, இறந்த வானரங்கள் எல்லாம், எழுந்து வாழ்வில் சிறக்குமாறு உயர்ந்த பொன்னுட் டில் உள்ள தேவர்கள் வரங்கள் பலவற்றைக் கொடுத்துச் சென்றுர்கள்.

கு :—இராமனைப் பெற்றவள் கைகேயியல்லளாயினும், தாய் என்பதற் கேற்ப இங்ஙனம் கூறினன். தயரதன் இறப்பதற்கு முன் வெறுப்பினுல் கைகேயியைத் தன் மனைவியல்லள் எனவும் பரதனைத் தன் மகன் அல்லன் எனவும் கூறியிருந்தான் ஆகலின்,

இராமன் இவ்வாறு வரங்கேட்க வேண்டியவனுனன். கைகேயியும் பரதனும் தனக்குத் தாயும் தம்பியும் ஆகவேண்டும் எனவே, தயரதனுக்கு மனைவியும் மகனும் ஆயினர் என்பது பெறப்படுதலின் இராமன் இங்ஙனம் வரங்கேட்டுப் பெற்ருன். ''அழகன், தீயளென்று நீ துறந்தவென் தெய்வமும் மகனும், தாயும் தம்பியும் ஆம் வரம் தருகெனத் தாழ்ந்தான்'' (129) என முன் வந்துள்ளமை நினைக. (299)

### வீடணன் விமானம் ஈதல்

10395. வெள்ளமோ ரேழு பத்தும்
விலக்கரும் வீர ராகி
உள்ளவ ரறுபத்தேழு கோடியு
மொற்றை யாழி
வள்ளறன் மகனு முள்ள
மகிழ்வுற விமான மீந்தான்
எள்ளலில் லாத கீர்த்தி வீடண
னிலங்கை வேந்தன்.

'வெள்ளம் ஓர் ஏழுபத்தும்,
விலக்கரும் வீரர் ஆகி
உள்ளவர் அறுபத்துஏழு கோடியும்,
ஒற்றை ஆழி
வள்ளல்தன் மகனும், உள்ளம்
மகிழ்வுற விமானம் ஈந்தான் —
எள்ளல்இல்லாத கீர்த்தி வீடணன்
இலங்கை வேந்தன்.

பொ :— எழுபது வெள்ளம் வானர சேனையும், யாவராலும் விலக்குதற்கு அரிய வீரராகியுள்ள அறுபத்தேழு கோடிபேரும், ஓராழித் தேரையுடைய சூரியன் மகனுகிய சுக்கிரீவனும், மனம்மகிழுமாறு பழித்தற்கியலாத கீர்த்தியுடைய இலங்கை வேந்தனுகிய வீடணன் புட்பக விமானத்தைக் கொடுத்தான்.

கு :— ஒற்றையாழி வள்ளல் என்றது சூரியனை. எழுபது வெள்ளம் வானர சேனையில் விலக்கரும் வீரர் அறுபத்தேழுகோடி

பேர் இருந்தனர் என்பது இதனால் புலனாம். தத்தம் ஊர்கட்கு விரைந்து செல்ல ஊர்தி கிடைத்தது கண்டு யாவரும் மனம் மகிழ்ந்தனர் என்றவாறு. தன் அண்ணனைக் கொல்வித்து அரசு வவ்வினான் என யாரும் இகழக் கூடும் என்பது நினைந்து 'எள்ளலில்லாத கீர்த்தி வீடணன்' எனச் சிறப்பித்தவாறு. கொடியோரைக் களைந்து நல்லோரை வாழ்வித்த நல்லறமுடைய வன் வீடணன் ஆதல் நினைந்து இங்ஙனம் சிறப்பித்தவாறு. ஒற்றையாழி வள்ளல் தன் மகனும் என்பதற்கு, தனி ஆணை நடத்தியவள்ளலாகிய தயரதன் மகனாகிய இராமனும் எனப் பொருள் கூறலும் ஆம். (300)

*இராமன் துணைவரோடு விமானத்தில் ஏறிப் பரத்துவன் ஆசிரமத்தையடைதல்*

10396. ஆரியன் பின்னை நின்னை
யன்பினா னினைந்து காதற்
சூரியன் மகனுந் தொல்லைத்
துணைவரு மிலங்கை வேந்தும்
பேரியற் படையுஞ் சூழப்
பெண்ணினுக் கரசி யோடும்
சீரிய விமானத் தேறிப்
பரத்துவ னிருக்கை சேர்ந்தான்.

'ஆரியன் பின்னை நின்னை
அன்பினால் நினைந்து, காதல்
சூரியன் மகனும் தொல்லைத்துணைவரும்
இலங்கை வேந்தும்,
பேர்இயல் படையும் சூழ,
பெண்ணினுக்கு அரசி யோடும்
சீரிய விமானத்து ஏறிப்
பரத்துவன் இருக்கை சேர்ந்தான்.

பொ :—சிறந்தவனாகிய இராமன் பின்பு நின்னை (விரைவில் சேரவேண்டும் என்று) அன்பினால் நினைந்துகொண்டே, சூரியனது அன்பிற்குரிய புதல்வனான சுக்கிரீவனும் பழைமையான நண்பர்களும், இலங்கைக்கு வேந்தனாகிய வீடணனும், பெரிய

தன்மையுடைய சேனையும் தன்னைச் சூழ்ந்துவர, பெண்ணினத்திற்கு அரசியாகிய சீதையோடு, சிறப்புள்ள புட்பகவிமானத்தில் ஏறிப் பரத்துவாச முனிவனது இருப்பிடத்தைச் சேர்ந்தான்.

கு:—ஆரியன்–சிறந்தவன்; இராமன். சூரியன் காதல் மகனும் என இயையும். தொல்லைத் துணைவர் என்றது சாம்பவன் நீலன், நளன் முதலியோரை. (301)

அனுமன் தன்னை ஆழிகொடுத்து இராமன் அனுப்பியதைக் கூறியது

10397. அன்பினு லென்னை நின்பா
லாழியுங் காட்டி யான்ற
துன்பெலாந் துடைத்தி யென்றே
துரந்தனன் ருேன்ற லென்று
முன்பினு லியன்ற வெல்லா
மொழிந்தனன் முதுநீர் தாவி
வன்பினு லிலங்கை முற்று
மெரிக்குண வாக வைத்தோன்.

'அன்பினுல் என்னை, நின்பால்
ஆழியும் காட்டி ''ஆன்ற
துன்பூஎலாம் துடைத்தி'' என்று
துரந்தனன், தோன்றல்' என்று,
முன்பினுல் இயன்ற எல்லாம்
மொழிந்தனன் — முதுநீர் தாவி
வன்பினுல் இலங்கை முற்றும்
எரிக்கு உணவாக வைத்தோன்.

பொ:—'இராமன், அன்பினுல், என்னை (நோக்கி) நின்பால் (பரதனிடம்) மோதிரத்தையும் காட்டி ''மிக்க துன்பத்தை யெல்லாம் துடைப்பாயாக'' என்று என்னை அனுப்பினுன்' என்று முன்பு நடந்த எல்லாவற்றையும் சொன்னுன். யார் எனின், பழமையான கடலைத் தாண்டிச் சென்று தன் வலிமையினுல்

இலங்கை முழுவதையும் நெருப்புக்கு இரையாகச் செய்தவனாகிய அனுமன்.

கு.—ஆன்ற துன்பு-நிறைந்த துன்பம்; மிக்க துன்பம். முதுநீர் என்றது கடலை. இலங்கையை எரித்த அனுமன் இங்கு எரியை அவித்த வியப்பினைப் புலப்படுத்தியவாறு. எரிக்கு உணவாக வைத்தோன் என்றது, எரித்த என்னும் பொருளது. துரத்தல்-விரைந்துசெல்லச் செய்தல். தோன்றல் என்றது இராமனை. (302)

பரதன் தன்னிலை நினைந்து இரங்குதல்

10398. காலின்மா மதலை சொல்லப்
பரதனுங் கண்ணீர் சோர
வேலிமா மதில்கள் சூழு
மிலங்கையில் வேட்டங் கொண்ட
நீலமா முகில்பின் போனா
னொருவனா னின்று நைவேன்
போலுமா லிவைகள் கேட்பேன்
புகழுடைத் தடிமை மன்னோ.

காலின்மா மதலை சொல்ல,
பரதனும் கண்ணீர் சோர,
வேலி மா மதில்கள் சூழும்
இலங்கையில் வேட்டம் கொண்ட
நீல மா முகில்பின் போனான்
ஒருவன்; நான்நின்று நைவேன்
போலுமால்; இவைகள் கேட்பேன்;
புகழ்உடைத்து, அடிமை மன்னோ.

பொ:—வாயுவின் மகனாகிய அனுமன் சொல்லச் சொல்ல(க் கேட்ட) பரதனும் தன் கண்கள் நீர் சொரியாநிற்க– 'ஒரு தம்பி வேலிபோலப் பெரிய மதில்கள் சூழ்ந்துள்ள இலங்கையில் வேட்டையாடிய நீலநிறமுடைய பெரிய மேகம் போன்றவனான இராமன்பின் போனான்; யான், இங்கு நின்று இந்த நிகழ்ச்சி

களைக் கேட்டு வருந்துதற்கே யுரியேன் போலும்! என் அடிமைத் திறம் புகழுடையதாயிருந்தது!

கு:— இராமன் கானகம் புக்கபின் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் துன்ப நிகழ்ச்சிகளாக இருத்தலின் அதை அனுமன் சொல்லக் கேட்ட பரதன் கண்களில் நீர் பெருகிற்று என்க. வேடன் வில்லை யேந்தி விலங்குகளை வேட்டையாடுதல்போல இராமன் வில்லேந்தி விலங்கு போன்று நெறிதவறிய இராவணனை வேட்டையாடியதாகவே கொள்ளத்தகும் என்ற கருத்தால் ''இலங்கையில் வேட்டங்கொண்ட நீலமாமுகில்'' என்று கூறினான். எளிதில் நுழைதற்கருமையுடைமை புலப்பட 'வேலிமா மதில்கள் சூழுமிலங்கை' என்றான். முகில் என்றது உவமை யாகு பெயராய் முகில் வண்ணனாகிய இராமனை உணர்த்தியது. இலக்குவன் இராமனுடன் பின் சென்று இராமன் துன்பத்திற்குத் துணையாய் நின்று உதவினான். யானோ அத்துன்ப நிகழ்ச்சிகளைக் கேட்டு வருந்தும் அளவில் நிற்கின்றேன்; இலக்குவன் அடிமைபோல என்னடிமைத்திறம் புகழுடையதாக இல்லை, என்பான். 'புகழுடைத் தடிமை மன்றோ' என்றான். புகழுடைத்து என்பது குறிப்புச் சொல்; எதிர்மறைப் பொருளை யுணர்த்தியது. (303)

பரதன் அனுமனது கைபற்றிக்கொண்டு கங்கையைக் சார்தல்

10399. என்றவ னிரங்கி யேங்கி
யிருகணு மருவி சோர
வன்றிற லனுமன் செங்கை
வலக்கையாற் பற்றிக் காலின்
சென்றன னிருளி னூடு
செறிபுனற் கங்கை சேர்ந்தான்
குன்றினை வலஞ்செய் தேரான்
குணகடற் றேன்று முன்னர்.

என்றுஅவன் இரங்கி ஏங்கி,
இருகணும் அருவி சோர
வன்திறல் அனுமன் செங்கை
வலக்கையால் பற்றி, காலின்

சென்றனன் இருளின் ஊடு,
செறிபுனல் கங்கை சேர்ந்தான்
குன்றினை வலஞ்செய் தேரான்
குணகடல் தோன்றும் முன்னர்.

பொ:—என்று அப்பரதன் மனம் இரங்கி வருந்தி இரண்டு கண்ணும் அருவிபோன்று கண்ணீர் பெருக, வன்மையும் திறமையுமுடைய அனுமனது சிவந்த கையைத் தன் வலக்கையால் பிடித்துக்கொண்டு (ஊர்தியில் செல்லாது) காலில் நடந்து சென்று இருளினுக்கிடையே மேருமலையினை வலஞ்செய்கின்ற தேரையுடைய சூரியன் கீழ்கடலில் உதிப்பதற்கு முன்னரே—நெருங்கிய நீரையுடைய கங்கையை அடைந்தான்.

கு:—மன்னவனாகிய பரதன் ஊர்தியிற் செல்லும் தகுதியுடையனாயிருந்தும் இராமன்பாலுள்ள மதிப்பினால் நடந்தே சென்றான் என்பார், 'காலிற் சென்றனன்' எனச் சிறபித்துக் கூறினர். குன்று என்றது மேருமலையை. சூரியன் நாள்தோறும் மேருமலையை வலம் வருவதாகக் கூறுவது புராணமரபு. (304)

சூரியன் உதித்தல்

10400. இராவணன் வேட்டம் போய்மீண்
டெம்பிரா னயோத்தி யெய்தித்
தராதல மகளும் பூவிற்
றையலு மகிழச் சூடும்
அராவுபொன் மௌலிக் கேய்ந்த
சிகாமணி குணபா லண்ணல்
விராவுற வெடுத்தா லென்ன
வெய்யவ னுதயஞ் செய்தான்.

இராவணன் வேட்டம்போய் மீண்டு,
எம்பிரான், அயோத்தி எய்தி
தராதல மகளும் பூவின்
தையலும் மகிழச் சூடும்
அராவுபொன் மௌலிக்கு ஏய்ந்த
சிகாமணி குணபால் அண்ணல்

விராவுற எடுத்தா லென்ன
வெய்யவன் உதயம் செய்தான்.

பொ :—எம்பெருமாஞகிய இராமன் இராவணனே வேட்டை யாடச் சென்று மீண்டு அயோத்தி அடைந்து நிலமகளும் செந்தா மரை மலரில் இருக்கும் திருமகளும் மனமகிழுமாறு சூடப் போகின்ற அராவிச் செப்பும் பொன் முடிக்குப் பொருத்தமான தலையாய மணியைக் கிழக்குத் திசைக்குக் காவலனுகிய இந்திரன் பொருந்துமாறு எடுத்தாற்போலச் சூரியன் உதித்தான்.

கு :—இராமன் என்னும் நல்ல அரசன் ஆட்சிக்கு வருவதால் நிலமகளும் மலர்மகளும் மகிழ்வது இடுக்கண் இன்றி இருப்போம் என்ற எண்ணத்தாலாகும். இனித் திருமாலே இராமனுக வந்துளான் ஆதலின் அத்திருமாலின் தேவியராகிய சீதேவியும் பூதேவியும் அவன் மணி முடி சூடுதற்கு மகிழ்வர் எனலும் ஆம். "நிவப்புறு நிலனெனும் நிரம்பு நங்கையும் சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும் உவப்புறு கணவனை உயிரினெய்திய தவப் பயன் தாழ்ப்பது தருமம் மன்றரோ" (அயோத்தி-மந்திரப்-29) என்று கூறியுள்ளதும் நினையலாம். கீழ்த்திசையில் இயல்பாக எழுகின்ற சூரியனது எழுச்சி, இராமன் சூடும் மணி முடிக் கேற்பப் பதிப்பதற்குரிய தலைமணியை இந்திரன் எடுத்தாற் போன்றிருந்தது என்பது தற்குறிப் பேற்றவணியாகும். சிகாமணி — தலைசிறந்த மணி. குணபால் அண்ணல் என்றது கீழ்த் திசைக் காவலனுகிய இந்திரனை. (305)

*இராமன் வருகையில் ஐயங்கொண்டு பரதன் அனுமனை வினவுதல் 10401 — 10403*

10401. காலைவந் திறுத்த பின்னர்க்
கடன்முறை கமலக் கண்ணன்
கோலநீள் கழல்க ளேத்திக்
குரக்கினத் தரசை நோக்கிச்
சாலவுங் கலைகள் வல்லோய்
தவறுண்டு போலும் வாய்மை
மூலமே யுணரி னுன்றன்
மொழிக்கெதிர் மொழியு முண்டோ.

காலேவந்து இறுத்த பின்னர்க்
கடன்முறை கமலக் கண்ணன்
கோலநீள் கழல்கள் ஏத்தி,
குரக்கினத்து அரசை நோக்கி
சாலவும் கலேகள் வல்லோய்!
தவறு உண்டு போலும், வாய்மை;
மூலமே உணரின், உன்தன்
மொழிக்கு எதிர்மொழியும் உண்டோ?

பொ :—பரதன் காலேயில் வந்து செய்யும் கடன்களே முறையாகச் செய்து முடித்த பின்பு, கமல மலர் போன்ற கண்களேயுடைய இராமனுடைய அழகிய நீண்ட பாதங்களேத் துதித்து விட்டுக் குரங்கினத்திற்கு அரசு போன்றவனுகிய அனுமனே நோக்கி, 'பலவகைக் கலேகளிலும் மிகவும் வல்ல அனுமனே! (இராமன் வந்துளான் என்பதற்குரிய அடையாளம் ஏதும் இங்குக் காணப்படாமையின்) நீ கூறிய வாய்மொழியில் தவறுண்டு போலும்; அடிமுதல் நன்கு ஆராய்ந்து பார்க்குமிடத்து உன் சொல்லுக்கு மாறுபட்ட சொல்லும் உண்டோ? (இராதன்றே?)

கு :—கடன் முறையிறுத்த பின்னர் என இயையும். கமலக் கண்ணன் என்றது இராமனே. கழல்கள் என்றது அவன் பாதுகைகளே. நாள்தொறும் பரதன் வழிபடுவது அப்பாதுகையையேயாகலின் இன்றும் அதனே ஏத்துவானுயினுன். குரக்கினத்தரசன் அனுமன் அல்லனுயினும் அரசன் போன்ற பெருந்தகுதியுடையவனுதலின் அங்ஙனம் சிறப்பித்தவாறு. இராமன் வந்திருக்கின்ருன் என்பதற்குரிய அடையாளம் ஏதும் இதுகாறும் காணப் பெருமையின் பரதன் அனுமன் வாய்மொழியில் ஐயம் கொண்டு இங்ஙனம் வினவினுன். எதிர்மொழி என்றது, மாறுபட்ட மொழியை; நின் சொல் பொய்யாதலும் உண்டோ என்றவாறு. அவ்வாறு ஐயுறற்குக் காரணம் வருஞ் செய்யுளில் கூறுகின்ருன். (306)

10402. எழுபது வெள்ளஞ் சேனே
வானர ரிலங்கை வேந்தன்
முழுமுதற் சேனே வெள்ளங்
கணக்கில மொய்த்த வென்ருல்

அழுவநீர் வேலை யன்ன
வரவமின் ருக வற்ரே
விழுமிதெம் பிரான்வந் தானென்
றுரைத்தது வீர வென்ருன்.

'எழுபது வெள்ளம் சேனை
வானரர் இலங்கை வேந்தன்
முழுமுதல் சேனை வெள்ளம்,
கணக்குஇல மொய்த்த என்ருல்,
அழுவநீர் வேலை அன்ன
அரவம் இன்றுஆக வற்ரே?
விழுமிது, ''எம்பிரான் வந்தான்'' என்று
உரைத்தது, வீர! என்ருன்.

பொ :—'வீரனே! எழுபது வெள்ளம் என்ற அளவினையுடைய வானர சேனையும் இலங்கை வேந்தனுகிய வீடணனது மிகப் பெரிய சேனை வெள்ளமும் அளவில்லாமல் நெருங்கின என்ருல், பரவிய நீரையுடைய கடலின் ஆரவாரம் போன்ற ஆரவாரம் இல்லாதிருக்க இயலுமோ? எம்பிரானுகிய இராமன் வந்தான், என்று நீ சொன்னது அழகாக இருக்கின்றது' என்று பரதன் கூறினுன்.

கு :—வானர சேனையும் அரக்கர் சேனையும் கணக்கிலாமல் மொய்த்துள்ளன என்ருல் நெடுந்தொலைவிலும் சென்று கேட்கும் கடல் ஒலிபோல அச்சேனையின் ஆரவாரம் கேளாமல் இருக்குமோ? அது கேளாமையின் 'இராமன் வந்தான்' என்று நீ சொன்னது விழுமிதன்று; பொய்யே போலும் என்றவாறு. 'விழுமிது' என்பது குறிப்புச்சொல், எதிர்மறைப் பொருளை யுணர்த்தியது; கற்கறித்து, 'நன்கட்டாய்' என்புழிப்போல. (307)

10403. ஓசனை யிரண்டே யுள்ள
பரத்துவ னுறையுஞ் சோலை
வீசுதெண் டிரையிற் ருய
வெள்ளமோ ரேழு பத்தும்

மூசிய பழுவ மிங்ஙன்
கிடப்பதோ முரற்ற லின்றிப்
பேசிய தமையு நங்கோ
னெங்குளன் பெரும வென்றான்.

'ஓசனை இரண்டே உள்ள,
பரத்துவன் உறையுஞ் சோலை:
வீசுதெண் திரையிற்று ஆய
வெள்ளம்ஓர் ஏழு பத்தும்
மூசிய பழுவம் இங்ஙன்
கிடப்பதோ, முரற்றல் இன்றி?
பேசியது அமையும்; நம்கோன்
எங்குளன், பெரும!' என்றான்.

பொ:— பெருமானே! பரத்துவாசன் தங்கியுள்ள சோலைக்கு இரண்டுயோசனையேயுள்ளன: வீசுகின்ற தெள்ளிய அலைகளையுடைய கடலின் அளவினதாகிய எழுபது வெள்ளம் சேனை நெருங்கியிருக்கின்ற நிலப்பரப்பு இவ்வாறு ஆரவாரம் இன்றி கிடக்குமோ? நீ பேசியது போதும்; நம் அரசனாகிய இராமன் எங்குளன்? என்று பரதன் வினவினான்.

கு:— இராமன் எழுபது வெள்ளம் வானரசேனையுடன் தங்கியிருப்பதாகச் சொல்லப் பெற்ற பரத்துவாசன் ஆசிரமம் இரண்டு யோசனை தொலைவில் நெருங்கியுள்ளதால், சேனைகளின் ஆரவாரம் கேட்கப் படுதலே இயல்பு ஆகவும், சிறிது ஒலியும் கேட்கப்படாமையால் இராமன் அங்கு இருப்பதாக நம்ப இயலவில்லை என்ற கருத்தால், 'நங்கோன் எங்குளன் பெரும?' என்று பரதன் வினவலானான். 'பெரும' என்று அனுமனை விளித்தது குறிப்புச் சொல். மூசுதல்—மொய்த்தல்; நெருங்குதல். பழுவம் — பரப்பு. முரற்றல் — ஒலித்தல். (308)

*அனுமான் கூறிய விடை 10404, 10405*

10404. பரதனஃ துரைத்த லோடும்
பணிந்துமா ருதியுந் சீர்சால்
விரதமா தவத்து மிக்கோய்
விண்ணுளோர் தம்மை வேண்டி

வரதனுண் டளித்த வந்த
வரத்தினுன் மலருந் தேனும்
சரதமே மாந்தி மாந்தித்
துயின்றது தானே யென்ருன்.

பரதன்அஃது உரைத்த லோடும்
பணிந்து மாருதியும் சீர்சால்
விரத மாதவத்து மிக்கோய்!
விண்ணுளோர் தம்மை வேண்டி
வரதன் ஆண்டு அளித்த அந்த
வரத்தினுல், மலரும் தேனும்
சரதமே மாந்தி மாந்தித்
துயின்றது தானே என்ருன்.

பொ:—பரதன் அதைச்சொன்னவுடன் அவனைப் பணிந்து அனுமனும், (அப்பரதனை நோக்கி) சிறப்புமிக்க விரதங்களோடு செய்யும் பெரிய தவத்தில் சிறந்தோனே! விண்ணுலகத்துள்ள தேவர்களை வேண்டி, வரம் தரத்தக்க பரத்துவாசன், அங்கு அளித்த வரத்தினுல் மலரையும் தேனையும் அருந்தி அருந்திச் சேனை முழுதும் மயங்கித் தூங்கிவிட்டது. இது உறுதி, என்று கூறினுன்.

கு:—இராமன் வருகையை எதிர்நோக்கி விரத மாதவத்தனுக விளங்கிய பரதனுக்கு இத்தகைய ஐயம் ஆர்வமிகுதியால் தோன்றுதல் இயல்பு என்பான், சீர்சால்விரத மாதவத்தின் மிக்கோய்' என்று விளித்தான். வேண்டி அளித்த அந்த வரத்தினுல் என இயையும். இதுகாறும் போர்செய்து இளைத்திருந்த வானர சேனை, பரத்துவன் அளித்த மலரையும் தேனையும் மிகுதியாகவுண்டு உறங்கிவிட்டது; எனவே, ஆரவாரம் ஒன்றும் இல்லையாயது என்பது அனுமன் விடையாகும். சரதம்-உறுதி. (309)

10405. வானவர் கொடுக்க வந்த
வரத்தினுன் மதுப மூசும்
தேனெடு கிழங்குங் காயுங்
கனிகளும் பிறவுஞ் சீர்த்துக்

கானகம் பொலித லாலே
கவிக்குல மவற்றை மாந்தி
ஆனன மலர்ந்த தில்லை
யாகுநீ துயர லெந்தாய்.

'வானவர் கொடுக்க வந்த
வரத்தினுல், மதுபம் மூசும்
தேனெடு கிழங்குங் காயும்
கனிகளும் பிறவும் சீர்த்துக்
கானகம் பொலிதலாலே,
கவிக்குலம் அவற்றை மாந்தி
ஆனனம் மலர்ந்தது இல்லை
யாகும்: நீ துயரல், எந்தாய்!

பொ:—தேவர்கள் கொடுக்கக் கிடைத்த வரத்தினுல் வண்டுகள் மொய்க்கின்ற தேனேடு கிழங்கும் காயும் கனிகளும் மலர்கள் முதலிய பிறவும் சிறப்புடன் நிரம்பிக்கானகம் பொலிந்திருப்பதால் குரங்குக் கூட்டம் அவற்றை நிறைய உண்டு வாய்திறந்து ஆரவாரம் செய்யவில்லை; இது உண்மையாகும். எம் தந்தை போன்றவனே !; துயருருதே!

கு:—மதுவையுண்டு வாழ்வது மதுபம், வண்டு. பரத்துவாசன் உறையும் கானகத்து வானவர் வரத்தால், தேன் முதலிய உணவுப் பொருள்கள் மிக்கிருத்தலின் வானரங்கள் அவற்றை அருந்தும் ஆர்வத்தால் வாய்திறந்து ஆரவாரித்திலது; அவ்வாரவாரம் இன்மையால் இராமன் வரவில்லையோ என ஐயுற்றுத் துன்புறல் வேண்டா எனப் பரதனை அனுமன் வேண்டியவாறு. 'அல்' எதிர்மறைவியங்கோள் விகுதி. ஆனனம்-முகம்; இங்கு வாயினை யுணர்த்தியது. (310)

10406. இனியொரு கணத்தி னெங்கோ
னெழுந்தரு டன்மை யீண்டுப்
பனிவருங் கண்ணி னீயே
பார்த்தியென் றுரைத்தா னிப்பால்

முனிதன திடத்து வந்த
முளரியங் கண்ணன் வெண்ணக்
குனிசிலேக் குருசில் செய்த
திற்றெனக் குணிக்க லுற்ருும்.

'இனிஒரு கணத்தின், எம்கோன்
எழுந்தருள் தன்மை ஈண்டுப்
பனிவரும் கண்ணின் நீயே
பார்த்தி' என்று உரைத்தான்; இப்பால்,
முனிதனது இடத்து வந்த
முளரி அம் கண்ணன், வண்ணக்
குனிசிலேக் குருசில், செய்தது
இற்று எனக் குணிக்கலுற்ருும்.

பொ :—'இனி, ஒருகணத்தில் எம்தலேவனுகிய இராமன் எழுந்தருளும் தன்மையை இங்குத் துன்பத்தால் நீர்பெருகுகின்ற கண்களால் நீயே பார்ப்பாய்' என்று அனுமன் சொன்ஞன் இப்பால், பரத்துவாச முனிவரிடத்தில் வந்த தாமரை மலர் போன்ற கண்ணேயுடையவனும் அழகிய வளேந்த வில்லேயுடைய வனும் ஆகிய ஆண்மைமிக்க இராமன் செய்தது இன்னது எனச் சொல்லலுற்ருேம்.

கு :—இராமன் வரக் காணுமையால் கண்ணீர் பெருக்குகின்ற பரதன் நிலேயைக் கண்ட அனுமன் ''பனிவருங் கண்ணின் நீயே பார்த்தி'' என்று கூறினுன். இனிப் பிரிந்தவரைப் பார்க் குங்கால் உவகைக் கலுழ்ச்சியாக நீர்பெருகும் கண்ணுல் நீயே பார்ப்பாய் எனக் கூறலும் ஆம். இப்பால் என்றது, இராமன் இருக்கும் பக்கத்தைக் குறித்தது. பரதனுள்ள பக்கத்தைக் கூறி முடித்தார் ஆதலின் 'இப்பால்' எனத் தொடங்குகின்ருர். இப்பகுதி கவிக்கூற்று. கண்ணன் - குருசில் என்பன ஒருபொருள் மேல் வந்த பல்பெயர். குணித்தல் இங்குச் சொல்லுதலே உணர்த்தியது. (311)

இங்கு ஒருபிரதியில் ''கெட்டவான் பொருள்'' (327) என்ற பாடலும், அதன்பின் 271-ஆம் பாடலிற் காட்டியுள்ள ''நின்ற

வன் '' என்ற செய்யுள் முதல் '' இராவணன் '' என்ற செய்யுள் வரையுள்ளனவற்றுள் 12, 13, 14, 18, 21 என்ற பாடல்கள் தவிர, மற்றவையும் உள்ளன.

### குகன் வருதல்

10407. அருந்தவன் சுவைக ளாறே
டமுதினி தளிப்ப வையன்
கருந்தடங் கண்ணி யோடுங்
களைகணுந் துணைவ ரோடும்
விருந்தினி தருந்தி நின்ற
வேலையின் வேலை போலும்
பெருந்தடந் தானை யோடுங்
கிராதர்கோன் பெயர்ந்து வந்தான்.

அருந்தவன் சுவைகள் ஆறோடு
அமுது இனிது அளிப்ப, ஐயன்
கருந்தடங் கண்ணியோடும்
களைகணும் துணைவரோடும்,
விருந்து இனிது அருந்தி நின்ற
வேலையின், வேலை போலும்
பெருந்தடந் தானையோடும்,
கிராதர்கோன் பெயர்ந்து வந்தான்.

பொ:—அரிய தவ முனிவனாகிய பரத்துவன் அறுசுவையோடு கூடிய உண்டியை இனிதாக அளிக்க இராமன், கரிய பெரிய கண்ணையுடைய சீதையோடும் தனக்கு ஆதரவாக உள்ள நண்பர்களோடும் விருந்தினை இனிதாக அருந்தி விட்டு (இளைப் பாறி) இருந்த நேரத்தில், கடல் போன்ற பெரிய சேனையோடும் வேடர் தலைவனாகிய குகன் புறப்பட்டு வந்தான்.

கு :—அனுமன் இராமன் வரவினைச் சொன்னவுடன் புறப் பட்டவன் குகன் ஆதலின், பரதனுக்கு முன்பு இராமனைக் காண லானான் என்க. கிராதர்–வேடர். வேலை-கடல். (312)

இராமன் குகனைத் தழுவிக்கொள்ளுதல்

10408. தொழுதனன் மனமுங் கண்ணுந்
துளங்கினன் சூழ வோடி
அழுதனன் கமல மன்ன
வடித்தல மதனின் வீழ்ந்தான்
தழுவின னெடுத்து மார்பிற்
றம்பியைத் தழுவு மாபோல்
வழுவிலர் வலிய ரன்றே
மக்களு மனையு மென்றான்.

தொழுதனன்; மனமுங் கண்ணும்
துளங்கினன்; சூழ ஓடி
அழுதனன்; கமலம் அன்ன
அடித்தலம் அதனின் வீழ்ந்தான்;
தழுவினன் எடுத்து, மார்பில்
தம்பியைத் தழுவுமாபோல்;
'வழுவிலர், வலியர் அன்றே,
மக்களும் மனையும்?' என்றான்.

பொ :—குகன் (இராமனைக் கண்டவுடன்) தொழுதான்; மனமும் கண்ணும் நடுங்கினான்; இராமனைச் சுற்றி வலமாக ஓடிச்சென்று அழுதான்; தாமரை மலர்போன்ற அவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்; தம்பி பரதனைத் தழுவுவது போல (த் தன்னடியில் வீழ்ந்த குகனை)த் தாங்கி மார்பில் தழுவிக்கொண்டு 'நின் மக்களும் மனைவியும் வழுவில்லாதவராய் - வலியராய் இருக்கின்றனர் அன்றே?' என்று வினவினான்.

கு :—பதினான்கு ஆண்டுகள் பிரிந்திருந்த இராமனைக் கண்டவுடன் குகன் மனமும் கண்ணும் துன்பத்தால் நடுங்கலாயின என்க. துளங்குதல்—நடுங்குதல். சேய்மையில் கண்டுழிக் கை கூப்பித் தொழுத குகன் அருகில் சென்றுழி இராமன் அடியில் வீழ்ந்து வணக்கம் செலுத்தினான் என்றவாறு. தம்பியைத் தழுவுமாபோல் எடுத்து மார்பில் தழுவினனாய் மக்களும் மனையும் வழுவிலர் வலியர் அன்றே? என்றான் என இயையும். தழுவினன் என்பது முற்றெச்சம். முதலில் வினவப்பட வேண்டியவர்கள்

மக்களே யாதலின் அவர்களை முதலில் வினவினன். வலியராய் இருத்தலினும் ஒழுக்கத்தில் வழுவிலராதல் வேண்டும் என்ற கருத்தால் 'மக்களும் மனையும் வழுவிலர் வலியர் அன்றே?' என்று வினவினன். (313)

குகன் கூறும் விடை

10409. அருளுன துளது நாயேற்
கவரெலா மரிய வாய
பொருளலர் நின்னை நீங்காப்
புணர்ப்பினற் றொடர்ந்து போந்து
தெருடரு மிளைய வீரன்
செய்வன செய்க லாதேன்
மருடரு மனத்தி னேனுக்
கினிதன்றே வாழ்வு மன்னே.

'அருள் உனது உளது, நாயேற்கு;
அவர்எலாம் அரிய ஆய
பொருள்அலர்; நின்னை நீங்காப்
புணர்ப்பினல் தொடர்ந்து போந்து
தெருள்தரும் இளைய வீரன்
செய்வன செய்கலாதேன்;
மருள்தரும் மனத்தினேனுக்கு
இனிது அன்றே, வாழ்வு மன்னே?'

பொ:—(குகன் இராமனை நோக்கி) நாய் போன்ற எனக்கு உனது அருள் இருக்கின்றது; (அதுதான் எனக்குப் பெருமை தருவது) மனைவி மக்கள் ஆகிய அவர் எல்லாம் எனக்கு அருமையான பொருளாக மாட்டார்கள்; நின்னைப் பிரியாத அன்புப் பிணிப்பினல் தொடர்ந்து வந்து, தெளிவு பொருந்திய இளைய வீரனகிய இலக்குவன் உனக்குச் செய்த தொண்டுகளைச் செய்யமாட்டாத-மருட்சி பொருந்திய-மனத்தையுடைய என்க்கு வாழ்வு இனியதே அன்றே? (இனியதாகாது என்றவாறு).

கு:—இலக்குவனைப் போன்று இராமனைப்பிரியாது தொடர்ந்து சென்று பணி செய்யும் பேறு தனக்குக் கிடைத்திலதே என்ற

ஏக்கத்தினுல் குகன் இங்ஙனம் கூறுகின்முன். அவ்வாறு பணி செய்யப் பெருத என்வாழ்வு எனக்கு இனிதாகத் தோன்றவில்லை என்பான், 'இனிதன்ரே வாழ்வு?' என்முன், குறிப்புச்சொல். தெருள்-தெளிவு. மருள்-மயக்கம்; உண்மையல்லனவற்றை உண்மையென நம்பும் உணர்ச்சி. இலக்குவன் பெற்ற பேற்றினை நினைந்து பரதனும், ''இலங்கையில் வேட்டங்கொண்ட நீலமா முகில்பின் போனுன் ஒருவன் நான் நின்று நைவேன் போலுமால் இவைகள் கேட்பேன்'' (303) என இவ்வாறே இரங்கியுள்ளமை நினையலாம். (314)

குகன் இலக்குவனையும் சீதையையும் வணங்குதல்

10410. ஆயன பிறவும் பன்னி
யழுங்குவான் றன்னை யைய
நீயிவை யுரைப்ப தென்னே
பரதனி னீவே றுண்டோ
போயினி திருத்தி யென்னப்
புளிஞர்கோ னிளவல் பொற்றுள்
மேயினன் வணங்கி யன்னை
விரைமலர்த் தாளின் வீழ்ந்தான்.

ஆயன பிறவும் பன்னி
அழுங்குவான் தன்னை, 'ஐய!
நீ இவை உரைப்பது என்னே;
பரதனின் நீ வேறு உண்டோ?
போய், இனிது இருத்தி' என்ன,
புளிஞர்கோன் இளவல் பொன்தாள்
மேயினன் வணங்கி, அன்னை
விரைமலர்த் தாளின் வீழ்ந்தான்.

பொ:—அவை போன்றனவாகிய பிறவற்றையும் சொல்லி வருந்துகின்ற குகனை(ப் பார்த்து) 'ஐய! நீ இந்தச் சொற்களைச் சொல்வது எதுபற்றியோ? பரதனினும் நீ வேறு ஆவையோ? போய் இனிதாக இருப்பாயாக' என்று இராமன் கூற, வேடர் தலைவனுன குகன், இலக்குவனுடைய அழகிய திருவடிகளில் பொருந்தி வணங்கிவிட்டு, உலகுக்கு அன்னையாகிய சீதையின்

மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடியில் வீழ்ந்து வணங்கினான்.

கு :—பரதன் என் சொல் கடவாது நாட்டில் இருந்து பணி செய்தது போல நீயும் என் சொல்லை யேற்று நாட்டில் இருந்து பணி செய்தது தவறாகாது என்பான், 'பரதனின் நீ வேறு உண்டோ?' என்றான். பரதனைப் போல இருக்க வாய்த்த மைக்கு மகிழாது, இலக்குவனைப் போல உடன்வராமைக்கு வருந்துதல் பொருந்தாது என்பான், நீ யிவை யுரைப்ப தென்னோ என்றான். (315)

குகனை மற்றவர்கட்கு இராமன் அறிமுகப்படுத்தல்

10411. தொழுதுநின் றவனை நோக்கித்
துணைவர்க டமையு நோக்கி
முழுதுணர் கேள்வி மேலோன்
மொழிகுவான் முதுநீர்க் கங்கை
தழுவிரு கரைக்கு நாதன்
றாயினு முயிர்க்கு நல்லன்
வழுவிலா வெயினர் வேந்தன்
குகனெனும் வள்ள லென்றான்.

தொழுது நின்றவனை நோக்கி,
துணைவர்கள் தமையும் நோக்கி,
முழுது உணர் கேள்விமேலோன்
மொழிகுவான் முதுநீர்க்கங்கை
தழுவு இருகரைக்கும் நாதன்;
தாயினும் உயிர்க்கு நல்லன்
வழுவுஇலா எயினர் வேந்தன்;
குகன்எனும் வள்ளல் என்றான்.

பொ :—அவ்வாறு தொழுது நின்ற குகனை நோக்கி, (அவனைப் பற்றியறியும் அவாவோடிருக்கும்) தன் நண்பர்களாகிய சுக்கிரீவன் முதலியோரையும் நோக்கி, முழுவதும் உணர்தற் குரிய கேள்விச் செல்வத்தினையுடைய மேலோனாகிய இராமன், சொல்லுவான் :— "இவன், பழமையான, நீரையுடைய,

கங்கையைத்தழுவியுள்ள இரண்டு கரைகட்கும் தலைவன்; உயிர்கட்குத் தாயைக் காட்டிலும் நல்லவனாய் உதவுபவன்; குற்றம் இல்லாத வேடர்கட்கு அரசன்; குகன் எனும் பெயரையுடைய வள்ளல்' என்று அறிமுகப்படுத்தினான்.

கு :—குகனை நோக்கிப் பின் துணைவர்களை நோக்கியது, 'இவனைப்பற்றிக் கூறுவேன்' என்னும் குறிப்பினது. குகனுடைய வரலாற்றின் பிழிவைச் சொன்ன இராமனை ''முழுதுணர் கேள்வி மேலோன்'' என்று சிறப்பித்தார். கேள்வி மாத்திரத்தால் முழுவதையும் உணர்ந்துகொள்ளத்தக்க பேரறிவையுடைய இராமன், கண்ணால் கண்டும் பழகிய குகனைப் பற்றிய உண்மை வரலாற்றைக் கூறுதற்குச் சொல்ல வேண்டுமோ? என்ற குறிப்பினைப் புலப்படுத்தவேண்டி. 'தாயினும் உயிர்க்கு நல்லன்' என்பதும் 'வழுவிலா வேந்தன்' என்பதும், 'வள்ளல்' என்பது மாகிய உயர்ந்த பண்புகள் காணலாகாப் பொருளாதலும் அவன் சொற்களைக் கேட்டு உய்த்துணர்தற் கேற்றனவாதலும் நினையலாம். வள்ளல் என்றது, வரையாது கொடுக்கும் கொடைப் பண்புடைமையை விளக்கியவாறு. வழுவிலாமை எயினர்க்கும் ஏற்கும்.

'கோதைவிற் குரிசிலன்னான் கூறிய கொள்கை கேட்டான் சீதையை நோக்கித் தம்பி திருமுக நோக்கித் தீராக் காதலனுகு மென்று கருணையின் மலர்ந்த கண்ணன்'' (அயோத்தி-கங்கைப்-44) என்ற பகுதி இங்கு நினைவுகூரத்தக்கது. இதில் குகன் கூறிய சொல்லைக் கேட்டே அவனுடைய தீராக்காதலாகிய பண்பினை இராமன் உணர்ந்தது தெளிவாதல் காணலாம். (316)

சூரியன் மறைதல்

10412. அண்ணலஃ துரைத்த லோடு
மரிக்குலத் தரச னாதி
நண்ணிய துணைவர் யாரு
மினிதுறத் தழுவி நட்டார்
கண்ணகன் ஞால மெல்லாங்
கங்குலாற் பொதிவான் போல

வண்ணமால் வரைக்கு மப்பான்
மறைந்தன னிரவி யென்பான்.

அண்ணல் அஃது உரைத்தலோடும்,
அரிக்குலத்து அரசன் ஆதி
நண்ணிய துணைவர் யாரும்
இனிதுறத் தழுவி, நட்டார்
கண்ணகல் ஞாலம் எல்லாம்
கங்குலால் பொதிவான் போல
வண்ணமால் வரைக்கும் அப்பால்
மறைந்தனன், இரவி என்பான்.

பொ:—பெருமையுடைய இராமன் அது சொன்னவுடனே வானரர்க்கு அரசனாகிய சுக்கிரீவன் முதலாகப் பொருந்திய துணைவர் யாவரும் அந்தக் குகனை இனிதாகத் தழுவி நண்பு பூண்டனர்; சூரியன், இடம் அகன்ற இவ்வுலகம் முழுவதையும் இருளால் மூடுவான் போல, அழகிய பெரிய மேருமலைக்கு அப்பால் மறைந்தான்.

கு:—அரி - குரங்கு. இராமனைப் பாராட்டப் பெற்றமை நோக்கிச் சுக்கிரீவன் முதலியோர் குகனைத் தழுவிக்கொண்டு தாங்களும் அவன்பால் நண்பு பூண்டனர் என்றவாறு. இனி, 'நண்ணிய துணைவர்' என்பதற்கு இராமனால் தழுவப் பெற்ற தம்பியர் என்று பொருள் கொண்டு, சுக்கிரீவன் வீடணன் என்ற இருவரையும் குறித்ததாகவும் கொள்ளலாம். கங்குல் - இருள். சூரியன் மறைந்தவுடன் உலகம் இருளால் சூழப்படுதலின் உலகத்தை இருள் மூடுஞ் செயற்கு அச்சூரியனே காரணனாவான் என்பது புலப்பட 'கங்குலால் பொதிவான் போல...மறைந்தனன்' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினார். பொதிதல் - மறைத்தல்; மூடுதல். வண்ணமால் வரை என்றது, மேருமலையை. சூரியன் மேருமலைக்கு அப்பாற் சென்று ஒளி வீசும் காலமே இப்பக்கத்தவர்க்கு இரவாகும் என்ற புராணமரபு நினைந்து இங்ஙனம் கூறினார். 'இனிதுறத் தழுவி' என்பதற்கு இராமனால் பாராட்டப் பெறும் குகனது இனிய தன்மை தம்பால் உறத்தழுவி எனக் கூறலும் ஆம். (317)

10413. அலங்கலந் தொடையி னுனு
மந்தியின் கடன்க ளாற்றிப்
பொலங்குழை மயிலி னேடு
துயிலுறப் புணரி போல
இலங்கிய சேனை சூழ
விளவ்லு மெயினர் கோனும்
கலங்கலர் காத்து நின்ருர்
கதிரவ னுதயஞ் செய்தான்.

அலங்கல் அம் தொடையினனும்,
அந்தியின் கடன்கள் ஆற்றி,
பொலங் குழை மயிலினேடு
துயிலுற, புணரி போல
இலங்கிய சேனை சூழ,
இளவலும் எயினர் கோனும்,
கலங்கலர் காத்து நின்ருர்;
கதிரவன் உதயம் செய்தான்.

பொ :—ஒழுங்கான அழகிய மலர்மாலை யணிந்த இராமனும், மாலைக்கடன்களைச் செய்து முடித்துவிட்டுப் பொன்னுலான குழையினை யணிந்த மயில்போன்ற சாயலையுடைய சீதையோடு துயிலாநிற்க, இளவலாகிய இலக்குவனும் வேடர் தலைவனுகிய குகனும் கடலைப்போலப் பரவி விளங்குகின்ற வானர சேனையும் வேடர் சேனையும் சூழ உளம் கலங்காமல் அவனைக் காத்துக் கொண்டு நின்ருர்கள்; சூரியன் உதயமானுன்.

கு :—அலங்கல்-ஒழுங்கு. அந்தியென்றது மாலை அந்தியை. மயிலோடு துயிலுகின்ற இராமனுக்குக் காட்டு விலங்குகளாலும் கள்வராலும் தீங்கு நேராவண்ணம் இலக்குவனும் குகனும் காவல் செய்தனர் என்றவாறு. வனம்புகும் நாளில் கங்கைக் கரையில் காத்து நின்ற இருவருமே பரத்துவன் குடிலிலும் காத்து நிற்பா ராயினர். உறக்கத்தால் காத்தல் தொழில் தடைபடாவண்ணம் விழித்து நின்று காத்தனர் என்பார், 'கலங்கலர் காத்து நின்ருர்' என்ருர். 'கண்கள் நீர்சொரியக் கங்குல் எல்லை காண்பளவும் நின்ருன்; இமைப்பிலன் நயனம் என்ருன்' (குகப்-42) என்றது

இங்கு ஒப்பு நோக்கத்தகும். 'இமைப்பிலன் நயனம்' என இலக்குவனைப் பற்றிக் குகன் கூறியமையால் குகனும் இரவு முழுவதும் இமையாது அவனைக் காத்தமை புலப்படும். (318)

### இராமன் சீதையோடும் சேனையோடும் விமானத்தில் செல்லுதல்

10414. கதிரவ னுதிப்பக் காலைக்
 கடன்கழித் திளவ லோடும்
அதிர்பொலன் கழலி னனவ்
 வருந்தவன் றன்னை யேத்தி
விதிதரு விமான மேவி
 விளங்கிழை யோடுங் கொற்றம்
முதிர்தரு சேனை யோடு
 முனிமனந் தொடரப் போனான்.

கதிரவன் உதிப்ப, காலைக் கடன்
 கழித்து இளவலோடும்
அதிர்பொலன் கழலினன் அவ்
 அருந்தவன் தன்னை ஏத்தி,
விதிதரு விமானம் மேவி,
 விளங்கிழையோடும், கொற்றம்
முதிர்தரு சேனை யோடும்
 முனிமனம் தொடரப் போனான்.

பொ :—சூரியன் உதித்தவுடன், ஒலிக்கின்ற பொற்குழலை அணிந்த இராமன் காலைக் கடன்களைச் செய்து முடித்துச் சென்று அரிய தவ முனிவனாகிய பரத்துவாசனை வணங்கி (விடை பெற்றுக் கொண்டு) இளவலாகிய இலக்குவனோடும் விளங்குகின்ற அணிகலன்களையுடைய சீதையோடும் வெற்றிமுதிர்ந்த சேனை யோடும் பிரமனால் தரப்பட்ட புட்பக விமானத்தில் ஏறிப் பரத்து வாசன் மனம் (பிரிவாற்றாது) பின் தொடர்ந்து வர அயோத்தி நோக்கிச் சென்றான்.

கு :—'விதி தரு விமானம்' என்றது பிரமன் குபேரனுக்குக் கொடுத்த புட்பக விமானத்தை; அதனையே இராவணன்

குபேரனை வென்று கைப்பற்றினன். முற்றுந்துறந்த பரத்துவாசர் மனத்தையும் பிணித்த இராமன் பண்பு புலப்பட 'முனிவனும் தொடரப்போனன்' என்ருர். விளங்கிழை என்றது விளங்குகின்ற அணிகலன்களை யணிந்த சீதையை; வினைத்தொகையன் மொழி. (319)

விமானத்திலுள்ளோர்க்கு அயோத்தி நகரின் மதில் தோன்றுதல்

10415. தாவிவான் படர்ந்து மானந்
தடையில தேகும் வேலை
தீவிய கன்னி யாகிச்
செருக்கிய காமச் செவ்வி
ஓவிய முயிர்பெற் றென்ன
வும்பர்கோ னகரு மொவ்வா
மாவிய லயோத்தி சூழு
மதிற்புறந் தோன்றிற் றன்றே.

தாவி வான் படர்ந்து மானம்
தடைஇலது ஏகும் வேலை,
தீவிய கன்னி ஆகிச்
செருக்கிய காமச் செவிவி,
ஓவியம் உயிர் பெற்றென்ன,
உம்பர் கோன்நகரும் ஒவ்வா
மா இயல் அயோத்தி சூழும்
மதில் புறம் தோன்றிற்று அன்றே.

பொ :—அந்தப் புட்பக விமானம் விண்ணில் தாவிச்சென்று தடையேதும் இல்லாது செல்லும் போது, இனிய கன்னித்தன்மை யுடையதாகிச் செருக்கொடுகூடி, விரும்பத்தக்க அழகினை யுடைய தாய்ச் சித்திரம் உயிர்பெற்ருற் போன்று, தேவேந்திர னது அமராவதி நகரமும் ஒப்பாகமாட்டாத அழகு பொருந்திய அயோத்தி நகரத்தைச் சூழ்ந்துள்ள மதிலின் புறம் தோன்றிற்று.

கு :—அயோத்தி நகர் கன்னியாயிருத்தலாவது, பிறரால் கைப்பற்றப்படாத காப்பிதனதாதல். "கன்னியரல்குல் தடமென

யார்க்கும் படிவரும் காப்பினதாகி' (நகரப்-14) என்பது இங்கு நோக்கத்தகும். செருக்கிய காமச் செவ்வியையுடைய அயோத்தி, ஓவியம் உயிர்பெற்றென்ன மா இயல் அயோத்தி உம்பர்கோன் நகரும் ஒவ்வா அயோத்தி எனத்தனித்தனி இயையும். மா-அழகு. ஓவியமாக எழுதப்பெற்ற அழகிய நகர் உயிர்பெற்று எழுந்தாற்போன்ற அழகினையுடையது அயோத்தி என்றவாறு. உம்பர்கோனகருமொவ்வாமை :— ''அயின் முகக் குலிசத் தமரர்கோன் நகரும் அளகையும் என்றிவை அயனுர் பயிலுறவுற்றபடி பெரும்பான்மை இப்பெருந் திருநகர் படைப் பான்'' (நகரப்-4) என்று முன் கூறியுள்ளமையாலும் அறிய லாம். (320)

10416. பொன்மதிற் கிடக்கை சூழப்
பொலிவுடை நகரந் தோன்ற
நன்மதிக் கிழவர் தம்மை
நோக்கிய ஞான மூர்த்தி
சொன்மதித் தொருவ ராலுஞ்
சொலப்படா வயோத்தி தோன்றிற்
றென்னலுங் கரங்கள் கூப்பி
யெழுந்தன ரிறைஞ்சி நின்ருர்.

பொன்மதில் கிடக்கை சூழப்
பொலிவுடை நகரம் தோன்ற,
நன்மதிக் கிழவர் தம்மை
நோக்கிய ஞான மூர்த்தி,
'சொல்மதித்து ஒருவராலும்
சொலப்படா அயோத்தி தோன்றிற்று'
என்னலும், கரங்கள் கூப்பி
எழுந்தனர் இறைஞ்சி நின்ருர்.

பொ :—பொன்னுலியன்ற மதிலிடங்கள் சூழப் பொலிவு மிக்க தான அயோத்தி நகரம் கண்ணுக்குத் தோன்றிய அளவில் நல்ல மதிநுட்பமுடைய நண்பர்களை நோக்கிய ஞானத்தின் திருவுருவாக விளங்கும் இராமன், '(இந்நகரின் சிறப்பு இத் தன்மையது என) எண்ணி ஒருவராலும் சொல்லால் வரை

யறுத்துச் சொல்ல முடியாத அயோத்தி நகர் தோன்றிற்று.' என்று கூறிய அளவில், எல்லோரும் கைகளைத் தலைமேல் குவித்து வணங்கி நின்றார்கள்.

கு :— பொன் மதிலால் சூழப்பெற்றதால் மிக்க பொலிவுடைய தாகிய நகரம் என்க. நன்மதிக்கிழவர் என்றது சுக்கிரீவன் முதலியோரை. மூர்த்தி - வடிவம். ஞானத்தையே திருமேனி யாகக் கொண்டவன் என்றவாறு. மதித்தல் — நினைத்தல். அளவு கடந்த சிறப்பினையுடையது என்பார், சொன்மதித்து ஒருவராலும் சொல்லப்படா அயோத்தி என்றார். ஞானமூர்த்தி யின் பிறப்பிடமாதல் நினைந்தும், முத்திநகர் ஏழனுள் ஒன்றாதல் நினைந்தும் எல்லோரும் எழுந்து நின்று கை கூப்பி வணங்கினர் என்க. (321)

புட்பகவிமானம் தரையிலுள்ள அனுமன்
முதலியோர்க்குத் தோன்றுதல்

10417. அன்னதோ ரளவையின் விசும்பி னாயிரம்
துன்னிருங் கதிரவர் தோன்றி னாலெனப்
பொன்னணி புட்பகப் பொருவின் மானமும்
மன்னவர்க் கரசனும் வந்து தோன்றினான்.

அன்னது ஓர் அளவையின் விசும்பின் ஆயிரம்
துன் இருங் கதிரவர் தோன்றினால் என,
பொன் அணி புட்பகப் பொருஇல் மானமும்
மன்னவர்க்கு அரசனும் வந்து தோன்றினான்.

பொ :— அந்தச்சமயத்தில் ஆகாயத்தில் ஆயிரமாக நெருங் கிய பெருமையுடைய சூரியர்கள் தோன்றினாற்போலத் தோன் றும் பொன்னாற்புனைந்த புட்பகமாகிய ஒப்பற்ற விமானமும், அரசர்க்கு அரசனாகிய இராமனும் வந்து தோன்றினான்.

கு :—பொன்னணி புட்பக விமானத்தின் பேரொளி விண்ணில் ஆயிரம் சூரியர் தோன்றினாற் போலத் தோன்றிற்று என்பது இல்பொருளுவமை. மானமும் அரசனுடன் என அஃறிணையும் உயர்திணையும் உடனெண்ணப்பட்டுச் சிறப்பினால் உயர்திணை முடிபுகொண்டது. ''திணைபால் பொருள் பல விரவின சிறப்பி

னும் மிகவினு மிழிபினு மொருமுடிபினவே'' (நன்னூல்-377) என்றது காண்க. (322)

இச்செய்யுளின் பின் சில பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது:—

10417 (1) தோன்றலுஞ் சுமந்திரன் தொழுது தொல்லுயிர்
ஈன்றுகாத் தழித்தவை யியற்று மவ்வுரு
மூன்றுமாய் நான்குமாய் ஐந்து மாமுதற்
சான்றினைப் பரதற்குச் சுட்டிச் சாற்றுவான்.

*அனுமன் பரதனுக்கு இராமனைக் காட்டிக் கூறுதல்*
*10418, 10419*

10418. அண்ணலே காண்டியா லலர்ந்த தாமரைக்
கண்ணனும் வானரக் கடலுங் கற்புடைப்
பெண்ணருங் கலமுநின் பின்பு தோன்றிய
வண்ணவிற் குமரனும் வருகின் றார்களே.

'அண்ணலே! காண்டியால் அலர்ந்த தாமரைக்
கண்ணனும், வானரக் கடலும், கற்புடைப்
பெண் அருங் கலமும், நின் பின்பு தோன்றிய
வண்ணவில் குமரனும், வருகின்றார்களே.

பொ :—(அனுமன் பரதனை நோக்கிக் கூறுகின்றான்) பெருமை யுடையவனே! மலர்ந்த தாமரை மலர் போன்ற கண்ணை யுடைய இராமனும், வானர சேனையாகிய கடலும், கற்புடைப் பெண்டிர்க்கெல்லாம் அரிய அணிகலன் போன்ற சீதையும், நினக்குப்பின் தோன்றிய அழகிய வில்லையுடைய குமரனாகிய இலக்குவனும் (ஆக விமானத்தில்) வருகின்றவர்களைக் காண் பாயாக.

கு :—வானர சேனையின் பரப்புப் புலப்பட வேண்டி 'வானரக் கடலும்' என்றான். பெண்ணருங்கலம் என்றது சீதையை. குமரனுமாக வருகின்றார்களைக் காண்டியால் என ஒரு சொல் வருவித்து முடிக்க. (323)

10419. ஏழிரண் டாகிய
வுலக மேறினும்

பாழ்புறங் கிடக்குறு
படிய தாயதோர்
சூழொளி மானத்துத்
தோன்று கின்றனன்
ஊழியோ னென்றுகொண்
டுணர்த்துங் காலையே.

'ஏழ்-இரண்டு ஆகிய
உலகம் ஏறினும்
பாழ்புறம் கிடக்குறு
படியது ஆயதுஓர்
சூழ் ஒளி மானத்துத்
தோன்றுகின்றனன்.
ஊழியோன்' என்று கொண்டு
உணர்த்தும் காலையே.

பொ :—(அனுமன்) 'பதினான்கு உலகமும் ஒருங்கே தன்னிடத்து ஏறினாலும் வெற்றிடம் எஞ்சியிருக்கும் தன்மையதாகிய ஒப்பற்ற, பரவிய ஒளியையுடைய விமானத்தில் ஊழிக்காலம் வாழ்தற்குரிய இராமன் தோன்றுகின்றனன்' என்று உணர்த்தும் போது.

கு :—உலகம், இடவாகுபெயராய் உலகத்துயிர்களை யுணர்த்தியது. விமானத்தின் தெய்வத்தன்மையைப் புலப்படுத்த வேண்டி, பதினான்கு உலகத்தவரும் ஒருங்கு ஏறினாலும் மேலும் இடம் கொடுக்கும் இயல்பினது என்பதைக் கூறியவாறு. 'ஊழியோன் தோன்றுகின்றனன்' என இயையும். இராமன் குறித்த நாளில் வாராமை கண்டு அவனுக்கு என்ன நேர்ந்ததோ என ஐயுற்றவன் பரதன் ஆதலின், இராமன் ஊழிக்காலம் வரையில் நிலைத்து வாழ்தற்குரியவன் என்பதை அவனுக்குப் புலப்படுத்த 'ஊழியோன்' என்ற பெயரால் இராமனைச் சுட்டியவாறு. பாழ்புறம் என்றது வெற்றிடத்தை. (324)

### இராமனை எதிர்கொள்வோர் ஆர்ப்பு

10420. பொன்னொளி மேருவின்
பொதும்பிற் புக்கதோர்
மின்னொளி மேகம்போல்
வீரன் றோன்றலும்
மன்னெதிர் வருநர்க
ளார்ப்பி ராவணன்
தென்னகர்க் கப்புறத்
தளவுஞ் சென்றதால்.

பொன்ஒளி மேருவின் பொதும்பில் புக்கதுஓர்
மின்ஒளி மேகம்போல் வீரன் தோன்றலும்,
மன்எதிர் வருநர்கள் ஆர்ப்பு, இராவணன்
தென்நகர்க்கு அப்புறத்து அளவும் சென்றதால்.

பொ:—பொன் ஒளியையுடைய மேரு மலையின் குகையில் புகுந்ததொரு மின்னலோடு கூடிய மேகத்தைப் போலப் புட்பக விமானத்தினுள் சீதையோடு வீரனாகிய இராமன் கண்ணுக்குத் தோன்றுதலும், அந்த இராமனை எதிர்கொள்ள வருபவரின் ஆரவாரம் இராவணனது தென் திசையில் உள்ள இலங்கை நகர்க்கு அப்புறத்திலும் சென்றது.

கு:—புட்பக விமானத்திற்கு மேருமலையும், சீதைக்கு மின்னும், இராமனுக்கு மேகமும் உவமை. வடதிசையில் அயோத்திக்கு அருகில் செய்த ஆரவாரம் தென் திசையில் உள்ள இலங்கைக்கு அப்புறத்தும் சென்றது என்பது உயர்வுநவிற்சி ஆகும். (325)

### பரதன் இராமனைக் காணுதல்

10421. ஊனுடை யாக்கைவிட் டுண்மை வேண்டிய
வானுடைத் தந்தையார் வரவு கண்டெனக்
கானிடைப் போகிய கமலக் கண்ணனைத்
தானுடை யுயிரினைத் தம்பி நோக்கினான்.

ஊனுடை யாக்கை விட்டு உண்மை வேண்டிய
வானுடைத் தந்தையார் வரவு கண்டென
கானிடைப் போகிய கமலக் கண்ணனை,
தானுடை உயிரினை, தம்பி நோக்கினன்.

பொ :—(பின்னும் அழிவதாய) ஊனுடம்பை விடுத்து (என்றும் நிலைபெறுவதாய) உண்மையைக்காக்க விரும்பிய-விண்ணுலகத்தை யிடமாகக் கொண்டுள்ள-தயரதனாகிய தந்தை யாரின் வரவைக் கண்டது போல, காட்டிற்குச் சென்றிருந்த கமலக்கண்ணனாகிய இராமனை-தன்னுடைய உயிராகத் திகழ் கின்றவனை-பரதனாகிய தம்பி பார்த்தான்.

கு :—உடம்பின் இழிவு புலப்படுத்த 'ஊனுடையாக்கை' என்றார். உண்மை காக்கவேண்டிய தந்தையார் என ஒருசொல் வருவிக்க. வேண்டிய தந்தையார், வானுடைத் தந்தையார் எனத் தனித்தனி இயையும். வானுடைத் தந்தையாரின் வரவு எவ்வளவு அரியதோ, அவ்வளவு அரியது கானிடைப் போகிய அண்ணன் வரவு எனப் பரதன் எண்ணியிருந்தமையால் இங்ஙனம் உவமை கூறினர். பரதனுக்கு இராமன் உயிர்போன்ற வனாகலின் 'தானுடையுயிரினை' என அவனைக் குறித்தவாறு. பரதன் உயிர்க்கு உருவம் இருக்குமாயின் அது இராமனது வடி வாகவே இருக்கும் என்பது குறிப்பு. ''எனக்குயிர் பிறிது முண்டென்றிரேல்; இரக்கம் அல்லால், தனக்கு உயிர் வேறின் றாகித் தாமரைக் கண்ணதாகிக், கனக்கரு மேகம் ஒன்று கார் முகந்தாங்கி யார்க்கும், மனக்கினிதாகி நிற்கும் அஃதன்றி வரம்பிலாதாய்!'' (மாயாசனகப்—24) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (326)

10422. கெட்டவான் பொருள்வந்து
கிடைப்ப முன்புதாம்
பட்டவான் படரொழிந்
தவரிற் பையுணோய்
சுட்டவன் மானவற்
றெழுத லுன்னியே
விட்டனன் மாருதி
கரத்தை மேன்மையான்.

கெட்ட வான்பொருள் வந்து
கிடைப்ப முன்பு தாம்
பட்ட வான்படர் ஒழிந்தவரின்
பையுள் நோய்
சுட்டவன் மானவன் —
தொழுதல் உன்னியே
விட்டனன் மாருதி
கரத்தை மேன்மையான்

பொ:—மேன்மையான பண்புகளையுடைய பரதன் (முன்பு தாம்) இழந்து பொன சிறந்த பொருள் மீண்டும் வந்து கிடைத்த அளவில், முன்பு தாம் பட்ட பெருந்துன்பம் நீங்கப் பெற்றவரைப் போல, (முன்பு இராமன் பிரிந்தமையால் தனக்குண்டான) துன்ப நோயை (இன்று அவ்விராமனைக் கண்டவுடன்) ஒழித்தவனாய் மனுக்குலத்தில் தோன்றிய இராமனை வணங்க நினைத்து (தான் பிடித்திருந்த) அனுமன் கையை விட்டான்.

கு:—மேன்மையான், பையுணோய் சுட்டவனாய்த் தொழுதலுன்னி மாருதி கரத்தை விட்டனன் என இயையும். சுட்டவன், முற்றெச்சம். சுடுதல் என்பது ஒன்றை அடியோடு ஒழித்தல் ஆதலின், இராமனைப் பிரிந்ததாலாய துன்பத்தைப் பரதன் அடியோடு ஒழித்து விட்டான் என்பதைப் 'பையுணோய் சுட்டவன்,' என்றார். இச்செய்யுள் சில ஏடுகளில் வேறிடத்தில் உள்ளது. 328 முதல் 331 வரையிலும் உள்ள செய்யுட்கள் சில ஏடுகளில் வேறிடத்தில் உள்ளது முன்னமே காட்டப்பட்டது. (327)

*அனுமன் விமானத்திலுள்ள இராமன் முன் நிற்றல்*

10423. அக்கணத் தனுமனு மவணின் றேகியத்
திக்குறு மானத்தைச் செவ்வ னெய்தியச்
சக்கரத் தண்ணலைத் தாழ்ந்து முன்னின்றான்
உக்குறு கண்ணநீ ரொழுகு மார்பினன்.

அக்கணத்து அனுமனும்
அவண் நின்று ஏகி, அத்
திக்குறு மானத்தைச்
செவ்வன் எய்தி, அச்

சக்கரத்து அண்ணலைத்
தாழ்ந்து முன் நின்றான் —
உக்குறு கண்ணநீர்
ஒழுகும் மார்பினான்.

பொ — அந்தக் கணத்தில் அனுமனும் — அவ்விடத்தில் நின்று மேல் எழுந்து சென்று, அந்த விண்ணில் இருக்கும் விமானத்தை நேரே அடைந்து, அதிலுள்ள ஆணைச்சக்கரத்திற்குரிய இராமனை வணங்கிப் பெருகுகின்ற கண்ணீர் ஒழுகும் மார்பினனாய் முன் நின்றான்.

கு :— அனுமனும் ஏகி, மானத்தை எய்தித் தாழ்ந்து கண்ண நீரொழுகு மார்பினனாய் நின்றான் என இயையும். மார்பின னாய்த் தாழ்ந்து நின்றான் என இயைத்தலும் ஆம். மார்பினான், முற்றெச்சம். விண்ணும் பத்துத் திசையில் ஒன்றாகலின், 'அத் திக்குறு மானத்தை' என்றார். சக்கரத்து அண்ணல் என்றது, ஆணைச்சக்கர முடையனாகப் போகும் இராமனை உணர்த்தியது. இனி, முன்னைய தெய்வநிலை கருதிச், சக்கரப் படையையுடைய திருமாலை எனப் பொருள்கொள்ளலும் ஆம். (328)

23, 29, 43, 44-ஆம் பிரதிகளில் காணப்படும் மிகைப் பாடல் :—

10423 (1) அண்ணலு மநுதுசெய்ய அமருழி
யனுமன் சென்று
தண்ணறுங் கமல மன்ன தாளினைத்
தொழுது சென்றுன்
கண்ணனப் பரதன் வெந்தீக்
கடவுளை வலமாய் வந்து
திண்ணென வீழுமெல்லை யானவண்
எய்தச் சென்றேன்.

அனுமன் பரதனுக்குத் தெரிவித்ததை
இராமனிடம் சொல்லுதல்

10424. 'உருப்பவிர் கனலிடை
யொளிக்க லுற்றவிப்
பொருப்பவிர் தோளனைப்
பொருந்தி நாயினேன்

திருப்பொலி மார்பநின்
வரவு செப்பினேன்
இருப்பன வாயின
வுலகம் யாவையும்.

உருப்பு அவிர் கனலிடை ஒளிக்கல் உற்ற இப்
பொருப்புஅவிர் தோளனைப் பொருந்தி, நாயினேன்,
திருப்பொலி மார்ப! நின் வரவு செப்பினேன் ;
இருப்பன ஆயின உலகம் யாவையும்.

பொ :—திருமகள் பொலிகின்ற மார்பினையுடையவனே! நாய் போன்ற யான், வெப்பம் விளங்கும் தீயில் பாய்ந்து மறையத் தொடங்கிய இந்த மலைபோல் விளங்குகின்ற தோள்களையுடைய பரதனை அடைந்து நினது வரவினைச் சொன்னேன் ; (அதனால் இப்பரதனோடு மடிதற்கிருந்த இவ்) உலகம் யாவையும் மடியாமல் இருப்பன ஆயின.

கு :—நின்வரவைச் சொல்லாமல் இருந்திருந்தால் பரதனும் இவ்வுலகத்தாரும் மடிந்திருப்பர் என்பது புலப்படுத்தியவாறு. உருப்பு — வெம்மை. திருமாலின் அரிசமாதல் நினைந்து இராமனை, 'திருப்பொலி மார்ப!' என விளித்தான். (329)

இராமன் அனுமனைப் பாராட்டுதல்

10425. தீவினை யாம்பல செய்யத் தீர்விலா
வீவினை முறைமுறை விளைவ மெய்ம்மையால்
நீயவை துடைத்துநின் றளிக்க நேர்ந்ததால்
யாயினு மன்பினை யாம்செய் மாதவம்.

தீவினை யாம்பல செய்யத், தீர்வு இலா
வீவினை முறை முறை விளைவ, மெய்ம்மையால் ;
நீ அவை துடைத்து நின்று அளிக்க நேர்ந்ததால்-
யாயினும் அன்பினய்! யாம் செய் மாதவம்.

பொ :—தாயினும் எம்பால் அன்புமிக்க அனும! யாங்கள் தீவினை பலவற்றைச் செய்திருத்தலால் நீக்கமுடியாமல் சாதற்குரிய வினை பலமுறை உண்மையாக விளைந்தன ; (ஆனல்,)

யாம் செய்த பெருந்தவம் நீ அவற்றைத் துடைத்து நின்று காப்பாற்ற வாய்ப்பு நல்கியது.

கு :—வீதற்குரிய வினையை 'வீவினை' என்றார். தீர்வு இலாவினை, வீவினை எனத் தனித்தனி இயையும், வீதல்-சாதல். 'முறை முறை' என்ற அடுக்குப் பன்மை யுணர்த்தியது. வினை விளைதலாவது, வினை தன் பயனைத்தருதல்; ஆவது, மரணத்தை உண்டாக்குதல். இந்திரசித்து ஏவிய அயன்படையாலும், இராவணன் எறிந்த வேலாலும் இலக்குவன் முதலியோர்க்கு நேர்ந்த இறப்பினை மருந்துமலைகொண்டு போக்கியதாலும், பரதன் சாவினை அண்ணன் வரவு கூறித் தீயை அவித்துப் போக்கியதாலும், 'வீவினை முறை முறை விளைய...... நீயவை துடைத்து நின்றளிக்க நேர்ந்ததால்' என அனுமனைப் பாராட்டினான். யாயினும் என்புழி 'இன்' உறழ்ச்சிப் பொருளது. 'அன்பினாய்! வீவினை முறை முறை மெய்ம்மையால் விளைவ ஆயின; யாம் செய் மாதவம் நீ அவைதுடைத்து நின்றளிக்க நேர்ந்தது' என இயையும். மாதவம் நேர்ந்தது என்க. யாம் செய்த தீவினைகள் மரணத்தை விளைத்தனவாகவும், யாம் செய்த மாதவம், நீ அவைதுடைத்து அளிக்க வாய்ப்பளித்தது. யாம் செய்த தவமே நின்னை உதவியது என்பது கருத்து. விளைவ ஆயின என ஆக்கச் சொல் வருவிக்க. நேர்தல்-நல்குதல். (330)

இராமன் அனுமனைத் தழுவுதல்

10426. என்றுரைத் தனுமனை
யிறுகப் புல்லினான்
ஒன்றுரைத் திருப்பதென்
னுனக்கு மெந்தைக்கும்
இன்றுணைத் தம்பிக்கும்
யாய்க்கு மென்றனன்
குன்றிணைத் தனவுயர்
குவவுத் தோளினான்.

என்று உரைத்து அனுமனை
இறுகப் புல்லினான்,
'ஒன்று உரைத்து இருப்பது என்,
உனக்கும், எந்தைக்கும்,

இன் துணைத் தம்பிக்கும்
யாய்க்கும் ?' என்றனன்
குன்று இணைத்தன உயர்
குவவுத் தோளினன்.

பொ :—என்று கூறி, இரண்டு குன்றுகளை இணைத்து வைத்தாற் போன்ற உயர்ந்து திரண்ட தோள்களையுடைய இராமன், 'உனக்கும், என் தந்தைக்கும், என் தாய்க்கும், என் இனிய துணையாக வந்த தம்பி இலக்குவனுக்கும் ஒரு முகமன் மொழி சொல்லி முடிப்பது எதற்கு ?' என்று கூறியவனாய் அனுமனை இறுகத் தழுவிக்கொண்டான்.

கு :—தோளினன் என்றுரைத்து, என்றனனாய், அனுமனை இறுகப் புல்லினன் என இயையும். என்றனன், முற்றெச்சம். உரிமைமிக்க பேரன்பினர்க்கு முகமன் மொழி வேண்டுவதில்லை என்றவாறு. அனுமனை இராமன் தாய்தந்தையரோடும் தம்பியோடும் ஒப்புமையுடையனாகக் கூறிச் சிறப்பித்தவாறு. ஒரு மகனுக்குத் தாய்தந்தையர் செய்யும் உதவிக்கு முகமன்மொழி தேவையில்லாதவாறுபோலவே, அனுமன் இராமனுக்குச் செய்த வுதவிக்கும் முகமன்மொழி தேவையில்லை என்றவாறு இது ஒப்புமைக் கூட்டவணி. யாய் என்றது கோசலையை. (331)

பரதன் தோன்றுதல்

10427. ஈடுறு வான்றுணை யிராமன் சேவடி
சூடிய சென்னியன் றொழுத கையினன்
ஊடுயி ருண்டென வுலர்ந்த யாக்கையன்
பாடுறு பெரும்புகழ்ப் பரதன் தோன்றினன்.

ஈடுறு வான் துணை இராமன் சேவடி
சூடிய சென்னியன், தொழுத கையினன்
ஊடு உயிர்உண்டு என உலர்ந்த யாக்கையன்,
பாடுஉறு பெரும்புகழ்ப் பரதன் தோன்றினன்.

பொ:—(எல்லாவற்றினும்) பெருமையுடையதாகிய முத்தியை அடைவதற்குச்சிறந்த துணையாகவுள்ள இராமனுடைய பாதுகைகளைச் சூடிய சென்னியனாய், அவனைத்தொழுத கையினனாய்,

'உள்ளே உயிர் உண்டு' என ஊகித்து அறியும்படி, வற்றிய உடம்பை யுடையவனாய், புலவர்கள் பாடுதற்குரிய மிக்க பெரும் புகழையுடைய பரதன் (அருகில்) காணப்பட்டான்.

கு:—'பரதன் தோன்றினான்' என்றமையால், இராமன் ஊர்ந்து வந்த விமானம் தரையருகே தாழ்ந்து பறந்தமை பெறப்படும். விமானம் விண்ணில் பறந்து செல்லும்போது காணப் படாத பரதன், அது தரைக்கு அருகே தாழ்ந்து வரும்போது அருகில் பரதன் காணப்பட்டான் என்றவாறு. இராமன் சேவடி என்றது, அவன் பாதுகைகளை. ஈடு என்றது, பெருமையுடைய முத்தியினை. வான் துணை-சிறந்த துணை. இராமன் பாதுகைகள் உயிர் வீட்டின்பம் உறுதற்குத் துணையாகும் சிறப்புடையது என்ற வாறு. சென்னியன், கையினன் யாக்கையன், என்ற குறிப்பு முற்றுக்கள் வினையெச்சப் பொருளவாய்த் தோன்றினான் என்ற வினை கொண்டு முடிந்தன. ஊடு-நடு. உயிர் உண்டென உலர்ந்த யாக்கை என்றது, உயிரில்லா யாக்கை என்று எண்ணும் நிலைக்குப் போகாமல் 'உயிர் உண்டு' என்று அனுமா னத்தால் உய்த்துணர்ந்து கொள்ளத்தக்க வற்றிய உடம்பு என்றவாறு. அண்ணன் சொல் கடவாமலும் தன் கொள்கை வழுவாமலும் பதினான்கு ஆண்டுகள் நந்தியம்பதியில் தவம் செய்திருந்த தகுதி கருதிப் புலவர் பாடும் புகழ்க்குரியவன் எனப் பரதன் சிறப்பிக்கப்பெற்றான். (332)

### அனுமன், விமானத்துள் அமர்ந்திருக்கும் இராமனுக்குப் பரதனைக் காட்டுதல்

10428. தோன்றிய பரதனைத் தொழுது தொல்லறச்
சான்றென நின்றநி னிளைய தம்பியை
வான்றொடர் பேரர சாண்ட மன்னனை
ஈன்றவள் பகைஞனைக் காண்டி யீண்டெனா.

தோன்றிய பரதனைத் தொழுது, தொல் அறச்
சான்றுஎன நின்ற நின், இளைய தம்பியை,
வான்தொடர் பேர்அரசு ஆண்ட மன்னனை,
ஈன்றவள் பகைஞனைக் காண்டி ஈண்டு' எனா.

பொ :—(அருகில்) காணப்பட்ட பரதனை வணங்கிவிட்டு, (இராமனை நோக்கி) பழமையான அறத்திற்குச் சான்று போன்று நிற்கின்ற நினக்கு நேரிளையவனாகிய தம்பியை-நின்சொல் கடவாமல், வானுலகம் வரையில் தொடர்புள்ள (கோசல நாட்டுப்) பெரிய அரசாட்சியை ஆண்ட அரசனை (நின்பால்வைத்த அன்பால்) தன்னைப் பெற்றெடுத்த தாயின் கருத்திற்குப் பகையாய் நின்றவனை-இங்குப் பார்ப்பாயாக' என்று,

கு :—'எனாக் காட்டினன் மாருதி, என, வருஞ் செய்யுளில் முடியும்; குளகம். இராமன் பழமையான தருமத்தைச் சிதைவுறாமல் காக்கவந்தவன் ஆகலின் அவனைத் 'தொல்லறச் சான்றென நின்றவன்' என்றார். ''தரும நீ யல்லது தனித்து வேறுண்டோ'' (கிட்கிந்-கலன்காண்-15) எனச் சுக்கிரீவன் கூறுவதும், 'தருமமூர்த்தி ஈதைகள் தீர்க்கும் நாமத்தி ராமனை' (நாகபாசப்-275) எனக் கூறப்படுவதும் காணலாம். இந்திரனும் வந்து உதவி வேண்டும் பெருமையுடையது கோசல நாட்டுப் பேரரசு ஆதலின் 'வான்தொடர் பேரரசு' எனப்பட்டது. வான் என்றது ஆகுபெயராய் வானவரை உணர்த்தியது. தன்னைப் பெற்ற கைகேயி வரத்தால் வாங்கித்தந்த அரசை ஏலாது இராமனுக்கே யுரிமையாக்கியவன் பரதன் ஆகலின் 'ஈன்றவள் பகைஞனை' என்றான். இராமனுக்கு நேர்இளைய தம்பியாயிருந்தே இராமன் கட்டளைப்படி பேரரசு ஆண்ட மன்னனாகவும் இருந்த அவன் திறமை புலப்பட மன்னன் என்ற பெயரால் சுட்டியவாறு. அப்பரதனோடு பகைஞராவார் பிறர் இன்மை புலப்பட 'ஈன்றவள் பகைஞனை' என்றான். (333)

இராமன் பரதனைக் காண்டல்

10429. காட்டினன் மாருதி கண்ணிற் கண்டவத்
தோட்டலர் தெரியலா னிலைமை சொல்லுங்கால்
ஓட்டிய மானத்து ளுயிரிற் றந்தையார்
கூட்டுருக் கண்டன்ன தன்மை கூடினான்.

காட்டினன் மாருதி;
கண்ணின் கண்ட அத்
தோட்டு அலர் தெரியலான்
நிலைமை சொல்லுங்கால்

ஓட்டிய மானத்துள்
உயிரின் தந்தையார்
கூட்டு உருக் கண்டன்ன
தன்மை கூடினான்.

பொ.—(என்று கூறிக்) காட்டினான் அனுமன்; (அப்பரதனைக்) கண்ணிற் கண்ட அந்த இதழ் அலர்ந்த மலர்மாலை யணிந்த இராமனது மனநிலையைச் சொல்லுமிடத்து, செலுத்தப்பட்ட விமானத்திலிருந்து (காட்சிதந்த) உயிரோடு கூடிய தயரதனாகிய தந்தையாரின் பொருந்திய உருவத்தை (இலங்கையில்) கண்டது போன்ற மகிழ்ச்சித்தன்மையை யடைந்தான்.

கு:—'கண்ட அத்தெரியலான்' என்றது இராமனை. இலங்கையில் தயரதன் விமானத்தில் வந்து இராமனைக் கண்டு உரையாடி வரங் கொடுத்துச் சென்றமை இப்படலத்தில் 116-ஆம் செய்யுள் தொடங்கிக் கூறப்பட்டுள்ளமை நினைக. பதினான்காண்டு பிரிந்திருந்த பரதனைக் கண்ட இராமன் மகிழ்ச்சி தன் தந்தையைக் கண்ட மகிழ்ச்சி போன்றது என்றபடி. துயர் தமக்குதவி மீளாத்துறக்கம் பெற்றுயர்ந்த தொல்லைத் தயரதற் கண்டாலொத்த தம்முனை'' (வேலேற்ற படலம்-47) என்று இராவணன் எறிந்த வேலால் உயிர்நீங்கி மருத்துமலையால் உயிர்பெற்று வந்த இலக்குவனைக் கண்டு இராமன் மகிழ்ந்தமைக்கு மீளத் தந்தையைக் காணும் மகிழ்ச்சியை உவமை கூறியிருத்தல் நினையலாம். (334)

இச்செய்யுளின் பின் சில பிரதியில் 'ஆனதோர்' (358) என்று தொடங்கும் செய்யுள் காணப்படுகின்றது. சில பிரதிகளில் கீழ் வரும் செய்யுள் இங்குக் காணப்படுகின்றது.

10429 (1) அம்பொழு தவ்வயி னடைந்து ளோர்களைத்
தப்பறக் காண்பெனென் றையன் தன்மனத்
தொப்பற வெண்ணுமுன் உம்பர் நாடுவந்
திப்புறத் திழிந்தென விழிந்த மானமும்.

விமானம் நிலத்தைச்சேர்தல்

10430. அவ்வயி னயோத்தி வைகுஞ்
சனமொடு மக்கு ரோணி

தவ்வலி லாறு பத்தா
யிரமொடுந் தாய ரோடும்
இவ்வயி னடைந்து ளோரைக்
காண்பெனன் றிராம னுன்னச்
செவ்வையி னிலத்தை வந்து
சேர்ந்ததவ் விமானந் தானும்.

அவ்வயின், 'அயோத்தி வைகும்
சனமொடும் அக்குரோணி
தவ்வல் இல் ஆறுபத்தாயிரமொடும்
தாயரோடும்,
இவ்வயின் அடைந்துளோரைக்
காண்பென்' என்று இராமன் உன்ன,
செவ்வையின் நிலத்தை வந்து
சேர்ந்தது அவ் விமானம் தானும்.

பொ:—அவ்விடத்து, இராமன், 'அயோத்தியில் வாழும் குடிமக்களோடும், குறைவில்லாத அறுபதினுயிரம் அக்குரோணி சேனையோடும், மூவர் தாயரோடும், இவ்விடத்தில் வந்துள்ளவர்களைக் காண்பேன்' என்று எண்ண, விமானமும் நேரே நிலத்தை வந்து அடைந்தது.

கு:—தன்னைக் காண விரும்பி வந்தவர்களை இராமன் காண வேண்டும் என்று விரும்பியவுடன் விமானமும் அக்குறிப்பறிந்து தரையில் இறங்கியது என்றவாறு. தயரதனுக்கு அமைச்சரும், மனைவியரும், ஆயுளும் அறுபதினுயிரம் ஆதல் போலவே அவன் சேனையும் அறுபதினுயிரம் அக்குரோணி என்ற அளவினதாக அமைந்திருந்தது என்பது இதனுலறியலாம். (335)

*நிலத்தைச் சேர்ந்த விமானத்தைக் கண்ட மக்கள் மகிழ்ச்சி*

10431. எவ்வயி னுயிர்கட்கு மிராம னேறிய
★ செவ்விய புட்பக நிலத்தைச் சேர்தலும்
அவ்வவர்க் கணுகிய வமரர்நா டுய்க்கும்
எவ்வமின் மானமென் றிசைக்க லாயதால்.

எவ்வயின் உயிர்கட்கும்,
இராமன் ஏறிய
செவ்விய புட்பகம்
நிலத்தைச் சேர்தலும்,
அவ் அவர்க்கு அணுகிய
அமரர்நாடு உய்க்கும்
எவ்வம் இல் மானம் என்று
இசைக்கல் ஆயதால்.

பொ :—இராமன் ஏறியுள்ள அழகிய புட்பக விமானம் நிலத்தைச் சேர்ந்த அளவில், எல்லா இடங்களிலும் உள்ள உயிர்கட்கும் அவ்வவர்கட்கு (நல்வினையினால்) வந்து அடைந்த, அமரர் உலகத்துக்குச் செலுத்தும் துன்பம் இல்லாத, தெய்வ விமானம் என்று சொல்லத்தக்கதாயிற்று.

கு :—விமானத்தில் வந்திறங்கும் இராமனைக் கண்டு வணங்கும் இன்பம், மக்களுக்கு விண்ணுலகத்தில் துய்க்கும் இன்பம் போன்றது ஆகலின், அவ்விராமன் ஏறிய விமானம் வந்து தரையில் இறங்கியதைக் கண்ட மக்கள் மகிழ்ச்சி, தம்மை யேற்றிச் சென்று விண்ணுலகத்தில் சேர்க்கும் இன்பமிக்க தெய்வ விமானத்தைக்கண்ட மகிழ்ச்சி போன்றது என்றவாறு. ஒவ்வொருவரும், தம்மை யேற்றிக்கொண்டு இன்பவுலகத்துச் செல்லுதற்காக வந்துள்ள விமானமாகவே எண்ணி மகிழ்ந்தனர் என்பது கருத்து. (336)

### இராமனைக் கண்ட தாயர் முதலியோர் நிலை
### *10432 — 10435*

*10432.* தாயருக் கன்று சார்ந்த
★ கன்றெனுந் தகைய ரானான்
மாயையிற் பிரிந்தோர்க் கெல்லா
மனோலயம் வந்த தொத்தான்
ஆயினா யர்க்குக் கண்ணு
ளாடிரும் பாவை யொத்தான்
ஓய்வுற வுலந்த யாக்கைக்
குயிர்புகுந் தாலு மொத்தான்.

தாயாருக்கு அன்று சார்ந்த
கன்று எனும் தகையன் ஆனான்;
மாயையின் பிரிந்தோர்க்கு எல்லாம்
மனோலயம் வந்தது ஒத்தான்;
ஆய் இளையர்க்குக் கண்ணுள்
ஆடிரும் பாவை ஒத்தான்;
ஓய்வுற உலந்த யாக்கைக்கு
உயிர்புகுந்தாலும் ஒத்தான்.

பொ:—(கோசலையும் சுமித்திரையும் ஆய) தாயருக்கு (நெடிதுகாலம் பிரிந்திருந்து) அன்று வந்த கன்று என்னும் தன்மையனாகிய இராமன், மாயையிலிருந்து பிரிந்திருக்கும் துறவிகட்கெல்லாம் மனம் இறைவனோடு ஒன்றுபடும் நிலை வந்ததை ஒத்தான்; மெலிந்துள்ள பரத சத்துருக்கர்களாகிய தம்பிமார்க்குக் கண்களுக்குள் ஆடுகின்ற கரிய பாவையை ஒத்துத் தோன்றினான்; கருவிகளெல்லாம் செயலற்று ஓய்வுறுமாறு உலர்ந்த உடம்பிற்கு உயிர் புகுந்த தன்மையையும் ஒத்து விளங்கினான்.

கு:—'கன்று பிரி காராவின் துயருடைய கொடி' (குகப் படலம்-66) எனக் கோசலை கூறப்பட்டதும், ''இருவரும் தொழுதனர் இரண்டு கன்றெரீஇ வெருவரும் ஆவினின் தாயும் விம்மினாள்'' (நகர்நீங்கு-153) எனச் சுமத்திரை கூறப்பட்டதும் நினைவு கூரின் இங்குத் தாயருக்கன்று சார்ந்த கன்றெனும் தகையன் ஆனான்'' என்றதன் பொருத்தம் விளங்கும். 'கன்றெனும் தகையன் ஆனான்' என்ற குறிப்பால், தாயராகிய பசுக்களுக்கு என்ற உருவகம் வருவித்துரைக்கப்படும். இது குறிப்புருவகம் எனப்படும். மாயையில் பிரிந்தோர் என்றது மாயையின் காரியமாகிய உலகப் பொருள்களில் பற்றுக்கொள்ளாத துறவியரை. மனோலயம் என்றது, உலகப் பொருள்களில் ஈடுபட்டுப் பழகிய மனம் அவற்றை விடுத்து மெய்ப்பொருளாகிய இறைவனோடு ஒன்றியிருக்கும் நிலையை; அந்நிலை துறவிகட்குப் பேரானந்தத்தைத் தரும் ஆதலின், இராமனைக் கண்டு ஆனந்தம் அடைந்த துறவிகட்கு அந்த மனோலயத்தை உவமை கூறினார். ஆய்தல், உள்ளதனுணுக்கம். இராமனைப் பிரிந்த வருத்தத்தால் இளைத்த உடம்பினராய பரத சத்துருக்கனரை 'ஆய் இளையர்' எனக் குறிப்பிட்டவாறு. தம்பியர் இராமனை யன்றி விழிக்கும் விழி

வேறில்லவர் ஆதலின், இராமன் அவர்கட்குக் 'கண்ணுள் ஆடிரும் பாவை ஒத்தான்' என்றார். இராமனைப் பிரிந்தமையால் வாடிய உடம்பினராய் உயிரற்றார் போலிருந்த நகரமாந்தர் எல்லாம் இப்போது தழைத்த உடம்பினரானமை புலப்பட 'உலர்ந்த யாக்கைக்கு உயிர் புகுந்தாலும் ஒத்தான்' என்றார். (337)

10433. எளிவரு முயிர்கட் கெல்லா
மீன்றதா யெதிர்ந்த தொத்தான்
அளிவரு மனத்தோர்க் கெல்லா
மரும்பத வமுத மொத்தான்
ஒளிவறப் பிறந்த தொத்தா
னுலகினுக் கொண்க ணார்க்குத்
தெளிவரு களிப்புச் செய்யுந்
தேம்பிழித் தேற லுற்றான்.

எளிவரும் உயிர்கட்கு எல்லாம்
ஈன்ற தாய் எதிர்ந்தது ஒத்தான்;
அளிவரும் மனத்தோர்க்கு எல்லாம்
அரும்பத அமுதம் ஒத்தான்;
ஒளிவுஅறப் பிறந்தது ஒத்தான்,
உலகினுக்கு; ஒண்கணார்க்கு,
தெளிவரு களிப்புச் செய்யும்
தேம்பிழித் தேறல் ஒத்தான்.

பொ:—எளிமை பொருந்திய இளங்குழந்தைக் கெல்லாம் பெற்ற தாய் எதிர்ப்பட்டாற் போன்று மகிழ்ச்சியூட்டினான்; அன்பு பொருந்திய மனத்தையுடையவர்க் கெல்லாம் கிடைத்தற்கு அரியதாய்ப் பக்குவமுடைய அமுதம் போன்று இனியனானான்; உயர்ந்தோராகிய ஞானிகட்குத் தன் உண்மை வடிவத்தை மறைத்துக்கொள்ளாமல் வெளிப்பட்டுக் காட்சியளித்ததை ஒத்து விளங்கினான்; ஒளிவாய்ந்த கண்ணையுடைய மகளிர்க்குத் தெளிவில்லாத களிப்பை யுண்டாக்குகின்ற தேனைப் பிழிந்து செய்த மதுவை ஒத்துக் களிப்பூட்டினான்.

கு :—எளிவரும் உயிர் என்றது அறிவதறியாப் பருவத்துச் சிறுரை. பிரிந்திருந்த தாயை மீண்டு வரக்கண்டாற் போன்ற மகிழ்ச்சியையடைந்தனர் சிறுவர் என்றவாறு. அளி—அன்பு. அமுதை உண்பது போல் இராமனது உருவைக் கண்டு மகிழ்ந்தார் கள் என்பார், 'அளிவருமனத்தோர்க்கெல்லாம் அரும்பத அமுத மொத்தான்' என்றுர். உலகு என்றது, இங்கு உயர்ந்தோராகிய ஞானிகளை உணர்த்தியது. கடவுளை நேரே கண்டவர்களைப் போல ஞானிகள் இராமனைக் கண்டு மகிழ்ந்தனர் என்றவாறு. ஒளிவு அறப்பிறத்தல் என்றது, தன் உண்மை வடிவத்தை மறைத்துக்கொள்ளாமல் வெளிப்பட்டுக் காட்சியளித்தலை. இள மங்கையரின் கண்களுக்கு இராமன் பேரழகு தேம்பிழி மதுவைப் போலக் களிப்பையுண்டாக்கியது என்க. (338)

இச்செய்யுளின் பின் 23, 43-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10433 (1) அந்தண ராஞேர்க் கெல்லாம்
அறநெறி வேள்வி யொத்தான்
வெந்திறல் வேந்தர்க் கெல்லாம்
வெற்றிவந் தடுத்த தொத்தான்
நிந்தையில் வணிகர்க் கெல்லாம்
அளவிலா நிதிய மொத்தான்
உந்திய உழவர்க் கெல்லாம்
உறுபயிர் விளைவை யொத்தான்.

10434. ஆவியங் கவன லான்மற்
றின்மையா லனைய னீங்கக்
காவியங் கழனி நாடு
நகரமுங் கவன்று வாழும்
மாவிய லொண்க ணாரு
மைந்தரும் வள்ள லெய்த
ஓவிய முயிர்பெற் றென்ன
வோங்கின ருணர்வு பெற்ருர்.

ஆவி அங்கு அவன் அலால் மற்று
இன்மையால், அனையன் நீங்க,

காவி அம் கழனி நாடும்,
நகரமும், கவன்று வாழும்
மா இயல் ஒண் கணாரும்,
மைந்தரும் வள்ளல் எய்த,
ஓவியம் உயிர் பெற்றென்ன
ஓங்கினர் உணர்வு பெற்றார்.

பொ.-தமக்கு உயிர் அவ்விராமன் அல்லது வேறு இல்லாமையால், அவன் காட்டிற்குச் சென்ற அளவில், குவளைகள் நிறைந்த கழனிகளையுடைய நாட்டிலும் நகரத்திலும் கவலையுற்று வாழ்ந்துகொண்டிருந்த மாவடுவின் பிளவுபோன்ற ஒளி வாய்ந்த கண்ணையுடைய மகளிரும், மைந்தரும், அவ்வள்ளலாகிய இராமன் வந்தவுடன் (எழுதிய) சித்திரங்கள் உயிர் பெற்று எழுந்தாற்போல உணர்ச்சி பெற்று எழுந்தார்கள்.

கு :-ஆவி அவனலால் மற்றின்மையால் அணையனீங்க நாட்டிலும் நகரத்திலும் கவன்று வாழும் ஒண் கணாரும், மைந்தரும், வள்ளல் எய்த உணர்வு பெற்றாராய் ஓங்கினர் என இயையும். அங்கு-அசைநிலை. மகளிரும் மைந்தரும் இராமனீங்கிய அளவில் கவன்று வாழ்வதற்குக் காரணம் கூறுவாராய் 'ஆவி அங்கு அவனலால் மற்றின்மையால்' என்றார். நாட்டிலும் நகரத்திலும் வாழும் மைந்தர்க்கும் மகளிர்க்கும் இராமனே உயிர் என்பதை இதனால் புலப்படுத்தியவாறு. ''இன்னுயிர் யார்க்கும் ஒன்றாய்ப் பொருவரு தேரில் செல்லப் புறத்திடைக் கண்டார் போல்வார்'' (கைகேயி சூழ்வினைப்-87) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இனி, ''மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம்'' (புறநா-186) என்பது நினைந்து 'ஆவியங் கவனலான் மற்றின்மையால்' என்றார் எனலும் ஆம். 'உயிரினும் அவனையே உவப்பார்' (மந்திரப்-39) என்பதும் நினைக. 'ஓவியம் உயிர்பெற்றென்ன' என்ற உவமையால் இராமனைப் பிரிந்த நிலையில் மக்கள் உணர்வற்ற ஓவியம்போல் இருந்தனர் என்பது புலனும். (339)

இச்செய்யுளின் பின் 23, 29, 43, 44-ஆம் பிரதிகளில் பின் வரும் மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன :—

10434 (1) அண்ணலாங் கெய்து மெல்லை
யணிநகர் தேர ராடும்

சுண்ணமுஞ் சாந்து நெய்யுஞ்
சுரிவளை முத்தும் பூவும்
எண்ணெயும் புழுகு சாந்தின்
கலவையு மெழில் கொளானை
வண்ணவார் மதமுங் கூடி
மறிகடல் மடுத்த தன்றே.

10434 (2) வள்ளல் வரவு தனைக்கேட்ட
வளைவா னிறத்தி னிளையோனும்
உள்ளங் களிகூர்ந் துயிர்தேறி
யோங்கு முரச மறைவித்துக்
கள்ளின் விரியு மடற்கமுகும்
கதலிக் குழாமும் தோரணமும்
தெள்ளு மணிநீ ரயோத்திநகர்
திகழும் படியே யலங்கரித்தார்.

,, (3) பாளைக் கமுகும் பலநிரைத்துப்
பகலோன் மறையக் கொடிபரப்பிக்
காளப் புயல்சூழ் மாளிகையில்
கனக மணித்தூ ணுறைபொதிந்து
நீளத் தீப வொளிநிரைத்து
நெடுந்தேர் வீதிப் பெருந்தானைத்
தாளிற் றூளி யெழாவண்ணம்
தண்ணூர் பனிநீர் தனைச்சொரிந்தார்.

,, (4) நிறப்பொற் கமலத் தாண்மீது
நேயம் பொருந்து மவர்தங்கள்
பிறப்பைத் தடுத்தாட் கொண்டருளும்
பெருமான் றன்னை யெதிர்கொள்ளச்
சிறப்பிற் றிகழும் கடகளிறும்
திண்டேர்ச் சேனைப் புரவியுடன்
மறப்புச் சிறிது மில்லாத
மனத்தோ னிமைப்பின் வந்தடைந்தான்.

10435. சுண்ணமுஞ் சாந்து நெய்யுஞ்
சுரிவளை முத்தும் பூவும்

எண்ணெயுங் கலின மாவி
லாழியு மெண்ணில் யானை
வண்ணவார் மதமுந் நீரு
மான்மதந் தழுவு மாதர்
கண்ணவாம் புனலு மோடிக்
கடலையுங் கடந்த வன்றே.

சுண்ணமும், சாந்தும், நெய்யும்,
சுரிவளை முத்தும், பூவும்,
எண்ணெயும், கலினமா
விலாழியும், எண் இல் யானை
வண்ணவார் மத முந்நீரும்
மான்மதம் தழுவும் மாதர்
கண்ண ஆம் புனலும், ஓடிக்
கடலையும் கடந்த அன்றே.

பொ :—வாசனைப் பொடியும், சந்தனமும், நெய்யும், சுரிந்துள்ள சங்கு ஈன்ற முத்தும், பூவும், எண்ணெயும், கடிவாளம் பூண்ட குதிரைகளின் வாய்நுரைநீரும், அளவில்லாத யானைகளின் பலவண்ணமுடையவாய் ஒழுகுகின்ற மூன்று மதங்களாகிய நீரும், கத்தூரி பூசிக்கொண்டுள்ள பெண்டிரின் கண்களில் உண்டாகிய உவகைக் கண்ணீரும் சேர்ந்து ஓடிக் கடலையும் தாண்டிச் சென்றன.

கு :—இராமன் வருகையால் மக்களுக்கு உண்டான மகிழ்ச்சியின் பெருக்கால் ஒருவர்க்கொருவர், வாசனைப் பொடியைத் தூவிக்கொள்வதும், சந்தனக்குழம்பைப் பூசுவதும், முத்துமாலைகளையும் மலர் மாலைகளையும் அணிவதும் இயல்பு. யானைகளும் குதிரைகளும் மகிழ்ச்சியால் மதநீரையும் நுரையையும் சொரிந்தன. மகளிர் இராமனைக் கண்ட மகிழ்ச்சியால் உவகைக் கண்ணீர் சொரியலாயினர்; இவை யனைத்தும் சேர்ந்து வெள்ளமாகப் பெருகிக் கடலில் கலந்து அப்புறமும் தாண்டிச் சென்றன என அவற்றின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. மதமுந்நீர் என்றது மும்மத நீரினை. கன்ன மதம், கபோல மதம், பீச மதம் என்று யானைக்கு மூன்று மதங்கள் உண்டு. (340)

வசிட்டன் முதலியோர் விமானத்தில் ஏற இராமன் வசிட்டனை வணங்குதல்

10436. அனைவரு மனைய ராகி
யடைந்துழி யருளின் வேலை
தனையினி தளித்த தாயர்
மூவருந் தம்பி மாரும்
புனையுநூன் முனிவன் ருனும்
பொன்னணி விமானத் தேற
வனைகழற் குரிசின் முந்தி
மாதவன் ருளில் வீழ்ந்தான்.

அனைவரும் அனையர் ஆகி
அடைந்துழி அருளின் வேலை
தனை இனிது அளித்த தாயர்
மூவரும், தம்பி மாரும்,
புனையும் நூல் முனிவன் தானும்,
பொன் அணி விமானத்து ஏற,
வனைகழல் குரிசில் முந்தி,
மாதவன் தாளில் வீழ்ந்தான்.

பொ :—யாவரும் அத்தன்மையான மகிழ்ச்சியுடையவராய், விமானத்தை நெருங்கியபோது, அருட்கடலாகிய இராமனை இனிதாகப் பெற்று வளர்த்த தாயர் மூவரும், பரதன் சத்துருக்கன் என்ற தம்பிமாரும் பூணூல் அணிந்துள்ள வசிட்ட முனிவனும் பொன்னாலியன்ற அழகிய விமானத்தில் ஏற, வீரக்கழலை அணிந்த இராமன் முதலில் பெருந்தவமுனிவனாகிய வசிட்டன் காலில் விழுந்து வணங்கிறன்.

கு :—அருளின் வேலை என்றது உவமை யாகுபெயராய் இராமனை உணர்த்தியது. பெற்றது கோசலையே யாயினும் வளர்த்தல் கைகேயிக்கும் சுமித்திரைக்கும் உண்டாதல் நினைந்து 'இனிதளித்த தாயர் மூவரும்' என்ருர். நூல்புனையும் முனிவன் எனவும், கழல்வனை குரிசில் எனவும் மாறுக. வசிட்டன் தன் குலகுருவாதலின் இராமன் முதலில் அவனை வணங்கலானன். குரிசில் — ஆண்மகன் ; இராமன். (341)

வசிட்டன் இராம இலக்குவரை வாழ்த்துதல்

10437. எடுத்தனன் முனிவன் மற்றவ்
விராமனை யாசி கூறி
அடுத்துள துன்பம் நீங்க
வணைத்தணைத் தன்பு கூர்ந்து
விடுத்துழி யிளைய வீரன்
வேதியன் றாளில் வீழ
வடித்தநூன் முனியு முன்போல்
வாழ்த்தினு ளாசி கூறி.

எடுத்தனன் முனிவன், மற்று அவ்
இராமனை ஆசி கூறி,
அடுத்துள துன்பம் நீங்க,
அணைத்து அணைத்து, அன்பு கூர்ந்து,
விடுத்துழி, இளைய வீரன்
வேதியன் றாளில் வீழ,
வடித்த நூல் முனியும் முன்போல்
வாழ்த்தினன் ஆசி கூறி.

பொ :—அவ் வசிட்ட முனிவன், (தன்னை வணங்கிய) அந்த இராமனைக் கைகளால் தூக்கி எடுத்து அவனுக்கு ஆசீர்வாதம் செய்து, (இராமன் பிரிவால் தனக்கு) நேர்ந்துள்ள துன்பம் நீங்குமாறு அன்பு மிக்குப் பன்முறை அணைத்துவிட்டபின்பு, இளைய வீரனாகிய இலக்குவன், அந்த வசிட்டன் பாதங்களில் வீழ்ந்து வணங்க, வடித்த பூணூல் அணிந்த அந்த முனிவனும் முன்போலவே அவ் இலக்குவனுக்கும் ஆசிகூறி வாழ்த்தினன்.

கு :—'அடுத்துள துன்பம் நீங்க' என்பதற்கு 'இராமன் காடு புகுந்தும் அரக்கரை வதைத்தும் பட்ட துன்பம் நீங்குமாறு' எனப் பொருள் கூறலும் ஆம். வடித்தல் — திருத்துதல். பஞ்சினுல் வடித்த முந்நூல் என்றவாறு. (342)

இராமன் தாயரை வணங்குதல்

10438. கய்கயன் றனையை முந்தக்
காலுறப் பணிந்து மற்றை

மொய்குழ லிருவர் தாளு
முறைமையின் வணங்குஞ் செங்கண்
அய்யனை யவர்க டாமு
மன்புறத் தழுவித் தத்தம்
செய்யதா மரைக்க ணீரால்
மஞ்சனத் தொழிலுஞ் செய்தார்.

கய்கயன் தனையை முந்தக்
கால் உறப் பணிந்து, மற்றை
மொய்குழல் இருவர் தாளும்
முறைமையின் வணங்கும் செங்கண்
அய்யனை, அவர்கள் தாமும்
அன்புறத் தழுவி, தம்தம்
செய்ய தாமரைக்கண் நீரால்
மஞ்சனத் தொழிலும் செய்தார்.

பொ :-முதலில் கேகய தேயத்து மன்னன் மகளான கைகேயியின் பாதங்களில் நன்றாக வீழ்ந்து வணங்கிவிட்டு, மற்றைத் தாய்மார்களான நெருங்கிய கூந்தலையுடைய கோசலை, சுமித்திரை என்ற இருவர் பாதங்களையும் முறையாக வணங்கும் சிவந்த கண்ணையுடைய இராமனை, அத்தாய்மார்களும், அன்புமிகத் தழுவிக்கொண்டு தத்தம் சிவந்த தாமரை மலர் போன்ற கண்களில் பெருகிய உவகைக் கண்ணீரால் நீராட்டுத் தொழிலையும் செய்தார்கள்.

கு :—கைகேயியினிடத்து இராமனுக்கு இருக்கும் தனி அன்பு தோன்ற முதலில் அவளை வணங்கினான். தான் சூடு புகுதற்குக் காரணமாக இருந்தவள் கைகேயி என்ற பகையெண்ணம் தனக்கு இன்மைகாட்ட முதற்கண் அவளை வணங்குதல் இராமனுக்குக் கடமையாயிற்று. இராமனை மீண்டும் காணப் பெற்றமையால் தாயர்க்குப் பெருகிய கண்ணீர் மிகுதியைப் புலப்படுத்தவேண்டி, ‘மஞ்சனத்தொழிலும் செய்தார்’ என்றார். மஞ்சனத்தொழில் என்றது நீராட்டுதலை. இராமனை நீராட்டுமளவு கண்ணீர் பெருகியது என்றவாறு. (343)

**சீதையும் இலக்குவனும் வணங்குதல்**

10439. அன்னமு முன்னர்ச் சொன்ன
முறைமையி னடியில் வீழ்ந்தாள்
தன்னிக ரிலாத வென்றித்
தம்பியுந் தாயர் தங்கள்
பொன்னடித் தலத்தில் வீழத்
தாயரும் பொருந்தப் புல்லி
மன்னவற் கிளவ னீயே
வாழியென் ருசி சொன்ஞர்.

அன்னமும் முன்னர்ச் சொன்ன
முறைமையின் அடியில் வீழ்ந்தாள்;
தன்நிகர் இலாத வென்றித்
தம்பியும் தாயர் தங்கள்
பொன்னடித் தலத்தில் வீழத்,
தாயரும் பொருந்தப் புல்லி,
'மன்னவற்கு இளவல் நீயே;
வாழி!' என்று ஆசி சொன்ஞர்

பொ:—அன்னம் போன்ற சீதையும், முன் சொன்ன முறையில் (வசிட்டன், கைகேயி, கோசலை, சுமித்திரை) பாதங்களில் வீழ்ந்து வணங்கினுள்; தனக்கு நிகரிலாத வெற்றியையுடைய இலக்குவனும் தாயர் மூவருடைய அழகிய பாதங்களில் வீழ்ந்து வணங்க, அத்தாய்மார்களும் அவனைப் பொருந்த அணைத்துக் கொண்டு, 'மன்னவனுகிய இராமனுக்குத் தம்பி என்று சொல்லுதற்குரியவன் நீயே' என்று புகழ்ந்து, 'வாழ்க' என்று ஆசி கூறினுர்கள்.

கு:—சீதை நடையால் அன்னப் பறவையைப் போன்றவள் ஆதலின் உவமையாகுபெயரால் அவளை அன்னம் என்று குறிப்பிட்டவாறு. இராமனுக்குத் தம்பியர் மூவராயினும், காடு புகுந்தபோது துன்பத்திற்குத் துணையாய்ச் சென்ற பெருமை இலக்குவனுக்கே கிடைத்தமையால் 'மன்னவற்கிளவல் நீயே' என்றனர். ''இராமன் பின் பிறந்தானு முளனென்னப் பிரியாதான்'' (குகப்படலம்-67) எனப் பரதனே முன் கூறியுள்ளதும்

நினைக. மன்னவன் என்றது இராமனை; பதினான்காண்டு கழிந்ததும் மன்னவனாவதாகப் பரதனுக்கு முன்பு இராமன் வாக்களித்துள்ளமையால் முடிசூடும் முன்னரே தாய்மார்கள் இங்ஙனம் கூறியதும் பொருந்துவதே யாம். (344)

இச்செய்யுளின் பின் 71-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகிறது:—

10439 (1) தம்முனோன் வணக்கஞ் செய்த
முறைமையிற் றாயர் தங்கள்
செம்மலர்த் தாளின் வீழ்ந்து
வணங்கலு மிளைய சேயை
அம்மலர்க் கைக ளார
வெடுத்தினி தணைத்துக் கண்ணீர்
மைம்முகில் போலச் சிந்தி
நாடொறும் வாழ்தி யென்றார்.

*தன்னை வணங்கிய பரதனை இராமன் தழுவுதல்*
*10440, 10441*

10440. சேவடி யிரண்டு மன்பி
னடியுறை யாகச் சேர்த்திப்
பூவடி பணிந்து வீழ்ந்த
பரதனைப் பொருமி விம்மி
நாவிடை யுரைப்ப தொன்று
முணர்ந்தில னின்ற நம்பி
ஆவியு முடலு மொன்றத்
தழுவின னழுது சோர்வான்.

சேவடி இரண்டும் அன்பின்
அடியுறையாகச் சேர்த்தி,
பூவடி பணிந்து வீழ்ந்த
பரதனைப் பொருமி விம்மி,
நாவிடை உரைப்பது ஒன்றும்
உணர்ந்திலன், நின்ற நம்பி,
ஆவியும் உடலும் ஒன்றத்
தழுவினன், அழுது சோர்வான்.

பொ.—(தான் முன்பு பெற்றுச் சென்ற) திருவடி நிலைகள் இரண்டையும் தன் அன்புக் காணிக்கையாகச் சேர்த்துவிட்டுத் தாமரை மலர்போன்ற அவ்விராமன் திருவடிகளில் வீழ்ந்து பணிந்த பரதனை நோக்கிப் புலம்பி விம்மி அழுது சோர்பவனாய்த் தன் நாவினால் உரைப்பது ஒன்றையும் உணராதவனாய் நின்ற இராமன், உயிரும் உடலும் ஒன்றுபடுமாறு அவனைத் தழுவினான்.

கு:—சேவடி இரண்டும் என்றது முன்பு பரதன் பெற்றுச் சென்ற பாதுகைகளை. அடியுறை-காணிக்கை. பாதுகையை அடியுறையாகச் சேர்த்தி என்பது, சொல்லாலும் பொருத்தமாக அமைந்துள்ளமை காணலாம். நாவிடை, உருபுமயக்கம்; நாவால் என்க. அன்பு உணர்ச்சி மேற்படும்போது பொருமி விம்மி அழுது சோர்தலன்றி ஒன்றைச் சொல்லுதல் இயலாமை இயல்பு ஆதலின், 'உரைப்பதொன்றும் உணர்ந்திலன்' என்றார். தழுவுங்கால் உடம்பும் உடம்பும் ஒன்றுதலே இயல்பு, ஆகவும் இவர்கட்கு உயிரும் உயிரும் கூட ஒன்றியது என்பது அவர்தம் அன்பின் மிகுதியை யுணர்த்தியவாறு. 'பணிந்து வீழ்ந்த' என்பதை 'வீழ்ந்து பணிந்த' என மாற்றுக. (345)

10441. தழுவின னின்ற காலைத்
தத்திவீ ழருவி காலும்
விழுமலர்க் கண்ணீர் மூரி
வெள்ளத்தான் முருகற் செவ்வி
வழுவுறப் பின்னி மூசு
மாசுண்ட சடையின் மாலை
கழுவின னுச்சி மோந்து
கன்றுகாண் கறவை யன்னான்.

தழுவினன் நின்ற காலை
தத்திவீழ் அருவி காலும்
விழுமலர்க் கண்ணீர் மூரி
வெள்ளத்தால் முருகற் செவ்வி
வழுவுற, பின்னி மூசு
மாசுண்ட சடையின் மாலை

கழுவினன், உச்சி மோந்து,
கன்றுகாண் கறவை அன்னான்.

பொ :—(அவ்வாறு) தழுவி நின்றபொழுது, (மலையினின்று) தாவி விழ்கின்ற அருவி போலப் பெருகும், சிறந்த மலர் போன்ற கண்ணின் நீராகிய பெரிய வெள்ளத்தால், -(பரதனது) முருகனைப் போன்ற இளமை அழகு குலையும்படி பின்னி மொய்த்துக் கொண்டுள்ள அழுக்குப்படிந்த சடையின் கற்றையைக் கழுவினனாய் உச்சிமோந்து கன்றினைக்கண்ட தாய்ப் பசுவை ஒத்தவனானான்.

கு :—அருவிபோல் காலும் கண்ணீராகிய மூரிவெள்ளத்தால் மாசுண்ட சடையின் மாலை கழுவினன் என இயையும். விழு—விழுப்பம்; சிறப்பு. மூரி-பெருமை. முருகன் இளமையும் அழகும் உள்ள கடவுள் ஆதலின், இளமையும் அழகுமுள்ள பரதனுக்கு உவமையாக்கினார். பின்னிக் கொண்டும் முகத்தில் மொய்த்துக் கொண்டுமுள்ள அழுக்குப் படிந்த சடையால் பரதனது இளமை அழகு தோன்றாமல் வழுவுற்றிருந்தது என்றவாறு. கழுவினன், முற்றெச்சம். கழுவினனாய் உச்சி மோந்து கறவை அன்னான் ஆனான் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. பரதனது மாசுண்ட சடையைக் கழுவத்தக்க பெருக்கினதாக இராமனது கண்ணீர் இருந்தது என்றவாறு. கன்றினைக் கண்ட தாய்ப் பசுவைப்போலப் பரதனைக் கண்ட இராமன் அன்பினால் உள்ளம் உருகினான் என்பார், 'கன்றுகாண் கறவையன்னான்' என்றார். ''தன் பொருவில் கன்று தனி தாவிவரல் கண்டாங், கன்புருகு சிந்தையொடும் ஆவுருகு மாபோல் என்புருகி நெஞ்சுருகி நஞ் சுருகி நிற்பார்'' (கைகேயி சூழ்வினைப்–98) ஏன்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (346)

இலக்குவன் பரதனைப் பணிதல்

10442. அனையதோர் காலத் தம்பொற்
சடைமுடி யடிய தாகக்
கனைகழ லமரர் கோமாற்
கட்டவற் படுத்த காளை
துனைபரி கரிதே ரூர்தி
யென்றிவை பிறவுந் தோலின்

வினையுறு செருப்புக் கீந்தான்
விரைமலர்த் தாளின் வீழ்ந்தான்.

அனையது ஓர் காலத்து, அம்பொன்
சடைமுடி அடியது ஆக,
கனைகழல் அமரர் கோமாற்
கட்டவன் படுத்த காளை
துணைபரி, கரி தேர், ஊர்தி
என்றிவை பிறவும், தோலின்
வினை உறு செருப்புக்கு ஈந்தான்
விரைமலர்த் தாளின் வீழ்ந்தான்.

பொ :—அந்தச் சமயத்தில், ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த தேவர்கட்கு அரசனான இந்திரனை வென்றவனாகிய இந்திரசித்தினை வதைத்த இளங்காளை போன்றவனாகிய இலக்குவன், விரைந்து செல்லும் குதிரையும் யானையும் தேரும் ஆகிய ஊர்திகளையும் பிற சிறப்புகளையும் தோலின் வேலைப்பாடு அமைந்த பாதுகைகளுக்குக் கொடுத்தவனாகிய பரதனுடைய மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற பாதங்களில், தன் அழகிய பொன்னிறமான சடையாகிய முடி கீழ்ப்பொருந்துமாறு வீழ்ந்து வணங்கினான்.

கு :—சடைமுடி யடியதாக வீழ்ந்தான் என இயையும். கோமற் கட்டவற்படுத்த என்புழி இரண்டனுருபு உயர்திணைப் பெயரிடத்துத் தொக்குவந்தது. அமரர் கோமானைக்கட்டவன் இந்திரசித்து. இந்திரசித்தினைப் படுத்தகாளை இலக்குவன். இலக்குவனுக்கு இந்திரசித்தினை வென்ற பெருமையும் பரதனுக்கு ஊர்தியும் பிறவுமாகிய சிறப்புகளைப் பாதுகைக்குக் கொடுத்த பெருமையும் உண்டு என்பதைப் புலப்படுத்தி, இலக்குவனது வீரப் பெருமையினும் பரதனது வேண்டாமையாகிய ஞானப் பெருமை உயர்ந்ததாதலை நிறுவியவாறு. தனக்கென ஒன்றும் வேண்டாது இராமன் பாதுகைக்கே எல்லாப் பெருமையையும் கொடுத்துவிட்டுத் துறவியாக வாழ்ந்தவன் பரதன் என்பதை இங்கு நினைப்பித்தவாறு. (347)

இச்செய்யுளின் பின் சில பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது :—

10442 (1) நீடுவே லேற்றவற் கினைய நின்மலன்
வாடிய மனத்தனுய் வசிட்டன் முன்வரச்
சூடிய கடிமலர் தூவி யார்த்தனன்
ஏடவிழ் தாமரை யிறைஞ்சி யெய்தினுன்.

10443. ஊடுறு கமலக் கண்ணீர்
திசைதொறுஞ் சிவிறி யோடத்
தாடொடு தடக்கை யாரத்
தழுவினன் றனிமை நீங்கிக்
காடுறைந் துலேந்த மெய்யோ
கையறு கவலே கூர
நாடுறைந் துலேந்த மெய்யோ
நைந்ததென் றுலக நைய.

ஊடுறு கமலக் கண்ணீர்
திசைதொறும் சிவிறி ஓட
தாள்தொடு தடக்கை ஆரத்
தழுவினன் — 'தனிமை நீங்கி
காடுஉறைந்து உலேந்த மெய்யோ,
கையறு கவலே கூர
நாடு உறைந்து உலேந்த மெய்யோ,
நைந்தது?' என்று உலகம் நைய.

பொ:—(அவ்விருவரையும் கண்ட) உலகத்தார், ''(இவ் விருவர் உடம்புகளில்) இராமனைப் பிரிந்து தனித்திருத்தலே நீங்கி இராமனேடு காட்டில் தங்கி வருந்திய உடம்போ, (இராமனது பிரிவால்) யாரும் செயலறுதற்குக் காரணமான கவலே மிக நாட்டில் (தனித்துத்) தங்கி வருந்திய உடம்போ எது மிகவும் மெலிந்தது?'' என்று கூறி வருந்தா நிற்க, தன் தாமரை மலர் போன்ற கண்களினின்று பெருகும் நீர், திசைகள் தோறும் பரவியோட (ப்பரதன்) தன் முழந்தாளேத் தொடுமாறு நீண்டுள்ள பெரிய கைகள் ஆர இலக்குவனைத் தழுவினுன்.

கு:—உலகம் நைய, கண்ணீர் திசைதொறும் சிவிறியோட, தடக்கையாரத் தழுவினன் என இயையும். காட்டில் சென்று வருந்தியும் இராமனைப் பிரியாதிருந்த இலக்குவன் உடம்பைக்

காட்டுலும் நாட்டில் வாழ்ந்தும் இராமனைப் பிரிந்து வருந்திய பரதனுடம்பே மிகவும் மெலிந்திருந்தது என்பதைக் குறிப்பால் புலப்படுத்தியவாறு. பரதன் இலக்குவனைத் தழுவும் போது அவ்விருவர் உடம்புக்கும் உள்ள மெலிவு வேறுபாட்டைக் கண்டு உலகவர் வருந்தினார்கள் என்க. உலைதல்—வருந்துதல். சிவிறி—பரவி. உத்தம இலக்கண முடைய ஆடவர்தம் கைகள், முழந்தாளைத் தொடும் அளவிற்கு நீண்டிருத்தல் இயல்பு. 'கமலக்கண்ணனூடுறு நீர்' எனமாறுக. (348)

இச்செய்யுளின் பின் 23, 29, 43, 44 என்ற எண்ணுள்ள பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10443 (1) இலக்குவன் பரதன் றாளில்
இறைஞ்சிட எடுத்துப் புல்லிப்
பலக்குறை வின்றி நாங்கள்
பதியினி லினிது வாழச்
சிலைக்குறி தவருன் பின்னைச்
செவ்வழற் கானஞ் சென்று
நலக்குறி யுடையை நம்பி
நீயென நயந்து சொன்னான்.

,, (2) மந்தர வெற்பைச் செம்பொன்
மால்வரை யதனை மாசில்
இந்தணி முடியா னேங்கல்
இறைஞ்சிய தாகு மென்ன
வெந்தழற் கானஞ் சென்று
மீண்டவ ரிருவர் தாளில்
சந்தணி மாலைத் திண்டோர்ச்
சத்துருக் கன்றான் வீழ்ந்தான்.

,, (3) விரதனைப் பரதன் மேவ
மெல்லியற் கமரி லீந்த
வரதனை வாய்மை குன்றா
மன்னவன் வான மேகத்
திரதனை யுலகம் யாவும்
தீநெறி புகாமற் காத்த
சரதனீ யாகு மென்று
தம்பியைத் தழுவிக் கொண்டான்.

## சத்துருக்கன் வணக்கம்

10444. மூவர்க்கு மிளைய வள்ளன்
முடிமிசை முகிழ்த்த கையன்
தேவர்க்குந் தேவன் றாளுஞ்
செறிகழ லிளவ லாளும்
பூவர்க்கம் பொழிந்து வீழ்ந்தா
னெடுத்தனர் பொருந்தப் புல்ல
வாவிக்கு ளன்ன மன்னாள்
மலரடித் தலத்து வீழ்ந்தான்.

மூவர்க்கும் இளைய வள்ளல்
முடி மிசை முகிழ்த்த கையன்,
தேவர்க்கும் தேவன் தாளும்,
செறிகழல் இளவல் தாளும்,
பூவர்க்கம் பொழிந்து வீழ்ந்தான்;
எடுத்தனர் பொருந்தப் புல்ல,
வாவிக்குள் அன்னம் அன்னாள்
மலர் அடித்தலத்து வீழ்ந்தான்.

பொ:—இராமன், பரதன், இலக்குவன் என்ற மூவர்க்கும் இளைய வள்ளலாகிய சத்துருக்கன் தலைமேல் குவித்த கைகளை யுடையவனாய்ச் சென்று தேவர்கட்கும் தேவனான இராமன் பாதங்களிலும், வீரக்கழல் கட்டியுள்ள இளவலாகிய இலக்குவன் பாதங்களிலும் மலர் இனங்களைச் சொரிந்து வணங்கினான்; அவ்விருவரும் அவனைத் தூக்கி அன்பினால் அணைத்துக் கொள்ள, (பின்பு) நீர் நிலையில் வாழும் அன்னப் பறவை போன்றவளாகிய சிதையின் தாமரை மலர் போன்ற பாதங்களில் வீழ்ந்து வணங்கினான்.

கு:—முகிழ்த்தல்—குவித்தல். இராமன் திருமாலின் அமிசம் ஆதலின், 'தேவர்க்கும் தேவன்' என அவனைக் குறித்தார். வாவி—நீர்நிலை; குளம். (349)

இச்செய்யுளின் பின் 71-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகின்றது:—

10444 (1) தங்கையர் மூவர் தங்கள்
உயிர்வந்த தன்மைத் தென்னப்
பங்கயச் செல்வி பாதம்
பணிந்தன ரெழுந்து நின்று
செங்கையாற் றழுவிக் கண்ணீர்
சிந்தின ராறு போல
அங்கவ டானும் கண்ணீ
ருகுத்தனள் தழுவி யன்பால்.

*இராமன் சத்துருக்கனைத் தழுவிக்கொண்டு தன் தம்பிமார்கட்குச் சுக்கிரீவன் முதலிய நண்பர்களை அறிமுகப்படுத்தல்*

10445. பின்னிணைக் குரிசி றன்னைப்
பெருங்கையால் வாங்கி வீங்கும்
தன்னிணைத் தோள்க ளாரத்
தழுவியத் தம்பி மாருக்
கின்னுயிர்த் துணைவர் தம்மைக்
காட்டினு னிருவர் தாளும்
மன்னுயிர்க் குவமை கூர
வந்தவர் வணக்கஞ் செய்தார்.

பின் இணைக் குரிசில் தன்னைப்
பெருங்கையால் வாங்கி, வீங்கும்
தன் இணைத் தோள்கள் ஆரத்
தழுவி, அத்தம்பி மாருக்கு
இன் உயிர்த் துணைவர் தம்மைக்
காட்டினுன்; இருவர் தாளும்,
மன் உயிர்க்கு உவமை கூர
வந்தவர், வணக்கம் செய்தார்.

பொ :—தனக்கு நேர் தம்பியாகிய பரதனோடு இணைந்து வாழும் சத்துருக்கனை (இராமன்) தன் பெரிய கைகளால் தூக்கிப் பருத்துள்ள தன் இரண்டு தோள்கள் ஆரத்தழுவிக் கொண்டு, அவ்விரு தம்பியர்க்கும் இனிய உயிர்போன்ற தன் நண்பர்களை அறிமுகப்படுத்தினுன்; அவனது நிலைபெற்ற

உயிர்க்கு உவமை பொருந்துமாறு உடன்வந்த அச்சுக்கிரீவன் முதலியோர் அப்பரத சத்துருக்கர் பாதங்கட்கு வணக்கம் செய்தார்கள்.

கு:—இன்னுயிர்த் துணைவர் என்றது வீடணன் சுக்கிரீவன், குகன் என்போரை. உவமைகூர்தல், உவமைத்தன்மை சிறத்தல். இராமன் உயிர் போன்றவர்கள் என்றவாறு. இருவர் என்றது பரத சத்துருக்கனரை. (350)

இச்செய்யுளின் பின் 23, 29, 43, 44-ஆம் பிரதிகளில் பின் வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன:—

10445 (1) தத்துற லொழிந்து நின்ற
பரதனும் தம்பி மாரும்
சித்திரப் பாவை யன்ன
சீதைதாள் திசையிற் ரூழ்ந்தார்
நித்திரை பயந்த முன்னேன்
பரதன்தாள் வீழ்ந்தான் வீரச்
சத்துருக் கனுந்தன் முன்னேன்
தாமரைச் சரணந் தாழ்ந்தான்.

,, (2) கோடையில் வறண்ட மேகக்
குலமெனப் பதினு லாண்டு
பாடுறு மதஞ்செ யாத
பணைமுகப் பருமயானைக்
காடுறை யண்ண லெய்தக்
கடாந்துறந் துருத்த வாரி
ஓடின வுள்ளத் துள்ளக்
களிநிறைந் துடைத்த வேபோல்.

,, (3) துருவித்தார்ப் புரவி யெல்லா
மூங்கையான் சொற்பெற் றென்ன
வரவப்போர் மேக மஞ்ச
வாலித்த மரங்க ளான்ற
பருவத்தாற் பூத்த வென்னப்
பூத்தன பகையிற் சீறும்
புருவத்தார் மேனி முற்றும்
பொன்னிறப் பசலை பூத்த.

10445 (4) மிகநான் மறைக்கு மீதான
விமல மலர்த்தாள் வினையேன்கண்
டகநான் மகிழ்ந்து பிறப்பிறவா
வரந்தா னளித்த தாமென்று
குகனுர் தாம்வந் திறைஞ்சவெதிர்
கோமான் றழுவிக் கொளவிருவர்
முகநாண் மலருந் தருக்கியது
மொழியும் படிக்கு முடியாதே.

வேறு

,, (5) முற்பட்ட நானுனைக் கண்ட நாண்முதல்
பிற்பட்ட யான்செய்த பிறழ்ச்சி யீதெனக்
கொற்பட்ட வூழியான் எவையுங் கூறிட
விற்பட்ட கரத்தன்கேட் டுளம்வி ரும்பினுன்.

,, (6) உந்திய கவிப்படை யுள்ள வெள்ளமும்
நிந்தையி லிலங்கைமன் னிருந்த வெள்ளமும்
வெந்திறற் குகன்படை வெள்ளமு முடன்
அந்தமி லயோத்திவந் தணுகி னுரரோ.

23, 25, 25, 19, 40, 41, 45, 52 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படுகிறது:—

,, (7) ஆயிடைக் குகனும் வந்தாங்
காண்டவ னடியில் வீழ
நாயக னுவந்து புல்லி
நண்ணியென் பின்பு வந்த
தூயனே கிளையி னேடுஞ்
சுகமிருந் தனையோ வென்று
வாய்மொழிந் தருளி னுனம்
மறைகளும் காணு வள்ளல்.

பரதன், சுக்கிரீவன் முதலியோரைப் பாராட்டுதல்

10446. குரக்கினத் தரசைச் சேயைக்
குமுதனைச் சாம்பன் றன்னைச்
செருக்கிளர் நீலன் றன்னை
மற்றுமத் திறத்தி னேரை

அரக்கருக் கரசை வெவ்வே
றடைவினின் முதன்மை கூறி
மருக்கமழ் தொடையன் மாலே
மார்பினன் பரத னின்ருன்.

குரக்கினத்து அரசை, சேயை,
குமுதனே, சாம்பன் தன்னே,
செருக்கிளர் நீலன் தன்னே,
மற்றும் அத்திறத்திஞேரை,
அரக்கருக்கு அரசை, வேவ்வேறு
அடைவினின் முதன்மை கூறி
மருக்கமழ் தொடையல் மாலே
மார்பினன், பரதன், நின்ருன்.

பொ :—மணங் கமழ்கின்ற மலர் கொண்டு தொடுத்தலே யுடைய மாலேயை யணிந்த மார்பனுகிய பரதன், குரங்கினங் கட்கு அரசனுகிய சுக்கிரீவனேயும், அவன் மகனுகிய அங்கதனே யும், குமுதனேயும், போரில் கிளர்ந்தெழும் நீலனேயும் மற்றும் அவர்போன்ற தன்மையரையும், அரக்கருக்கு அரசனுகிய வீடணனேயும் (பார்த்து) வெவ்வேறு முறையில் ஒவ்வொரு வர்க்கும் முதன்மையுள்ளதாகச் சொல்லிப் பாராட்டி நின்ருன்.

கு :—இராமபிரானுக்கு உதவி செய்ததில் சுக்கிரீவன் முதலிய ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொருவகையில் முதன்மையுண்டு என்று அவர்களேப் பரதன் பாராட்டிக் கூறினுன் என்றவாறு. (351)

சுமந்திரன் இராமனே வரவேற்க வருதல்

10447. மந்திரச் சுற்றத் துள்ளார்
தம்மொடும் வயங்கு தானேத்
தந்திரத் தலேவ ரோடுந்
தமரொடுந் தரணி யாளும்
சிந்துரக் களிறு போல்வா
ரெவரொடுஞ் சேனே யோடும்
சுந்தரத் தடந்தோள் வெற்றிச்
சுமந்திரன் ருேன்றி ஞனல்.

மந்திரச் சுற்றத்துள்ளார்
தம்மொடும், வயங்கு தானைத்
தந்திரத் தலைவரோடும்,
தமரொடும், தரணி ஆளும்
சிந்துரக் களிறு போல்வார்
எவரொடும், சேனையோடும்,
சுந்தரத் தடந்தோள் வெற்றிச்
சுமந்திரன் தோன்றினால்.

பொ :—அழகிய பெரிய தோள்களையும் வெற்றியையும் உடைய சுமந்திரன்,—ஆலோசனை கூறும் இனமாக உள்ள மந்திரிமார்களோடும், விளங்குகின்ற சேனைத் தலைவரோடும், தன் சுற்றத்தாரோடும், உலகை ஆள்கின்ற, சிந்துரம் அணிந்த யானை போல்வாராகிய, மன்னர்களோடும், சேனையோடும் வந்து தோன்றினான்.

கு :—சுமந்திரன் இராமனை வரவேற்க வந்து தோன்றியதை யுணர்த்தியவாறு. (352)

வந்த சுமந்திரனை இராமன் தழுவுதல்

10448. அழுகையு முவகை தானுந்
தனித்தனி யமர்செய் தேறத்
தொழுதன னெழுந்து விம்மிச்
சுமந்திர னிற்ற லோடும்
தழுவின னிராமன் மற்றைத்
தம்பியு மனைய நீரான்
வழுவினி யுளதன் றிந்த
மாநிலக் கிழத்திக் கென்றான்.

அழுகையும் உவகைதானும்
தனித்தனி அமர்செய்து ஏற,
தொழுதனன், எழுந்து விம்மி,
சுமந்திரன் நிற்றலோடும்,
தழுவினன் இராமன்; மற்றைத்
தம்பியும் அனைய நீரான்;

'வழுஇனி உளதன்று, இந்த
மாநிலக்கிழத்திக்கு ; என்ருன்.

பொ :—சுமந்திரன், தன்பால் அழுகையும் மகிழ்ச்சியும் தம்முள் போர்செய்து தனித்தனி மேற்பட்டுத் தோன்றத்தொழுது எழுந்து தேம்பிக்கொண்டு நின்ற அளவில், இராமன் அச்சுமந்திரனைத் தழுவினுன்; தம்பி இலக்குவனும் அவ்வாறே தழுவினுன்; (இருவராலும் தழுவப்பெற்ற சுமந்திரன்) 'இனி, இந்தப்பெரிய நிலமகளுக்குத் துன்பம் உண்டாகாது' என்று பாராட்டினுன்.

கு :—நாடாள வேண்டிய இராமன் காடு சென்று கடுந்துயர் எய்த நேர்ந்தமை நினைந்து அழுகையும், அரக்கரை அழித்த வெற்றியோடு திரும்பியதை நினைந்து மகிழ்ச்சியும் சுமந்திரனுக்கு மாறி மாறித் தோன்றிற்று என்பார், 'தனித்தனி அமர் செய்து ஏற' என்ருர். தொழுதனன், முற்றெச்சம். இராமனும் இலக்குவனும் உலகை நலிவு செய்துவந்த அரக்கரை வென்று அயோத்திக்கு வந்து அரசாளப் போவதால் 'வழுவினி யுளதன் றிந்த மாநிலக் கிழத்திக்கு' எனச் சுமந்திரன் பாராட்டுவானுனுன். ''நிவப்புறு நிலனெனு நிரம்பு நங்கையும் சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும், உவப்புறு கணவனை உயிரினெய்திய, தவப் பயன் தாழ்ப்பது தருமமன்றரோ'' (மந்திரப்-29) எனத் தயரதன் கூறியது இங்கு நினைத்தற் குரியதாகும். (353)

இச்செய்யுளின் பின் 45, 52 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது:—

10448 (1) வேறுவே றுள்ள சுற்றத் தவர்களும் வேந்தராதி
கூறிய குழுவி னேரும் குழுமியங் கிராமன்பாதம்
ஊறிய வுவகை தூண்டத் தொழுதனர் உவந்தஅன்பு
தேறிய கமலக் கண்ணன் திருநகர்க் கெழுதலுற்ருன்.

### இராமன் ஏவலின்படி வரவேற்க வந்த சேனையெல்லாம் விமானத்தில் ஏறி இராமனை வணங்குதல்

10449. ஏறுக சேனை யெல்லாம்
விமானமீ தென்று தன்போல்
மாறிலா வீரன் கூற
வந்துள வனிக வெள்ளம்

ஊறிரும் பரவை வானத்
தெழிலியு ளொடுங்கு மாபோல்
ஏறிமற் றிணைய வீரன்
இணையடி தொழுத தன்றே.

'ஏறுக சேனை எல்லாம்
விமான மீது' என்று தன்போல்
மாறு இலா வீரன் கூற,
வந்துள அனிக வெள்ளம்
ஊறு இரும் பரவை வானத்து
எழிலியுள் ஒடுங்குமாபோல
ஏறி, மற்று இணைய வீரன்
இணையடி தொழுதது அன்றே.

பொ:—'(வரவேற்க வந்த) சேனை எல்லாம் விமானம் மீது ஏறுக' என்று தன்னை யொப்பார் பிறர் இல்லாத வீரனாகிய இராமன் சொல்ல, (சுமந்திரனோடு) வந்துள்ள சேனை எல்லாம், சுரக்கும் தன்மையுள்ள கடல் வானத்திலுள்ள மேகத்துள் ஒடுங் குவது போல, ஏறி, இத்தகைய வரவேற்பளித்த இராமன் இரு பாதங்களைத் தொழுதது.

கு:—சுமந்திரன் விமானத்தில் ஏறி இராமனை வணங்கிய பின் அவனொடு வந்த சேனையெல்லாம் தரையில் நிற்பது கண்ட இராமன் அருளினால் பார்த்து 'ஏறுக சேனையெல்லாம்' என்று மொழிந்தானாக, கடல் போன்ற அச்சேனை விமானத்தில் ஏறி, இவ்வாறு அருட்கட்டளையிட்ட இராமனைத் தொழுதது என்க. இராமன், தன்னோடு ஒப்பாக விமானத்தில் வீற்றிருக்கச் செய்த அருட்டன்மையை நினைப்பிக்க 'இணைய வீரன்' எனச் சுட்டிய வாறு. தரையிலிருந்து சேனை கடல் போன்றது எனவும், அச் சேனை விமானத்தில் ஏறியமர்ந்தது, அக்கடல் மேகத்துள் ஒடுங் கியது போன்றது எனவும் கொள்க. இல்பொருளுவமை. மேகம் போன்றது விமானம். (354)

தேவர்கள் புட்பக விமானத்தைப்புகழ்ந்து பூமாரி பொழிதல்

10450. உரைசெயி னுலக முண்டான்
மணியணி யுதர மொவ்வா

கரைசெய லரிய வேதக்
குறுமுனி கையு மொவ்வா
விரைசெறி யலங்கன் மாலைப்
புட்பக விமான மென்றென்
றுரைசெய்து வானு ளோர்க
ளொண்மலர் தூவி யார்த்தார்.

'உரைசெயின் உலகம் உண்டான்
மணி அணி உதரம் ஒவ்வா,
கரைசெயல் அரிய வேதக்
குறுமுனி கையும் ஒவ்வா,
விரைசெறி அலங்கல் மாலைப்
புட்பக விமானம்' என்று என்று,
உரைசெய்து வான் உளோர்கள்
ஒண்மலர் தூவி ஆர்த்தார்.

பொ :—மணம் பொருந்திய மாலைகள் வரிசையாகத் தொங்க விடப்பட்டுள்ள புட்பக விமானம், (இத்துணைப் பேரையும் தன்னுள் கொண்டுள்ளமையால்) உவமை சொல்லுமிடத்து, உலக முழுமையும் உண்ட திருமாலின், கவுத்துவ மணியணிந்த, வயிறு ஒப்பாகாது; எல்லை சொல்ல இயலாத வேதங்களை யுணர்ந்த அகத்திய முனிவனுடைய, கடல் நீர் முழுமையையும் முகந்துகொண்ட கையும் ஒப்பாகாது; என்று பன்முறை சொல்லித் தேவர்கள் ஒளிவாய்ந்த கற்பக மலர்களை அவ்விமா னத்தின் மேல் தூவி ஆரவாரித்தார்கள்.

கு :—மணமிக்க மலர்மாலைகளைத் தன்னகத்தே கொண்டமை யால் 'புட்பக விமானம்' என்று பெயர்பெற்றது என்ற குறிப்பும் பெறப்பட 'விரைசெறி யலங்கல் மாலைப் புட்பகம்' என அடை மொழி கொடுத்துச் சிறப்பித்த நயம் காண்க. அலங்கல்—மாலை. மாலை—வரிசை. மலர் மாலைகளின் வரிசையையுடைய விமானம் என்றவாறு. ஊழியிறுதியில் உலக முழுவதையும் உண்டு திருமால் ஆலிலையில் பள்ளி கொள்வார் என்பது புராணகதை. ''உறுபசி யொன்றின்றியே யுலகடைய வுண்டனையே'' (சிலப்-17, 33) என்றது காண்க. அப்போது திருமாலின் வயிற் றில் உலக முழுமையும் இருந்ததே யன்றி அங்குத் திருமால்

இல்லை ஆதலின் உலகுயிர்கள் அனைத்தையும் திருமாலின் அமிச மான இராமனையும் தன்னுள் கொண்டுள்ள புட்பகத்திற்கு ஒப்பாகாதாயிற்று. கடல் நீர் முழுமையும் அடக்கிய அகத்தியர் கை, திருமாலையும் சேர்த்து அடக்காமையால், சேனைக்கடலை யும் திருமாலின் அமிசமான இராமனையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள புட்பகத்திற்கு உவமையாகாதாயிற்று. (355)

விமானத்துள் முரசமுதலியவற்றின் முழக்கம்

10451. அசனியின் குழுவு மாழி
யேழுமொத் தார்த்த தென்ன
விசியுறு முரசும் வேதத்
தோதையும் விளிகொள் சங்கும்
இசையுறு குழலு மேத்தி
னரவமு மெழுந்து பொங்கித்
திசையுறச் சென்று வானோ
ரந்தரத் தொலியிற் றீர்ந்த.

அசனியின் குழுவும் ஆழி
ஏழும் ஒத்து ஆர்த்தது என்ன,
விசியுறு முரசும், வேதத்து
ஓதையும், விளிகொள் சங்கும்,
இசையுறு குழலும், ஏத்தின்
அரவமும், எழுந்து பொங்கி,
திசை உறச் சென்று, வானோர்
அந்தரத்து ஒலியின் தீர்ந்த.

பொ :—வாரால் விசித்துக் கட்டப்பட்ட முரசின் ஒலியும், வேதம் ஓதும் ஓசையும், பேரொலியைக் கொண்டுள்ள சங்கின் ஓசையும், இசை நுட்பங்கள் பொருந்திய குழலின் ஓசையும், துதிப்பாடல்களின் ஒலியும், இடியின் கூட்டமும் ஏழுகடலும் ஒருங்கே சேர்ந்து ஆரவாரித்தாற் போல, மிக்கெழுந்து பரவித் திசைகளின் எல்லைவரையில் பொருந்தச் சென்று, தேவர்கள் விண்ணிலிருந்து கூறும் இராமனைப்பற்றிய வாழ்த்து ஒலியினால் அடங்கின.

கு :—விமானத்திலிருந்து எழுப்பும் முரசு முதலியவற்றின் ஒலியினும், அந்தரத்தில் தேவர்கள் இராமனைப் பற்றிக் கூறும் வாழ்த்தொலி மிக்கிருந்தது என்பது கருத்து. அசனி—இடி. ஆர்த்ததென்ன எழுந்து பொங்கி என இயையும். சங்கு கொள் விளியும், குமுலுறு இசையும், என மாற்றிப் பொருள் கொள்ளலும் ஆம். விசித்தல்—இறுக்கிக் கட்டுதல். ஆர்ப்பு, ஓதை, அரவம், ஒலி என்ற ஒரு பொருள் குறித்த பல சொற்கள் பயின்றமையால் இது பொருட்பின்வருநிலையணி எனப்படும். ஒலியின் என்புழி இன் ஏதுப்பொருளது. தீர்தல், இங்கு அடங்குதலை யுணர்த்தியது. விமானத்திற்குள் எழுந்த முரச முதலியவற்றின் ஒலி இடிக்கூட்டத்தின் பேரொலி போலவும் ஏழு கடல்களின் பேரொலி போலவும் இருந்தது என்க. (356)

இச்செய்யுளின் பின் 19, 21, 23, 41, 45, 52 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10451 (1) மூன்றென நின்ற தன்மைக்
குணங்களி னுயர்ச்சிக் கெல்லாம்
சான்றென நின்ற மானச்
சிறுவனைத் தலைப்பட் டாட்குத்
தோன்றிய வுவகைக் காங்கோர்
எல்லையுஞ் சொல்லற் பாற்றே
ஈன்றபோ தொத்த தன்றே
யெதிர்ந்தபோ தொத்த தன்மை.

,, (2) இணைமலர்த் தாளின் வீழ்ந்த
விலக்குவன் றன்னை யேந்திப்
பணைமுலைப் பாலுங் கண்ணீர்த்
தாரையும் பாய நின்றாள்
பிணையெனத் தகைய நோக்கிற்
சீதையைப் பேடை யன்னத்
துணையினை யுலகிற் கற்பின்
பெருங்கதித் துறையைக் கண்டாள்.

,, (3) நான்முகன் தாதை தான்தன்
மகனென்று நல்கி விம்மிப்
பான்முலை சோர நின்ற
பல்பெருந் தவத்தி னாளைக்

காண்முதற் றெழுது தங்கள்
கட்டிரும் பாவம் விட்டார்
மாண்முய லுருவத் தோடும்
தோன்றிய வானோ ரெல்லாம்.

சில பிரதியில் இப்பாடலுக்குப் பின் திருமுடி சூட்டு படலத்து ''நம்பிய'' (1) ''ஊழியின்'' (3) ''ஆயதோர்'' (11) என்ற பாடல்கள் இருக்க, பின் நகர்புகு படலம் முடிகின்றது. ஒரு பிரதியில் இச் செய்யுள் நான்கும் ''ஆனதோர்'' (358) என்ற பாடலின் பின் உள்ளன. இவற்றின் பின் திருவடிசூட்டு படலத்து ஆறும் பாடலுக்குப் பின்புள்ள ''எழுவகை'' என்ற பாடலும் ''ஆயதோர்'' (11) என்ற பாடலும் இருக்க, பின்பு நகர்புகு படலம் முடிகின்றது. இவற்றில் எல்லாம் 357, 358 பாடல்கள் இல்லை.

*விமானம் அயோத்திநோக்கிச் செல்லும் தோற்றம்*

10452. அவ்வயின் விமானந் தாவி
யந்தரத் தயோத்தி நோக்கிச்
செவ்வையிற் படர லுற்ற
செகதல மடந்தை யோடும்
இவ்வுல கத்து ளோர்க
ளிந்திர ருலகு காண்பான்
கவ்வையி னேகு கின்ற
நீர்மையைக் கடுக்கு மன்றே.

அவ்வயின் விமானம் தாவி,
அந்தரத்து, அயோத்தி நோக்கி,
செவ்வையின் படரல் உற்ற;
செகதல மடந்தை யோடும்,
இவ்வுலகத்து உளோர்கள்
இந்திரர் உலகு காண்பான்,
கவ்வையின் ஏகுகின்ற
நீர்மையைக் கடுக்கும் அன்றே.

பொ :—அவ்விடத்தினின்று விமானம் விண்ணில் எழுந்து அயோத்தி நகரத்தை நோக்கிநேராகச் சென்றது ; அது இந்த மண்ணுலகத்தில் உள்ளவர்கள் (தாம் வதிகின்ற) பூமியாகிய பெண்ணேடும் இந்திரன் உலகத்தைச் காண்பதற்காக ஆரவாரத் தோடு செல்கின்ற தன்மையை ஒக்கும்.

கு :—விமானம் பூமி போன்றது; அயோத்தி நகரம் இந்திர னுலகு போன்றிருந்தது என்க. கவ்வை—ஆரவாரம். நீர்மை- தன்மை. கடுக்கும்—ஒக்கும். அன்று ஏ அசைகள். விமானத்தி லுள்ளோர் மகிழ்ச்சியும் அயோத்தி நகரின் உயர்ச்சியும் புலப் படுத்தியவாறு. அயோத்தி நோக்கிச் செல்லும் விமானம் இந்திரனுலகு காணச்செல்லும் பூவுலகம் போன்றது என்றது, தற்குறிப்பேற்றம். (357)

இச்செய்யுளின் பின் 52 ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10452 (1) வளங்கெழு கயிலை யீசன்
மலரயன் மறைகள் நான்கும்
ஒழுங்குறு மமரர் ஆதி
உயிர்களும் உணர்தற் கெட்டா
விளங்கு தத்துவக்கள் மூன்றும்
கடந்துயர் வெளிப்பாழ் மேலாய்,
விடங்குறும் நேமிப் புத்தேள்
மேவுமா அயோத்தி கண்டார்.

,, (2) விளங்கிய புட்பக நிலத்தின் மீதுற,
தொழுந்தகை யமரர்கள் துள்ளி ஆர்த்திட
களங்கனி யணையவக் கண்ணன் மாதொடும்
விளங்கினன் நகரிடை விளைவு கூரவே.

,, (3) புகுந்தனர் நகரிடை பொங்கு மோகையின்
மிகுந்துள கவிப்பெருங் கடலும் மேதகு
மகம்பயில் முனிவனு மற்று ளோர்களும்
அகந்தனி லருங்களிப் பெழுந்து துள்ளவே.

,, (4) நம்பியும் வசிட்டன் கூற
நந்தியம் பதியில் சென்று

வம்பியல் சடையு மாற்றி,
மயிர்வினை முற்றி மாதோடு
இம்பரி னெவரு மேத்த
ஈர்ம்புனல் படிந்த பின்னர்
உம்பரு முவகை கூர
ஒப்பனை ஒப்பச் செய்தார்.

10452 (5) உயிர்வரு முலவை யன்ன
பரதனை யிளவ லோடும்
மயிர்வினை செய்வித் தாங்கே
மாசற மண்ணில் தாழும்
செயிரறு சடிலக் கற்றைத்
திரளறக் களைந்து நீக்கி
குயில்புரை மொழியார் ஆவி
கொள்வதோர் கோலங் கொண்டார்.

விமானம் நந்திக்கிராமத்தை யடைதல்

10453. ஆனதோ ரளவையி னமரர் கோனொடும்
★ வானவர் திருநகர் வருவ தாமென
மேனிறை வானவர் வீசும் பூவொடும்
தானுயர் புட்பக நிலத்தைச் சார்ந்ததால்.

ஆனது ஓர் அளவையின் அமரர் கோனொடும்
வானவர் திருநகர் வருவதாம் என,
மேல் நிறை வானவர் வீசும் பூவொடும்
தான் உயர் புட்பகம் நிலத்தைச் சார்ந்ததால்.

பொ :—அந்தச் சமயத்தில் (எல்லாவற்றினும்) உயர்வுடைய புட்பக விமானம், தேவேந்திரனோடும் தேவர் உலகம் தரையில் வருவது போல, விண்ணில் நிறைந்துள்ள தேவர்கள் சொரியும் மலர்களோடு தரையை யடைந்தது.

கு :—இராமனோடு வந்த புட்பக விமானம் இந்திரனோடு வரும் இந்திர உலகம் போன்றது எனச் சிறப்புப்பற்றி உவமித்த வாறு. நிலம் என்றது இங்கு நந்தியம்பதியை. 'நம்பியப் பரத நந்தியம்பதியை நண்ணி' என அடுத்த படலம் தொடங்குவ னோடு,தால் இதனை யறியலாம். (358)

ஒரு பிரதியில் இந்தச் செய்யுள் உள்ள இடத்தில் பின்வரும் செய்யுள் உள்ளது: —

10453 (1) அவ்வயி னயோத்தி வைகும்
கனமுட னக்கு ரோணி
தவ்விலா வாறு பத்தா
யிரரொடுந் தாய ரோடும்
இவ்வயி னடைந்து ளோரைக்
காணவென் றிராம னெண்ணத்
திவ்விய விமானம் வந்து
நந்தியம் பதியைச் சேர்ந்த.

சில மாறுதல்களுடன் இப்படலத்து 335 ஆம் பாடலாக ஆனதோர் என்ற பாடல் உள்ளது.

மீட்சிப் படலம் முற்றிற்று.

# 38. திருமுடி சூட்டு படலம்.

இராமன் அயோத்திக்கு மீண்டு வந்து திருமுடி சூட்டிக் கொண்டதைத் தெரிவிக்கும் பகுதி ஆதலின் இது 'திருமுடி சூட்டு படலம்' எனப் பெயர்பெறுகின்றது. சில சுவடிகளில் இப்படலம் நகர்புகு படலம், திருமுடி சூட்டு படலம் என இரண்டாகப் பிரிந்தும் காணப்படுகின்றது. சில ஏடுகளில் இப்படலப் பெயர் திருவபிடேகப் படலம் என்றும் காணப்படுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்.

நந்தியம்பதியை நண்ணிய இராமன், தனது சடைமுடியை நீக்கிக் கொண்டு தண்ணீரில் மூழ்கியபின் ஒப்பனை செய்து கொண்டு தம்பிமார் பணி செய்யத் துணைவர்கள் சூழ்ந்துவரத் தேரில் ஏறிக்கொண்டு வானவர் மலர்மாரி பொழிய, மக்கள் ஆரவாரிக்க, வாச்சியங்கள் முழங்க அயோத்தி நகரையடைகின்றான்; சீதையும் வானர மகளிர் சூழ விமானத்தில் ஏறி உடன் சென்று சேர்கின்றாள். அயோத்தி நகரத்து மக்கள் அனைவரும் பெருமகிழ்ச்சியில் ஆழ்கின்றனர். தன் அரண்மனையைச் சேர்ந்த இராமன் சுக்கிரீவன் முதலியோர்க்கு இட்சுவாகுவின் கோயிலைக் காட்டுமாறு பரதனுக்குப் பணிக்க, அவ்வாறே பரதன் அக்கோயிலின் சிறப்புகளையெல்லாம் சுட்டிக்காட்டக் கண்ட வீடணன் முதலியோர் வியப்புற்று மற்றொரு மண்டபத்தைப் பார்த்து நிற்க, சுக்கிரீவன் பரதனை நோக்கி, 'இராமன் முடி சூட்டு விழாவைப்பற்றிச் சிந்திக்காமலிருத்தற்குக் காரணம் என்னை?' என்று வினவுகின்றான். பரதன், 'தொலைவில் பல திசைகளிலுமுள்ள கடல் தீர்த்தம் வருதற்கு அரிதாக இருப்பதே காரணம்' என்ன, சுக்கிரீவன் அனுமனை நோக்குகின்றான். அவன் குறிப்புணர்ந்த அனுமான் உடனே தீர்த்தம் கொணரப் புறப்படுகின்றான். பின்பு பரதன், வசிட்டமுனிவர் முதலியோரைக் கொண்டு முடிபுனை நாளை நிச்சயித்து யாவர்க்கும் செய்தியனுப்புகின்றான். முடி சூட்டு விழாவிற்காக மயன் ஒரு சிறந்த மண்டபம் அமைக்கின்றான். அனுமன் தீர்த்தங்களைக் கொண்டுவந்து சேர்க்கின்றான்.

மன்னவர்கள் பொற்குடங்களில் சரயுநதியின் தீர்த்தத்தைக் கொணர்கின்றனர். இராமன் சீதையோடு பளிங்கு மண்டபத்தில் உயர்மணிப் பீடத்தில் அமர்ந்திருக்க, வசிட்ட முனிவர் முதலிய பெரியோர்கள் புண்ணிய தீர்த்தங்களைக் கொண்டு அவனுக்கு நீராட்டுகின்றனர். மங்கல நீராட்டு முடிந்தவுடன் வசிட்ட முனிவர் மணிமுடி சூட்ட இராமன் மூவுலகும் இனிது வாழ அம் முடியைச் சூடிக் கொண்டு செங்கோல் செலுத்துகின்றான் என்பது இப்படலத்துக் கூறப்படுகிறது.

### கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்: இராமன் புட்பக விமானம் ஊர்ந்து நந்தியம்பதி சேர்ந்தவுடன் தன் குலகுருவாகிய வசிட்டனை வணங்கிவிட்டு அம் முனிவனுக்கு அருகிலிருந்த ஆசனத்தில் அமர்கின்றான். அப்போது பரதன், இராமனை வணங்கி, 'அண்ணலே! என் அன்னை கைகேயி நின்னால் பெருமைபடுத்தப்பட்டாள்; இந்த அரசு நின்னால் எனக்குக் கொடுக்கப்பட்டது; எனக்குக் கொடுத்த அரசை மீள உனக்கே கொடுக்கின்றேன். துணைவேண்டாப் பெருவலிமைபெற்ற ஒரு காளை எருதால் ஒப்புவிக்கப்பட்ட பாரத்தை ஓர் இளங்கன்று எப்படித் தாங்க இயலும்? அதுபோலவே, ஒப்புயர்வற்ற பேராற்றல் படைத்த நின்னால் ஒப்புவிக்கப்பட்ட அரச பாரத்தைச் சிறியேனாகிய யான் எங்ஙனம் ஏற்று நடத்த இயலும்? குதிரையின் வேகத்தைக் கழுதை மேற்கொள்ள வியலாதது போலவும், அன்னத்தின் நடையைக் காக்கை நடந்து காட்ட இயலாதது போலவும் நின் ஆற்றல்மிக்க ஆட்சித்திறனை யான் ஏற்று நடத்திக்காட்ட இயலாதவனாக இருக்கின்றேன். ஒருவனால் வளர்க்கப்பட்ட பழுமரம் நன்கு வளர்ந்து தழைத்துப் பூத்து அழகுடன் விளங்கியும் பழங்களைத் தாராதொழியின் வளர்த்தவன் வருந்துவது போல, அரசனாதற்குரிய எல்லா இலக்கணங்களும் அமையப் பெற்ற உன்னை வாய்க்கப்பெற்றும் நீ அரசினையேற்று நடத்தாவிடின், நின்பால் அன்பு நிறைந்த நாங்கள் உய்யும் வழியின்றி வருந்துவோம். ஆதலால், இப்போழுதே உலகத்தோர் கண்ணாரக் கண்டு களிக்குமாறு மணிமுடி சூடிக்கொண்டு நண்பகலில் ஒளிவீசும் சூரியனைப் போன்றவனாய் விளங்குவாயாக! சூரிய சந்திரர் சுழல்கின்ற காலம் வரையில் பூமி

முழுவதற்கும் சக்கரவர்த்தியாய் இருக்கும் பெருநிலையை இப்பொழுதே ஏற்றுக்கொள்க!' என்று வேண்டிக்கொள்வதாக உள்ளது.

கம்பர், பரதனது இத்தகைய வேண்டுகோளைக் கூறவேயில்லை. பதினான்காண்டுகாறும் ஆட்சிபுரிந்த பரதன் கூறிய உருக்கமான இவ்வேண்டுகோளைக் கம்பர் கூறாது விடுத்தாரோ? அல்லது, கூறியிருந்த பகுதி நமக்குக் கிடைத்திலதோ? என ஐயுற வேண்டியுளது.

2. வான்மீகத்தில்: இராமன் தேரில் ஏறிக்கொண்டு அயோத்திக்குள் புகும்போது வானர வீரர்கள் ஒன்பதினாயிரம் பேர் யானைகளின் மேல் ஏறிக்கொண்டு முன் சென்றதாகவுள்ளது.

கம்பர், வானர வீரர்கள் அறுபத்தேழு கோடிபேர் யானைமேல் ஏறிக்கொண்டு இராமனுக்கு முன் சென்றதாக உயர்த்திக் கூறியுள்ளார்.

3. வான்மீகத்தில்: நந்தியம்பதியிலிருந்து தேரில் வந்த இராமன் தன் மந்திரிமார்களுக்குச் சுக்கிரீவனது நட்பின் சிறப்பினையும், அனுமனது பேராற்றலையும், வானரர்களின் அற்புதச் செயல்களையும் சொன்னதாகவும், அதைக்கேட்டு அவர்கள் ஆச்சரியப்பட்டதாகவும் உள்ளது. மேலும், அயோத்தி புகுந்த இராமன், இட்சுவாகுவுக்குரியதாய் வழிவழி வந்ததும் தன் தந்தைக்கு உரியதுமாகிய அரண்மனையில் புகுந்தவுடன் தன் தாயர் மூவரையும் வணங்கிவிட்டுப் பரதனை நோக்கி, ''பரத! அசோக மரங்கள் நெருங்கிய எழில்மிக்க பொழிலால் சூழப்பட்டதும் முத்தும் மணியும் பதிக்கப்பெற்றதும் ஆகிய அழகிய பெரிய என் மாளிகையைச் சுக்கிரீவனுக்குக் கொடு'' என்று ஏவப் பரதனும் அவ்வாறே சுக்கிரீவனது கையைப் பற்றிக்கொண்டு அழைத்துச் சென்று அம்மாளிகையில் இருக்கச் செய்துவிட்டுச் சுக்கிரீவனை நோக்கி, 'இராமனது முடி சூட்டு விழாவின் பொருட்டுத் தீர்த்தம் கொணர நின் தூதுவர்களை ஏவுக' என வேண்டிக் கொள்ள, சுக்கிரீவனும் மணிகள் இழைத்த பொற்குடங்கள் நான்கினை வானரர் நால்வரிடம் கொடுத்து நான்கு திசையில் உள்ள நாற்கடல் நீரை விரைந்து கொணருமாறு ஏவ, அனுமன், சாம்பன், வேகதரிசி, இடபன் என்ற அந்நால்வரும் சென்று

நான்கு கடலின் தீர்த்தங்களையும் விரைந்து கொணர்கின்றனர் என்று உளது.

கம்பர், இராமன் தன் அமைச்சர்களுக்குச் சுக்கிரீவன் முதலியோரின் சிறப்புகளைச் சொன்னதாகத் தம் காப்பியத்தில் கூற வில்லை. இட்சுவாகுவுக் குரியதாய் வழிவழி வந்த அரண்மனையில் இராமன் புகுந்ததாகக் கூருமல், அவ்வரண்மனையைச் சுக்கிரீவன் முதலியோர்க்குக் காட்டுமாறு பரதனுக்குப் பணித்த தாகக் கம்பர் மாற்றிக் கூறியுள்ளார். மேலும், இராமனது முடி சூட்டு விழாவிற்கு உரிய நாளை நிச்சயம் செய்யாமல் இருக்கக் காரணம் என்ன என்று சுக்கிரீவனே கேட்கப்பரதன், 'நாற் கடலின் தீர்த்தம் வாராததே காலம் தாழ்த்தற்குக் காரணம் என்று கூறச் சுக்கிரீவன் அனுமனை நோக்க, அவன் குறிப்பறிந்து விரைந்து சென்று நாற்கடலின் தீர்த்தத்தைக் கொணர்ந்த தாகக் கூறியுள்ளார்.

அனுமன் தீர்த்தங் கொணரச் சென்றவுடன் வசிட்டன் முதலியோரைப் பரதன் அழைத்து இராமன் முடி சூடுதற்குரிய நாளை ஆராய்ந்து கூறுமாறு வேண்ட, அவர்கள் 'அதற்குரிய நாள் நாளை' எனக் கூறினுர்களாக அந் நாளைக்குறித்து அனை வர்க்கும் அழைப்பு அனுப்பியதாகவும் கம்பர் கூறியுள்ளார்.

இராமன் அயோத்திக்கு வந்தநாளே பூச நன்னுள் ஆதலின் அன்றே முடி சூட்டு விழா நடந்தது என வான்மீகி கூறியிருப்பது பொருத்தமாகவுள்ளது. சோதிடர்களை அழைத்து நாள்பார்க்கச் சொன்ன நிகழ்ச்சியும் அந்நாளை மன்னவர்கட்கு ஓலை போக்கி அறிவித்தாகச் சொன்னதும் கம்பரின் கற்பனையே யாகும். மேலும் இராமன் முடி சூடும் நாளை இன்னும் நிச்சயம் செய்யாமல் காலம் தாழ்த்துவது ஏன்? எனச் சுக்கிரீவன் கேட்டதாக அமைந்ததும், அதற்குப் பரதன் 'கடல்தீர்த்தம் வருதல் அரி தாக இருப்பதே காரணம்' எனக் கூறியதாக அமைந்திருப்பதும் கம்பர் காப்பியத்திற்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. பதினுன் காண்டுகளாகத் தான் மேற்கொண்டிருந்த ஆட்சியைக் கொடுக்கவேண்டி இராமன் வரவை எதிர்நோக்கியிருந்த பரதன், இராமன் முடி சூட்டு விழாவைப்பற்றி விரையாதிருந்ததாகக் கூறி யிருப்பது கதைப்போக்கிற்குச் சுவையூட்டுவதாக இல்லை; பரதனது பெருங் குணத்தை வெளிப்படுத்துவதாகவும் இல்லை.

எனவே, இப்பகுதி கம்பரால் பாடப்பெற்றது தானே? அல்லது இடைச் செருகலோ? என ஐயுறவேண்டியுளது. நாடகக் காப்பிய மாதற்கேற்பக் கதையினைச் சுவையுற அமைத்துச் செல்வதே கம்பரின் இயல்பு என்பது மற்றைப் பகுதிகளால் புலனாதலின் இங்கு இவ்வாறு ஐயுற நேர்கின்றது.

## படலப் பொருட் சிறப்பு

கம்பர் தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலின் சிறப்பை இராமனது முடி சூட்டு விழாவில் அமைத்துச் சிறப்பிக்க வேண்டும் என்ற நன்றி மிக்க நன்னெஞ்சராய்,

அரியணை யனுமன் தாங்க,
அங்கதன் உடைவாள் ஏந்த,
பரதன் வெண்குடை கவிக்க,
இருவரும் கவரி வீச,
விரைசெறி குழலி ஓங்க,
வெண்ணெ யூர்ச்சடையன் முந்தை
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.

எனக் கூறியுள்ளது பெரிதும் பாராட்டுதற்குரிய நற்செயலாகும். வான்மீகத்தில் இவ்வாறு திருமுடியை வேளாளர் எடுத்துக் கொடுக்க வசிட்டன் வாங்கி இராமனுக்குச் சூட்டியதாக இல்லை; ஆயினும், தன்னை ஆதரித்த வள்ளலின் பெயர், இராமனது பேர் உள்ள வரையும், அவனைப்பற்றிய காப்பியம் உள்ள வரையும் விளங்கிப் படிப்போர் கேட்போர் அனைவர் நெஞ்சிலும் நிலை நிற்கவேண்டும் என்ற நோக்கத்துடன் புதுவதாகச் சேர்த்துக் கூறியிருப்பது தமிழரின் நன்றிமறவா நற்பண்பிற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றது.

# 38. திருமுடி சூட்டு படலம்

இராமன் தம்பியருடன் மயிர்வினை முற்றி
ஒப்பனை செய்தல்

10454. நம்பியப் பரத னோடு
நந்தியம் பதியை நண்ணி
வம்பியல் சடையு மாற்றி
மயிர்வினை முற்றி மற்றைத்
தம்பிய ரோடு தானும்
தண்புனல் படிந்த பின்னர்
உம்பரு முவகை கூர
வொப்பனை யொப்பச் செய்தார்.

நம்பி அப் பரதனோடு
நந்தியம் பதியை நண்ணி,
வம்பு இயல் சடையும் மாற்றி,
மயிர் வினை முற்றி, மற்றைத்
தம்பியரோடு தானும்
தண்புனல் படிந்த பின்னர்,
உம்பரும் உவகை கூர,
ஒப்பனை ஒப்பச் செய்தார்.

பொ :—ஆடவரிற் சிறந்தவனாகிய இராமன், அந்தப் பரதனோடு நந்தியம்பதியை அடைந்து, (இடைக்காலத்தே) புதுவதாகச் செய்துகொண்ட சடையை மாற்றிவிட்டுச் சவுளம் எனப்படும் மயிர்வினையைச்செய்து கொண்டு, மற்றைய தம்பிமாரோடு தானும் (சரயு நதியின்) குளிர்ந்த நீரில் மூழ்கிவிட்டு, பின்பு தேவர்களும் மகிழுமாறு அலங்காரத்தைப் பொருத்தமாகச் செய்து கொண்டார்கள்.

கு :—பரதன் தங்கித் தவஞ்செய்த இடம் நந்தியம்பதி யாதலின், அப்பதி நண்ணியதைத் தெரிவிக்கும் போது அப் பதியில் வாழ்ந்த பரதனை 'அப்பரதனோடு' எனச் சுட்டி அப்பதிக் குரிமை புலப்படுத்தியவாறு. வம்பு—நிலையின்மை. (தொல்—உரி 31) யன்னவன் மகனாகிய இராமனுக்கு முனிவர்க்கேயுரிய சடை நிலைபேறுடையதன்று ஆகலின் 'வம்பியல் சடை' என்றார். இடைநடுவே உண்டாக்கிய சடை என்றவாறு. ஒப்பனை—அலங்காரம். ஒப்பச் செய்தலாவது உடல் அமைப்பிற் கேற்பச் செய்தல். ஒப்பனையில் தேர்ந்துள்ள தேவர்களும் மகிழுமாறு செய்தார் எனவே அவ்வொப்பனையின் ஒப்பின்மை புலப்படுத்தியவாறாயிற்று. (1)

அயோத்திக்குள் புக இராமன் தேர் ஏறுதல்

10455. நிருதியின் றிசையிற் றோன்று
நந்தியம் பதியை நீங்கிக்
குருதி கொப்பளிக்கும் வேலோன்
கொடிமதி லயோத்தி மேவச்
சுருதியொத் தனைய வெள்ளைத்
துரகதக் குலங்கள் பூண்டு
பருதியொத் திலங்கு பைம்பூட்
பருமணித் தேர னானான்.

நிருதியின் திசையில் தோன்றும்
நந்தியம் பதியை நீங்கி
குருதி கொப்பளிக்கும் வேலோன்
கொடிமதில் அயோத்தி மேவ
சுருதி ஒத்தனைய வெள்ளைத்
துரகதக் குலங்கள் பூண்டு,
பருதி ஒத்து இலங்கும் பைம் பூண்
பருமணித் தேரன் ஆனான்.

பொ :—இரத்தத்தை வெளிப்படுத்துகின்ற வேலையுடைய இராமன் தென்மேற்குத் திசையில் தோன்றுகின்ற நந்தியம் பதியை நீங்கிக் கொடிகள் கட்டியுள்ள மதிலால் சூழப்பெற்ற

அயோத்திக்குள் செல்லுதற்காக, வேதத்தை ஒத்த, தூய்மை யான வெண்ணிற முள்ள குதிரையினங்கள் பூண்டு சூரியனைப் போன்று ஒளியுடன் விளங்கும் பசுமையான பொன் அணிகலன் களால் அலங்கரிக்கப் பெற்ற, பருத்த மணிகள் கட்டியுள்ள, தேரில் ஏறினான்.

கு :—தென்மேற்குத் திசையின் காவலன் நிருதி ஆகலின், அத்திசையை 'நிருதியின் திசை' என்று குறிப்பிட்டவாறு. பகைவர் மார்பில் நுழைந்து நுழைந்து குருதிகுடித்துப் பழகிய வேல் ஆகலின் அது குருதியைக் கொப்பளிப்பதாயிற்று. வேதம் வெண்ணிறமுடையது என்பது கவிமரபாகலின் 'சுருதி யொத் தனைய வெள்ளைத் துரகதம்' என்றார். 'ஒத்தனைய' என்பது மீமிசைச்சொல். துரகதம்—குதிரை. பைம்பொன் அணிகலன்களால் அலங்கரிக்கப் பெற்றமையின் சூரியனைப் போன்று தேர் விளங்குவதாயிற்று. பருமணி என்றது ஒலி செய் யும் பெருமணியை. தேரன் என்ற குறிப்பு வினைமுற்று இடப் பொருளில் வந்தது. தேர்க்கண் ஏறினான் என்க. சுருதி— வேதம். (2)

### தம்பியர் பணிசெய இராமன் தேர்மேற் செல்லுதல்

10456. ஊழியி னிறுதி காணும்
வலியின துயர்பொற் றேரின்
ஏழுயர் மதமா வன்ன
விலக்குவன் கவிகை யேந்தப்
பாழிய மற்றைத் தம்பி
பானிறக் கவரி பற்றப்
பூழியை யடக்கும் கண்ணீர்ப்
பரதன்கோல் கொள்ளப் போனான்.

ஊழியின் இறுதி காணும்
வலியினது உயர் பொன் தேரின்,
ஏழ் உயர் மதமா அன்ன
இலக்குவன் கவிகை ஏந்த,
பாழிய மற்றைத் தம்பி
பால் நிறக் கவரி பற்ற,

பூழியை அடக்கும் கண்ணீர்ப்
பரதன் கோல் கொள்ளப் போனான்.

பொ :—ஊழியினிறுதிவரையிலும் அழியாத வலியினையுடைய உயர்ந்த பொன்னணிகளையுடைய தேரில் ஏழு முழம் உயர்ந்த களிற்றியானை போன்ற இலக்குவன் குடையைத் தாங்கி நிற்கவும், வலிமையுடைய சத்துருக்கன் பால் போன்ற வெண்ணிறமுடைய சாமரைபற்றி விசவும், தரையில் எழும் புழுதியை அடக்கவல்ல கண்ணீர்ப் பெருக்கினையுடைய பரதன் (பாகனாய்) ஊளவுகோலைக் கொண்டு குதிரைகளைத் தூண்டிச் செலுத்தவும் (இராமன்) போனான்.

கு :—மேலைச்செய்யுளில் வந்த குருதி கொப்பளிக்கும் வேலோன் என்பதையே இச்செய்யுளில் போனான் என்ற வினைக்கும் எழுவாயாகக் கொள்க. தேரின் உறுதி புலப்பட 'ஊழியின் இறுதிகாணும் வலியினது' என்றார் ''கண்ணனேமியும் கண்ணுதல் கணிச்சியும் கமலத்து அண்ணல் குண்டிகைக் கலசமும் அழியினும் அழியாத்திண்மை சான்றது'' (இராவணன் தேரேறு-23) என இராவணன் ஏறிய தேரின் உறுதிப்பாடு கூறியுள்ளமை இங்கு நினையலாம். ஏழ்முழம் உயர்ந்த யானை, உத்தம இலக்கணமுடையது; பட்டத்து யானை அதற்குரியது என்பர். மதமா—ஆண் யானை; இலக்குவனுக்கு வலிமையானும் நடையானும் உவமையாயிற்று. கவிகை—குடை. பாழி—வலிமை. பாழிய என்புழி அகரம் குறிப்புப் பெயரெச்ச விகுதி; 'கால குருகு' என்புழிப் போல. இலக்குவனும் பரதனும் கூறப்பட்டமையால் மற்றைத்தம்பி என்றது, சத்துருக்கனையே என்பது பாரிசேட அளவையால் பெறப்படும். பரதனது அன்புப் பெருக்கால் விடுங் கண்ணீர் மிகுதிகூறுவாராய்ப் ''பூழியை யடக்குங் கண்ணீர்ப் பரதன்'' என்று சிறப்பித்தார். பூழி—புழுதி. கோல்கொள்ளுதல் என்பது, தேர்ப்பாகனானதை யுணர்த்தியவாறு. (3)

இராமன் தேரின் நாற்புறத்திலும் வீடணன் முதலோர் செல்லுதல்

10457. வீடணக் குருசின் மற்றை
வெங்கதிர்ச் சிறுவன் வெற்றிக்

கோடணை குன்ற மேறிக்
கொண்டறேர் மருங்கு போதத்
தோடணை மவுலிச் செங்கண்
வாலிசேய் தூசு செல்லச்
சேடனைப் பொருவும் வீர
மாருதி பின்பு சென்றான்.

வீடணக் குருசில், மற்றை
வெங்கதிர்ச் சிறுவன் வெற்றிக்
கோடு அணை குன்றம் ஏறி,
கொண்டல் தேர் மருங்கு போத,
தோடு அணை மவுலிச் செங்கண்
வாலி சேய் தூசு செல்ல,
சேடனைப் பொருவும் வீர
மாருதி பின்பு சென்றான்.

பொ:—ஆண்மை மிக்கவனாகிய வீடணனும், வெவ்விய கதிர்களையுடைய சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவனும், வெற்றி மிக்க கொம்புகளையுடைய குன்றம் போன்ற யானைகளின் மேல் ஏறிக்கொண்டு, கொண்டல் வண்ணனாகிய இராமனேறிய தேரின் இருமருங்கிலும் பாதுகாப்பாகச் செல்லவும், மலர்மாலை சூடிய முடியையும் சிவந்த கண்ணையுமுடைய வாலியின் மகனாகிய அங்கதன் (தேரின்) முன்னணியில் செல்லவும், ஆதிசேடனை ஒத்த (ஆற்றலும் அறிவுமுடைய) வீர அனுமன் (அத்தேரின்) பின்பு சென்றான்.

கு:—குருசில்-ஆண்மையுடையவன்; உபகாரி. கோடு என்ற குறிப்பால் குன்றம் என்றது, குன்றம் போன்ற யானையை உணர்த்தியது. இது குறிப்புருவகம் எனப்படும். கொண்டல் என்றது, உவமை யாகுபெயராய்க் கொண்டல் வண்ணனாகிய இராமனை உணர்த்தியது. தோடு—மலரின் இதழ்; சினையாகு பெயராய் மலர் மாலையை யுணர்த்தியது. அங்கதன் இளவரசன் ஆகலின் அவனுக்கு மவுலி யுரியதாயிற்று. தூசு—முன்னணி. சேடன், ஆதிசேடன் என்ற பெயரின் முதற்குறை. ஆதிசேடன், பூமியையும் பூமியில் நிறைந்துள்ள மலை முதலிய பொருள்களையும் கீழிருந்து தாங்குதல்போல, அனுமன், சேனைக் கடலும் மக்கள்

திரளும் முன்செல்ல அவற்றிற்கெல்லாம் பாதுகாவலனுய்ப் பின் செல்லும் அமைதி நிலையையுடையன் என்பது புலப்பட, ''சேடனைப் பொருவும் வீர மாருதி பின்பு சென்ருன்'' என்று உவமை கூறிச் சிறப்பித்தவாறு. (4)

வானரத் தலைவர் போதல்

10458. அறுபத்தே ழமைந்த கோடி
யானைமேல் வரிசைக் கான்ற
திறமுற்ற சிறப்ப ராகி
மானுடச் செவ்வி வீரம்
பெறுகுற்ற வனப்ப ருச்சி
பிறங்குவெண் குடையர் செச்சை
மறுவுற்ற வலங்கன் மார்பர்
வானரத் தலைவர் போனுர்.

அறுபத்து ஏழ் அமைந்த கோடி
யானைமேல் வரிசைக்கு ஆன்ற
திறம் உற்ற சிறப்பர் ஆகி,
மானுடச் செவ்வி வீரம்
பெறுகுற்ற வனப்பர் உச்சி
பிறங்கு வெண்குடையர் செச்சை
மறுஉற்ற அலங்கல் மார்பர்,
வானரத் தலைவர் போனுர்.

பொ :—தத்தம் தகுதிக்கு ஏற்ற கூறுபாடுடைய சிறப்பினையுடையராகி, மானிட உருவத்தோடு வீரத்தைப் பெற்ற அழகினையுடையவராய்த் தலைமேல் விளங்கும் வெண்கொற்றக் குடையையுடையராய்ச் சந்தனக் குழம்பினுல் மறுப்பட்ட மலர் மாலையை அணிந்த மார்பினையுடையராய் வானரத்தலைவர்கள், அறுபத்தேழ் கோடி என்று எண்ணமைந்த யானைகளின் மேல் ஏறிக்கொண்டு (இராமன் பின்) போயினுர்.

கு :—வானரத் தலைவர்கள் அறுபத்து ஏழு கோடி அளவினர் அந்த எண்ணிக்கையுள்ள யானைகளின்மேல் ஏறிச்செல்வராயினர். வானரத்தலைவர் யானைமேல் போனுர் என இயையும்.

வானரர்கள் அயோத்தி நகரத்துள் செல்லும்போது மானிடச் செவ்வியராய் உருமாறிச் சென்றனர் என்பது இதனால் புலனாகும். செச்சை–சந்தனக்குழம்பு. ''இருபத்தேழமைந்த கோடி யானை மேல் வரிசைக்கேற்ற, திருவொத்த சிறப்பராகி மானிடச் செவ்வி வீரர், உருவத்தோளொளிரும் பூண ருச்சி வெண்குடையர் பச்சை, மருவொத்த வலங்கன் மார்பர் வானரத் தலைவர் போனார்'' என இச்செய்யுளின் நான்கடியும் மாறுபட்டுச் சில ஏடுகளில் காணப்படுகின்றன. (5)

பதினெட்டுத் தேயத்து வேந்தர் செல்லுதல்

10459. எட்டமை யீறு பத்தி
னெழுதிரை வளாக வேந்தர்
பட்டம்வைத் தமைந்த நெற்றிப்
பகட்டினர் பைம்பொற் றேரர்
வட்டவெண் குடையர் வீசு
சாமரை மருங்கர் வானைத்
தொட்டவெஞ் சோதி மோலிச்
சென்னியர் தொழுது சூழ்ந்தார்.

எட்டுஅமை ஈறு பத்தின்
எழுதிரை வளாக வேந்தர்,
பட்டம் வைத்து அமைந்த நெற்றிப்
பகட்டினர், பைம்பொன் தேரர்,
வட்டவெண் குடையர் வீசு
சாமரை மருங்கர், வானைத்
தொட்ட வெஞ்சோதி மோலிச்
சென்னியர், தொழுது சூழ்ந்தார்.

பொ:—எழுகடல் சூழ்ந்த உலக வட்டத்தை ஆள்கின்ற பதினெட்டுத் தேயத்தினரான வேந்தர்கள்,—பட்டம் அமைந்த நெற்றியினையுடைய யானைகளையுடையராய், பசும் பொன்னால் இயன்ற தேரினையுடையராய், வட்டமான வெண் குடையையுடையராய், வெண்சாமரை வீசுகின்ற பக்கங்களை யுடையராய் விண்ணை அளாவும் விரும்பத்தக்க ஒளியினையுடைய

மணிமுடி யணிந்த தலையினையுடையராய் (இராமனை)த் தொழுது சூழ்ந்து சென்றூர்கள்.

கு:—எட்டமையிறு பத்து என்றது, பதினெட்டு என்ற எண்ணினை. எட்டு அமைந்த இறுதியினையுடைய பத்து என விரிக்க. பதினெட்டுத் தேயங்களாவன;— சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், தமிழ், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், கோசலம் என்பன. பகடு—யானை. யானையினும் தேரினும் ஏறி வந்தவர்களை, பகட்டினர், தேரர் என்றூர். வேந்தர், பகட்டினர், தேரர், குடையர், சாமரை மருங்கர், மோலிச் சென்னியர் ஆய்த் தொழுது சூழ்ந்தார் என இயையும். பகட்டர் முதலிய குறிப்பு முற்றுகள் எச்சப் பொருளன. (6)

இச்செய்யுளின் பின் சில பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் காணப்படுகின்றன:—

10459 (1) எழுவகை முனிவரோடு
மெண்டிசைத் திசைகாப் பாளர்
குழுவினர் திசைக டோறும்
குழாங்கொண்டு களித்துக் கூடித்
தொழுவன வமரர் கைகள்
சுமக்கலாம் விசும்பிற் றுள்ளி
வழுவலின் மலர்கள் சிந்தி
மானிடஞ் சுருங்கச் சார்ந்தார்.

,, (2) அன்னையர் மூவர் தாமு
மம்புயத் திருந்த நங்கை
இன்னுயிர்த் தம்பி மார்கள்
மூவரும் மகிழ்ச்சி யெய்தி
முன்னர்வந் துற்ற சோதிச்
சிவிகைமே லேறி மொய்த்து
மின்னிடை யார்கள் ஏவல்
செய்திட விரும்பிப் போனூர்.

### சீதை விமானமூர்ந்து செல்லுதல்

10460. வானர மகளி ரெல்லாம்
வானவர் மகளி ராய்வந்
தூனமில் பிடியு மொண்டார்ப்
புரவியும் பிறவு மூர்ந்து
மீனின மதியைச் சூழ்ந்த
தன்மையின் விரிந்து சுற்றப்
பூநிற விமானந் தன்மேன்
மிதிலைநாட் டன்னம் போனாள்.

வானர மகளிர் எல்லாம்
வானவர் மகளிராய் வந்து,
ஊனம் இல் பிடியும் ஒண்தார்ப்
புரவியும் பிறவும் ஊர்ந்து
மீன் இனம் மதியைச் சூழ்ந்த
தன்மையின் விரிந்து சுற்ற,
பூநிற விமானம் தன்மேல்
மிதிலைநாட்டு அன்னம் போனாள்.

பொ :—வானரப் பெண்டிர் யாவரும் தேவமாதராய் வடிவு தாங்கி வந்து, குற்றம் அற்ற பெண் யானையையும்; ஒளிவாய்ந்த கிண்கிணி மாலை யணிந்த குதிரைகளையும், சிவிகை முதலிய பிறவற்றையும் ஊர்ந்து, விண்மீன் கூட்டம் சந்திரனைச் சூழ்ந் துள்ள தன்மை போலப் பரவிச் சூழ்ந்துவர, பொலிவு வாய்ந்த நிறத்தினையுடைய விமானத்தின்மேல் மிதிலை நாட்டில் பிறந்த அன்னம் போன்றவளான சீதை சென்றாள்.

கு :—தாரகை நடுவண் தண்மதி போல வானவர் மகளிரின் நடுவண் சீதை விமானத்தின்மேல் சென்றாள் என்றவாறு. தேவ மாதர், பிடியும் குதிரையும் பிறவும் ஊர்ந்து சூழச் சென்றனர். சீதை தண்மதி போன்றனள்; தேவமாதர் தாரகைக் கூட்டம் போன்றனர் என்க. மிதிலை நாட்டு அன்னம் என்றது சீதையை. உவமை யாகுபெயராய் அன்னம் சீதையை யுணர்த்தியது. நடையால் அன்னம் போன்றவள் சீதை. பூநிறம்—பொலிவு வாய்ந்த நிறம். (7)

கவிக்கூற்று

மலர்மாரியின் மிகுதி

10461. தேவரு முனிவர் தாமுந்
திசைதொறு முறையிற் சிந்த
ஓவலின் மாரி யேய்ப்ப
வெங்கணு முதிர்ந்த வீங்கிக்
கேவல மலராய் வேருே
ரிடமின்றிக் கிடந்த வாற்ருல்
பூவெனு நாம மின்றிவ்
வுலகிற்குப் பொருந்திற் றன்றே.

தேவரும், முனிவர் தாமும்,
திசைதொறும் முறையின் சிந்த,
ஓவல் இல் மாரி ஏய்ப்ப,
எங்கணும் உதிர்ந்து வீங்கி,
கேவலம் மலராய் வேறு ஓர்
இடம் இன்றிக் கிடந்த ஆற்ருல்
பூ எனும் நாமம் இன்று இவ்
உலகிற்குப் பொருந்திற்று அன்றே.

பொ :—தேவர்களும், முனிவர்களும் திசைகள் தோறும் நின்று முறையாக மலர்மாரி சொரிதலால் நீங்குதலில்லாத மழையைப் போல எங்கும் உதிர்ந்து பெருகி வெற்றிடம் பிறி தொன்று மின்றித் தனித்து மலர்களாகவே கிடந்த தன்மையால் இவ்வுலகத்திற்கு இன்று பூ என்ற பெயர் பொருத்த முடைய தாயிற்று.

கு :—பூ என்ற பெயர் பூமிக்கு உண்டு. அப்பெயர் இன்று பூக்களோடு நிறைந்துள்ளமையால் பெற்ற காரணப் பெயராய்ப் பொருந்துவதாயிற்று என்றவாறு. ஓவல்—நீங்குதல். கேவலம்—தனிமை. பிறிதொரு பொருளின்றித் தனித்து மலராகவே கிடந் தன என்றவாறு. மலர் இல்லாத வேறு ஓரிடம் இல்லாதபடி எவ்விடத்தும் மலர்களாகவே கிடந்தன என்பார், 'வேருேரிட மின்றிக் கிடந்தவாற்ருல்' என்ருர். (8)

இச்செய்யுளின் பின் 52 ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10461 (1) உம்பரு முலகு முய்ய
உதித்திடு மொருவன் ருனே
செம்பது மத்தில் வாழும்
செல்வி சானகியா மாதும்,
தம்பியர் தாமும் மற்றுந்
தாபதர் சங்கத் தோடும்
அம்புவி தன்னில் மேலாம்
அயோத்தியில் அமர்ந்தான் மாதோ.

யானைகள் மதம் சொரிதல்

10462. கோடையில் வறந்த மேகக்
குலமெனப் பதிஞ லாண்டு
பாடுறு மதஞ்செய்! யாத
பணைமுகப் பரும யானை
காடுறைந் தண்ண லெய்தக்
கடாந்திறந் துகுத்த வாரி
ஓடின வுள்ளத் துள்ளக்
களிதிறந் துடைந்த தேபோல்.

கோடையில் வறந்த மேகக்
குலம் எனப் பதிஞல் ஆண்டு
பாடு உறு மதம் செய்யாத
பணைமுகப் பரும யானை,
காடு உறைந்து அண்ணல் எய்தக்
கடாம் திறந்து உகுத்த வாரி
ஓடின, உள்ளத்து உள்ளக்
களிதிறந்து உடைந்ததே போல்,

பொ :—கோடைக் காலத்தில் நீர் இல்லாது வறந்து போன மேகக் கூட்டம்போலப் பதினன்கு ஆண்டு பெருமை பொருந்திய மதத்தைச் சொரியாத, கொம்பு பொருந்திய முகத்தினையும் கழுத்திலிடு ‧ மெத்தையையும் உடைய யானைகள், பெருமை

யுடைய இராமன் காட்டில் தங்கியிருந்து வந்த அளவில், மனத்தில் இருக்கும் களிப்பு வெளிப்பட்டு உடைப்பு எடுத்ததுபோல, கன்னங்கள் திறக்கப்பெற்றுச் சொரிந்த மதநீர்கள் பெருக்கெடுத்து ஓடலாயின.

கு:—இராமன் பதினான்காண்டு காட்டில் வதிந்தபோது அவன் பிரிவை யாற்றாமல் யானைகள் உணவு வேண்டுமளவு உண்ணாமல் வருந்தியிருந்தமையால் மதம் பெருகாமல் இருந்தவை இராமன் வந்தவுடன் மகிழ்ச்சி மேலிட்டு மிகுதியாக மதஞ் சொரியலாயின என்றவாறு. பாடு-பெருமை. பணை-கொம்பு. பருமம்—யானை கழுத்திடு மெத்தை. மேகம் கோடையில் வறந்திருத்தல் போல, யானைகள் இராமனைப் பிரிந்த பதினான்கு ஆண்டுகளும் மதம் சொரியாமல் இருந்தன என்க. கடாம்—மதம் படுதுளை. வாரி என்றது மதப்பெருக்கினை. மதந் தோன்றும் இடங்கள் மூன்றுதல் நோக்கி 'வாரி ஓடின' எனப் பன்மையாகக் கூறினார். மதம்பிறத்தற்குக் காரணம் மனக் களிப்பே யாதலின் உள்ளத்துள்ளக் களிதிறந் துடைந்ததே போல் கடாந்திறந்து உகுத்தவாரி ஓடின எனத் தற்குறிப்பேற்ற வணிபெறக் கூறினார். (9)

குதிரைகள் ஆலித்தல்

10463. துரகத்தார்ப் புரவி யெல்லா
மூங்கையர் சொற்பெற் றென்ன
அரவப்போர் மேகமென்ன
வாலித்த மரங்க ளான்று
பருவத்தாற் பூத்த வென்னப்
பூத்தன பகைவிற் சீறும்
புருவத்தார் மேனி யெல்லாம்
பொன்னிறப் பசலை பூத்த.

துரகத் தார்ப் புரவி எல்லாம்
மூங்கையர் சொல் பெற்றென்ன,
அரவப் போர் மேகம் என்ன ஆலித்த;
மரங்கள் ஆன்று,

பருவத்தால் பூத்த என்னப்
பூத்தன ; பகைவிற் சீறும்
புருவத்தார் மேனி எல்லாம்
பொன்நிறப் பசலை பூத்த.

பொ :—தறியில் கட்டியுள்ள கிண்கிணி யணிந்த குதிரைகள் எல்லாம் ஊமையர் பேசும் தன்மையைப் பெற்றது போலவும், இடியொலியைக் கொண்ட மேகம் போலவும், ஆரவாரித்தன; மரங்கள் எல்லாம் தமக்குரிய பருவத்தால் அமைந்து பூத்தாற் போலப் (பருவமல்லாத வழியும்) பூத்தன, பகைவர்மேல் வில் வளைந்து சீறுவது போல (காதலர் பால் வளைந்து) சீறுகின்ற புருவத்தினையுடைய பெண்டிரின் மேனி எல்லாம், பொன் போன்ற நிறத்தையுடைய பசலை தோன்றின.

கு :—துரகம்—குதிரைகட்டும் தறி. இராமனைப் பிரிந்த பதினான்காண்டுகளும் கனைத்து ஆரவாரம் செய்யாதிருந்த குதிரைகள் இராமன் வந்தவுடன் ஆரவாரம் செய்தமைக்கு 'மூங்கையர் சொற்பெற்றென்ன' என உவமை கூறினார். ஆலித்தல்—ஆரவாரித்தல். பருவமல்லாத காலத்தும் இராமன் வரவு கண்டு மரங்கள் பருவத்தில் பூப்பதுபோல நிறையப் பூத்தன என்றவாறு. மகளிர் புருவம் வளைந்த வில்லைப் போன்றது ஆகலின், வில் பகையைக் கண்டு சீறிவளையும் நிலையை உவமை கூறினார். மங்கையர்க்கு மகிழ்ச்சியால் உண்டாகும் அழகுதேமல் பசலை எனப்படும். அதன் நிறம் பொன்னிறமாகலின் 'பொன் னிறப் பசலை பூத்த' என்றார். இராமனைக் கண்ட மகிழ்ச்சியால் மங்கையர் மேனியில் பசலை பரவின என்க. (10)

*இராமன் அயோத்தியில் அரண்மனை புகுதல்*

10464. ஆயதோ ரளவில் செல்வத்
தண்ணலு மயோத்தி நண்ணித்
தாயரை வணங்கித் தங்க
ளிறையொடு முனியைத் தாழ்ந்து
நாயகக் கோயி லெய்தி
நானிலக் கிழத்தி யோடும்

சேயொளிக் கமலத் தாளுந்
திருநடஞ் செய்யக் கண்டான்.

ஆயது ஓர் அளவில் செல்வத்து
அண்ணலும் அயோத்தி நண்ணி,
தாயரை வணங்கித் தங்கள்
இறையொடு முனியைத் தாழ்ந்து,
நாயகக் கோயில் எய்தி
நானிலக் கிழத்தி யோடும்
சேய் ஒளிக் கமலத்தாளும்
திருநடம் செய்யக் கண்டான்.

பொ :—அத்தகையதொரு வேளையில் அரச செல்வத்துக்குரிய பெருமையுடைய இராமனும் அயோத்தியை அடைந்து, தாய்மார் மூவரையும் முதலில் வணங்கிப் பின்பு தம் குலதெய்வமாகிய அரங்கநாதனாகிய—கடவுளையும் வசிட்ட முனியையும் வணங்கிவிட்டு அரசு வீற்றிருத்தற்குரிய அரண்மனையை அடைந்து, நிலமகளோடு செவ்வொளியையுடைய செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகள் (இராமனைக் கண்ட மகிழ்ச்சியால்) அழகிய நடம்புரியும் காட்சியைக் கண்டான்.

கு.—அன்னையர் முன்னறி தெய்வம் ஆதலின் இராமன் முதற்கண் தாயரையும் அதன்பின் அவர்களால் அறிவிக்கப்பட்ட அரங்கநாதனையும், அதன்பின் எழுத்தறிவித்த இறைவனாகிய வசிட்டனையும் முறையே வணங்கினான் என்க. நானிலக்கிழத்தி என்றது நிலமகளை. சேயொளிக் கமலத்தாள் என்றது திருமகளை. தம் கணவனை உயிரின் எய்தினராதலின் நிவப்புறுநிலன் எனும் நிரம்பு நங்கையும் சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும் உவப்புற்றுத் திருநடஞ் செய்யலாயினர் என்க. (11)

இச்செய்யுளின் பின் சில பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10464 (1) எய்தின னனைய னென்னு
விரைந்துவந் தீண்டியாமுன்
செய்தவப் பயனே பூட்டிற்
றெனமனங்களித்துச் செவ்வாய்

மய்திகழ் கண்ணி னூரும்
மைந்தரும் சுற்றத்தாரும்
கைதலை மேலே கூப்பித்
தொழுதனர் கண்ணீர்சோர.

10464 (2) ஆங்குறு களிப்பாற் றன்னை
யயர்ந்தனர் ஆடைசோரத்
தாங்கினர் திரிந்த தன்மை
மைந்தரும் தையலாரும்
வீங்கிய வுவகை மேனி
சிறக்கவும் மேன்மேற்றுள்ளி
ஓங்கவும் களியாற் சோர்ந்த
வுடையிலாதாரை ஒத்தார்.

,, (3) குரவனைப் பணிந்து தங்கள்
குலத்துக்கு முதியரான
வரசரைத் தழுவித் தானைத்
தலைவரோ டண்மிநின்ற
பரமிகு சூழ்ச்சியாளர்
வணங்கிடப் பருதி கண்ட
மரைமலர்க் கானம் போல
மங்கையர் சுலாவ வள்ளல்.

*நகர மக்களின் மகிழ்ச்சி 10465, 10466*

*10465.* வொங்குதுந் துயில்க ளென்னு
மனமில ரெனினும் பல்கால்
தாங்கின ரென்ற போது
மைந்தருந் தைய லாரும்
வீங்கிய வுவகை மேனி
சிறக்கவு மேன்மேற் றுள்ளி
ஓங்கவுங் களியாற் சோர்ந்த
வுடையிலா தாரை யொத்தார்.

'வாங்குதும் துகில்கள்' என்னும்
மனம் இலர் எனினும் பல்கால்

தாங்கினர் என்ற போதும்
மைந்தரும் தையலாரும்
வீங்கிய உவகை மேனி
சிறக்கவும் மேன்மேல் துள்ளி
ஓங்கவும், களிப்பால் சோர்ந்த,
உடையிலாதாரை ஒத்தார்.

பொ :—(அயோத்தி நகரத்து) மைந்தரும் மகளிரும் 'தம் ஆடைகளைக் களைவோம்' என்னும் எண்ணம் இலர் என்றாலும், பலமுறை தம் உடுக்கையைக் கையால் தாங்கினர் என்றாலும், மிக்க மகிழ்ச்சியால் உடம்பு பூரித்தலாலும், மேலும் மேலும் துள்ளிக்குதித்துச் சிறத்தலாலும், கள்குடித்த களிப்பு மிகுதியால் சோர்ந்த, ஆடையில்லாத மைந்தரையும் மகளிரையும் ஒப்பவரானார்.

கு :—இராமனைக் கண்ட மகிழ்ச்சியால் அயோத்தி நகரத்து மைந்தரும் மகளிரும் உடம்பு பூரிப்பாலும் துள்ளிக் குதித்தலாலும் ஆடைகள் கழலப்பெற்றவராய், கட்குடியின் களிப்பால் ஆடை சோரப்பெற்ற மைந்தரையும் மகளிரையும் போன்று விளங்கினர் என்றவாறு. அந்த மைந்தர்க்கும் மகளிர்க் கும் 'உடைகளைக் கழற்றுவோம்' என்ற எண்ணம் இல்லாத வழியும், கழலும் உடைகளைத் தடுப்போம் என்று அவர்கள் முயன்றவழியும் இராமனைக் கண்ட மகிழ்ச்சி விளையாட்டால் தாமே உடைகள் கழன்றன என்றவாறு. கள்ளின் களிப்பால் உடைகள் நழுவும் என்பதை ; "பூந்துகிலோடும் பூசல் மேகலை சிலம்பு பூண்ட, மாந்தளிரெய்த நொய்தின் மயங்கினர் மழலைச் சொல்லார்" (களியாட்டுப்-8) என்றதால் தெளியலாம். உவகையும் களிப்பும் உடைகழலச் செய்தலில் ஒப்புமையுடையன என்றவாறு. (12)

10466. வேசிய ருடுத்த கூறை
வேந்தர்கள் சுற்ற வேறு
பாசிழை மகளி ராடை
யந்தணர் பரிந்து சுற்ற
வாசமென் கலவை சாந்தென்
றினையன மயக்கந் தன்னால்

பூசினர்க் கிரட்டி யானுர்
பூசலார் புகுந்து ளோரும்.

வேசியர் உடுத்த கூறை
வேந்தர்கள் சுற்ற, வேறு
பாசிழை மகளிர் ஆடை
அந்தணர் பரிந்து சுற்ற,
வாச மென் கலவை சாந்து
என்று இனையன, மயக்கந்தன்னுல்,
பூசினர்க்கு இரட்டி ஆனுர்,
பூசலார் புகுந்துளோரும்.

பொ :—நெருக்கத்தால் வேசியர்கள் உடுத்த புடவையை வேந்தர்கள் (விரைந்து இடையில்) சுற்றிக்கொள்ளவும், (வேசியரல்லாத) வேறு, பசும் பொன்னுலியன்ற அணிகலன்களையுடைய, மகளிரின் ஆடையை அந்தணர்கள் விரைந்து இடையில் சுற்றிக்கொள்ளவும், வாசனைமிக்க மென்மையான கலவைச் சந்தனமும், சாந்தும் என்று சொல்லப்பட்ட இவைகளைப் பூசிக்கொள்ளாதவர்களாய் அங்கு வந்தவர்களும் அவற்றைப் பூசிக்கொண்டு வந்தவர்கட்கு இரட்டியாகப் பூசிக்கொண்டவர்கள் ஆயினர்.

கு :—'மயக்கந்தன்னுல்' என்பது இடைநிலை விளக்காய் முன்னும் சென்றியைந்தது. மயக்கம்-நெருக்கத்தால் உளதாகிய கலப்பு. முன்னிரண்டடியும் மேலைச் செய்யுட் கருத்தோடு தொடர்புடையவை. மகிழ்ச்சி மிகுதியால் ஆடை நெகிழப்பெற்ருர் என மேற்கூறி, இங்கு அவ்வாறு ஆடை நெகிழப் பெற்றவர்கள் சிறிது உணர்வு வரப்பெற்று உடையை உடுக்கவேண்டும் என்ற எண்ணமுடையவர்களாய் விரைந்து கீழிருந்துகிடைத்த ஆடைகளை உடுக்கலானுர்கள் என்பதும், நெருக்க மிகுதியால் அவரவர் ஆடைகள் அவரவர்க்குக் கிடைக்காமல் மற்றவர்கள் ஆடையே கிடைக்கப்பெற்றவராய் அற்றம் காக்கும் அவசரத்தில் அவற்றையே உடுத்திக்கொண்டனர் என்பதும் விளக்கியவாறு. அந்த அவசரத்தில் ஆடவர் ஆடை ஆடவர்க்குக் கிடைக்காமல் மகளிர் ஆடையே கிடைக்கப்பெற்றுச் சுற்றிக்கொண்டனர் என்பது நகைச் சுவைக்குரிய நிகழ்ச்சியாக அமைக்கப்பட்ட

தென்க. வேசியர்-பொது மகளிர். வேறு பாசிழை மகளிர் என்றது, வேசியரல்லாத குல மகளிரை. பரிந்து-விரைந்து. கலவை சாந்து என்பது உம்மைத்தொகை. இனையன பூசலார் புகுந்துளோரும் எனவும், இனையன பூசினர்க்கு எனவும் ஈரிடத்தும் இயையும். பூசினவரின் மார்பில் உள்ள சந்தனம் நெருக்க மிகுதியால் பூசாதவர்கள் மார்பிலும் சேர்ந்தது; பலர் சந்தனம் பட்டமையால் பூசினர்க்கு இரட்டியாகியது என்க. ''பூசுசாந் தொருவர் பூசிற் றெழுவர்தம் மகலம் பூசி, மாசன மிடம்பெருது வண்கடை மலிந்த தன்றே'' (சீவக-116) என்பது ஒப்பு நோக்கத்தகும். (13)

மகளிர் அணிகலன் பூண்டு அழகொடு தோன்றுதல்

10467. இறைப்பெருஞ் செல்வ நீத்த
வேழிரண் டாண்டும் யாரும்
உறைப்பில ராத லானே
வேறிருந் தொழிந்த மின்னூர்
பிறைக்கொழுந் தனைய நெற்றிப்
பெய்வளை மகளிர் மெய்யை
மறைத்தனர் பூணின் மைந்தர்
மனங்களில் மறுக்கங் கொள்ள.

இறைப்பெருஞ் செல்வம் நீத்த
ஏழ் - இரண்டு ஆண்டும், யாரும்
உறைப்பு இலர் ஆதலானே,
வேறு இருந்து ஒழிந்த மின்னூர்,
பிறைக்கொழுந்து அனைய நெற்றிப்
பெய்வளை மகளிர், மெய்யை
மறைத்தனர் பூணின், மைந்தர்
மனங்களில் மறுக்கம் கொள்ள.

பொ :—இராமன் அரசாட்சியாகிய பெரிய செல்வத்தைத் துறந்து காட்டிற்குச் சென்ற பதினான்கு ஆண்டும் நாட்டில் இருந்த அனைவரும் மகிழ்ச்சி யில்லாதிருந்தனர் ஆதலால் தம் கணவரோடு கூடாமல் தனித்து இருந்து இன்பமின்றியிருந்த மின்னலைப் போன்றவராகிய, பிறைச் சந்திரனாகிய கொழுந்து

போன்ற நெற்றியையும் அணிந்த வளைகளையும் உடைய-மகளிர், (இராமன் திரும்பிய இன்று) மைந்தர்கள் தம்மனங்களில் கலக்கம் கொள்ளும்படி தம் உடம்பை அணிகலன்களால் மறைப்பதைப் போன்று அதிகமாக அணிந்து அழகுசெய்து கொண்டனர்.

கு:—இறைப்பெருஞ் செல்வம் என்றது, அரசாட்சியாகிய பெருஞ்செல்வத்தை. இனி, 'இறை' என்பது இராமன் எனக் கொண்டு எழுவாயாக்கிப் பெருஞ்செல்வம் என்பதற்கு அரசாட்சியாகிய செல்வம் எனப் பொருள் கூறலும் ஆம். உறைப்பு என்றது, மகிழ்ச்சியின் அழுத்தத்தை. பின்னுராகிய மகளிர் என்க. பிறையாகிய கொழுந்து என இருபெயரொட்டாக்குக. இராமன் வந்தான் என்ற மகிழ்ச்சி மேலீட்டால் மகளிர் தம்மை அணிகலன்களால் நன்கு அழகு செய்து கொண்டனர்; மகளிரின் மேனியழகை முழுவதும் கண்டு மகிழ வியலாதபடி அவ் அணிகலன்களால் மறைத்துவிட்டனரே என மைந்தர் மனம் மறுக்கொள்ளலாயினர் என்க. 'மறுவின் மங்கல வணியே யன்றியும் பிறிதணியணியப் பெற்றதை யெவன்கொல்'' (சிலப்-2-64, 65) எனக் கோவலன் மனமறுகிக் கண்ணகியை வினவியதும் இங்கு நினையலாம். ''உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை உருவினை மறைத்த லோரார், அமிழ்தினைச் சுவை செய்தென்ன அழகினுக்கு அழகு செய்தார்,... இமிழ்திரைப் பரவை ஞாலம் ஏழைமை யுடைத்துமாதோ'' (கோலங்காண்-3) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். (14)

**விண்ணவர் மணமும் மண்ணவர் மணமும் தலை தடுமாறல்**

10468. விண்ணுறை வோர்தந் தெய்வ
வெறியொடு வேறு ளோர்தந்
தண்ணறு நாற்றந் தம்மிற்
றலைதடு மாறு நீரால்
மண்ணுறை மாத ரார்க்கும்
வானுறை மடந்தை மார்க்கும்
உண்ணிறைந் துயிர்ப்பு வீங்கி
யூடலுண் டாயிற் றன்றே.

விண் உறைவோர்தம் தெய்வ
வெறியொடு, வேறுளோர்தம்
தண் நறு நாற்றம் தம்மில்
தலைதடு மாறும் நீரால்,
மண் உறை மாதரார்க்கும்,
வான் உறை மடந்தைமார்க்கும்,
உள்நிறைந்து உயிர்ப்பு வீங்கி
ஊடல் உண்டாயிற்று அன்றே.

பொ :—விண்ணுலகத்து வாழும் தேவர்களின் தெய்வ மணமும் அவர்க்கு வேருயுள்ள மக்களின் குளிர்ந்த நறுமணமும் தமக்குள் தலை தடுமாறி, விண்ணவர்க்கு மண்ணவர் மணமும் மண்ணவர்க்கு விண்ணவர் மணமுமாய்ச் சேர்ந்து விட்டமையால், அவர்களைக் கண்டபோது மண்ணுலகத்து வாழும் மானிட மகளிர்க்கும் விண்ணுலகத்து வாழும் தேவமாதர்க்கும் கருத்து மாறுபாடு உள்ளே நிறைதலால் உயிர்ப்புப் பெருமூச்சாகித் தத்தம் கணவரோடு ஊடல் உண்டாயது.

கு :—மாதரார், மடந்தைமார் எனப் பின் வந்தமையால், முன்வந்துள்ள விண்ணுறைவோர், வேறுளோர் என்றது, ஆடவரையே குறித்ததாகக் கொள்ளல் வேண்டும். மானிட மைந்தர் பால் தேவர்க்குரிய மணம் வீசுதல் கண்டறிந்த மானிட மகளிர் இவர் வேற்று மகளிரோடு கலந்துவந்துளார் எனவும், தேவ ஆடவர்பால் மக்கள் மணம் வீசுதலைக் கண்டறிந்த தேவமாதர் இவர் வேற்று மகளிரோடு கலந்து வந்துளார் எனவும், மயங்கியுணர்ந்து ஊடல் கொள்வாராயினர் என்றவாறு. இருதிறத்தாரின் நெருக்கத்தால் உண்டான மண மாற்றத்தைப் பிற மகளிரின் கூட்டுறவால் வந்ததென்று கொண்டது மயக்கவணியாகும். ஒவ்வோருடம்பிற்கும் ஒவ்வொருவகை மண முண்டு. உயர் பிறப்புடைய மைந்தர்பால் முல்லை மணம் நாறும்; அத்தகைய பெண்டிர்பால் சண்பகப் பூவின் மணம் வீசும்; இதனைக் கம்பரே ''பந்தினை யிளையவர் பயிலிடம் மயிலூர் கந்தனை யனையவர் கலை தெரிகழகம், சந்தன வனமல சண்பக வனமாம் நந்தன வனமல நறவிரி புறவிம்'' (நாட்டுப் படலம்-48) எனக் கூறியுள்ளமை இங்கு நினைவு கூரலாம். தேவகதியும் மக்கள் கதியும் இங்ஙனம் கலத்தலுண்டோ? எனின் உண்டு. ''முக்கணன் முயக்கம்

வேட்ட மக்கட் பெண்டிர் மலிவுரைத்தன்று' (புறப் பொருள் வெண்பா மாலை-9-49) எனவருதல் கண்டறியலாம். (15)

இச்செய்யுளின் பின் 71-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10468 (1) அன்றிவை பலவு மோங்க
வனைவரும் அன்புசெல்லச்
சென்றனன் எழுந்து மாடம்
பலவொரீஇ வுலகிற்றெய்வப்
பொன்றிணிந் தமர ரோடும்
பூமகளிருந்து வாழும்
குன்றென விளங்கித் தோன்றும்
நாயகக் கோயில்புக்கான்.

31-ஆம் பிரதியில் :—

,, (2) தாங்கிய கற்பின்மிக்க
சானகி தன்னைச் சார்ந்து
பாங்கிய ரெதிர்கொண்டேகப்
பைம்பொன் மாளிகையிற் பண்டு
நீங்கிய மாமியார்தம்
நீண்மலர்த்தாளின் வீழ
ஓங்கிய உவகை பொங்கும்
வாழ்த்தொலி யுடனிருந்தாள்.

*அரண்மனை நலங்களை வீடணன் முதலானோர்க்குக் காட்டுமாறு பரதனுக்கு இராமன் கூறுதல்*

10469. ஆயதோ ரளவி லையன்
பரதனை யருளி னோக்கித்
தூயவீ டணற்கு மற்றைச்
சூரியன் மகற்குந் தொல்லை
மேயவா னரங்க ளாய
வீரர்க்கும் பிறர்க்கும் நந்தம்
நாயகக் கோயி லுள்ள
நலமெலாந் தெரித்தி யென்றான்.

ஆயது ஓர் அளவில் ஐயன்,
பரதனை அருளின் நோக்கி,
'தூய வீடணற்கும், மற்றைச்
சூரியன் மகற்கும், தொல்லை
மேய வானரங்க ளாய
வீரர்க்கும், பிறர்க்கும், நம்தம்
நாயகக் கோயில் உள்ள
நலம்எலாம் தெரித்தி' என்றான்.

பொ:—அத்தகைய நிலையில், இராமன் பரதனை அருளினால் பார்த்துத் 'தூய்மையுள்ள வீடணனுக்கும் மற்றுமுள்ள சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கும் பழமை பொருந்திய வானரவீரர்க்கும் மற்றையவர்க்கும் நம்முடைய நாயகத் தன்மையுடைய அரண் மனையில் உள்ள நலங்களையெல்லாம் காட்டிக் கூறுவாயாக'. என்று கட்டளையிட்டான்.

கு:—தொல்லை—பழமை. நாயகக் கோயில் என்றது நாளோ லக்கத்திற்குரிய அரண்மனையை. (16)

இச்செய்யுளின் பின் 31–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

10469 (1) கொங்கு கமழ்தார்ச் சத்துருக்கன்
றன்னை நோக்கிக் குலவேந்தன்
பொங்கு கதிரோன் புதல்வ னுக்கும்
போர்வே லரக்கர் பூபதிக்கும்
செங்கட் குகற்கு மவரவர்தம்
சேனைதனக்கும் சிறப்பின்றித்
தங்கு மிடமும் வேண்டுவன
தானமியற்ற வெனச் சாற்றி.

,, (2) மூவர்க் கிளையோன் முனெழுந்து
மூரிக் களிற்றின் மீதேகிக்
காவற் பதியிற் பாதிதனை
யவர்கட் கிடமாக் கற்பித்துத்
தேவர்க் கமிர்தம் பாற்கடலிற்
றிருமா லளித்த ததுபோலிங்
கியாவர்க் கும்வேண் டியதெல்லாம்
மீராண் டளவிற் கிசைந்தளித்தான்.

10469 (3) தந்தாம் பதியிற் றம்மனையிற்
றங்குங் குடும்பத் திதமுடனே
நந்தாச் செல்வந் தழைத்தோங்க
நாளும் பொருந்தும் நலம்போலக்
கொந்தார் துளப மாமாலைக்
குலமா முடியா னுடன்கூட
வந்தா ரெல்லா மனமகிழ்ந்து
மதில்சூ ழயோத்தி நகரிருந்தார்.

பரதன் அவ்வாறே நாயகக் கோயில் புகுதல்

10470. என்றலு மிறைஞ்சி மற்றைத்
துணைவர்கள் யாவ ரோடும்
சென்றன னெழுந்து மாடம்
பலவொரீஇ யுலகிற் றெய்வப்
பொன்றிணிந் தமர ரோடும்
பூமக ளுறையும் மேருக்
குன்றென விளங்கித் தொன்று
நாயகக் கோயில் புக்கான்.

என்றலும் இறைஞ்சி, மற்றைத்
துணைவர்கள் யாவரோடும்
சென்றனன் எழுந்து, மாடம்
பல ஒரீஇ, உலகில் தெய்வப்
பொன் திணிந்து அமரரோடும்
பூமகள் உறையும் மேருக்
குன்று என விளங்கித் தோன்றும்
நாயகக் கோயில் புக்கான்.

பொ :—என்று கூறிய அளவில், பரதன் (இராமனை) வணங்கி விட்டு மற்றைய துணைவர்கள் அனைவரோடும் எழுந்து சென்று மாடங்கள் பலவற்றைக் கடந்து போய், தெய்வத்தன்மை வாய்ந்த பொன்னால் அலங்கரிக்கப் பெற்றுத் தேவதைகளோடு திருமகள் தங்கியுள்ள மேருமலை என்று சொல்லுமாறு எல்லோர்க்கும் விளக்கமாகத் தோன்றுகின்ற தலைமையான அரண்மனையில் புகுந்தான்.

கு :—நாயகக் கோயில், பொன்னால் அலங்கரிக்கப் பெற்றிருத்தலாலும் உயர்ந்த தோற்றமுடைமையாலும் அதற்கு மேருமலை உவமையாயிற்று. பூமகள் என்றது திருமகளை. (17)

நாயகக் கோயிலைக் கண்டவர்கள் வியப்புறுதல்

10471. வயிரமா ணிக்க நீல
மரகத முதலா யுள்ள
செயிரறு மணிக ளீன்ற
செழுஞ்சுடர்க் கற்றை சுற்ற
உயிர்துணுக் குற்று நெஞ்சும்
முள்ளமு மூச லாட
மயர்வறு மனத்து வீர
ரிமைப்பிலர் மயங்கி நின்றார்.

வயிரம், மாணிக்கம், நீலம்,
மரகதம் முதலாய் உள்ள
செயிர் அறு மணிகள் ஈன்ற
செழுஞ்சுடர்க் கற்றை சுற்ற,
உயிர் துணுக்குற்று நெஞ்சும்
உள்ளமும் ஊசல் ஆட,
மயர்வு அறு மனத்து வீரர்,
இமைப்பிலர், மயங்கி நின்றார்.

பொ :—மயங்குதல் இல்லாத மனத்தையுடைய வீடணன் முதலான வீரர்கள்,-வயிரமும் மாணிக்கமும் நீலமும் மரகதமும் முதலியனவாக உள்ள குற்றமற்ற மணிகள் வீசுகின்ற செழுமையான ஒளிக்கற்றைகள் எங்கும் சூழ்தலால் உயிர்திடுக்கிட்டு இன்னதென்று தெளிவு பிறவாமையால் மனமும் சித்தமும் ஊசல் ஆடா நிற்கக் கண் இமையாமல் பார்த்து மயங்கி நின்றார்கள்.

கு :—மயர்வறு மனத்து வீரர் என்றது வீடணன் முதலியோரை. (18)

பரதன் அந்த அரண்மனையின் வரலாற்றைக் கூறுதல்

10472. விண்டுவின் மார்பிற் காந்து
மணியென விளங்கு மாடம்
கண்டனர் பரதன் றன்னை
வினவின ரவர்க்கும் காதற்
புண்டரீ கத்து வைகும்
புராதனன் கன்னற் றோளான்
கொண்டநற் றவந்தன்னாலே
யுவந்துமுன் கொடுத்த தென்றான்.

விண்டுவின் மார்பில் காந்தும்
மணிஎன விளங்கும் மாடம்
கண்டனர்; பரதன் தன்னை
வினவினர் அவர்க்குக் காதல்
புண்டரீகத்து வைகும்
புராதனன், கன்னல் தோளான்,
கொண்டநல் தவந்தன்னாலே உவந்து,
முன் கொடுத்தது என்றான்.

பொ :—திருமாலின் மார்பில் ஒளிவீசுகின்ற கவுத்துவ மணி என விளங்கும் அம்மாடத்தைக் கண்டவர்களாகிய அவ்வீடணன் முதலியோர், (அம்மாடத்தைப் பற்றிப்) பரதனை வினவினார் களாக, அவர்க்கு 'அன்புள்ள தாமரை மலரில் தங்கியுள்ள பழையோனாகிய பிரமன், கரும்பைப் போன்ற நல்ல தோள்களை யுடைய இட்சுவாகு கொண்ட நல்ல தவத்தினால் முன்பு மகிழ்ந்து கொடுத்தது' என்று கூறினான்.

கு:—கன்னல் தோளான் என்றது, கரும்பைப் போன்று அழகிய தோளையுடைய இட்சுவாகுவை. இட்சுவாகு என்ற சொல்லைத் தமிழ்ப்படுத்தியவாறு. பிரமன் கொடுத்த சிறப்பினை யுடையது அம்மாடம் என்றவாறு. (19)

10473. பங்கயத் தொருவ னிக்கு
வாகுவிற் களித்த பான்மைத்

திங்கிது மலராள் வைகு
மாடமென் றிசைத்த போதின்
எங்களாற் றுதிக்க லாகு
மியல்பதோ வென்று கூறிச்
செங்கைகள் கூப்பி வேறோர்
மண்டப மதனிற் சேர்ந்தார்.

'பங்கயத்து ஒருவன் இக்குவாகுவிற்கு
அளித்த பான்மைத்து
இங்கு இது, மலராள் வைகும் மாடம்'
என்று இசைத்த போதில்,
'எங்களால் துதிக்க லாகும்
இயல்பதோ' என்று கூறி,
செங்கைகள் கூப்பி வேறு ஓர்
மண்டபம் அதனில் சேர்ந்தார்.

பொ:—'தாமரை மலரில் வீற்றிருக்கின்ற ஒப்பற்றவனாகிய பிரமன் இக்குவாகுவுக்குக் கொடுத்த தன்மையதாகிய இங்குள்ள இது திருமகள் தங்கியுள்ள மாடமாகும்' என்று சொல்லியபோது, (அவர்கள்) 'எங்களால் புகழத்தக்க தன்மையதோ?' என்று சொல்லித் தம் சிவந்த கைகளைக் குவித்து வணங்கிவிட்டு வேறோர் மண்டபத்தை அடைந்தார்கள்.

கு:—துதித்தல், இங்குப் புகழ்தலை உணர்த்தியது. புகழ் வரம்பு இகந்தது என்றவாறு. (20)

*சுக்கிரீவன் பரதனை வணங்கி இராமனது முடிசூட்டு விழாவைப் பற்றி வினவுதல்*

10474. இருந்தன ரனைய மாடத்
தியல்பெலா மெண்ணி யெண்ணிப்
பரிந்தன னிரவி மைந்தன்
பரதனை வணங்கித் தூயோய்
கருந்தட முகிலன் னாற்குக்
காப்புநா ணணியு நன்னாள்

தெரிந்திடா திருத்த லென்னோ
வென்றலு மண்ணல் செப்பும்.

இருந்தனர், அனைய மாடத்து
இயல்பு எலாம் எண்ணி எண்ணி;
பரிந்தனன் இரவி மைந்தன்,
பரதனை வணங்கி, 'தூயோய்!
கருந்தட முகில் அன்னாற்குக்
காப்பு நாண் அணியும் நன்னாள்
தெரிந்திடாது இருத்தல் என்னோ?'
என்றலும், அண்ணல் செப்பும்.

பொ:—(தாங்கள் சென்று சேர்ந்த) அந்த மாடத்தின் சிறப்பியல்புகளையெல்லாம் எண்ணி எண்ணி வியந்து வீடணன் முதலியோர் இருந்தனர்; சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவன் பரிவுடையவனாய்ப் பரதனை வணங்கி, 'தூய்மையான உள்ளமுடையவனே! கரிய பெரிய மேகம் போன்றவனாகிய இராமனுக்குக் காப்புநாண் அணிதற்குரிய நல்லநாளைத் தேர்ந்தெடுக்காமல் இருப்பது ஏனோ?' என்று வினவுதலும், பரதன் சொல்லுவான்.

கு:—பரிதல்-இரக்கம் கொள்ளுதல். இதுகாறும் காட்டில் திரிந்து வருந்திய இராமன் காப்புநாண் பூண்டு மணிமுடி சூடி அரசாட்சியை மேற்கொள்ளுவது என்றோ? என்ற இரக்கம் காரணமாகச் சுக்கிரீவன் பரதனை வினவினான் என்க. இராமனே முடி சூடுதற்குரியவன் என்ற தூயமனம் படைத்தவன் பரதன் என்பது புலப்பட அவனைத் 'தூயோய்!' என விளித்தான். கரிய பெரிய மேகம் மழை பொழிந்து மக்கட்கு நலஞ்செய்யக் காத்திருத்தல் போல இராமன் கரிய பெரிய திருமேனியனாய் மக்களுக்கு அருள் மழை சொரியக் காத்திருக்கின்றான் என்பான் 'கருந்தட முகிலன்னாற்கு' என்றான். அண்ணல் என்றது, பரதனை. (21)

*தீர்த்தநீர் கொணர அனுமன் விரைதல்*

10475. ஏழ்கட லதனிற் றோய
மிருநதி பிறவிற் றோயம்
தாழ்விலா திவண்வந் தெய்தற்
கருமைத்தோர் தன்மைத் தென்ன

ஆழியொன் றுடையோன் மைந்த
னனுமனைக் கடிதி னோக்கச்
சூழ்புவி யதனை யெல்லாங்
கடந்தனன் காலின் றோன்றல்.

'ஏழ்கடல் அதனில் தோயம்,
இருநதி பிறவில் தோயம்
தாழ்வு இலாது இவண் வந்து எய்தற்கு
அருமைத்தோர் தன்மைத்து' என்ன,
ஆழி ஒன்று உடையோன் மைந்தன்,
அனுமனைக் கடிதின் நோக்க,
சூழ்புவி அதனை எல்லாம்
கடந்தனன், காலின் தோன்றல்.

பொ :—'ஏழுகடலில் உள்ள நீரும், பெரிய நதி முதலிய வற்றின் நீரும் குறைவிலாது இங்கு வந்து சேர்தற்கு அரிதான தன்மையாக உள்ளது' என்று சொல்ல, ஓராழித்தேரையுடைய சூரியன் மைந்தனாகிய சுக்கிரீவன், அனுமனை விரைந்து நோக்க, அக்குறிப்பை யறிந்து காற்றின் புதல்வனாகிய அனுமன் தீர்த்தம் கொணரக் கடல் சூழ்ந்த பூமியை முழுதும் கடந்து சென்றான்.

கு :—இராமன் காப்பு நாண் அணிதற்குரிய நாளைத் தேர்ந் திடாமல் இருத்தற்குக் காரணம் சேய்மையில் உள்ள தீர்த்தங்கள் இங்கு வந்து சேர்தற்கு அரிதாக உள்ளதே என்பதைப் பரதன் வாயிலாகக் கேட்டறிந்த சுக்கிரீவன் விரைந்து சென்று எல்லாத் தீர்த்தங்களையும் கொணரவல்ல அனுமனைக் குறிப்பால் நோக்கி னான் ஆக, அக் குறிப்பறிந்து அனுமன் விரைந்து சென்றான் என்றவாறு. விரைந்து செல்லுதற் குரியவன் என்ற பொருள் புலப்பட அனுமனைக் 'காலின் தோன்றல்' என்று இங்குக் குறித்தவாறு. (22)

வசிட்டன் வர அனைவரும் அவனை வணங்குதல்

10476. கோமுனி யோடு மற்றைக்
கணிதரைக் கொணர்க வென்ன
ஏவினன் றேர்வ லான்சென்
றிசைத்தலு முலக மீன்ற

பூமகன் றந்த வந்தப்
புனித மாதவன்வந் தெய்த
யாவரு மெழுந்து போற்றி
யிணையடி தொழுது நின்றார்.

'கோமுனியோடு மற்றைக்
கணிதரைக் கொணர்க!' என்று
ஏவினன்; தேர்வலான் சென்று
இசைத்தலும், உலகம் ஈன்ற
பூமகன் தந்த அந்தப்
புனித மாதவன் வந்து எய்த,
யாவரும் எழுந்து போற்றி
இணையடி தொழுது நின்றார்.

பொ:—'தலைமைத் தன்மையுடைய வசிட்ட முனிவனோடு மற்றைய சோதிடரையும் அழைத்துவருக' எனப்பரதன் சுமந்திரனை நோக்கிக் கூறினனாக, அந்தத் தேர்வலானாகிய சுமந்திரன் சென்று அதைச் சொன்னவுடனே, உலகத்தைப் படைத்த பிரமன் ஈன்ற அந்தத் தூய்மையுடைய வசிட்ட முனிவன் வந்து அடைய, யாவரும் எழுந்து வாழ்த்தி அவனுடைய இரு திருவடிகளையும் தொழுது நின்றார்கள்.

கு:-முடிசூட்டும் நாளைத் தேர்ந்தெடுக்கச் சோதிடர்களையும். அழைத்துக் கொண்டு வசிட்டன் வந்து சேர்ந்தான் என்க. பூமகன் என்றது தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனை. (23)

வசிட்டன்: ஆராய்ந்து, இராமன் காப்பு நாண் அணியும் நாள் நாளைக்கு எனல்

10477. அரியணை பரத னீய
வதன்கணுண் டிருந்த வந்தப்
பெரியவ னவனை நோக்கிப்
பெருநிலக் கிழத்தி யோடும்
உரியமா மலரா ளோடும்
முகந்தன னெருவில் செல்வம்

கரியவன் றுய்த்தற் கேய்ந்த
காப்புநா ணாளை யென்றான்.

அரியணை பரதன் ஈய,
அதன்கண் ஆண்டு இருந்த அந்தப்
பெரியவன், அவனை நோக்கி,
'பெருநிலக் கிழத்தி யோடும்
உரியமா மலராளோடும்
உகந்தனன் ஒருவு இல் செல்வம்
கரியவன் துய்த்தற்கு ஏய்ந்த
காப்பு நாண் நாளை' என்றான்.

பொ :—பரதன், (வந்த, முனிவனுக்குச்) சிறந்த இருக்கை நல்க, அவ்விருக்கையில் இருந்த அந்தப் பெரியவனாகிய வசிட்ட முனிவன், (பரதன் குறிப்பறிந்து) அவனை நோக்கிப் 'பெரிய பூதேவியோடும் உரிமையுள்ள சிறந்த திருமகளோடும் இருந்து மகிழ்ந்தனனாய் நீங்காத செல்வத்தைக் கரிய செம்மலாகிய இராமன் துய்ப்பதற்குப் பொருத்தமான காப்புநாண் அணிதற்குரிய நாள் நாளை ஆகும்' என்று கூறினான்.

கு :—பெரியவன் என்றது, வசிட்டனை. காப்பு நாண் அணிதற்குரிய நாளை அறியவே தன்னைக் கணிதமாக்களோடு வரவழைத்தான் பரதன் என்பதை யறிந்த வசிட்ட முனிவன், வந்து அமர்ந்ததும் 'காப்பு நாண் நாளை' என்று கூறுவானானான். காப்பு நாண் என்றது, காப்புநாண் அணிதற்குரிய நாள் என்னும் பொருளது. கரியவன் என்றது, இராமனை. நிலச் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும் இங்குப் பூதேவியாகவும் திருமகளாகவும் உருவகம் செய்து கூறியவாறு. உகப்பு—மகிழ்ச்சி. உகந்தனனாய்த் துய்த்தற்கு என முற்றெச்சமாக்கி முடிக்க. (24)

இராமனது முடிசூட்டு விழாவிற்கு அழைப்பு விடுதல்

10478. இந்திரன் குருவு மன்னாற்
கேய்ந்தவ ரெனவும் நின்ற
மந்திர விதியி னானும்
வசிட்டனும் வரைந்து விட்டார்

சந்திர கவிகை யோங்குந்
தயரத ராமன் ருமச்
சுந்தர மவுலி சூடு
மோரையும் நாளுந் தூக்கி.

இந்திரன் குருவும், அன்றுற்கு
ஏய்ந்தவர் எனவும், நின்ற
மந்திர விதியினுரும், வசிட்டனும்,
வரைந்து விட்டார், —
சந்திர கவிகை ஓங்கும்
தயரத ராமன் தாமச்
சுந்தர மவுலி சூடும்
ஓரையும் நாளும், தூக்கி.

பொ :—இந்திரனுக்குக் குருவாகிய வியாழனும் அவனுக்குப் பொருத்தமாய் அமைந்த மற்றைய அமைச்சரும் போல நின்ற வசிட்ட முனிவனும் மற்றைய ஆலோசனைக்குரிய அமைச்சரும், சந்திரனைப் போன்ற வெண்கொற்றக் குடை உயர்ந்து தோன்றுதற்குக் காரணமான தயரத ராமன், மாலை யணிந்த அழகிய முடியைச் சூடும் ஓரையும் நாளும் ஆராய்ந்து ஓலையில் எழுதி மன்னர்க்கெல்லாம் அனுப்பினுர்கள்.

கு :—வசிட்டனுக்கு வியாழனும் மற்றை அமைச்சருக்கு வியாழனைச் சார்ந்தோரும் உவமை. வியாழன் இந்திரனுக்குக் குருவாகவும் அமைச்சனுகவும் இருத்தல் போலவே, வசிட்டனும் சூரிய குலத்து மன்னவர்க்குக் குருவாகவும் அமைச்சனுகவும் இருத்தல் புலப்பட இங்ஙனம் உவமை கூறினுர். 'குருவும் ஏய்ந்தவரெனவும் மந்திர விதியினுரும் வசிட்டனும்' என்பது எதிர் நிரனிறைப் பொருள்கோள் ஆகும். வசிட்டனும் மந்திரவிதியினுரும் ஓரையும் நாளும் தூக்கி வரைந்து விட்டார்என இயையும். சந்திரகவிகை என்பது உவமத்தொகை. வெயின்மறையாக வின்றிக் குடிமறைக்கும் கொற்றக்குடையாகக் குடை அமைவது ஆள்வோரின் மாட்சியால் ஆதலின், 'கவிகை ஓங்குதற்குக் காரணமான தசரத ராமன்' என்று 'ஓங்கும்' என்ற பெயரெச்சத்தைக் காரணப் பொருளதாக்கிப் பொருள் கூறப்பெற்றது. தூக்குதல்—ஆராய்தல். (25)

### இராமன் முடிசூட்டு விழாவிற்கு மூவுலகத்தோரும் அயோத்தி அடைதல்

10479. அடுக்கிய வுலக மூன்று
மாதரத் தூதர் கூற
இடுக்கொரு பேருமின்றி யயோத்திவந்
திறுத்த தென்றால்
தொடுக்குறு கவியான் மற்றைத்
துழனியை யிறுதி தோன்ற
ஒடுக்குறுத் துரைக்குந் தன்மை
நான்முகத் தொருவற் குண்டோ.

அடுக்கிய உலகம் மூன்றும்
ஆதரத் தூதர் கூற,
இடுக்கு ஒருபேரும் இன்றி
அயோத்திவந்து இறுத்தது என்றால்,
தொடுக்குறு கவியான் மற்றைத்
துழனியை இறுதி தோன்ற
ஒடுக்குறுத்து உரைக்கும் தன்மை
நான்முகத்து ஒருவற்கு உண்டோ ?

வொ :—ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கியுள்ள பாதலம், பூதலம், மீதலம் என்ற உலகம் மூன்றிலும் சென்று ஆர்வம் பொருந்திய தூதர் சொல்ல, அம் மூவுலகத்தின் இடுக்கில் கூட ஒருவரும் தங்காமல் அயோத்திக்கு யாவரும் வந்து தங்கினார்கள் என்றால், (அவ்வாறு தங்கியவர்களின் கூட்டத்தில் எழுந்த) பேரொலியைப்பற்றி முடிவு தோன்றுமாறு, சொற்கொண்டு தொடுக்கும் கவியினால் அடக்கிச் சொல்லும் திறம் நான்கு முகங்களையுடைய பிரமனுக்கும் உளதாமோ ?

கு :—ஆதரம்—ஆர்வம். இறுத்தல்—தங்குதல். மூவுலகத்தின் மூலை முடுக்குகளில் உள்ளோரும் தவறாமல் அயோத்திக்கு வந்துவிட்டனர் என்பார் ‘இடுக்கொரு பேரு மின்றி அயோத்தி வந்திறுத்த தென்றால்’ என்றார். ‘கவியான்’ என்புழி ஆனுருபு ஏழாவதன் இடப்பொருளில் வந்தது; வேற்றுமை மயக்கம். துழனி—ஒலி. நான்முகத் தொருவற்கும் என்ற உயர்வு சிறப்

பும்மை விகாரத்தால் தொக்கது. ஒடுக்குறுத் துரைத்தலாவது அடக்கிக் கூறுதல். நான்முகனுக்கே யியலாதாயின் ஒருமுக முடைய யான் எங்ஙனம் கூற இயலும்? என்பது எச்சமாகக் கொள்ளப்படும். இது கவிக்கூற்று. (26)

இச்செய்யுளின் பின் 52–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

10479 (1) கயிலையில் வாழு மீசன்
முதலிய கடவு ளோர்தம்
அயில்விழி அரிவை மாரோ
டந்தரம் புகுந்து மொய்த்தார்
குயில் மொழிச் சீதைகொண்கன்
நிலமகள் தன்னைக் கொள்ளும்
இயல்புடை வதுவை
காணும் ஆதர மிதயத்தெய்த.

,, (2) வேறினி யுரைப்ப தென்னோ
வியன் தருக் குலங்களாகி
கூறிய பொருள்க ளெல்லாம்
கொற்றவன் வதுவை காணத்
தேறுதம் முருவம் நீத்து
மானிட உருவில் சேர்ந்தாங்
கூறிய வுவகை யோடு
மயோத்திவந் துற்ற தன்றே.

31-ஆம் பிரதியில்:—

,, (3) மருவுந் தவத்து நாரதனும்
வசிட்ட முனியு மற்றவரும்
திருவின் பெருமான்றனைக் கண்டு
சிறந்தவிருக்கான் முறை வாழ்த்தி
கருகும் புயலும் காயாவின்
மலரும் போலுங் காட்சியாய்
பொருவெஞ் சிலையா லரக்கர்குல
மழித்தாய் மகுடம் புனைகென்றார்.

,, (4) தொல்லை முனிவ ருரைத்ததற்குச்
சுருதித் தலைவன் பொருந்துதலும்

எல்லே யுலகின் முனிவரையு
மிராச குலத்தி னியாவரையும்
அல்லல் அறியா வமைச்சரையு
மருமா மறையோ ரனைவரையும்
மல்லல் பயிலு முரசார்ப்ப
வழைத்தான் வசிட்ட மாமுனிவன்.

*வசிட்ட முனிவன் முதலியோர் இராமனை அணுகி முடிசூடும் நாள் நாளை என்பதை அறிவித்தல் 10480, 10481*

10480. அவ்வயின் முனிவ னேடும்
பரதனு மரியின் வேந்தும்
செவ்விய நிருதர் கோனுஞ்
சாம்பனும் வாலி சேயும்
எவ்வமி லாற்றல் வீரர்
யாவரு மெழுந்து சென்றுங்
கவ்விய மவித்த சிந்தை
யண்ணலைத் தொழுது சொன்னர்.

அவ்வயின் முனிவ னேடும்
பரதனும், அரியின் வேந்தும்
செவ்வியல் நிருதர் கோனும்,
சாம்பனும், வாலி சேயும்,
எவ்வம் இல் ஆற்றல் வீரர்
யாவரும், எழுந்து சென்று ஆங்கு
அவ்வியம் அவித்த சிந்தை
அண்ணலைத் தொழுது சொன்னர்.

பொ:—அப்பொழுது வசிட்ட முனிவனேடு பரதனும், வானரர் வேந்தனை சுக்கிரீவனும், செவ்விய தன்மையுடைய அரக்கர் கோனுகிய வீடணனும், சாம்பனும், வாலியின் மகனுகிய அங்கதனும், குற்றம் இல்லாத ஆற்றலையுடைய வீரர்கள் யாவரும் எழுந்து சென்று அவ்விடத்துள்ள, பொருமை நீங்கிய மனத்தை யுடைய இராமனைத் தொழுது சொல்லலானர்.

கு :—சொன்னதை அடுத்த செய்யுளில் காணலாம். அண்ணலைத்தொழுதல் பரதன் முதலியோர்க்கே கொள்ளவேண்டி 'முனிவனோடு' என ஒடுக்கொடுத்துப் பிரித்துக் கூறியவாறு. அரி—குரங்கு. கொடுமையுடைய நிருதரை நீக்குதற்குச் செவ்வியனிருதர்கொன்' எனச் சிறப்பித்தவாறு. அவ்வியம்-பொருமை, இராமன் அவ்வியம் அவித்த சிந்தையன் ஆதலின், பரதனே ஆண்டுகொண்டிருக்கட்டும் என்று இராமன் அமைதியடைதலும் கூடுமாதலின் அவனுக்கு முடிசூடும் விழாவிற்குரிய கடன்மையியற்றுக எனச் சொல்லவேண்டியதாயிற்று என்பது புலப்படச் சிறப்பித்தவாறு (27)

10481. நாளைநீ மவுலி சூடு
நலந்திகழ் பெரிய நன்னாள்
காளைநீ யதனுக் கேற்ற
கடன்மைமீ தியற்று கென்று
வேளையே பொடிய தாக
விழிக்குநீ ணுதலின் வெண்பூப்
பூளையே சூடு வானைப்
பொருவுமா முனியும் போனான்.

'நாளை நீ மவுலி சூடும்
நலம் திகழ் பெரிய நல் நாள்;
காளை ! நீ அதனுக்கு ஏற்ற
கடன்மை மீது இயற்றுக !' என்று,
வேளையே பொடியது ஆக
விழிக்கும் நீள் நுதலின் வெண்பூப்
பூளையே சூடு வானைப்
பொருவும் மாமுனியும் போனான்.

பொ :—காளைப் பருவமுடையோனே ! நீ முடிசூடுதற்குரிய நலம் எல்லாம் விளங்குகின்ற பெரிய நல்ல நாள் நாளை ஆகும்; அதற்கு ஏற்ற கடமைகளை மேல் செய்க' என்று கூறிவிட்டு, மன்மதனைச் சாம்பற்பொடியாகுமாறு கண்ணைத் திறந்த நீண்ட நெற்றியின்கண் வெள்ளிய பூளைப்பூவைச் சூடுகின்ற சிவபிரானையொக்கும் சிறப்புடைய வசிட்ட முனிவனும் தன்னிருப்பிடத்திற்குப்போனான்.

கு :—காளை என்றது, இராமனது பருவத்தை நோக்கிய விளி. இவ்விளியால், முடிசூடி அரசாளுதற்குரிய பருவமும் ஆற்றலு முடையவன் என்பதைப் புலப்படுத்தி அவன் மருதபடி செய்த வாறு. மன்மதனை எரித்த விழி சிவபிரானின் நெற்றியில் உள்ள தாகலின் 'விழிக்கு நீணுதலின்' என்று சிறப்பித்தார். பூளைப் பூவை நெற்றிக்கு மேல் சூடுபவன் என்பது கருத்து. வசிட்ட முனிவனது ஆற்றலும் பெருமையும் தோன்ற, மாரனை வென்ற சிவனை உவமை கூறியவாறு. (28)

மயன் மண்டபம் அமைத்தல்

10482. நான்முகத் தொருவ னேவ
நயனறி மயனென் றோதும்
நூன்முகத் தோங்கு கேள்வி
நுணங்கியோன் வணங்கு நெஞ்சன்
கோன்முகத் தளந்து குற்றஞ்
செற்றுல கெல்லாங் கொள்ளு
மான்முகத் தொருவ னன்னாண்
மண்டபம் வயங்கக் கண்டான்.

நான்முகத்து ஒருவன் ஏவ,
நயன் அறி மயன் என்று ஓதும்
நூல்முகத்து ஓங்கு கேள்வி
நுணங்கியோன், வணங்கும் நெஞ்சன்,
கோன்முகத்து அளந்து குற்றம்
செற்று உலகு எல்லாம் கொள்ளும்
மான்முகத்து ஒருவன் நல்நாள்
மண்டபம் வயங்கக் கண்டான்.

பொ :—நான்கு முகங்களையுடைய பிரமன் ஏவ, நல்லன வற்றையெல்லாம் அறிந்த, 'மயன்' என்று பெயர் சொல்லப் படுகின்ற மான்முகத்தையுடைய ஒருவன், சிற்ப நூலில் அழுந் திய கேள்வியினலாகிய நுண்ணறிவினையுடையவனய் அவ்வறி விற்கேற்ற பணிவான நெஞ்சமுடையனய்க் கோலினல் நிலத்தை அளந்து மண்டபத்திற்கு மாருன குற்றங்களை நீக்கி

உலக முழுவதையும் கொள்ளுதற்குரிய, நல்ல அந்நாளுக்கேற்ற, பெரிய மண்டபத்தை விளக்கம்பெறச் செய்தான்.

கு:—மயன் என்பவன் பிரமனிடம் சிற்ப நூலைக் கற்றவன் என்பர். மயன் மான்முகம் போன்ற முகத்தையுடையவன் ஆதலின், அவனை மான் முகத்தொருவன் என்றார். மயன் என்றேதும் மான்முகத்தொருவன் என இயையும். 'கேள்வி நுணங்கியோன் வணங்கு நெஞ்சன்' என்பது, ''நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய வாயின ராத லரிது'' (திருக்குறள்-419) என்பதை யடியொற்றியெழுந்தது என்பது சொல்லமைப்பால் விளங்குதல் காணலாம். தக்கார்க்குப் பணியும் நெஞ்சினன் என்பார், 'வணங்கு நெஞ்சன்' என்றார். கண்டான்—செய்தான்: இராமன் முடிசூட்டு விழா நிகழ்தற்குரிய பெரிய மண்டபத்தை அயன் ஏவலின்படி மயன் செய்து முடித்தான் என்க. (29)

இச்செய்யுளின் பின் 52–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10482 (1) தேவர்கம் மியன்தான் செய்த
செழுமணி மாட கோடி
யாவரும் புகுந்து மொய்த்தார்
எழுந்த மங்கலத்தி னோசை
நாவரும் பனுவல் வீணை
நாரதன் முதலா யுள்ள
மேவரு முனிவ ரெல்லாம்
விதிமுறை வேள்வி கொண்டார்.

,, (2) அந்தணர், வணிகர், வேளாண்
மரபினோ ராலி நாட்டுச்
சந்தணி புயத்து வள்ளல்
சடையனே யனைய சான்றோர்
உய்ந்தன மடிய மென்னு
முவகையி னுவரி நாண
வந்தன ரிராமன் கோயில்
மங்கலத் துரிமை மாக்கள்.

அனுமன் எழுகடல் நீரைக் கொணர்தல்

10483. சூழ்கட ணான்கிற் றோய
மெழுவகைத் தாகச் சொன்ன
ஆழ்திரை யாற்றி னீரோ
டமைத்தியின் றென்ன வாமென்
றூழியி னிறுதி செல்லுந்
தாதையி னுலாவி யன்றே
ஏழ்கட னீருந் தந்தா
னிருந்துய்ய மருந்து தந்தான்.

'சூழ்கடல் நான்கின் தோயம்
எழுவகைத்தாகச் சொன்ன
ஆழ்திரை ஆற்றின் நீரோடு
அமைத்தி இன்று' என்ன, ஆம் என்று,
ஊழியின் இறுதி செல்லும்
தாதையின் உலாவி, யன்றே
ஏழ்கடல் நீரும் தந்தான்,—
இருந்து உய்ய மருந்து தந்தான்.

மொ :—'எழுவகையாகச் சொல்லப்பட்ட, உலகின் நாற்புறமும் சூழ்ந்துள்ள ஏழுகடலின் நீரை, ஆழ்ந்து அலைகளையுடைய வாய தூய கங்கை முதலிய ஆற்றின் நீரோடு இன்று இங்குக் கொணர்ந்து சேர்ப்பாயாக' என்று சுக்கிரீவன் சொல்ல, இலக்குவன் முதலியவர்கள் இறவாது இருந்து வாழ மருந்து கொணர்ந்து உதவினவனுகிய அனுமன், 'ஆம்' என்று உடன்பட்டு, ஊழி முடிவில் விரைந்து உலவும் தன் தந்தையாகிய வாயு தேவன் போல விரைந்து உலவி ஏழு கடல்கள் நீரையும் அன்றே கொணர்ந்து தந்தான்.

கு :—எழுவகைத்தாகச் சொன்ன கடல், நான்கின் சூழ் கடல் எனத் தனித்தனி இயையும். ஏழு கடலும் நிலவுலகின் நாற்புறத்திலும் உள்ளனவே என்பதை விளக்கியவாறு. தோயம்—நீர். இலக்குவன் முதலியோர் அனைவரும் இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் இறந்தஞான்று அவர்கள் மீண்டும் இவ்வுலகில் இருந்து வாழுமாறு மருத்துமலையைக் கொணர்ந்து

விரைந்தளித்த அனுமனுக்கு இந்த ஏழ்கடல் நீரைக் கொணர்வது அரிதோ என்ற கருத்துப் புலப்பட ''இருந்துய்ய மருந்து தந்தான் ஏழ்கடனீருந் தந்தான்'' என்றார். துன்பக் காலத்துதவியவன் முடிசூடும் இன்பக் காலத்தில் உதவுதல் சொல்ல வேண்டுமோ? என்பதும் கொள்க. ஏழ்கடல்கள்:— உப்புக் கடல், கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர்க்கடல் என்பன. (30)

*வேந்தர்கள் சரயுநதியின் புனலை யானைமேற் கொணர்தல்*

10484. எரிமணிக் குடங்கள் பன்னூற்
றியானைமேல் வரிசைக் கான்ற
விரிமதிக் குடையி னீழல்
வேந்தர்கள் பலரு மேந்திப்
புரைமணிக் காள மார்ப்பப்
பல்லியந் துவைப்பப் பொங்கும்
சரயுவிற் புனலுந் தந்தார்
சங்கின முரல மன்னோ.

எரிமணிக் குடங்கள் பல் நூற்று
யானைமேல் வரிசைக்கு ஆன்ற
விரிமதிக் குடையின் நீழல்,
வேந்தர்கள் பலரும் ஏந்தி,
புரைமணிக் காளம் ஆர்ப்ப,
பல் இயம் துவைப்ப, பொங்கும்
சரயுவின் புனலும் தந்தார்,
சங்கு இனம் முரல மன்னோ.

பொ:—வேந்தர்கள் பலரும் தம் பெருமைக்குப் பொருத்தமான விரிந்த வெண்மதி போன்ற வெண்கொற்றக் குடையின் நீழலின் பல நூற்றுக் கணக்கான ஒளிவாய்ந்த இரத்தினக் குடங்களை யானைமேல் ஏந்திக்கொண்டு, உள்துளையுள்ள அழகிய காளம் ஆரவாரிக்கவும், பலவகையான பிற வாத்தியங்கள் ஒலிக்கவும், சங்கினங்கள் ஒலிக்கவும் அலைகள் பொங்குகின்ற சரயு நதியின் புனலையும் கொணர்ந்தார்கள்.

கு :—வேந்தர்கள் சரயுநதியின் நீரை இரத்தினக் குடங்களில் முகந்து கொண்டு பல நூற்றுக் கணக்கான யானைகளின் மேல் ஏந்திக்கொண்டு அரச மதிப்பிற்கேற்ற விரிந்த வெண்குடை நிழலில் வாத்திய முழக்கத்துடன் வந்து சேர்ந்தார்கள் என்றவாறு. எரி மணிக்குடங்கள் என்றது, எரிவதுபோல ஒளி வீசுகின்ற மாணிக்கம் பதித்த குடங்களை. காளம்—ஊது கொம்பு. புரை—உள்துளை. மணிக்காளம் என்பதற்கு மணிகள் பதித்த ஊது கொம்பு எனலும் ஆம். (31)

பளிங்கு மாடத்திட்ட மாணிக்க பீடத்தில்
இராமன் சீதையோடு அமர்தல்

10485. மாணிக்கப் பலகை தைத்து
வயிரத்தின் கால்கள் சேர்த்தி
ஆணிப்பொன் சுற்று முற்றி
யழகுறச் சமைத்த பீடம்
ஏணுற்ற பளிக்கு மாடத்
திட்டன ரதனின் மீது
பூணுற்ற திரடோள் வீரன்
றிருவொடும் பொலிந்தான் மன்னோ.

மாணிக்கப் பலகை தைத்து,
வயிரத்தின் கால்கள் சேர்த்தி,
ஆணிப் பொன் சுற்று முற்றி
அழகு உறச் சமைத்த பீடம்
ஏண் உற்ற பளிக்கு மாடத்து
இட்டனர்; அதனின் மீது
பூண் உற்ற திரள்தோள் வீரன்
திருவொடும் பொலிந்தான் மன்னோ.

பொ :—மாணிக்கத்தினால் இயன்ற பலகையைத்தைத்து வயிரத்தினாலாகிய கால்களைச் சேர்த்து, ஆணிப் பொன்னால் சுற்றுப்புறம் முற்றுப்பெறச்செய்து அழகு பொருந்தச் செய்த பீடத்தைப் பெருமை பொருந்திய பளிக்கு மாடத்தில் இட்டார்கள்; அப்பீடத்தின்மேல் ஆபரணங்கள் பொருந்திய திரண்ட தோளை

யுடைய இராமன் திருமகளின் அமிசமான சீதையோடும் அமர்ந்து பொலிவுடன் விளங்கினுன்.

கு :—இராமனுடைய பெருமைக்கு ஏற்ப மாடம் பளிங்கினு லும், பீடம் மாணிக்கப் பலகையாலும் அமைக்கப் பெற்றன என்க. ஏண்-பெருமை. ஆணிப்பொன் என்றது மாற்றுயர்ந்த பொன்னினை. (32)

இராமனுக்கு வேந்தர் அபிடேகம் செய்தல்

10486. மங்கல கீதம் பாட
மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினங் குமுறப் பாண்டி
றண்ணுமை யொலிப்பத் தாவில்
பொங்கு பல்லியங்க ளார்ப்பப்
பூமழை பொழிய விண்ணோர்
எங்கணு யகனை வெவ்வே
றெதிர்ந்தபி டேகஞ் செய்தார்.

மங்கல கீதம் பாட,
மறை ஒலி முழங்க, வல்வாய்ச்
சங்கினம் குமுற, பாண்டில்
தண்ணுமை ஒலிப்ப, தா இல்
பொங்கு பல் இயங்கள் ஆர்ப்ப,
பூமழை பொழிய விண்ணோர்,
எங்கள் நாயகனை வெவ்வேறு
எதிர்ந்து, அபிடேகம் செய்தார்.

பொ :—மங்கல கீதங்கள் பாடவும், வேத ஒலி முழங்கவும். வலிய வாயினையுடைய சங்கினங்கள் முழங்கவும், பாண்டில், தண்ணுமை என்ற வாத்தியங்கள் ஒலிக்கவும், குற்றமற்ற மிக்க பல வாத்தியங்கள் ஆரவாரிக்கவும், தேவர்கள் மலர் மழை பொழியவும், (வேந்தர்கள்) எங்கள் நாயகனுகவுள்ள இராமனைத் தனித்தனியே எதிர்ப்பட்டு அபிடேகம் செய்தார்கள்.

கு :—வருஞ் செய்யுளில் மந்திரக் கிழவர் முதலியோரைக் கூறி வேந்தரைக் கூருமையால் இங்கு அபிடேகம் செய்தவர் வேந்

தரே என்பது பாரிசேட அளவையால் பெறப்படும். விண்ணோர் பூமழை பொழிய என மாற்றுக. விண்ணோர் மண்ணில் வந்து இராமனுக்கு அபிடேகம் செய்தார் என்பது பொருந்துவதன்று. வேந்தர் அபிடேகம் செய்தமை கூறுமை குன்றக் கூறலாக முடி தலையும் நோக்குக. இப்பாடலின் முதற் பகுதியையொத்து விடைகொடுத்த படலம் 5-ஆம் பாடல் அமைந்துள்ளது. கவி, இங்கு இராமனை 'எங்கள் நாயகன்' எனக்கூறி உரிமை கொண்டாடுகின்றார். (33)

### மாதவர் முதலியோர் அபிடேகம் செய்தல்

10487. மாதவர் மறைவ லாளர்
மந்திரக் கிழவர் மற்றும்
மூதறி வாள ருள்ள
சான்றவர் முதனீ ராட்டச்
சோதியான் மகனு மற்றைத்
துணைவரு மனுமன் றானும்
தீதிலா விலங்கை வேந்தும்
பின்னபி டேகஞ் செய்தார்.

மாதவர், மறைவலாளர்,
மந்திரக்கிழவர் மற்றும்
மூதறிவாளர் உள்ள
சான்றவர் முதல் நீர் ஆட்ட,
சோதியான் மகனும் மற்றைத்
துணைவரும், அனுமன் தானும்,
தீது இலா இலங்கை வேந்தும்
பின் அபிடேகம் செய்தார்.

பொ :—பெரிய தவமுனிவர்களும் வேதம் வல்ல வேதியர்களும், மந்திரிமார்களும், முதிர்ந்த அறிவாளிகளாகவுள்ள மற்றைப் பெரியோர்களும் முதலில் இராமனுக்கு அபிடேகம் செய்யப் பின்னர், சூரியன் மகனாகிய சுக்கிரீவனும் மற்றுமுள்ள அங்கதன், நீலன், சாம்பவன் போன்ற துணைவர்களும் அனுமனும் தீமையில்லாத இலங்கை வேந்தனாகிய வீடணனும் அபிடேகம் செய்தார்கள்.

கு :—வேந்தர்கள் வேந்தனுகிய இராமனுக்கு வேந்தர்கள் அபிடேகம் செய்தலே முறையாதலின் அதனை முன்பு தனியே கூறிவிட்டுப் பின்பு மாதவர் முதலிய பல்வகையினர் அபிடேகம் செய்ததைக் கூறுங்கால் மாதவர், மறையோர், மந்திரியர், சான்ருேர் என்போர் முன்பும் சுக்கிரீவன் முதலிய வானரரும் அனுமனும் விடணனும் பின்பும் அபிடேகம் செய்தமை கூறிய வாறு. சோதியான் என்றது சூரியனை. 'குகன்' மற்றைத் துணை வரும் என்புழி அடங்குவான். (34)

அபிடேக நீரின் சிறப்பு

10488. அங்கண்வா னுலகந் தாய
வடிமலர்த் தவிசோ னாட்டும்
கங்கைவார் சடையி னேற்ருன்
கண்ணுத லொருவ னிந்நாள்
சிங்கவே றனையான் செய்ய
திருமுடி யாட்டு நன்னீர்
எங்கனேற் றன்னோன் வாழு
மென்றனர் புலவ ரெல்லாம்.

'அம்கண் வான் உலகம் தாய
அடி, மலர்த்தவிசோன் ஆட்டும்
கங்கை வார் சடையின் ஏற்ருன்,
கண்ணுதல் ஒருவன்; இந்நாள்
சிங்க ஏறு அனையான் செய்ய
திருமுடி ஆட்டும் நலநீர்
எங்கன் ஏற்று அன்னோன் வாழும்?'
என்றனர், புலவர் எல்லாம்.

பொ :— அழகிய இடத்தையுடைய விண்ணுலகத்தை அளக்கத் தாவிய (திருவிக்கிரமனுகிய திருமாலின்) திருவடியில் தாமரை மலரின் வீற்றிருக்கும் பிரமன் அபிடேகித்த கங்கை நீரைக் கண்ணுதற் கடவுளாகிய சிவன் தன் நீண்ட சடையில் ஏற்றுக்கொண்டான்; இந்நாளில் ஆண் சிங்கம் போன்றவனுகிய இராமனது செவ்விய திருமுடியில் ஆட்டும் நல்ல நீரை அச்சிவன்

எவ்வாறு ஏற்று வாழ்வான்? என்று தேவர்கள் எல்லாம் கூறினர்.

கு :—உலகளந்த ஞான்று விண்ணில் தாவிய திருவிக்கிரமனை திருமாலின் திருவடியைப் பிரமன் தன் கமண்டல நீரால் அபிடேகம் செய்தானாக, அவ்வபிடேக நீரைச் சிவன் தன் சடையில் ஏற்றுக் கொண்டான், அது சிறிதளவாக இருந்தமையால்; இன்று இராமன் திருமுடியில் பலரும் ஆட்டிய அபிடேக நீர் மிக்க பேரளவினதாகலின் அந்நீர் முழுமையையும் சிவன் சடையில் ஏற்றுக் கொள்ளல் இயலாது என்பார், 'எங்கன் ஏற்று அன்னோன் வாழும்' என்று கூறினார். இதனால், திருமாலின் திருவடியில் அன்று பிரமன் ஆட்டிய நீரினும் இன்று இராமன் திருமுடியில் ஆட்டியநீர் மிக்க பேரளவினது என்பது காட்டியவாறு. அன்று உலகளந்தவனும் இன்று இராமனாய்த் தொல்லிலங்கை கட்டழித்து முடிசூடுகின்றவனும் திருமாலே ஆதலின் இங்ஙனம் கூறினார். ''மூவுலகு மீரடியான் முறை நிரம்பா வகைமுடியத், தாவிய சேவடி சேப்பத் தம்பியொடுங் கான்போந்து, சோவரணும் போர் மடியத் தொல்லிலங்கை கட்டழித்த, சேவகன் சீர் கேளாத செவியென்ன செவியே'' (சிலப்-ஆய்ச்சியர் குரவை: 35) என இளங்கோவடிகளும் திருவிக்கிரமனையும் இராமனையும் ஒருவனாக இணைத்துக் கூறியுள்ளமை இங்கு நோக்கத்தகும். திருமாலின் திருவடியிலாட்டிய நீரினைச் சடையில் ஏற்ற சிவன் இன்று அத்திருவடியினும் சிறந்ததாகிய இராமனது முடியில் ஆட்டிய நீரை எந்த இடத்தில் ஏற்று வாழ்வு பெறுவான்? அச்சடை முடியினும் சிறந்தவிடம் பிறிது இல்லாமையால், ஏற்கவியலாது; என்று பொருள் கூறலும் ஆம். (35)

அபிடேகம் செய்துகொள்ளும்
இராமன் சீதையோடிருந்த தோற்றம்

10489. மரகதச் சயிலஞ் செந்தா
மரைமலர்க் காடு பூத்துத்
திரைகெழு கங்கை வீசுந்
திவலையா னனைந்து செய்ய
இருகுழை தொடரும் வேற்கண்
மயிலொடு மிருந்த தேய்ப்பப்

பெருகிய செவ்வி கண்டார்
பிறப்பெனும் பிணிக டீர்ந்தார்.

மரகதச் சயிலம் செந்தாமரை
மலர்க் காடு பூத்து,
திரைகெழு கங்கை வீசும்
திவலையான் நனைந்து, செய்ய
இருகுழை தொடரும் வேற்கண்
மயிலொடும் இருந்தது ஏய்ப்ப,
பெருகிய செவ்வி கண்டார்,
பிறப்பு எனும் பிணிகள் தீர்ந்தார்.

பொ:—மரகத மலை ஒன்று, செந்தாமரை மலர்களை மிகுதியாகப் பூத்துக்கொண்டு, அலைகள் பொருந்திய கங்கைநதி வீசும் நீர்த்துளிகளால் நனைந்துகொண்டு, செவ்விய இரண்டு காதணிகளையும் தொடர்கின்ற வேலைப்போன்ற கண்களையுடைய ஒரு மயிலோடும் இருந்ததை ஒப்ப, (மரகத வண்ணனாகிய இராமன் சீதையோடு இருக்கும்) பேரழகைக் கண்டவர்கள், பிறவி என்னும் பிணிகளினின்று நீங்கியவராவர்.

கு:—இராமன், மரகத மலை போன்ற வண்ணமும் உயர்ந்த தோற்றமும் உடையவனாதலானும், முகமும் கண்ணும் வாயும் கையும் உந்தியும் திருவடியும் ஆகிய உறுப்புகள் செந்தாமரை மலர்போன்று சிவந்து தோன்றப் பெற்றவனாதலானும் அபிடேக நீரால் நனைந்து தோன்றுதலானும் மயில் போன்ற சாயலையுடைய சீதையை அருகே கொண்டுள்ளவன் ஆதலானும் இங்ஙனம் இல்பொருளுவமை கூறினார். வேற்கண் மயிலுக்கும் பொருந்தும் அடையாகவே புணர்த்தியுள்ளார். வேல்போன்று தோன்றும் கண்கள் மயில்தோகைக்கும் உண்டு. ''ஓடா நின்ற களிமயிலே............தேடா நின்ற என்னுயிரைத் தெரியக் கண்டாய் சிந்தையுவந் தாடா நின்றாய் ஆயிரங்கண் உடையாய்க்கு ஒளிக்குமாறுண்டோ'' (பம்பைப்-26) என இராமன் மயில்களுக்கு ஆயிரங்கண் போன்ற அமைப்புள்ள தாகக் கூறியிருத்தலை நோக்குக. (36)

இச்செய்யுளின் பின் 71-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது:—

10489 (1) ஐவரை வென்ற சிந்தைக்
கௌசிக னோடு மையன்
தெய்வநீ ராடற்கொத்த
செய்வினை வசிட்டன் செய்ய
செய்வன பிறவு மற்றைச்
சுமந்திரன் முதலோர் செய்தார்
மெய்வனப் பணிதல் செய்த
விந்திரன் வியந்து நோக்க.

*முடிசூட்டுவிழாவிற்கு வேண்டியவை வந்துசேர்தல்*

10490. தெய்வநீ ராடற் கொத்த
செய்வினை வசிட்டன் செய்ய
அய்யமில் சிந்தை யானச்
சுமந்திர னமைச்ச ரோடும்
நொய்தினி னியற்ற நோன்பின்
மாதவர் நுனித்துக் காட்ட
எய்தின வியன்ற பல்வே
றிந்திரற் கியன்ற வென்ன.

தெய்வநீர் ஆடற்கு ஒத்த
செய்வினை வசிட்டன் செய்ய,
அய்யம்இல் சிந்தையான் அச்
சுமந்திரன் அமைச்சரோடும்
நொய்தினின் இயற்ற, நோன்பின்
மாதவர் நுனித்துக் காட்ட
எய்தின இயன்ற பல்வேறு
இந்திரற்கு இயன்ற என்ன.

பொ :—தெய்வத் தன்மையுடைய மகுடாபிடேகம் செய்தற்கு உரிய சடங்குகளை வசிட்டன் செய்யுமாறு விரதத்தினையுடைய பெருந்தவ முனிவர்கள் நுட்பமாகக் காட்டா நிற்க, ஐயமில்லாத மனத்தினையுடையனாகிய அந்தச் சுமந்திரன், தன் துணைவரான அமைச்சரோடும் இருந்து விரைவில் சித்தம் செய்ய, பலவேறு இந்திரர்கட்கு வந்து சேர்ந்த பொருள்களைப் போல வேண்டிய பொருள்கள் மிகுதியாக வந்து சேர்ந்தன.

கு :—மகுடாபிடேகச் சடங்கினை வசிட்ட முனிவன் செய்து முடிக்குமாறு வேண்டிய பொருள்களை யெல்லாம் மாதவர் கூறச் சுமந்தரன் அமைச்சரோடும் கொணர்ந்து சேர்த்தான் என்ற வாறு. இராமன் ஒருவனது முடி சூட்டு விழாவிற்கு வந்து சேர்ந்துள்ள பொருள்களை நோக்கின் பலவேறு இந்திரர்க்கு முடிசூட்டு விழாச் செய்ய வந்துசேர்ந்த பொருள்களைப் போல மிகுதியாக இருந்தன என்பார், 'எய்தின இயன்ற பல்வேறிந்திரற் கியன்ற வென்ன' என்றார். (37)

இச்செய்யுளின் பின் 52 ஆம் பிரதியில் :—

10490 (1) வானுறு முகுர்த்தம் வந்தது
என்று மாமறைகள் நான்கும்
தானுருக் கொண்டு போற்றச்
சலம்தவிர்த் தமரர் ஏத்தித்
தேனுரு மலர்கள் சிந்தித்
திசை முகம் பரவத் தெய்வ
வானுறை மகளி ராட
மாதவர் மகிழ்ந்து வாழ்த்த.

என்ற செய்யுள் காணப்படுகின்றது.

இச்செய்யுளின் பின் 31 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

,, (2) எல்லை யுலக மெல்லாந்தன்
காப்பா யிருக்கு மென நினைந்து
கல்லி னுருவம் பெண்ணாக்குங்
காலான் கையிற் காப்பணிந்து
தொல்லை முனிவ ரினிதாளச்
சூடக் கடவோன் மௌலியென
அல்லி விடியு மவ்வளவும்
அருந்தீ யோம முறை யமைத்தார்.

,, (3) கொற்றத் தனிக்காற் றேருடைய
கோலக் கதிரோன் குணகடலில்
உற்றுத்தோன்று முகுத்தத்தில்
உய்க்குஞ் செங்கோ லுயர்ந் தோங்க
வெற்றிச் சிலையோன் தன்மார்பில்
வீராபரண முடன் விளங்க

அற்றைக் கணியு மணியல்லால்
வேறுஞ் சிலகொண் டலங் கரித்தார்.

இராமனுக்கு வசிட்டமுனிவன் திருமுடி சூட்டுதல்

10491. அரியணை யனுமன் ரூங்க
வங்கத னுடைவா ளேந்தப்
பரதன்வெண் குடை கவிக்க
விருவருங் கவரி வீச
விரைசெறி குழலி யோங்க
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.

அரியணை அனுமன் தாங்க,
அங்கதன் உடைவாள் ஏந்த,
பரதன் வெண்குடை கவிக்க,
இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி ஓங்க
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.

பொ :—சிங்காசனத்தை அனுமன் தாங்குவதுபோல் பற்றிக்கொள்ளவும், அங்கதன் உடைவாளை யேந்திக்கொண்டு நிற்கவும், பரதன் ஒற்றை வெண்குடையைப் பிடிக்கவும், இலக்குவனும் சத்துருக்கனும் இருபுறம் நின்று வெண்கவரி வீசா நிற்கவும், மணம் பொருந்திய கூந்தலையுடைய சீதை அருகில் சிறப்புடையளாக அமர்ந்திருக்கவும், திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் (பழமையான) மரபிலுள்ளவர்கள் திருமுடியை யேந்திக் கொடுக்க வாங்கி வசிட்டனே இராமனுக்கு அம்முடியினைச் சூட்டினன்.

கு :—வேளாளரின் நாற்று முடியால் வேந்தர்களின் மாற்றுயர்ந்த பொன்முடி சிறப்புற வேண்டியிருத்தலின் நாற்று முடி பிடிக்கும் வேளாளர் கையினல் மணி முடி கொடுக்க வாங்கி

வசிட்டன் இராமனுக்கு அம்முடியைப் புனைந்தான் என்க. வேளாளர். மணிமுடியை எடுத்துக்கொடுக்கும் உரிமை பெற்றிருந்தனர் என்பது இதனுல் தெளியலாம். கம்பர் இவ்விடத்தில் தமக்கு உதவி செய்த வள்ளலாகிய திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பரின் புகழை இராமபிரானுடைய முடிசூட்டு விழாவில் அமைத்துச் சிறப்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தால் 'வேளாளர் கொடுக்க' என்று சொல்லவேண்டிய இடத்தில் 'வெண்ணெயூர்ச் சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க' என்று கூறி, இராமன் புகழ் உள்ளவரையில் தம்மை ஆதரித்த வள்ளலின் பெயர் நிற்குமாறு செய்துள்ளதிறம் பெரிதும் பாராட்டுதற்குரியதாகும். (38)

இராமன் முடிசூடிக் கொள்ளுதல்

10492. வெள்ளியும் பொன்னு மென்போர்
விதிமுறை மெய்யிற் கொண்ட
ஒள்ளிய நாளி னல்ல
வோரையி னுலக மூன்றும்
துள்ளின குனிப்ப மௌலி
சூடினுன் கடலின் வந்த
தெள்ளிய திருவுந் தெய்வப்
பூமியுஞ் சேருந் தோளான்.

வெள்ளியும் பொன்னும் என்பார்
விதிமுறை மெய்யின் கொண்ட
ஒள்ளிய நாளின் நல்ல
ஓரையின், உலகம் மூன்றும்
துள்ளின குனிப்ப, மௌலி
சூடினுன் — கடலின் வந்த
தெள்ளிய திருவும், தெய்வப்
பூமியும், சேரும் தோளான்.

பொ.— (அசுரகுருவாகிய) சுக்கிரனும், (தேவகுருவாகிய) வியாழனும் என்பவர்கள், விதித்த முறையின்படி சோதிடர்கள் உண்மையாக ஆராய்ந்துகொண்ட சிறந்தநாளில் நல்லஓரையில், மூவுலகத்தோரும் மகிழ்ச்சியினுல் துள்ளிக் களிநடம் புரியாநிற்க-

திருப்பாற்கடலில் தோன்றிய தெளிவுடைய இலக்குமியும் தெய்வத்தன்மை வாய்ந்த பூமிதேவியும் சேர்கின்ற தோளையுடையனாய் (இராமன்) முடியைச் சூடிக் கொண்டான்.

கு :—சுக்கிர நீதியிலும் மனுநீதியிலும் விதித்துள்ள முறைப்படி உண்மையாகச் சோதிடர்கள் ஆராய்ந்துகொண்ட சிறந்த நாளில் இராமன் முடிசூடிக்கொண்டான் என்றவாறு. இவ்விருவர் நூலும் மன்னவர்க்கு வழிகாட்டியாக இருந்தன என்பதை; ''நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவையெடுத், தறவினை யின்புறுஉம் அந்தணர் இருவரும் திறம் வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது, குழவியைப் பார்த்துறூஉம் தாய்போல் உலகத்து மழைசுரந் தளித்தோம்பு நல்லூழியாவர்க்கும்'' (கலி-99) எனவரும் கலித்தொகையடிகளால் அறியலாம். பொருட் செல்வத்தையும் பூமிச் செல்வத்தையும் இராமன் அடைந்தான் என்பதற்கு அடையாளம் முடிசூடுதலே யாகலின், திருவும் தெய்வப் பூமியும் சேருந் தோளானாய் மௌலி சூடினான் என்றார். தோளான் என்ற குறிப்பு முற்றெச்சப் பொருளது. அரசனுக்குரிய பொருட் செல்வத்தையும் நிலமாகிய செல்வத்தையும் சீதேவி பூதேவியாகச் சொல்லுதல் மரபாதலின் 'திருவும் தெய்வப் பூமியும் சேரும் தோளான்' என உருவக வாய்பாட்டால் கூறியவாறு. மேலைச்செய்யுளில் வசிட்டன் செயலாக 'வசிட்டனே புனைந்தான் மௌலி' எனக் கூறியும் அமையாத நெஞ்சினராய்க் கம்பர், இங்கு இராமன் செயலாகவும் கூறி மகிழ்கின்றார் என்க. (39)

*இராமன் மணிமுடி சூடியதில் மக்களுக்குள்ள மகிழ்ச்சி*

10493. சித்தமொத் துளனென் றேதுந்
திருநகர்த் தெய்வ நன்னூல்
வித்தக னொருவன் சென்னி
மிலைச்சிய தெனினு மேன்மை
ஒத்தமூ வுலகத் தோர்க்கு
முவகையி னுறுதி யுன்னிற்
றத்தமுச் சியின்மேல் வைத்த
தொத்தத் தாம மௌலி.

சித்தம் ஒத்துளன் என்று ஓதும்
திருநகர்த் தெய்வ நன்னூல்
வித்தகன் ஒருவன் சென்னி
மிலேச்சியது எனினும் மேன்மை
ஒத்த மூவுலகத் தோர்க்கும்
உவகையின் உறுதி உன்னின்
தத்தம் உச்சியின்மேல் வைத்தது
ஒத்தது அத் தாம மௌலி.

பொ :—செல்வச் சிறப்புடைய அயோத்தி நகரத்தவரின் சித்தத்தை ஒத்துளன் என்று புகழ்ந்து சொல்லப்படுகின்ற,—தெய்வத்தன்மை வாய்ந்த வேதமாகிய நல்ல நூலில் வித்தகனுகிய வசிட்டன் இராமன் ஒருவனது தலேயில் சூட்டியது என்ருலும், மேன்மையில் ஒத்த மூன்று உலகத்தவர்க்கும் தோன்றிய மகிழ்ச்சியின் உறுதியை நினைக்குமிடத்து அந்த ஒளிமிக்க மகுடம் தங்கள் தங்கள் உச்சியின்மேல் வைத்ததை ஒத்தது.

கு :—திருநகர் சித்தம் ஒத்துளன் என்று ஓதும் வித்தகன், தெய்வ நன்னூல் வித்தகன்-எனத் தனித்தனி இயையும். அயோத்தி நகரத்தவரின் உள்ளத்திற்கேற்ற முடிபுகளையே கூறுபவன் வசிட்டன் ஆகலின் அவனை, திருநகர் சித்தமொத்துளன் என்று ஓதும் வித்தகன் என்ருர். வித்தகம்—சதுரப்பாடு; திறமை. ஒருவன் என்றது இராமனை. ஒருவன் சென்னியில் மிலேச்சிய முடியை மூவுலகத்தோரும் தத்தம் உச்சியில் வைத்ததாக எண்ணி மகிழ்ந்தனர் என்றவாறு. ''ஒத்த சிந்தையருவகையர் ஒருவரினொருவர், தத்தமக்குற்ற அரசு எனத் தழைக்கின்ற மனத்தார்'' (அயோத்தியா-மந்திரப்-75) என்பதும், ''பூவலயமின்று தனியன்று பொது வென்பார்'' (கைகேசி சூழ்வினைப்-102) என்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். (40)

பூமி தேவியின் மகிழ்ச்சி

10494. பன்னெடுங் கால நோற்றுத்
தன்னுடைப் பண்பிற் கேற்ற
பின்னெடுங் கணவன் றன்னைப்
பெற்றிடை பிரிந்து முற்றும்

தன்னெடும் பீழை நீங்கத்
　　தழுவினு டளிர்க்கை நீட்டி
நன்னெடும் பூமி யென்னு
　　நங்கைதன் கொங்கை யார.

பல் நெடுங் காலம் நோற்று,
　　தன்னுடைப் பண்பிற்கு ஏற்ற
பின் நெடுங் கணவன் தன்னைப்
　　பெற்று, இடைப்பிரிந்து, முற்றும்
தன் நெடும் பீழை நீங்கத்
　　தழுவினுள், தளிர்க்கை நீட்டி
நல் நெடும் பூமி என்னும்
　　நங்கை, தன் கொங்கை ஆர.

பொ:—மிக நெடுங்காலம் தவம் செய்து, பின்பு தன்னுடைய பண்பிற்கு ஏற்ற பெருமையுடைய கணவனைப் பெற்று, நடுவே பிரிந்து, (அதனுல்) நிரம்பியிருந்த தன் நீண்ட பிரிவுத் துன்பம் நீங்குமாறு, நல்ல பெரிய பூமி என்கின்ற நங்கை தன் கொங்கை யாரத் தளிர்போன்ற கைகளை நீட்டித் தழுவிக்கொண்டாள்.

கு:—நோற்றுப் பின் பெற்று என இயையும். 'பெற்றிடை பிரிந்து' என்றது, தயரதனுல் தரப்பெற்ற அரசைக் கூனியின் சூழ்ச்சியினுல் இழந்து, பதினுன்காண்டு கானகத்தே இராமன் தங்கியிருந்ததைக் குறிப்பிட்டவாறு. முற்றுதல்—நிரம்புதல். நெடுங்காலம் பிரிந்து வருந்திய பெருந்துயர் நீங்குமாறு ஆரத் தழுவினுள் என்க. இராமன் முடி சூடிக்கொண்டதனுல் நிலம் அவன் ஆட்சிக்கு உட்பட்டது என்பதைக் கவி இங்ஙனம் உருவகம் செய்து கூறுகின்ருர். பீழை—துன்பம். (41)

இச்செய்யுளின் பின் 31, 52 ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

10494 (1) இப்படித் தழுவி மாதர்
　　இருவரும் இரண்டுபாலும்
செப்புற லரிய வின்பச்
　　செல்வத்துட் செல்லுநாளில்
கப்புடைச் சிரத்தோன் சென்னி
　　கடிந்தவில் லிராமன் காதல்

வைப்புடை வளாகந் தன்னில்
மன்னுயிர் வாழ்த்த வாழ்நாள்.

இதன் பின் 74-ஆம் பிரதியில் .—

10494 (2) பன்மணித் தூண்கள் சேர்த்த
பந்திசேர் மண்டபத்தில்
தன்னிகரில்லா மன்னன்
சமயமா யிருந்த காலை
பின்வரும் பரதன்மிக்க பெருங்குடை
கவிப்பப் பேணித்
துன்னிய கவரிதம்பி
வீசிடஇருந்தான் மன்னே.

என்ற பாடல் உள்ளது.

,, (3) இளையவ னுடைவாள் பற்ற
யேனகை யணைய மாதர்
தளையவிழ் குழல்கள்தாங்கித்
தாமிசைப்பல் லாண்டு கூறத்
துளைபயில் வேயின் கீதம்
சுருதியோ டளாவித்தோய
வளைபயி லோசை மற்றை
மாகதர் பாடல் மீற.

,, (4) இந்திர னிவன்கொ லென்றென்
றிமையவர் தொழுது வாழ்த்த
கந்திடு..............................
காகுத்தன் கருணை மெய்யன்
செந்திரு மடந்தை கேள்வன்
தயரத ராமன் செய்ய
மந்திரத் தலைவர் சூழ்வான்
மன்னரை வருக வென்றான்.

இதன் பின் 19, 21, 26, 44, 66-ஆம் பிரதிகளில் :—

,, (5) உம்பரு முரிமை செய்ய
உலகமோ ரேழு மேழும்
எம்பெரு மானென் றேத்தி
யிறைஞ்சிநின் றேவல் செய்யத்

தம்பிய ரோடு தானும்
தருமமும் தானிகர்த்தான்
அம்பரத் தனந்த னீங்கி
யவனியில் வந்தவண்ணல்.

இதன் பின் 18, 40, 60, 61-ஆம் பிரதியில் :—

10494 (6) மறையவர் வாழி வேத
மனுநெறி வாழி நன்னூல்
முறைசெயும் அரசன் திங்கள்
மும்மழை வாழி யின்னூல்
இறையவன் இராமன் வாழி
இக்கதை கேட்போர் வாழி
அறைகழல் சடையன் வாழி
யனுமனெப் பொழுதும் வாழி.

26, 66-ஆம் பிரதியில் :—

,, (7) வாழி சானகி வாழி யிராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி மாமறை யென்றென்று வாழ்த்தினன்
ஊழி தோறு முயர்ந்துயர் கீர்த்தியான்.

இதன் பின் 31-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

,, (8) திங்கட் பிளவைப் பொருதழித்த
திருவா ணுதலார் செங்காந்தட்
சங்கக் கரத்தா லிருமருங்கு
மிவருந்தண்சா மர மிரட்ட
வங்கப் பரவை யகிலேசர்
மந்திரா திபர்சா மந்தரங்கண்
அங்கைக் கமல முகிழ்த்தேத்த
வணிமா மணிமண் டபத்திருந்தான்.

,, (9) சயத்துப் பரதன் சத்துருக்கன்
தடங்கட் குயில யீரேழாண்
டுயிர்த்துப் பின்சே ரிளங்குரிசில்
அடல்வீ டணனங் கதனீலன்

மயத்துச் சுருதி தெரியனுமன்
மனவான் கதிரோன் குகனென்று
இயக்கத் தக்கோர் தொழுதேத்த
விருந்தா னிராமன் முடிசூட்டி.

10494 (10) நாகஞ் சுமந்த புவியேழும்
நடத்துஞ் செங்கோ லொன்ருக
மேகம் பொருந்துந் திருநிறத்து
வேந்தன் விசய முடிபுனைந்து
மாகம் பயிலுஞ் சுரர்வாழ்த்தி
மலர்க் கற்பகப்பூ மழைபொழிய
பூகம்பஞ்செய் கடகளிற்றுப்
போந்தான்பவனி போர் வேலான்.

,, (11) அவனித் தலைவ னுக்கிளையோ
னணியார் கொற்றக் குடையெடுப்பப்
பவனிக் கிசையச் சத்துருக்கன்
பரதன் கவரி பணிமாற
இவனித் தலத்தி னளவல்ல
யார்க்கும் பெருமா னென்றென்று
தவனித் தலைநூல் வேதியரும்
தருக்கி யிருபால் நெருக்கினர்.

,, (12) ஒத்து முழவ மத்தளங்கள்
ஓங்குஞ் சல்லி முருடிடக்கை
மொத்து முரச மூன்றந்த
முந்நீர் நன்னீர் முலகழிப்ப
அத்த னமலன் வலம்புரிபோல்
ஆர்க்குஞ் சங்க மயலார்ப்பச்
சித்த முருக யாவர்க்குஞ்
செம்பொற் சுண்ணம் பணிமாற.

,, (13) கோடையில் வறந்த மேகம்
குளிர்மழை பதின லாண்டு
வாடிய பயிரின் வாட்டம்
தவிர்த்தவை வளர்த்த தொப்ப
நீடிய மறுகிற் றன்னை
நிகரிலான் போத வன்ன

ஓடிய வுயிர்கட் கெல்லா
முடலிடைப் புகுந்த தன்றே.

10494 (14) கரியின் குழாமுந் தேரினது
கனகக் குழாமுங் காற்றனைய
பரியின் குழாமுந் திறல்வேந்தர்
படையின் குழாமும் பரந்தொழுக
அரியின் குழாமு மதுரமொழி
யன்னக் குழாமு மன்னம்போல்
விரியின் குழாமும் மகிழவெழுந்
தருளா நின்றுன் வேந்தாம் கோ.

,, (15) கண்டினி திறைஞ்சும் மாதர்
கதிர்மணி கனகத் திண்டோள்
வண்டுவந் தணியும் மாலே
வழங்குமே யிராம னென்பார்
தெண்டிரை யுலகங் காத்த
தெசரதன் குலத்து வந்தான்
கொண்டலி னிறமே யெங்கள்
குளிர்நிறங் கொண்ட தென்பார்.

,, (16) வடக்கன தந்த மேற்ற
மாமதன் பஞ்ச பாணம்
படப்பட வுருகி வள்ளல்
பவனியே பார்த்து நிற்பார்
விடக்கய லனைய கண்ணீர்
மெய்யுயி ருண்க மெய்யே
கடக்குமா றரிது தந்தங்
காதலின் கடலே யென்பார்.

,, (17) கம்பிரா தல்குல் வண்ணக்
கலையிரா தென்னக் காமன்
அம்பிரா வருத்து மென்றுல்
அமளியு மஃதே யென்ன
வம்பிரா திலங்குங் கொங்கை
மடந்தைமீர் வாரி மேனி

எம்பிரான் கொண்ட நெஞ்ச
மிரும்புண்ட நீர தென்பார்.

10494 (18) புரக்குஞ் செந்திருவுக் காகப்
பொருப்புவில் லிறுத்தோ னம்பால்
இரக்கம துளனே யாகி
லிக்குயில் லிருஞே வென்பார்
அரக்கனை முனிந்த வீரன்
ஆணையின் முன்பு சென்ருல்
உரக்கநின் றிங்கே யிங்கே
மீளுமோ வுள்ள மென்பார்.

,, (19) வெறிகம ழலங்க லோதி
மென்மொழி சாயல் நாணம்
செறிவளை சோர வாவி
சோர்ந்து சித்திரம்போல் நிற்பார்
எறிகட லிலங்கை செற்ற
விறைவனை யிறைஞ்சி வந்தால்
அறிவழி யாது நிற்கு
மரிவைய ருளரோ வென்பார்.

,, (20) சலநிறை புயலைத் தெய்வந்
தானது தந்த தென்ன
உலவிய களிற்றின் மீதே
யும்பரு முலக மேத்த
நலமிகு மதல யோத்தி
நகர்வல மாக வந்து
குலகிரி யனைய செம்பொற்
கோபுர வாயில் புக்கான்.

,, (21) காமரு வயிர நீலங்
காண்டகு பதும ராகம்
மாமணி நிறைந்த சோதி
மரகத மண்ட பத்துப்
பூமலி குழலின் வாசப்
புரவலன் புகுந்து தேவர்
ஓர்மறை பரவி யார்ப்ப
வோலக்கம் உவந்தி ருந்தான்.

10494 (22) செந்தமிழ் வடசொல் வேதம்
திகழிசை வல்லோர் போற்றக்
கந்தடு களிற்றி ராமன்
கண்ணெனச் சிறந்தோர் சூழ
இந்திர னவையு முன்னுள்
இலங்கு பேருந்தி தோன்று
அந்தண னவையும் போல
வமர்ந்தினி திருந்தான் மன்னோ.

*இராமன் பரதனை இளவரசனுக்கி இன்புற்றிருத்தல்*

10495. விரதநூன் முனிவன் சொன்ன
விதிநெறி வழாமை நோக்கி
வரதனு மிளைஞற் காங்கண்
மாமணி மகுடஞ் சூட்டிப்
பரதனைத் தனது செங்கோ
னடாவுறப் பணித்து நாளும்
கரைதெரி விலாத போகக்
களிப்பினு ளிருந்தான் மன்னோ.

விரதநூல் முனிவன் சொன்ன
விதிநெறி வழாமை நோக்கி,
வரதனும் இளைஞற்கு ஆங்கண்
மாமணி மகுடஞ் சூட்டி,
பரதனைத் தனது செங்கோல்
நடாவுறப் பணித்து, நாளும்
கரை தெரிவு இலாத போகக்
களிப்பினுள் இருந்தான் மன்னோ.

பொ:—அரிய விரதங்களை மேற்கொண்டொழுகும் தன்மையும் நூலறிவும் உடைய வசிட்ட முனிவன் சொன்ன விதிமுறை தவருமற் பார்த்து, வரந்தர வல்லனுகிய இராமனும் தன்னிளையோனுகிய பரதனுக்கு (இளவரசு என்பதற்கறி குறியாக) அப்பொழுது சிறந்த மணிமுடியைச் சூட்டி, அப்பரதனையே தன் செங்கோலை நடத்துமாறு பணித்துவிட்டு, நாளும் அளவில்லாத போகங்களை நுகரும் களிப்பினுள் இருந்தான்.

கு :—நூல், பூணூல் எனலும் ஆம். அயோத்தியா காண்டத்தில் மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் 7-ஆம் செய்யுள் முதலாக 21-ஆம் செய்யுள்வரையில் வசிட்டன் இராமனுக்குச் செவியறிவுறுத்த அரசநீதியையே இங்கு 'விரதநூன் முனிவன் சொன்ன விதிநெறி' என்றுர். பரதன் இளவரசனுய்ச் செங்கோல்செலுத்த, வசிட்ட முனிவன் தனக்குச் சொன்ன விதிமுறை வழுவாதபடி மேற்பார்வை செய்துகொண்டே இன்புற்றிருந்தான் என்றவாறு. நோக்கிக் களிப்பினுள் இருந்தான் என இயையும். (42)

சில சுவடிகளில் இச்செய்யுளுக்குப் பின் மறையவர் வாழி வேத மனுநெறி வாழி என்று தொடங்கும் செய்யுள் காணப்படுகின்றது. இச்செய்யுள் சில சுவடிகளில் 41-ஆம் செய்யுளுக்குப் பின் உள்ளது.

திருமுடி சூட்டு படலம் முற்றிற்று.

# 39. விடை கொடுத்த படலம்

## முன்னுரை

இராமன், தன் முடி சூட்டு விழாவைக் காண வந்திருந்த சுக்கிரீவன் வீடணன் முதலியவர்கட்கு விடை கொடுத்து அனுப்பிய செய்தியைக் கூறும் பகுதியாகலின், இது 'விடை கொடுத்த படலம்' எனப் பெயர் பெறுகின்றது. இப்படலம் சில ஏடுகளில் திருமுடி சூட்டு படலத்திலேயே சேர்த்துக் கூறப்பட்டுளது. வான்மீகத்திலும் இச்செய்தி திருமுடி சூட்டிய செய்தியோடு சேர்த்தே கூறப்பட்டுளது.

## படலப் பொருட் சுருக்கம்

திருமுடி சூட்டு விழா நடந்தேறிய பின்பு நாள்தொறும் இராமன் சீதையோடு கொலு மண்டபத்தில், தன் இருமருங்கிலும் வெண்சாமரை வீசவும், முடி மீது ஒற்றைவெண் கொற்றக்குடை நிழற்றவும், அந்தணர் ஆசி கூறவும், மந்திரி முதலியோர் சூழ்ந்திருக்கவும், மன்னர்கள் அடிபணிந்து ஏத்தவும், சிங்கஞ்சுமந்த அரியணையில் வீற்றிருந்து இனிதே அரசாண்டு வருகின்ருன். இராமனுடைய அரச கோலத்தைக் கண்டு கண்டு சுக்கிரீவன் முதலியோர் பெரு மகிழ்வுற்றிருக்கின்ருர்கள். இரண்டு மாதங்கள் இங்ஙனமே கழிகின்றன. பின்பு ஒரு நாள் இராமன் அந்தணர்க்குத் தானம் அளித்த பின்பு மன்னவர்கட்குத் தகுதிமிக்க பரிசுகள் அளித்து விடைகொடுத்து அனுப்பிய பின், சுக்கிரீவன், அங்கதன், அனுமான் முதலிய வானரத் தலைவர்கட்கும் வீடணன், குகன் என்ற துணைவர்கட்கும் ஏற்ற பரிசுகளை அளித்து முகமன் உரை கூறி விடைகொடுத்து அனுப்பினுகை, யாவரும் தத்தம் ஊர்கட்குச் செல்ல, பின்னர் அவ் அரசர்க்கரசனுகிய இராமன் இனிதே அரசு புரிகின்ருன் ; என்பது இப்படலத்துக் கூறப்படும் பொருட் சுருக்கமாகும்.

## கம்பர், வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்.

வான்மீகத்தில் விடைகொடுத்த பகுதி தனியே கூறப்படவில்லை; திருமுடி சூட்டு விழாப் பகுதியில் சேர்த்துக் கூறப்பட்டுளது. திருமுடி சூட்டு விழாவின் முடிவில் இத்திரன் மகிழ்ந்தளித்த பொன்மயமான தாமரை மலர் மாலையையும் முத்து மாலையையும் வாயுதேவன் கொணர்ந்து இராமனுக்கு அளிக்கின்றான். இராமன் முடிசூட்டு விழாவில் பூமி முழுமையும் செழிப்புடன் காணப்படுகின்றது. மரங்கள் பழங்களை யீந்தன; எழில் மிக்க பொழில்கள் மணமிக்க மலர்களால் நிறைந்திருந்தன. முடிசூட்டு விழாவின் முடிவில் இராமன் அந்தணர்களுக்கு நூறாயிரம் குதிரைகளையும், நூறாயிரம் கன்றை யீன்ற பசுக்களையும் நூறு காளைமாடுகளையும் முதலில் தானம் செய்கின்றான், முப்பது கோடி பொன் நாணயங்களையும் விலையுயர்ந்த அணிகலன்களையும் ஆடைகளையும் அவர்கட்குத் தானம் செய்கின்றான். பின்பு வானர மன்னவனாகிய தன் துணைவன் சுக்கிரீவனுக்கு ஒளிமிக்க மணிகள் இழைக்கப் பெற்ற பொன் மாலையைக் கொடுக்கின்றான். வைடூரியம் பதிக்கப்பெற்று நடு நாயக மணியால் அழகுமிக்கு விளங்கும் தோள்வளைகளை அங்கதனுக்குக் கொடுக்கின்றான். பின்பு சிறந்த மணிகள் இழைக்கப்பெற்றுச் சந்திரனைப் போல் ஒளிவீசும் முத்து மாலையைச் சீதைக்கு அளிக்கின்றான். சீதை அருள்மிக்கவளாய் அனுமானுக்குத் தூய்மையான, விலையுயர்ந்த இரண்டு ஆடைகளையும் சிறந்த அணிகலன்களையும் அளிக்கின்றாள். பின்பு சீதை தன் கழுத்தில் அணிந்திருந்த முத்துமாலை ஒன்றினைக் கழற்றிக் கையில் வைத்துக்கொண்டு வானரர்களையும் தன் கொழுநனையும் பலமுறை பார்க்கின்றாள். அப்போது இராமன் சீதையை நோக்கி 'சுந்தரி!' பேராற்றலும் பெருமுயற்சியும் புகழும், திறமையும், பணிவும், சத்தியத்தில் பற்றும், பகைவரை யடக்கும் வலிமையும் நன்னோக்கமும் யாரிடத்தில் இருக்கின்றனவோ அவனுக்கு இந்த முத்துமாலையைக் கொடு' என்று ஏவுகின்றான். அக்குறிப்பறிந்த சீதை அந்த முத்துமாலையை அனுமானுக்கு அளிக்கின்றாள்.

பின்பு மைந்தன், துவிதன், நளன், நீலன் முதலிய வானர வீரர்கட்கெல்லாம் அவரவர்கட்கு விருப்பமான சிறந்த பொருள்களையெல்லாம் அவரவர் தகுதிக்கு ஏற்றபடி இராமன் கொடுக்கின்றான். யாவரும் பெருமகிழ்ச்சியுற்றுத் தத்தம் ஊர்கட்குத்

திரும்புகின்றனர். சுக்கிரீவன் முதலியோர் விடைபெற்றுக் கொண்டு கிட்கிந்தைக்குச் செல்கின்றனர். வீடணன் இட்சுவாகு மரபினரின் குலதனமாகிய திருவரங்க விமானத்தைப் பெற்றுக் கொண்டு இலங்கைக்குச் செல்கின்றான்.

இராமன் தீயவர்களையும் தூயவர்களாக்கி இனிது அரசு புரிகின்றான். பின்பு இளவரசு பட்டத்தை யேற்றுக்கொள்ளுமாறு இலக்குவனை வற்புறுத்துகின்றான்; அவன் அதை யேற்றுக் கொள்ளாமையால் பரதனுக்கு அப்பதவியைக் கொடுத்துப் பல வேள்விகளைச் செய்து நாட்டில் யாதும் குறை தோன்றாதபடி பதினோராயிரம் ஆண்டு அரசு செலுத்தினான் இராமன் என்று வான்மீகம் கூறுகின்றது.

கம்பர், வான்மீகியைப் பின்பற்றியே செல்கின்றார் ஆயினும் இங்குச் சில மாற்றங்களைச் செய்துள்ளார். இலங்கை வேந்தனாகிய வீடணனும் வானர மன்னனாகிய சுக்கிரீவனும் வானர சேனையும் இராவணனை வெல்லப் பெருந்துணையாக இருந்தவர்கள். அத்தகைய பேரன்பினரை முடிசூட்டு விழா முடிந்தவுடன் விடை கொடுத்தனுப்பியதாக வான்மீகி முனிவர் கூறியது போலக் கூற மனமிலராய்க் கம்பர், இரண்டு மாதங்கள் வரையில் இராமன் ஆட்சிபுரியும் சிறப்பைக் கண்டு களித்து அவர்களை இருக்கச்செய்து பின்பு விடை கொடுத்தனுப்பியதாக மாற்றிக் கூறியுள்ளார். அனுமானுக்கு விடை கொடுத்தனுப்பும் போது அவன் செய்த பேருதவிக்கு ஈடாகத் தான் செய்யத்தக்கது இல்லை என்று கூறி இராமன் அனுமனைத் தழுவிக்கொள்ளுமாறு அழைக்கின்றதாகக் கம்பர் கூறியுள்ளார். உயர்வறவுயர்ந்த இராமன் தனக்கும் சீதைக்கும் இலக்குவனுக்கும் உயிர் தந்துதவிய அனுமனின் பேருதவியையே எண்ணி அவ்வனுமன் வானர இனத்தினன் என்பதும் எண்ணாமல் அவனைத் தழுவிக் கொள்ளச் சொல்லியது எல்லா அன்பளிப்பினும் மிகப் பெரிய அன்பளிப்பாகும் என்பதைக் கம்பர் நினைந்து, இந் நிகழ்ச்சியை இங்குக் கூறியுள்ளார். வான்மீகத்தில் அனுமன் சீதையைக் கண்டு வந்து கூறியபொழுது இராமன் இவ்வாறு கூறியதாக வுள்ளது. இராமன் தன் மகிழ்ச்சியை முடிவில் முடிசூட்டு விழாவில் புலப்படுத்துவது பொருத்தம் எனக்கருதிக் கம்பர் இங்குக் கூறியுள்ளார் போலும்.

விடைகொடுத்தனுப்புங்கால் இராமன் தன் குலபூசைக்குரிய திரு அரங்க விமானத்தைக் கொடுக்கப் பெற்றுக்கொண்டு வீடணன் சென்றதாக வான்மீகத்தில் உள்ளது.

கம்பர், இந்தச் சிறப்பான செய்தியைக் குறிப்பிடவே இல்லை. குகன், சுக்கிரீவன், வீடணன் என்ற மூவரும் இராமனுக்கு நெருங்கிய துணைவர்களாதலின் இவர்கள் இராமனைவிட்டுப் பிரிந்து தென்திசை நோக்கி வருபவரே ஆதலின் அம்மூவரும் உடன் புறப்பட்டு வருதல் பொருந்துவதாக இருத்தலின், வீடணனும் சுக்கிரீவனும் குகனோடு வந்து, சிருங்கபேரத்தில் குகனை விட்டுவிட்டுப் பின்பு, வீடணன் சுக்கிரீவனைக் கிட்கிந்தையில் விடுத்து விட்டுத் தென்னிலங்கைக்குச் சென்றதாகக் கம்பர் அமைத்துள்ளார். இவ்வாறு அம்மூவரும் ஒருங்கு சென்று தம் அன்பினைப் புலப்படுத்தியதாக வான்மீகத்தில் இல்லை. இராமனோடு நட்புப்பூண்ட மூவரும் தென்திசை நோக்கி வருபவராதலின் உடன் புறப்பட்டு முன்னுள்ள குகன் ஊர்க்குச் சென்று தங்கி அவனை அங்கே விட்டுப்பிரிந்து பின்பு அதற்கு அடுத்துத் தென்திசையில் உள்ள சுக்கிரீவனது கிட்கிந்தைக்குச் சென்று அவனொடு தங்கியிருந்து பின்பு பிரிந்து வீடணன் இலங்கைக்குச் சென்றான் என்ற கம்பர் கற்பனை பொருத்தமுடையதாக நண்பர்களின் அன்புணர்ச்சியைப் புலப்படுத்துவதாகவுள்ளது.

இலங்கையிலிருந்து தான்ஏறிவந்த புட்பக விமானம் குபேரனுக்கு உரியது என வீடணன் சொல்லக் கேட்டவனாகலின் தன் அரண்மனை சேர்ந்தவுடன் இராமன் அதனைக் குபேரனிடம் செல்லுமாறு பணித்தான் என்று வான்மீகம் கூறுகின்றது. இதைக் கம்பர் குறிப்பிடவில்லை. வீடணன் வான்வழி செல்லும் வரமுடையவன் ஆதலின் இலங்கைக்கு வான்வழியே சென்றான் எனக் கொள்ளல்தகும்.

இராமன், இளவரசு பட்டத்தை யேற்றுக்கொள்ளுமாறு இலக்குவனை வேண்டியும் அவன் ஏற்றுக் கொள்ளாமையால் பரதனுக்கு அப்பதவியைக் கொடுத்ததாக வான்மீகத்தில் உள்ளது. அதனைக் கம்பர் குறிப்பிடவில்லை. முன்னமே பதினான்காண்டு அரசாண்டவன் பரதனாகலின் அவனை விடுத்து இலக்குவனை இளவரசனுக்க விரும்பியது பொருத்தமாக இல்லை என்ற எண்ணத்தால் கம்பர் அதனை விடுத்தார் போலும். இராமன்

பதினோராயிரம்ஆண்டு அரசாண்டதாக வான்மீகி சொன்னதைக் கம்பர் குறிப்பிடவில்லை. அது கம்பர் கருத்துக்குப் பொருத்த மாகத் தோன்றுமையால் விடுத்தார்போலும்.

# 39. விடை கொடுத்த படலம்

## இராமன் சீதையோடு திருவோலக்கத்தில் அமர்தல்

10496. பூமகட் கணிய தென்னப்
பொலிபசும் பூரி சேர்த்தி
மாமணித் தூணிற் செய்த
மண்டப மதனி னுப்பண்
கோமணிச் சிவிகை மீதே
கொண்டலு மின்னும் போலத்
தாமரைக் கிழத்தி யோடுந்
தயரத ராமன் சார்ந்தான்.

பூமகட்கு அணி அது என்னப்
பொலி பசும்பூரி சேர்த்தி,
மாமணித் தூணின் செய்த
மண்டபம் அதனின் நாப்பண்,
கோமணிச் சிவிகை மீதே,
கொண்டலும் மின்னும் போல,
தாமரைக் கிழத்தி யோடும்
தயரத ராமன் சார்ந்தான்.

பொ:-நிலமடந்தைக்கு அணிகலம்போலப் பொலிகின்றதும், பசும் பொன்னைச் சேர்த்து சிறந்த மணிகள் பதித்த தூண்களை நிறுத்திச்செய்த மண்டபத்தின் நடுவே சிறந்த மணிகளைக் கொண்டு செய்யப்பெற்ற சிவிகையின் மேல், கரிய மேகமும் மின்னலும் போலத், தாமரை மலர்க்கு உரியவளான திருமகளின் அமிசமான சீதையோடு தயரதன் மகனான இராமன் வந்து அமர்ந்தான்.

கு:—அணிய தென்னப்பொலி மண்டபம், சேர்த்தி, செய்த மண்டபம் எனத் தனித்தனி இயையும். கொண்டல் போல இராமனும் மின்னல் போலச் சீதையம் நிறத்தால் விளக்கம்

பெற்று ஒருங்கிருந்தனர் என்றவாறு. பூரி—பொன். சிவிகை—பல்லக்கு. பலராமனையும் பரசுராமனையும் விலக்கத் 'தயரத ராமன்' என்றார். தயரதனுக்கு மகனாகிய இராமன் என்றவாறு (1)

### சிவிகையில் இராமன் இருத்தல்

10497. விரிகட னடுவட் பூத்த
மின்னென வாரம் வீங்க
எரிகதிர்க் கடவு டன்னை
யினமணி மகுட மேய்ப்பக்
கருமுகிற் கரசு செந்தா
மரைமலர்க் காடு பூத்தோ
ரரியணைப் பொலிந்த தென்ன
விருந்தன னயோத்தி வேந்தன்.

விரிகடல் நடுவண் பூத்த
மின் என ஆரம் வீங்க,
எரிகதிர்க் கடவுள் தன்னை
இனமணி மகுடம் ஏய்ப்பக்
கருமுகிற்கு அரசு செந்தாமரைமலர்க்
காடு பூத்து, ஓர்
அரியணைப் பொலிந்தது என்ன,
இருந்தனன் அயோத்தி வேந்தன்.

பொ:—(கரிய மார்பில் அணிந்த) முத்துமாலை, விரிந்த கடல் நடுவே பூத்த மின்னலைப் போலப் பேரொளி செய்யா நிற்கவும், (தலையில் சூடிய) கூட்டமான மணிகள் பதித்த முடி, எரிவதுபோல் தோன்றும் ஆயிரம் கிரணங்களையுடைய சூரியனை ஒத்துத் தோன்றவும், கரிய மேகங்களுக்குத் தலைமையான ஒரு மேகம் செந்தாமரை மலர்த் தொகுதியைப் பூத்துக்கொண்டு ஒரு சிங்காசனத்தில் விளங்குவது போல, அயோத்திக்கு அரசனாகிய இராமன் சிங்காசனத்தில் இருந்தான்.

கு:—இராமனது கரிய பெரிய மார்பு விரிகடல் போன்றது; அம்மார்பில் அணிந்த முத்தாரம் அக்கடல் நடுவே தோன்றிய மின்னைப் போன்றது என்க. மணிமகுடம் எரிகதிர்க் கடவுள்

ஏய்ப்ப என மாறிக்கூட்டுக. கருமுகிற்கரசு அரியணைப் பொலிந்த தென்ன என்பது இல்பொருள் உவமை. ''கருமுகிற் ருமரைக் காடுபூத்து நீ, டிருசுட ரிருபுறத் தேந்தி யேடவிழ் திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல் வருவபோல் கலுழன் மேல் வந்து தோன்றினன். (பால, திருவவதாரப்-12) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். முகிற்கு அரசு என்றது முகில்களுள் தலைமையான முகிலை; அரசனாகிய இராமனுக்கு உவமை யாதற்கு ஏற்பக் கருமுகிற்கரசு என்றார். அயோத்தி வேந்த னாய் இராமன் இப்போதுதான் முடிசூடி அரியணையில் அமர்கின் றமை புலப்பட அப்பெயரால் கூறினர். (2)

## இராமனுக்குக் கவரி வீசுதல்

10498. மரகதச் சயில மீது
வானிலாப் பாய்வ தென்ன
இருகுழை யிடறும் வேற்க
ணிளமுலை யிளந லார்தம்
கரகம லங்கள் பூத்த
கற்றையங் கவரி தெற்ற
உரகரு நரரும் வானத்
தும்பரும் பரவி யேத்த.

மரகதச் சயில மீது
வான் நிலாப் பாய்வது என்ன
இருகுழை இடறும் வேற்கண்,
இளமுலை, இள நலார்தம்
கரகமலங்கள் பூத்த
கற்றை அம் கவரி தெற்ற,
உரகரும், நரரும், வானத்து
உம்பரும், பரவி ஏத்த.

பொ:—மரகத மலையின்மீது வெண்ணிறமான நிலவு பாய் வது போல,-இரு காதுகளிலும் அணிந்துள்ள குழைகளை இடறிச் செல்லும் வேலைப் போன்ற கண்களையும், இளமையான நகில் களையும் இளமையையும் உடைய பெண்டிர், தம் கையாகிய தாமரை மலரில் பூத்தாற் போன்று கற்றையாக விளங்கும்

அழகிய வெண்கவரியை மாறிமாறி வீச, நாகரும் நரரும் வானு லகத்துள்ள தேவரும் பாடித் துதிக்கவும்.

கு:—நிலாப் பாய்வதென்ன கவரிதெற்ற என இயையும். மரகதமலை போன்று பசுமை நிறம்படைத்த இராமன் மேல் வெண்கவரி வீசப்படும் தோற்றம், மரகத மலைமீது வெள்ளிய நிலாப்பாய்வது போல இருந்தது எனத்தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு: கவரி வீசும் பெண்டிரின் இயல்பு உணர்த்துவாராய் 'இருகுழை யிடறும் வேற்கண்' முதலியன கூறினர். காதளவு ஓடும் கண் என்பார் இருகுழையிடறும் வேற்கண், என்றார். இடறுதல்–தாக்குதல். பெண்டிர் தம் தாமரை மலர்போன்ற கைகளில் பிடித்துள்ள வெண்கவரியின் தோற்றம் அவர்தம் கைத்தாமரையில் பூத்தாற்போன்றுளது என்பார். 'கரகமலங் கள் பூத்த கற்றையங் கவரி' என்றார். தெற்றுதல் மாறி மாறி வீசுதல். மூவுலகத்தவரும் பாடித் துதித்தமை இறுதியடியில் கூறப்பட்டது. பரவுதல்-பாடுதல். ஏத்துதல்–துதித்தல். உரகர்–நாகலோகத்தவர். (3)

இச்செய்யுளின் பின் 71–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது :—

10498 (1) வேதங்கள் முழங்க மற்றை
வேதிய ராசி கூறக்
கீதங்கள் பாட வீணை
கிளருதம் புருவொ லிப்பப்
பேதங்கொள் முரசுஞ் சங்கும்
துந்துபி பிறவு மார்ப்பப்
பாதங்கள் பெயர்த்து மின்னார்
நடனங்கள் பயில மாதோ.

வெண்குடை நிழற்றும் காட்சி

10499. உலகமீ ரேழுந் தன்ன
வொளிநிலாப் பரப்ப வானில்
விலகிநின் றெளிருந் திங்கள்
வெட்கியுட் கருப்புக் கொள்ளக்

கலகவா ணிருதர் கோனைக்
கட்டழித் திட்ட கீர்த்தி
இலகிமே னிவந்த தென்ன
வெழுதனிக் குடைநி ழற்ற.

உலகம் ஈர்-ஏழும் தன்ன
ஒளிநிலாப் பரப்ப வானில்
விலகி நின்று ஒளிரும் திங்கள்
வெட்கிஉள் கருப்புக் கொள்ள,
கலக வாள் நிருதர் கோனைக்
கட்டழித்திட்ட கீர்த்தி
இலகிமேல் நிவந்தது என்ன
எழு தனிக் குடை நிழற்ற.

பொ :—'கலகமே புரியும் கொடிய அரக்கர் கோனுகிய இராவணனை அடியோடு அழித்திட்ட புகழ் விளக்கமுற்று மேலே உயர்ந்து தோன்றுகின்றது' என்று சொல்லுமாறு மண்ணில் இராமனது தலைக்குமேல் எழுந்து உயர்ந்துநிற்கும் ஒற்றைவெண் கொற்றக்குடை, விண்ணில் சேய்மையில் விலகிநின்று ஒளிவீசுகின்ற சந்திரன் (கண்டு இத்தகைய பெருமை தனக்கு இல்லையே என) நாணி, உள்ளே கறுவுதல் (களங்கம்) கொள்ளுமாறும் பதினான்கு உலகங்களிலும் தன்னுடைய ஒளியாகிய நிலவைப் பரப்பும்படியும், செய்யாநிற்கவும்,

கு :—கீர்த்தி இலகிமேனிவந்ததென்ன எழும் தனிக்குடை, திங்கள் வெட்கியுட்கருப்புக் கொள்ள, ஒளிநிலாப் பரப்ப, நிழற்ற; என இயையும். புகழ் வெண்ணிறமுடையது என்ற கவிமரபு கருதி 'நிருதர்கோனைக் கட்டழித்திட்ட கீர்த்தி இலகி மேனிவந்ததென்ன எழு தனிக்குடை நிழற்ற' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினார். இராமனது குடைபோன்று பதினான்கு உலகங்களிலும் ஒளிவீச இயலாமை நினைந்து திங்கள் நாணினதோடு அக்குடையின்மேல் வெறுப்புணர்ச்சியும் கொண்டது என்ற பொருளும் புலப்படுமாறு 'உட்கருப்புக்கொள்ள' என்ற தொடரமைந்துளது காணலாம். கருப்பு என்றது களங்கத்தை. களங்கமற்ற வெண்குடையின் சிறப்பு இதனால் புலனுதல் காணலாம். மண்மிசை விளங்கும் இராமனது வெண்

குடைக்கு விண்மிசை விளங்கும் வெண்டிங்களும் ஈடாகாது என்றவாறு. 'மண்ணிடையுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித், தண்ணிழல் பரப்பவும் இருளைத் தள்ளவும், அண்ணறன் குடைமதியமையுமாதலான் விண்ணிடை மதியினை மிகையிது என்னவே'' (அரசியற் - 9) என்பது இங்கு நோக்கின் தயரதன் குடையினும் இராமன் குடை, தலைசிறந்து விளங்கினமை புலனும். (4)

வாத்தியங்கள் முழங்க மகளிர் நடம்புரிதல்

10500. மங்கல கீதம் பாட
மறையவ ராசி கூறச்
சங்கினங் குமுறப் பாண்டி
றண்ணுமை துவைப்பத் தாவில்
பொங்குபல் லியங்க ளார்ப்பப்
பொருங்கயற் கருங்கட் செவ்வாய்ப்
பங்கய முகத்தி னர்கள்
மயினடம் பயில மாதோ.

மங்கல கீதம்பாட,
மறையவர் ஆசி கூற,
சங்கு இனம் குமுற, பாண்டில்
தண்ணுமை துவைப்ப, தாஇல்
பொங்கு பல் இயங்கள் ஆர்ப்ப,
பொரும் கயல் கருங்கண், செவ்வாய்,
பங்கயமுகத்தினர்கள்
மயில்நடம் பயில மாதோ.

பொ:—மங்கல கீதங்களைப் பாடகர் பாட, வேதியர்கள் வாழ்த்துக்கூற, சங்கினங்கள் முழங்க, பாண்டிலும் தண்ணுமையும் ஒலிக்க, குற்றமற்றனவாய் மிக்குவிளங்கும் பல வாத்தியங்கள் ஆரவாரிக்க, போர்செய்யும் இருகயல் மீன்களைப்போன்று விளங்கும் கரிய கண்களையும் சிவந்த வாயினையும் தாமரை மலர் போன்ற முகத்தினையும் உடைய மாதர்கள் மயில்போல நடம் புரியா நிற்கவும்;

கு:—குமுற, துவைப்ப, ஆர்ப்ப என்பன, ஒலிக்க என்ற ஒருபொருள் குறித்த திரிசொற்கள். இது பொருட்பின் வருநிலை யணி எனப்படும். பாண்டில் — கஞ்சதாளம். தண்ணுமை — மத்தளம். மயில் நடஞ்செய்வதுபோன்ற நடனத்தை 'மயில் நடம்' என்றார். (5)

### மன்னர்கள் அடிபணிதல்

10501. திரைகடற் கதிரு நாணச்
செழுமணி மகுட கோடி
கரைதெரி விலாத சோதிக்
கதிரொளி பரப்ப நாளும்
வரைபொரு மாட வாயி
னெருக்குற வந்து மன்னர்
பரசியே வணங்குந் தோறும்
பதயுகஞ் சேப்ப மன்னோ.

திரைகடல் கதிரும் நாணச்
செழுமணி மகுட கோடி
கரைதெரிவு இலாத சோதிக்
கதிர் ஒளி பரப்ப, நாளும்
வரைபொரு மாட வாயில்
நெருக்குற வந்து, மன்னர்
பரசியே வணங்கும் தோறும்
பதயுகம் சேப்ப மன்னோ.

பொ:—அலைகடலில் தோன்றும் உதய சூரியனும் நாணுமாறு செழுமையான மணிகள் பதித்த மகுடங்களின் வரிசைகள் அள விட முடியாத சோதிமயமான கதிர் ஒளியைப் பரப்புமாறு நாள் தோறும் மலையையொத்த மாடத்தின் வாயிலில் நெருக்கந் தோன்றுமாறு வந்து அரசர்கள் துதித்து வணங்குந்தோறும் (இராமனுடைய) தாளிணை செந்நிறமடையவும்,

கு:—இராமனை நாள்தொறும் வணங்கு மன்னர்கள் கோடிக் கணக்கினராதலின் அவர்கள் அணிந்துள்ள மகுடங்களை மகுட கோடி எனக் குறிப்பிட்டார். கோடிக்கணக்கான மன்னர் தம்

முடி இராமன் அடியில் படுமாறு வணங்குதலின் அவன் பாதங் கள் முடிபட்டுச் சிவந்தன என்க. ''நின்றீமின் மன்னீர் நெருநற் றிறைகொணர்ந்து, முன்றந்த மன்னர் முடிதாக்க. இன்றும், திருந்தடி புண்ணாகிச் செவ்வி யிலனே, பெருந்தண் ணுறந்தையார் கோ'' என்பது இங்கு நினைக்கத்தகும். (6)

*மந்திரக் கிழவர் முதலோர் சூழ இராமன் இருத்தல்*

10502. மந்திரக் கிழவர் சுற்ற
மறையவர் வழுத்தி யேத்தத்
தந்திரத் தலைவர் போற்றத்
தம்பியர் மருங்கு சூழச்
சிந்துரப் பவளச் செவ்வாய்த்
தெரிவையர் பலாண்டு கூற
இந்திரற் குவமை யேய்ப்ப
வெம்பிரா னிருந்த காலை.

மந்திரக் கிழவர் சுற்ற,
மறையவர் வழுத்தி ஏத்த,
தந்திரத் தலைவர் போற்ற,
தம்பியர் மருங்கு சூழ,
சிந்துரப் பவளச் செவ்வாய்த்
தெரிவையர் பலாண்டு கூற,
இந்திரற்கு உவமை ஏய்ப்ப
எம்பிரான் இருந்த காலை.

பொ :—மந்திரிமார்கள் சுற்றியிருக்கவும், வேதியர் பாராட் டித் துதிக்கவும், சேனைத்தலைவர்கள் போற்றவும், தம்பிமார்கள் பக்கத்தில் சூழ்ந்திருக்கவும், சிந்தூரத் திலகத்தையும் பவழம் போன்று சிவந்த வாயினையுமுடைய மங்கல மகளிர் பல்லாண்டு கூறவும், இந்திரனுக்கு உவமையாகப் பொருந்துமாறு எம்பெரு மானாகிய இராமன் இருந்தபோது,

கு :—தெரிவையர் என்றது, பருவம் குறியாது மகளிர் என்ற பொதுப் பொருள் தந்துநின்றது. சிந்துரம் என்றது சிந்தூரத்

திலகத்தை. இந்திரற்குவமை யேய்ப்ப எனவே இராமன் அரசு வீற்றிருந்த தோற்றம் தேவேந்திரனைக் காட்டிலும் சிறந்து காட்டினமை புலனும். மேல் 3-ஆம் செய்யுள் முதலாக வந்துள்ள ஏத்த, நிழற்ற, நடம்பயில, பதயுகம் சேப்ப என்ற செயவென் எச்சங்கள் 'இருந்த காலை' என்ற பெயரெச்சத்து முதனிலை வினையோடு முடிந்தது. இருந்த காலை என்பது வெய்யோன் மகன் வந்து வணங்கிச்சூழ, வீடணக்குரிசில் வணங்கிச் சூழ்ந் தான் என ஒன்பதாங் கவியில் முடியும். குளகம். (7)

இச்செய்யுளின் பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது.

10502 (1) இந்திர னிவன்கொ லென்று
இமையவர் தொழுது வாழ்த்த
கந்தடு களிற்றுச் செங்கோற்
காகுத்தன் கருணை மெய்யன்
செந்திரு மடந்தை கேள்வன்
தெசரத ராமன் செய்ய
மந்திரத் தலைவர் சூழ்வான்
மன்னரை வருக வென்றான்.

31, 41, 45, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் கள் உள்ளன :—

,, (2) கெவனெடு கெவாக்கன் தூம்பன்
கேசரி கெந்த மாதன்
தவனுறு சரபன் சாம்பன்
சுடேணன் சம்பாதி நீலன்
நவையறு பனசன் தாரன்
கெசன்நளன் சமீரன் நண்பாம்
இவனரி லோமன் பின்போ
லெயிற்றின னிடப னென்பான்.

,, (3) விரதன் வீமாக்கன் வேக
தரிசியே விந்தன் வெற்றிக்
கரமுடைச் சதுக்கன் சோதி
முகன்ததி முகன் கயந்தன்
அரன்விறல் கொடிய கோபன்
இடும்பனோ டரம்ப னுண்மை

தெரிதரு வசந்தன் கொற்றத்
துன்முகன் தீர்க்க பாதன்.

வானர வீரர்களோடு சுக்கிரீவன்வந்து வணங்குதல்
10503, 10504

10503. மயிந்தன்மா துமிந்தன் கும்ப
னங்கத னனுமன் மாறில்
சயந்தரு குமுதக் கண்ணன்
சதவலி குமுதன் றண்டார்
நயந்தெரி ததிமு கன்கோ
கசமுகன் முதல நண்ணூர்
வியந்தெழு மறுபத் தேழு
கோடியாம் வீர ரோடும்.

மயிந்தன், மா துமிந்தன், கும்பன்,
அங்கதன், அனுமன், மாறு இல்
சயம் தரு குமுதக் கண்ணன்,
சதவலி, குமுதன், தண்தார்
நயம்தெரி ததிமுகன், கோகச
முகன், முதல நண்ணூர்
வியந்து எழும் அறுபத்து ஏழு
கோடியாம் வீரரோடும்.

பொ :—மயிந்தன், சிறந்த துமிந்தன், கும்பன், அங்கதன், அனுமன் ஒப்பில்லாத வெற்றியைத் தருகின்ற குமுதக் கண்ணன், சதவலி, குமுதன், குளிர்ந்த மாலையணிந்த, நன்மைதரும் செயல் தெரிந்த ததிமுகன், கோகசமுகன், என்ற இவர்களை முதல்வராகக் கொண்ட, பகைவர்களும் வியப்புற்று எழுதற்குரிய ஆற்றல் பெற்ற அறுபத்தேழு கோடி வானர வீரரோடும்,

கு :—வீரரோடும் வெய்யோன் மகன் வந்து வணங்கிச்சுழ என அடுத்த செய்யுளில் முடியும். குளகம். (8)

வீடணன் வந்து வணங்குதல்

10504. ஏனையர் பிறருஞ் சுற்ற
வெழுபது வெள்ளத் துற்ற
வானர ரோடும் வெய்யோன்
மகன்வந்து வணங்கிச் சூழத்
தேனிமி ரலங்கற் பைந்தார்
வீடணக் குரிசில் செய்ய
மானவா ளரக்க ரோடும்
வந்தடி வணங்கிச் சூழ்ந்தான்.

ஏனையர் பிறரும் சுற்ற,
எழுபது வெள்ளத்து உற்ற
வானரரோடும் வெய்யோன்
மகன் வந்து வணங்கிச் சூழ,
தேன் இமிர் அலங்கல் பைந்தார்
வீடணக் குரிசில், செய்ய
மான வாள் அரக்கரோடும்
வந்து, அடிவணங்கிச் சூழ்ந்தான்.

பொ :—மற்றுமுள்ள பிறரும் சுற்றிவர, எழுபது வெள்ளச் சேனையில் பொருந்திய வானரர்களோடும் சூரியன் மகனாகிய சுக்கிரீவன் வந்து வணங்கிச் சூழ்ந்திருக்க, வண்டுகள் ஒலிக்கின்ற அசைதலையுடைய பசுமையான மலர் மாலையணிந்த விடணனாகிய உபகாரி, செம்மை நெறி செல்லும் மானத்தையும் வாளையுமுடைய அரக்கர்களோடு வந்து அடிவணங்கிச் சூழ்ந்திருந்தான்.

கு :—இமிர்தல் என்ற வினையால் தேன் என்ற பல பொருள் ஒருசொல் வண்டு என்னும் பொருளதாதல் அறியலாம். இமிர்தல்-ஒலித்தல். குரிசில்-உபகாரி; ஆண்மையுடையவன். கொடிய அரக்கர் அல்லர் என்பார், 'செய்ய மான வாள் அரக்கர்' என்று சிறப்பித்தார். (9)

குகன் வந்து வணங்குதல்

10505. வெற்றிவெஞ் சேனை யோடும்
வெறிப்பொறிப் புலியின் வெவ்வால்

சுற்றுறத் தொடுத்து வீக்கு
மரையினன் சுழலுங் கண்ணன்
கற்றிரள் வயிரத் திண்டோட்
கடுந்திறன் மடங்க லன்னுன்
எற்றுநீர்க் கங்கை நாவாய்க்
கிறைகுகன் றெழுது சூழ்ந்தான்.

வெற்றி வெஞ் சேனையோடும்,
வெறிப் பொறிப் புலியின் வெவ்வால்
சுற்றுறத் தொடுத்து வீக்கும்
அரையினன், சுழலும் கண்ணன்,
கல்திரள் வயிரத் திண்தோள்
கடுந்திறல் மடங்கல் அன்னுன்,
எற்றுநீர்க் கங்கை நாவாய்க்கு
இறை, குகன், தொழுது சூழ்ந்தான்.

பொ :—அச்சந்தரும் புள்ளிகளையுடைய புலியின் கொடிய வாலைச் சுற்றத்தொடுத்துக் கட்டிய அரையையுடையவனும், சுழல்கின்ற கண்ணையுடையவனும், கல்போல் திரண்ட உறுதி பொருந்திய திண்ணிய தோளுடனே, கடுமையான திறலை யுடைய சிங்கத்தைப் போன்றவனும், மோதுகின்ற நீரையுடைய கங்கையாற்றில் விடும் ஓடங்களுக்குத் தலைவனும் ஆகிய குகன், வெற்றி பொருந்திய தன் சேனையோடும் வந்து வணங்கிச் சூழ்ந்தான்.

கு :—வெறி-அச்சம். புள்ளிகள் நிறைந்த உடம்பினையுடைய புலி, கண்டோர்க்கு அச்சம் விளைக்கும் இயல்பினதாதல் புலப்பட 'வெறிப் பொறிப்புலி' என்றுர். சூழ்தல் என்பது இராமனை யடுத்துச் சூழ இருத்தல். அரையினன், கண்ணன், மடங்கலன்னுன், இறை, குகன் சேனையோடும் தொழுது சூழ்ந்தான் என இயையும். (10)

வந்தவர்களை வள்ளல் இனிதிருக்கச் செய்தல்

10506. வள்ளலு மவர்க டம்மேல்
வரம்பின்றி வளர்ந்த காதல்

உள்ளுறப் பிணித்த செய்கை
யொளிமுகக் கமலங் காட்ட
அள்ளுறத் தழுவி னுன்போ
லகமகிழ்ந் தினிதி னேக்கி
எள்ளலில் லாத மொய்ம்பீ
ரீண்டினி திருத்தி ரென்ருன்.

வள்ளலும் அவர்கள் தம்மேல்
வரம்பின்றி வளர்ந்த காதல்
உள்ளுறப் பிணித்த செய்கை
ஒளிமுகக் கமலம் காட்ட,
அள்ளுறத் தழுவினுன் போல்
அகம் மகிழ்ந்து, இனிதின் நோக்கி,
'எள்ளல் இல்லாத மொய்ம்பீர்!
ஈண்டு இனிது இருத்திர்' என்ருன்.

பொ:—வள்ளலாகிய இராமனும், அவர்கள்மேல் அளவில்லாமல் வளர்ச்சியடைந்த அன்பு உள்ளத்தில் அழுந்தப் பிணித்த தன்மையை ஒளிவாய்ந்த தன் முகத்தாமரையே காட்டாநிற்க, அவர்களை அழுந்தத் தழுவினவன் போல மனம் மகிழ்ந்து இனிமையாக அவர்களைப் பார்த்து 'இகழ்தற்குரிய தன்மை சிறிதும் இல்லாத வலிமையுடையவர்களே! இங்கு இனிதே இருங்கள்' என்று கூறினுன்.

கு:—எல்லார் மாட்டும் ஒப்பச் செலுத்தும் பேரன்புடையவன் இராமன் என்பதைப் புலப்படுத்தியவாறு. தனக்கு உதவி செய்த அவர்கள்பால் இராமனுக்கு வரம்பில்லாத அன்பு பெருகி அவனுள்ளமெல்லாம் நிறைந்துள்ள தன்மையை அவன் முக மலர்ச்சியே காட்டிற்று என்றவாறு. காட்சியால் தழுவாவிடினும் கருத்துவகையால் தழுவினுன் என்பார், 'தழுவினுன் போல்...... இனிதினேக்கி' என்ருர். மொய்ம்பு-வலிமை, தோளுமாம். யான் இராவணனை வென்ற வெற்றிக்குக் காரணமாக இருந்து புகழ்க்கு உரியிர் ஆயினிர் என்பான், 'எள்ளலிலாத மொய்ம்பீர்' எனருன். எள்ளல் இலாத மொய்ம்பீர், எனவே, புகழ்தற்குரிய மொய்ம்பீர் என்பது அருத்தா பத்தியளவையால் புலப்படுவ

தாயிற்று. இராமன் கூறிய இச்சொல் வானர வீரர்க்குப் பெரிய பட்டமாக அமைந்தது எனலாம். (11)

இச்செய்யுளின் பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல் உள்ளது '—

10506 (1) வந்த சூரியன் மகன்றனை வீடணன் குகனை
எந்தை யீண்டினி திருக்கென வருகுற விருத்தி
நந்து லாவுகை நாரண னவற்குறும் வரிசை
சிந்தை கூர்தரக் கொடுத்தன செப்புவன் மாதோ.

*அறிஞர் முதலிய பல்லோரும் இராமனைச் சுற்றியமர்தல்*

0507. நன்னெறி யறிவு சான்றோர்
நான்மறைக் கிழவர் மற்றைச்
சொன்னெறி யறிவு நீரார்
தோமறு புலமைச் செல்வர்
பன்னெறி தோறுந் தோன்றும்
பருணிதர் பண்பின் கேளிர்
மன்னவர்க் கரசன் பாங்கர்
மரபினுற் சுற்ற மன்னோ.

நல்நெறி அறிவு சான்றோர்,
நான்மறைக் கிழவர், மற்றைச்
சொல்நெறி அறியும் நீரார்,
தோம் அறு புலமைச் செல்வர்,
பல்நெறி தோறும் தோன்றும்
பருணிதர், பண்பின் கேளிர்,
மன்னவர்க்கு அரசன் பாங்கர்,
மரபினுல் சுற்ற மன்னோ.

பொ :—நல்ல நெறியில் அறிவுமிக்கவரும், நான்கு வேதங்களைக் கற்றவரும், மற்றுச் சொல்லும் நெறியை யறிந்த தன்மையையுடைய பேச்சாளரும், குற்றமற்ற புலமையையே செல்வமாகக் கொண்டவரும், பண்புகளுக்கே உறவுபூண்டொழுகும் பண்புடையோரும், (இன்னும்) பல துறைகள் தோறும் உயர்ச்சி பெற்றுத் தோன்றுகின்ற பக்குவம் பெற்றவரும் அரசர்க்கரசனுகிய இராமன் பக்கத்தில் முறைப்படி சுற்றியிருக்க.

கு:—பருணிதர்—பக்குவம் பெற்றவர். பண்பின் கேளிர் என்றது பண்புடையோரை. சக்கரவர்த்தி என்ற பொருளில் 'மன்னவர்க்கரசன்' என இராமனைக் குறிப்பிட்டவாறு. (12)

அரசரும் பிறரும் இராமனோடு இருதிங்களை மகிழ்ச்சியாகக் கழித்தல்

10508. தேம்படு படப்பை மூதூர்த்
திருநக ரயோத்தி சேர்ந்த
பாம்பணை யமலன் றன்னைப்
பழிச்சொடும் வணக்கம் பேணி
வாம்புனல் பரவை ஞாலத்
தரசரு மற்று ளோரும்
ஏம்பலுற் றிருந்தார் நொய்தி
னிருமதி யிறந்த தன்றே.

தேம்படு படப்பை மூதூர்த்
திருநகர் அயோத்தி சேர்ந்த
பாம்பு அணை அமலன் தன்னைப்
பழிச்சொடும் வணக்கம் பேணி
வாம்புனல் பரவை ஞாலத்து
அரசரும் மற்றுளோரும்
ஏம்பல் உற்று இருந்தார்; நொய்தின்,
இருமதி இறந்தது அன்றே.

பொ:—தேன் பொருந்திய சோலைகள் நிறைந்த பழைய ஊர்களைத் தன்னருகே கொண்டுள்ள திருநகரமாகிய அயோத்தி வந்தடைந்த, பாம்பணையைப் படுக்கையாகக் கொள்ளும் திருமாலின் அம்சமான குற்றமற்ற இராமனைத் துதித்தலோடு வணக்கத்தையும் விரும்பிச் செய்துகொண்டு — வாவும் தன்மையுடைய நீர் நிறைந்த கடலால் சூழப்பட்ட நிலவுலகத்தில் உள்ள அரசர்களும் மற்றவர்களும் மகிழ்ச்சியுற்றிருந்தார்களாக, விரைவில் இரண்டு மாதகாலம் கழிந்துவிட்டது.

கு:—'பாம்பணை யமலன்' என இராமனைக் குறித்தது, பழைய தெய்வ நிலையை நினைந்து கூறியது. ஏம்பல்—மகிழ்ச்சி,

நொய்து—விரைவு. இரண்டு மாதங்கள் கழிந்ததே தெரியாமல் மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள் என்பார் 'நொய்தின் இருமதி கழிந்ததன்றே' என்றார். (13)

கவிக்கூற்று

10509. நெருக்கிய வமர ரெல்லா
நெடுங்கடற் கிடைநின் றேத்தப்
பொருக்கென வயோத்தி யெய்தி
மற்றவர் பொரும றீர
வருக்கமோ டரக்கர் யாரு
மடிதர வரிவிற் கொண்ட
திருக்கிளர் மார்பி னன்பிற்
செய்தது செப்ப லுற்றும்.

நெருக்கிய அமரர் எல்லாம்
நெடுங்கடற்கு இடைநின்று ஏத்த,
பொருக்கென அயோத்தி எய்தி,
மற்றவர் பொருமல் தீர,
வருக்கமோடு அரக்கர் யாரும்
மடிதர, வரிவில் கொண்ட
திருக்கிளர் மார்பினன் பின்
செய்தது செப்ப லுற்றும்.

பொ:—நெடிய பாற்கடலுக்கு இடையே திரளாக நெருங்கியிருந்த தேவர்கள் எல்லாம் நின்று துதிக்க (அப் பாற்கடலிலிருந்து) விரைந்து அயோத்தியில் வந்து பிறந்து அத்தேவர் துன்பங்கள்தீரத் தம் வருக்கத்தோடு அரக்கர் யாவரும் மடியுமாறு கட்டமைந்த வில்லை யேந்திய, திருமகள் விளங்கும் மார்பினையுடைய, இராமன் செய்ததைச் சொல்லத்தொடங்கினோம்.

கு:—பொருக்கென விரைவுக் குறிப்புச் சொல். பொருமல்—துன்பம். வருக்கம்—இனம். இராமனைத் திருக்கிளர் மார்பினன் என்றது, தெய்வநிலையை நினைந்து கூறியது. (14)

10510. மறையவர் தங்கட் கெல்லாம்
மணியொடு முத்தும் பொன்னும்

நிறைவளம் பெருகு பூவுஞ்
சுரபியு நிறைத்து மேன்மேல்
குறையிதென் றிரந்தோர்க் கெல்லாங்
குறைவறக் கொடுத்துப் பின்னர்
அறைகழ லரசர் தம்மை
வருகென வருள வந்தார்.

மறையவர் தங்கட்கு எல்லாம்
மணியொடு முத்தும், பொன்னும்,
நிறைவளம் பெருகு பூவும்,
சுரபியும், நிறைத்து, மேல்மேல்,
குறைஇது என்று இரந்தோர்க்கு எல்லாம்
குறைவு அறக் கொடுத்து, பின்னர்,
அறைகழல் அரசர் தம்மை
'வருக'என அருள, வந்தார்.

பொ :—வேதமுணர்ந்த வேதியர்க்கெல்லாம் மணியும் முத்தும், பொன்னும், நிறைந்த வளம் பெருகுகின்ற பூமியும், பசுக்களும், மேலும் மேலும் நிறைத்துவிட்டு, 'இது குறை' என்று இரந்து வேண்டியவர்கட்கெல்லாம் அக்குறை நீங்கக் கொடுத்துவிட்டுப் பிறகு, ஒலிக்கின்ற வீரக்கழலிணை யணிந்த அரசர்களை 'வருக' என்று இராமன் அருள்கூர்ந்து அழைக்க, அவர்கள் வந்தார்கள்.

கு :—நிறைவளம் பெருகு என்ற அடையை சுரபிக்கும் கூட்டுக. நிறைந்த பால் வளம் பெருகுகின்ற பசு என்க. 'மேன்மேல் நிறைத்து' எனவே, அந்தணர் மறுக்க மறுக்கக் கொடுத்தமை புலனும். இராமனே கொடுத்த கொடையை முதலிற் கூறிப்பின் இரந்து கேட்ட ஏழைகட்குக் குறைதீரக் கொடுத்தமை கூறியவாறு. 'அருள' என்றது சொல்லியருள என்னும் பொருளது. (15)

10511. அய்யனு மவர்க டம்மை
யகமகிழ்ந் தருளி னேக்கி
வய்யகஞ் சிவிகை தொங்கன்
மாமணி மகுடம் பொற்பூண்

கொய்யுளைப் புரவி திண்டேர்
குஞ்சர மாடை யின்ன
மெய்யுறக் கொடுத்த பின்னர்க்
கொடுத்தனன் விடையு மன்னோ.

அய்யனும் அவர்கள் தம்மை
அகம்மகிழ்ந்து, அருளின் நோக்கி
வய்யகம், சிவிகை, தொங்கல்,
மாமணி மகுடம், பொன்பூண்,
கொய்உளைப் புரவி, திண்தேர்
குஞ்சரம் ஆடை இன்ன
மெய்உறக் கொடுத்த பின்னர்
கொடுத்தனன் விடையும் மன்னோ.

பொ :—இராமனும்—அவ்வரசர்களை மனம் மகிழ்ந்து அருளோடு பார்த்து, பூமி, சிவிகை, மாலை, சிறந்தமணிகள் பதித்த மகுடம், பொன்னின் இயன்ற அணிகலன்கள், கத்தரித்த பிடரி மயிரையுடைய குதிரை, திண்ணியதேர், யானை, பட்டாடை இவை போன்றவற்றை உண்மை அன்பு பொருந்தக் கொடுத்த பின், அவர்கள் ஊர் செல்ல விடையும் கொடுத்தான்.

கு :—தனது முடிசூட்டு விழாவைக் காணவந்த அரசர்கட்கு நில முதலியவற்றை உரிமைசெய்தும் சிவிகை முதலியவற்றைக் கொடுத்தும் இராமன் மகிழ்வித்து அவர்களை அனுப்புதல் செய்தான் என்க. முடிசூட்டு விழா முடிந்த பின் இரண்டு மாதங்கள் கழித்துத் தத்தம் ஊர்க்குச் செல்ல விரும்பிய மன்னர்கட்கு அவர் விரும்பியாங்குச் செல்ல உடன்பட்டதையே விடை கொடுத்ததாகக் கூறுதல் மரபு. மெய் என்றது மெய்ம்மையான அன்பினை.
(16)

இச்செய்யுளின் பின் 63–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10511 (1) மன்னர் யாவரும் வந்தடி யேத்தியே
உன்னை விட்டுப் பிரிந்திரோம் என்றலும்
சொன்ன பின்பு கரிபரி தூசுபார்
அன்ன மன்னவர்க் கீந்தொன் றறைகுவான்.

10511 (2) வந்தொ ரிரண்டுண்டு நீரென மன்னவன்
தந்தை கூறச்சிறந் தேவிடை தான்தரத்
தந்தந் தேசந் தனக்கவர் போனபின்
இந்தி ரன்னென வெங்கோ னிருந்தபின்.

,, (3) சூரி யன்றரு தோன்றலை வாவென
வேரி யந்தொடை வீர விளவலும்
பாரி லோரிட மில்லெனப் பண்ணைகொண்
டாரி யன்பத மங்கை யிறைஞ்சினன்.

சுக்கிரீவனுக்கு இராமன் பரிசுகள் கொடுத்தல்

10512. சம்பரன் றன்னை வென்று
தயரத னின்ற காலத்
தும்பர்தம் பெருமா னீந்த
வொளிமணிக் கடகத் தோடும்
கொம்புடை மலையுந் தேருங்
குரகதக் குழுவுந் தூசும்
அம்பரந் தன்னை நீத்தா
னலரிகா தலனுக் கீந்தான்.

சம்பரன் தன்னை வென்று
தயரதன் நின்ற காலத்து
உம்பர்தம் பெருமான் ஈந்த
ஒளிமணிக் கடகத்தோடும்
கொம்புடை மலையும் தேரும்,
குரகதக் குழுவும் தூசும்
அம்பரம் தன்னை நீத்தான்
அலரி காதலனுக்கு ஈந்தான்.

பொ :—தயரதன் சம்பராசுரனை வென்று வாகைசூடி நின்ற காலத்தில் தேவர்கள் தலைவனாகிய இந்திரன் மகிழ்ந்து கொடுத்த ஒளிவாய்ந்த மணிகள் பதித்த கடகத்தோடும் கொம்புகளையுடைய மலையென மதிக்கத்தக்க யானைகளையும் தேர்களையும் குதிரைக் கூட்டங்களையும் ஆடைவகைகளையும்

அழகிய பரமபதத்தை விட்டு அயோத்தியில் பிறந்த இராமன், சூரியன் மகனுகிய சுக்கிரீவனுக்குக் கொடுத்தான்.

கு :—இந்திரன் வேண்டுகோளின்படி தயரதன் சம்பராசுரனேடு போர்செய்து வென்று நின்றபோது அவ்வெற்றிக்கு மகிழ்ந்த அத் தேவேந்திரன் கொடுத்த ஒளிமணிக் கடகம் சிறப்புடையதாகலின் தனது வெற்றிக்குத் துணைபுரிந்த சுக்கிரீவனுக்கு, வெற்றிப் பரிசாகத் தன் தந்தை பெற்ற அம் மணிக் கடகத்தை இராமன் கொடுத்தான் என்க. கொம்புடை மலை என்றது யானையை. குரகதம்-குதிரை. தூசு—ஆடை. அம்பரம் என்றது, அழகிய பரமபதத்தை. அம்பரம், விண் எனக் கொண்டு, விண்ணுலகை நீத்து மண்ணுலகில் தோன்றிய இராமன் எனக் கூறலும் ஆம். அலரி-சூரியன். (17)

இச்செய்யுளின்பின் 43-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10512 (1) பொன்னினு மணியினும் புனைந்த வாரமும்
பன்னிய பணிவகைப் பாத மாதியாய்ச்
சென்னியி னளவுந்தான் சேரச் சேத்திய
தன்னவை யெடுத்தனன் தண்மை தன்னுடன்.

,, (2) மிக்க பட்டு வகையுடன் வெண்மைசேர்
........... தூசுடன் சாற்றும் வரிசைகள்
கைக்கு வந்தன யாவையும் காகுத்தன்
நக்கு நக்கு நலம்பெற நல்கினுன்.

,, (3) தேரு மாவுங் களிறுஞ் சிவிகையும்
ஊரும் நாடு முடன்குடை சாமரை
சீரி தான விதானம் கொடிமுதல்
ஆரி யன்மிக வீந்துபி னன்பினுல்.

, (4) வாலி மாமகன் றன்னை வரவழைத்
தால முண்ட வன்தமர்க் கேமகிழ்ந்
தேல வீந்ததிவ் வேழுல கும்பெறும்
கோல வார மிதுவெனக் கூறினுன்.

10513. அங்கத மிலாத கொற்றத்
தண்ணலு மகில மெல்லாம்

அங்கத னென்னு நாம
மழகுறத் திருத்து மாபோல்
அங்கதங் கன்னற் ரேளாற்
கயன்கொடுத் ததனை யீந்தான்
அங்கதன் பெருமை மண்மே
லாரறிந் தறைய கிற்பார்.

அங்கதம் இலாத கொற்றத்து
அண்ணலும், அகிலம் எல்லாம்
அங்கதன் என்னும் நாமம்
அழகுறத் திருத்துமாபோல்,
அங்கதம் கன்னல் தோளாற்கு
அயன்கொடுத்ததனை ஈந்தான்,
அங்கதன் பெருமை மண்மேல்
ஆர் அறிந்து அறைய கிற்பார்.

பொ:-குற்றம் இல்லாத வெற்றியையுடைய இராமனும் அங்கதன் என்னும்பெயர் அழகான காரணப்பெயராய் அகிலம் எல்லாம் பரவுமாறு திருத்துவதைப் போல, கரும்பு போன்ற நல்ல தோளையுடைய இட்சுவாகுவுக்குப் பிரமன் கொடுத்ததாகிய அங்கதம் என்னும் தோள்வளையைக் கொடுத்தான்; (அதைப் பெற்றுக் கொண்ட) அங்கதன் பெருமையை, யார் தெரிந்து சொல்லவல்லவர்?

கு:—நான்கடியிலும் வந்த சொல்லே வரத்தொடுத்தமையால் இது யமகம் எனப்படும். அங்கதம்—குற்றம்; தோள்வளை. இராமன், தன் குலத்துப் பெரியோனாகிய இட்சுவாகுவுக்குப் பிரமன் கொடுத்த தோள்வளையை அங்கதன் அணியக் கொடுத்தமையால் இதுகாறும் இடுகுறியாயிருந்த அவன் பெயர், காரணப் பெயராய் அகிலமெல்லாம் பரவுமாறு செய்தது போல இருந்தது என்பது தற்குறிப்பேற்ற வணியாகும். இட்சு—கரும்பு. வாகு-தோள். கரும்பு போன்ற தோளையுடைமையால் இட்சுவாகு எனப்பெயர் பெற்ற மன்னவன் தகுதி நினைந்து பிரமன் அத்தோளுக்கு அழகுசெய்யுமாறு அங்கதம் (தோள்வளை) கொடுத்தான் என்க. இட்சுவாகு என்னும் வட மொழிப் பெயரையே 'கன்னல் தோளான்' எனக் கம்பர் தமிழில் மொழி பெயர்த்துக்

கூறியுள்ளார் எனலாம். தன் குலத்து மன்னவனுக்குப் பிரமன் கொடுத்த அங்கதத்தை இராமன் கொடுக்கப்பெற்ற அங்கதன் பெருமை மிகப்பெரியது என்பார், 'அங்கதன் பெருமை மண்மேல் ஆர்அறிந்து அறைய கிற்பார்' என்றுர். (18)

இச்செய்யுளின் பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10513 (1) தந்தை முன்பு தனக்குச் சமைத்தது
இந்தி ரன்பிர மாதியர்க் கில்லது
பந்தி பந்தி நவமணிப் பத்திய
வந்த பல்கலன் யாவும் வழங்கினுன்.

,, (2) கோடி யென்று கொடுத்ததன் .........ணீ
யாடல் மாத்திரள் ஆணையின் பொன்மணி
பாடல் மாதர்கள் பல்லியம் பண்புடை
நாட சாலேயும் நல்கின னல்கிப்பின்.

10514. பின்னரு மவனுக் கையன்
பெருவிலே யாரத் தோடும்
மன்னுநுண் டூசு மாவு
மதமலேக் குழுவு மீயா
உன்னைநீ யன்றி யிந்த
வுலகினி லொப்பி லாதாய்
மன்னுக கதிரோன் மைந்தன்
தன்னெடு மருவி யென்றுன்.

பின்னரும் அவனுக்கு ஐயன்
பெருவிலே ஆரத்தோடும்
மன்னும் நுண்தூசும், மாவும்,
மதமலேக் குழுவும், ஈயா,
'உன்னை நீ அன்றி, இந்த
உலகினில் ஒப்பு இலாதாய்!
மன்னுக கதிரோன் மைந்தன்
தன்னெடும் மருவி' என்றுன்.

பொ.—பின்னும் அந்த அங்கதனுக்கு இராமன்,—பெரிய விலே மதிப்புள்ள முத்தாரத்தோடும் பொருந்திய மெல்லிய

பட்டாடைகளையும், குதிரைகளையும், மதம் சொரியும் மலை போன்ற சிறந்த யானைகளையும் கொடுத்துவிட்டு, 'உன்னை நீ ஒப்பதன்றி இந்த உலகத்தில் வேறு ஒப்பு இல்லாதவனே! சூரியன் மகனாகிய சுக்கிரீவன் தன்னோடு சார்புடையவனாய் நிலைத்து வாழ்க!' என்று கூறினான்.

கு:—ஈயா, செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அங்கதன் தனக்குவமை யில்லாதவன் எனப் புகழ்ந்தவாறு. இது பொது நீங்குவமை எனப்படும். மருவி மன்னுக என இயையும். மருவுதல், சார்புடையவனாதல். (19)

இச்செய்யுளின் பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

10514 (1) சாம்ப வன்றனை நோக்கித் தசரதன்
தேம்பி டாமற் சிறுவனென் றெய்திய
பாம்பணைப் பெரும் பள்ளியன் பண்பினால்
ஏம்ப லுற்றிட வின்னன வீகுவான்.

,, (2) காசும் பொன்னும் கலனுங் கணக்கிலாத்
தூசும் மாவும் கரிகளும் சொல்லிய
தேச மெங்கும் மதிக்கச் சிறப்புடன்
நேச மேவிய சிந்தை நிகழ்பினான்.

*அனுமனுக்குப் பரிசளித்தல் 10515 — 10517*

10515. மாருதி தன்னை யையன்
மகிழ்ந்தினி தருளி னோக்கி
ஆருத விடுதற் கொத்தார்
நீயலா லன்று செய்த
பேருத விக்கி யான்செய்
செயல்பிறி தில்லை பைம்பூண்
போருத வியதிண் டோளால்
பொருந்துறப் புல்லு கென்றான்.

மாருதி தன்னை ஐயன்
மகிழ்ந்து, இனிது அருளின்நோக்கி,
'ஆர் உதவிடுதற்கு ஒத்தார்,
நீஅலால்? அன்று செய்த

பேர் உதவிக்கு யான்செய்
செயல்பிறிது இல்லை; பைம்பூண்
போர் உதவிய திண்தோளால்
பொருந்துறப் புல்லுக' என்ருன்.

பொ :—அனுமனை இராமன், மகிழ்ந்து (அழைத்து) இனிதே அருளொடு நோக்கி 'உதவி செய்தற் கேற்றவர் நீ அல்லால் வேறு யாருளர்? அன்று நீ செய்த பெரிய உதவிக்கு யான் செய்யும் உதவியாகிய செயல் வேறு இல்லை; பசுமையான அணிகலன் பூண்டு போர்செய்து உதவிய திண்ணிய தோளால் அழுத்தமுறப் புல்லுக' என்று கூறினன்.

கு :—அன்று என்றது, சீதையைக் கண்டு அவள் உயிர் பெறச் செய்த அன்று என்றவாறு. மருத்துமலையைக் கொணர்ந்து இலக்குவன் முதலியோரை, உயிர்பெறச் செய்த அன்று எனலும் ஆம். சீதை உடம்பும் இலக்குவன் உடம்புமாகிய இரண்டு உடம்புகளைக் கொடுத்த அனுமனுக்குத் தன்னேருடம்பைத் தழுவக் கொடுத்து கைம்மாருக்கினன் இராமன் என்றவாறு. உயர்வற உயர் நலமுடைய இராமன், விலங்கு என்று எண்ணப் படும் அனுமனைத் தழுவுதல் போன்ற பெருமதிப்புடைய செயல் பிறிதில்லை யாதல் நினைந்து, இராமன் அதனையே செய்தான் என்பார், பேருதவிக்கு யான்செய் செயல் பிறிதில்லை' எனவும், 'போருதவிய திண்தோளால் பொருந்துறப் புல்லுக' எனவும் கூறினன். (20)

இச்செய்யுளின் பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10515 (1) வயந்தனை நகையி னேக்கி
மன்னவ னிராம னயற்
கியைந்தன வயிர மாலை
யிதுபிடி யென்ன வீந்து
புயந்தனி லணியும் பூணும்
பொற்புடன் கலன்க ளன்பு
பயந்தருள் சிந்தை வள்ளல்
பரிவுடன் பலவு நல்கி.

10515 (2) மற்றுள தலைவர்க் கெல்லாம்
வரிசையிற் குறையா வண்ணம்
பெற்றிட லருளிப் பின்னைப்
பெரியதேர் மைந்தன் றம்பிக்
குற்றுள வரிசை யெல்லாம்
உவகையி னீந்த பின்னை
வெற்றிசெய் சேனைக் கெல்லாம்
வேண்டுவ வேண்ட வீந்தான்.

10516. என்றலும் வணங்கி நாணி
வாய்புதைத் திலங்கு தானை
முன்றலை யொதுக்கி நின்ற
மொய்ம்பனை முழுது நோக்கிப்
பொன்றிணி வயிரப் பைம்பூ
ணாரமும் புனைமென் றூசும்
வன்றிறற் கயமு மாவும்
வழங்கினன் வழங்கு சீரான்.

என்றலும், வணங்கி நாணி,
வாய் புதைத்து, இலங்கு தானை
முன் தலை ஒதுக்கி நின்ற
மொய்ம்பனை முழுதும் நோக்கி
பொன்திணி வயிரப் பைம்பூண்
ஆரமும், புனைமென் தூசும்
வன்திறல் கயமும், மாவும்,
வழங்கினன், வழங்கு சீரான்.

பொ :—(என்றும் மறையாது உலகத்து) வழங்கப்படும் மிக்க புகழையுடைய இராமன்—இவ்வாறு கூறிய அளவில், வணங்கி—நாணி வாயைக் கையால் மூடிக்கொண்டு அரையில் விளங்குகின்ற ஆடையின் முகப்பை மடக்கி யொதுக்கிக் கொண்டு நின்ற வலியவனாகிய அனுமனை, முழுதும் அருள் நோக்கால் நோக்கிப் பொன்னில் பதித்த வயிரங்களையுடைய பசுமையான பூண்களுடனே முத்தாரமும் பொன்னிழை கொண்டு புனைந்த மெல்லிய பட்டாடையும், வன்மையும் திறலுமுடைய யானையும், குதிரையும், ஆகியவற்றைக் கொடுத்தான்.

கு :—அடக்கம் என்ற மெய்ப்பாட்டிற்கு விளக்கம்கூற வந்த பேராசிரியர், 'அடக்கம் என்பது, உயர்ந்தோர் முன் அடங்கி யொழுகும் ஒழுக்கம்; அவை பணிந்த மொழியும் தணிந்த நடையும் தானை மடக்கலும் வாய் புதைத்தலும் முதலாயின' என்று வரைந்துள்ளார். அந்த இலக்கணத்திற்கு இலக்கியம் போல அனுமனை இங்குக் கம்பர் காட்டுகின்றார். இலங்குதானை முன்றலை யொதுக்கி என்றது, தானைமடக்கல் எனப் பேராசிரியர் குறித்த செயலையே யாகும், "வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன் நுணங்கிய கேள்வியான்" (வீடணனடைக்கலப்–87) என அனுமனைப்பற்றிக் கூறியுள்ளது இங்கு நினைவுகூரத்தகும். மொய்ம்பன் என்றது, யாரினும் வலியனாகிய அனுமனை. அனுமனது அடக்கத்தை முழுவதும் கண்டு அருள் சுரக்கும் குறிப்பினன் இராமன் என்பார், 'மொய்ம்பனை முழுதும் நோக்கி' என்றார். அனுமனுக்கு ஆர முதலியன வழங்கினமையே இராமன் வழங்குசீரான் ஆதற்குக் காரணமும் ஆயிற்று என்ற குறிப்பும் தோன்ற 'வழங்கினன் வழங்கு சீரான்' என்ற சொல்லமைப்பு இருத்தல் காணலாம். இனி, இயல்பாகவே யார்க்கும் வழங்கும் சிறப்புடைய வள்ளலாகிய இராமன், தன்னுயிர் கொடுத்த அனுமனுக்கு ஆரம் முதலியன, வழங்குதற்குச் சொல்ல வேண்டுமோ? என்ற கருத்தும் காணலாம். (21)

10517. பூமலர்த் தவிசை நீத்துப்
பொன்மதின் மிதிலை பூத்த
தேமொழித் திருவை யையன்
றிருவருண் முகந்து நோக்கப்
பாமறைக் கிழத்தி யீந்த
பருமுத்த மாலை கைக்கொண்
டேமுறக் கொடுத்தா ளன்னு
ளிடரறிந் துதவி னற்கே.

பூமலர்த் தவிசை நீத்து,
பொன் மதில் மிதிலை பூத்த
தேமொழித் திருவை ஐயன்
திருவருள் முகந்து நோக்க,

பாமறைக் கிழத்தி ஈந்த
பருமுத்த மாலை கைக்கொண்டு
ஏமுறக் கொடுத்தாள், அன்னாள்
இடர் அறிந்து உதவினாற்கே.

பொ :—பொலிவுடைய தாமரை மலராகிய இருக்கையை விடுத்து, அழகிய மதிலால் சூழப்பெற்ற மிதிலையில் தோன்றிய, தேன்போன்று இனிக்கும் மொழியினையுடைய திருவாட்டியாகிய, சீதையை இராமன் திருவருளை முகந்துகொண்டு நோக்க, (அவன் குறிப்புணர்ந்து) அந்தச்சீதை பாக்கள் நிறைந்த வேதத்திற்குரியவளான கலைமகள் தனக்குக் கொடுத்த பருத்த முத்துக்கள் கோக்கப்பெற்ற மாலையைக் கையில் கொண்டு, தன் துன்புற்றிருந்த இடமறிந்து வந்து உதவிய அனுமனுக்கு, இன் புறக் கொடுத்தாள்.

கு :—பூ—பொலிவு. பூத்தல்—தோன்றுதல். அருள் நிறைந்த பார்வையால் பார்த்தான் இராமன் என்பார், 'திருவருள் முகந்து நோக்க' என்றார். யான் கொடுத்தது போல அனுமனுக்கு நீயும் கொடுத்தல் வேண்டும் என்ற குறிப்புத் தோன்ற இராமன் சீதையை நோக்க, அவன் குறிப்பறிந்த சீதையும் கலைமகளால் கொடுக்கப்பட்டுத் தான் அணிந்திருந்த முத்தமாலையைக் கழற்றிக் கையில் கொண்டு, தான் இடர்ப்பட்டிருந்த இடத்தைத் தேடி அறிந்து இராமன் அடையாளமாகக் கொடுத்த ஆழியை யீந்து ஆருயிர் காத்து உதவிய அனுமனுக்குக் கொடுத்தாள் என்றவாறு. 'ஏமுறக் கொடுத்தாள்' என்றது, 'தன்னுள்ளம் இன்புறக் கொடுத்தாள்' எனவும், அனுமன் உள்ளம் இன்புறக் கொடுத்தாள் எனவும், இருபொருளும்பட நின்றது. பாமறைக் கிழத்தி—கலைமகள். பாடல்கள் நிறைந்த வேதத்திற் குரியவள் என்றவாறு. பாக்கிழத்தி, மறைக்கிழத்தி எனப் பிரித்துக் கூட்டிப் பாமகள், வேதவடிவினள் என இருதிறமாக்கிக் கூறலும் ஆம். நோக்க அன்னாள் உதவினாற்குப் பருமுத்த மாலை கைக் கொண்டு கொடுத்தாள் என இயையும். தான் அணிந்திருந்த அரிய மாலையைக் கழிற்றிக் கையில் கொண்டு கொடுத்தாள் என்க. (22)

இச்செய்யுளின்பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன .—

10517 (1) உனக்குநான் தருவ தென்கொல்
உன்னுடைச் செல்வ மீதே
யெனக்குநீ தந்த செல்வ
மீதெலா மென்று கூறிச்
சினக்கொடும் பாவம் வென்ற
தேவனே தேவர் வாழ்வே
தனக்குநேர் தானே யொப்பாய்
கேளெனச் சாற்று மன்றே.

,, (2) ஆதித்தன் றனக்கு முன்னு
ளவனியி லுயிர்க ளெல்லாம்
வேதத்தோன் றன்னைப் பெற்றோன்
உதவிய பேசுங் காலை
போதத்த வுணர்வின் மிக்க
புனிதமா மார மென்னப்
பாதத்து வந்து வீழ்ந்து
பணிந்துவாய் புதைத்து நின்றான்.

,, (3) பின்னையு மவனுக் கையன்
பேரணி யாக முந்நூல்
பொன்னினால் சமைத்த நூலும்
பொருவிலாப் பவித்ரம் யாவும்
இன்னது கொடுத்தா னென்றென்
றெண்ணிலாப் படியே நல்கி
சொன்னய முடைய தெல்லாம்
சொல்லினன் சொன்ன பின்னை.

,, (4) சனகன்மா மகளு மொன்று
தானணிந் திருப்ப தாய
கனகனைச் செற்ற வந்நாட்
கண்ணனே கழற்றிக் கொண்டு
மனுவினுக் கீந்த முத்து
மாலையீ தென்று வாழ்த்தி
எனதுயி ரனையாய் என்றென்
றியாவையு மினிதி னீந்தாள்.

## சாம்பவனுக்குப் பரிசளித்தல்

10518. சந்திரற் குவமை சான்ற
தாரகைக் குழுவை வென்ற
இந்திரற் கேய்ந்த தாகு
மென்னுமுத் தாரத் தோடு
கந்தடு களிறு வாசி
தூசணி கலன்கண் மற்றும்
உந்தின னெண்கின் வேந்தற்
குலகமுந் துதவி னனே.

சந்திரற்கு உவமை சான்ற,
தாரகைக் குழுவை வென்ற
இந்திரற்கு ஏய்ந்ததாகும்
என்னும் முத்தாரத்தோடு
கந்து அடு களிறு, வாசி,
தூசு, அணிகலன்கள் மற்றும்
உந்தினன், எண்கின் வேந்தற்கு —
உலகம் முந்து உதவினனே.

பொ:—சந்திரனுக்கு உவமை கூறத்தக்கதும், நட்சத்திரக் கூட்டத்தை வென்றதும், இந்திரனுக்குப் பொருத்தமானதாகும் என்று சொல்லுதற்குரியதுமாகிய முத்து மாலையோடு, கட்டுத் தறியை முறிக்கும் மதம் மிக்க யானைகள், குதிரைகள், பட்டாடைகள், அணிகலன்கள் என்பவற்றையும் மற்றுமுள்ளவற்றையும், உலகத்தை முன்னர் உண்டாக்கினவனாகிய திருமாலின் அமிசமான இராமன், கரடிகட்கு அரசனாகிய சாம்பவானுக்குக் கொடுத்தான்.

கு:—நட்சத்திரங்களைக் காட்டிலும் சிறப்புடைய ஒளியும் தோற்றமும் உடைமையான் 'தாரகைக் குழுவை வென்ற' எனவும் சந்திரனை ஒத்த ஒளியும் தோற்றமுமுடைமையால் 'சந்திரற்குவமை சான்ற' எனவும், முத்த மாலையைச் சிறப்பித்தவாறு. அதன் விலை மதிப்பை நோக்கி 'இந்திரற்கேய்ந்ததாகும் என்னும் முத்தாரம்' என்றார். சான்ற, வென்ற, என்னும், முத்தாரம் என இயைத்துப் பெயரெச்ச அடுக்காக்குக.

திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமனுல் படைக்கப் பட்டது உலகமாதலின் அந்தப் பிரமனுக்குத் தந்தையான திரு மாலின் அமிசமான இராமனே 'முந்து உலகம் உதவினுன்' எனச் சிறப்பித்தார். கந்து-கட்டுத்தறி. எண்கு-கரடி. வாசி-குதிரை. (23)

நீலனுக்குப் பரிசு

10519. நவமணிக் காழு முத்து
மாலையு நலங்கொ டூசும்
உவமைமற் றிலாத பொற்பூ
ணுலப்பில பிறவு மொண்டார்க்
கவனவெம் பரியும் வேகக்
கதமலைக் கரசுங் காதற்
பவனனுக் கினிய நண்பன்
பயந்தெடுத் தவனுக் கீந்தான்.

நவமணிக் காழும், முத்து
மாலையும், நலம்கொள் தூசும்,
உவமை மற்று இலாத பொற்பூண்
உலப்பு இல பிறவும், ஒண் தார்க்
கவனவெம் பரியும், வேகக்
கதமலைக்கு அரசும், காதல்
பவனனுக்கு இனிய நண்பன்
பயந்தெடுத்தவனுக்கு ஈந்தான்.

பொ :—நவமணிகளாலியன்ற மாலையும், முத்துமாலையும், அழகு பொருந்திய பட்டாடைகளும், வேறு உவமையில்லாத பொன்னுல் இயன்ற அணிகலன்கள் முதலிய அழிவில்லாத பிறவும், ஒளி வாய்ந்த கிண்கிணி மாலையணிந்த விரைந்த செல வினையுடைய விரும்பத்தக்க குதிரையும், வேகத்தினையுடைய சினமிக்க அரசயானையும், அன்புள்ள வாயுதேவனுக்கு இனிய நண்பனுன அக்கினி தேவனுல் பெற்றெடுக்கப்பட்டவனுகிய நீலனுக்குக் கொடுத்தான்.

கு :—காழ்—மாலை. தார்—கிண்கிணி. கவனம்—வேகம். கதமலை என்றது, மதத்தால் கதமிக்க யானையை. பவனன்—

காற்றுக் கடவுள்; அவனுக்கு இனிய நண்பன் நெருப்புக் கடவுள். (24)

### சதவலிக்குப் பரிசு

10520. பதவலிச் சதங்கைப் பைந்தார்ப்
பாய்பரி பணைத்திண் கோட்டு
மதவலிச் சைலம் பொற்பூண்
மாமணிக் கோவை மற்றும்
உதவலிற் றகைவ வன்றி
யில்லன வுள்ள வெல்லாம்
சதவலி தனக்குத் தந்தான்
சதுமுகத் தவனைத் தந்தான்.

பதவலிச் சதங்கைப் பைந்தார்ப்
பாய்பரி, பணைத்திண் கோட்டு
மதவலிச் சைலம், பொன்பூண்,
மாமணிக் கோவை, மற்றும்
உதவலின் தகைவ அன்றி,
இல்லன உள்ள எல்லாம்
சதவலி தனக்குத் தந்தான் —
சதுமுகத்தவனைத் தந்தான்.

பொ:—வலிய காலில் அணிந்த சதங்கையையும் பசுமையான கிண்கிணி மாலையையும் உடையவாய்ப் பாய்ந்து செல்லும் குதிரைகளையும், பருத்த திண்ணிய கொம்புகளையும் மதத்தையும் வலியையும் உடைய மலைபோன்ற யானைகளையும், பொன்னாலியன்ற அணிகலன்களையும், சிறந்த மாணிக்க மாலையினையும், மற்றும் கொடுப்பதில் தடைசெய்யக் கூடியனவான பொருள்களைத் தவிர்த்து வீட்டின் கண்ணவாய் உள்ளன எல்லாவற்றையும் சதவலி என்பவனுக்குக் கொடுத்தான், பிரமனை பெற்ற திருமாலின் அம்சமான இராமன்.

கு:-பதவலி என்பதனை 'வலிப்பதம்' என மாறுக. உதவலின் தகைவ என்றது, அரண்மனையும் சேனையும் உறுப்புக்களும் போல்வனவற்றை. கொடுக்க வியலாதனவற்றைத் தவிர்த்துக்

கொடுக்கக்கூடியனவாய் இல்லின்கண் உள்ளனவான எல்லா வற்றையும் சதவலி என்பவனுக்குக் கொடுத்தான் என்றவாறு. (25)

கேசரிக்குப் பரிசு

10521. பேசரி தொருவர்க் கேயும்
பெருவிலை யிதனுக் கீதுக்
கோசரி யிலதென் றெண்ணு
மொளிமணிப் பூணுந் தூசும்
மூசெரிக் குவமை வெம்மை
மும்மதக் களிறு மாவும்
கேசரி தனக்குத் தந்தான்
கிளர்மணி முழவுத் தோளான்.

பேச அரிது ஒருவர்க்கேயும்
பெருவிலை இதனுக்கு ; ஈதுக்
கோ, சரி இலது என்று எண்ணும்
ஒளிமணிப் பூணும் தூசும்,
மூசு எரிக்கு உவமை வெம்மை
மும்மதக் களிறும், மாவும்,
கேசரி தனக்குத் தந்தான் —
கிளர்மணி முழவுத் தோளான்.

பொ :--ஒளிமிக்க மணிப் பூண்களை யணிந்த முழவு போன்ற தோள்களையுடைய இராமன்-'இதற்குரிய பெருவிலை இன்னது' என ஒருவர்க்கும் பேச இயலாததும், 'இதனுக்கு ஒப்புமை யான பொருள் இலது' என்று மதிக்கத்தக்கதும் ஆகிய ஒளிவாய்ந்த மணிகளால் இயன்ற அணிகலன்களையும், பட்டாடைகளையும், உலகெலாம் பரவுகின்ற வடவைக்கனலுக்கு உவமையாகத்தக்க சின வெம்மையினையுடைய மும்மத யானைகளையும், குதிரைகளை யும், கேசரி என்பவனுக்குக் கொடுத்தான்.

கு :--ஒளிமணிப் பூணின் உயர்ச்சியைப் புலப்படுத்த வேண்டி, 'பேசரிதொருவர்க்கேயும் பெருவிலையிதனுக்கு' என வும், 'ஈதுக்கோ சரியிலது' எனவும் எண்ணும் ஒளிமணிப்பூண்

என்று புகழ்ந்தவாறு. வடவைக் கனலினும் மிக்க சின வெம்மையுடைய யானை யென்பார், 'மூசெரிக்குவமை வெம்மை மும்மதக் களிறு' என்றார். எரிக்கு உவமையாகும் வெம்மை யெனவே யானையின் சினவெம்மை வடவைக்கனலினும் மிக்கதாதல் புலப்படுதல் காணலாம். கேசரி அனுமனுக்குத் தந்தை; அஞ்சனையின் கணவன். "இம்பர் ஞாலத்தும் வானத்தும் எழுதிய சீர்த்தி நம்பனைத் தந்த கேசரி கடலென நடந்தான்" (கிட்கிந்தா—தானைகாண்-5) என முன் கூறப்பட்டிருத்தல் காணலாம். (26)

நளன் முதலியோர்க்குப் பரிசு

10522. வளனணி கலனுந் தூசு
மாமதக் களிறு மாவும்
நளனொடு குமுதன் றார
னவையறு பனசன் மற்றோர்
உளமகிழ் வெய்தும் வண்ண
முலப்பில பிறவு மீந்தான்
குளனமர் கமல வேலிக்
கோசலக் காவ லோனே.

வளன் அணிகலனும், தூசும்,
மாமதக் களிறும், மாவும்,
நளனொடு குமுதன், தாரன்,
நவை அறு பனசன், மற்றோர்
உளம் மகிழ்வு எய்தும் வண்ணம்
உலப்பு இல பிறவும் ஈந்தான் —
குளன் அமர் கமல வேலிக்
கோசலக் காவலோனே.

பொ:—குளங்களில் பொருந்திய தாமரை மலர்களையே வேலியாகக் கொண்ட கோசல நாட்டிற்கு அரசனாகிய இராமன்—வளம் பொருந்திய அணிகலன்களையும், பட்டாடைகளையும், சிறந்த மதமிக்க யானைகளையும், குதிரைகளையும், அளவில்லாத மற்றுமுள்ள பொருள்களையும், நளன், குமுதன், தாரன், குற்றமற்ற பனசன் முதலிய மற்றையோரும் மனம் மகிழும்வண்ணம் கொடுத்தான்.

கு :—திருமகட்கு இருப்பிடமாகிய தாமரை மலர்களின் மிகுதி கூறவே, அக்கோசல நாட்டின் செல்வச் சிறப்புப் புலப்படும் ஆதலின் 'குளனமர் கமல வேலிக் கோசலம்' எனச் சிறப்பித்தார். இச்செல்வமிக்க நாட்டிற்கு அரசன் எவ்வளவு பரிசு அளித்தாலும் தகும் என்பது குறிப்பு. காவலோன்—அரசன். இதுகாறும் தனித்தனியே வானர வீரர்க்குப் பரிசளித்தமை கூறியவர் இங்கு நளன் முதலிய அனைவர்க்கும் பரிசளித்ததைத் தொகுத்துக் கூறியமைந்தார். (27)

இச்செய்யுளின்பின் 71–ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10522 (1) பொன்னணித் தரள மாலை
பூந்துகி லாடை பாய்மா
முன்னிய புழைக்கை யானை
முதலமற் றரிய வெல்லாம்
மன்னிய ருமண னோடு
ததிமுகன் மயிந்தன் மற்றத்
தொன்னலத் துமிந்தன் மற்றோர்க்
கீந்தனன் சோர்வி லாமல்.

,, (2) அமுத மான மொழிகொடுத் தையனும்
தமது நல்லணி நாளில் முடிபெறு
மேமது தாதைத்தன் றுதைக் கிசைந்தது
.................... வென்னக் கொடுத்தனன்.

*எழுபது வெள்ளம் சேனைக்கும் கருணை நோக்களித்தல்*

10523. அவ்வகை யறுபத் தேழு
கோடியா மரியின் வேந்தர்க்
கெவ்வகைத் திறனு நல்கி
யினியன பிறவுங் கூறிப்
பவ்வமொத் துலகிற் பல்கு
மெழுபது வெள்ளம் பார்மேல்
கவ்வையற் றினிது வாழக்
கொடுத்தனன் கருணை நோக்கம்.

அவ்வகை அறுபத்து ஏழு
கோடியாம் அரியின் வேந்தர்க்கு
எவ்வகைத் திறனும் நல்கி,
இனியன பிறவும் கூறி,
பவ்வம் ஒத்து உலகில் பல்கும்
எழுபது வெள்ளம் பார்மேல்
கவ்வை அற்று இனிது வாழக்
கொடுத்தனன் கருணை நோக்கம்.

பொ :–அவ்வகையாக அறுபத்தேழுகோடி வானர வீரர்க்குப் பலவகைப்பட்ட கூறுபாடுடைய பொருள்களைக் கொடுத்து, இனியனவாகிய பல சொற்களையும் சொல்லிவிட்டுக் கடலைப் போன்று உலகில் நிறைந்து தோன்றுகின்ற எழுபது வெள்ளம் வானர சேனையும் பூமிமேல் துன்பம் அற்று இனிது வாழ அருள் நோக்கத்தைக் கொடுத்தான்.

கு :—எழுபது வெள்ளம் சேனைக்கும் தனித்தனியே பரிசளித்தால் காலம் நீடிக்கும் என்று கருதி அவ்வானரங்கள் எல்லாம் துன்பமற்று வாழவேண்டும் என மனத்தால் நினைத்து அருள் நோக்கம் பாலித்தான் இராமன் என்றவாறு. இராமன் அருள் நோக்கம் வானரங்களுக்குத் துன்பமிலா இன்பவாழ்வை நல்கிற்று என்க. (28)

இச்செய்யுளின் பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10523 (1) அரக்கர்கோன் றனையு மாங்கே
யருட்கண்ணால் நோக்க வன்பின்
பொருக்கெனத் துணைவ ரோடும்
போயடி தொழுத லோடும்
குரக்கினத் தலைவர்க் கேது
கொடுத்தனன் அதனின் விஞ்ச
இரக்கம துடனே யாவும்
அளித்தன னேது வில்லான்.

## வீடணனுக்குப் பரிசு 10524, 10525

10524. மின்னையேய் மௌலிச் செங்கண்
வீடணப் புலவர் கோமான்

றன்னையே யினிது நோக்கிச்
சராசரஞ் சுமந்த சால்பின்
நின்னையே யொப்பார் நின்னை
யலதில ருளரே லைய
பொன்னையே யிரும்பு நேரே
பொருவென வொக்கு மென்றான்.

மின்னை ஏய் மௌலிச் செங்கண்
வீடணப் புலவர் கோமான்
தன்னையே இனிது நோக்கி,
'சராசரம் சுமந்த சால்பின்
நின்னையே ஒப்பார் நின்னை
அலது இலர்; உளரேல், ஐய!
பொன்னையே இரும்பு நேரே
பொருவென ஒக்கும் என்றான்.

பொ:—மின்னலை ஒத்த ஒளியையுடைய முடியினைச் சூடியுள்ள சிவந்த கண்ணையுடைய வீடணனாகிய அறிஞரிற் சிறந்தவனை இனிதே பார்த்து, ஐயனே! 'இயங்குவனவும் நிற்பனவுமாய உயிர்கள் யாவும் உயர்ந்தோன் எனத் தலைமேல் கொள்ளுதற்கேற்ற சால்பினையுடைய நின்னை ஒப்பவர் நின்னையலது இலர்; உளர் எனின், அக்கூற்று, பொன்னை இரும்பு நேரே ஒப்புமையுடையது என்று சொல்லுவதை ஒக்கும்' என்று கூறினான்.

கு:—வீடணன் எல்லா உயிர்களும் கொண்டாடற்கொத்த சால்புடையவன் என்பார், 'சராசரஞ் சுமந்த சால்பின் நின்னை' என்றார். சுமத்தலாவது, பெருமை நோக்கித் தலைமேல் வைத்துப் பாராட்ட நினைத்தல். சுமத்தற்குக் காரணமான சால்பு என்க. சுமந்த காரணத்தின்கண் வந்த பெயரெச்சம். சால்பினால் வீடணனை ஒத்தவர் இவ்வுலகத்தில் பிறர் இலர் எனபது இராமன் கருத்து. இராமன் தனக்குவமையில்லானாய் விளங்குதல் போலவே தன்னைச் சரணடைந்த வீடணனும் தனக்குவமையில்லாதவனாக விளங்குகின்றான் என்பது அவன் பாராட்டாகும். 'நின்னையே யொப்பார் நின்னையலதிலர்' என்றது பொது நீங்குவமை. வீடணனை ஒப்பவர் உளர் என்று எவரேனும் கூறின், என்ற கருத்தால் 'உளரேல்' என்றான். உளர் என்று கூறின்

அக்கூற்றுப் பொருத்த முடையதாகாது என்பான், 'உளரேல் பொன்னையே யிரும்பு நேரே பொருவு என ஒக்கும்' என்று கூறினன். பொன்னை இரும்பு ஒக்கும் என்றால் எப்படி பொருந் தாதோ அப்படியே வீடணனை ஒப்பார் உளர் என்றலும் பொருந்தாது என்றவாறு. ''வில்லொக்கு நுதலென்றாலும் வேலொக்கும் விழியென்றாலும் பல்லொக்கு முத்தென்றாலும் பவளத்தை யிதழென்றாலும் சொல்லொக்கும் பொருளொவ்வா தாற் சொல்லலா முவமையுண்டோ நெல்லொக்கும் புல்லென்றா லும் நேருரைத்தாகவற்றே'' (மாரீசன் வதைப்-74). என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். பொருவு—ஒப்புமை. (29)

10525. என்றுரைத் தமர ரீந்த
வெரிமணிக் கடகத் தோடு
வன்றிறற் களிறுந் தேரும்
வாசியு மணிப்பொற் பூணும்
பொன்றிணி தூசும் வாசக்
கலவையும் புதுமென் சாந்தும்
நன்றுற வவனுக் கீந்தா
ஞகணைத் துயிலிற் றீர்ந்தான்.

என்று உரைத்து, அமரர் ஈந்த
எரிமணிக் கடகத்தோடு
வன்திறல் களிறும், தேரும்,
வாசியும், மணிப்பொன் பூணும்,
பொன்திணி தூசும், வாசக்
கலவையும், புதுமென் சாந்தும்,
நன்று உற, அவனுக்கு ஈந்தான் —
நாகணைத் துயிலில் தீர்ந்தான்.

பொ :—பாம்பணையிலே பள்ளிகொண்டு துயில்கின்ற நிலையில் நின்று நீங்கி, அயோத்தியில் பிறந்தவனாகிய இராமன், —என்று வீடணனைப் புகழ்ந்து கூறிவிட்டு, தேவர்கள் தனக்குக் கொடுத்த நெருப்புப்போல ஒளிவீசும் மாணிக்கங்களைப் பதித்த கடகத் தோடு, வலிமையும் திறமையுமுடைய களிற்றியானைகளையும், தேர்களையும், குதிரைகளையும், மணிகள் பதித்த பொன்னணி

கலன்களேயும், பொன்னிழை நெருங்கிய பட்டாடைகளேயும் வாசனைமிக்க கலவைச் சாந்தினையும், புதிய மென்மையான சந்தனத்தையும் நன்கு பொருந்துமாறு அவ்வீடணனுக்குக் கொடுத்தான்.

கு:—இராமனுடைய பண்டைய தெய்வநிலையை நினைவூட்ட 'நாகணைத் துயிலிற் றீர்ந்தான்' என இராமனைக் குறிப்பிட்டவாறு. பாம்பணைப் பள்ளியானுகிய திருமாலே அப்பள்ளியினின்று நீங்கித் தேவர் துயர் துடைக்க அயோத்தியில் இராமனுகப் பிறந்தான் என்றவாறு. வீடணன் அரசனுதற்கேற்ற தேரையும் கொடுத்தான் என்க. (30)

இச்செய்யுளின் பின் 63-ஆம் பிரதியில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன:—

10525 (1) உடன்வரு நால்வர்க் கன்னுள்
ஓங்கிய கலனுந் தூசும்
மடல்புனை களிறு மாவு
மாரமுங் களிறு மற்றுக்
குடையொடு கவிகை பிச்சங்
கொடி யொடன் பிலகிமுடா
நடைவரு நீதி யாற்கு
நல்கினன் நல்கிப் பின்னை.

,, (2) குகனையும் வருக வென்றான்
கொடிப்படை வேடர் சூழ
வகமலர்ந் தடியில் வீழ்ந்த
வஞ்சனத் தம்பி தன்னைச்
............ தருவோ னெந்தைக்
கழித்ததோர் தாளச் சோடு
முகமலர்ந் தருளி வேண்டு
முழுமணிக் கலங்க ளோடும்.

,, (3) வாசியுங் களிறுந் தூசும்
வரிசையில் மிக்க யாவு
மோசை யொண் குழலும்
.............. தப்புமொ ......
காசுலாங் கழலும் வீர
தண்டையுங் கலன்கள் யாவும்

ஓசையொண் சிலம்பும் யாவும்
உதவினன் உதவ வல்லான்.

குகனுக்குப் பரிசு

10526. சிருங்கபே ரமதென் றோதுஞ்
செழுநகர்க் கிறையை நோக்கி
மருங்கினி யுரைப்ப தென்னோ
மறுவறு துணைவற் கென்னாக்
கருங்கைம்மாக் களிறு மாவுங்
கனகமுந் தூசும் பூணும்
ஒருங்குற வுதவிப் பின்ன
ருதவினன் விடையு மன்னோ.

சிருங்கபேரம் அது என்று ஓதும்
செழுநகர்க்கு இறையை நோக்கி,
'மருங்கு இனி உரைப்பது என்னோ,
மறு அறு துணைவற்கு?' என்னா,
கருங் கைம்மாக் களிறும், மாவும்,
கனகமும், தூசும், பூணும்,
ஒருங்குற உதவி, பின்னர்
உதவினன் விடையும் மன்னோ.

பொ :—சிருங்கபேரம் என்று சொல்லப்படுகின்ற செழுமையான நகர்க்கு அரசனாகிய குகனைப் பார்த்து, 'குற்றமற்ற துணைவனாக உள்ள உனக்கு முகமனாகச் சொல்லும் பக்கச் சொல் சொல்வது எதற்கு?' என்று கூறிவிட்டு, கரிய கையையுடைய பெரிய களிறுகளையும் குதிரைகளையும் பொன்னையும் பட்டாடையையும் அணிகலன்களையும் ஒருசேரக் கொடுத்துப் பின்பு விடையும் கொடுத்தான்.

கு :—மருங்கு—பக்கம்; உரைப்பதென்னோ எனப் பின் வந்துள்ளமையால் அது, முகமனாகச் சொல்லும் பக்கச் சொல்லை யுணர்த்தியது; ஆகுபெயர். குற்றமற்ற நண்பனுக்கு முகமன் கூற வேண்டுவதில்லை; தான் அவன் என்ற வேற்றுமை யின்மையான் என்க. (31)

## அனுமன் முதலியோர்க்கு விடைகொடுத்தல்

10527. அனுமனை வாலி சேயைச்
சாம்பனை யருக்கன் றந்த
கனைகழற் காலி னானைக்
கருணையங் கடலு நோக்கி
நினைவதற் கரிது நும்மைப்
பிரிகென்ற னீவிர் வைப்பும்
எனதது காவற் கின்றென்
னேவலி னேகு மென்றான்.

அனுமனை, வாலி சேயை,
சாம்பனை, அருக்கன் தந்த
கனைகழல் காலினானை,
கருணையங் கடலும் நோக்கி,
'நினைவதற்கு அரிது நும்மைப்
பிரிக என்றல்; நீவிர் வைப்பும்
எனது அது காவற்கு இன்று என்
ஏவலின் ஏகும்' என்றான்.

பொ :—அனுமனையும் வாலியின் மகனாகிய அங்கதனையும், சாம்பனையும், சூரியன் பெற்ற புதல்வனாகிய ஒலிக்கின்ற வீரக் கழலணிந்த காலினையுடைய சுக்கிரீவனையும் கருணையங் கடல் போன்றவனாகிய இராமன் நோக்கி 'நும்மைப் பிரிக' என்று சொல்லுதல் என்றால் நினைத்தற்கும் அரிதுதான்; நீவிர் ஆட்சி செய்வதற்குரிய தேயங்களும் என்னுடையனவேயாகும்; அவற்றைக் காவல் செய்தற்கு இன்று என் கட்டளையின்படி ஏகுமின்' என்று கூறினான்.

கு :—பிரிக என்றல் என்பது, தொகுத்தல் விகாரமாய்ப் 'பிரிகென்றல்' என வந்தது. நீவிர் என்ற எழுவாய்திரியாது நின்று வேற்றுமை யேலாது; நும் எனத்திரிந்தே ஏற்கும், ஆதலின், நீவிர் ஆளுதற்குரிய வைப்பு என வேண்டுஞ் சொல் வருவிக்கலாயிற்று. வைப்பு—ஊர், தேயம். எனது, அது, என்பன சாதியொருமையாக வந்தன. 'நும்முடைய தேயங்களும்

என்னுடையனவே ஆதலின் அவற்றைக் காவல் செய்தற்காக இன்று என் கட்டளையை யேற்றுச் செல்க' என இராமன் பிரியா விடைகொடுத்தனுப்பியவாறு. ''உன்கிளை யெனதன்றோ, வுறுதுய ருறலாமோ, என்கிளை யிதுகா வென்னேவலின் இனி தென்றான்'' (கங்கைப்-71) என்பதும், ''முன்னர் வந்துதித் துலக மூன்றினும், நின்னையொப்பிலா நீ பிறந்தபார், என்ன தாகில் யானின்று தந்தனென், மன்ன போந்து நீ மகுடம் சூடென்று'' (திருவடி சூட்டுப்-113) என்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். தன்னைப் பிரிதலாற்றாது மனமுளைந்து நின்ற அனுமன் முதலியோரை இராமன் பிரிந்து செல்ல இங்ஙனம் திறம்படக் கூறியவாறு. (32)

வீடணனுக்கு விடைகொடுத்தனுப்புதல்

10528. இலங்கைவேந் தனுக்கு மிவ்வா
றினியன யாவுங் கூறி
அலங்கல்வேல் மதுகை யண்ணல்
விடைகொடுத் தருள லோடும்
நலங்கொள்பே ருணர்வின் மிக்கோர்
நாடுறு நெஞ்சர் பின்னர்க்
கலங்கல ரேய செய்தல்
கடனெனக் கருதிச் சூழ்ந்தார்.

இலங்கை வேந்தனுக்கும் இவ்வாறு
இனியன யாவும் கூறி
அலங்கல் வேல் மதுகை அண்ணல்
விடைகொடுத்து அருளலோடும்,
நலம் கொள் பேர் உணர்வின் மிக்கோர்,
நாடுறு நெஞ்சர், பின்னர்க்
கலங்கலர், 'ஏய செய்தல்
கடன்' எனக் கருதிச் சூழ்ந்தார்.

பொ:—இலங்கை வேந்தனாகிய வீடணனுக்கும் இவ்வாறே இனியசொற்கள் யாவற்றையும் சொல்லி, மாலையணிந்த வேற் படைதாங்கிய வலிமையையுடைய இராமன் விடைகொடுத் தருளுதலும், நன்மை பொருந்திய பெரிய அறிவினையுடைய பெரி

யோர்கள் இராமனையே விரும்பும் நெஞ்சினராய்ப் பின்னர்க் கலக்கம் நீங்கினவராய், 'அவன் ஏவியதைச் செய்தலே கடன்' என எண்ணி முடிவுசெய்தார்கள்.

கு:—தன் தம்பியாக ஏற்றுக்கொண்ட வீடணனுக்கு இராமன் விடை கொடுத்தனுப்பியதைக் கண்ட மற்றைப் பெரியோர்களும், இராமனையே நாடும் நெஞ்சினராக இருந்து பின்பு கலக்கம் நீங்கி இராமன் கட்டளைப்படி செல்வதென முடிவு செய்தனர் என்றவாறு. கடன்–முறைமை. ஏய–ஏவிய. (33)

*யாவரும் இராமன் முதலியோரை வலங்கொண்டு வணங்கி விடைபெற்றுச் செல்லுதல்*

10529: பரதனை யிளைய கோவைச்
சத்துருக் கனனைப் பண்பார்
விரதமா தவனைத் தாயர்
மூவரை மிதிலைப் பொன்னை
வரதனை வலங்கொண் டேத்தி
வணங்கினர் விடையுங் கொண்டே
சரதமா நெறியும் வல்லோர்
தத்தம பதியைச் சார்ந்தார்.

பரதனை, இளைய கோவை,
சத்துருக்கனனை, பண்பு ஆர்
விரத மாதவனை, தாயர்
மூவரை, மிதிலைப் பொன்னை,
வரதனை வலங்கொண்டு ஏத்தி
வணங்கினர் விடையும் கொண்டே,
சரதமா நெறியும் வல்லோர்
தத்தம பதியைச் சார்ந்தார்.

பொ:—உண்மையான நன்னெறியையும் அறிந்த வல்லவர்களான அவர்கள் யாவரும் பரதனையும், இலக்குவனையும், சத்துருக்கனையும், பண்பு நிறைந்த விரதங்களைக் காக்கும் பெருந்தவ முனிவனாகிய வசிட்டனையும், தாயர் மூவரையும், மிதிலையில் தோன்றிய இலக்குமியான சீதையையும், வரந்தரும்

வள்ளலாகிய இராமனையும் வலங்கொண்டு துதித்து வணங்கினராய் விடையுங் கொண்டு தத்தம் ஊரையடைந்தார்கள்.

கு :—கோசலை, கைகேயி, சுமித்திரை என்ற மூவரும் இராமனுக்குத் தாயரே யாதலின் 'தாயர் மூவரை' என்றார். வரதன்—வரங்களைத் தரவல்ல இராமன். சரதமாநெறி-உண்மையான நன்னெறி. அன்பு செய்வதில் மட்டும் வல்லவராக இல்லாமல், சரதமா நெறியிலும் வல்லவராதலின் இராமன் கட்டளைப்படி தத்தம் ஊர்க்குத் திரும்பினர் என்க. 'தம' என்பதிலுள்ள அகரம் ஆறனுருபு. பதி என்றது சாதியொருமை; பதியைச் சார்ந்தார் என்க. (34)

இச்செய்யுளின் பின் 63, 74-ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல்கள் உள்ளன :—

10529 (1) இராமனு மரியின் சேனைக்
கிறைவனை யினிது நோக்கி,
விராவரும் சேனை யோடு
மேகென விடையு நல்கி
மராமர மெய்தோன் பாதம்
வணங்கியே நின்று வாழ்த்தத்
தராதலம் நிறைந்த சேனைக்
கொருமொழி வள்ளல் சாற்றும்.

,, (2) கண்டகர் தம்மை வென்ற
சேனையைக் கருணை தன்னால்
அண்டர்தம் தலைவ னான
வருள்செறி யிராம னப்போ
தெண்டிசை தனக்கு ளுங்கட்
கிடையூறென் றில்லை யென்னப்
புண்டரீ கக்க ணோக்கம்
பார்த்தனன் போக லுற்றார்.

,, (3) அனுமனுஞ் சாம்பன் றானு
மங்கத னீலனோடும்
தனுவினுக் கினிய வேடர்
தலைவனுந் தலைவர் யாரும்

